# 1 ஆபத்தான விளைவுகள்

## முகுந்தன்

(அவசியமான) முன்னுரை:

"அகோ வாரும் பிள்ளாய் அற்புதசாமி! இப்படி உட்காரும்.... அருண் என்று ஓர் வேலையில்லாப் பட்டதாரி, மீசைதாரி, வாரப்படாத கேசதாரி — அவன் கதையை நீர் அறிவீரா?'' என்று கேட்டது வேதாளம், கையிலிருந்த இரண்டு ஸ்பெஷல் ஜர்தா பீடாக்களை வாயில் போட்டு மென்றபடியே.

அற்புதசாமி (வயது 36) ஒரு வாயில்லாப் பூச்சி. 'முந்தானை முடிச்சு' படம் பார்த்த சூட்டோடு சூடாக, முழுக்க முழுக்க முருங்கை மரங்களையே கொண்ட ஒரு தோட்டத்தை விலைக்கு வாங்கிப் போட்டார். தினமும் தன் கையாலேயே முருங்கைக்காய்களைப் பறித்து மனைவியிடம் கொடுத்துச் சாம்பார், கூட்டு, அவியல், பொரியல், சட்னி, கொத்சு என்று வகைவகையாகச் சமைத்துப் போடச் சொல்லிச் சாப்பிட்டு வந்தார்.

ஒருநாள் நண்பகல் வேளையில் அவர் முருங்கைக்காய் பறிக்கப் போனபோது, ஈசான்ய மூலையிலிருந்த ஒரு மரத்திலிருந்து, ''இன்னா நைனா!'' என்று இனிய மதராஸ் தமிழில் அழைத்தபடியே இறங்கி வந்தது வேதாளம்.

டி.வி.யில் 'விக்ரம் அவுர் வேதாள்' தொடரைத் தவறாமல் பார்த்தவராதலால் பயப்படாமல், ''யாரய்யா நீ?'' என்று அதட்டினார் அ. சாமி.

''சர்(த்)தான் சார்! ரொம்பத்தான் டாவு காட்டாதீங்க! பேச்சுத் துணைக்கு ஆளில்லாமல் இந்த மரத்தில் தனியாக உட்கார்ந்து 'போர்' அடிக்கிறதேயென்று கூப்பிட்டேன்.... நாம் நல்ல நண்பர்களாக இருப்போம். உங்களுக்கு நான் நிறையக் கிளுகிளு கதைகள் சொல்கிறேன்.... சரிதானா?''

ஒரு கண்டிஷனோடு ஒப்புக் கொண்டார் அற்புதசாமி: ''கிளுகிளு கதையெல்லாம் வேண்டாம். நமக்குச் சரிப்படாது. நல்ல மர்மக் கதையாகச் சொல்வதானால் கேட்கிறேன்..... இல்லையென்றால் ஆளை விடு.....!'' என்று நிபந்தனை போட்டார்.

''மர்மம்தானே! நிறைய ஸ்டாக் இருக்கிறது.... இப்போது சொல்லப் போகும் அருணின் கதை மர்மக் கதையேதான்... சொல்லட்டுமா?''

தலையாட்டினார் அற்புதசாமி.



அருண் அந்த அதிகாலை நேரத்தில் மேஜையருகில் உட்கார்ந்து தீவிரமாக யோசித்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தான்.

விலைவாசி, லஞ்சம், விபத்து, மோசடி ஆகியவற்றுடன்போட்டிபோட்டுக்கொண்டு நாளுக்கு நாள் அதிகரித்து வரும் வேலையில்லாப்பட்டதாரிக்கும்பலில் அவனும்ஒருவன்.

நிறைய 'இண்டர்வ்யூக்களுக்குப் போய், தோல்வி கண்டு, விரக்தி அடைந்தவன். காலப்போக்கில், கார்சாரமான வார்த்தைகளைப் போட்டுப் புதுக் கவிதைகள் எழுதத் தேர்ச்சி பெற்றிருந்தான். கூடிய விரைவில் குறுந்தாடி வளர்த்து, ஜோல்னாப் பை மாட்டி, அறிவு ஜீவியாகப் பரிணமம் பெறக் கூடிய நிலையில் இருந்தான்.

அவனையொத்தவேலையில்லாப்பட்டதாரிகள் காலையில் நேரங்கழித்து எழுந்திருப்பார்களோ என்னவோ, அருண் விடியற்காலை ஐந்து மணிக்கெல்லாம் படுக்கையை உதறி விடுவான். பழக்க தோஷம்தான் காரணம்.

அருணின் தந்தை விநாயகம், ஆதிநாளில் சொந்தமாகக் கோழிப் பண்ணை நடத்தி வந்தவர். பண்ணையை ஒட்டியேவீடு. எனவே, தினமும் பண்ணையிலிருந்த சேவற் கோழிகள் அமர்க்களமாகக் கூவி எல்லாரையும் எழுப்பி விடும். இப்போது பண்ணை போய், கோழிகள் வெவ்வேறு இடங்களில் பிரியாணியாகி ஜீரணிக்கப்பட்ட பின்னரும் அருணிடம் அந்தக் காலத்துப் பழக்கமே நீடித்தது.

அருணின் பேனா, வெள்ளைத் தாளில் புதுக் கவிதை வடித்தது:-

சினிமா வந்தது
நாடகம் போச்சு
டீ.வி. வந்தது
சினிமா சிதைந்தது
வீடியோ வந்தது
டீ.வி.யும் மாளும்
எது வாழ்ந்தாலும்
எது மடிந்தாலும்
ஜீவித்திருப்பது —
ரத்தம் குடிக்கும்
மனுஷப் பூச்சிதான்.

ஒரு முதல்தரமான கவிதையைப் பிரசவித்துவிட்ட திருப்தியில் நாற்காலியில் சாய்ந்து விரல்களை நெட்டி முறித்தான் அருண்.

ஓசைப்படாமல் பின்னால் வந்து நின்றார் விநாயகம். காகிதத்தை ஒரு நோட்டம் விட்டார். பார்க்கக் கூடாத எதையோ பார்த்து



விட்டது போல முகத்தைச் சுளித்தார். (அவருக்குப் பிடிக்காத எட்டாயிரத்து முந்நூற்று நான்கு விஷயங்களில் புதுக் கவிதையும் அடக்கம்.)

''அருண்! உனக்கு இன்று இண்டர்வ்யூ உண்டு.... நினைவிருக்கிறதா?''

தலையாட்டினான்.

''சர்ட்டிபிகேட் எல்லாம் எடுத்து வைத்துக் கொண்டாகிவிட்டதா?''

''எல்லாம் ஃபைலிலே வச்சிருக்கேன்...''

''பேப்பரைப்படித்துக்கொள்...இன்றைய நியூஸிலிருந்து கேள்வி கேட்டாலும் கேட்பார்கள்...''

''சரி'' என்ற அருண், எழுந்து டிரஸ் மாற்றிக் கொள்ளத் தொடங்கினான்.

''எங்கேடா கிளம்பறே?''

''சலூனுக்கு....''



''நானே சொல்ல வேண்டும் என்று நினைத்தேன்... தலையை நன்றாக 'டிரிம்' பண்ணிக் கொள்.....''

''நான் அதற்காகப் போகவில்லை...அங்கே போனால் மூணு நாலு பேப்பர் பார்க்க முடியும்... தவிர, 'டிரிம்' பண்ணிக் கொண்டால், உங்களுக்குத்தான் பத்து ரூபாய் செலவு பிடிக்கும்.... ரேட்டெல்லாம் உயர்த்தி விட்டார்கள்...''

''நம்ம சதா கடைதானே? அவன்தான் உனக்கு நெருங்கிய தோஸ்த் ஆச்சே? பழைய ரேட்டுக்கே பண்ண மாட்டானா?''

''நட்பு வேறே, தொழில் வேறே.... உங்களுக்கு அதெல்லாம் சொன்னால் புரியாது!''

சதா ஹேர் டிரஸ்ஸிங் சலூனில் எந்த வேளையும் கும்பல் நிறைந்திருக்கும். சிகை அலங்காரம் தவிர, சும்மா 'தலையைக் காட்டி' விட்டுப் போவதற்கென்றே நிறையப் பேர் வருவார்கள். பேட்டை நியூஸ் முதல் சர்வ தேச அரசியல் உட்படப் பலவிதமான பேச்சுகள், வதந்திகள், சர்ச்சைகளுக்கான அரங்கம் அது.

உரிமையாளர் சதாசிவம் தோற்றத்தில் காங்கோ—டிரம் மாதிரி கட்டை குட்டை. பரந்த மனம். சிரித்த முகம். கை ஓயாத கத்திரிக்கோல் வீச்சு. வாய் ஓயாத பேச்சு. அவரது பணிவும், கனிவும் கஸ்டமர்களை அவரிடம் இழுத்து வந்தன. வருகிறவர்கள் அத்தனை பேரும் அவரது கையால் முடியிழக்கவே விரும்பினார்கள். நான்கு நாற்காலிகள் போட்டு வேலை நடக்குமிடத்தில் இது சாத்தியமில்லை. எனவே, யாருக்கும் மனக்குறை வேண்டாமென்று, தானே ஃபினிஷிங் டச் கொடுத்து அனுப்புவார் சதா.

அருண் போனபோது டீ உறிஞ்சிக்கொண்டிருந்தார் சதா.

''வாங்க சார்! டேய் பையா! சாருக்கு டீ ஊத்திக் கொடுடா!''

''வேண்டாம் சதா.... பேப்பர் பார்த்துட்டுப் போகலாமென்று வந்தேன்....''

''நியூஸ்லே சூடு ஒண்ணும் இல்லே சார். எல்லாம் வழக்கம்போலத்தான். சிலோன்லே போராளிங்க....''

''சிரமப்படாதீங்க. நானே பார்த்துக்கறேன்...''

அடுத்த அரை மணி நேரம் செய்தித் தாள்களில் தலைப்புகளை மேய்ந்துவிட்டுப் புறப்பட்ட போது, ''என்ன சார் கட்டிங் பண்ணிக்கலையா?'' என்று கேட்டார் சதா.

''அடுத்த வாரம் வரேன்....''

சதா விடுவதாக இல்லை. பலவந்தமாக நாற்காலியில் உட்கார்த்தி வைத்துவிட்டார். டிரிம்மிங் முடிந்ததும் தலை சீவுவதற்குச் சீப்பு எடுத்துக் கொடுத்தபடியே, ''உன்னாலே முடியறபோது பணம் கொடு சார்!'' என்று காதருகில் முணுமுணுத்தார்.

அருண் அந்தக் கணம் நெகிழ்ந்துதான் போனான்.

வீட்டுக்கு வந்து குளித்து, டிபன் சாப்பிட்டுக் கொண்டிருந்த அருணை விநாயகம் கேட்டார்:

''கைச் செலவுக்குப் பணம் இருக்கா?''

''தீர்ந்து போயிட்டுதுப்பா.... இருபது ரூபாய் கொடுங்க!''

''இருபதா? எதுக்கு?''

''பத்து ரூபாய் ஹேர்—கட்டிங்குக்குக் கொடுத்தேன். செலவுக்குப் பத்து ரூபாய்.... அதிகமாக எதுவும் கேட்கல்லே!'' — கூசாமல் பொய் சொன்னான் அருண்.

முணுமுணுத்துக் கொண்டே பர்ஸிலிருந்து ஓர் இருபது ரூபாய்த் தாளை எடுத்து நீட்டினார் விநாயகம்.

பதினொரு மணிக்கு இண்டர்வ்யூ.

அருண் விலாசம் விசாரிப்பதில் கால் மணிக்கு மேல் விரயம் செய்துவிட்டு 'சராகா பார்மசூட்டிகல்ஸ்' நிறுவனத்துக்குள் அடியெடுத்து வைத்தபோது 10.55 ஆகிவிட்டது.

ரிசப்ஷன் பகுதியில் ஏகப்பட்ட கும்பல்.

எல்லார் முகத்திலும் எதிர்பார்ப்பு எழுதி ஒட்டியிருந்தது.

"கத்திரி வெயிலில் காயப் போட்ட கொத்தவரங்காய் போல மெலிந்த தோற்றம் கொண்ட ரிசப்ஷனிஸ்ட், அருண் நீட்டிய கடிதத்தை அலட்சியமாக இடது கையால் வாங்கிப் பார்த்து (வலது கை பப்பிள்கம் காகிதத்தைப் பிரித்துக் கொண்டிருந்தது), "ப்ளீஸ் வெயிட்!" என்று சொன்னாள்.

ஒருசோபாவில் நால்வரோடு ஐவரானேம் என்று போய் உட்கார்ந்தான் அருண். வந்திருப்பவர்களை ஒரு நோட்டம் விட்டான். குறிப்பாகப் பெண்கள் — அதுவும் அழகும் கவர்ச்சியுமானவர்கள் — வந்திருக்கிறார்களா என்று கவனித்தான். யாருமில்லை. கொஞ்சம் நிம்மதி பிறந்தது.

ஆறுவருடங்களுக்குமுன்பு இண்டர்வ்யூக்களுக்குப்போக ஆரம்பித்தபுதிதில், தன்னைப் போலவே வந்திருப்பவர்களிடம் பேச்சுக் கொடுத்து விவரம் விசாரிப்பதில் அவனுக்கு ஆர்வம் இருந்தது. அது படிப்படியாகக் குறைந்து, இப்போது யாராவது பேச முன் வந்தாலும் தவிர்க்கும் தன்மை உருவாகியிருந்தது.

கொஞ்ச நேரம் வெற்றுப் பார்வை பார்த்துக் கொண்டிருந்த அருண், எதிரே குட்டி மேஜை மீதிருந்த, 'இந்தியா டுடே'யை எடுத்துப் புரட்ட ஆரம்பித்தபோது, இவனுடைய காலை மிதித்தபடியே தாண்டிக் கொண்டு அப்பால் போய் உட்கார்ந்தான் ஒருவன்.

அருண் சட்டென்று நிமிர்ந்து பார்த்தான் அந்த ஆசாமியை.

இளைஞன்தான். நல்ல உயரம், தாடியும் மீசையுமாகக் கிட்டத்தட்ட டி. ராஜேந்தரின் மறுபதிப்பு. கறுப்புக் கண்ணாடி அணிந்திருந்தான். பேண்ட்டும் சட்டையும் வெகுவாகக் கசங்கியிருந்தன.

வெளியே சுட்டெரிக்கும் வெயிலிலிருந்து உள்ளே வந்திருப்பதால், பார்வையில் தடுமாற்றம் ஏற்பட்டு, அவன் தன் காலை மிதித்திருக்கக் கூடும் என்று நினைத்துக் கொண்டான் அருண்.

பத்திரிகை படிப்பதில் பத்து நிமிடம் போல அமைதியாகக் கழிந்தது.

ஏதோ ஓர் உள்ளுணர்வு தூண்டி விடவும், அருணின் செவிப் புலன் கூர்மையாகியது. யாரோ பென்சிலை மேஜை அல்லது நாற்காலி முனையில் வைத்துத் தட்டிக் கொண்டிருக்கிறார்கள். சாதாரணத்தட்டல் அல்ல. 'கட்டுக் கடகட' என்று தந்தி மொழியில்!

அருண் வேலை தேடித் திரிந்த நாட்களில் தனது தகுதியை உயர்த்திக் கொள்வதற்காக எழும்பூரில் ஒரு பயிற்சி நிலையத்தில் சேர்ந்து மோர்ஸ் பயிற்சியும் பெற்றதுண்டு. அது இப்போது கை கொடுக்கவும், வருகிற ஒலியை எழுத்துக்களாக மனத்தில் நோக்கத் தொடங்கினான்.

'ஈ.... ஜி.... ஜி.... ஈ.... ஒய்.... ஈ.... ஈ.... ஜி... ஜி.... ஈ.... ஒய்.... ஈ....'

தூக்கி வாரிப் போட்டது அருணுக்கு. பள்ளியில் படிக்கும் நாட்களில் அவனது செல்லப் பெயர் 'முட்டைக் கண்ணன்'. ஒரு சிலர் மட்டுமே அறிந்திருந்த அந்தப் பெயரை 'எக் -ஐ' என்று தந்தி மொழியில் தட்டி அவனை அழைப்பது யார்?

'இந்தியா டுடே'யைத் தாழ்த்தி, சுற்றுமுற்றும் பார்த்தபோது, சற்று முன் காலை மிதித்து விட்டுப் போன தாடிக்காரன்தான் கூடுதலாகப் போடப்பட்டிருந்த ஓர் இரும்பு நாற்காலியில் அமர்ந்து தட்டுகிறான் என்பது தெரிய வந்தது.

தந்திச் செய்தி தொடர்ந்தது:

**'EGG EYE.... I AM IN DANGER.... SOS....'**

திடீரென்று சப்தம் நிற்கவும், தாடி இளைஞன் அவசரமாக எழுந்தான். வாசலை நோக்கி நடக்கத் தொடங்கினான். போகிற வேகத்தில் அருண் மீது ஒருமுறை இடறி விழுந்தான்.

அருண் நிமிர்ந்து நிதானிப்பதற்குள், தாடி இளைஞன் வாசலை நெருங்கிவிட்டான். அப்போதுதான் அந்த எதிர்பாராத சம்பவம் நிகழ்ந்தது.

இரண்டு சோபாக்கள் தள்ளி அமர்ந்திருந்த ஓர் ஆசாமி சட்டென்று இடுப்பிலிருந்து பிஸ்டலை உருவி, தாடி இளைஞனை நோக்கிச் சுட்டான்!

அதற்குள் தாடிக்காரன் அலுமினிய ப்ரேம் போட்ட கண்ணாடிக் கதவைத் தள்ளிக் கொண்டு வீதியில் இறங்கிவிட்டான். பிஸ்டலிலிருந்து சீறிப் பாய்ந்த குண்டு, கண்ணாடியில் பட்டு, 'சிலிங்' என்று கண்ணாடித்துண்டுகள் சிதற, சுட்டவனும் புலிப் பாய்ச்சலில் வெளியே பாய்ந்தான்.

தொடர்ந்த குழப்பத்தில் ஆளுக்கு ஆள் கூச்சலிட்டுப் பரபரக்க, கொத்தவரைக்காய் ரிஸப்ஷனிஸ்ட் பீதியில் பப்பிள்கம்மை விழுங்கி விட்டு விழிக்க, அதிர்ச்சியடைந்து உட்கார்ந்திருந்தான் அருண்.

அது ஆரம்பம்தான் என்று அப்போது அவனுக்குத் தெரியாது!

(தொடரும்)



"உங்க கார் எவ்வளவு வேகமாப் போவும்?"

"அது சொல்ல முடியாதுங்க! தள்ளுகிறவர்களின் பலத்தையும், எண்ணிக்கையையும் பொறுத்தது அது!"

— ஆர். அரிகோபி

# அம்மா எப்படிச் சம்மதித்தாள்?

**மும்தாஜ் யாசீன்**

சுகந்தி சீக்கிரமே எழுந்து விட்டாள். குளித்தாள். ஈரக் கூந்தலுக்குத் துண்டைச் சுற்றிக் கொண்டு, வேலைக்கான உத்தரவுத் தாளை எடுத்தாள். அப்பாவின் படத்திற்குமுன்புவைத்து நமஸ்கரித்தாள். தகரப் பெட்டியை நகர்த்தி, தனது உடுப்புக்களை எடுத்து அடுக்கும் போதுதான் தெரிந்தது — அம்மாவும் கூடவே வரப் போவது.



உற்சாகத்தைவழித்துவிட்டமாதிரி இருந்தது.

அம்மாவா? அம்மா வந்து என்ன பண்ணுவாள்?

"இதாம்மா நான் வேலை பார்க்கப் போற ஆபீஸ்"—பஸ்ஸில் போகிற

போது காட்டலாம். இரட்டை மாடி பிரம் மாண்டத்தை, கண்ணாடிச் சுவரை, வண்ணப் பூஞ்செடிகளை, சில்லென்றவாசனைக்காற்றை நெஞ்சுக்குள் வாங்கி அதிசயிக்க வைக்க லாம். உள்ளே அழைத்துப் போக முடியுமா?

ஆச்சரியம் விலகி, "தடித் தடியா இத் தனை ஆம்பிளைங்களா?" என்ற விகல்பம் தான் தெரியும் அவளுக்கு. "என்னடி... வேற பொண்ணுகளே காணோம். நீ ஒருத்தி தானா?" என்ற கேள்விதான் எழும்பும். மடியில் நெருப்பைக் கட்டிக் கொண்டுதான் ஊருக்குத் திரும்புவாள். அல்லது "வேணாம்டி அந்த உத்தியோகம். ஊருக்குப் போயி சாணி தட்டியாவது பிழைச்சுக்கலாம்" என்று கூப் பிட்டாலும் கூப்பிடுவாள்.

இதற்காகத்தானா மாமா இத்தனை அலைந் தது?

வேலை வாங்கியது?

"ரெண்டு நாள்ல வந்துருவேன். குழந்தை களையும் வீட்டையும் பாத்துக்க கோகி" என அத்தையிடம் சொல்லிக் கொண்டிருந்த வளைக் கூர்ந்து பார்த்தாள் சுகந்தி.

வித்தியாசம் தெரிந்தது.

மஞ்சள் பூசாவிட்டாலும் பளிச்சென்ற முகம். அழுத்தி வாரிய கொண்டை. விரல் தடிப்பில் நெற்றித் திருநீறு. சலவை உடுப்பு.

அப்பா போன பிறகு — இந்த ஆறு மாதத் தில் — அம்மாவைப் பழைய சுறுசுறுப்புடன் பார்ப்பது இதுதான் முதல் தடவை.

"நீயும் வர்றியாம்மா..." சந்தேகத்தை உறுதி செய்து கொள்ளக் கேட்டாள் சுகந்தி.

"ஆமாண்டி... உன்னைத் தனியா எப்படி அனுப்பறது? மனசு கேக்கலை!"

"மாமாதான் வர்றாரே அம்மா..."

"அவன் ஆம்பளை... என்ன தெரியும்! ஆபீஸ் எப்படி, தங்கற எடம் எப்படின்னு நான் பார்க்க வேணாமா?"

மேலே தொடர ஒன்றும் இல்லை.

அம்மா ஆரம்பித்த இடத்திற்கே மீண்டும் வருகிறாள் போலும்.

'அப்பாவின் காரியம் முடிந்த போதும் இதே போலத்தான் சொன்னாள் — "இனி என்ன?" என்ற கேள்வியோடு வட்டமாக உட்கார்ந்த உறவுக்காரர்களிடம், "அவரு சோத்து சுகம் வச்சிட்டுப் போகலைங் கிறது வாஸ்தவம். வாரிசுக்கு வேலை உண்டுங்கிறதும் வாஸ்தவம். பொட்டை களாப் பெத்து வச்சிருக்கேனே. எப்படி அனுப்பறது? நாளைக்கு வராத பேரு வந்தி ருச்சுன்னா எங்க போயி சாகறது? சொல் லுங்க..."

அப்போதே கிடைத்திருக்க வேண்டிய வேலையை அதுதான் தள்ளிப் போட்டது.

மறுபடியுமா?

அம்மா ஐம்பது ஆண்டுகள் பின் தங்கிய மனுஷி. சின்ன ஊரில், வெளி அனுபவம் அற்ற மனிதர்களின் சின்ன உலகத்தில் தனக் கென ஓர் இடத்தை அமைத்துக் கொண்ட வள். ஆசாரம்தான் முக்கியம் அவளுக்கு. குனிந்த பார்வை. சத்தம் இல்லாத பேச்சு. உதட்டைத் தாண்டாத சிரிப்பு. அப்பா இல்லாவிட்டால் சுகந்தி ஏட்டாங்கிளா ஸுக்கு மேல் தாண்டியிருக்க முடியாது. அவர்தான், "அதுகெடக்குகிணத்துத்தவளை. படிம்மா... எவ்வளவு முடியுதோ அவ்வள வுக்குப் படி" என உற்சாகப்படுத்தினார்.

அடுத்த தெருவில்தான் ஸ்கூல். விடவும், கூட்டிப் போகவும் அம்மா தானே வருவாள். வழியில் சினேகிதிகள் 'ஹாய்' சொன்னா லும், வீட்டிற்கு வந்ததும் நூறு கேள்விகள், சந்தேகம்.

'அவ யாரு? என்ன பேரு?'

'எப்படிப் பழக்கம்?'

'சினிமாக்காரி மாதிரி வீதியில என்னடி சிரிப்பு?'

பள்ளி இறுதி வகுப்பு முடித்ததும் மாப் பிள்ளை பார்க்க ஆரம்பித்தாள். காலேஜுக்கு அப்ளிகேஷன் வாங்கி வந்ததைக் கிழித்துப் போட்டாள். "அப்பனும் பெண்ணும் ஏன் கூத்தடிக்கிறீங்க? வீட்டுப் பேச்சு வீதிக்கு வரணும்னு ஆசையாக்கும்."

அவளது ரகளையில் சுகந்திக்கு ஆசை அற்றுப் போயிற்று. "உன் யோசனை என் னம்மா?" என்ற அப்பாவிடம், "நான் படிக்க லைப்பா..." என்றாள். "அதுக்காக அம்மா சொல்றபடி இப்பவே கல்யாணப் பேச்சை யும் எடுக்காதீங்கப்பா..."

அப்பா தலையாட்டினார்.

அத்தருணத்தில் அவளுக்கு அப்படி யொரு அபிப்பிராயத்தை வெளியிட முடிந் தது, குடும்பத்திற்குக் கடவுள் அளித்த சலுகை என்பது, அப்பாவின் இழப்பிற்குப் பிறகுதான் தெரிந்தது.

இறுதிச் சடங்கிற்கு வந்த ஆபீஸ்காரர் கள், "பெரிய பொண்ணு என்ன படிச்சி ருக்கு?" என்றகேள்வியோடு, "இது போதும். விண்ணப்பம் அனுப்பச் சொல்லுங்க. வேலைக்கு ஏற்பாடு பண்ணலாம்" என்ற தகவலையும் சொல்லிவிட்டுப் போனார்கள்.

மாமா தான் மீண்டும் ஆரம்பித்தவர். "என்னக்கா சொல்றே? பெரிய ஆபீஸ். கௌ ரவமான வேலை. சம்பளம்னு ஏதோ வந்தா குடும்பம் நிம்மதியா இருக்கும்."

"வேலையில் கௌரவம் இருந்து என் னப்பா... குடும்பத்துக்கு வேணாமா?"

"இந்தக் காலத்துல இதெல்லாம் சக ஜம்க்கா. டவுன்ல எத்தனையோ பொண் ணுக..."

"இது டவுனும் இல்லை, நம்ம குடும்பமும் அப்படி இல்லை, குமார்..."

"வயிறுன்னுஇருக்கேக்கா. சின்னஞ்சிறிசு களை வச்சுக்கிட்டு என்ன பண்ணுவே?"

என்ன செய்யலாம் என்ற யோசனையில் இரண்டு மாதம் ஓடியது. எதுவும் புலப் படாமல் கைக்காசு மெல்லமெல்லக் கரைய...

"என்னடி இவளே... கிடைக்கிற வேலையை ஏன் வேணாம்ங்கிறே? இந்த அளவுக்காவது கடவுள் வழி பண்ணினாரேன்னு சந்தோஷப் படாம..."

ஊராரும் கரைத்தார்கள்.

என்ன நடந்ததோ?'



"பத்து வருஷங்களுக்கு முந்தி நடந்த துப்பாக்கிச் சூடு சம்பவத்தை விசாரிச்ச விசாரணைக் கமிஷன் நீதிபதி இன்னைக்கு அறிக்கை வெளியிட்டிருக்காராமே... என்ன சொல்லியிருக்கார்?"

"துப்பாக்கிச் சூடு நடந்தது வாஸ்தவம் தான்னு உறுதியாச் சொல்லியிருக்கார்."

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

திடீரென ஒருநாள் மாமா வந்து சொன்னார். "இதான் அப்ளிகேஷன். வேலைக்கு எழுதிப் போடு சுகந்தி."

"அம்மா ஒத்துக்கணுமே மாமா..."

"அந்தக் கவலை உனக்கு வேணும்... முதல்ல எழுது."

வாங்கிக் கொண்டு போனார்.

அப்பா வேலை பார்த்த ஆபீஸுக்கு இரண்டு மூன்று தரம் போய் வந்தார். தெரிந்த சில 'புள்ளி'களின் வீடுகளுக்கு நடந்தார். கடிதங்கள் எழுதிப் போட்டார். பலன் கிடைத்தது —

முந்தா நாள் "ஸார்... போஸ்ட்" என வீட்டிற்குள் வந்து விழுந்த பழுப்பு உறையில் வேலைக்கான உத்தரவு. நாளைக்குச் சேர்ந்தாக வேண்டும். அம்மா வருவது எந்த வகையில் உதவும்? அவளது அபிப்பிராயம் என்ன என்று முழுவதுமாகத் தெரியாத நிலையில் எப்படிக் கூட்டிப் போவது? அங்கு வந்ததும் தனது பழைய பல்லவியை மீண்டும் பாட மாட்டாள் என்பது என்ன நிச்சயம்?

"எல்லாம் ரெடியா?" கையில் சூட்கேசுடன் மாமா உள்ளே நுழைந்தார்.

"ஆச்சு மாமா... அம்மாவும் வர்றதா திட்டமா?"

"ஆமாம்மா... ராத்திரிதான் முடிவாச்சு."

"அப்படியா?" சுகந்தி ஆச்சரியத்தை அடக்கியே வெளியிட்டாள்.

இதென்ன கஷ்ட காலம்? இவரும் உடந்தையா?

கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டு, "சீக்கிரம்... நேரமாச்சு" என்றார் மாமா.

பஸ்ஸில் அப்படியொன்றும் கூட்டம் இல்லை. மாமா முன்னால் உட்கார்ந்து கொள்ள அம்மாவும், அவளும் பின் இருக்கையில்.

விர் விர்ரென்று விலகும் தார் ரோடு. வயல்கள். தென்னந்தோப்பு. விசுவிசுத்த ஜன்னல் காற்று...

தடமோ, பஸ்ஸோ புதியது இல்லை. அப்பா டவுனில் வேலை பார்த்தாலும் குடும்பத்தைக் கிராமத்தில்தான் வைத்திருந்தார். லீவு நாட்களில் வந்து கூட்டிப் போவது உண்டு, அது ஒரு காலம். ஓர் அனுபவம். அப்பாவானாலும் அம்மாவே ஆனாலும் அனுபவங்களின் மூலமாகத்தான் அறிந்து கொள்ள முடிகிறது. தனக்கு இப்படியெல்லாம் நேரக் கூடும் என்று யாராவது நினைத்திருக்க முடியுமா? நினைக்க முடியாததெல்லாம் நிகழ்வது தான் படைப்பின் சூட்சுமம் போலும்.

பஸ் ஏதோ ஓர் ஊரில் நின்றிருந்தது.

திமுதிமுவென்று முண்டியடித்துக் கொண்டு ஏறும் மனிதக் கும்பல். ஆணும் பெண்ணுமாய்...

அம்மா முகச் சுளிப்போடு அவர்களைக் கவனிப்பதைக் கண்ட சுகந்திக்குப் பழைய அனுபவம் ஒன்று ஞாபகத்திற்கு வந்தது.

அப்போது டவுனில் சர்க்கஸ் நடந்து கொண்டிருந்தது. அப்பா எல்லோரையும் வரச் சொல்லி எழுதி இருந்தார்.

பஸ்ஸில் இதே கூட்டம். உஷ்ண மூச்சு. வியர்வை நாற்றம்.

நின்று கொண்டு போன சுகந்தியின் முதுகுப்புறம் ஏதோ அடிக்கடி உரசியது. திரும்பிப் பார்த்தால், ஓர் அரும்பு மீசைக்காரன். அவள் திரும்பியதை ஆமோதிப்பாக நினைத்தானோ என்னவோ, சிரித்தான். பின்னும் நெருங்கினான்.

சுகந்தி சங்கடமாய் நெளிய, அம்மா கவனித்து விட்டாள்.

"யார்ரா அது...? ஆம்பளையா நீ! போடா அப்பாலே."

பஸ்ஸிலிருந்தவர்கள் பார்வை அவள் பக்கம் திரும்பியது.

"கண்டக்டர்.... பாருங்க, இந்த ஆளை. பொம்பளைக பக்கத்துலே என்ன வேலைன்னு கேளுங்க..."

"யார்ப்பா அது? வண்டியை ஸ்டேஷனுக்கு விடணுமா?"

அரும்பு மீசை அரண்டு போனான். கூட்டம் பார்வையால் காறித் துப்ப தலை குனிந்து, ஒதுங்கி, சிக்னலுக்காக பஸ் நிற்க அவசரமாய் இறங்கி, மறைந்து போனான்.

"பொறுக்கி நாய்க... செருப்பாலே அடிக்கணும்..."

"விட்டிருக்கப்படாது சார் அவனை."

"இனி ஜென்மத்துக்கும் வாலாட்ட மாட்டான்."

ஆள் போன தைரியத்தில் அவரவர் பேச, அம்மாவின் முகத்தில் பெருமிதம்.

சுகந்திக்கு ஏனோ அவன் மீது பரிதாபமாக இருந்தது.

பஸ் நிலையத்திற்கு அப்பா வந்திருந்தார். முதல் வேலையாக அம்மா அவனைப் பற்றிச் சொல்ல அப்பா சிரித்தார்.

"இதெல்லாம் சகஜம்ங்கிற அளவுக்கு இங்க பழகிப் போயிருச்சு. அப்படிக் கத்திரகளை பண்ணி இருக்க வேணும். தெரியாம செஞ்சுட்டான். தனியாச் சொல்லிக் கண்டிச்சிருக்கலாம்..."

அந்தத் தருணத்தில் அப்பாவை ரொம்பவும் பிடித்தது சுகந்திக்கு.

அம்மாவுக்கு ஏன் அந்தத் தாராளம் இல்லே?

"இந்த அக்கிரமத்தை சகஜம்ங்கிற ஆம்பளேகிட்ட என்ன சொல்றது? காலம் கெட்டுக் கெடக்கு. புள்ளேகளே எங்கூட ஊரோடு வச்சிருக்கிறது எவ்வளவோ நல்லதாப் போச்சு..." என்றாள் அவள்.

உடம்பைப் புனிதம் என்று நினைக்கிறாளா? உடலுக்கு நேருகிற சங்கதிகள்தான் வாழ்க்கையை நிர்ணயிக்கிறது என்பதுதான் அவளது அபிப்பிராயமா?

இப்போது மட்டும் தன்னைத் தனியே வேலைக்கு அனுப்ப எப்படி இசைந்தாள்?

**ப**ஸ் இன்னும் புறப்படுவதாக இல்லே.

கண்டக்டரையும் டிரைவரையும் காணவில்லே. பயணிகள் கூட ஏறுவதும் இறங்குவதுமாக இருந்தார்கள்.

மாமா நெட்டி முறித்தார்.

"இவ்ளோ நேரமாச்சு. எப்பக் கௌம்பும்னு தெரியலேயே....?"

இன்னார் என்று இல்லாமல் பொதுவாகச் சொல்ல, எதிர் வரிசையில் இருந்த கூலிங் கிளாஸ் பையன், "டிபன் சாப்பிடப் போயிருக்காங்க. பத்து நிமிஷம் ஆகும்" என்றான். தான் சொன்ன அரிய தகவலுக்காகச் சுகந்தியை ஒருதரம் பார்த்துக் கொண்டான்.

"இறங்குங்க.. நாமும் ஒரு காப்பி சாப்பிடலாம்" என்றார் மாமா.

"எனக்கு வேணாம். நீங்க போய்ட்டு வாங்க" என்றாள் அம்மா.

மாமாவும் அவளும் எழுந்திருக்க, சிறிது இடைவெளி விட்டுப் பின்னாலேயே கூலிங் கிளாஸும் இறங்கினான்.

ஜன்னலோரத்தில் அம்மாவின் தலை தங்களே நோக்குவது தெரிந்தது சுகந்திக்கு.

அம்மா கற்பனவாதி. யதார்த்தத்தை விட்டு விலகி, தனது பார்வையில் மட்டுமே உலகைக் காணுகிறவள். ஏதோ ஓர் எண்ணத்தில் சம்மதித்து இருக்கக் கூடும். இப்போது பின் தொடரும் இளைஞனே கூட அவள் தனது சம்மதத்தை மறுபரிசீலனை செய்யக் காரணமாகலாம்.

சுகந்தி திடீரெனத் திரும்பி அந்த இளைஞனை முறைத்தாள்.

சற்றுத் தடுமாறி, பாதையை மாற்றிக் கொண்டு சிகரெட் வாங்கப் போனான் அவன்.

அம்மா சந்தோஷப்படுவாளா?

**இ**ருவரும் சற்று ஒதுங்கி இருந்த டேபிளுக்குச் சென்று உட்கார்ந்தார்கள்.

தண்ணீர்த் தம்ளரை வைத்துவிட்டு, "என்ன?" என்றான் வெயிட்டர்.

"ரெண்டு காப்பி..."

தனக்குள் ஒரு சின்ன ஒத்திகை பார்த்துவிட்டு, "உங்ககிட்டே ஒரு சின்ன சந்தேகம் கேட்கணும்" என்றாள்.

"நீ காப்பி சாப்பிட வரலேயா?" மாமா சிரித்தார்.

"அம்மாவை ஏன் கூட்டி வரணும். எனக்



"வேலைக்கேற்ற ஊதியம் கொடுன்னு போராட்டம் செஞ்சது தப்பாப் போச்சு."

"ஏன்?"

"ஊதியத்தைக் குறைச்சுட்டாங்க...!"

— கீழை அ. கதிர்வேல்

கென்னமோ பயமா இருக்கு," என்றாள் சுகந்தி.

"வரணும்னு பிரியப்பட்டது. ஏன் தடுக்கணும்னு சரின்னேன்... என்ன பயம்...?"

"அம்மாவுக்கு ஆரம்பத்திலேயே இஷ்டம் கிடையாது. டவுன் வாழ்க்கையையும் ஆபீஸையும் பார்த்துட்டு மனம் மாறிடுமோன்னு..."

"மாறாது" என்றார் மாமா உறுதியான குரலில்.

"அம்மாவைத் தெரியாதா? திடீர்னு முடிவு பண்ணலாம்."

"பயப்படாதே. அதுக்கு அவசியமே இருக்காது."

"எப்படிச் சொல்றீங்க?"

"வயிறும்மா... இனி வருமானம் இல்லேன்னா என்ன ஆகும்னு உங்க அம்மாவுக்கும் தெரியும்."

"......"

"புரியலேயா? எல்லாத்துக்கும் அடிப்படையான விஷயம் இதாம்மா" நெஞ்சுக்குக் கீழே தொட்டுக் காட்டினார். "இங்க விழுகிற அடியிலே எல்லாமே ஓடிப் போயிடும். கொள்கை கூப்பாடு ஒண்ணும் நிக்காது. முதல்லியே பேசிட்டுத்தான் அப்ளிகேஷனேயே வாங்கிக்கிட்டு வந்தேன். சம்மதம் இல்லேன்னா வீட்டிலேயே உன்னைத் தடுத்து நிறுத்தி இருக்க முடியாதா? அக்கா எப்பவோ சமரசத்துக்குத் தயாராயிட்டுது. கவலைப்படாதே...."

மாமா பில்லே வாங்கிக் கொண்டு எழுந்தார்.

"ஆனா ஒண்ணு... நம்மால்தான் இனி குடும்பத்துக்கு வாழ்வுங்கிற எண்ணம் எப்பவும் உனக்கு வேணும். உங்க அப்பா பெயரைக் காப்பாத்தணும். கண்டதுகள்ல மனத்தை அலேய விடப்படாது..."

அப்படிச் சொல்ல நேர்ந்ததற்கு வருத்தப்படுகிற குரலில்தான் அவர் சொன்னார்.

சுகந்திக்குப் பழைய பயம் முற்றிலுமாக விலகி விட்டது. அதைக் கேட்டதும் புதியதாக ஒரு பயம் முளைத்தது அவளுக்கு.



# ஆபத்தான வளைவுகள்

## 2

"எவ்வளவு சம்பளம் எதிர்பார்க்கிறீர்கள்?"

கேட்டவுடன் அருண் பதில் சொல்லி விடவில்லை. காரணம், அவனது கவனமெல்லாம் எதிரில் இருந்தவரின் தலை மீது பதிந்திருந்தது. அந்த நூற்றுக்கு நூறு சத வழுக்கைப் பரப்பை, சோழா ஹோட்டலின் 'ஸ்கேட்டிங்—ரிங்'காகப் பாவித்து இரண்டு ஈக்கள் மும்முரமாகப் பயிற்சியில் ஈடுபட்டிருந்ததை ரசனையுடன் பார்த்துக் கொண்டிருந்தான்.

அவனது மௌனத்தைத் தயக்கமாக எடுத்துக் கொண்டார் பாணி — சுராகா பார்மசூட்டிகல்ஸ் எம்.டி.

"பரவாயில்லை, நானே சொல்லி விடுகிறேன்.... இரண்டு வருஷங்கள் ட்ரெய்னிங். முதல் வருஷம் அறுநூறு கொடுப்போம்... இரண்டாவது வருஷம் அறுநூற்றைம்பது. அதற்கப்புறம்தான் 'கன்ஃபர்ம்' பண்ணுவோம். சம்மதம்தானே?"

வேலை தேடக் கிளம்பிய அந்த நாட்களில் — ஆறு வருடங்களுக்கு முன்பு — இப்படி யாரேனும் சொல்லியிருந்தால், ஐஸ் வாட்டரில் குளித்தது போலச் சிலிர்த்துப் போயிருப்பான். இப்போதோ, கான்கிரீட் சுவரில் சப்பாத்தி மாவை வீசியெறிந்தால் சுவருக்கு என்ன பாதிப்பு ஏற்படுமோ அதே மனநிலையில் இருந்தான் அருண்.

என்றாலும், அவனுக்குள் ஒண்டிக் கொண்டிருந்த ஏதோ ஒன்று, "அவ்வளவுதானா?" என்று கேட்க வைத்தது.

முழு வழுக்கையின் முன்மண்டையில் புருவங்கள் ஏறின.

"வாட் டூ யூ மீன்?"

"அறுநூறுக்கு மேலே தரமாட்டீங்களா?"

"எவ்வளவு வேணும்? ஆயிரம்? ஆயிரத்திருநூறு?"

"கடைசியாகச் சொன்னது கரெக்டாக இருக்கும் போலிருக்கிறது...."

"உனக்கு வேலையே தெரியாதே? அனுபவம் கிடையாதே?"

"தெரிந்தவன் சுலபமாகச் செய்துவிட்டுப் போய்விடுவான். தெரியாதவன் கஷ்டப்பட்டுச் செய்வான். அதற்கு அதிகச் சம்பளம் தரக் கூடாதா!"

இந்த அபூர்வ லாஜிக்கைக் கேட்டு, பாணி விழிக்கும்போது அருண் தொடர்ந்தான்:

"சார்... நான் பர்ஸ்ட் கிளாஸ் கிராஜுவேட்..."

"அதனால்தான் இண்டர்வ்யூவுக்கே அழைத்திருக்கிறோம்...."

"ஷார்ட்ஹாண்ட், டைப்ரைட்டிங், டெலிக்ராபி, ஃப்ரெஞ்ச் எல்லாம் தெரியும்.... ப்ளஸ் பாயிண்ட்கள் இல்லையா இதெல்

லாம்?''

"எதுவும் எங்களுக்குத் தேவையில்லை... உன் மைனஸ் பாயிண்ட்களை நான் சொல்லட்டுமா....? நீ ஏதோ நூன்—ஷோவுக்குப் போகிற மாதிரி டிரெஸ் செய்து கொண்டு வந்திருக்கிறாய். உன் பேச்சிலே பணிவு இல்லை.... காலை நீட்டி உட்கார்ந்திருக்கும் விதத்தில் அலட்சியம் அப்பட்டமாகத் தெரிகிறது....''

சட்டென்று கால்களை இழுத்துக் கொண்டான்.

"இருந்தாலும் உன்னை நான் செலக்ட் செய்திருக்கிறேன்... ஏன்? இன்னும் ஆறு மாசமானால் உனக்கு இருபத்தெட்டு வயது ஆகி விடும். உன் நிலை இதே போலத் தொடருமானால், மனசுக்குள் ரொம்பவும் ஒடிந்து போய்விடுவாய்.... ஏற்கெனவே உனக்குள் வளர்ந்திருக்கும் நெகடிவ் சிந்தனைகள் இன்னும் தீவிரமடையும்.... உனக்கும் சுகமில்லாமல், மற்றவர்களுக்கும் பயன்படாமல் போய்விடுவாய். அதைத் தவிர்க்கவே உனக்கு வேலை போட்டுக் கொடுக்க முடிவு செய்தேன்.... புரிகிறதா?''

என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் மௌனமாக இருந்தான் அருண். பிறகு, "தாங்க் யூ சார்!" என்றான். "ஒரு வாரம் அவகாசம் கொடுங்கள். யோசித்து முடிவு சொல்கிறேன்.''

"வாட்! ஒரு வாரம் டயமா? என்ன விஷயம்?''

நமுட்டுச் சிரிப்புச் சிரித்தான். "இதுவரைக்கும் இண்டர்வியூவுக்குப் போன இடங்களில் இப்படித்தான் பதில் சொல்லி அனுப்பியிருக்கிறார்கள். ஒரு மாறுதலுக்காக நானும் அதே போலச் சொல்ல ஆசைப்பட்டேன். அதுதான் விஷயம்! கட்டாயம் நான் இந்த வேலையை — நீங்கள் கொடுப்பதாகச் சொன்ன சம்பளத்தை — ஏற்றுக் கொள்கிறேன் சார்!''

பாணி வாய் விட்டுச் சிரித்தார். "ஐ லைக் யூ!'' என்றார்.

அந்தக் கட்டடத்தை விட்டு வெளியே வந்தான் அருண். சாலையில் ஜனக்கும்பல் எதையோ பிடிக்க அல்லது எடுக்கப் போகிற அவசரத்தில் அலை மோதிக் கொண்டிருந்தது. பஸ்களும், கார்களும், ஆட்டோக்களும் காற்றையும் அமைதியையும் வெறியுடன் மாசுபடுத்திக் கொண்டிருந்தன. நடைபாதையின் அறுபது சதவிகிதத்தை ஆக்கிரமிப்புச் செய்திருந்த வியாபாரிகள், வாடிக்கையாளர்களுக்கு வலை வீசிக் கொண்டிருந்தார்கள்.

பத்திரிகைக் கடை ஒன்றின் எதிரே வந்ததும் கால்கள் நிற்க, கண்கள் மேய்ச்சலுக்கு அவிழ்த்து விடப்பட்டன. வரிசையாகப் பரப்பப்பட்டிருந்த பத்திரிகைகளில் நடிகைகள் மாத நாவல்களின் கண்ணாடி அட்டைக்குள்ளிருந்து கவர்ச்சி காட்டிக் கொண்டிருந்தார்கள். இரட்டை அர்த்தத் தலைப்புகள், ரத்தம் கொதிக்கும் தலைப்புகள், கிளுகிளுக்க வைக்கும் தலைப்புகள், கொலைகள், கற்பழிப்புகள், ஆவிகள், அச்சுறுத்தல்கள்....

சட்டென்று, சற்று முன்பு அந்த ரிஸப்ஷன் அறையில் நடந்த சம்பவம் நினைவுக்கு வர, மழைக்காலக் காளான்களாக மண்டைக்குள் கேள்விகள் முளைத்தன.

யார் அந்தத் தாடிக்காரன்? அவனுக்கு எப்படி என் பழைய பெயர் தெரிந்தது? தாடிக்காரனை நோக்கிச் சுட்டவன் யார்? ஏன் சுட்டான்? தாடிக்காரனைச் சூழ்ந்திருக்கும் ஆபத்து என்ன? அதிலிருந்து நான் எவ்வாறு அவனைத் தப்புவிக்க முடியும் என்று எதிர்பார்க்கிறான்...?

சற்று நேரம் ஓர் இடத்தில் உட்கார்ந்து யோசிக்க வேண்டும் போலிருந்தது. அருகிலிருந்த ஹோட்டலுக்குள் நுழைந்தான்.

இன்னும் லஞ்ச் டயம் ஆகவில்லையாதலால் கூட்டம் அதிகமில்லை. மேஜைகள் தோறும் ஈக்கள் வட்ட, மாவட்ட, மாநில மாநாடுகள் நடத்திக் கொண்டிருந்தன.

ஒரு காப்பி கொண்டு வரும்படி சர்வரிடம் சொல்ல, அவர் அடுத்த மேஜையிலிருந்து இரண்டு தண்ணீர் டம்ளர்களை எடுத்து இவன் மேஜை மீது வைத்துவிட்டு, சமையலறை என்ற புனைபெயர் தாங்கிய இருட்டுக் குகையில் போய்ப் பதுங்கிக் கொண்டார்.

சற்றுத் தள்ளி இருந்த பெரிய கண்ணாடி அலமாரியின் கதவைத் திறந்து, ஒரு தட்டு நிறையப் பளபளக்கும் ஜாங்கிரிகளைக் கொண்டு வந்து வைத்துவிட்டு அழுக்குத் துண்டை உதறிவிட்டு அப்பால் போனார் சரக்கு மாஸ்டர்.

'வேலை கிடைத்துவிட்டது என்ற நல்ல செய்தியுடன் வீட்டுக்குப் போகப் போகிறோம். வெறுங்கையுடன் செல்வதற்குப் பதில் இனிப்புப் பொட்டலத்துடன் போய் நின்று எல்லாரையும் சந்தோஷப்படுத்தினால் என்ன?' என்று தோன்றியது அருணுக்கு.

பணம் இருக்கிறதா என்று பார்த்துக் கொள்ளும் உத்தேசத்துடன் சட்டைப் பையில் கைவிட்டான். விரல்களை வெளியே எடுத்த போது ரூபாய் நோட்டுக்களுடன் இரண்டாக மடிக்கப்பட்ட ஒரு துண்டுக் காகிதமும் சேர்ந்து வந்தது.

என்ன இது?

ஆர்வம் மேலிட, பிரித்துப் பார்த்தான்.

'முட்டைக் கண்ணா! வளசரவாக்கம், 18 வது குறுக்குத் தெரு, மூன்றாம் நம்பருக்கு இன்று மாலை 7. மணிக்கு வா!'

அட! அந்தத் தாடிக்காரன் வெளியேறும் போது தன்மீது தடுக்கி விழுந்தது இதைச் சேர்ப்பிக்கத்தானா!

'டொக்!'

அலுப்புடன் கொண்டு வந்து ஆத்திரத்துடன் வைக்கப்பட்ட காப்பியை மளமள

முகுந்தன்



அருள்வாக்கு

உத்தமமான விஷயத்திலே மனஸைக் கொஞ்சமாவது நிறுத்தப் பார்க்காமல் ஓயாமல் காரியம் பண்ணிக் கொண்டேயிருப்பதற்குநாம்மனஸ்உள்ள மனுஷ்யனுகப் பிறந்தேயிருக்க வேண்டாம்;மெஷினுக நம்மை ஏதாவது பாக்டரியில் பண்ணிப் போட்டிருக்கலாம். என்றைக்கோ ஒருநாள் த்யானத்தில் பக்குவம் வர வேண்டுமென்ருல் அதற்கு ஆரம்ப முயற்சி பண்ணுமல் எப்படி முடியும்? இனிமேலே பக்குவம் வர வேண்டுமென்பதாலேயே இப்போதுள்ள அபக்குவ மனஸோடுதான் ஆரம்பித்தாக வேண்டுமென்ருகிறது.

சோனியாயிருக்கிறவன் யோகாசனம் போட்டால் பலசாலியாகலாம். யோகாசனம் போடுவதற்கே சோனிக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். அதற்காக ப்ரயத்னத்தை விட்டுவிடுவதா? அஞ்சு நிமிஷமாவது பண்ண ஆரம்பித்து, அப்புறம் பத்து நிமிஷம், கால் மணி, அரை மணி என்று பண்ணிக் கொண்டு போய் எத்தனையோ சோனிகள் ஆரோக்கியசாலிகளானதைப் பார்க்கிறோம். அப்படித்தான் இதுவும். ஆத்மா என்ற நினைப்பும் அத்வைதத்திலே ப்ரயாஸையும் உங்களுக்கெல்லாம் இன்றிலிருந்தே கொஞ்சம் கொஞ்சமாவது இருக்க வேண்டுமென்று சொல்லத்தான் உபந்யாசம் செய்கிறேன். இதற்கான சித்த சுத்தியைப் பெற நிறைய ஸத்தர்மா செய்யச் சொல்கிறேன். முடிந்த முடிவிலே, நினைப்பும், அதாவது த்யானமும் போய் ஞான அனுபவமே நிற்கும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

வென்று குடித்தான். ஒருவித காரத்துடன் அது நெஞ்சில் இறங்கியது.

ஒரு டஜன் ஜாங்கிரி 'பார்சல்' கட்டி வாங்கிக் கொண்டு மொத்தமாகப் பில்லுக்குப் பணம் கொடுக்கும்போது, கவுன்டரில் இருந்தவரிடம் "காப்பிதான் கேட்டேன். சர்வர் கொண்டு வந்து கொடுத்தது மருந்துக் கஷாயம் போலிருந்தது" என்று புகார் சொல்லிவிட்டு, முகத்தைப் பார்த்தான்.

"யார்ரா அங்கே! சாருக்கு அம்பது பைசாவுக்கு ஒரு பில் போட்டுக் கொடு!" என்று குரல் கொடுத்தவாறே, "காப்பி 70 காசு, கஷாயம் 1.20!" என்று முகத்தில் சலனமின்றி விளக்கம் சொல்லி, சில்லறைகளை மேஜை மீது விட்டெறிந்தார் ஹோட்டல்காரர்!

அந்தப் பெரிய மனிதர் மாளிகை போன்ற தம் பங்களாவில் பச்சை நிறக் கார்ப்பெட் விரித்த மாடி அறையில் வேகமாக நடைபயின்று கொண்டிருந்தார். அத்துடன் அடிக்கடி சுவரில் மாட்டியிருந்த ஜப்பானிய க்வார்ட்ஸ் அனலாக் கடிகாரத்தைப் பார்த்துப் பொறுமையிழந்து கொண்டிருந்தார்.

அவர் எதிர்பார்ப்பது இரண்டு போன் கால்களை. இரண்டுமே முக்கியமான நபர்களிடமிருந்து. இரண்டுமே பணம் தேடிக் கொடுப்பவை. மனசுக்குள் சின்னதாகக் கணக்குப் போட்டுப் பார்த்தபோது ஒரு பெருந்தொகைக்கான எண்கள் ஆளுயர சைஸில் தோன்றி 'ஹலோ!' என்றன. உச்சி குளிர்ந்து அவர் உறைந்து நின்ற போது, போன் அடித்தது. பாய்ந்து எடுத்தார் ரிஸீவரை.

"யாரது? நம்பர் முப்பத்திரண்டா?" என்று அதட்டியது மறுமுனைக் குரல்.

"நானேதான் ஐயா!" — குழைந்தார் பங்களாக்காரர்.

"பார்ட்டி ரெடி. நீங்கள் அதைக் கொண்டு போய்க் கொடுத்து விட்டுப் பணத்தை வாங்கி வரவேண்டும்..."

"சரி ஐயா!"

"பார்ட்டி தங்கியிருக்கிற அட்ரஸ் சொல்றேன். கேட்டுக்குங்க..."

"சொல்லுங்க ஐயா!" — கோட்டுப் பாக்கெட்டில் செருகியிருந்த பேனாவை எடுத்து இரண்டு தரம் உதறிப் பார்த்துவிட்டு, போனில் வந்த விலாசத்தை இடது உள்ளங்கையில் எழுதிக் கொண்டார்.

"ஆறே முக்காலுக்கு நீங்கள் அங்கே இருந்தாக வேண்டும். பார்ட்டி அதற்குமேல் ஐந்து நிமிஷம்தான் வெயிட் பண்ணுவார். எனவே பீ பங்ச்சுவல்... இன்னொரு விஷயம்: கண்காணிப்பு அதிகமாக இருக்கிறது. ஜாக்கிரதை!"

"அதெல்லாம் நான் பார்த்துக்கிடறேன் ஐயா!"

பயபக்தியுடன் ரிஸீவரை வைத்தார். அறையில் வரிசையாக நின்றிருந்த நான்கு ஸ்டீல் பீரோக்களில் ஒன்றைத் திறந்து, ஓர் அட்டைப்பெட்டியை எடுத்து, ப்ரீஃப்கேஸில் பத்திரப்படுத்திக் கொண்டார். கேஸின்

நம்பர் லாக்கை அமைத்துப் பூட்டினர்.

நிமிர்ந்தபோது கடிகாரம் 5.55 என்றது. குறிப்பிட்ட விலாசத்துக்கு அவர் சரியான நேரத்தில் போய்ச் சேர வேண்டுமானல் குறைந்த பட்சம் அரைமணி பிடிக்கும். மாலே நேர டிராஃபிக் வேறு. இப்போதே புறப் பட்டால்தான் சரியாக இருக்கும்.

இரண்டாவது போன் காலுக்குக் காத்திரா மல் புறப்பட்டார் அந்தப் பெரிய மனிதர்.

**"எ**க்ஸ்க்யூஸ் மீ!''

பதிலில்லே.

''மிஸ்டர் உங்களேத்தான்!'

திரும்பவில்லே.

''சார், ஒரு நிமிஷம்!''

பார்க்கவில்லே.

''ஐயா! கொஞ்சம் நின்று பேச முடியுமா?''

பலனில்லே.

நடையைக் கொஞ்சம் எட்டிப் போட்டு அந்த இளேஞனுக்கு எதிரே போய் வழியை மறிக்கிற மாதிரி கைகளே அகல விரித்தபடி அந்தப் பெண் நின்ற பிறகுதான் அவனது சிந்தனே கலேந்தது.

''என்னேயா கூப்பிட்டீர்கள்?''

"ஒரு தரம் இல்லே... நாலு தரம்! கூப்பிட் டுக் கொண்டே பின்னலேயே ஓடி வருகி றேன்!''

''அப்படியா?'' என்றவன், புதுமுகத்தைத் தேர்வு செய்யும் நட்சத்திர டைரக்டரின் கழுகுப் பார்வையுடன் அவளே அளந்தான்.

மைதீட்டிய அவளது கண்களில்தான் லேசான கலவரம் தலேகாட்டியதே தவிர, மற்றபடி அமைதியாகவே காணப்பட்டாள்.

''நான் ஹாஸ்டலுக்குப் போக வேண் டும்,'' என்ருள் கையில் இருந்த கர்ச்சீப்பை முறுக்கியபடியே.

''போங்களேன்... நானு குறுக்கே நிற்கி றேன்?''

''அதற்கு உங்கள் உதவி தேவை...''

''துணேக்கு வர வேண்டுமா? எதற்கு? நீங்கள்தான் கழுத்திலோ காதிலோ நகை எதுவும் போட்டுக் கொள்ளவில்லேயே! எவனும் வந்து மிரட்ட மாட்டான்; பயப் படாமல் போங்கள்!''

''ஐயோ, அதில்லே விஷயம்! கையிலே நூறு ரூபாய் நோட்டாக இருக்கிறது. பஸ் ஸுக்குச் சில்லறை இல்லே, ஒரு எண்பது பைசா கொடுத்து உதவ முடியுமானல்.,..''

'கௌரவப் பிச்சை போலிருக்கிறது' என்று எண்ணியபடியே ஒரு ரூபாய்த் தாளே எடுத்து நீட்டினன் அவன் — அருண்.

ஒரு 'தாங்க்யூ!' வை உதிர்த்து விட்டு ஓடிய அந்தப் பெண்ணே மறந்து, மேலே நடந்தான் அருண். வளசரவாக்கம் போகிற அவசரம் அவனுக்கு.

அவன் திரும்பிப் பார்த்திருந்தால் அந்தப் பெண் சாலேயைக் கடந்து, எதிர்ப்புறம் இருந்த ஒரு துணிக் கடையில் நுழைந்து, போன் பேசுவதற்கு அனுமதி பெற்ற காட்சி தென்பட்டிருக்கும்...

(தொடரும்)

# பொன்மொழிப் போட்டி-4 முடிவு:

பரிசு பெற்றவர்கள் சென்ற இதழ் தொடர்ச்சி.....

133. கி. ராதாபாய், மதுரை — 2; 134. கே. எஸ். பரமேசுவரன், சென்னை — 4 1; 135. என். ஏ. ஸ்ரீனிவாசன், சென்னை — 94; 136. சி. பானுமதி, சிவகாசி; 137. மா. அ. பிரகாசம், மல்லசமுத்திரம்; 138. நளினி வேணுகோபாலன், மேட்டூர் அணை — 1; 139. என். ராமலிங்கம், வடபாதிமங்கலம்; 14 0. எஸ். ராஜாராம், சென்னை — 61; 14 1. சந்திரா ராஜகோபால், மேட்டுப்பாளையம்; 14 2. ஏ. நாககுப்ரமணியம், சேலம்—3; 14 3. டி. ரங்கசாமி, பா. நா. பாளையம் (கோவை); 14 4. க. விநாயகம், மதுரை — 1; 14 5. அ. ராசவேலு, காராமேடு (வ. ஆ.); 14 6. கே. எஸ். குமார், பெங்களூர் — 50; 14 7. எஸ். ஜெயராஜ், விழமால்; 14 8. எஸ். சாமிநாதன், குடவாசல்; 14 9. கல்யாண சுந்தரம், தஞ்சை — 9; 150. ஆர். கிட்டு, லிங்கனூர்; 151. வி. கவியரசி, இராஜபாளையம்; 152. அஹல்யா ராவ், போபால்; 153. கே. சரவணன், சேத்திரபாலபுரம்; 154. எஸ். பரிதா சர்புதீன், திருமயம்; 155. ஆர். சாவித்திரி, கோவை — 22. 156. வி. கல்யாண சுந்தரம், சென்னை — 18; 157. டி. பங்கஜம், கோவை — 30; 158. எஸ். செல்வராணி, திருச்சி—21. 159. ஏ. இந்திராணி, கோட்டாத்தூர்; 160. க. இளங்கோ நந்தியநல்லூர்; 161. ஹெச். எஸ். மணி, டி. வி. கோயில்; 162. மாலதி வெங்கடேஸ்வரன், சென்னை—33. 163. வி. எம். பாக்யம், இடையர்பாளையம்; 164. என். சங்கப்பிள்ளை, திராம்பட்டி; 165. பி. வி. பாலாஜி, சென்னை — 11; 166. என். வெங்கட்ட பாலகுருமூர்த்தி, புவனகிரி; 167. பி. ராமநாராயணன், ஈரோடு — 2; 168. கொல்லங்கோட்ராஜு, சமத்தூர்; 169. வி. மாரிமுத்து, அக்கரைப்பட்டி; 170. ஜி. லோகநாதன், கொமாரபாளையம்; 17 1. எம். எஸ். பி.வி. சௌந்தரராஜன், தேனி; 17 2. வி. எஸ். விமலா, சென்னை — 4 3; 17 3. எஸ். சங்கரநாராயணன், சென்னை — 80; 174. இரா. வெங்கடேசன், அரியாங்குப்பம்; 175. எல். இராமச்சந்திரன், தருமபுரி — 5; 176. வி. இரவிச்சந்திரன், தொளசம்பட்டி; 177. ஆர். ரமேஷ், திருப்பத்தூர் (வ. ஆ.); 178. ஆர். சீனிவாசன், விருத்தாசலம்; 179. எஸ். கிருஷ்ணசாமி, கோவை—1; 180. வி. புவனேஸ்வரி, தஞ்சை — 7; 181. பி. என். துளசிராம், திருச்சி — 23; 182. வி. மாலதி, கோவை—18; 183. ஆர். இந்திரா, மதுரை — 20; 184. ஆர். கண்ணன், கோவை — 14; 185. பி. கருணாநிதி, சென்னை — 19; 186. பி. விஜயலட்சுமி, சென்னை — 13; 187. எஸ். சுப்பிரமணியன் சங்கரன், சென்னை — 28; 188. ஆர். வெங்கடாஜலம், இலத்தூர்; 189. பி. ஷியாம்சுந்தர், நாசிக் — 9; 190. எஸ். வசந்தா, தஞ்சை; 191. வி. ஸ்ரீனிவாசன், கள்ளக்குறிச்சி, 192. லலிதா துரைசாமி, இராசிபுரம்; 193. ஆர். அப்துல் சலாம், திருச்சி — 20; 194. ந. சுவாமிநாதன், சென்னை — 34; 195. ஆர். நாராயணன், சென்னை — 33; 196. எஸ். முகம்மது யூசுப், திருப்பூர் — 4; 197. கே. ராமசாமி, லெக்ஷ்மிபுரம்; 198. சி. சுகந்தமணி, சேலம் — 8; 199. த. வாசுதேவன், புதுவை — 9; 200. சித. வைரவன், சென்னை — 17; 201. க. நீலமேகம், கல்லூர்; 202. மு. அருணாசலம், சேலம் — 7; 203. கே. கே. பழனிசாமி, ஈரோடு — 2; 204. எஸ். பிரியதர்சிணி, மதுரை — 1; 205. எஸ். சகுந்தலா, ஈரோடு — 1; 206. கே. ராணி தேவசேனா, ஜெயங்கொண்டம்; 207. எஸ். சீனிவாசன், வேடசந்தூர்; 208. கே. லட்சுமி, திருநெல்வேலி — 7; 209. வி. தண்டபாணி, பேலத்தூர்: 210. டி. கே. பிருந்தா, கோவை — 34; 211. உஷா சுப்ரமணியன், கோவை — 38; 212. ஏ. கதிரவன், வர்ணபுரம், 213. ஆர். விஸ்வநாதன், சென்னை — 33; 214. ஆர். சுந்தர்ராஜ், சென்னை — 61; 215. எம். கே. ஸ்ரீனிவாசன், சென்னை — 17; 216. சுசிலா கிளமென்ட்ஸ், கோவை — 4; 217. எல். சி. கிருஷ்ணமூர்த்தி, சத்துவாச்சாரி; 218. கே. வி. என். சம்புநாதன், செங்குந்தபுரம்; 219. கௌசல்யா சேதுபதி, மணக்குடி; 220. மீ. இராசகோபாலன், தூத்துக்குடி — 3; 221. ஆர். பிரசன்னா, பாண்டி — 1; 222. விமலா நமசிவாயம், சின்னக் கொல்லப்பட்டி; 223. எம். சுதா ஜோதிடன், எட்டையாபுரம்; 224. வி.எஸ். தியாகராஜன், கொப்பனாப்பட்டி; 225. எம். ராகவேந்திர ராவ், கோவை—29; 226. எஸ். கிருத்திகா, கும்பகோணம்; 227. ஜி. பிரபாகர், மதுரை—1; 228. அமுதா பழனி, சென்னை—53; 229. க. மீனாக்ஷி கல்யாணம், கோவை—11; 230. ஐ. ந. பிரபு, ஈரோடு—1; 231. ஆர்.எஸ். சுப்ரமணியன், தானே (பம்பாய்); 232. சிதம்பர செல்வராசன், கோட்டூர்; 233. ஆர். இராமாமிர்தம், பாண்டி—1; 234. ஆர். வசந்தி, எல். எண்டத்தூர், 235. வி. வசந்தகுமாரி, தஞ்சை; 236. டி.ஆர். பாலாஜி சங்கர், சேலம் — 1; 237. ஆர். இந்திரா, நெய்வேலி—3; 238. ஜி. எம். ஜனார்தனன், மதுரை—9; 239. பி. கிருஷ்ணவேணி, சென்னை—4 0; 24 0. ஜி.எம். சாக்கிர் உசேன், மேட்டூர் அணை; 24 1. எஸ். வி. திருஞானம், முத்தூர்; 24 2. ரு.அ. ராணி, உதயநத்தம்; 24 3. பி. ஸ்ரீனிவாசன், சேலம் — 7; 24 4. சீதாலட்சுமி, சென்னை — 101; 24 5. ஆர். பாலமுருகன், சிதம்பரம்—1; 24 6. வே. சியாமளா, புதுதில்லி—19; 24 7. கி. சுபாஷிணி, பெரிய கல்லாபுரம்; 24 8. எம். ஐயப்பன், திருநெல்வேலி—11; 24 9. எஸ். லட்சுமி தேவி, நெல்லை—11; 250. இல. சுப்பிரமணியன், திருவண்ணாமலை; 251. எஸ். சுரேஷ், சென்னை—4 4; 252. கே. குப்புசாமி, இச்சிப்பட்டி; 253. கே. சங்கர நாராயணன், மதுரை—1; 254. மா. முருகன், ம. புளியங்குளம், 255. எல்.கே. சாகுல்ஹமீது, கொல்லம்—12; 256. ஏ. கணேசன், பம்பாய்—58; 257. என். தனலட்சுமி நடராஜன், தஞ்சை—9; 258. பி.கே. வைத்யநாதன், திருச்சி—6; 259. ஊ. மங்களம், என். முத்துலிங்காபுரம்; 260. மாலதி சிவசுப்பிரமணியன், சென்னை—80; 261. சி.பி. ஆனந்தராஜ், ஈரோடு—1; 262. எம். ராஜேஸ்வரி, சென்னை—93; 263. எம்.வி. தியாகராஜன், வீ. சத்திரம்; 264. ராஜீவி நரசிம்மன், பம்பாய் — 38; 265. ஜி. கிருஷ்ணசாமி, திருமானூர்; 266. ஜி. சாய்நாத், சென்னை—20; 267. ஆர். வசந்தா, தஞ்சை—7; 268. பி. ராஜேந்திரன், கும்பகோணம், 269. எஸ். கந்தசாமி, பம்பாய்—98; 270. ராஜேஸ்வரி, சென்னை—61; 271. என். பத்மா, கும்பகோணம்; 272. அ. பாஸ்கரன், மதுரை; 273. கே. ராஜலட்சுமி, திருநெல்வேலி—7; 274. மு. புகழேந்தி, முசிரி; 275. ஓ.வி. கிருஷ்ணமூர்த்தி, கே.ஜி.எப்; 276. கி. சுப்பராயன், மறைமலை நகர்; 277. எஸ்.கே. முருகானந்தம், விளாத்திகுளம்; 278. அ. முருகன், குமாரபாளையம்; 279. தனலக்ஷ்மி பசுபதி, பம்பாய்—89; 280. வி. உமாமகேசுவரி, தூத்துக்குடி — 8; 281. எஸ். ஜெயலட்சுமி, பெங்களூர்—82; 282. ஆர். சண்முக சுந்தரம், சென்னை—39; 283. ஏ.ஜி. குருசுவாமி, கோவை—21; 284. பி.ஆர். ருக்மணி, சென்னை—61; 285. வி.எம். சத்திய நாராயணன், திருவலாம்பொழில், 286. ஆ. ஸ்ரீரங்க கார்த்திகேயன், ஒரத்தநாடு; 287. பி. மனோகரன், திண்டுக்கல்; 288. என். கிருஷ்ணவேணி, புதுக்கோட்டை—1; 289. டி. பழனியப்பன், பொம்மன்பட்டி; 290. எம். செல்லப்பன், நெ. பள்ளம்பாக்கம்; 291. கே.எஸ். ராதாகிருஷ்ணன், கோபி; 292. டி. ரமணி ரோஸலின், மதுரை—2; 293. அருகானந்து, கீழசிவல்பட்டி; 294. ஞானசேகரன், மதுரை — 1.

(தொடரும்)

# ஓ... அவனா?

வீட்டை விட்டுப் புறப்படும்போதே சகுனம் சரியில்லை. ஏதோ ஓர் இனம் புரியாத கலவரம் என்னை ஆட்டி வைத்தது. "இன்னொரு நாளைக்குப் போகலாம்!" என்று கூட இவரிடம் சொல்லிப் பார்த்தேன்.

"ஆந்திராவில் பிரமாதமாக ஓடிய படம். இங்கு எத்தனை நாட்கள் ஓடுமோ?" — எனப் பிடிவாதம் பிடித்துத் தியேட்டருக்கு அழைத்து வந்துவிட்டார்.

தியேட்டர் முகப்பிற்குள் நுழையும்போது, அவன் இவர் மேல் எதேச்சையாக மோதினான். நகர்ந்து கொண்டு, "வெரி ஸாரி!" என்று கண்ணியமாக மன்னிப்பு கேட்டபோதுதான் அவனை நான் பார்த்தேன். அவனும் என்னைக் கண் கொட்டாமல் பார்த்தான். எனக்குப் பயம் வந்தது. அவன் தைரியமாக எனக்குச் சவால் விடுவதுபோல் பார்த்தான்.

அவனைப் பற்றிச் சொல்ல வேண்டுமென்றால் பெருங் கதை...



பெயர் பாபு. எங்கள் வீட்டுக்கு எதிர் வரிசையில் ஒரு லாட்ஜில் அறை எடுத்துக் கொண்டு தங்கியிருந்தான். பாங்கில் ஆபீஸர் வேலை பார்த்து வந்தான். நான் காலேஜுக்குப் போகும் போதும் வரும் போதும் பார்ப்பேன்.

சாதாரணமாகப் புன்னகை செய்தது கூடக் கிடையாது. கண்களில் லேசாகத் தெரிந்த அறிமுகத்துடன் சரி.

அன்று பாரதப் பிரதமர் சுட்டுக் கொல்லப்பட்ட தினம். எல்லா பஸ்களும் நிறுத்தப்பட்டு விட்டன. எப்படி வீடு திரும்புவது என்ற பிரச்னை. பத்துக் கிலோ மீட்டருக்கு மேல் நடக்க முடியுமா? அந்தச் சமயத்தில்தான் அவன் ஸ்கூட்டர் என் பக்கம் வந்து நின்றது.

"ஆபத்திற்குப் பாவமில்லை. ஏறிக் கொள்ளுங்கள். தெரு முனையில் இறக்கி விட்டு விடுகிறேன்!" என்றான். திருப்பித் திருப்பி வற்புறுத்தினான். ஏறிக் கொண்டேன். என் உடல் அவன் மேல் படாமல் பார்த்துக் கொண்டேன்.

வழியில் ஒரு கும்பல் எங்கள் வண்டியைச் சூழ்ந்து கொண்டது. இறங்கிப் போய் ஏதோ பேசிவிட்டு வந்தான். நடுங்கியபடி நின்று கொண்டிருந்த எனக்குத் தைரியம் சொல்லி வழி அனுப்பியது கூட்டம். எனக்குப் புரியவில்லை.

"உங்கள் அப்பா பெரிய காங்கிரஸ் தியாகி என்றும், பிரதமர் சுடப்பட்ட சேதி கேட்டு இருதய வலியால் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டதாக 'ரீல்' விட்டேன். மரியாதையுடன் வழி அனுப்பி வைத்தார்கள்."

நான் கலகலவென்று சிரித்தேன். என் அப்பாவை நான் நினைவு தெரிந்து பார்த்ததேயில்லை.

இப்படி ஆரம்பித்த எங்கள் நட்பு கொஞ்சம் கொஞ்சமாக வளர்ந்து 'அவனில்லாமல் நான் இல்லை' என்ற நம்பிக்கைக்கு என் நெஞ்சில் வித்திட்டது.

ஒருநாள் இருவரும்

சேர்ந்து புகைப்படம் எடுத்துக் கொள்ள ஒரு ஸ்டூடியோ சென்ருேம். பழங்காலத்து ஸ்டூடியோ. புகைப்படம் எடுப்பவர் மிகவும் வயதானவர். படம் எடுத்து முடிந்ததும், மறு நாள் வந்து படம் வாங்கிக் கொள்ளச் சொன்ஞர்.

மறுநாள் காலே காலேஜ் போனபோது விடுமுறை அறிவித்தார்கள். மானேஜிங் கமிட்டியின் மெம்பர் ஒருவர் மண்டையைப் போட்டுவிட்டாராம். போட்டோவை வாங்கி வர நானே புறப்பட்டுப் போனேன்.

போட்டோகிர்ராபர் என்னேப் பார்த்ததும் தயங்கித் தயங்கிப் பேசினுர்.

"நீ யார் என்று எனக்குத் தெரியாது அம்மா. உன் அப்பா வயது எனக்கு ஆகிறது. பொய் சொல்வதாலோ கோள் மூட்டுவதாலோ எனக்கு லாபம் இல்லே. உன் கூட வந்த பையன் நல்லவன் இல்லே. பொம்பளேப் பொறுக்கி. ஊருக்கு வெளியே இருக்கும் இந்த ஸ்டூடியோவிற்கு எத்தனேயோ பெண்களேக் கூட்டி வந்திருக்கிருன். வயிற்றுப் பிழைப்பிற்காக நானும் படம் எடுத்திருக்கிறேன். பார்க்கிருயா?"

அவர் உள்ளேயிருந்து ஓர் ஆல்பத்தை எடுத்துக் காட்டினுர். நான் அதிர்ந்து போனேன்.

"ஐயோ.... இத்தனே படங்களா? எத்தனே நெருக்கம்? அடடா....? இது யார்? என் பள்ளித் தோழி சுதா! எவனேயோ நம்பி ஏமாந்து தன்னேயே முடித்துக் கொண்ட அவலம் எனக்குத் தெரியும்.

"இதோ பார் அம்மா! நான் எதுவும் சொன்னதாக வெளியில் தெரியவேண்டாம். அவன் முரடன். இந்த போட்டோ சரியாக வரவில்லே என்று நான் போக்குக் காட்டி விடுகிறேன். நீ உன்னே எப்படியாவது காப்பாற்றிக் கொள்!" என்ருர்.

நான் நொறுங்கிப் போனேன். இவர் கடவுள் போல் வந்து சொன்ஞர். இன்னும் கொஞ்ச நாட்களில் நானும் சுதாவைப் போல் — கழுத்தில் தாலி ஏருமலே தாயாகியிருப்பேன்.

அதற்குப் பிறகு அவனே நான் தவிர்த்தேன். முகம் கொடுத்துப் பேசுவதில்லே. தனியாக வெளியில் எங்கும் போவதில்லே.

ஒருநாள் எப்படியோ அவன் என்னே மடக்கி விட்டான்.

"ஏன் என்னே இப்படி ஒதுக்குகிருய்? எந்தப் பொருமை பிடித்த பயல் கதை கட்டி விட்டான்?" எனக் கேட்டான்.

"எவனுே இல்லே, ஒருத்தி...."

"யார் அந்தக் கழுதை..."

"விலாசம் தரட்டுமா, பேர் சுதா.... உன்னே நம்பினுள் பார்... பேயாக வந்து தூக்கத்தில் சொன்ஞள்" என்றதும் அவன் அசந்து போனுன்.

அதற்குப் பிறகு அவனே நான் பார்க்கவில்லே. ஊரை விட்டு மாற்றல் வாங்கிப் போனதாகக் கேள்விப்பட்டேன்.

இரண்டு வருடங்கள் முன் எனக்குக் கல்யாணம் ஆயிற்று. என் மாமா பார்த்து ஏற்பாடு செய்தது. பார்க்கச் சுமாராக இருந்தாலும் மனம் தங்கம். என் மேல் உயிராக இருந்தார்.

வடக்கிலே இருந்த நாங்கள் இந்த ஊருக்கு மாற்றல் கிடைத்துப் போன மாதம்தான் வந்தோம். இப்போது இந்தப் பூதம் கிளம்பியிருக்கிறது. என்னே விழுங்காமல் விடாது!

தியேட்டருக்கு வெளியே போக இருந்தவன் திரும்பி இவர் பின்னுல் டிக்கெட் வாங்க வரிசையில் நின்ருன். எங்களுக்கு அடுத்த டிக்கெட் வாங்கிக் கொண்டு அவர் பக்கத்தில் வந்து உட்கார்ந்தான்.

நாங்கள் நுழைவதற்கும் படம் தொடங்கவும் சரியாக இருந்தது. ஆகவே அவன் என்ன செய்கிருன் என்று என்னுல் பார்க்க முடியவில்லே. தொடர்ந்து என் கணவரிடம் மெதுவாக ஏதோ சொல்லிக் கொண்டிருந்தான். அவரும் என்னே அடிக்கடி திரும்பிப் பார்த்தார்.

கடவுளே! என்ன சோதனே இது? வீட்டுக்குத் திரும்பியதும் எந்தப் பிரளயத்தை எதிர் கொள்ள வேண்டியிருக்குமோ? பெட்டியை வெளியே எடுத்துக் கழுத்தைப் பிடித்துத் தள்ளப் போகிருரோ?

முன்பு ஒருநாள் அகஸ்மாத்தாக என் மேல் ஒருவன் கைபட, அவன் கன்னத்தைப் பதம் பார்த்தவருக்கு, இவன் சொல்லியிருப்பது எத்தனே வெறி ஊட்டும்?

இண்டர்வெல் வந்தது. "வா! போகலாம்! படம் பார்த்தது போதும்!" என்ருர்.

நான் மௌனமாகப் பின்தொடர்ந்தேன். அவன் நமட்டுச் சிரிப்புடன் கைகுவித்து விடை கொடுத்தான்.

ஆட்டோவில் வீட்டிற்குப் போகும்போது அவர் ஒரு வார்த்தை கூடப் பேசவில்லே.

வீட்டைத் திறந்து உள்ளே நுழைந்தவர் என்னே வெறித்துப் பார்த்தார்.

ஒரு சிறு விரிசல் கூட இல்லாத எங்கள் தாம்பத்தியம் அஸ்திவாரத்துடன் இப்போது சாயப் போகிறது!

நான் எதிர்பாராதவிதமாக அவர் நாற்காலியில் சாய்ந்து கொண்டு 'இடி இடி' எனச் சிரித்தார்.

"என்ன?" எனக் கேட்டேன்.

தன் பையைத் தொட்டுக் காண்பித்தார்.

"என்னுடைய ஹியரிங்—எய்ட் பாட்டரி தீர்ந்துவிட்டது. சுத்தமாக ஒரு வார்த்தை கேட்கவில்லே. எத்தனே நாழி ஊமைப் படம் பார்ப்பது? பக்கத்தில் ஒரு தடியன் வேறே தொண தொண வென்று கொன்னுட்டான் போ!"

ஓ! இவருக்குக் காது கேட்காது என்று நான் சொல்லவில்லேயோ? அந்தக் குறை எனக்கு அடிமனத்தில் உண்டு! இப்போது அதுவே நிறையாகத் தெரிந்தது.

வெளியே மேக மூட்டம் விலகிச் சந்திரன் பளீரென்று சிரித்தான், என் மனத்தைப் போல!

ஜனனி

# வரம் கேட்டும் நீர்க்கும் கோயில்கள்!



* திருஉத்திரகோசமங்கை

இராமநாதபுரம் மாவட்டத்தில் என்ன இருக்கிறது என்று யாரை யாவது கேட்டால், அவர் எந்த மாநிலத்தவராக இருந்தாலும் சரி, இராமேஸ்வரம் இருக்கிறது என்று சொல்வார்கள். இராமேஸ்வரம் கோயில் தான் கன்னியாகுமரியிலிருந்து காஷ்மீர் வரை பிரசித்தம். காசி செல்பவர்கள், இராமேஸ்வரம் சென்று திரும்பாவிட்டால் பிறவிப் பயன் கிட்டாது என்ற எண்ணத்துடன் ரயில் ஏறிக் கடல் கடந்து இராமேஸ்வரம் சென்று திரும்பி விடுகிறார்கள்.



* நவபாஷாணச் சிலைகள்

இம்மாவட்டத்தில் வேறு சுற்றுலாத் தலங்களே இல்லையா?

மாவட்டத்தில் காலை வைத்ததுமே தோன்றிய முதற் கேள்வி இது. இந்தக் கேள்விக்குவிடை காணுவதற்காகவேமாவட்டத்தின் மூலை முடுக்குகளை எல்லாம் சுற்றத் தொடங்கினோம்.

மாவட்டம் நிறையக் காய்ந்த கண்மாய்கள். கூடவே வானைப் பார்த்து உயரும் கோயில் கோபுரங்கள்! நீர் வீழ்ச்சி, பறவைகள் சரணாலயம் போன்ற சுற்றுலாச் சமாசாரங்கள் இயற்கையிலேயே அமையப் பெறாததாலோ என்னவோ, இம்மாவட்டத்தில் கோயில்களைக் கட்டிக் குவித்திருக்கிறார்கள், இம்மாவட்டத்தை வழிவழியாக ஆண்டு வந்தவர்கள்.

இராமநாதபுரத்திலிருந்து தேவகோட்டை போகும் வழியில் இருக்கும் திருவாடானைக் கோயிலை நெருங்கினோம். கிழக்கு நோக்கும் கோபுரம். கோபுரத்தில் வேலைப்பாடுகளும் அதிகம். சிதைபாடுகளும் அதிகம். சுமார் 130 அடி உயரமுள்ள இக்கோபுரத்தினை வாசலாகக் கொண்டுதான் ஆடானை நாதர் தனது துணைவியார் சிநேகவல்லியுடன் வசிக்கிறார்.

வருணனின் புதல்வன் வாருணி துர்வாச முனிவரால் சாபமிடப்பட்டு ஆட்டுத் தலை

* திருப்புல்லாணி: புத்திரப் பேறுக்காக நாகப் பிரதிஷ்டைகள்......





* திருப்புல்லாணி: ஆதிஜகந்நாதர் கோயில்

* நயினர் கோயில்.

யுடனும் யானை உடலுடனும் திரிந்து இக்கோயில் நாதனுன ஆதிரெத்னேஸ்வரனை வழிபட்டதால் சாபம் நீங்கித் தன் பழைய உருவைப் பெற்றதால், சுவாமி ஆடானை நாதர் என்று பெயர் பெற்றிருக்கிருர். ஊர் திருவாடானை என்று அழைக்கப்படுகிறது.

திருஞான சம்பந்தரால் பாடப் பெற்ற இக்கோயிலில் சுவாமிக்கும் அம்மனுக்கும் கருங்கல்லினுல் கட்டப்பட்ட தனிக் கோயில்கள் இருந்தாலும் பிராகாரம் என்னவோ மண் தரைதான். அவ்வளவு பெரிய கோயிலில், நாங்கள் சென்றபோது வாசலில் ஒரே ஒரு கிழவி அமர்ந்திருந்தாள். கோயிலுக்கு உள்ளே கவுண்டரைத் திறந்து வைத்துக் கொண்டு அர்ச்சனை சீட்டு விற்பனை செய்யும் ஆசாமி இருந்தார். மற்றபடி பிராகாரம் காலி. சுவாமி சந்நிதியும் தாயார் சந்நிதியும்மூடியிருந்தன. பெருக்குஒருதூங்கா விளக்கு. அர்ச்சகர் ஒருவர் எங்களைப் பார்த்துவிட்டு கதவைத் திறந்து கற்பூர ஆராதனை செய்தார். இவ்வளவு பெரிய கோயில் ஜிகுஜிகுவென்று ஜனங்களுடன், ஊதுபத்திப் புகைச் சூழலுடன், மணி ஓசையுடன், மந்திர முழக்கங்களுடன் இருந்தால் எப்படியிருக்கும் என்று நினைத்துப் பார்த்தோம். அந்தக் கற்பனை ஒரு தனி அழகாகத்தான் இருந்தது!

அடுத்து நாங்கள் பயணப்பட்டது நயினர் கோயில். பரமக்குடியிலிருந்து சுமார் பதின்மூன்று கிலோ மீட்டர் தூரத்தில் இக்கோயில் அமைந்திருக்கிறது. குடிகொண்டிருப்பவர் நாகநாதர். நயினர் கோயில் என்று பெயர் பெற்றதற்கு ஒரு விசேஷ காரணம் இருக்கிறது. இராமநாதபுர மாவட்டத்தில் முகமதியர்கள் ஆதிக்கம் இருந்த நாட்களில் முல்லா சாகிப் என்னும் முஸ்லிம் நண்பர், தன் ஊமைப் பெண்ணேடு இந்த நாகநாதர் சந்நிதிக்கு முன் நின்றபோது, அந்த ஊமைப் பெண் நாகநாதர் அருளால் 'அல்லா நயினர் ஆண்டவா' என்று வாய் பேசியதால் நயினர் கோயில் என்று பெயர் பெற்றிருப்பதாகச் சொல்கிறது கோயிலின் ஸ்தல புராணம்.

கோயில் பிராகாரத்தில் ஒரு பாம்புப் புற்றுக் கோயில் இருக்கிறது. இந்தப் புற்று மண்ணை நீரில் கரைத்து உட்கொண்டாலோ, உடலில் தடவிக் கொண்டாலோ, தீராத வியாதிகள் எல்லாம் தீரும் என்று சொல்லப்

படுகிறது.

மற்றசைவக்கோயில்களில்காணப்படாத ஒரு விஷயம் இந்தக் கோயிலில் காணப் படுகிறது. வேண்டுதல் செய்து கொண்டு ஆடு, மாடு, கோழிகளை இந்தக் கோயிலில் வந்து பக்தர்கள் காணிக்கையாக அளிக்கிறார் கள். பெரும்பாலும் காளி கோயில்களிலும், அம்மன் கோயில்களிலும் மட்டுமே இவ் வேண்டுதல் நிகழும். சிவன் கோயிலில் நிகழ்வது ஆச்சரியமே.

இந்தக் கோயிலை முஸ்லீம்களும் வந்து தொழுகிறார்கள் என்பது கோயிலின் இன் னொரு சிறப்பம்சம். மேலே சொன்ன புராணக் கதையே கூட இந்து, முஸ்லிம் ஒற்றுமைக்காகச் சொல்லப்பட்ட கதையாக இருக்கலாம். அது ஓரளவு வெற்றியும் பெற் றிருக்கிறது.

நாங்கள் சென்ற கோயில்களில் ஓரளவு கூட்டம் இருந்த கோயில் இது ஒன்றுதான். பொங்கல் இட்டு, மாவிளக்கு ஏற்றி வழி படும் உள்ளூர்க் கூட்டம். அக்கம்பக்கத்துக் கிராமங்களிலிருந்து வந்திருப்பவர்களாக வும் இருக்கலாம். கிராம மக்களோடு அந்நி யோன்யமாகப் பழகும் இக்கோயிலுக்கு டூரிஸ்ட்டுகள் யாரும் வருவதாகத் தெரிய வில்லை.

காரணம்?

கோயிலை அணுகச் சரியான போக்கு வரத்து வசதி இல்லாதது ஒரு காரணமாக இருக்கலாம். இராமநாதபுர மாவட்டத்தில் இன்னின்ன இடங்கள் இன்னின்ன சிறப்புக் களோடு இருக்கின்றன என்று யாரும் விளம்பரப்படுத்தாதும் ஒரு காரணமாக இருக்கலாம்.



* திருவாடானைக் கோயில் கோபுரங்கள்

**அ**டுத்து நாங்கள் சென்றது திருஉத்திர கோச மங்கை. ஐயத்துக்கு இடமின்றி ஈஸ் வரன் ஈஸ்வரிக்கு கோசம் எனும் தத்து வத்தை உத்தரமாக உபதேசித்ததால் உத்திர கோச மங்கை என்று பெயர் பெற்று விளங் கும் இக்கோயில் இராமநாதபுரத்திலிருந்து முதுகுளத்தூருக்குப் போகும் வழியில் இருக் கிறது. உயரமான சிதிலமடைந்த கோபுரம். கோபுரத்தின் உச்சியில் ஒற்றைக் கலசம் அனாதையாய் இருக்கிறது. மற்ற கலசங்களைக் காகம் கொத்திக் கொண்டு போயிருக்கலாம்!

சுவாமிக்கு மங்கள நாதர் என்று பெயர். ஈஸ்வரிக்கு மங்களேஸ்வரி என்று பெயர். மாணிக்கவாசகர் உபதேசம் பெற்ற தலமும் இதுவே என்பர். இங்குள்ள லிங்கத்தை சஹஸ்ரலிங்கம் என்கிறார்கள். "லிங்கத்தில் ஐம்பது நேர்கோடுகள். ஒரு கோட்டுக்கு இருபது லிங்கங்கள். மொத்தம் ஆயிரம் லிங்கங்கள்" என்று கற்பூர ஜோதி காட்டிய அர்ச்சகர் சொன்னார். இந்தக் கோயிலில் தான் தமிழ்நாட்டிலேயே எங்கும் இல்லாத ஒரு நடராஜர் இருக்கிறார். முற்றிலும் மரகதத் தால் வடிக்கப்பட்ட நடராஜர். வருடத்தில் ஒருநாள், மார்கழி பௌர்ணமி அன்று அந்த மரகத நடராஜர் மேலிருக்கும் சந்தனக் காப்பை அகற்றிவிட்டு மரகதச் சிலையைக் கண்ணில் காட்டுவார்களாம். நாங்கள் சென்ற அன்று சந்தனம் பூசியிருந்த மஞ்சள் வண்ண நடராஜர்தான் காட்சி தந்தார்.

இந்தக் கோயிலில் காலை எட்டு மணிக்குக் கூட கூட்டம் இல்லை. கோயிலுக்கு வெளியே கடைகள் இருக்கின்றன. டீயும் பன்னும் உள் ளூர்க்காரர்களுக்காகக் காத்திருக்கின்றன. கூட்டமே இல்லாததால் வருமானம் இல்லை. அதனால் கோயில் பராமரிப்பும் சரியில்லை. இவ்வளவு பெரிய கோயில் அதன் நெடி துயர்ந்த கோபுரத்துடன் குழந்தை அற்ற மாளிகையாகக் கலகலப்பின்றி காட்சி அளிக் கிறது.

**கீ**ழக்கரையிலிருந்து உச்சிப்புளிக்குப் போகும் பாதையில் அமைந்திருக்கும் திருப் புல்லாணிக் கோயிலுக்கு ஏகப்பட்ட சிறப்பு அம்சங்கள்.

இந்தக் கோவிலில் எழுந்தருளியிருப்பவர் ஆதி ஜகன்னாதப் பெருமாள்.

இலங்கைமேல் படையெடுத்துப் போகு முன் இராமன் இவரை வணங்கியதாகக் கூறுவர்.

விபீஷணன், இராமனிடம் தஞ்சம் புகுந்த இடம்.

கடலரசன் தன் மனைவியுடன் இராமனிடம் சரணடைந்த இடம்.

மகப்பேறு அற்றவர்கள் இக்கோயிலின் அரசமர நிழலில் நாகப்பிரதிஷ்டை செய்து பாயசம் குடித்தால் பிள்ளைப் பேறு கிடைக்



* ராணி இந்திரா தேவி

கும் என்பர்.

இந்த ஊரிலிருந்து தெற்கே ஐந்து கி.மீ. பயணம் செய்தால் கடற்கரை வந்துவிடும். இந்தக் கடற்கரையில் இருந்துதான் ஸ்ரீராமர் இலங்கை செல்ல சேது சமைத்திருக்கிறார். அதனால் இக்கடற்கரைக்கு சேதுக்கரை என்று பெயர்.

எல்லாவற்றிற்கும்மேலாக ஸ்ரீராமர்தர்ப்ப சயனத்தில் ஆழ்ந்திருப்பதும் இந்தத் திருப்புல்லாணியில்தான்.

இப்போது நிலைமை சொல்லிக் கொள்ளும்படி இல்லை. கோயிலுக்கு எதிரில் ஒரு கல் மண்டபம் இருக்கிறது. கல் மண்டபத்தை ஒட்டி ஒரு குட்டை இருக்கிறது. புஷ்கரணி என்று சொல்லும் இக்குட்டையில் பச்சைப் பாசியும் வெள்ளை உப்புப் படிகங்கள் கொண்ட மணலும் போனால் போகிறதென்று சிறிதளவு நீரும்தான் பார்க்க முடிகிறது. தீராத பிணியெல்லாம் இந்தத் தீர்த்தம் ஒரு காலத்தில் தீர்த்திருக்கலாம். இப்போது இந்தத்தீர்த்தத்தை உபயோகித்தால் இதுவரை நாம் அறியவே அறியாதபுதுப்புதுப்பிணிகள் எல்லாம் வந்தாலும் வந்து சேரும்! கோயிலுக்கு உள்ளே பொழுது போகாத பட்டர்கள் துவாரபாலகர்களைச் சரணடைந்து உறங்குகிறார்கள். இந்தக் கோயிலிலும் கூட்டமே இல்லாதது நாம் தலையைத் தொங்கப் போட்டுக் கொள்ள வேண்டிய விஷயம்.

இராமநாதபுரத்திலிருந்து சுமார் எட்டு கி. மீட்டர் தூரத்தில் இருக்கும் தேவிப் பட்டினம் எனும் ஊரில் கடற்கரையிலேயே அமைந்திருக்கிறது நவபாஷாண நவக்கிரஹக் கோயில். கடலின் உள்ளே சுமார் நூறடி தூரம் முழங்கால் அளவு நீரில் நடந்து போனால் கடலில் அமைந்திருக்கும் நவக்கிரஹச் சிலைகளைக் காணலாம். இராமபிரான் வைத்து வழிபட்ட சிலைகள் என்று சொல்கிறார்கள். ஒன்பது சிலைகளில் இரண்டு சிலைகளே முழு உருவுடன் காட்சி அளிக்கின்றன. மற்ற சிலைகளைக் கடல் அரித்திருக்க வேண்டும். இந்தப் பிரதேசம் சுற்றுலாவிற்கு ஏற்றது. கொஞ்சம் சீர்ப்படுத்தி தென்னந்தோப்பு ஒன்றை உருவாக்கி சில சில்லறை வசதிகளைச் செய்து தந்தால் புண்ணியத் தலம் என்பதோடு இராமநாதபுரத்தின் மிகச் சிறந்த பிக்னிக் ஸ்பாட் இதுதான் என்றாகிவிடும்.



ஏர்வாடி தர்கா

இதே மாவட்டத்தில் ஏர்வாடி என்னும் ஊரில் ஒரு தர்கா இருக்கிறது. குத்பு சுல்தான் சய்யிது இப்ராஹீம் ஷஹீது ஒலியுல்லாஹ் என்னும் முஸ்லிம் மன்னர் ஒருவர் சமாதியான இடம் இது.

மதீனாவில் பிறந்து, இஸ்லாம் மதத்தைப் பரப்புவதற்காக ஒரு பெரும் தொண்டர் படையுடன் தமிழ்நாட்டிற்கு வந்து, வந்த இடத்தில் மதம் பரப்ப இவருக்கு அனுமதி மறுக்கப்பட்டதால், அப்போதைய திருப் பாண்டியன் என்னும் அரசனுடன் போராடிப் போரில் இறந்து போனார். அந்த மன்னரை அடக்கம் செய்த இடம்தான் இது. அழகிய முத்துப்பட்டினம் என்று முன்பு விளங்கிய இவ்வூரின் பெயர் இங்கு குடியேறிய மகமதியர்களால் யர்பாத் என்று மாற்றப்பட்டு பின்னர் அதுவே மருவி ஏர்வாடி என்றாகி விட்டது.

இத்தர்காவில் வந்து வேண்டி நிற்போருக்காக இந்த மன்னரின் சார்பில் அல்லாவிடம் பிரார்த்தனைகள் செய்யப்படுகின்றன. பேய், பில்லி, சூனியம், மற்ற ஏவல்கள், சித்தப் பிரமை ஆகியவற்றை நிவர்த்தி செய்து கொள்ள இது ஒரு சிறந்த இடமென்று இம் மாவட்ட மக்கள் கருதுகிறார்கள்.

நாங்கள் தர்காவிற்குப் போன நேரம் பிற்பகல் ஒரு மணி. அந்த நேரத்தில் வெயிலில் கால்பொரிந்தது.(செருப்பெல்லாம் அணியக் கூடாது) இருப்பினும் எவ்வளவு பேர் பலாப் பழ ஈ போல் மொய்த்திருந்தார்கள் என்கிறீர்கள்!

சமாதிக்கு எதிரில் சங்கிலியால் பிணைக்கப் பட்டிருந்த 'பேய்' ஒன்று அவ்வப்போது அபாரமான குரலை வெளிப்படுத்திக் கொண்டிருக்க, சுற்றிலும் 'துஆ' செய்ய வந்த கூட்டம்.

வேண்டுதலின் பேரில் ஏழை மக்களுக்கு பிரியாணி விநியோகிக்கப்படுகிறது.

கார்களில், பஸ்களில் என்று நிறைய மக்கள். ஏர்வாடியில் வாழும் ஏந்தலை முஸ்லிம் தோழர்கள் மிக நன்றாகப் பராமரிக்கிறார்கள்.

தர்காவிற்கு வெளியே திருப்பதி கோயிலுக்கு வெளியே இருப்பது போல் ஒரு கடைத் தெரு. சகலமும் விற்பனையாகும் கடைத் தெரு. இராமேஸ்வரத்திற்கு அடுத்தபடி மாவட்டத்திலேயே இந்தத் தர்காவிற்குத் தான் கூட்டம் அதிகம்.

இந்துக் கோயில்கள் எல்லாம் இராமநாதபுரம் சமஸ்தானத்தின் நிர்வாகத்தில் இருக்கின்றன. எனவே தற்போது இராமநாதபுரத்தின் கோட்டையில் இருக்கும் ராணியைப் பார்த்தால் கோயில்களின் இன்றைய நிலைமைக்கும், மக்களின் நிராகரிப்பிற்கும் காரணம் தெரிய வரும் என்று அவரைப் போய்ச் சந்தித்தோம்.

திருமதி இந்திராதேவி ஓர் எளிய வீட்டில் எளிமையாக வசித்து வருகிறார். அறிமுகப் படுத்திக் கொண்டு கோயில்களைப் பற்றிக் கேட்டோம். அதற்கு அவர் சொன்னார்:

"பொதுவாக இராமநாதபுரம் மாவட்டத்தில் போக்குவரத்து வசதி குறைவு. மக்கள் இராமேசுவரம் போனதும் நேரே திரும்பிப் போய் விடுகிறார்கள். இராமநாதபுரத்தில் இறங்கினால்தானே இந்த மாவட்டக் கோயில்கள் பற்றித் தெரியும்? இங்கிருக்கும் ஒவ்வொரு வகுப்பினரும் அவர்களுக்கென்று தனியாகச் சிறு சிறு கோயில்கள் கட்டிக் கொள்வதால் அவர்கள் தங்கள் கோயில்களை நிர்வகிப்பதில் கவனம் செலுத்துகிறார்கள். பொதுமக்கள் நன்கொடை எதுவும் அளிப்பதில்லை. ஜமீன்தாரி ஒழிப்பிற்குப் பிறகு வந்த காம்பன்சேஷனை எல்லாம் அந்தக் காலத்திலேயே செலவழித்தாகிவிட்டது. இப்போது சமஸ்தானத்திற்கு வருமானமே இல்லை. கோட்டை வாடகை வருமானம்தான் நான் சாப்பிடவே எஞ்சியிருக்கிறது. ஏர்வாடி தர்காவைச் சுற்றியுள்ள நிலத்தைக் கொடுத்ததே சேதுபதி ராஜாக்கள்தான். இப்போது வருமானமே இல்லாத போது நான் என்ன செய்ய முடியும் சொல்லுங்கள்?"

அவர் குரலில் லேசான வருத்தம் மிகுந்தது. அவரால் கோயில்களுக்கு பஸ் விட முடியாது. அங்கங்கே விளம்பர போர்டுகள் வைக்க முடியாது. அதற்கெல்லாம் ஆள் படை வேண்டும். பணபலம் வேண்டும். நம் தமிழக அரசிடம் இத்தனையும் இருக்கிறது செய்வதற்கு மனம்தான் வேண்டும்.

— சுரேஷ்—பாலா




* பி. எம். பிரபாகரன், திருமருகல்.

? இன்றைய அரசியல் காமெடியன் யார்?

! ரொம்பவும் குறும்பய்யா உங்களுக்கு! ஏதோ ஒன்றுமே தெரியாத மாதிரி என்னைக் கேட்கிறீரே!

* எம். கல்யாணசுந்தரம், திருநரையூர்.

? அரியலூர் ரயில் விபத்தை நேரில் காண முதலமைச்சர் சென்றிருந்தால் அங்கு பெருமளவில் மக்கள் கூடியிருப்பார்கள். அதனால் தடயங்கள் அழிந்து போயிருக்கும் என, அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன், சட்டமன்றத்தில், நாஞ்சில் மனோகரனின் கேள்விக்குப் பதில் அளித்துள்ளது பற்றி?

! பொய் சொன்னாலும் பொருந்துகிற மாதிரி சொல்ல வேண்டாமா? ஒரு முதலமைச்சருக்காகச் சக அமைச்சர் இப்படியொரு சப்பைக் கட்டுக் கட்டுவது இந்த மாநிலத்துக்கே அசிங்கம்.

* உமார்த்தி, கோவை.

? இப்போது எழுத்தாளர்களுக்கு மதிப்பு கூடியுள்ளதா, குறைந்துள்ளதா?

! நம் ஊரில் ஒன்றுக்கு இரண்டாக எழுத்தாளர் சங்கங்கள் இருந்தும், விகடன் ஆசிரியர் பாலசுப்ரமணியன் கைது பற்றி ஒரு கண்டனத் தீர்மானம் கூடப் போடாத போது எப்படி மதிப்பு உயரும்?

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிரபாண்டியம்.

? பாண்டிச்சேரியில் எதிர்க்கட்சி எம். எல். ஏக்கள் சஸ்பெண்ட் செய்யப்பட்டிருப்பது பற்றி?

! அண்டை மாநிலத்தின் பாதிப்பு இருக்காதா பின்னே!

* அ. ராஜா ரஹ்மான், திருப்பரங்குன்றம்.

?. பதினொரு மாநிலங்களில் இ. காங்கிரஸ் அல்லாத எதிர்க்கட்சி ஆட்சி ஏற்பட்டிருப்பது, ராஜீவ் காந்தியின் வீழ்ச்சியைத்தானே காட்டுகிறது?

! ராஜீவ் காந்தியின் வீழ்ச்சியை மட்டும் அல்ல; அது அந்த மக்களின் புத்திசாலித்தனத்தையும் காட்டுகிறது. இந்த வீழ்ச்சி ஒரு விழிப்புணர்ச்சியை அவரிடம் ஏற்படுத்தவில்லையானால் அடுத்த தடவை எழுந்திருக்கவே முடியாமல் விழுந்து விட நேரலாம்.

* தங்க கார்த்திகைராஜா, விருத்தாசலம்.

? மந்திரத்தை நம்பியதுண்டா?

! தாரக மந்திரங்கள் நன்மை செய்யும். தலையணை மந்திரத்தில் எச்சரிக்கை தேவை! மந்திரம் என்பதற்குப் பல அர்த்தங்கள் உண்டு. ஆலோசனை, மந்திரிசபை, எண்ணம், வேத மந்திரம், தெய்வீக மந்திரம், மாயசக்தி உள்ள மந்திரம் என்று பல. இவற்றுள் கடைசி ஐட்டத்தில் எனக்கு நம்பிக்கை கிடையாது.

* ஆர். கே. குருராஜ், விருத்தாசலம்.

? சிவாஜியின் நடிப்பில் தங்களைக் கவர்ந்த அம்சம்?

! அவ்வப்போது ஆவேச அறிக்கைகளை வெளியிடுவதும், பிற்கு டெல்லி மேலிடத்தை நேரில் பார்த்தவுடன் இந்தப் பூனையும் பால் குடிக்குமா என்கிற மாதிரி அமைதி அடை




# ஸா:.ப்ட் அண்ட் ஸில்க்கி ஹேர் ரிமூவிங் லோஷன்.







ா:.ப்ட் அண்ட் ஸில்க்கி ஹேர்.
ங் லோஷன்.
ந்த ஹேர் ரிமூவிங் லோஷனை
ாகப்படுத்துவதில் எந்த சிரமமு
, சங்கடமுமில்லை.
ந்துவான மேனி மீது
ாகவும் சீராகவும் பரவுகிறது!
ரண்டு சைஸ்களில் கிடைக்கிறது:
லி. மற்றும 45 மி.லி.
ம்! எத்தனை சிக்கனம.
ா:.ப்ட் அண்ட் ஸில்க்கி லோஷன்
மெங்கும் மென்மை உணர்வு.
மி.லி.பாட்டில் விலை ரூ. 10.70
வரிகள் தனி)




* 45 மி.லி.பாட்டிலில், சரக்குகள் தீரும் வரை.



# ஆபத்தான வளையங்கள்

முகுந்தன்

**முன் கதை:**

வேலையில்லாப் பட்டதாரி அருண், சராகா பார்மசூட்டிகல்ஸ் என்ற நிறுவனத்துக்கு இண்டர்வியூவுக்காகப் போய்க் காத்திருக்கையில் அங்கு வந்த ஒரு குறுந்தாடி இளைஞன் தான் அமர்ந்திருக்கும் நாற்காலியில் பென்சிலால் தட்டி, தான் ஆபத்தில் இருப்பதை தந்தி பாஷையில் அருணுக்கு உணர்த்துகிறான். தந்தி பாஷையிலும் 'முட்டைக் கண்ணன்' என்ற தனது பள்ளிக் காலப் பெயரால் அவன் தன்னை அழைக்கவும் அருணுக்கு ஆச்சரியமாய் இருக்கிறது. அவன் எந்த முடிவும் எடுப்பதற்குள் குறுந்தாடி இளைஞன் வேகமாக வெளியேற, அந்த அலுவலக அறையில் காத்திருந்த மற்றொருவன் அவனை நோக்கிச் சுட முயன்று, குறி தவறிவிடவும் அவன் பின்னாலேயே வெளியேறுகிறான். போகும் அவசரத்தில் அருணின் பாக்கெட்டில் ஒரு சிறு காகிதத்தைச் செருகிவிட்டுப் போகிறான் குறுந்தாடி. அதே நிறுவனத்தில் வேலை கிடைத்த சந்தோஷத்தில் அருண் ஹோட்டலில் காப்பி சாப்பிட்டு விட்டுப் பணம் கொடுக்கப் பாக்கெட்டைத் துழாவியபோது குறுந்தாடிக்காரன் செருகிய சீட்டில் இருந்த வாசகத்தைப் படித்து வியந்தபடி தெருவில் நடக்கையில், ஓர் அழகான பெண் பீஸ்ஸுக்குச் சில்லறை இல்லை என்று பொய் சொல்லி அவனிடம் ஒரு ரூபாய் பெற்றுக் கொண்டு எதிர்க் கடையில் போன் செய்யப் போகிறாள்.

அதே நேரத்தில் ஒரு பங்களாவில் போன் அடிக்க, பங்களாக்காரர் போனில் கிடைத்த மர்மமான ஆணைகளை நிறைவேற்றப் பெட்டியுடன் புறப்படுகிறார்.

## 3

அருண் வலசரவாக்கம் போய்ச் சேர்ந்தபோது நன்றாக இருட்டிவிட்டது. சட்டைப் பையில் திணிக்கப்பட்ட துண்டுக் காகிதத்தில் இருந்த முகவரியை அடைந்த போது, வீட்டு வாசலில் பூட்டியிருந்த பூட்டு அவனைப் பார்த்துச் சிரித்தது. அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்கள் மொத்தப் பேரும் ஏதோ சபதம் எடுத்துக் கொண்டவர்களைப் போல் வீட்டுக்குள்ளே முடங்கிக் கிடந்தார்கள். யாரிடம் விசாரிப்பது என்று விழித்துக் கொண்டிருந்தபோது, "சார்! இங்கே வாங்க!" என்று ஒரு குரல் கேட்டது.

அழைத்தவர், அருகிலேயே இருந்த ஒரு பெட்டிக் கடைக்காரர்தான்.

நெருங்கியதும், "இந்தாங்க!" என்று ஒரு சாவியை எடுத்து நீட்டினார். அருண் தயங்கினான்.

"தாடிக்காரரைத் தேடித்தானே வந்திருக்கீங்க? அவர் தகவல் சொல்லிவிட்டுப் போனார்.... வீட்டுக் கதவைத் திறந்து, உள்ளார போய் உட்காருங்க.... வந்துடுவாரு!"

அப்படியே செய்யத் தீர்மானித்தான் அருண்.

"நுழைஞ்சதும் லெப்ட்லே ஸ்விட்சு இருக்குது சார்.... லைட் போட்டுக்குங்க....!" என்று ஒரு குறிப்பும் கொடுத்தார் கடைக்காரர்.

வராந்தாவை அடுத்து ஒரு ஹால். சிறியதாக இருந்தாலும் துப்புரவாகக் காணப்பட்டது. சிறிய மேஜை, இரண்டு இரும்பு நாற்காலிகள் என்று சிக்கனமான ஃபர்னிச்சர், வெளிர் நீல டிஸ்டெம்பர் தாங்கியிருந்த சுவர் ஒன்றில் ஒரே ஒரு படம் தொங்கியது. அதில் பதினைந்து வயதுப் பள்ளி மாணவன் என்.ஸி.ஸி. உடையில் உறைந்து போய் நின்றிருந்தான்....

வாசலில் ஷூ சப்தம் கேட்டது.

அடுத்த விநாடி அந்தத் தாடிக்கார இளைஞன் அருணின் எதிரில் வந்து நின்றான். காலையில் பார்த்ததைவிட அதிகமாகக் களைத்து, கலைந்திருந்தான்.

"அருண்! என்னைத் தெரியவில்லையா? நான்தான் சத்யா.... மிஷன் ஹைஸ்கூலில் நாம் ஒன்றாகப் படித்தோமே, மறந்து விட்டாயா?" என்று சர்வ சகஜமாக அவன் கேட்டதும் ஒருகணம் திகைத்துப் போனான் அருண்.

சத்யா! பிரபல வைர வியாபாரியின் மகனாக, ஆடம்பரத்துடன் தினமும் ஒவ்வொரு காரில் பள்ளி வாசலில் வந்திறங்கி, சக மாணவர்களைப் பிரமிப்பில் ஆழ்த்திய சத்யா.... பள்ளியில் சுதந்திரத் திருநாள் கொண்டாடப்படும்போதெல்லாம் எல்லா மாணவர்களுக்கும் தன் தந்தையின் அன்பளிப்பாக இனிப்புப் பொட்டலம் வினியோகித்த சத்யா.... பள்ளி இறுதித் தேர்வுக்கு முன்னால் நடந்த பிரிவுபசாரக் கூட்டத்தில் வகுப்பு ஆசிரியருக்கு வைர மோதிரம் பரிசளித்துத் திகைக்கச் செய்த சத்யா....

அவனா இவன்! அவனா இப்படித் தாடி மீசையும், அழுக்கு உடையும் கண்களில் சோர்வும் விரக்தியுமாக அடியோடு உருமாறிப் போய் எதிரில் நிற்கிறான்! என்ன ஆயிற்று இவனுக்கு?

''நீ என்னென்ன கேள்விகள் கேட்கத் துடிக்கிறாய் என்று எனக்குப் புரிகிறது அருண்!'' என்றான் சத்யா, இன்னொரு நாற்காலியை இழுத்துப் போட்டு அமர்ந்தபடி. ''நீ பள்ளிப் படிப்பு முடிந்தவுடன் குடும்பத்தோடு வேறு ஊருக்குப் போய்விட்டதால் உனக்குப் பல விஷயங்கள் தெரிந்திருக்காது. என் அப்பாவை அவரது தொழில் கூட்டாளிகளே ஏமாற்றிவிட்டார்கள். கடன் சுமை அளவுக்கு மீறிப் போனதால், அப்பா மஞ்சள் கடிதாசு கொடுக்கும்படி நேர்ந்து விட்டது. அந்த அவமானம் தாங்காமல் அவர் தற்கொலையும் செய்து கொண்டுவிட்டார்.....''

அதிர்ந்து போனான் அருண். சத்யா தொடர்ந்தான்.

''சிறு வயதிலேயே அன்னையை இழந்து விட்டிருந்த நானும் என் தம்பியும் சொத்துக்கள் சிதறி, அப்பாவும் மறைந்து போன பிறகு அநாதைகளாகத் தெருவில் நின்றோம். நான் கல்லூரிப் படிப்பையும், தம்பி பள்ளிப் படிப்பையும் முடித்திருந்த கட்டம் அது. கையிலிருந்த சொற்பப் பணத்துடன் சென்னைக்கு வந்து சேர்ந்தோம். அப்பாவின் நண்பர் ஒருவரது சிபாரிசின் பேரில் அம்பத்தூரில் ஒரு தொழிற்சாலையில் வேலை தேடிக் கொண்டேன். தம்பியைப் படாதபாடுபட்டுக் கல்லூரியிலும் சேர்த்தேன். ஆனால்....''

மேலே எதுவும் பேசாமல் மௌனமாக இருந்தான் சத்யா. மனத்தில் முட்டும் சோகம் அவனது கண்கள் வழியே எட்டிப் பார்ப்பதைக் கவனித்தான் அருண்.

''ஏன் கண் கலங்குகிறாய்? என்ன ஆச்சு?'' என்று கேட்டான் அருண்.

''தம்பியையும் நான் இழந்துவிட்டேன் அருண்.....''

''இஸிட்... என்ன விஷயம்? அவன் எப்படி....''

''கிட்டத்தட்ட அதுவும் ஒரு தற்கொலை போலத்தான்...''

''அவனுக்கு என்ன பிரச்னை? காதல் கீதல் என்று ஏதாவது.....''

''நோ!'' என்ற சத்யா எழுந்து மேஜையின் அருகில் சென்றான். இழுப்பறையைத் திறந்து ஒரு டயரி எடுத்து வந்தான். அதைப் புரட்டி ஒரு 'பேப்பர் கட்டிங்'கை எடுத்து அருணிடம் நீட்டினான்.

அருணின் பார்வை செய்தியின் மீது படர்ந்தது.

பஸ் மோதி வாலிபர் சாவு!

சென்னை......
நேற்று காலை பதினொரு மணி



# எம்.ஜி.ஆரின் ஓ.கே. எப்போது



பரமக்குடியின் சாக்கடைகள் வேறு போக்கின்றி வைகை நதி ஓட வேண்டிய (இப்போது காய்ந்து கிடக்கிற) மணல் படுகையில் சென்று சேர்கின்றன.

பன்றிகளின் மாநாடு, கொசுக்களின் கூடாரம். நுரையீரல்களைக் குலுக்கிக் காயப்படுத்தும் தீவிர நாற்றம். இதற்கிடையில் அங்கங்கே ஊற்றெடுத்த கிணறுகள். பம்ப் செட் போட்டுத் தண்ணீரைத் தொட்டிகளில் நிரப்ப, கட்டணம் கொடுத்துக் குளிக்க ஒரு க்யூ.

''சாக்கடை வந்து கலக்கிற இடத்திலேயே கிணறு தோண்டியிருக்கோம். நிச்சயமா வியாதிங்க வந்துதான் சேரும். ஆனா எங்

அளவில் தேனாம்பேட்டை சிக்னல் அருகே சைக்கிளில் சென்று கொண்டிருந்த ஓர் இளைஞர் மீது பல்லவன் போக்குவரத்துக் கழக பஸ் மோதியதில், அவர் துடிதுடித்துச் செத்தார். அந்த வாலிபரின் பெயர் சந்திரசேகர் (17). கல்லூரி மாணவர்.

இவ்விபத்து குறித்து, போலீசார் விசாரணை செய்து வருகிறார்கள்.

அந்தச் செய்தி 'கட்டிங்'கை சத்யாவிடம் திருப்பிக் கொடுத்தான் அருண்.

''இந்த விபத்துக்குக் காரணம் என்ன தெரியுமா?'' என்று சத்யா கேட்க, உதட்டைப் பிதுக்கினான் அருண்.

''கல்லூரியில் என் தம்பிக்கு எப்படியோ ஏற்பட்டு விட்டிருந்த ஒரு கெட்ட பழக்கம் தான்....''

''குடிப் பழக்கமா?''

''இல்லை... போதை மருந்து! என் தம்பி சந்திரனுக்கு அந்தப் பழக்கம் உண்டு என்பதும், கொஞ்சம் கொஞ்சமாக அவன் அதற்கு அடிமையாகிக் கொண்டிருந்தான் என்பதும் அந்த விபத்து நேர்ந்த பிறகுதான் எனக்குத் தெரிய வந்தது. விபத்து நடந்த அன்று, வகுப்புக்கு 'கட்' அடித்துவிட்டு, ஒரு வெறியில் போதை மருந்து வாங்குவதற்காக கண்மூடித்தனமாகச் சைக்கிளை ஓட்டிக் கொண்டு போயிருக்கிறான் சந்திரன்... பஸ்ஸின் குறுக்கே இவன்தான் பாய்ந்திருக்கிறான். பஸ் டிரைவரால் விபத்தைத் தவிர்க்க முடியாத நிலையில்தான், பஸ் இவன் மீது மோதியிருக்கிறது.... விசாரணையில் இந்த விஷயங்கள் வெட்ட வெளிச்சமாகிவிட்டன... தம்பியின் உடல் சின்னாபின்னமாகி விட்டது. பஸ்ஸின் முன்புறத்திலிருந்து சுரண்டி எடுத்தார்கள் என்றால் எப்படிப் பட்ட பயங்கரமான விபத்துக்கு ஆளாகியிருக்கிறான் என்பது புரியும்...''

அருணின் உடல் சிலிர்த்தது. அந்தக் கோரத்தைக் கற்பனை செய்து கூடப் பார்க்க மனம் இடந்தரவில்லை.

சத்யா நீண்ட நேரம் மௌனமாக இருந்து விட்டுப் பிறகு தொடர்ந்தான்:

''என் தம்பி சந்திரனுக்கு நேர்ந்த இந்த அவலம் என்னுள் ஒரு லட்சியத்தைத் தோற்றுவித்தது. அப்பாவி இளைஞர்களுக்குப் போதை மருந்துகளை விற்பனை செய்து அவர்களது வாழ்க்கையை நாசமாக்கும் சமூக விரோதிகளைத் தேடிப் பிடித்துக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்த வேண்டும். அந்த முயற்சியில்தான் இப்போது தீவிரமாக ஈடுபட்டிருக்கிறேன்....

''பாராட்ட வேண்டிய செயல்தான் என்பதில் சந்தேகமில்லை.... அதுசரி, இதுவரையில் ஏதாவது கண்டுபிடிக்க முடிந்ததா?''

''கீழ்மட்டத்தில் போதை மருந்தை விற்பனை செய்பவர்கள் யார் யார், கல்லூரி மாணவர்களுக்கு அது எப்படி வந்து சேருகிறது என்று கண்டுபிடித்துவிட்டேன்... போலீசில் உள்ள போதை மருந்து தடுப்புப் பிரிவினர் இத்தகைய நபர்களைப் பிடித்து, தண்டனையும் வழங்கியிருக்கிறார்கள். ஆனால் அவ்வப்போது புதிது புதிதாக விற்பனையாளர்கள் தோன்றிக் கொண்டே இருக்கிறார்கள்; நச்சு வியாபாரமும் தொடர்ந்து கொண்டுதான் இருக்கிறது.....''

''நீ சொல்வதைப் பார்த்தால் ஒரு பெரிய ஸ்தாபன ரீதியில் போதை மருந்து விநியோகம் நடைபெறுகிறது போலிருக்கிறதே...''

''அதுதான் உண்மையான நிலைமை... பணபலம், அதிகாரம், ஆள் பலம் ஆகியவை பெருமளவில் உள்ள ஒரு அமைப்புதான் இதில் ஈடுபட்டிருக்கிறது. இத்தனைக்கும் பின்னணியில் உள்ள புள்ளி அல்லது புள்ளிகள் யார்? அதைக் கண்டுபிடித்து அவர்களை அப்புறப்படுத்தினால் தவிர, இது ஓயாது....

களுக்கு வேறு வழியில்ல....''

எறும்பு வரிசை போல ஒருபுறம் தண்ணீர் டிரம்களைப் பொருத்திக் கொண்ட மாட்டு வண்டிகள். (வண்டிக்கு நாற்பது காசாம்.) அசுத்தம் கலந்த இந்தத் தண்ணீர் எங்கே போகிறது?



* தண்ணீருக்காகக் காத்திருக்கும் வண்டிகள்

ஹோட்டல்களுக்குச் சப்ளை செய்ய!

பரமக்குடியின் நகர்மன்றத் தலைவர் ரங்காச்சாரியைச் சந்தித்தோம். கள்ளிக் கோட்டை திட்டத்தில பூமிக்கு அடியில குழாய்களைப் பதித்துக் கொண்டிருக்கிறோம். அதில் தமிழ்ப் புத்தாண்டு அன்றைக்குத் தண்ணீர் விடப்படும். மேலும் பத்து லட்சம் காலனுக்குத் தண்ணீர்த் தொட்டி கட்டணும். செய்வோம்....''

''பாதாளச் சாக்கடைத் திட்டம் என்னாச்சுங்க?''

''ஸ்கீம்லாம் போட்டாச்சு. பதினொரு கோடி ரூபாய்த் திட்டம். ரொம்ப மாசமா **TWAD** — ல தூங்கிட்டிருக்கு. பரமக்குடி பாதாளச் சாக்கடைக்கு ஓகேன்னு எம்.ஜி. ஆரே சொல்லணுமாம். அப்பத்தான் முடியும்னுட்டாங்க....'' என்றார்.

எம்.ஜி. ஆர். ஓகே சொல்லும் நாள் எப்போதோ?

— எஸ். பி

குறிப்பாக நான் தேடி அலைவது அந்தப் புள்ளிகளைத்தான்....''

''இன்று நீ சராகா பார்மசூட்டிகல்ஸ் ஆபீசுக்கு வந்தது கூட இது சம்பந்தமாகத் தானா?''

ஆமாம். அதைப் பற்றிய விவரம் பிறகு ஒரு சந்தர்ப்பத்தில் சொல்கிறேன். இப்போது உன் உதவி எனக்குத் தேவைப் படுகிறது.... உன்னால் எனக்கு உதவ முடியுமா?''

''எந்த விதத்தில் என்று சொல்லேன்...''

''போதை மருந்து விநியோகம் — வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் பயங்கரமான ஆசாமிகள்.... கொலைக்கு அஞ்சாதவர்கள்.... தங்கள் பாதைக்குக் குறுக்கே வருபவர்களை அப்புறப்படுத்த எல்லா வழிகளையும் கையாளக் கூடியவர்கள்.... இத்தகையவர்களைப் பற்றி நான் திரட்டியுள்ள தகவல்கள் வேறு யாரிடமாவது இருப்பதே பாதுகாப்பானது. என்னை எந்த நேரமும் ஆபத்து சூழ்ந்திருக்கிறது. உன் கண் எதிரிலேயே என்னைத் தீர்த்துக் கட்ட நடந்த முயற்சியைத் தான் நீ இன்று பார்த்தாய்.... என் வசமுள்ள தகவல்களை நம்பிக்கைக்குரிய ஒருவரிடம் ஒப்படைத்துவிட வேண்டும் என்றிருந்தேன். தற்செயலாகச் சராகாவில் உன்னைக் கண்டதும் கொஞ்சம் நிம்மதி ஏற்பட்டது.....''

''மோர்ஸ் முறையில் எனக்குச் செய்தி கொடுத்தாயே — அதை நான் புரிந்து கொள்வேன் என்று எப்படி எதிர்பார்த்தாய்?''

சிரித்தான் சத்யா. ''அதுவா....? ரொம்ப சிம்பிள். நீ பத்திரிகை படித்துக் கொண்டிருந்தாய் அல்லவா! நீ படிப்பதையெல்லாம் தன்னிச்சையாக உன் வலது கை, சோபாவின் கைப்பிடியில் தந்தி மொழியில் தட்டுவதைப் பார்த்தேன். உன்னை அடையாளம் கண்டு பிடித்திருந்த நான் அதனால்தான் உனக்கு மெஸேஜ் கொடுத்துவிட்டு வெளியே செல்ல எழுந்தேன். தடுக்கி விழுவது போல் நடித்து, கடிதத்தை உன்னிடம் சேர்ப்பித்தேன்... ஆனால் எதிரி என்னைச் சும்மா விடுவதாக இல்லை.... அப்புறம் நடந்ததுதான் உனக்கே தெரியுமே?''

அவனது சாமர்த்தியத்தையும் துணிச்சலையும் அருண் மனத்துக்குள் பாராட்டிக்கொண்டிருக்கும்போதே, சத்யா தன் ஷர்ட்டின் பட்டனைக் கழற்றி, உட்புறப் பாக்கெட்டிலிருந்து சிறு டயரி ஒன்றை எடுத்து அருணிடம் கொடுத்தான்.

''இதுதான் நான் சொன்ன தகவல் களஞ்சியம். பத்திரம். நானே வந்து உன்னிடம் கேட்கும்போது கொடு. வேறு யாரிடமும் கொடுக்கக் கூடாது.... என் உயிருக்கு ஆபத்து நேர்ந்துவிட்டால், உனக்குத் தகவல் கிடைக்கும். அதன்பிறகு, டயரின் கடைசிப் பக்கத்தில் உள்ள முகவரியில் அதைச் சேர்ப்பித்து விடு.... புரிகிறதா?''

தலையாட்டினான் அருண்.

''சராகாவில் நீ....'' என்று சத்யா சொல்ல ஆரம்பித்தபோது வீட்டின் பின்புறமிருந்து ஏதோ ஓசை எழுந்தது.

துள்ளியெழுந்தான் சத்யா. பாண்ட் பாக்கெட்டிலிருந்து துப்பாக்கியை உருவிக் கையிலெடுத்தபடியே, ''யார் அது?'' என்றான் அதட்டலாக.

அவனுக்குப் பதில் சொல்வது போல, அதுவரை எரிந்து கொண்டிருந்த விளக்கு சட்டென்று அணைந்தது.

''அருண்! க்விக்! நீ போய்விடு!'' என்று அடிக் குரலில் சத்யா கட்டளையிட்டான்.

தெருப் பக்கத்திலிருந்து வந்த சோகை வெளிச்சம், வாயிற்படியை அவுட் லைன் போல் வரைந்து காட்ட, அருண் இருட்டில் தடுமாறாமல் நகர்ந்து வீட்டுக்கு வெளியே வந்தான்.

தெருவில் இறங்கி வேகவேகமாக அவன் நடந்தபோது,சத்யாவின் வீட்டில்துப்பாக்கிச் சப்தம் கேட்டது.

(தொடரும்)

# வாசகர்கள் சொல்கிறார்கள்

## சின்னச் சின்ன கனவுகள்

* சின்னச் சின்னக் கனவுகள் கதையில் பாண்டியனை அநியாயமாகச் சாகடித்து, இந்திராவை மறுபடியும் விதவைக் கோலமாக்கியதுதான் மனத்துக்குச் சங்கடமாக இருக்கிறது.

சிவகாசி, எஸ். பானுமதி.

* ஓர் அருமையான உணர்ச்சிக் காவியத்தை, தெள்ளத் தெளிந்த நீரோடையென எடுத்துச் சென்றிருந்தாலும், பாண்டியனை இந்திராவிடமிருந்து பிரித்தது, கொஞ்சம் மனத்தாங்கலைத்தான் தருகிறது.

சென்னை — 80, கே. என். ஸ்ரீநிவாஸ்.

* ஒவ்வொரு வாரமும் எதிர்பார்த்துப் படிக்க வைத்த கதை. 'சுபா'வோடு வாராவாரம் கதைக்கு உயிரூட்டிய ஓவியர் அரஸுக்கு எனது பாராட்டுக்கள்.

கோவில் வெண்ணி, கோ. ராஜேஷ்.

* கண் முன்னால் இருக்கும் மனிதர்களாகத் தோன்றினர்களேயன்றி, கதை மாந்தர்களாகச் சிறிதும் எண்ண முடியவில்லை, 'சின்னச் சின்னக் கனவு'களின் பாத்திரங்களை.

கோவை. உமார்த்தி.

* 'கலெக்டரு, கலெக்டரு' என நந்துவை ஆசையோடு அழைத்த தங்கராஜுவை மறக்க முடியாது. தங்கராஜுவின் கனவை நந்து 'கலெக்டர்' ஆகி நனவாக்கட்டும்! இருந்தாலும் இந்திராவிற்கு ஒரு வாழ்க்கைத் துணைவனைக் கொடுத்து, அவளது வாழ்வை மலரச் செய்த 'சுபா' ஏன் பாண்டியனைச் சாகடிக்க வேண்டும்? பாண்டியன், இந்திரா, நந்தகுமார் மூவரும் ஒன்றாகியிருந்தால் நாங்கள் மகிழ்ந்திருப்போம்.

திருத்துறைப்பூண்டி, டீ. டேவிட்ஜான்பிரிட்டோ.





## மோகம் என்பது இதுதானோ?

* "மோகம் என்பது இதுதானோ?" தொடர்கதை அழகான குடும்பக் காவியம். ஞானம், லோகு, போன்ற விட்டில் பூச்சிகள் அரசியல், சினிமா என்ற விளக்குகளில் விழுந்து அழிந்து போகும் அவலத்தை உஷா சுப்பிரமணியன் மிகவும் யதார்த்தத்துடன் உயிரோட்டங் கொண்ட கதாபாத்திரங்களின் மூலம் அற்புதமாய்ச் சொல்லியிருக்கிறார். பாராட்டுக்கள்.

பொன்னியம்மன்மேடு, ஜெ. ரமாதேவிப்ரியா.

* புவனா என்னும் மலர் சந்தர்ப்ப சூழ்நிலையால் காமுகர் மடியில் விழுந்து விடுமோ என மடியில் நெருப்பைக் கட்டிக் கொண்டிருந்தேன். நல்ல வேளை! புவனா சரியான பாதையில் நடக்கத் துவங்கி விட்டாள்.

திருத்துறைப்பூண்டி, டி. டேவிட்ஜான்பிரிட்டோ.

* வாரம் தோறும் இடைவெளி விட்டுப் படித்து மகிழ்ந்தாலும், திரும்பவும் தொடக்கம் முதல் முடிவு வரை தொடர்ந்து விடாமல் படித்திட வேணும் என்று மனசு துடிக்கிறது! ஒருவேளை, மோகம் என்பது(ம்) இதுதானோ?

மதுரை — 11, திருமதி சுகந்தி நாராயண்.

* தம் உயிரையே விலையாய்த் தந்து, அருமை மகளின் மோக வலையை, மேக வலையாய் விலகச் செய்து, அவளின் நல்வாழ்வுக்கு வழிவகுத்து விட்டார் சுந்தரம். மாருதியின் ஓவியங்களும் வாரா வாரம் மெருகு சேர்த்தன.

காட்டூர், எஸ். அருள்மொழி

* "கள்ளி வயிற்றில் அகில் பிறக்கும்; மான் வயிற்றில் ஒள்ளரிதாரம் பிறக்கும்; பெருங்கடலுள் பல்விலையமுத்தம்பிறக்கும்; அறிவார் யார் நல்லாள் பிறக்குங்குடி" — என நான்மணிக்கடிகை கூறுகிறது. ஞானம் வயிற்றில் புவனா பிறந்ததும் இப்படித்தான் என்கிறாரோ கதாசிரியர்!

கல்யாணபுரம், அ. சம்பத்.

# 11 வயதினிலே உங்கள் மகன், பள்ளிக்கூட ஹோம் ஒர்க், கிரிக்கெட் மேட்ச், சண்டைப்படம் இவற்றிலேதான் ஆர்வமாயிருப்பான். 'பொக்கிஷம் போன்ற 32 பற்களைப்' பற்றி அவன் எங்கே சிந்திக்கப் போகிறான்?



## ஆகவே, போர்ஹென்ஸ் பல்பராமரிப்பு அவனைக் கவனிப்பதில் மிகவும் அக்கறை காட்டுகிறது.

அன்றாடம் பள்ளிக்குச் செல்லும்போது உங்கள் மகன், 'என் ஈறுகளும் பற்களும் உறுதியாக உருவாகின்றன' என்று எண்ணிச் செல்லமாட்டான். அவனுடைய ஆர்வமெல்லாம் விளையாட்டிலும் ஸ்டண்ட் சினிமாவிலும்தான் இருக்கும். டூத்பேஸ்ட் ருசியா இருந்தா போதும் அதோட அவன் மகிழ்ச்சியாயிடுவான்.

ஆனால் அவனோட ஈறுகளுக்கும் பற்களுக்கும் வலுவான அஸ்திவாரத்திற்கான உறுதிக்கு ஆபத்து நிச்சயம். அவனுடைய 32 பற்களும் என்றும் பத்திரமா இருந்து அவன் ஸூப்பர் ஃபைட்டரா வளரணும்னு நீங்கள் விரும்புறீங்க!

வினா: அவனுடைய டூத்பேஸ்ட் பற்களை மட்டும் சுத்தப்படுத்துகிறதா அல்லது எனாமலையும் கெட்டிப் படுத்துகிறதா? மூச்சிலே புத்துணர்ச்சியை மட்டும் அளிக்கிறதா அல்லது ஈறுகளையும் உறுதிப்படுத்துகிறதா?

போர்ஹென்ஸ் தன் பல்வகைப் பல் பராமரிப்புகளால் இத்தகைய விஷயங்களைக் கவனிப்பதில் அக்கறை காட்டுகிறது.

உதாரணமாக, போர்ஹென்ஸ் டூத்பேஸ்ட் மற்றும் டூத் பவுடர் ஒப்பற்ற அஸ்ட்ரிஞ்ஜெண்ட் கொண்டவையாகும். இது பற்களுக்கு உறுதியான அஸ்திவாரம் அளிப்பதற்கு ஈறுகளை வலுப்படுத்துகிறது. ஆகவே அவை நீடித்த ஆயுளைப் பெறுகின்றன. ஈறுகள், பற்களுக்கு பாதுகாப்புப் பிடிமானம் அளித்து துர்நாற்றம் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் உருவாக இடமளிப்பதில்லை. அதாவது சுவாசத்தில் துர்நாற்றத்தை தடுக்கிறது.

இதுமட்டுமா, ஸூப்பர் ஃபைட்டர் போர்ஹென்ஸ் ஃப்ளோரைட், அமிலத் தாக்குதலைத் தடுத்திட பல் எனாமலை ஆற்றலுடன் கெட்டிப்படுத்துகிறது.

போர்ஹென்ஸின் டூத்பிரஷ் கூட இரட்டைச் செயல் கொண்டதாகும். பற்களுக்கு பளிச்சிடும் வெண்மையூட்டி ஈறுகளையும் தேய்த்துக் கொடுக்கிறது.

நாங்கள் சொல்வதை நீங்கள் அப்படியே ஏற்க வேண்டுமென்பதில்லை. போர்ஹென்ஸை உபயோகித்துப் பார்த்தபின்பே அதன் உண்மை மதிப்பை அறியமுடியும் என்பது உங்களுக்குத் தெரியும்.



**போர்ஹென்ஸ் பராமரிப்பு**

போர்ஹென்ஸ் டூத்பேஸ்ட், போர்ஹென்ஸ் ஃப்ளோரைட் டூத்பேஸ்ட், போர்ஹென்ஸ் டூத்பவுடர், போர்ஹென்ஸ் டூத்பிரஷ்.

32 என்றும் பத்திரம்

GM-101/86 Tam

# 4

அருண் கடிகாரத்தைப் பார்த்தான். மணி 11.40. காலையில் வீட்டில் அவனுக்குப் பிடிக்காத டிபன்! ரவா பொங்கல். வெறும் வயிற்றோடு ஆபீசுக்கு வந்து விட்டதால் இப்போது பசி வயிற்றில் விஷமம் செய்தது.

லஞ்ச் நேரத்துக்கு இன்னும் ஒரு மணி இருபது நிமிடம் இருந்தது. அதுவரையில் எப்படிப் பொறுத்துக் கொள்வது?

'வேலையில் மூழ்கு. பசி, தாகம் எதுவுமே தெரியாது' என்று எப்போதோ படித்த அறிவுக் கட்டுரை வாசகம் நினைவுக்கு வந்தது. 'தூ! வேலையா இது!' என்று வாய் விட்டுச் சொல்லி, தன் வெறுப்பை மேலும் விளம்பரப்படுத்தி, மேஜை மீதிருந்த நாலைந்து காகிதங்களை எடுத்து அவை என்ன வென்று கூடப் பார்க்காமல் கசக்கிப் பந்து களாக்கி, குப்பைக் கூடையில் வீசியெறிந்தான்.

தனக்கு விற்பனை, கணக்கு அல்லது விநியோகப் பிரிவில் வேலை போடுவார்கள் என்றுதான் நினைத்திருந்தான் அருண். அந்த நினைப்பில், ஆறு லாரி லோடு அளவுக்கு, தரமான ஆற்று மணலை அள்ளிப் போட்டார் சராகா மானேஜர்.

அந்த முதல் நாள்....

''இதுதான் உங்க ரூம் மிஸ்டர் அருண்!'' என்று மானேஜர் ஒரு தனி அறையைச் சுட்டிக் காட்டியபோது ஏற்பட்ட சந்தோஷம், அறைக்குள் எட்டிப் பார்த்ததும் தரை முதல் ஸீலிங் வரையில் அடுக்கப்பட்டிருந்த காகிதக் குவியலைக் கண்டதும் கரைந்தே போயிற்று.

''இதுதான் உங்க ஸீட். நீங்கள் ஃபைலிங் எக்ஸிக்யூட்டிவ். இந்தக் காகிதங்களெல் லாம்லெட்டர்ஸ்,காப்பிகள்....எல்லாவற்றையும் சப்ஜெக்ட்படி பிரித்து, ஒழுங்காக ஃபைல் செய்து வைக்க வேண்டியதுதான் உங்கள் வேலை. தட்ஸ் ஆல்!''

'தன் குவாலிபிகேஷன் எதுவுமே தேவைப் படாத ஒரு வறட்டு வேலையில் வந்து சிக்கிக் கொண்டதற்குத் தன் புத்தியை எதைக் கொண்டு அடிப்பது?' என்று ஒருகணம் யோசித்துவிட்டு, அருண் கேட்டான்:

''சார், ஒரு சந்தேகம்....''

''இன்னும் ஸீட்டிலே உட்காரக் கூட இல்லை. அதற்குள்ளே சந்தேகமா?''

''ஆமாம், இந்தக் கம்பெனி ஆரம்பித்ததி லிருந்து யாரும் ஃபைலிங் வேலையே பார்க்கல்லியா?''

''பார்க்காமலென்ன? செங்கல்ராவ் என்று ஒருத்தர்தான் நீ வர்றதுக்கு முன்னாலே இருந்தார். அவர் ரிடையர் ஆகிவிட்ட தாலே கொஞ்சம் போலப் பேப்பர்கள் சேர்ந்து போயிட்டுது....''

''அவர் எப்ப சார் ரிடையர் ஆனார்?''

''ஜஸ்ட் பதினெட்டு மாசம் முன்னாலே தான்!''

அருண் பற்களை நறநறத்தான். ஆனால் கூடவே ஓர் ஆறுதலும் பிறந்தது. ஒன்றரை வருடக் குப்பை லேசில் தீராது. தவிர, அன்றாடம் வேறு புதிது புதிதாகப் பேப்பர்கள்



சேரும். குறைந்தபட்சம் இரண்டு வருஷங்களுக்காவது இந்த வேலை நிலைக்குமே!

மானேஜர் வெளியேறியதும் சில பேப்பர்களையாவது எடுத்து, தேதி வாரியாக அடுக்கி வைக்கலாமென்று முனைந்தான். நாலைந்து கற்றைகளை உருவியதுமே, சினிமாக் கனவு காட்சிகளில் வருவது போலப் புகைப்படலமாகத் தூசி கிளம்பி, மூக்கில் நுழைந்து, ராட்சசத் தும்மல்களை வெளியேற்றவே, சட்டென்று அறையைவிட்டு வெளியே வந்தான்.

டாய்லெட் பக்கம் போய் நின்று ஒய்வாகச் சிகரெட் பிடிக்க ஆரம்பித்தான் அருண். நாலு இழுப்பு இழுத்ததும் அந்தப் பக்கமாக வந்த ஓர் அட்டெண்டர், "இன்னா சார்! வேலையை வுட்டுட்டீங்களா?" என்று அபசகுனமாக விசாரித்தான்.

"வேலையை விடறதாவது! இன்னிக்குத் தானேய்யா சேர்ந்திருக்கேன்...."

"தைரியமா ஆபீசுக்குள்ளே தம் அடிக்கிறீங்களேன்னு கேட்டேன்...."

"ஏன்? சிகரெட் பிடிக்கக் கூடாதா?

"எம்.டி.க்குத் தெரிஞ்சுதுன்னா சீட்டுக் கிழிஞ்சிடும் சார்! ஆபீஸ்லே இதெல்லாம் வச்சுக்கக் கூடாது!"




"வேறே என்னென்ன செய்யக் கூடாது, சொல்லு!"

"நோட்டீஸ் போர்ட்லே விலாவாரியா போட்டிருக்கு. போய்ப் படிச்சுக்க சார்!"

சிகரெட்டை வாயில் பொருத்தியபடியே ஆபீஸ் முழுவதும் வலம் வந்து, அப்படியே அந்த எம்.டி. பாணியின் அறையிலும் போய்த் தலையைக் காட்டி, முதல் நாளன்றே இந்த மகா மகா மட்டமான வேலைக்குத் தலை முழுகினாலென்ன என்ற வேகம் பிறந்தது அருணுக்கு.

ஆனாலும் தவிர்த்தான்.

சத்யாவுக்காக.

அவனுக்கு உதவுவதாக வாக்கு கொடுத்திருக்கிறோம். அதற்குப் பாதிப்பு ஏற்படும் வகையில் எதுவும் செய்யக் கூடாது. அன்றைக்குச் சத்யா இந்தச் 'சராகா' பற்றிக் கூட ஏதோ சொல்ல வந்தான். அது என்னவென்பதைத் தெரிந்து கொள்ளாமலே சத்யாவின் வீட்டிலிருந்து அவசரமாக வெளியேற வேண்டியதாகிவிட்டது.... சத்யா மேற்கொண்டிருக்கிற மகத்தான பணியை முன்னிட்டாவது இந்த வேலையில் ஒட்டிக் கொண்டு இருந்தேயாக வேண்டும்.....

சிகரெட்டைத் தூக்கியெறிந்துவிட்டு, நோட்டீஸ் போர்டைப் போய்ப் பார்த்தான். அதில்:

அலுவலர்கள் கவனத்திற்கு

1. அரசியல், சினிமா, நாடகம், ரேடியோ, டீ.வி., பத்திரிகைச் செய்தி — இவை பற்றி ஆபீசுக்குள் விமரிசனம் செய்யக் கூடாது.
2. வெற்றிலை பாக்கு, பொடி, சிகரெட், சுருட்டு, பீடி, பைப் — உபயோகிக்கக் கூடாது.
3. ஆபீஸ் ஸ்டேஷனரிப் பொருட்கள் ஆபீஸ் உபயோகத்துக்கே. சொந்த வேலைக்குப் பயன்படுத்துவதற்கோ வீட்டுக்கு எடுத்துச் செல்வதற்கோ அல்ல.
4. பர்ஸனல் போன் கால்கள் கூடிய வரையில் தவிர்க்கப்பட வேண்டும்.
5. குண்டூசியை வைத்துப் பல் குத்துவதும், ஜெம்கிளிப்பினால் காது குடைவதும் முறையல்ல.
6. தாமதமாக வருவது, லீவ், கடன் ஆகியவை உட்பட, ஊழியர்கள் தமது சொந்த விஷயங்களில் பொய் சொல்லக் கூடாது. இவ்விதியை மீறுபவர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்கப்படும். (பிஸினஸ் விஷயமாகப் பொய் பேசுவது முறையானதே.)

முக்கிய குறிப்பு: இந்த அறிவிப்புகளைக் கேலி பேசக் கூடாது.

அருண் தன் சட்டைப் பையிலிருந்து பேனாவை எடுத்தான். அக்கம்பக்கம் யாருமில்லை என்பதை உறுதி செய்து கொண்ட பின்னர், அந்த அறிவிப்பின் கடைசியில் இரண்டு வரிகளை எழுதினான்.



# யானை விலை...!

"நம் நாட்டு மன்னர், விலைவாசியைக் குறைப்பதற்கு ஒரு அபாரமான யுக்தி பண்ணிட்டார் பார்த்தாயா....?"

"எப்படி?"

"எல்லாப் பொருளும் யானை விலை, குதிரை விலை என்று ஏறிட்டதனுலே... ஒரு உத்தரவு போட்டு, யானை விலையையும், குதிரை விலையையும் படு பாதாளத்துக்கு இறக்கிவிட்டுட்டார்....!"

— பெ. கலாசாமி

அதிமுக்கிய குறிப்பு: ஊழியர்கள் மூச்சு விட அனுமதி உண்டு. பெருமூச்சு விட வேண்டுமானுல் எம்.டி.யிடம் முன் அனுமதி பெற வேண்டும்.

நோட்டீஸ் போர்டைப் பார்வையிட்டு விட்டுத் திரும்புகையில் அந்தப் பெரிய ஹால் வழியாக வந்தான் அருண். எல்லா ஆபீஸ்களையும் போலவே இங்கும் கால்வாசிப் பேர் மும்முரமாக வேலை செய்து கொண்டும், முக்கால்வாசிப் பேர் வேலை செய்வது போலப் 'பாவ்லா' காட்டிக் கொண்டும் இருந்தார்கள். பார்த்துக் கொண்டே வந்தபோது ஒரே ஒரு முகம் மட்டும் பரிச்சயமானதாகத் தென்பட்டது.

டைப்ரைட்டர் முன்பு அமர்ந்திருந்தாள் அந்தப் பெண். நல்ல எலுமிச்சை நிறம். அவள் உட்கார்ந்திருந்த தோரணையும், முகத்தில் காட்டிய இறுக்கமும், 'இவள்' கர்வக்காரி; யாரையும் லேசில் மதிக்கமாட்டாள்' என்று விளம்பரப்படுத்திக் கொண்டிருந்தன. இருந்தபோதிலும் அவளைக்கண்டவுடன் அருணின் மனசில் ஒரு குறுகுறுப்பு ஏற்படவே செய்தது.

கூடவே அந்தக் கேள்வியும் எழுந்தது. இவளை எங்கோ பார்த்திருக்கிறேமே! எங்கே? எங்கே?

ஸீட்டுக்குத் திரும்பி, காகிதங்களைப் பிரிக்கும் வேலையில் ஈடுபட்டிருந்த நேரத்திலும் அந்தக் கேள்வியே மனத்தில் திரும்பத்திரும்ப வந்து கொண்டிருந்தது. ஒரு சிகரெட் பிடித்தால் ஆட்டோ ரிக்ஷா மீட்டர் போலச் சிந்தனை வேக வேகமாக ஓடும் என்றது அனுபவ அறிவு. அதற்கு வழியில்லாததால், ஒரு பாக்குப் பொட்டலத்தைப் பிரித்து வாயில் போட்டுக் கொண்டான்.

அறைக்கு வெளியே அட்டெண்டர்கள் யாரையோ காரசாரமாக விமர்சனம் செய்து கொண்டிருந்தார்கள். "அவன் சில்லறை புத்திக்காரன்னு நான்தான் அப்பவே சொன்னேனே!" என்ற வரி காதில் விழவும், நிமிர்ந்து உட்கார்ந்தான் அருண்.

சில்லறை!

வலசரவாக்கம் சென்று கொண்டிருக்கும் போது, அவனைச் சந்தித்துப் பஸ் சார்ஜுக்குச் சில்லறை கேட்ட அதே பெண்தான் இவள். அட! அவள் இங்கேயா வேலை பார்க்கிறுள்!

ஆச்சரியமாக இருந்தது. அத்துடன் அவள் தன்னை அடையாளம் கண்டு கொள்கிறுளா என்று பார்க்கும் ஆவலும் பிறந்தது.

லஞ்ச் இடைவேளைக்குப் பிறகு, சொல்லி வைத்தாற் போல, அந்தப் பெண்ணே அவனைத் தேடிக் கொண்டு வந்தாள். "ஹலோ!" சொன்னுள். போனுல் போகிறதென்று கொஞ்சம் புன்னகை காட்டினுள். "நீங்கள்தான் புது ஃபைலிங் எக்ஸிக்யூடிவ்வா? கிளாட் டு மீட் யூ!" என்றுள்.

"ஐ'ம் அருண். வாட்ஸ் யுவர் குட் நேம் ப்ளீஸ்!"

"லேகா."

"சந்திரலேகாவா, சித்திரலேகாவா?"

"வெறும் லேகா!"

"வெறும் லேகா என்ற பெயர் ரொம்பப் புதுமையாக இருக்கிறது...."

"நோ நோ.... என் முழுப் பெயரே லேகா தான்!"

"நீங்கள் ஸ்டெனேவா?"

"வேலை என்னவோ அதுதான். டெஸிக்னேஷன்: கரஸ்பாண்டென்ஸ் எக்ஸிக்யூடிவ்!"

"நானே கேட்க வேண்டுமென்று நினைத்தேன் — அதென்ன எல்லாருக்கும் 'எக்ஸிக்யூடிவ்' என்று ஒரு வால் சேர்த்திருக்கிறுர்கள்?"

"நம்ம எம்.டி. மிஸ்டர் பாணி இருக்கிறுரே — அவரது பாணியே அலாதி! இங்கே அட்டெண்டருக்குக் கூட அட்டெண்டிங் எக்ஸிக்யூடிவ் என்று பெயர் கொடுத்திருக்கிறுர்.... குப்பை கூட்டுகிறவன் ஸ்வீப்பிங் எக்ஸிக்யூடிவ்!"

"அது எப்படியோ போகட்டும்... என்ன விஷயம், சொல்லுங்கள். அந்த ஒரு ரூபாயைத் திருப்பிக் கொடுக்க வந்தீர்களா?"

"எந்த ஒரு ரூபாய்? நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"போன வாரம் ஒரு நாள் சாயந்தரம், ஹைரோடிலேபோய்க்கொண்டிருந்தஎன்னிடம் வந்து பஸ்ஸுக்குச் சில்லறை கேட்டீர்களே, மறந்துவிட்டீர்களா?"

புருவங்களை நெறித்து யோசித்த லேகாவின் முகப் திடீரென இருண்டு, நொடிப் பொழுதில் பழைய நிலைக்கு வந்தது.

''ஓ! நீங்கள்தானா அது! உங்களை இங்கே சந்திப்பேன் என்று நினைக்கவே இல்லை...''

''நானும்தான்!''

''வந்த விஷயத்தை மறந்துவிட்டேனே! ஆறு மாசம் முன்னாலே குஜராத் வல்லப் கம்பெனிக்கு ஒரு லெட்டர் எழுதினாராம் நம்ம மானேஜர். அதைக் கொண்டு வா என்கிறார். தேடலாமென்று....''

''இந்தப் பேப்பர் காட்டிலா? இம்பாஸிபிள்!''

''நான் ஒரு டெக்னிக் வைத்திருக்கிறேன். கண்ணை மூடிக் கொண்டு ஒரு காகிதக் கட்டை எடுப்பேன். நான் தேடுகிற பேப்பர் அதில் இருந்தால் சரி. இல்லை என்றால், 'சார்! அந்தக் கம்பெனிக்கே லெட்டர் எழுதி நம்ம லெட்டரின் காபியை அனுப்பச் சொல்லலாம்!' என்று சொல்லி, ரெடியாக டைப் பண்ணி வைத்திருக்கிற லெட்டரையும் நீட்டுவேன்.... 'ஸ்மார்ட் ஒர்க்' என்றபடி, கையெழுத்துப் போட்டு விடுவார் மானேஜர்...!''

அவளது சாமர்த்தியத்தைப் பாராட்டத் தோன்றிய அதே நேரத்தில், 'இவளிடம் எச்சரிக்கையாகப் பழக வேண்டும்' என்றும் ஏனோ தோன்றியது அருணுக்கு.

தொடர்ந்த சில நாட்களில் தன்னைப் பற்றிய சில தகவல்களை லேகாவே அருணிடம் சொன்னாள்.

அப்பா — அம்மா ஊரில் இருக்கிறார்களாம். இரண்டு தம்பிகள் படிக்கிறார்களாம். வானம் பார்த்த சொற்ப பூமி. அதுவும் கடனில் மூழ்கும் நிலை. இவள் இங்கு லேடீஸ் ஹாஸ்டலில் தங்கி வேலை பார்த்து ஊருக்குப் பணம் அனுப்பிக் கொண்டிருக்கிறாள். தம்பிகள் படித்துச் சம்பாதிக்க ஆரம்பிக்கும் வரையில் இவள் சுமைதாங்கியாக இருந்தாக வேண்டிய நிர்ப்பந்தம். கல்யாணம் பற்றியெல்லாம் அப்புறம்தான் யோசிக்க வேண்டும்....

லேகா சொன்னது அருணின் மனத்தில் அளவுக்கு மீறிய பாதிப்பு ஏற்படுத்தவே, புதுக் கவிதை ஒன்று குதித்து வந்தது பேனாவிலிருந்து:

பூஜையறைக் குத்துவிளக்கு
மேஜையடியில் உழைப்புச் சிந்தி
உருக்குலையும் கல்யாணக் கனவுகளைக்
கருக் கொண்டு மனமொடியும்
தூண்டி விட வேண்டிய துஷ்யந்தர்கள்
சீர் வரிசை வேலுக்கும் வரதட்சணை
வாளுக்கும்
கூர் பிடித்துக் காத்திருப்பார்கள்.

கவிதை பிறந்த அந்த ஞாயிற்றுக்கிழமை மாலை நண்பர்களுடன் சினிமா பார்த்துவிட்டு ஜாலியாக அரட்டை அடித்தபடியே வந்து கொண்டிருந்த அருண், எதிர்பாராத அதிர்ச்சிக்கு ஆளானான்.

அவனைக் கடந்து வேகமாகச் சென்றது ஒரு புத்தம் புதிய மாருதி கார். அதை டிரைவ் செய்தவள் லேகா!

(தொடரும்)

# சமத்துவம்

நளினியின் கல்யாண ஏற்பாடுகள் பரபரப்பாக நடந்து கொண்டிருந்தன. சமையலறையில் நளினி ராகவன் என்று பெயர் எழுதப்பட்ட முறுக்குகள் எண்ணெயில் கொதித்துக் கொண்டிருந்தன. ஒரு மாமி, 'அதிரசத்திற்கு' மாவு பிசைந்து கொண்டிருந்தாள்.

நளினியைச் சுற்றி அவள் வயதை யொத்த நான்கைந்து பெண்கள் கிண்டலும் கேலியுமாய்ப் பேசிக் கொண்டிருந்தனர்.

ஒருத்தி, "நான்தான் அடிக்கடி சொல்வேனேடி, நம்ம நளினியோட அழகுக்கும் குணத்துக்கும் ஒரு ராஜ குமாரன்தான் கிடைப்பான்னு" என்றாள்.

"ஆமாமாம். நளினியோட 'வுட்பீ' அழகுலயும் ராஜாதான். அந்தஸ்துலயும் ராஜாதான்" — இன்னொருத்தி ஆமோதித்தாள்.

"மொத்தத்துல நளினி அதிர்ஷ்டசாலிடி. பாங்க்ல சாதாரண கிளார்க்கா இருந்தாலே பத்தாயிரம் வரதட்சணை, பதினைஞ்சு பவுன் நகை, இத்யாதின்னு மாப்பிள்ளைக்கு ரேட் ஃபிக்ஸ் பண்ணிடறாங்க. ஆனா நளினியோட 'வுட்பீ' பாங்குல ஆபீஸராயிருந்தும், 'வரதட்சணை வேண்டாம். நகை, சீர் வரிசை எல்லாம் உங்க சக்திக்கேற்றபடி செய்யுங்கன்னு, சொன்னது பெரிய ஆச்சரியமடி." இன்னொருத்தி ஒரே மூச்சில் பொரிந்து தள்ளினாள்.

நளினியின் அப்பா முத்துவிற்கும், அந்தப் பெண் யதார்த்தமாகப் பேசியது மிகவும் பிடித்திருந்தது.

பாவம் முத்து! முதலிரண்டு பெண்களுக்கும் மனைவியின் நகைகளையும் வெள்ளிப் பாத்திரங்களையும் பங்கிட்டு விட்டார். இருந்த ஒரே வீட்டை விற்றுக் கல்யாணச் செலவும் செய்து விட்டார்.

மூன்றாவது பெண்ணிற்குத் திருமணம் என்று வந்தபோது முத்து ரிடையர் ஆகும் சமயம் நெருங்கி விட்டது. செய்வதறியாமல் அவர் தவித்துக் கொண்டிருந்த போது தான் நண்பர் மூலமாக அந்தச் சம்பந்தம் கிடைத்தது.

முதலில் முத்துவிற்கும் ஆச்சரியமாகத்தானிருந்தது. பையனைப் பற்றிச் சந்தேகப்பட்டு, அவன் வேலை செய்யும் பாங்கில் மெள்ள விசாரித்துப் பார்த்தார். பையனுக்கு எந்தவிதக் கெட்டப்பழக்கமுமில்லை, தங்கமான குணம் என்றே எல்லோரும் சொன்னார்கள்.

எல்லாம் கடவுள் அருள் என்று மனத்திற்குள் நினைத்துக் கொண்டார்.



"என்னங்க, இங்கே கொஞ்சம் வாங்களேன்" முத்துவின் மனைவி ஞானம் பதற்றத்துடன் குரல் கொடுத்தாள்.

"என்ன ஞானம் என்ன விஷயம்?"

"இங்கே பாருங்க. ஷோபாவும்,

மஞ்சுவும் வந்திருகாங்க.''

"அட, இதுக்கா இவ்வளவு பதற்றப் பட்டே? அவங்கதான் இன்னிக்கு வர்றதா முந்தியே கடிதாசி போட்டிருந்தாங்களே!'' நிதானமாகக் கூறினர் முத்து.

ஞானம் தலையிலடித்துக் கொண்டாள். "மாப்பிள்ளைங்க வரலையே அதைக் கவனிச்சீங்களா?''

'அப்புறம் வருவார்களோ என்னவோ. இவள் ஏன் இப்படிப் புலம்புகிருள்?' என்று மனத்துக்குள் நினைத்துக் கொண்ட முத்து, "மாப்பிள்ளைங்க ஏன் வரலே?'' என்று ஒரு வழியாகக் கேட்டார்.

அதற்குள் பெரிய மகள் ஷோபா, "வந்துப்பா... நம்ம நளினி நிச்சயதார்த்தத்துக்கு நாங்க வந்திருந்தோமில்லையா?'' என்ருள்.

"ஆமாம்.''

"நளினி வீட்டுக்காரர் கையில் மோதிரமும், கழுத்துல கெட்டியா, ஐந்து பவுனுக்குச் சங்கிலியும் போட்டிருந்தார் இல்லியா?''

"அதுக்கென்ன இப்போ?''

"அந்த மாப்பிள்ளை அவ்வளவு வசதியாயிருக்கிறப்ப உங்க முதல் மாப்பிள்ளை மட்டும் கழுத்துல ஒண்ணுமில்லாம இருக்கறது, அசிங்கமாயிருக்குப்பா. அதனுல் அவருக்குமூன்று பவுனுலயாவது ஒருமைனர் செயின் பண்ணிடுங்கப்பா. இல்லேன்னு அவர் கல்யாணத்துக்கே வரலைன்னுட்டார் அப்பா'' கண்ணைக் கசக்கினுள் ஷோபா.

"உங்க மூணுவது மாப்பிள்ளை கார்ல வந்திறங்குவாரு. உங்க இரண்டாவது மாப்பிள்ளைகிட்ட சைக்கிள்தானிருக்கு. அது உங்களுக்கே கௌரவமாயிருக்குமாப்பா? அதனுல அவருக்கு ஒரு மொபெட்டாவது வாங்கிக் குடுத்துடுங்கப்பா,'' என்று தன் பங்குக்கு மஞ்சு கூறி முடித்தாள்.

முத்துவுக்கு லேசாக மயக்கம் வந்தது....

— லதா ராஜாராம்

# பொன்மொழிப் போட்டி-5 முடிவு:

**சரியான விடை:**

பிளேட்டோ: இளையவர் மூத்தவர் என்ற வேறுபாடு இல்லாமல் இளைஞர்கள் கற்பதற்கு ஆர்வமாகவும் மூத்தவர் கற்பிப்பதற்கு ஆர்வமாகவும் இருக்கும்போது அறிவு வெளிப்படுகிறது.

மார்க்டுவெய்ன்: உங்கள் இலட்சியங்களை இளக்காரம் செய்வோரை ஒதுக்குங்கள். அவர்கள் அற்ப மனிதர்கள். பெரிய மனிதர்கள், நீங்களும் பெரிய மனிதனுகலாம் என்ற எண்ணத்தையே உங்களிடம் தோற்றுவிப்பார்கள்.

சத்யசாயி பாபா: நீ சந்தோஷமாக இருந்தால் உலகமே சந்தோஷமாக இருப்பதாக எண்ணுகிருய். நீ அமைதியற்று இருந்தால் உலகமே உபயோகமற்றதாய்த் தோன்றுகிறது. எனவே அன்பு, அமைதி ஆகிய குணங்களை இளைஞர்கள் வளர்த்துக் கொள்ள வேண்டும்.

டாக்டர் எஸ். ராதாகிருஷ்ணன்: பிரபஞ்சத்தின் இசை நமது இதயத்தில் எதிரொலித்தால் அதுதான் கவிதை.

கீழ்க்கண்டபதினேழுவாசகர்கள்சரியான விடையை எழுதியுள்ளார்கள். ரூ. 200/— பரிசைப் பிரித்து அவர்கள் ஒவ்வொருவருக்கும் ரூ. 12/— வழங்குகிரேம்.

1. எஸ். பத்மனபன், சென்னை — 28. 2. என். டி. பூபதி, கட்டிமாங்கோடு, குமரி மாவட்டம்; 3. வி. மாலதி, கோயமுத்தூர் — 18; 4. ஏ. சுப்பிரமணியன், கோயமுத்தூர் — 22; 5. ஆர். கோபாலகிருஷ்ணன், சென்னை — 73; 6. ப. ரேவதி, தூத்துக்குடி — 2; 7. மா. இராசு, பரமக்குடி; 8. எஸ். சிவசுப்பிரமணியன், நெல்லிக்குப்பம்; 9. வி. ராம்ஜி, சென்னை — 20; 10. ஜி. ராஜேசுவரி, சென்னை — 88; 11. டி. அம்மைசபாநாயகம், கோயமுத்தூர் — 30; 12. கே. பி. கமலாம்பாள், பவானி; 13. சங்கரி, சென்னை — 28; 14. கே. சவுந்தரவல்லி, சென்னை — 21; 15. கே. வெங்கடேசன், திருநெல்வேலி; 16. டி. டேவிட் ஜான் பிரிட்டோ, திருத்துறைப்பூண்டி; 17. எஸ். சரோஜா, சென்னை — 4.

# ஆபத்தான விளைவுகள்

## 5

"சார்! மானேஜர் உங்களைக் கூப்பிடறார்!" என்றவாறே எதிரில் வந்து நின்றான் ஓர் அட்டெண்டர் — தப்பு, தப்பு! — சராகா அட்டெண்டிங் எக்ஸிக்யூடிவ்.

"முடிந்தால் வரேன்னு போய் சொல்லுய்யா!" — பதில் சொல்லியனுப்பினான் அருண்.

அடுத்த இரண்டாவது நிமிடம் மானேஜர் சிவம் அவன் எதிரில் வந்து நின்றார். ஒரு பாக்கெட் கற்பூரம், நாலு கட்டு ஊதுவத்தி பிளஸ் ஒரு பாக்கெட் ஃபில்டர் சிகரெட்டைச் சுலபமாகக் கொளுத்தக் கூடிய அளவுக்கு அவரது முகத்தில் அக்கினி ஜ்வாலை வீசியது. கரடி போல ரோமமான அவரது கரங்களில் ஈட்டிகள் குத்திட்டு நிற்க, வாயில் நுரை ததும்பும் அளவுக்குக் கோபம் கொப்பளித்தது. "யூ.... யூ.... யூ...." என்று திணறலுடன் திட்ட ஆரம்பித்தார்.

"அதற்கு மேலே இங்கிலீஷ் ஆல்ஃபபெட் மறந்து போயிட்டுதா சார்?" என்று கொழுப்புக் குறையாமல் கேட்டு, கோபத்தில் ஒரு டின் பெட்ரோல் ஊற்றினான் அருண்.

"ஸில்லி கூஸ்! நான் கூப்பிட்டால், 'முடிந்தால் வரேன்'னு பதில் சொல்லி அனுப்பறியே!' மரியாதை தெரியாதவனாக இருக்கிறாயே!"

"சார், நீங்கள் என்னைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. கைநிறையப் பேப்பர்கள் வைத்திருந்தேன். அதையெல்லாம் ஸார்ட் பண்ணி முடிந்தால் வரேன் என்றுதான் சொன்னேன். உங்களைப் போய் அவமதிப்பேனா சார்? எத்தனை பொறுப்பான வேலை கொடுத்திருக்கிறீர்கள்?"

"சரி, சரி, நிறுத்து...." என்று அவனது கிண்டலைப் புரிந்து கொள்ளாமல் தொடர்ந்தார் மானேஜர். "ஒரு முக்கியமான விஷயம் சொல்லணும், உன்னிடம்!"

"சொல்லுங்க சார்!"

"இந்த ஃபைலிங் பேப்பர்களிலே சில டாப் சீக்ரெட் பேப்பர்களும் கலந்திருக்கின்றன. கம்பெனியின் எதிர்காலமே அவற்றிலே அடங்கியிருக்கிறது...."

"இருந்துட்டுப் போகட்டுமே! எனக்கு ஆட்சேபணையில்லை!"

"அப்படிப்பட்ட பேப்பர்கள் கையில் கிடைத்தவுடன் நீ ஏதுவும் படிக்காமல் அப்படியே சுருட்டி...."

"கொளுத்திவிட வேண்டும். அவ்வளவு தானே?"

"நாசமாய்ப் போச்சு! எல்லாத்தையும் சுருட்டி எம்.டி.யிடம் கொண்டு போய்க் கொடுத்து விடணும்....."

"படித்துப் பார்க்காவிட்டால் சீக்ரெட் பேப்பரா இல்லையா என்பது எப்படி சார் தெரியும்?"

"அது வெரி சிம்பிள். இதோ பார்!"

முகுந்தன்

என்ற சிவம் சட்டைப் பையிலிருந்து சிவப்பு மசிப் பேனாவை எடுத்து, மேஜை மீது கிடந்த பேப்பர்களின் வலது பக்க மூலையில் ஸ்டைலாக அமெரிக்க டாலர் குறியைப் போட்டார். "இப்படி அடையாளம் போட்டிருக்கும். புரிகிறதா?"

மண்டையைப் பலமாக ஆட்டினான். திருப்தியடைந்தவராக வெளியேறினார் சிவம்.

பிறகுதான் கவனித்தான். சிவப்பு மசிப் பேனாவை விட்டு விட்டுப் போயிருந்தார் சிவம். அதை எடுத்து மேலும் சில காகிதங்களில் அவரைப் போலவே டாலர் குறி போட்டுப் பார்த்தான். அதே சமயம் லேகா உள்ளே நுழையவும் எல்லாவற்றையும் மேஜை டிராயருக்குள் போட்டு மூடிவிட்டு, "என்ன மறுபடியும் தேடு படலமா?" என்று வரவேற்றான்.

"ஆமாம்!" என்ற லேகா, காகிதக் குவியலின் அருகில் சென்று இடுப்பில் கைவைத்தபடி, எந்தக் கட்டை இழுக்கலாமென்று யோசிக்கலானாள்.

"ஒன் மினிட்... அந்த மாருதி கார் உங்களுடையதா?"

முதுகில் சாட்டையடி விழுந்ததுபோலச் சட்டென்று திரும்பினாள் லேகா. "என்னது! காரா! கனவுக் கண்டீர்களா என்ன?"

"கண்ணாலே கண்டதைத்தான் சொல்றேன். ஞாயிற்றுக்கிழமை சாயந்தரம் நீங்கள் ரொம்ப ஸ்டைலாகக் கார் ஓட்டிக் கொண்டு போகவில்லை? கார் நம்பர் சொல்லட்டுமா? 9639!"

லேகா ஒருகணம் மருண்டாள். அடியுதட்டைக் கடித்தாள். பிறகு, "இங்கே ஆபீசில் பேச வேண்டாம். அப்புறமாக வெளியில் போய்ப் பேசுவோமே!" என்றாள் மெல்லிய குரலில்.

"நான் தயார்! எங்கே சந்திக்கலாம், சொல்லுங்கள்!"

"ஆபீஸ் டயம் முடிந்த பிறகு, பிருந்தாவன் ஹோட்டல் ஃபேமிலி ரூம்லே சந்திப்போம்!"

அருண் காத்திருந்தான். லேகா வருவதற்குக் கொஞ்சம் லேட்டாகிவிட்டது. அதற்குள் இரண்டு கைவிரல்களிலும் இருந்த நகங்களைச் சுத்தமாகக் கடித்துத் துப்பி விட்டிருந்தான்.

லேகா வந்தாள். முதல் கேள்வியாக, "நீங்கள் என்னைக் காரில் பார்த்ததை ஆபீசில் வேறு யாரிடமும் சொல்லி விட வில்லையே?" என்று கேட்டாள்.

"இதுவரையில் இல்லை...."

"இனிமேலும் சொல்லக் கூடாது. ப்ராமிஸ் செய்து கொடுங்கள்...."

"தலையில் அடித்தா, கையில் அடித்தா?"

"அதெல்லாம் வேண்டாம். வெறும் வார்த்தை போதும்...."

"சரி, ப்ராமிஸ்!"

"நீங்கள் பார்த்தது எங்கள் வீட்டுக் கார் தான்..."

"அப்படியானால் விவசாயக் குடும்பம், வறுமைப் போராட்டம் என்று சொன்னதெல்லாம் ரீல்தானா?"

"70 எம்.எம். ரீல்!"

"எதற்காக அப்படிச் சொன்னீர்கள்?"

"அப்படிச் சொல்லித்தான் ஆபீசில் எல்லாரையும் நம்ப வைத்திருக்கிறேன்...."

"அதுதான் ஏன் என்கிறேன்?"

"எனக்குச் சராகாவில் எப்படியாவது வேலை கிடைக்க வேண்டும் என்பதற்காகத் தான். ஒரு முக்கியமான காரியத்தைச் செய்து முடிப்பதாக ஒப்புக் கொண்டிருக்கிறேன். அதனால்தான் இந்த நாடகம்...."

"சுத்தமாகப் புரியவில்லை மிஸ் லேகா... அதுசரி, நீங்கள் மிஸ் என்பது உண்மைதானா? அல்லது அதுவும் பொய்யா?"

தலையைச் சற்றே தாழ்த்தி, ஓரக் கண்ணால் அவனைப் பார்த்தபடியே, "நான் இந்த நிமிடம் வரையில் மிஸ்தான்!" என்றாள் நாணப் புன்னகையுடன்.

"நீங்கள் இப்படிப் பார்த்து இதே போலச் சிரித்தீர்களானால் எனக்குக் கதை கேட்கிற மூட் போயே போய்விடும்... ஸோ, உங்க நாடகம் பற்றித் தொடருங்கள்!"

தொண்டையைக் கனைத்துக் கொண்டாள் லேகா. "என் அப்பாவும் ஒரு பிஸினஸ் மேன்தான். குறிப்பாகச் சொல்லப் போனால், சராகா பார்மா போலவே அவரும் மருந்து கம்பெனிதான் நடத்துகிறார். தலைவலி, இருமல் இப்படிச் சாதாரண நோய்களுக்கான மருந்துகள், டானிக்குகள் என்று தயாரிக்கிறார். அதிலே போட்டி அதிகம், லாபம் குறைவு. எனவே வேறு யாரும் தயாரிக்காத ஒரு மருந்தைத் தயாரித்து விற்பனை செய்தால் என்ன என்று யோசித்தார். அந்தச் சமயம் பார்த்து எயிட்ஸ் வந்து சேர்ந்தது..."

"எயிட்ஸா? உங்க அப்பாவுக்கா? அடப் பாவமே!"

"சேச்சே! அவருக்கில்லை...."

"அப்படியானால் உங்களுக்கா? கொஞ்சம் தள்ளி உட்காருகிறீர்களா? இஃப் யூ டோண்ட் மைண்ட்!"

"முட்டாள்தனமாகக் குறுக்கே பேசாதிருந்தால் நான் மேலே சொல்கிறேன். இல்லாவிட்டால்....."

பயந்தவன் போலக் கைகட்டி வாய் புதைத்

> அயர்லாந்தைச் சேர்ந்த நீல் மெக்டொனுக் என்பவர் டெலிபோன் டைரக்டரியில் தன்னுடைய பெயர் கடைசிப் பெயராக வர வேண்டும் என்பதற்காகத் தன் பெயரை மாற்றிக் கொண்டார். எப்படி மாற்றிக் கொண்டார் தெரியுமா? 'ZEBEDEE ZZYP' என்று!
>
> தகவல்: கீதாபஞ்சு.
>
> ஆதாரம்: The Great Short Stories



தான் அருண்.

''எயிட்ஸைக் கண்டு எல்லாருமே கதி கலங்கிப்போயிருக்கிறார்களல்லவா? அதைக் குணப்படுத்த ஒரு மருந்தைக் கண்டுபிடித்து விட்டால் ஏகப்பட்ட பணத்தை வாரிக் குவித்து விடலாமென்று நினைத்தார் டாடி. எங்கள் கம்பெனி ஆராய்ச்சிப் பிரிவும், அதற்கான ஆய்வுகளில் தீவிரமாக இறங்கியது. கிட்டத்தட்ட பதினைந்து லட்ச ரூபாய் செலவு செய்த பின்னும், சரியான மருந்தைக் கண்டுபிடிக்கமுடியவில்லை. அப்போது, அதிர்ச்சி தரும் விதத்தில் ஒரு செய்தி கிடைத்தது. வேறொரு கம்பெனி, எயிட்ஸ் நோய்க்கான மருந்தைக் கண்டு பிடித்துவிட்டதாம்! அது....''

''நம்ம சராகாதானே?''

''கரெக்ட்! டாடி இடிந்தே போய்விட்டார் நியூஸைக் கேட்டு.... அவருக்குக் கிடைக்க வேண்டிய புகழ், பணம் எல்லாவற்றையும் இழந்துவிட்டோமே என்று ரொம்ப வருத்தப்பட்டார். இருந்தாலும் துணிச்சலாக ஒரு திட்டம் போட்டார்....''

''என்ன திட்டம்?''

''நிதி வசதிக் குறைவினால், சராகா நிறுவனம் இன்னும் அந்த மருந்தைத் தயாரிக்க ஆரம்பிக்கவில்லை. அவர்களை நாம் முந்திக் கொள்ள வேண்டும் என்று திட்டம் போட்டார். அதற்கு முக்கிய தேவை அந்த மருந்துக்கான ஃபார்முலா. அதைக் கவர்ந்து வரும் பொறுப்பை நான் ஏற்றுக் கொண்டேன்....''

''சரியான கிரிமினல் பரம்பரைதான்!''

''அந்த ஃபார்முலா பேப்பர்கள் இன்னும் ஃபாக்டரிக்குப் போகவில்லை. நம்ம ஹெட் ஆபீசில்தான் இருக்கின்றன. எனவே, நான் ஒரு கதையைச் சொல்லி இங்கே வேலைக்குச் சேர்ந்திருக்கிறேன்....''

''உங்களுக்கும் உங்க அப்பாவுக்கும் துளிக் கூட மூளை கிடையாது என்று சொல்வேன். எவ்வளவு முக்கியமான — ரகசியமான ஃபார்முலா அது! அத்தனை சுலபமாக உங்கள் கையில் சிக்கி விடுமா என்ன?''

''உங்களுக்குத்தான் நம்ம எம்.டி. பாணி பற்றித் தெரியாது... அவர் கொஞ்சம் கிறுக்குத்தனமானவர் என்று நம்ம ஆபீசில் யாரைக் கேட்டாலும் சொல்வார்கள். ரகசியம் என்று தனியே பிரித்து வைத்தால்தான் அதற்குக் குறி வைத்துத் தேடுவார்கள். ரகசியமான காகிதங்களைக் கூடச் சர்வ சாதாரணமாகப் போட்டு வைத்திருந்தால் யாரும் அதைக் கிளறிப் பார்க்க மாட்டார்கள் என்று அடிக்கடி சொல்வாராம்...''

''ஓகோ! இப்போது புரிகிறது நீங்கள் ஃபைலிங் பேப்பர்களுக்கு நடுவே அடிக்கடி வந்து நிற்பதற்கான காரணம்!''

''நிச்சயமாக அந்த ஃபார்முலா பேப்பர்கள் ஏதாவது ஒரு ஃபைலிலோ அல்லது உங்க ரூமிலுள்ள குவியலிலோதான் இருந்தாக வேண்டும். இதுவரையில் என்னிடம் சிக்கவில்லை. ஃபைலிங் செய்வதுதான் உங்கள் முழு நேர வேலை என்பதால் அது உங்கள் பார்வையில் படாமல் இருக்காது. அந்தப் பேப்பர்களை மட்டும் என்னிடம் நீங்கள் எடுத்துக் கொடுத்துவிட்டீர்களானால், மேட்டர் க்ளோஸ்!''

''அதோடு என் வேலையும் க்ளோஸ் ஆகிவிடும்!''

''ப்ளீஸ்! எனக்காக — லேகாவுக்காக — இந்தச் சின்ன உதவி செய்யக் கூடாதா நீங்கள்?''

''லுக் ஹியர்! செய்வதால் எனக்கு என்ன லாபம்?''

''ஏன் இல்லாமல்? டாடியிடம் சொல்லி, கைநிறையப் பணம் வாங்கித் தருகிறேன். அல்லது, எங்கள் கம்பெனியிலேயே ஒரு நல்ல வேலை போட்டுத் தரச் சொல்கிறேன்...''

''அதெல்லாம் தேவையில்லை. நான் உங்களுக்கு உதவுகிற பட்சத்தில் நான் கேட்டதைக் கொடுப்பீர்களா?''

''கேளுங்கள். ஸ்கை இஸ் த லிமிட்... வானளாவிய அளவுக்கு....''

''நிறுத்துங்கள்! வானளாவிய என்ற வார்த்தையைக் கேட்டாலே கொஞ்ச நாளாகக் குலை நடுங்குகிறது. வேணும் தாயே, பேப்பர்கள் முதலில் எனக்குக் கிடைக்கட்டும். அப்புறம் பேரம் பேசுவோம்!''

வாட்ச்சைத் திருப்பி, மணி பார்த்தாள் லேகா. ''நேரமாகிறது. எட்டு மணிக்குள் நான் ஹாஸ்டலில் இருந்தாக வேண்டும்.''

''பழையபடி பொய் சொல்ல ஆரம்பித்து விட்டீர்களா?''

''நோ... நோ.... போடுகிற வேஷத்தைப் பக்காவாகப் போட வேண்டுமென்பதற்காக நான் ஹாஸ்டலில்தான் தங்கியிருக்கிறேன். வீக்—என்டில் மட்டும் டாடியைப் பார்க்க எங்கள் பங்களாவுக்குப் போவேன். காரில் என்னை நீங்கள் பார்த்தது ஞாயிற்றுக்கிழமை தானே!''

''ஓ, ஐஸீ....! சரி, கவலைப்படாமல் போய் வாருங்கள். பள்ளிக்கூடத்தில் சாக்பீஸ் திருடியிருக்கிறேன். காலேஜில் லைப்ரரி புத்தகங்களை அபேஸ் செய்திருக்கிறேன். வேலையில்லாமல் வருஷக் கணக்கில் முடங்கியிருந்த போது வீட்டில் சில்லறை நிறையத் திருடியிருக்கிறேன். அப்போதெல்லாம் கெட்டுப் போகாத என் ஹீரோ இமேஜா ஆபீசில் ஃபார்முலா திருடுவதால் கெட்டுப் போய் விடப் போகிறது! நான் இருக்க பயமேன்!'' என்று லேகாவுக்கு ஆறுதல் சொல்லி, பஸ் ஏற்றிவிட்டான் அருண்.

**ரா**யபுரத்தில் ஒரு பிரும்மாண்டமான காம்பவுண்டுக்குள் தாறுமாறாகச் சில கட்டடங்கள் முளைத்திருந்தன. எல்லாவற்றுக்கும் சராசரி வயது நாற்பதுக்குக் குறையாது. சுண்ணாம்புப் பூச்சிழந்து, காறை பெயர்ந்து, ஆங்காங்கே செங்கற்கள் பல்லிளிக்க, வெளிப்புறத்தில் ஏகத்துக்குத் தூசியும் துரும்பும் மண்டிக் கிடந்தன.

அந்தக் கட்டடங்களுக்கு இருந்த ஒரே ஒரு அந்தஸ்து, அவை சென்னையிலுள்ள பல பெரிய நிறுவனங்களின் கிடங்குகளாக அமைந்

ததுதான். எனவே பகல் முழுவதும்—சமயங்களில் இரவில் கூட — லாரிகள் வந்து நின்று உறுமுவதும், 'தடால்! தடால்!' என்ற ஓசையுடன் சரக்குகள் இறக்கி ஏற்றப்படுவதும், கூச்சலும் கும்மாளமுமாக இருக்கும்.

ஒரு நாள் நள்ளிரவைக் கடந்த ஒரு நேரம். கௌரவமான கம்பெனி ஒன்றின் பெயர்ப் பலகையை நெற்றியில் தாங்கிய ஒரு கட்டடத்தின் இரும்பு ஷட்டர்கள் போடப்பட்டு இரு முனைகளிலும் கனமான பூட்டுக்கள் தொங்க, அருகிலேயே ஒரு ஸ்டூலில் அமர்ந்து பீடி இழுத்துக் கொண்டிருந்தான் இடுப்பில் கத்தி செருகிய ஒரு கூர்க்கா.

ஷட்டர்களுக்குப் பின்னால் —

விஸ்தாரமான ஒரு ஹாலில், மரப்பெட்டிகளுக்கு நடுவே, நாற்காலியில் கால் மேல் கால் போட்டு அமர்ந்திருந்தான் ஓர் இளைஞன். கறுப்புதான் என்றாலும் கவர்ந்திழுக்கும் தன்மை இருந்தது அவனிடம். அவனுக்கு எதிரில் நடுத்தர வயதுக்காரர் ஒருவர் தலைகுனிந்து நின்றிருந்தார்.

"கிடைத்த சந்தர்ப்பத்தைக் கோட்டை விட்டு விட்டீர்களே! சராகா கம்பெனிக்கு அவன் வருவான் என்று தெரிந்துதானே உங்களை அன்று அனுப்பினேன். குறி தவறிவிட்டீர்களே! வெட்கமாயில்லை உங்களுக்கு!" என்று கோபத்தைக் கக்கினான் இளைஞன்.

"மயிரிழையில் தப்பிவிட்டான்...." என்று முணுமுணுப்புக் குரலில் ஏதோ சொல்ல முற்பட்டார் எதிரில் நின்றவர்.

"அது போகட்டும்.... சாயந்தரமே வளசரவாக்கத்தில் அவன் வீட்டுக்குப் போய் நின்றீர்களே — என்ன ஆயிற்று? முழங்காலுக்குக் கீழே காயம் பட்டுக் கொண்டு திரும்பினீர்கள். அவன் — அந்த சத்யா — தப்பிவிட்டானே! அவனைச் சுடத்தான் துப்பில்லை, அவனுடைய டயரியைப் பறிக்கவுமா வக்கில்லை?"

"என்னை நம்புங்கள்.... அவன் என்னைச் சுட்டு விட்டுத் தப்பி ஓடிய பிறகு, அந்த வீடு முழுவதும் தேடிப் பார்த்தேன். ஆனால் டயரி கிடைக்கவில்லை...."

"எப்படிக் கிடைக்கும்? அவன் தன் கையோடு டயரியையும் எடுத்துக் கொண்டல்லவா போய்விடுகிறான்? அவனைத் தீர்த்துக் கட்டினால் தவிர, டயரி நம் கைக்குக் கிடைக்காது!"

"அதற்கும் ஒரு திட்டத்தோடுதான் வந்திருக்கிறேன். அன்று வளசரவாக்கத்தில் சத்யாவைச் சந்தித்துப் பேசியவன் பெயர் அருண். சராகாவில் வேலை பார்க்கிறான் என்று கண்டு பிடித்திருக்கிறேன்...."

"ஆகா! பெரிய கண்டுபிடிப்புத்தான்!"

"அந்த அருணை வைத்தே சத்யாவைத் தொலைத்துக் கட்டுகிறேனா இல்லையா பாருங்கள்!"

கறுப்பு இளைஞன் அலட்சியமாகச் சிரித்தான்.

"இப்படிச் சொல்லி இன்னும் கொஞ்ச நாள் தாக்குப் பிடிக்கலாம் என்று பிளான் போலிருக்கிறது!"

முகம் சிவந்தார் எதிரில் நின்றவர். "இல்லை! இன்னும் பதினைந்தே நாளில் செய்து முடிக்கிறேன்!"

"தவறினால்?"

"நீங்கள் என் உடலைக் கூவத்தில் மிதக்க விடுவீர்கள்... தெரிந்த விஷயம்தானே?"

இளைஞன் ஆமோதிப்பதாகத் தலையாட்டினான்.

(தொடரும்)

## அருள்வாக்கு

மாதா, பிதா, குரு என்று மூன்றை வேதம் சொல்லியிருக்கிறதோ இல்லையோ? அதனால் மாதா, பிதாவைத் தானாக ஒரு புத்திரன் எதிர்த்துக் கொள்ளக் கூடாது என்றாலும், இப்போது நான் குரு என்று பேர் வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கிறவன் — சொல்வதால் வரதக்ஷிணை விஷயத்தில் மட்டும் மாதா பிதாவின் அபிப்ராயம் சாஸ்திரப்படி இல்லாவிட்டால் பிள்ளைகள் அவர்களை எதிர்த்து வாதம், ஸத்யாக்ரஹம் பண்ண வேண்டும்.

இது நம் யுவர்கள், கான்ஸர் மாதிரி நம் சமூகத்தில் புரையோடி அரிக்கிற ஒரு கொடுமையை அகற்றி நம் சமுதாய மறுமலர்ச்சிக்குச் செய்கிற மகத்தான தொண்டாக இருக்கும். நம் மதத்தின் மேன்மையில் உள்ள நம்பிக்கைக்காக மட்டும் இன்றி, மனிதாபிமானக் கடமையாகவும் இதை நம் இளைஞர்கள் செய்ய முன் வர வேண்டும்.



நெடுங்காலப் பயிராகவும், எதிர் காலத்துக்கு உத்தரவாதமாயும் தார்மீகப் பாதுகாப்பாகவும் இருக்கிற விவாகம் என்ற விஷயத்தில் பெரியவர்கள் பார்த்துப் பெண்ணை நிச்சயம் செய்கிறபடிதான் பிள்ளைகள் செய்ய வேண்டும். ஆனால் அந்தப் பயிரையே பூச்சி அரிக்கிற மாதிரி வந்திருக்கிற வரதக்ஷிணைக் கொடுமைக்கு உடந்தையாக இருந்து விடக் கூடாது. அப்பா, அம்மா சொற்படி கேட்பதோடு சமூகத்துக்குச் செய்ய வேண்டிய கடமையும் இருக்கிறதல்லவா? வரதக்ஷிணை கேட்டால் கல்யாணத்துக்குக் கண்டிப்பாக மறுத்து விட வேண்டியது பிள்ளையின் கடமை. இது குடும்பத்துக்கு, மதத்துக்கு, சமூகத்துக்கு, பெண் குலத்துக்கு எல்லாவற்றுக்கும் செய்கிற தொண்டு. இப்படியாக இளைஞர்கள் எல்லாம் சபதம் செய்து அதை நிறைவேற்ற வேண்டும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

அரை மணிநேர நிலைக்கண்ணாடி ஆக்கிரமிப்பைத் தளர்த்திக் கொண்ட மாதங்கி தந்தைக்குஎதிரேவந்துமௌனமாகநின்றாள்.

"அப்பா! ஆர்ட் காலரி வரையிலே போய்ட்டு வர்றேன்."

"உலக அதிசயங்களில் ஒன்று இது —" என்றார் நரசிம்மன்.

"எது உலக அதிசயம்?"

"வெளியில் போகும் போது என்னிடம் சொல்லிக் கொண்டு போகிறாயே, அது!"

"அப்பா, வரவர என் சிறுசிறு செய்கைகளில் எல்லாம் கூட நீ உலக அதிசயங்களைக் காண ஆரம்பித்து விட்டாய். இது எதில் முடியப் போகிறதோ தெரியவில்லை!"

"அதில்லை மாதங்கி, வழக்கங்கள் திடீரென்று மாறும்போது ஏற்படும், அல்லது ஏற்படுத்தும் வியப்புதான் இது."

"அப்பா!"

எதிரே உட்கார்ந்திருந்த மாதங்கி அவர் அருகில் வந்து ஒட்டி உட்கார்ந்தாள்.

"மாதங்கி! எனக்கு உன் அம்மாவைப் போல அத்தனை புத்திசாலித்தனம் கிடையாதுதான். வேலை நேரம் தவிர, வீட்டில் தூங்கும் போதும் நான் ஒரு சிறை அதிகாரியாகவே எல்லா நாட்களும் தூங்கியிருக்கிறேன், எப்படித் தெரியுமா? என் கனவில் கூட சிறைக்கூடங்களும் கைதிகளின் அணிவகுப்பும், அவர்களிடம்நடத்திய விசாரணையும் வரும். கம்பி போட்ட சிறைச்சாலை வராந்தாவில் நடக்கிற மாதிரி இருக்கும்.

# விருந்துக்கு



காலையில் எழுந்ததும் அவசரம் அவசரமாக டியூட்டிக்குப் போவது, தினம் சிறைக் கூடங்களை இன்ஸ்பெக்ட் பண்ண வேண்டியது, சட்டத்தையும் சிறைக் கட்டுப்பாடுகளையும் மீறும் கைதிகளிடம் கடுமையாகவும், பல நேரங்களில் மிகக் கடுமையாகவும் நடந்து கொள்வது, சிறைச்சாலைச் சட்டங்களை மீறும் சிறை அதிகாரிகளின் மேல், இலாகா ரீதியிலான நடவடிக்கை எடுப்பது, இப்படியே காலம் முழுதும் என் உத்தியோகம் கூட ஒரு சிறை வாழ்க்கையாகவே போய்விட்டது. ஆனால் குற்றவாளி, கொலைகாரன் என்கிற வார்த்தைகளுக்கு அப்பாலும், உள்ளேயும்தான் எத்தனை விதமான மனிதர்கள் என்று புரிந்து கொள்ள உதவிய வாழ்க்கையும் கூட...

உன் அம்மாவோ, நீ பள்ளிக்கூடம் போக ஆரம்பித்த போதே இறந்து போய்விட்டாள்.

உனக்குத்தலைவாரிப்பின்னவும், பீரோவிலிருந்து விதம் விதமாக உடைகளை அணிவித்து அழகுபடுத்தவும் அவள் இல்லை: உனக்கு உணவின் ருசி தெரிந்து சுவையுடன் சாப்பிட ஆசைப்படும்போது உனக்குப் பிடித்ததைச் சமைத்துப் போட அவள் இல்லை. இதை அப்படிச் செய், அதை இப்படிச் செய் என்று உன் அருகில் ஒட்டி உரசி நின்று, உனக்குச் சொல்லித் தர அவள் இல்லை. ஆனாலும் நீ நூற்றுக்கு நூறு எல்லாம் தெரிந்த பெண்ணாக வளர்ந்திருக்கிறாய். பல நேரங்களில் உன் அம்மாவை நினைவுபடுத்துகிற

# வந்தவள்...

## மகரிஷி



மாதிரி உன் செய்கைகள் இருக்கின்றன."

மாதங்கி எழுந்து நின்றாள். அப்பாவை மீண்டும் பேச விட்டால், தான் வெளியே போக முடியாது என்பதை உணர்ந்து, "அப்பா நீங்கள் பேச ஆரம்பிக்கும் போது மிக நிதானமாக ஆரம்பித்து மெதுவாக உணர்ச்சிமயமாகி பின்பு அதிலேயே லயித்துப் போய் விடுகிறீர்கள். போறும். இப்பவே நீ எமோஷனலாயிட்டே. இனிமேல் தாங்காது. மீதியைப் பிறகு பேசிக் கொள்ளலாம்... நான் ஏழு மணிக்கு ஆர்ட் காலரியில் மிஸ்டர் சக்கரவர்த்தியைச் சந்திக்க வருவதாகக் கூறியிருக்கிறேன்."

"யாரம்மா அந்தச் சக்கரவர்த்தி?"

"அவர் ஓர் ஓவியச் சக்கரவர்த்தியப்பா."

"ஆர்ட்டிஸ்ட்?"

"பெயிண்டர்."

மாதங்கி ஒரு கலா ரசிகை என்பது அவருக்குத் தெரியும்.

வீட்டில் கூட நிறைய ஓவியங்களை வரைந்து லேமினேஷன் பிரேமில் மாட்டி வைத்திருக்கிறாள்.

இந்தக் காலத்தில் இளம் பெண்களும், வாலிபர்களும் புதுப்புது ரசனையுடன் வளர்கிறார்கள்.

"அப்பா."

புறப்படவிருந்த மாதங்கி தயங்கிக் கொண்டே அப்பாவை அழைத்து விட்டுத் தலையைக் கவிழ்த்துக் கொண்டாள்.

"என்ன மாதங்கி?"

"நாளைக்கு இங்கே ஒரு நண்பரை அழைத்து வர உங்கள் அனுமதி வேண்டும்."

"நண்பரா?"

"ஆமாம்."

"பாய் ஃபிரண்டா?"

"அந்த அர்த்தத்தில் இல்லே. வேறு அர்த்தத்தில்."

"எந்த அர்த்தமாக இருந்தாலும் உனக்கு அனுமதி உண்டு. உன் நடவடிக்கைகளில் எனக்கு அளவற்ற நம்பிக்கையுண்டு, போதுமா?"

"நாளைக்கு மாலே வீட்டில் ஒரு சிறு விருந்து வைத்து அவரை அழைக்க வேண்டும்."

"விருந்தா?"

"ஆமாம். அவரை நான் வெறும் நண்பர் போலவோ, விருந்தினர் போலவோ அழைத்து வரவில்லே. ஓர் எதிர்கால நம்பிக்கையுடன் அழைத்து வருகிறேன். முதன் முதலில் நம் வீட்டிற்கு வரும் அவர் வரவை விசேஷமான தாக்க விரும்புகிறேன்."

நரசிம்மன் ஒரு நிமிஷம் பேச முடியாமல் நின்ருர். பிறகு, அவள் தோளில் கைவைத்து, தழைந்திருந்த அவள் முகத்தை நிமிர்த்திச் சொன்னுர்:

"இவ்விஷயத்தில் உனக்கு நான் என் மனப்பூர்வமான அனுமதியைத் தந்திருக்கிறேன் என்பது உண்மையே. உன்மேல் எனக்குள்ள நம்பிக்கைதான் இதற்குக் காரணம். இந்த நம்பிக்கை சிதிலமடையாமல் பார்த்துக் கொள்."

அவர் அவளே அப்படியே நிற்க வைத்து விட்டு உள்ளே போய்விட்டார்.

**வி**டிந்தது முதலே மாலே நேரத்தை நோக்கி விரைந்து கொணடிருந்தாள் மாதங்கி. அவளுடைய ஒவ்வொரு காரியத்திலும் ஒரு தனிச் சிரத்தை தெரிந்தது. வீட்டை அலங்கரித்தாள். மேஜை விரிப்புகளே மாற்றினுள். ஜன்னலுக்குப் புதிய திரைச்சீலேகளேத் தொங்க விட்டாள். பீரோவிலிருந்து சில புதிய காட்சிப் பொருள்களே எடுத்துத் துடைத்து வைத்தாள்.

நடுநாயகமாகக் காஞ்சிப் பெரியவரின் ஓவியம் ஒன்று காணப்பட்டது.

அந்த ஓவியம் புதியது... அதை நரசிம்மன் வியப்புடன் பார்த்தபோது ஏதோ ஓரிடத்தில் பூவிதழ்களேப் போல ஒரு நினேவிதழ் ஒரு கணம் விரிந்து பின்பு மூடிக் கொண்டது.

வரப் போகிறவன் கலா ரசனேயுள்ளவன். அழகுணர்வு மிக்கவன். இவையுடன் ஆழமான குருபக்தியுள்ளவனுகவும் இருப்பான் போலிருக்கிறது. வரட்டும்... அவளுக்குப் பிடித்திருந்தால் கல்யாண ஏற்பாடுகளே உடனே செய்துவிட வேண்டியதுதான்.

**"அ**ப்பா... அவர் வந்து விட்டார்."

உள்ளே இருந்த நரசிம்மன் மகள் அழைப்பதைக் கேட்டுப் புதியவனே வரவேற்க வாசல் வராந்தாவுக்கு வந்தார்.

சக்கரவர்த்தி புன்னகையுடன் வீட்டின் முன் ஹாலில் நுழைந்தான்.

நல்ல உயரம், சிவப்பான உடம்பு, முகம் சற்று நீளம்தான். தோளில் சிவப்பு நிறத்தில் பை தொங்கிக் கொண்டிருந்தது. தலேக்கேசம் படிமானமில்லாமல் கொஞ்சம் நீளமாக இருந்தது.

நரசிம்மனுக்குக் கைகூப்பிக் கொண்டே உள்ளே வந்தான்.

நரசிம்மன் அவனேயே சில விஞடிகள் அதிர்ச்சியுடன் பார்த்துக் கொண்டிருந்து விட்டு அந்த அதிர்ச்சியை மகளிடம் காட்டிக் கொள்ளாமல் சகஜமாகிவிட முயன்று கொண்டிருந்தார்.

நரசிம்மன் சக்கரவர்த்தியிடம் அதிகம் பேசவில்லே. அவனும் அவரிடம் பேசவில்லே. மாதங்கி மட்டுமே அவனிடம் அதிகம் வார்த்தையாடிக் கொண்டிருந்தாள். அந்த மாலேப் பொழுது அவளுக்கு மட்டுமே எல்லேயற்ற உற்சாகத்தைத் தந்தது.

விருந்து முடிந்து அவர்கள் இருவரிடமும் விடைபெற்றுக் கொண்டு அவன் வெளியேறிய பின்பு மகளின் அறைக்குள் நுழைந்தார், நரசிம்மன்.

"அப்பா, நீங்கள் விருந்தாளியை வரவேற்பதில் அதிக உற்சாகம் காட்டவில்லே. இதை நான் ஆரம்பத்திலிருந்தே கவனித்துக் கொண்டுதானிருக்கிறேன்."

"சக்கரவர்த்தியை உனக்கு எத்தனே நாட்களாகப் பழக்கம்?"

"இரண்டு வருஷங்களாக அறிமுகம்."

"எப்படி அறிமுகம்?"

"அவருடைய 'ஒன்மேன்ஷோ' வொன்றை ஒருமுறை பார்த்தேன். அந்த ஓவியக் கண்காட்சியைப் பார்த்தது முதல் நான் அவருடைய ரசிகையாகி விட்டேன்!"

"நீ அவனுடைய ஓவியங்களுக்கு ரசிகையாக மட்டும் இரு, மாதங்கி. அதற்கு மேல் வேறு எவ்வித மனக்கோட்டைகளேயும் கட்டிக் கொண்டிருக்க வேண்டாம். அவனிடம் தோழமையுடன் இரு. தேவையான உதவிகளேச் செய். அவனிடம் ஓவியம்

---

அவள்: மானேஜர் காலில் விழுந்து கதறி.... அழுது.....

இவள்: பிரமோஷனு, இன்கிரிமெண்டா, லோனு.....?

அவள்: என்னிடம் அவர் கடன் வாங்கிய ஐம்பது ரூபாயைத் திரும்ப வாங்கிட்டேன்!

— உ. ராஜாஜி



கற்றுக் கொள். இன்றுபோல் எத்தனை முறை வேண்டுமானாலும் விருந்துக்கு அழைத்துக் கொண்டு வா. இவைகளைப் பற்றியெல்லாம் நான் உனக்குத் தடையேதும் கூற மாட்டேன்...''

''அப்பா!''

மாதங்கி அதிர்ச்சியுடன் தந்தையை அழைத்தாள்.

''அப்பா நீங்கள் சொன்ன இவைகளுக்கு அப்பால் எங்கள் நட்பு வேறு ஒரு லட்சியத்தை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது.''

''இதுவரை போனது போகட்டும். இனி போக அனுமதிக்க முடியாது'' — அவர் வார்த்தைகளில் தீர்மானமிருந்தது.

''அவரை நான் விரும்புகிறேன்'' — அவளும் தன் எல்லை என்ன என்பதைத் தீர்மானமாகச் சொல்லி விட்டாள்.

''மாதங்கி!''

நரசிம்மன் சினத்துடன் மகளைப் பார்த்தார்.

''அவன் ஒரு கொலையைச் செய்துவிட்டு ஏழாண்டுகள் சிறைத் தண்டனை அனுபவித்தவன். நான் ஒய்வு பெறும் பொழுது அவனுடைய இரண்டாண்டுக் காலச் சிறைத் தண்டனை மீதியிருந்தது. இந்த உண்மை உனக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. அவனும் சொல்லியிருக்க மாட்டான். அவன் ஏன் கொலை செய்தான்? யாரைக் கொலை செய்தான்? என்பதெல்லாம் எனக்கோ, உனக்கோ இன்று முக்கியமல்ல. ஆனால் அவன் ஒரு கொலைகாரன் என்பது நிரூபிக்கப்பட்டுத் தண்டனையும் விதிக்கப்பட்டிருக்கிறது என்கிற ஓர் உண்மை மட்டும் போதும்.''

மாதங்கி அதிக அதிர்ச்சியடையவில்லை.

''நீங்கள் இன்று சொன்ன உண்மை எனக்கு ஆரம்பத்திலேயே தெரியும். அவர் ரொம்ப நாட்கள் வரை என் காதலை ஏற்க மறுத்ததற்கே தாம் ஒரு விடுதலையான கைதி என்பது தான் காரணம். பயந்த சுபாவமுள்ள தம் அண்ணனை ஒருவன் தாக்கி விட்டான் என்பதைக் கண்டு ஏற்பட்ட ஆத்திரத்தில் எதிரியைத் தாக்கியதில் முற்றிலும் எதிர்பாராத விதத்தில் அது ஒரு கொலையில் முடிந்து விட்டதையும், அதற்காக வழங்கப்பட்ட தண்டனையையும் அவர் ஆரம்பத்திலேயே சொல்லி விட்டார்..''

''அப்படிச் சொல்லியுமா நீ...?''

''அப்பா அவர் ரொம்ப நல்லவர், பட்டதாரி. நல்ல கலா ரசிகர், ரொம்ப அமைதியானவர். கடவுள் பக்தி உள்ளவர். குரு பக்தி உள்ளவர். எனக்கு அவரைப் பிடித்து விட்டது. பெரிய ஆர்ட் காலரி வைத்து நடத்துகிறார். நிறைய உதவியாளர்களை வைத்துக் கொண்டு விளம்பர போர்டுகள், சினிமா பானர்கள் போன்ற கமர்ஷியல் வேலைகளையும் செய்கிறார்.''

''ஸ்வாமிகளின் ஓவியமொன்றைக் கொண்டு வந்து நடுக்கூடத்தில் மாட்டிய போதே எனக்குச் சந்தேகம் ஏற்பட்டது. சிறையில் இருக்கும்போதே கூட இவன் செல்லில் அவர் ஓவியத்தை வரைந்து அதைத் தினம் வணங்குவான். ஜெயேந்திரர் சேலம் விஜயத்தின் போது சேலம் மத்தியச் சிறைச்சாலையில் உள்ள கைதிகளுக்கு ஆசி வழங்கச் சென்றிருந்தார். அன்றிலிருந்து இவன் அவருடைய பக்தனாகிவிட்டான். சிறையில் கூட இவன் ரொம்பவும் சாதுவானவன்தான். நான் இருக்கும் வரையில் அவன் பேரில் எவ்விதப் புகாரும் வந்ததில்லை. அவன் நல்லவன்; அமைதியானவன்; ஏதோ சந்தர்ப்ப வசத்தால் கொலை செய்துவிட்டு, சிறைக்கு வந்து விட்டான். அவைகளை யதார்த்த உண்மைகளாக நானும் ஏற்கத் தயார் மாதங்கி... ஆனால்... ஆனால்...''

''எல்லாவற்றையும் யதார்த்த உண்மைகளாக ஏற்க மனமுள்ள உங்களுக்கு அவரை என் வருங்காலத்துணை வராக ஏற்க மனத்தில் இடமில்லை! சிறைச்சாலை ஆண்டு விழா நிகழ்ச்சிகள் வரும்போதெல்லாம் 'கைதிகள் புனர்வாழ்வு வாழ இந்தச் சமுதாயம் இன்னும் கொஞ்சம் பரந்த மனப்பான்மையுடன் மாற வேண்டும். அவர்களும் நம்மைப் போல மனிதர்கள்தான்' என்று நீங்கள் பேசியதைக் கூட அவர் நினைவுபடுத்தினார்... அப்பா அவருக்குப் புனர் வாழ்வு கொடுத்து ரட்சிக்க வேண்டும் என்று நான் நினைக்கவில்லை. சாதாரண மனிதராக எண்ணித்தான் அவரை விரும்புகிறேன்'' என்றாள்.

''அவனை நீ காதலிக்கும் போதே அதற்கான நியாய வர்தங்களையும் தயாரித்து வைத்திருப்பாய் என்பது நான் எதிர்பார்த்ததுதான்'' என்று கூறிவிட்டு எழுந்து வெளியே சென்று விட்டார் நரசிம்மன்.

**ந**ள்ளிரவை நெருங்கும் போது மாதங்கி, தந்தையின் அறைக்குள் நுழைந்தாள்.

மின் விளக்குகளையெல்லாம் அணைத்து விட்டு மங்கிய வெளிச்சத்தில் அவர் தம் அறையில் குறுக்கும் நெடுக்குமாக நடந்து கொண்டிருந்தார்.

''தூங்கவில்லையா?'' மாதங்கி கேட்டாள்.

''நீ தூங்கவில்லையா?'' — அவர் திருப்பிக் கேட்டார்.

''உன்னுடன் பேச வேண்டும். எனக்குத் தூக்கம் வரவில்லை...

''அப்பா...''

''சொல்லு மாதங்கி?''

''நீங்கள் எல்லா உறவினர்களிடமிருந்தும் ஏன் தனித்து வாழ்கிறீர்கள்? அநேகமாகச் சொந்தக்காரர்களின் வீடுகளில் நடக்கும் எந்த விசேஷங்களுக்கும் நீங்கள் போவதில்லை. வீட்டிற்கு வரும் நெருங்கிய உறவினர்களிடம் கூட, மனம் விட்டுப் பேசாமல் வழிப் போக்கர்களிடம் பேசுவது போல் பழகி அனுப்பியிருக்கிறீர்கள். இதற்கெல்லாம் உங்களால் காரணம் சொல்ல முடியுமா? சொல்ல முடியும். ஆனால், நீங்கள் சொல்ல மாட்டீர்கள். என் அம்மாவும் ஒரு கைதியாக இருந்தவள். அவள் விடுதலையான பின் நீங்கள் விவாகம் செய்து கொண்டீர்

கள்...

"ஏதோ ஒரு சந்தர்ப்பத்தில் அந்த நட்பு மலர்ந்துபின்பு அது உங்கள்இருவருக்குள்ளே யே வளர்ந்துவிட்டது. அவள் விடுதலை யாகும் வரை காத்திருந்து பின்பு கல்யாணம் செய்து கொண்டீர்கள். உங்கள் திருமணத் தைச் சமூகம் சாதாரணமானதாக ஏற்க வில்லை. அம்மாவைச் சமூக வட்டத்துக்குள் அனுமதிக்கவில்லை! உங்கள் வாயால் நீங்கள் என்னிடம்இதைச் சொல்லவில்லை. ஆனாலும் இதுதான் உண்மை என்பதைப் பிறர் அரசல் புரசலாகப் பேசியதிலிருந்து நானே தெரிந்து கொண்டேன்."

"மாதங்கி!"

"இப்பொழுது சொல்லுங்கள். அம் மாவை ஒரு கைதி என்று தெரிந்துதானே அவள் விடுதலையான பின்பு பதிவுத் திரு மணம்செய்து கொண்டீர்கள். அவளை மணந் தது தவறு என்று நீங்கள் எண்ணிய துண்டா?"

"நிச்சயமாக இல்லை. அவளை நான் கடைசி வரை நேசித்தேன். இப்பொழுதும் அவளை நேசிக்கிறேன். அவள் நினைவுகளை நேசிக் கிறேன். அந்தச் செடியில் பூத்த ஒரே மலரான உன்னையும் நேசிக்கிறேன்..."

"அப்படியானால் உங்களுக்கொரு நீதி எனக்கொரு நீதியா?"

"மாதங்கி, சமூகத்தின் எதிர்ப்புகளைத் தாங்கிக் கொள்ள எனக்கு மனோதைரியம் இருந்தது. ஆனால், உன் தாயாருக்கு இல்லை. அந்த ஏக்கத்துடனேயே, தாழ்வு மனப்பான் மையில் வாடி, அவள் இறந்து போய்விட் டாள். அம்மாதிரியொரு நிலை உனக்கு வரக் கூடாது என்று பயப்படுகிறேன். எனக்கும் சக்கரவர்த்திமேல் அன்பு உண்டு. நம்பிக்கை உண்டு. அவனை எனக்கு நன்றாகத் தெரியும். இன்றிருக்கிற தைரியம் கடைசி வரையில் நீடிக்கவேண்டும். அப்படிநீடிக்கவில்லையென் றால் உங்களுடைய, எதிர்காலம் ரொம்ப ஏமாற்றமாகப் போய்விடும்..."

"அப்படியொரு நிலைமை நிச்சயமாக வராது. இதில் நாங்கள் இருவருமே தைரிய மாக இருக்கிறோம்" என்றவள்,

"இன்று எல்லா நிலைகளிலுமே வாழ்க்கை என்பது ஒரு சவால்தான். அது எந்த ரூபத்தி லிருந்தால் என்ன? அதை எதிர்கொண்டு வெற்றியடைவதில்தான் மனித ஆற்றலே அடங்கியிருக்கிறது.

"அந்த ஆற்றல் எங்களிருவரிடமும் இருக் கிறது. அம்மா ரொம்பவும் பலவீனப்பட்டுப் போய் இதில் எதிர்நீச்சல் போட முடியாமல் தோற்றுப் போனாள் என்பதற்காக என்னையும் அப்படி நினைத்து விடாதீர்கள்... எல்லோருக்கும் முன்னால் அவருடன் வெற்றி கரமாக வாழ்ந்து காட்டுவேன்... உங்கள் ஆசி மட்டும்தான் எங்களுக்கு வேண் டும்..." என்று முடித்தாள்...

அதற்குப் பின் —

அவரிடம் ஏற்பட்ட மௌனம் அவரது அங்கீகாரமாக அமைந்துவிட்டது!

அலுவலகம்முடிந்ததும்வழக்கம்போல் தலைசீவி, முகம் கழுவிக் கொண்டு வீட்டுக்குப் புறப்படத் தயாரான போதுதான் 'சார்' என்று விஞயகம் என்னை அழைத்தார்.

எனது அலுவலகத்திற்கு வேலை நிமித்தம் அடிக்கடி வந்து போகும் அவரிடம் சமீப காலமாகத்தான் நட்பு ஏற்பட்டிருந்தது. புன்சிரிப்பில் ஆரம்பித்து, சம்பிரதாய விசாரிப்புக்களில் மெள்ள முன்னேறி, ஒரு மாதத்தில் எங்கள் நட்பு சிறிது வலுப்பட்டது. ஒருமுறை அலுவலகத்துக்கு வெளியே சந்தித்த போது, இருவரும் சேர்ந்து ஹோட்டலில் காப்பி அருந்திஞேம். அப்போதுதான் அவர் தமது மகளுக்குத் திருமணம் நிச்சயித்திருந்ததாகவும், அதற்குப் புடைவை, நகை என்று தேவையான பொருட்கள் வாங்கவே வெளியே கிளம்பியதாகவும் கூறினர். கல்யாணம் இரண்டு மாதங்கழித்து ஒரு ஞாயிற்றுக்கிழமை அன்று நடக்க இருப்பதாகத் தெரிவித்தார். நான் கட்டாயம் வரவேண்டும் என்று அந்தச் சமயத்தில் முன்கூட்டியே அழைத்ததோடு, கல்யாணத்திற்கு இரண்டு வாரங்கள் இருக்கையில் பத்திரிகையும் கொண்டு வந்து அலுவலகத்தில் கொடுத்தார்.

விஞயகத்தின் மகள் கல்யாணத்தை நான் அடியோடு மறந்து போய்விட்டிருந்தேன். இப்போது அவரிடம் வசமாக மாட்டிக் கொள்ளப் போகிறேமே என்று ஒரே தர்ம சங்கடமாகப் போய்விட்டது. கல்யாணம் ஞாயிற்றுக்கிழமையன்று நடந்திருந்ததால் அலுவலக வேலை என்று சாக்குப் போக்குச் சொல்ல முடியவில்லை.

விஞயகம் என்னை அணுகினர்: "என்ன இப்படி! கல்யாணத்துக்கு வராம வச்சுட்டீங்க! போனல் போகிறது — இன்றைக்கு மாப்பிள்ளையின் அலுவலக நண்பர்களுக்கு என்று பிரத்தியேகமாக ரிஸப்ஷன் ஏற்பாடு செய்திருக்கேன். இதோ, பக்கத்தில் கலா கல்யாண மண்டபத்தில்தான். உங்களைக் கையோட அழைச்சுக்கிட்டுப் போகலாம்னு தான் வந்தேன். வாங்க சார்! உங்களை மாதிரி நாலு பேர் வந்தால்தானே எனக்கும் கௌரவம்."

இவ்வளவு தூரம் அவர் சொன்னதும் மறுக்கமுடியாமல் அவருடன் புறப்பட்டேன். பேசிக் கொண்டே இருவரும் பக்கத்துத் தெருவிலிருந்த மண்டபம் நோக்கி நடந்தோம்.

அப்போதுதான் விஞயகம் திடீரென்று "ஒரு நிமிடம்" என்று விடைபெற்று அருகே இருந்த ஓட்டுக் கூரை வீட்டினுள் நுழைந்தார். அந்த வீட்டில் வசித்த மாடசாமியும் எனக்குப் பழக்கம்தான் — எனது அலுவலகத்திற்கு அடிக்கடி வந்து போய்க் கொண்டிருப்பவர். வெற்றிலைச் சாறு வழியும் வாயும், எப்போதும் தாடியுடன் கூடிய தாடையும், நுனியில் நூல் தொங்கும் காக்கி உடையுமாக — கார்ப்பரேஷன் துப்புரவுப் பணியாளர் என்று, பார்த்ததுமே சொல்லி விடக் கூடிய தோற்றத்துடன் எப்போதும் காட்சியளிப்பவர் அவர்.

அந்த மாடசாமியின் வீட்டிற்குள்தான் இப்போது நுழைந்திருந்தார் விஞயகம். ஒரே நிமிடத்தில் திரும்பி வெளியே வந்தார். "மாடசாமி ஏற்கெனவே புறப்பட்டு மண்டபத்துக்குப் போய்விட்டாஞம்" என்ருர் முகமெல்லாம்பூரிக்க. மாடசாமி எனக்கு அறிமுகமானவன் என்பது விஞயகத்துக்கு அலுவலகப் பழக்கத்தால் தெரிந்திருந்தது. இருவரும் வேகமாக நடந்து மண்டபத்தை அடைந்தோம்.,

மண்டபத்துள் நுழைந்ததுமே யாரோ விஞயகத்தை அழைத்தார்கள். அவர் என்னை ஒரு நாற்காலியில் உட்கார வைத்து விட்டுப் பின்புறம் போய்விட்டார்.

பொழுது போகாமல், வந்திருந்த சிறு கூட்டத்தைக் கண்களால் துழாவினேன். மாடசாமி முன் வரிசையில் உட்கார்ந்திருந்தது தெரிந்தது. பளிச்சென்று வெள்ளை வேட்டி உடுத்தி அவர் எல்லோருடனும் உட்கார்ந்திருந்ததைப் பார்த்தபோது சந்தோஷமாக இருந்தது. அவருக்குச் சம அந்தஸ்து கொடுத்து, வரவேற்புக்கு அழைத்திருந்த விஞயகத்தின்பால் ஒரு புதிய மரியாதை ஏற்பட்டது. சாதாரணமாக மாடசாமியை ஒத்தவர்கள் இதுபோன்ற விசேஷங்களில் பின் கட்டில் உட்கார்த்தப்பட்டிருப்பார்கள். எல்லோரும் சாப்பிட்ட பிறகு அவர்களுக்குத் தனியே உணவு அளிக்கப்படும். பல சமயங்களில், உணவைப் பரிமாறக் கூட மனமின்றி, வெறுமே பொட்டலமாகக் கட்டிக் கொடுத்து அனுப்பி விடுவார்கள். ஆனல் விஞயகம் வித்தியாசமானவர்... மாடசாமி ஸ்பீக்கரில் ஒலித்த் பாட்டிற்கேற்பத் தாளம் போட்டபடி நடுநாயகமாக உட்கார்ந்திருந்தார்.

மாடசாமியிடம் பேசுவதற்காக நான் எழுந்த அதே நேரத்தில் அவரைக் கூப்பிட்டபடி பின்கட்டிலிருந்து வந்தார் விஞயகம். தொடர்ந்து பின்புறம் கையைக் காட்டி விஞயகம் ஏதோ சொல்ல, மாடசாமியின் முகத்தில் சந்தோஷப் பூச்சு மறைந்தது. அவர் கண்களில் தாங்க முடியாத வலியின் பிரதிபலிப்புத் தெரிந்தது — ஒரே ஒரு கணம்தான் — தன்னைச் சுதாரித்துக் கொண்டு விட்டார் மாடசாமி. கடினமாய் முகத்தை வைத்துக் கொண்டு பின்புறம் நோக்கி நடந்தார். தொடர்ந்து விஞயகம், "ஆள் வருது பார், தண்ணி ஊத்து!" என்று அவரை நோக்கிச் சொன்னபோது, அவர் குரல் அனாவசியமாக ஓங்கி ஒலித்ததாக எனக்குப் பட்டது.

"கல்யாண மண்டபத்துக்குக் காசு மட்டும் வாங்கருனுங்க — அதுக்குத் தகுந்தாற்போல் இடமும் இருக்க வேண்டாமா...? இப்ப மாடசாமி மட்டும் இல்லைன்னு..." என்றபடி விஞயகம் என் அருகே வந்தார். அதற்குள் நான் வாசல் நோக்கிப் புறப்பட்டிருந்தேன்.

"ஏன் இவ்வளவு சீக்கிரம் கிளம்பறீங்க? இருந்து சாப்பிட்டுட்டு..."

"தலைவலி" என்று மட்டும்தான் என்னல் சொல்ல முடிந்தது.

— தினவெங்கரங்கஸ்ரீ

# ஆபத்தான வளைவுகள்

6

"என்ன சார்! ஆபீஸ் வேலையெல்லாம் எப்படி இருக்கு? நெளிவு சுளிவெல்லாம் கத்துக்கிட்டாச்சா?" என்று அக்கறையுடன் விசாரித்தார் சதா.

அன்று அமாவாசையானதால் சதாவின் கடை வெறிச்சோடியிருந்தது. ரேடியோவில் விவித பாரதி கேட்டபடியே எதிரில் வைக்கப்பட்டிருந்த இட்லி — வடைகளைக் கணக்குப் பார்க்காமல் வயிற்றுக்குள் அவர் அனுப்பிக் கொண்டிருக்க, வழக்கம் போலப் பேப்பரைப் புரட்டிக் கொண்டிருந்தான். அருண்.

"கற்றுக் கொள்ள அங்கே எதுவுமில்லே சதா.... அஞ்சாம் கிளாஸ் படிச்ச பையன் கூட என் வேலையைச் செய்வான். படிப்புக்குத் தகுந்த வேலை இல்லை...." என்று வெறுப்புடன் பதில் சொன்னான் அருண்.

"அது கிடக்கட்டும். சம்பளம் நல்லா கொடுக்கிறாங்க இல்லியா! அ(த்)தைப் பாரு சார்!"

"அறுநூறு ரூபாய் சம்பளம்... இன்னும் பதினைஞ்சு நாள்லே முதல் சம்பளம் வாங்குவேன்...."

"சம்பளத்தை வாங்கிக்கினு நேரா வூடு வந்து சேரு சார். அப்பா—அம்மாவை நிக்க வச்சு, அவங்க கால்லே வுழு.... அம்மா கைலே துட்டைக் கொடு.... மனசு குளிர்ந்து போவாங்க...."

"நீங்க அப்படித்தான் செய்தீங்களா?"

"நம்ம தோஸ்துங்க எங்க சார் செய்ய வுட்டானுங்க?" — தட்டிலேயே கை கழுவி, சிவப்புத் துண்டில் துடைத்தார். "தம் மாத்தூண்டு பையனா இருக்கிறப்போ ஒரு கடையிலே வேலைக்குப் போனேன். ஒரு ரூபா சம்பளம். முதல் சம்பளத் துட்டுலே சிநேகிதங்களோடச் சேர்ந்து, குச்சி ஐஸ் வாங்கித் துன்னுட்டேன்.... வெறுங் கையோடதான் வூட்டுக்குப் போனேன்...."

"அப்பா—அம்மா எதுவும் கேட்டுக்கல்லியா....?"

"அம்மா சும்மா இருந்துட்டாங்க. எங்க நயினா, 'கஸ்மாலம்! அந்த ரூபாயை நம்பித் தானேடா நான் சாராயக் கடையிலே கடன் வச்சிட்டு வந்தேன்!'னு சொல்லி, வுட்டார் பார் கன்னத்திலே ஒரு அறை.... ஒரு பல் எகிறிடுச்சு சார்...."

"............"

"பல்வலி வேறே வந்துடுச்சு எனக்கு... மறுநாள் வேலைக்குப் போகல்லே. நான் துடிக்கிறதைப் பார்த்துட்டு; நயினா ஐஸ் கட்டி வாங்கியாந்து கன்னத்திலே வச்சாரு... 'குச்சி ஐஸ் வேணுமா சொல்லுடா'ங்கறாரு...."

"ஆனால் எங்க அப்பா ஒரு வறட்டு மனுஷர், சதா.... பாசம், நேசம் எதையும் எதிர்பார்க்க முடியாது...."

"அப்படிச் சொல்லாதே சார்.... எல்லாப் புள்ளைங்களுக்கும் அப்படித்தான் தோணும். ஒரு தகப்பனைப் புரிஞ்சுக்கிடணும்னா, நீயும் தகப்பனாகணும்..." என்ற சதா சற்று நேரம் மௌனமாக இருந்தார். "அது போகட்டும். உங்கிட்டே இன்னொரு விஷயம் சொல்லணும்...."

"சொல்லுங்க."

"உங்கூட நிறையப் பொண்ணுங்களும் வேலை செய்யும்.... அதுங்ககிட்டே ஜாக்கிரதையா நடந்துக்க சார்...."

"எதுக்கு இப்படித் திடீர்னு உபதேசம் பண்றீங்க?"

"எனக்குத் தெரிஞ்சு நிறைய ஆளுங்க ஆபீஸ்லேகூட வேலை பார்க்கிற பொண்ணுங்களாலே வம்புலே மாட்டியிருக்காங்க. அதைத் தொட்டுச் சொல்றேன்..... 'ஐயோ பாவம்'னு இரக்கப்பட்டு, ஒரு பொண்ணுக்கு உதவி செய்தாரு சீ(த்)தாராமன்னு ஒருத்தர்... நம்ம கடைக்குக் கூட வருவாரு.... நீ பார்த்திருப்பியே சார்?"

"இல்லை.... நான் பார்த்ததில்லை...."

"அக்கா கல்யாணத்துக்குப் பணம் கொடுங்கன்னு அது கேட்டிருக்கு.... இந்தாளுக்கு இந்தப் பொண்ணு மேலே ஒரு இது.... அதனாலே என்ன பண்ணிட்டாரு, ஆபீஸ் பணத்திலே கை வச்சிட்டாரு.... அந்தப் பொண்ணு இன்னாடான்னா, தன் எதிர் வூட்டுப் பையனோட ஓடிப் போயிடுச்சு...."

"அடடே!"

"நம்மாளு மாட்டிக்கினாரு.... சீட்டைக் கிழிச்சு ந(ய்)யா பைசா கையிலே கொடுக்காம, வெளியே அனுப்பிட்டாங்க. இப்ப பெரியமேட்டிலே ஒரு பாய் கிட்டக் கணக்கெழுதறாரு.... நம்ம கடைக்கு வந்தாரா

முகுந்தன்

காட்டறேன் பாரேன்....''

சுவர்க் கடிகாரத்தைப் பார்த்து, பேப்பரை மடித்து வைத்தான் அருண். ''டயமாயிட்டுது சதா.... குளிச்சு, டிபன் சாப்பிட்டு, ஆபீஸ் போகணும்....'' என்றபடி எழுந்து கொண்டான்.

வீடு திரும்பும்வரையில் சதா சொன்னது தனக்கு மறைமுகமாக அளிக்கப்படும் எச்சரிக்கையோ என்ற சிறு உறுத்தல் அவனுக்கு இருந்தது. ஆனாலும், லேகாவுக்குக் கொடுத்த வாக்குப்படி, ஃபார்முலாவைத்தேடி (திருடி)த் தருவது புத்திசாலித்தனமா, வடிகட்டிய முட்டாள்தனமா என்றெல்லாம் அதிகமாக யோசிக்கவில்லை.

சராகா நிறுவனமோ அந்த மருந்தைத் தயாரிக்கத் தொடங்கவில்லை. அதற்கு இன்னும் எத்தனை காலம் ஆகுமோ? லேகாவின் தகப்பனுரோ அதை உடனே தயாரிக்கத் துடித்துக்கொண்டிருக்கிறுர். அவருக்கு உதவுவதில் என்ன தப்பு?

விட்டுத் தள்ளு சதாவை!

தன் வேலையில் அதிகப்படியாகச் சுறுசுறுப்புக் காட்டத் தொடங்கினன் அருண். குப்பையைக் கிளறுவதற்கு முன்பு, ஏற்கெனவே ஏதாவது ஒரு ஃபைலில் அந்த ஃபார்முலா இடம் பெற்றிருக்கலாமோ என்ற சந்தேகம் எழ.... தன் அறையிலிருந்த ஃபைலிங் காபினெட்களைக் குடைந்து பார்த்தான்.

பலனில்லை.

இனி வேறு வழியில்லை. மானேஜரிடமே கேட்டு விடுவது என்று தீர்மானித்தான்.

அவன் நெருங்கிய நேரம், மானேஜர் சிவம் ஏகக் கடுப்பில் இருந்தார். அதற்கு ஒரு சிறிய பின்னணி இருந்தது.

அன்று காலை மானேஜரை எம்.டி. பாணி அழைத்தார். ''சிவம்! ரொம்பப் பிஸியாக இருக்கிறீர்களா?''

''ஆமாம்'' என்ருல், ''அப்படி என்ன பெரிசாகக் கிழிக்கிறீர்?'' என்பார். 'இல்லை' என்ருலோ, ''நினேச்சேன். நம்ம ஆபீசுக்கு மானேஜர் போஸ்டே தண்டம்!'' என்று தீர்ப்பு வழங்குவார் பாணி.

எனவே பேசாமல் நின்ற சிவத்திடம், ''எனக்காக ஒரு அரை மணி நேரம் வெளியிலே போய் வர முடியுமா?''

''ஓ. எஸ்!''

''குண்டுப் பையனுக்குப் பிஸ்கெட் இல்லையாம்... பங்களாவிலிருந்து போன் வந்தது. ஆபீஸ் காரை எடுத்துக் கொண்டு போய், நாலு பாக்கெட் பிஸ்கெட் வாங்கி வாருங்களேன்!''

துள்ளிக் குதித்துக்கொண்டு வெளியேறிய சிவம், சற்று நேரத்துக்கெல்லாம் உயர் ரக பிஸ்கெட் பாக்கெட்டுகள் நான்கைப் பவ்விய





*அமைச்சர்: மத்திய அரசிடம் வறட்சி நிவாரண நிதிக் குப் பணம் கேட்டு அறிக்கை சமர்ப்பிக்கப் போனோம். அந்தச் சமயம் பார்த்துப் பலமா மழை பிடிச்சுக்கிட்டு, கொட்டித் தீர்த்திடுச்சு....*

*நண்பர்: அடாடா! அப்ப உங்க முயற்சி வீணாயிடுச் சுன்னு சொல்லுங்க!*

*அமைச்சர்: விடுவோமா? வெள்ள நிவர்ரண நிதிக் குப் பணம் தேவைன்னு அறிக்கையைத் திருத்தி எழுதிக் கொடுத்துட்டோம்!*

— *தரஜா*

மாகப் பாணியின் மேஜை மீது வைத்தார்.

பாணி முறைத்தார். விறைத்தார். "என் னய்யா இதெல்லாம்?"

"இது பைனாப்பிள் க்ரீம், இது ஆரஞ்ச் க்ரீம், இது போர்பான்..."

"எதுக்காக வாங்கினீர் இதையெல் லாம்?"

திகைத்தார் சிவம். "நீங்கதானே குண்டுப் பையன் சாப்பிடப் பிஸ்கெட் இல்லை என் றீர்கள்?"

"இதையெல்லாம் நீரும் நானும் தின்ன லாம். குண்டுப் பையன் சாப்பிடுவானுய்யா?"

"ஏன் சார்? சாப்பிட மாட்டானு?"

"நீர் ஒரு வேலை செய்யும்.... பங்களா வுக்குப் போய், குண்டுப் பையனுக்கு இதைக் கொடுத்துப் பாரும். அவன் என்ன பண் ருன் என்பதை என்னிடம் வந்து சொல் லும்!"

தப்பித் தவறி மனைவி நாகலட்சுமியின் முகத்தில் அன்று விழித்ததை நொந்து கொண்டே, பாணியின் பங்களாவுக்குப் போனுர் சிவம்.

பங்களா வேலைக்காரனிடம், "முதலாளி அனுப்பினுர். குண்டுப் பையனுக்குப் பிஸ் கெட் கொண்டு வந்திருக்கிறேன்!" என்ற தும், அவுட் ஹவுஸ் பக்கம் அழைத்துச் சென்ருன். கதவைத் திறந்து, "போங்க சார்! உள்ளே குண்டுப் பையன் விளையாடிக்கிட் டிருக்கான்!" என்று சொல்லி, வாபஸா ஞன்.

சிவம் உள்ளே நுழைந்தவுடனேயே, "வள்ள்! வள்ள்! வர்ர்! வர்ர்!" என்று வர வேற்றபடியே நாலுகால் பாய்ச்சலில் வந்து, சிவத்தைப் பகல் திருடனென்று நினைத்துத் தாவிய போதுதான், குண்டுப் பையன் என் பது அசல் அல்சேஷனின் செல்லப் பெயர் என்ற ஞானம் பிறந்தது.

ஆனுல் காலங் கடந்த ஞானம்.

ஏனெனில் குண்டுப் பையன் பாய்ந்த வேகத்தில், தென்னந் துடைப்பத்தால் அடி வாங்கிய கரப்பான் பூச்சி போல இசகுபிச காக மல்லாந்து விழுந்து விட்டார் சிவம்.

எடுத்த எடுப்பிலேயே எதிரியை வீழ்த்தி விட்ட பெருமிதத்துடன் குண்டுப் பையன் சிவத்தை நெருங்கவும், 'சிவமாக நுழைந் தோம்; சவமாகத்தான் வெளியேறப் போகி ரோம்' என்ற பயத்தில் சப்த நாடியும் ஒடுங்க, சித்தம் கலங்க, சத்தமின்றிப் படுத்துக் கிடந்தார்.

குண்டுப் பையன் மானேஜரின் ஐந்தடி நாலங்குல உடலில் எந்தப் பகுதி ருசியானது என்பதைத் தெரிந்து கொண்டு, அதை முத லில் ருசி பார்க்கவும், முடிந்தால் தனியே எடுத்து இரண்டு—மூன்று நாள் டின்னருக் கென்று வைத்துக் கொள்ளவும் விரும்பியது போல அவரை ஒட்டுமொத்தமாக முகர்ந்து பார்த்தது.

சிவத்தின் கழுத்துப் பகுதியில், கோலி சோடாவின் கண்ணுடிக் குண்டு போலக் குரல்வளை மேலும் கீழும் ஏறி இறங்குவதைக் கண்டு குஷி பிறந்த குண்டுப் பையன், 'கண்டேன் தொண்டையை!' என்று பகி ரங்கமாக நாய் — மொழியில் அறிவித்து விட்டு, முழுப் பலாப் பழத்தில் துண்டு போட்டுக் காட்டும் பழக்காரனின் ஆர்வத் துடன் பற்களைப் பதிக்க முற்படுகையில் —

"அம்பிகே! காப்பாற்று!" என்று இஷ்ட தெய்வத்துக்கு லைட்னிங்—கால் போட முற் பட்ட சிவம், "அம்பிகே!" என்பதற்கு மேல் அலற முடியாமல் திணற —

ஹை—ஹீல்ஸ் சப்திக்க, காட்சிக்குள் நுழைந்தாள் ஒரு கவர்ச்சிக் கன்னி. "ஏ குண்டுப் பையா! கம் ஹியர்!" என்று அவள் ஓர் அதட்டல் போடவும், வாய்க்கு எட்டியது வயிற்றுக்கு எட்டாத ஏமாற்றத்துடன் சிவத்தை விடுவித்து, அவளது காலருகே வாலைக் குழைத்துக் கொண்டு போய் நின்றது குண்டுப் பையன்.

சிவம் சட்டென்று எழுந்தார். தூசு தட்டிக் கொண்டார். எந்த உறுப்பும் களண்டு போய் விடவில்லைஎன்றுஉறுதிசெய்துகொண்டார். ஒரு மூலையில் விழுந்திருந்த மூக்குக் கண்ணுடி யை எடுத்து மாட்டிக் கொண்டார். அந்தக் கன்னியைப் பார்த்துப் பெரிசாக ஒரு கும் பிடு போட்டார். "அம்பிகே என்று அலறி னேன்.... தெய்வம் போல வந்து நின்று காப் பாற்றினீர்கள்!"

"என் பெயர் அம்பிகாதான் அங்க்கிள்... யாரோ கூப்பிட்ட மாதிரி இருந்தது. அத ஞல்தான் ஓடி வந்தேன்... ஆமாம், நீங்க யாரு?"

"நான் சராகா ஆபீஸ் மானேஜர். பெயர்: சிவம். குண்டுப் பையனுக்குப் பிஸ்கெட் கொடுத்து விட்டு வா என்று எம்.டி. சொல்லி யனுப்பினுர். நான் என்ன இழவைக் கண் டேன்....?"

சிதறிக் கிடந்த பிஸ்கெட் பாக்கெட்டு களைப் பார்த்துவிட்டு, "குண்டுப் பையன் இதைத் தீண்டக் கூட மாட்டானே!" என்று



## கஞ்சூர்!

''புது ஆபீஸர் ரொம்ப கஞ்சூர் பேர் வழி.''

''ஓகோ, லஞ்சம் வாங்க மாட்டா ராமா?''

''இல்லே, ரேட்டை நல்ல பயங்கரமா உயர்த்திட்டார்!''

— கீழை அ. கதிர்வேல்

சிரித்தாள் அம்பிகா.

அப்போதுதான் அவளை நன்ருகக் கவனித்தார் சிவம். பால், தயிர், வெண்ணெய், நெய், சீஸ், ஐஸ்க்ரீம் இவற்றையே சாப்பிட்டு வளர்ந்தவள் போல அம்பிகாவின் தோற்றத்தில் பளபளப்பு, வழவழப்பு.

அந்த அசத்துகிற அழகில் ஆணவத்தின் சாயலும் கொஞ்சம் கலந்திருப்பது போலத் தோன்றியது. 'அவள் எப்படிப்பட்டவளாக இருந்தால் நமக்கென்ன? சமயத்திலே வந்து உயிரைக் காப்பாற்றினுளே!' என்ற நன்றியுணர்வே மேலோங்கியது.

''பாவம் நீங்கள்! மரமா உங்களை இந்த வேலைக்கு ஏவியிருக்கக் கூடாது... நாய் பிஸ்கெட்தான் வேண்டும் என்ருவது சொல்லியிருக்கலாம்.... டீஸ் பண்ணுகிற மாதிரிச் செய்துவிட்டாரே....! பிஸ்கெட் விஷயம் நான் பார்த்துக் கொள்கிறேன்... மாமாவிடம் சொல்லி விடுங்கள்!''

மனைவி நாகலட்சுமியின் முகத்தில்விழித்ததால் நாய்க்கு விருந்தாகாமல் தப்பிப் பிழைத்தோம் போலிருக்கிறது என்ற திருப்தியுடன் ஆபீஸ் திரும்பி, பாணியிடம் நடந்ததையெல்லாம் விவரித்தார் சிவம்.

பாணி சட்டென்று போனை எடுத்தார். பங்களாவில் மனைவியுடன் பேசினுர்: ''நம்ம குண்டுப் பையன், மானேஜரைக் கீழே தள்ளிட்டானுமே! அவனுக்குக் காலில் ஏதாவது அடி, கிடி பட்டிருக்கிறதா பார்.... பட்டிருந்தால் வெட் விச்வேச்வரனிடம் கூட்டிக் கொண்டு போ!''

பாணியின் மீது பாய்ந்து குதற வேண்டும் போலிருந்த வெறியை வெறுப்பாக மாற்றிக் கொண்டு,சிவம் ஸீட்டில் வந்து உட்கார்ந்த வேகத்தில் நெருங்கினுன் அருண்.

''எங்கேய்யா வந்தே?'' — 'வள் வள் வள்!'

''கான்ஃபிடென்ஷியல் ஃபைல்கள் என்று தனியாக ஏதாவது இருக்கிறதா சார்?''

''பாதிக்குப் பாதி அந்த இழவு ஃபைல்கள்தான்.... உனக்கு என்ன வேணும்?''

''அதையெல்லாம் நான் பார்க்கணுமே சார்!''

'எதற்காக? நீ என்ன தேடப் போகிருய்? அதெல்லாம் பார்க்க முடியாது!' — இப்படி ஏதாவது ஒரு பதிலைத்தான் அருண் எதிர் பார்த்தான்.

அவனே பிரமிக்கும்படியாக ஒரு சாவிக் கொத்தை எடுத்துக் கொடுத்தார் மானேஜர் சிவம். வலது பக்கம் இருந்த ஒரு ஃபைலிங் காபினெட்டைச் சுட்டிக் காட்டினுர்:

''என்ன வேண்டுமோ பார்த்துக் கொள்... நீ வேறு என் உசிரை எடுக்காதே!''

ஐந்து நட்சத்திர ஹோட்டல் மயூரா எப்போதும் போலக் கலகலப்பாக இருந்தது.

விஸ்தாரமான போர்ட்டிகோவில் ஓசைப் படாமல் வந்து நின்ற பென்ஸ் காரிலிருந்து கம்பீரமாக இறங்கினுர் ஸஃபாரி சூட் அணிந்த நடுத்தர வயதுக்காரர் ஒருவர்.

டவாலி 'குட்மார்னிங்' சொல்லிக் கண்ணடிக் கதவைத் திறந்துவிட, காரிலிருந்து நான்கு பெட்டிகளை எடுத்துக் கொண்டு 'பேரர்' பின்தொடர, ரிஸப்ஷனுக்கு வந்தார்.

ரிஸர்வேஷனைச் சரிபார்த்துக் கொண்டு, லிஃப்டை நோக்கி நடந்தார். 'பேரர்' பின் தொடர்கிருனு என்று ஓரக் கண்ணுல் உறுதிப் படுத்திக் கொண்டார்.

நான்காவது மாடியில் அறைக்குள் நுழைந்தவுடன் ஒரு சோபாவில் உட்கார்ந்தார் ஸஃபாரி. சில செகண்டுகள் இடைவெளிக்குப் பின் கதவைத் தட்டிவிட்டு உள்ளே வந்த 'பேரர்' பெட்டிகளை வரிசையாக வைத்துவிட்டு வெளியேறினுன்.

கதவைத் தாளிட்டார் ஸஃபாரி. விமானக் கம்பெனிகளின் ஸ்டிக்கர்களைத் தாங்கிய பெட்டிகளை ஒதுக்கிவிட்டு, நான்காவதாக இருந்த செந்நிற எகோலாக் பெட்டியைத் தூக்கிக் கட்டில் மீது வைத்து, மெதுவாக விஸில் செய்தவாறே திறந்தார்.

ஒருகணம் அவரது இதயத் துடிப்பு நின்றே போனது!

பெட்டிக்குள் அவர் எதிர்பார்த்த பொருளுக்குப் பதிலாக, ரிப்பன் போலக் கிழிக்கப் பட்ட காகிதங்கள் அவரைப் பார்த்துச் சிரித்தன.

ஆத்திரத்துடனும் அவசரத்துடனும் போனை நெருங்கி ஸஃபாரி பாய்ந்த அதே வேளையில் —

மயூராவின் 'சர்வீஸ் என்ட்ரன்ஸ்' வழியாக வெளியேறிய ஓர் ஆட்டோவில் சத்யா உட்கார்ந்திருந்தான் குறுஞ்சிரிப்புடன்.

ஆட்டோவின் ஸீட்டுக்குப் பின்னுலிருந்த இடைவெளியில் ஒரு சிவப்பு நிற எகோலாக் பெட்டி பத்திரமாகப் பதுங்கியிருந்தது!

(தொடரும்)



# “சார்... ரேஷன் கார்டு...!”

“ஆமாம்... ஒரு ரேஷன் கார்டு வாங்கத் துப்பு இல்லை, நீங்களும்... நடக்கறீங்க, ஆறு மாசமா வீட்டுக்கும் ரேஷன் ஆபீஸுக்கும்... நான் அந்த வீடு... இந்த வீடுன்னு... கையைக் காலைப் புடிச்சுக் கார்டு வாங்கி, மண்ணெண்ணெய் வாங்கிச் சமையல் பண்ணிக்கிட்டிருக்கேன்... இதுல நீங்க அதுல உப்புல்ல, இதுல உப்பில்லைன்னுட்டு.”

அவன் இன்று — ரேஷன் ஆபீஸுக்கு வந்து இ—4 எழுத்தர் முன் நின்ற போதும், இவனை அவர் ரொம்ப நேரம் கண்டுகொண்டதாகவே காட்டிக் கொள்ளாத போதும் — காலையில் வீட்டில் நடந்த நிகழ்ச்சி அவன் மனத்தில் நிழலாடியது. சாப்பிடும் போது எதிலேயோ உப்பில்லையென்று இவன் சொல்லப் போய்; அவன் மனைவி கன்னத்தில் இடிக்காத குறையாய் — உப்புக்கு அவன் துப்பைச்சுட்டிக்காட்டிப்பேச,துப்பு இல்லாதவனுக்கு உப்பு எதற்கென்று எண்ணி உப்பில்லாமலேயே சாப்பிட்டு முடித்திருந்தான்.

கண்டு கொள்ளாத எழுத்தரைக் காண வைக்க, ‘சார்’ என்று விளித்த போது, எழுத்தர் நிமிர்ந்து,பின் தலையைக் கவிழ்ந்து கொண்டார்.

இந்த ஆறுமாத நடையில் இவன் குரலும் அவருக்குப் பரிச்சயம் ஆகியிருக்க வேண்டும்.

மறுபடியும் இவன் ‘சார்’ என அழைத்த போது — “என்னய்யா” — என மிதப்போடு குரல் வெளிவந்தது.

“சார்... நான் ஆறு மாசமா அலையறேன். பார்த்து எப்படியாவது தயவு பண்ணுங்க” என்று அவர் தயவுக்கு இவன் வரம் கேட்டான்.

பாரிஜாதன்



''டைப்பிஸ்ட் வேலைக்கு மனு கொடுத்திருக்கீங்களே, உங்க டைப்பிங் வேகம் என்ன?''

''நிமிஷத்துக்குப் பதினெட்டு தப்பு!''

— குத்தாலம் அபிதா

''அதுக்கு நான் என்னய்யா பண்ண முடியும்... தேவைன்னு வந்துதான் ஆகணும்... அலைஞ்சுதான் ஆகணும்'' — வெகுகுளிர்ச்சியாகக் கூறினார் எழுத்தர்.

''அப்ளிகேஷன் கொடுக்கிறப்ப ரேஷன் கார்டு ஸ்டாக் இல்லை... பிரிண்ட் ஆகி வரணும், மூணு மாசம் கழிச்சு வாங்கன்னீங்க... இப்ப ஆறு மாசம் ஆச்சு சார்... அப்ப இருந்து நடந்துக்கிட்டிருக்கேன் சார்...''

இப்பொழுது குளிர்ச்சி சூடாக மாறி எழுத்தருக்குக் கோபம் வந்தது.

''ஆமாம்... சொன்னேன்... யாருய்யா இல்லைன்னு சொன்னது... நீங்க ஒருத்தர் தானா? எங்களுக்கு வேறே வேலை இல்லையா? உங்கபேப்பர்ஹெட்கிளார்க்கிட்டேயிருக்கு.. போங்க அங்கே போய்ப் பார்த்துக்கங்க..''

சின்னஞ்சிறிய சிறுமிகளிடையே தாவணி போட்ட பெண்ணைப் போல் — அங்கிருந்த விரிப்பில்லா மேஜைகளில் விரிப்பு வைத்துத் தனித்துக் காட்டிய — தலைமை எழுத்தர் என்ற ஹெட்கிளார்க் மேஜை முன் நின்றான் அவன்.

அவரைச் சுற்றி ரேஷன் கடை ஆட்கள் — உடல் கனத்தோடும் கையில் இருக்கும் பையில் கனத்தோடும், விரல்களில் மோதிரங்களின் கனத்தோடும் நின்று கொண்டிருந்தார்கள்.

இவன் சிறிதுநேரம் சும்மா நின்றான்.

''சார் என் பெயர் இராமசாமி... ரேஷன் கார்டு விஷயமா வந்திருக்கேன்'' என்றான் மெள்ள.

இப்பொழுதுதான் ஹெட்கிளார்க் அவனை ஏறிட்டுப் பார்த்தார்.

பார்வையில் உறுமல் இருந்தது — ஆமாம், பார்வையிலேயே உறுமல்!

''யெஸ்... என்ன சொன்னீங்க?''

''என் பெயர் இராமசாமி சார்... ரேஷன் கார்டு...''

''எங்கே வேலை பார்க்கிறீங்க?'' ஒரு பிரைவேட் கம்பெனியின் பெயரைக் கூறினான்.

''எங்கே குடியிருக்கீங்க?''

''ஒண்டிப்புதூர் — ஐந்தாம் நம்பர் வீதி.''

ஹெட்கிளார்க்விசாரித்தபடியே அவனது பேப்பரை மேஜை மீதுள்ள பைல்களில் துழாவிக் கையில் வைத்துக் கொண்டார்.

''அப்ளிகேஷன் கொடுத்து ஆறு மாசம் ஆச்சு சார்!''

''அப்ப... நாங்கதான் சரியா வேலை பார்க்காமல் டிலே பண்றோம்னு சொல்றீங்க, அப்படித்தானே?''

''சார்... சார்... அந்த அர்த்தத்திலே சொல்லலை சார்...'' — கிடைக்கிற கார்டு எங்கே கிடைக்காமல் போய் விடுமோ எனப் பதறினான்.

''இதுக்கு முன்னால எங்கேயிருந்தீங்க?''

''மதுரையில் சார்.''

''அங்கே உங்களுக்குக் கார்டு இருந்திருக்குமே... என்னாச்சு?''

''அந்தக் கார்டை 'சரண்டர்' பண்ணி சர்டிபிகேட் வாங்கிக் கொடுத்திருக்கேன். அப்ளிகேஷன் கொடுக்கிறப்பவே அதையும் சேர்த்துக் கொடுத்திருக்கேன் சார்.''

''இல்லையே... அப்ளிகேஷனோடை இல்லை.''

''சார்... கொடுத்திருக்கேன்'' — அவன் பதில் பதற்றமாகவும், அழுத்தமாகவும் வந்தது.

தலைமை எழுத்தர் — தன்னை மாவட்ட வழங்கல் அதிகாரியாகவே அதாவது டிஸ்டிரிக்ட் சப்ளை ஆ பீ ச ர ா க வே பாவித்துக் கொண்டார் இப்பொழுது. அதிகாரமும் பந்தாவும் வந்து விட்டன.. அவனை முறைத்தார். பின் அதட்டலான குரலில் —

''மிஸ்டர்... இதில் இல்லை.... அதனால் நீங்க புதுசா ரேஷன் கார்டு கேட்கிற மாதிரி தான் அப்ளிகேஷன் எழுதிக் கொடுக்கணும். ஆனால்... அதுலேயும் சிக்கல்... ஏன்னா... புதுக்கார்டு இப்ப 'இஷ்யூ' பண்ணக் கூடாதுன்னு சீஃப் செக்ரட்டரி ஜி. ஓ. போட்டிருக்கார்... டென் டேஸ் ஆச்சு வந்து... இல்லைன்னா நீங்க மதுரை போய் ஒரு டூப்ளிகேட் சரண்டர் சர்டிபிகேட் வாங்கிட்டு வந்துருங்க.''

''சார்... நான் அப்ளிகேஷன் கொடுத்தே ஆறு மாசமாச்சு. சரண்டர் சர்டிபிகேட் இணைச்சுத்தான் கொடுத்தேன்... நீங்க இல்லைங்கறீங்க. என்ன சார் அர்த்தம்? இல்லை... மதுரை போய் சரண்டர் சர்டிபிகேட் வாங்கியாறதுன்னா நடக்கிற காரியமா...? சொல்லுங்க சார்.''

அவனுக்குக் கோபம் வந்தது. வார்த்தைகள் உஷ்ணத்தில் தோய்ந்து வந்தன.

''மிஸ்டர், நான் இவ்வளவுதான் சொல்ல முடியும். தேவைன்னா நீங்க போய் ஆபீசரைப் பார்த்துக்கங்க.''

அஸிஸ்டெண்ட் — ரேஷனிங் ஆபீசர் —

ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். இவன் வந்ததாகவே காட்டிக் கொள்ளவில்லை.

இவன் அருகில் சென்று மேஜையை உரசிய படி, ஒரு கையில் மேஜையின் விளிம்பைப் பற்றிய படியும் ஒரு கையை மேஜையின் ஓரத்தில் ஊன்றிய படியும் நின்றான்.

"சார்! என் பெயர் இராமசாமி. ரேஷன் கார்டுக்காக வந்திருக்கேன்" என்று கூறிய போது அவனைக் கீழிலிருந்து மேல்வரை ஒரு பார்வை பார்த்தார். அந்தப் பார்வையின் வெப்பத்தில் அவன் எரிந்திருக்க வேண்டும்!

இவனுக்கு ஒன்றும் புரியவில்லை. நான் ரேஷன் கார்டுதானே கேட்டேன். அதற்கு ஏன் இவர் இந்த முறை முறைக்கிறார் என்று நினைத்தவனாய் —

"சார்! என் பெயர் இராமசாமி. ரேஷன் கார்டுக்காக வந்திருக்கேன்" — என மீண்டும் கூறினான்.

அவர் மறுபடியும் முறைத்து — "மிஸ்டர் முதல்லே மேனர்ஸ் தெரிஞ்சுக்கோ... அப்புறம் கார்டு கேட்கலாம். முதல்லே மேஜையிலிருந்து கையை எடுத்துட்டுப் பேசுய்யா... நீ யார்கிட்டே பேசறேன்னு தெரியுதா...?" என ஒரு கடிகடித்து அவரது உத்தியோகத்தை அவனுக்கு நினைவூட்டினார்.

அவன் விருட்டென்று கையை எடுத்து, மார்புக்குக் குறுக்காகக் கட்டிக் கொண்டு, பின் பணிவாகப் பேசினான்.

இப்பொழுது அவருக்கு ரொம்பவும் திருப்தியாக இருந்திருக்க வேண்டும்.

"சொல்லுங்க... என்ன வேணும்?" — என்றார்.

"சார்... என் பெயர் இராமசாமி. ரேஷன் கார்டுக்கு அப்ளிகேஷன் போட்டு ஆறு மாசம் ஆச்சு. அப்ளிகேஷன் கொடுக்கிறப்பவே மதுரையிலிருந்து சரண்டர் சர்டிபிகேட்டும் வாங்கியாந்து அப்ளிகேஷனோட 'அட்டாச்சு' பண்ணிக் கொடுத்திருக்கேன்... ஆனால் ஹெட் கிளார்க்... இப்ப சரண்டர் சர்டிபிகேட் கொடுக்கலைங்கறார் சார்... ஆறு மாசமா... நடந்துக்கிட்டிருக்கேன்... இன்னும் கிடைக்கலே... அதனால்..."

"என்னய்யா நீங்க... ஒவ்வொருத்தன் வருஷக்கணக்கா அலையறான்... மாசத்தைப் பெரிசாச் சொல்றீங்க."

"கார்டு இல்லாம ரொம்பச் சிரமப்படுறேன் சார்... அதுவும் மண்ணெண்ணெய் வாங்கப் படுற அவதியிருக்கே... அது ரொம்பப் பெரிய அவதி சார்..."

"மண்ணெண்ணெய் இல்லாட்டி என்ன? விறகு வாங்கிக்கறது" — குரலில் லேசான கிண்டல் இருந்தது.

"நான் இருக்கிறது வாடகை வீடுங்க. வீட்டுக்காரர் வீடு கொடுக்கிறப்பவே விறகு வைச்சு எரிக்கக் கூடாது, வீடு கெட்டுப் போகும் என்று சொல்லித்தான்... வீடே எனக்கு விட்டார். அடுப்பே இல்லே சார்... சாம்பிராணி புகை போட்டாலே சண்டைக்கு வர்ற ஆளு சார் அவர்!"

"அப்படீன்னு எல். பி. ஜி. கேஸ் வாங்கிக்குங்க... இப்பத்தான் தாராளமாக் கிடைக்குதே."

"அதுக்கு இப்ப இரண்டாயிரம் வேணும். தங்கச்சிக்குக் கல்யாணம் வேறே... இப்ப எனக்கு அது பெரிய்ய தொகை சார்..."

"அப்ப வீட்டைக் காலி பண்ணி வேறே வீடு பார்த்துக்க வேண்டியதுதான்" என்று ஏகத்தாளமாகக் கூறினார்.

"இவ்வளவு குறைஞ்ச அட்வான்ஸ்ல வேறே வீடு... எங்கேயும் பார்க்க முடியாதுங்க... இந்த வீட்டு வாடகையும் கொஞ்சம் குறைச்சல் சார்."

"என்னய்யா... எது சொன்னாலும் அதுக்கொரு காரணம் சொல்லிக்கிட்டிருக்கிறே? என்னய்யா ஆளு நீ?" — எனக் கோபத்தில் கத்திவிட்டு அவனைப் பார்க்க விரும்பாமல் குனிந்து எழுத ஆரம்பித்தார்.

அது மண்புழுதான். ஆனாலும் எவ்வளவு நேரம் தான் மிதி தாங்கிக் கொண்டிருக்கும். தலைதூக்கிச் சீறியது ரோஷத்துடன்.

"சார்" — அவன் குரல் நிறுத்தி நிதானமாக வெளிவந்தது.

"பிரெஞ்சு மன்னன் லூயியும் அவன் மனைவியும் மேல் மாடத்தில் இருக்கிறப்ப மக்களெல்லாம் பசிக்கு ரொட்டிக் கிடைக்கவில்லையென்று கீழே நின்று கோபத்தோடு சத்தம் போட்டாங்களாம். அதுக்கு அவன் மனைவி ரொட்டிக்குப் பதில் கேக் சாப்பிடச் சொன்னாளாம். அதற்குப் பிறகுதான் பிரெஞ்சுப் புரட்சியே ஆரம்பமானதாம் சார்... அது மாதிரிதான் இருக்கு... நீங்க இப்ப என்கிட்டே சொல்றது ஒவ்வொண்ணும்."

அஸிஸ்டெண்ட் ரேஷனிங் ஆபீஸர் — மறுபடியும் அவனை முறைத்தார். அந்த முறைப்பில் தானே தான் கலெக்டர் என்கிற அதிகாரமிருந்தது.

நம்மால் ஆளப்படும், இந்த ஆட்டு மந்தை,



"எந்த ஆஸ்பத்திரியிலும் இல்லாத வசதி உங்க நர்ஸிங் ஹோம்ல இருக்காமே, அப்படி என்ன ஸ்பெஷல்?"

"உயில் எழுத வக்கீல் வசதி உண்டு!"

— குத்தாலம் அபிதா



"இந்தக் குழாயடியில் மட்டும் சண்டை கொஞ்சம் ஜாஸ்தியா இருக்கும்னு எப்படிச் சொல்றே?"

"பாரேன், இதுக்குத் தனியா போலீஸ் அவுட்போஸ்ட் வெச்சிருக்கறதை!"

— கீழை அ. கதிர்வேல்

நம்மைக் கேள்வி கேட்பதா? இது என்ன அயோக்கியத்தனம்? ஒரு ரேஷன் கார்டுக்கு என்னிடம் வந்து கைகட்டி வாய் பொத்தி நிற்கும் இவன் என்னிடம் வரலாறு சொல்வதா? அதுவும் உலக வரலாறு — என மனம் புழுங்கி —

"என்னய்யா... அதிகப் பிரசங்கித்தனமா பேசறே! புரட்சி அது இதுங்கறே... என்ன நினைச்சுக்கிட்டிருக்கிறே, போலீஸைக் கூப்பிடணுமா? நீதான் சரித்திரம் படிச்சிருக்கிறியா? என்னை முட்டாள்னு சொல்லாமல் சொல்றியா? புரட்சி வருமோ... புரட்சி...? சரி... வெளியே போ... ரேஷன் கார்டு தயாரானல் தபால் போடுறோம்... அப்ப வந்தால் போதும்... போய்யா... போ வெளியே" இந்தக் கோபத்திற்குக் காரணம் தாழ்வு மனப்பான்மையா? அல்லது உயர்வு மனப்பான்மையா?

— பெரிதாகச் சத்தம் போட்டார்.

அவர் போட்ட சத்தத்தால் வெளியே நின்றிருந்த பியூன் எட்டிப் பார்த்தான்.

"சின்னப்பா இந்த ஆளை வெளியே அனுப்பு."

"சார்" — என்று ஏதோ சொல்ல வந்தவனை வெளியே இழுத்து வந்தான் பியூன்.

காலையில் மனைவி சொன்னது மறுபடியும் நினைவு வந்தது. உண்மையிலேயே நமக்குத் துப்பில்லையோ? பியூனைப் பரிதாபமாகப் பார்த்தான், அவன்.

பியூன் அவன் கைகளை ஆதரவாகப் பற்றி, ஓரமாகக் கூட்டிச் சென்று, "சார்... இந்தப் பசங்க இன்னும் எத்தனை வருஷமானலும்... ஒண்ணும் செய்ய மாட்டானுங்க. நீங்க போய் டி. எஸ். ஓ. வைப் பாருங்க. ரொம்ப நல்லவரு. சின்ன வயசுதான். அவரு கூப்பிட்டுச் சொன்னருன்ன உடனே செய்வானுங்க."

"டி. எஸ். ஓ. வா?"

"ஆமாம் சார்... டிஸ்டிரிக்ட் சப்ளை ஆபீஸர்... மாவட்ட வழங்கல் அதிகாரி... பக்கத்தில்தான், இப்படி... நேரே போய் ரைட்ல திரும்புங்க. மாடிப்படி வரும். மாடியில் இருக்கார்... பியூன் இருப்பான். சின்னப்பன் அனுப்பினேன்னு சொல்லுங்க உள்ளே விடுவான்."

"தேங்க்ஸ் சார்" — அவன் கைகளைக் கண்களில் ஒற்றிக் கொண்டான்.

அவர் சொன்னபடி சென்று திரும்பிய போது — இளவரசன் பி. எஸ். சி. பி. எல். மாவட்ட வழங்கல் அதிகாரி — என்று போர்டு மாட்டிய அறை எதிரில் நின்றன்.

சின்னப்பன் பெயரைச் சொல்லி, பத்து நிமிடக் காத்திருத்தலுக்குப் பின் உள்ளே அனுமதிக்கப்பட்டான்.

"குட்மார்னிங் சார்" என்றன் ரொம்பவும் பணிவுடன்.

"குட்மார்னிங்... உட்காருங்க. என்ன வேணும்...?"

இவன் உட்காரத் தயங்கினன்.

"பரவாயில்லை உட்காருங்க" என்றர் மறுபடியும்.

அவர் யார் மாதிரியும் அதிகாரம் செய்யாமல் அவர் அவராகவே பேசியது இவனுக்கு மகிழ்ச்சியாகவும் ஆறுதலாகவும் இருந்தது.

இனிமேலும் உட்காரவில்லையென்றல், ரேஷன் கார்டு இல்லையென்று சொல்லிவிடுவாரோ எனப் பயந்து, கடைசி நாற்காலியில் பட்டும் படாமலும் அமர்ந்தான்.

உட்கார வைத்துப் பேசும் இந்த அனுபவம் புதுமையாக இருந்தது அவனுக்கு. தலையில் தேவர்கள் பூச்சொரிந்தது போலிருந்தது.

இன்று உறுதியாக ரேஷன் கார்டு வாங்கி விடலாம் என்ற நம்பிக்கை வந்தது.

மனைவி கையில் கொடுத்து நமது துப்பைக் காட்ட வேண்டும் என்ற ரோஷம் வந்தது.

இந்த வழியைக் காட்டிய பியூன் சின்னப்பனுக்கு மறுபடியும் சென்று நன்றி கூற வேண்டும் என்ற நினைப்பும் வந்தது.

இவர்கள் மத்தியில் இப்படியோர் அதிகாரியா! இப்படியே நெடுஞ்சாண் கிடையாக இவர் காலில் விழவேண்டும் என மனம் விரும்பியது.

உட்கார வைத்துப் பேசுகிறரே!

"யெஸ் சொல்லுங்க என்ன வேணும்" என்று புன்சிரிப்புடன் மறுபடியும் டி. எஸ். ஓ. கேட்டார்.

ஆறு மாதத்திற்கு முந்தி அப்ளிகேஷன் போட்டது, ஹெட்கிளார்க் சரண்டர் சர்டிபிகேட் இல்லையென்று சொன்னது, ரேஷனிங் ஆபீசரைப் போய்ப் பார்த்து, விரட்டப்பட்டு வந்தது, மண்ணெண்ணெய்க்குப் படுற கஷ்டம், பின் குடியிருக்கும் வீட்டுக்காரரிலிருந்து ரேஷன்

கார்டுக்காக மனைவியின் உப்பும் துப்பும் வரை அழமாட்டாத குறையாய்ச் சொல்லி முடித்து,

"சார்... என் தங்கச்சியின் திருமணத்துக்குப் பி. எஃப்ல கடன் கேட்டிருக்கேன். அதுக்கொரு எவிடென்ஸா பி. எஃப் இன்ஸ்பெக்டர் ரேஷன் கார்டை 'செக்' பண்ணிட்டுத்தான்... சிபாரிசு பண்ணி அனுப்புவேன்னு சொல்ருரு சார்" என்று அனைத்தையும் கூறி முடித்து, பாலுக்கு அழும் குழந்தை போல ரேஷன் கார்டுக்கு அவரிடம் யாசித்தான்.

"நீங்க சரண்டர் சர்டிபிகேட் உறுதியா அட்டாச் பண்ணீங்களா?"

"சத்தியமா சார்..." — எழுந்து நின்று கும்பிட்டான்.

டி. எஸ். ஓ. அவனை அமர்ந்து பேசுமாறு சைகை செய்தபடி —

"சரி, பார்க்கிறேன்... சீஃப் செகரட்டரி புதுக்கார்டு இஷ்யூ பண்ணக் கூடாதுன்னு ஜி. ஓ. போட்டிருக்கார். இல்லாட்டி ஏதாவது ஸ்பெஷல் கேஸுன்னு போட்டுக் கொடுக்க ஏற்பாடு பண்றேன்" எனக் கூறி அவர் காலிங் பெல்லை அழுத்தப் போன போது —

தொலைபேசி கிணுகிணுத்தது.

"ஹல்லோ... டி. எஸ். ஓ. இளவரசன் ஹியர்... பிளீஸ் சத்தமாப் பேசுங்க... யாருங்க... மினிஸ்டர் பி. ஏ. வா? குட்மார்னிங் சார்... எஸ்... சொல்லுங்க... நேத்து பிடிச்சது சார்... ஐந்து லாரி லோடு... கூட ரெண்டு புட்செல் இன்ஸ்பெக்டர்ஸ்... மதுக்கரைப் பக்கத்திலே சார்... எல்லாமே ரைஸ் தான்... கேரளாவுக்குப் போய்க்கிட்டிருந்தது. டிரைவர்ஸ் போலீஸ் கஸ்டடியிலிருக்காங்க... என்ன லாரியெல்லாம் ரிலீஸ் பண்றதா...? நோ... எவ்வளவு சிரமப்பட்டுப் பிடிச்சிருக்கோம்... நியூஸ் பிரஸ்ஸுக்குக் கொடுத்து மார்னிங் பேப்பர்ஸ்ல பப்ளிஷ் ஆகியிருக்கு சார்... மினிஸ்டரோட... ரிலேட்டிவ்ஸா..? முடியாது சார்... நான் விட முடியாது... மினிஸ்டர்கிட்டே போறுங்களா...? போகட்டுமே. ஆல்ரைட் நீங்க கலெக்டர் கிட்டேயே பேசிக்குங்க... நான் செய்ய மாட்டேன்."

போன் கட்டாகியிருக்க வேண்டும். ரிஸீவரைக் கையில் பிடித்த வண்ணம் போனையே வெறிக்கப் பார்த்தார்.

முகமும் கண்களும் கோபத்தால் சிவந்திருந்தன. — ரிஸீவரை வைத்து விட்டு மௌனமாக வெறித்தார் டி. எஸ். ஓ.

இவன் பக்கம் திரும்பி ஏதோ சொல்ல நினைத்தவர் அதை விடுத்து,

"ஆல் ரைட்... நீங்க நாளைக்கு வாங்க. நாளைக்கி... ம்... வாங்க... நாளைக்கு இந்த சீட்ல நான் இருந்தேன்னு... என்னை வந்து பாருங்க. இப்ப அவசரமா... நான் வெளியே போகணும்" என எழுந்து கொண்டார்.

அவர் நல்ல உயரம்.

அவன் நாளைக்கும் வருவான்!

---



# கல்கி

1987 மே 24
மலர் 45 . இதழ் 43
பிரபவ வைகாசி 10



# ராஜதந்திரம் இழந்த ராஜீவ்

**லோ**ங்கோவாலுடன் ஓர் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட போது, ராஜீவ் எவ்வளவுக்கெவ்வளவு ராஜதந்திரத்தின் உச்சியிலிருந்தாரோ, அவ்வளவுக்கவ்வளவு இப்போது பஞ்சாபில் ஜனாதிபதி ஆட்சியைப் பிரகடனம் செய்த போது, ராஜ தந்திரத்தை இழந்து அடிமட்டத்தில் கிடக்கிறார்.

அங்கே மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அகாலி தள ஆட்சி நடைபெற்று வந்தது. அது உட்பூசலால் சிறிது பலவீனப்பட்டுப் போயிருந்தால் கூட இ. காங்கிரஸும் இதர நேசக் கட்சிகளும் பூரண ஆதரவு தந்து பலப்படுத்தி இருக்க வேண்டும். ஆனால் ஜனாதிபதி ஆட்சி கொண்டு வரப்பட்டதற்குக் காரணம், ஆட்சியிலிருப்பவர் பெரும்பான்மை பலம் இழந்ததுதான் என்று கூறப்படவில்லை. ஆட்சியாளரால் சட்ட ஒழுங்கை நிலைநாட்ட முடியவில்லை என்பதுதான் முக்கியக் காரணமாகக் காட்டப்பட்டிருக்கிறது.

இப்போது ஜனாதிபதி ஆட்சி வந்து விட்டதால் சட்ட ஒழுங்கு சீர்பட்டு விடுமா? சந்தேகமே. மாறாக, நிலைமை இன்னும் மோசமடையவே அதிக வாய்ப்பு. ரிபைரோவுக்கு அதிக அதிகாரங்கள் தரப்படலாம். அவரும் அடக்குமுறையைக் கையாண்டு, நூற்றுக்கணக்கானவர்களைக் கைது செய்து சிறையில் அடைக்கலாம். ஆனால் இதுவே வன்முறையை மேலும் தூண்டி விடுமே தவிர, குறைக்காது, நிச்சயம்.

பர்னாலா பயங்கரவாதிகளுக்கு மசியவில்லை. துணிந்து எதிர்த்து நின்றார். பாரதத்தின் ஒருமைப்பாட்டில் தமக்கு ஆழ்ந்த நம்பிக்கை இருப்பதைச் சொல்லாலும் செயலாலும் நிரூபித்து வந்தார். அப்படிப்பட்டவரைப் பதவி இழக்கச் செய்ததன் மூலம் சீக்கிய மக்களின் அதிருப்தியைப் பெருமளவுக்குப் பிரதமர் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார். பெரும்பாலான சீக்கியர்கள் பர்னாலாவைப் பின்பற்றினார்கள். பயங்கரவாதிகளை வெறுத்தார்கள். இப்போது இவர்களில் பலரது அனுதாபம் பயங்கரவாதிகள் பக்கமே திரும்பும். எனவே பயங்கரவாதிகளின் கொட்டம் அதிகமாகும். வன்முறை அதிகரிக்கும். ஒருவேளை, ஜனாதிபதி ஆட்சி காரணமாகச் செய்திகள் சென்ஸார் ஆகி, பல விஷயங்கள் நமக்குத் தெரியவராமலே போகலாம், அவ்வளவுதான்!

ஜனாதிபதி ஆட்சி அமல்படுத்தப்பட்டதற்கு, நடக்கவிருக்கும் அரியானா தேர்தல் ஒரு முக்கியக் காரணம் என்பதாகப் பேசப்படுகிறது. இருக்கலாம். அரியானாவில் இ. காங்கிரஸுக்குக் கிடைக்கக் கூடிய வோட்டுக்களின் எண்ணிக்கை அதிகரிக்கலாம். ஆனால் பஞ்சாபில் அதைவிடப் பல மடங்கு அதிகமான எண்ணிக்கையில் சீக்கியர்களின் நம்பிக்கையை மத்திய அரசு இழந்து நிற்கும்.

சீக்கியர்களில் மிதவாதிகளை வைத்தே பயங்கரவாதிகளை ஒடுக்குவதுதான் ராஜ தந்திரமேயொழிய, மத்திய அரசு, பஞ்சாப் மாநிலத்தின் மீது போர் தொடுத்திருப்பது போலவும்,அடக்குமுறையைக் கட்டவிழ்த்துவிட்டு, ஆக்கிரமிப்பு நடத்தி ஆள்வது போலவும் மக்கள் மனத்தில் ஓர் எண்ணத்தை ஏற்படுத்துவது ஆபத்தான பின் விளைவுகளையே உருவாக்கும்.

பஞ்சாப் பிரச்னைக்குத் தீர்வு, லோங்கோவால் — ராஜீவ் ஒப்பந்தத்தில் இருக்கிறது. அதில் உள்ள எந்த ஷரத்தையும் நிறைவேற்றி வைப்பதில் பிரதமர் அக்கறை காட்டவில்லை. ஒப்பந்தத்தை நிறைவேற்றி வைக்கும் உத்தேசமில்லை எனில் எதற்கு அதில் பிரதமர் கையெழுத்துப் போட்டார்? ஜோத்பூர் கைதிகள் விஷயம், மாநிலங்களுக்குச் சேர வேண்டிய நிலப்பகுதிகள் பற்றிய பிரச்னை, தலைநகர் சண்டிகர் பிரச்னை, நதி நீர்ப் பங்கீடு போன்ற எந்தப் பிரச்னையிலும் மத்திய அரசு, பர்னாலா அரசுக்கு ஒத்துழைப்புத் தரவில்லை. அவ்வாறிருக்க, பர்னாலா அரசு, தனது சாதனைகள் என்று எதைக் காட்ட முடியும்?

லோங்கோவால் ஒப்பந்தம் முழுமையாக நிறைவேற்றப்பட்டால் பயங்கரவாதத்துக்குத் தேவையில்லாமல் போய்விடும். பயங்கரவாதிகளுக்குப் பஞ்சாபில் இடமில்லாமலும் போய்விடும். மக்களின் ஆதரவை அவர்கள் அடியோடு இழப்பார்கள். ஆனால் லோங்கோவால் ஒப்பந்தம் நிறைவேறத் தாமதமாகும் ஒவ்வொரு நாளும் பயங்கரவாதிகளின் கை பலப்படவே உதவும். எத்தனை ரிபைரோக்கள் வந்தாலும் அவர்களைச் சமாளிக்க முடியாது; கட்டுப்படுத்தவும் இயலாது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்.

# மீது ஏமி இந்தக் கோபம்?'

சென்னையிலேயே பிறந்து வளர்ந்து, உதவிக் கண்காணிப்பாளராகப் பணிபுரிந்து கொண்டிருந்த வசந்தகுமாரை விஜயவாடாவுக்குத் தூக்கி அடித்தார்கள். பிரமோஷன் பேரில் வேலை மாற்றம் கிடைத்ததால் அவனாலும் மறுக்க முடியவில்லை. 'இந்த மத்திய அரசு வேலையே இப்படித்தான்' என்று முனகிக் கொண்டே வேலையில் போய்ச் சேர்ந்தான். இருந்தாலும் அந்த ஊரின் பச்சைப் பசேல் வயல்களும் நதிகளும் அவனைக் கவரத்தான் செய்தன.

நாட்கள் வேகமாய் ஓடின. வேலையின் பொறுப்பும் சுமையும் நாளுக்கு நாள் அதிகமானதால் அடிக்கடி லீவு போட்டுவிட்டுச் சென்னைக்கு வர முடியாத சூழ்நிலையில் இருந்தான் வசந்தகுமார். எனவே அவனது பெற்றோர்கள் அவனுக்கு அங்கேயே ஒரு பெண்ணைப் பார்த்து மணம் முடித்து வைத்தனர். அவன் மனைவி சௌம்யா பார்க்கத் தளதளவென்றிருப்பாள். ஆனால் ஒரு குறை. தாய்மொழியாகிய தமிழில் சரியாகப் பேசத் தெரியாது. எழுதவும் வராது. இது அவனுக்கு மன வருத்தத்தைத் தந்தது. எப்படியாவது இதைச் சரிப்படுத்திவிட நினைத்தான். இதற்கென முயற்சியும் எடுத்தான். ஆனால் சௌம்யா தன் போக்கிலேயே போய்க் கொண்டிருந்தாள்.

"சௌம்யா கொ ஞ் ச ம் வாயேன்."

"ஏமண்டி நன்னு பிலிசாரா?" — அருகே வந்து நின்றாள். அவனுக்கு மிகவும் அதிருப்தியாய் இருந்தது.

"என்னடி இது? எப்பப் பார்த்தாலும் தெலுங்குல அக்கப்போரு. நம்ப தாய் மொழி என்ன தெலுங்கா?"

"மறசி போயிந்தண்டி."

"திரும்பவும் பாரு."

"மருந்து போச்சண்டி."

"அது என்னடி மருந்து? இப்ப மருந்து மாத்திரை யார் கேட்டா? உனக்கு 'மறந்து'ன்னு சொல்லத்



தெரியாதா? எங்கே சொல்லு? 'மறந்து' '' — அவள் அதன்பிறகு திருத்திச் சொன்னாள்.

''அப்பா! இதைச்சொல்றதுக்குஇவ்வளவு நேரமா?'' — வசந்தகுமார் தலையில் கை வைத்துக் கொண்டான்.

அவள் ஒன்றும் புரியாமல் அவனையே உற்றுப் பார்த்தாள். ஆபீஸுக்கு நேரமாகி விட்டிருந்தது. வெளியே எட்டிப் பார்த்தான். மழை லேசாய் பெய்து கொண்டிருந்தது.

''கொடை கொண்டு வா சௌம்யா'' என்றான் அன்பாய்.

''ஏமிடி அதி?'' — அவள் மலங்க மலங்கப் பார்த்தாள்.

அவனுக்கு எரிச்சலாக வந்தது. ''ஏண்டி கொடை தெரியாது உனக்கு?'' என்று செய்கையில் காட்டினான். ''உன்னைக் கல்யாணம் பண்ணிக்கும்போதுகூட காசி யாத்திரைக்குக் கொடை பிடிச்சேனே தெரியாது? நீ இப்படியே போய்க்கிட்டிருந்தா நான் நிஜமாவே காசி யாத்திரைக்குப் போய் விட வேண்டியதுதான்.''

அதன்பிறகுதான் அவளுக்குப் புரிந்தது. ''கொடுகா....'' என்று ராகம் இழுத்தாள்.

''கொடுகோ புடுகோ எதையாவது சீக்கிரம் கொண்டு வந்து தொலை.''

''மீகு ஏமி இந்தக் கோபம்?''

''பின்னே வராதா? உருப்படியா உனக்கு ஒரு வார்த்தையாவது தமிழ்ல பேசத் தெரியுதா? சரியான தலைவலி.''

''பாபம், நொப்பியா?''

''நொப்பியுமில்லை. தொப்பியுமில்லை. சும்மா ஆளை எரிய வைக்காதே!''

''தண்ணி ஊத்தண்டி.''

அவன் அதற்கு மேல் அங்கு உட்கார்ந்திருக்கவில்லை. ஓடாத குறையாய்க் குடையை விரித்துக் கொண்டு வெளியே நடந்தான்.

வீட்டுக்குத் திரும்பியபோது வசந்தகுமார் மழையில் ஏகமாய் நனைந்திருந்தான்.

சௌம்யா அவன் அருகே சென்று அன்பாய்க் காப்பி தம்ளரை நீட்டினாள்.

''காப்பி குளிங்கோ.''

அவனுக்கு வந்ததும் வராததுமாய்ப் பற்றிக் கொண்டு வந்தது. ''ஏண்டி! ஏற்கெனவே மழையில குளிச்சுட்டு வந்திருக்கேன். போதாதுன்னு காப்பிலே வேறே குளிக்கச் சொல்றியா? இப்ப காப்பிக்கென்ன அவசரம்? முதல்ல துண்டைச்சுக்க டவல் கொண்டு வா. உன்னோட பேசிப் பேசியே குளிர் ஜுரம்கூட வந்திடும் போலிருக்கு.''

''நாகு ஜாலிகா உந்தண்டி.''

''ஏண்டி, உனக்கென்ன கொழுப்பிருக்கும்? எனக்கு ஜுரம் வந்தா உனக்கு ஜாலியா?''

''ஐயோ அதிகாதண்டி.''

''பின்னே எது?''

''இதண்டி, கஷ்டம் மாதிரி.''

''கஷ்டம்தான். ரொம்ப ரொம்பக் கஷ்டம்.''

இரவு படுக்கப் போகும்போது அவளை அன்பாய்ப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு சொன்னான். ''நீ இப்படியே தமிழ் பேசத் தெரியாம இருக்கக் கூடாது சௌம்யா. கொஞ்சம் கொஞ்சமாவது கத்துக்கணும்.''

''எனக்கு ராதண்டி.''

''வரும். உனக்கு நல்லா வரும். நீ புத்திசாலி.''

''இப்புடு எந்துகண்டி தமிளு.''

''அப்படிச் சொல்லாதே. தாய் மொழியைக் கத்துக்கறது ரொம்ப அவசியம். இல்லேன்னா நமக்குப் பிறக்கப் போற குழந்தைக்கும் தமிழ் உணர்வே இல்லாம போயிடும்.''

''நாகு ஏமி அர்த்தம் காலேதண்டி.''

''புரியும். தமிழ் மொழியின் இனிமையைப் பத்திப் பாரதியும் திரு.வி.க.வும் எவ்வளவு உயர்வாச் சொல்லியிருக்காங்கன்னு உனக்கு இனிமேத்தான் புரியும்.''

''அதி எவரண்டி?''

''உங்க பாட்டன்.''

ஒரு காகிதத்தையும் பேனாவையும் அவளிடம் கொடுத்தான்.

''தமிழ்ல என் பேரை எழுது பார்க்கலாம்.''

''நாகு ராதண்டி.''

''சரி தொலையட்டும். உன் பேரையாவது எழுது.''

''வராதண்டி.''

''பாழாப் போச்சு.''

மறுநாள் முப்பது நாளில் தமிழ் என்ற புத்தகத்தோடு வீடு திரும்பினான். சமையலறையில் வேலையாய் இருந்த அவளிடம் ஆசையாய்க் கொடுத்தான்.

''இது எதுக்கண்டி?''

''இதை வைச்சுத் தமிழ் கத்துக்க. ஒரு மாசம் கழிச்சு உனக்கொரு டெஸ்ட் வைக்கப் போறேன்.''

அவளுக்குச் சிரிப்பு வந்தது.

''சிரிக்காதே! நான் ஒண்ணும் ஜோக் அடிக்கலை. இதை நீ ஒழுங்காக் கத்துக்கிட்டாத்தான் வாராவாரம் உன்னைச் சினிமாவுக்குக் கூட்டிட்டுப் போவேன். மாசாமாசம் உனக்குப் புடைவை வாங்கித் தருவேன்.''

அவள் அந்த மாநில மொழியிலேயே நிதானமாய்ச் சொன்னாள். ''இப்ப நான் தமிழ்ல பேசிப் படிச்சு என்னங்க ஆகப் போறது? உங்களுக்குத் தெலுங்கு தெரியும். எனக்கும் அதே பாஷை நல்லாத் தெரியும். ஒருத்தரை ஒருத்தர் புரிஞ்சுக்கிறதுக்கும், அவங்கவங்க மனசுல இருக்கிற எண்ணத்தை வெளிப்படுத்துறதுக்கும் ஏதாவது ஒரு மொழி இருந்தாப் போதுமே.''

''ஒவ்வொரு மொழிக்கும் ஒவ்வொரு சிறப்பு அம்சம் இருக்கு சௌம்யா. இதை நீ முதல்ல தெரிஞ்சுக்கணும். தாய் மொழியில

நம்முடைய உணர்வுகளைப் பகிர்ந்துக்கும் போதுதான் நமக்குள்ள இருக்கிற உறவு சுவையுள்ளதாய் இருக்கும்.'

அவள் எதற்கும் மசியவில்லை. புத்தகத்தை எடுத்து எங்கோ மூலையில் வைத்துவிட்டாள்.

வசந்தகுமார் சோர்வடைந்தான். அவனுக்கு மனமே சரியில்லை. அன்றிலிருந்து அவளுடன் பேசுவதையும் குறைத்துக்கொண்டான். அதுமட்டுமின்றி அவள் மீது அக்கறை எடுத்துக் கொள்வதையும் நிறுத்திக் கொண்டான். வீட்டுக்குக் கால தாமதமாக வர ஆரம்பித்தான். அவளுடன் சிரித்துப் பேசிக் கூட நிறைய நாட்களாகிவிட்டன.

"போஸ்ட்!''

வசந்தகுமார் அப்போது வீட்டில் இல்லை. சௌம்யாதான் வாசலுக்குச் சென்று அதை வாங்கிக் கொண்டு வந்தாள். அந்தக் கடிதம் கணவன் பெய்ருக்கு வந்திருந்தது. பின்னாலே உமா என்று கையெழுத்திடப்பட்டிருந்தது. ஆனால் விலாசம் இல்லை. சென்னையிலிருந்து தான் அந்தக் கடிதம் வந்திருக்க வேண்டும் என்பது மட்டும் அவளுக்குப் புரிந்தது. மூளைப் பிரதேசத்தில் சின்னக் கேள்வி ஒன்று உதித்தது.

''யார் இந்த உமா?''

ஆபீஸிலிருந்து கணவன் திரும்பி வந்ததும் அந்தக் கடிதத்தை அவனிடம் தந்தாள்.

''லெட்டர் வச்சிந்தி.''

அவன் அதை வாங்கித் திருப்பிப் பார்த்தான். பின்னாலே எழுதப்பட்டிருந்த பேரைக் கண்டதும் அவன் முகம் பிரகாசமாயிற்று. உட்கார்ந்து நிதானமாய் அதைப் பிரித்தான். ஏதோ ஒரு பொக்கிஷத்தைக் கண்டுவிட்டவன் போல அவன் கண்கள் கடிதத்தில் நிலைகுத்தி நின்றன. ஆடாமல் அசையாமல் ஒவ்வொரு வரியாய்ச் சுவைத்துப் படித்தான். அவள் கொண்டு வந்து வைத்த காப்பி கூட ஆறிப் போய்விட்டது.

''ஏமண்டி காப்பி ஆறிப் போவுது.''

அவன் அவளது வார்த்தையைப் பொருட்படுத்தவில்லை. படித்து முடித்ததும் அந்தக் கடிதத்தைப் பத்திரமாய், பாக்கெட்டில் வைத்துக் கொண்டான். காப்பி குடிக்காமலேயே அவனுக்கு உற்சாகம் திரண்டு வந்தது.

''யவரண்டி அதி?'' ஆவல் ததும்பக் கேட்டாள் சௌம்யா.

''என் பிரெண்ட்.''

''மீகு கேர்ள் பிரெண்ட் கூட இருக்கா?''

அவன் சட்டெனச் சுதாரித்துக் கொண்டான். ''கேர்ள் பிரெண்ட் இல்லை. உமா மஹேஸ்வரன்னு என் ஓல்ட் க்ளாஸ்மேட். உமான்னு ஷார்ட்டா எழுதியிருக்கான்.''

அவளுக்கு அவன் பேச்சில் நம்பிக்கை வரவில்லை. அவளது முகபாவமே காட்டிக் கொடுத்தது.

இரண்டாவது கடிதம் வந்தது. ஆனால் அதை அவன்தான் வாங்கினான். அதே உமா. பின்னாலே அதே கையெழுத்து. அதையும் அணுஅணுவாய் ரசித்துப் படித்தான்.

அவளது சந்தேகம் இன்னும் வலுவடைந்தது.

அவன் உறங்கிக் கனவுகள் கண்டு கொண்டிருந்தபோது மெள்ள எழுந்து அவனுடைய சட்டைப் பாக்கெட்டில் கைவிட்டு அந்தக் கடிதத்தை எடுத்தாள். ஓசைப்படாமல் பிரித்தாள்.

தமிழில் முத்துமுத்தான கையெழுத்து. ஓரிரு எழுத்துக்களே அவளுக்குத் தெரிந்திருந்தன. இதில் இருக்கும் விஷயங்கள் என்னவாக இருக்கும்?

ராத்திரி பூராவும் அவளுக்குத் தூக்கம் வரவில்லை. வசந்தகுமார் வாங்கித் தந்த புத்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டாள். ஒவ்வொரு எழுத்தாய்ப் புத்தகத்துடன் ஒப்பிட்டுப் பார்த்தாள். அப்போதும் அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. எனினும் சௌம்யா நம்பிக்கையை இழக்கவில்லை. கணவன் தினமும் ஆபீஸுக்குப் போயிருக்கும் நேரங்களிலெல்லாம் ரகசியமாய் ஒவ்வொரு எழுத்தாய்க் கூற்று வந்தாள்.

இரண்டு மூன்று மாதங்களுக்குப் பிறகு திரும்பவும் அப்படியொரு கடிதம் வந்தது. ஆனால் சௌம்யாவின் கைக்கு அது கிடைக்கவில்லை. அதற்காகவே ஆபீஸுக்குப் போகாமல் காத்திருந்த வசந்தகுமார், தபால்காரனிடமிருந்து அந்தக் கடிதத்தைப் பெற்றுக் கொண்டு வெளியே போய்விட்டான். வழக்கம் போல இரவு தாமதமாக வீட்டுக்கு வந்து படுத்துக் கொண்டான். சில நிமிடத்துக்கெல்லாம் குறட்டை சப்தம் கேட்டது. அந்த அளவுக்கு அவன் களைத்துப் போயிருக்கிறான் என்பதை அவள் புரிந்து கொண்டாள்.

தூக்கம் வராத சௌம்யா மெள்ள எழுந்தாள். சிரம் முதல் பாதம் வரை அவனையே கொஞ்ச நேரம் உற்றுப் பார்த்தாள். பிறகு ஹேங்கரில் தொங்கிக் கொண்டிருந்த அவனது சட்டைப் பாக்கெட்டில் கைவிட்டுப் பார்த்தாள்.

அந்தக் கடிதம் அதிர்ஷ்டவசமாய் இருந்தது. பதற்றத்துடன் அந்தக் கடிதத்தைப் பிரித்தாள். சிரமமின்றி அவளால் அப்போது எழுத்துக் கூட்டிப் படிக்க முடிந்தது.

'அருமை சௌம்யாவே! ஆத்திரம் கொள்ளாதே! இந்தக் கடிதம் எந்தப் பெண்ணிடமிருந்தும் வரவில்லை. இதை நானே எழுதினேன். உன்னுள் சந்தேகத்தை உண்டு பண்ணி, பொறுமையைத் தூண்டி விட்டுத் தமிழைக் கற்க வைப்பதற்காகவே நான் செய்த ஏற்பாடிது. இப்பவாவது உனக்குப் புத்தி வந்ததே, அதற்கு நன்றி. பாராட்டுக்கள். இனிய முத்தங்கள்.— வசந்தகுமார்.'

ஏக கலவரத்தில் வதங்கிப் போயிருந்த அவளது முகம் மெள்ள தாமரையாய் மலர, உறங்குவது போல் படுத்திருந்த வசந்தகுமார் மெள்ளக் கண்களைத் திறந்து ஓரக் கண்ணால் அவளைப் பார்த்தான்.

# காலை டிபனும் ஒரு காதல் கடிதமும்



“அடடே... என்ன இப்படி மாரத்தான் ரேஸ் ஓடினது மாதிரி மூச்சு வாங்க றீங்க...?” கேலியாய்ச் சிரித்தாள் சுகந்தி.

“சொல்ல மாட்டாய், பின்னே. மகாராணியாட்டம் படுத்த படுக்கையிலே இட்லியும், மசால் தோசையும் தின்னுட்டுக் கிண்டலா...?” — முறைத்தான், ராம்குமார்.

“சாரி, என்னமாய்க் கோபம் வருகிறது!”

“நம்பிட்டயா?”

“இல்லை.”

இருவரும் வாய்விட்டுச் சிரித்தார்கள்.

“சரி... சரி... சீக்கிரம் உன் டிபன் தட்டை எடு,” என்று துரிதப்படுத்தினன், ராம்குமார்.

லாக்கரிலிருந்து எடுத்துக் கொடுத்தாள் அவள்.

வாங்கிக் கொண்டு டாய்லட் மறைவில் இருந்த வாஷ்பேஸினுக்குச் சென்ருன், அவன்.

ராம்குமாரின் நண்பஞன மாதவனின் தங்கைதான் இந்தச் சுகந்தி.

வரும் ஏப்ரலில் பிளஸ் டூ எழுதுகிருள். ஹாக்கி மாட்ச் ஆடினளாம். காலைச் சிராய்த்துக் கொண்டு ஆஸ்பத்திரியில் படுத்திருக்கிருள்.

மாதவனின் வீடு டவுனுக்கு வெளியே இருந்தது. ஆகவே, அவனல் ஆஸ்பத்திரியில் இருக்கும் தங்கைக்கு காலை டிபன் கொடுக்க முடியவில்லை.

“ராம்... நீதான் டவுனுக்குள் இருக்கிருய். சுகந்திக்குக் காலை டிபனை மட்டும் ஓட்டலில் வாங்கிக் கொடுத்துவிடு” என்று வேண்டிக் கொண்டிருந்தான், மாதவன்.

அந்தப் பொறுப்பைத்தான் கடந்த மூன்று நாட்களாக இப்படி ஓடி ஓடிச் செய்கிருன், ராம்குமார்.

எட்டு மணிக்கு அவனுக்கு அலுவலகம். அதற்குள் வீட்டிலிருந்து ஓட்டலுக்கு ஓடி, ஓட்டலில் இருந்து ஆஸ்பத்திரிக்கு விரைந்து...

மூச்சு இரைக்கத்தானே செய்யும்!

தட்டைக் கழுவிக் கொண்டு திரும்பியவனை, “குட்மார்னிங், ராம்” என்ற மாதவனின் வணக்கம் வரவேற்றது.

“அடடே... வாடா என் காதல் யுவராஜ். நீ வரப் போவது தெரிந்திருந்தால் நான் காலில் இறக்கை கட்டிக் கொண்டு வந்திருக்க மாட்டேனே...”

“நான் திடுமென்று கிளம்பினேனுக்கும். டாக்டர் ரவுண்ட் வரும்போது சுகந்திக்கு டிஸ்சார்ஜ் எப்போது என்று கேட்க வேண்டும். அதுக்காக வந்தேன்.”

“தட்ஸ் ஆல்ரைட். சுகந்தியை நீ கவனித்துக் கொள். எனக்கு ஆபீசுக்கு நேரமாகிவிட்டது. நான் வர்றேன். டாடா... சுகந்தி.”

“டாடா...”

அலுவலகம் வந்து தோல் பையைத் திறந்தான், ராம்குமார்.

மேஜை சாவி கிடைப்பதற்கு முன்னல், நான்காய் மடிக்கப்பட்ட ஒரு கடிதம்.

அவசரமாய் எடுத்துப் படித்தான்.

''பிரிய ராம்...'' என்ற ஆரம்பம் அவனை அசர வைத்தது.

''யார் எழுதியது'' முணுமுணுத்தவனாய் கடிதத்தின் முடிவைக் கவனித்தான்.

சுகந்தி.

''அடி சக்கை... நீயா...?''

படித்தான்.

'அண்ணனின் கோரிக்கைக்காகத் தினம் தினம் நீங்கள் எனக்கு டிபன் கொண்டு வந்தாலும், நீங்கள் வருவது எனக்காக என்றுதான் என் உள்ளம் சொல்கிறது, இல்லையா, ராம்.

உங்களைப் பார்த்ததுமே என் பசி முழுவதும் அடங்கி விடுவதால், நீங்கள் வாங்கி வரும் டிபன் அதிகம் என்று உணர்கிறேன்.

இன்னும் என்னவெல்லாமோ மனத்தில் தோன்றுகிறது. ஆனால், எனக்கு இதற்கு மேல் எழுதத் தெரியவில்லை. சுருக்கமாகச் சொல்கிறேன். ஐ லவ் யூ, ராம்.

என் காதலை ஏற்றுக் கொண்டால், நாளைக் காலையில் டிபன் வாங்கி வாருங்கள். இல்லாவிட்டால் வரவேண்டாம். வாழ்க்கை முழுவதும் ஏமாற்றத்தை அனுபவிக்க வேண்டிய நான், ஒருவேளைப் பட்டினியால் செத்து விட மாட்டேன். — தங்கள் சுகந்தி.'

கடிதத்தைப் படித்து முடித்த ராம்குமார் புதிரானான், புன்னகை செய்தான்.

பத்து மணி.

மாதவன் போனில் பேசினான்.

''ராம், டாக்டரைப் பார்த்தேன். இன்னும் மூன்று நாட்களுக்குச் சுகந்தி ஆஸ்பத்திரியில் இருந்தாக வேண்டுமாம். அதனால்...''

''காலை டிபனை அவளுக்கு நானே கொண்டு போக வேண்டும். அவ்வளவுதானே?''

''ஆமாம், ராம்... ப்ளீஸ்...''

''எனக்கு உன் பிளீஸும் வேண்டாம். ஒண்ணும் வேண்டாம். என் கடன் சுகந்திக்கு டிபன் வாங்கிக் கொடுப்பதே.. போதுமா?''

''தாங்க்யூ... தாங்க்யூ...''

நான்காம் நாள்.

'ஓல்ட் ஸ்டூடன்ட்ஸ் அசோஸியேஷன்' என்னும் அமைப்பின் பிரதானப் பேர்வழிகளில் ராம்குமாரும் ஒருவன்.

புத்தாண்டு கெட்—டு—கெதர் பார்ட்டிக்கான வசூல் பொறுப்பை அவன் ஏற்றுக் கொண்டிருந்தான்.

தோல் பையும், ரசீதுப் புத்தகமுமாக வழியில் வந்து கொண்டிருந்தவன் நித்யாவைப் பார்த்ததும், ''உங்களைப் பார்க்கத்தான் வந்தேன்'' என்றான்.

''வசூலுக்கா?'' என்று புன்னகை செய்தாள் அவள். மாதவனுடன் படித்து, மாதவனைக் காதலித்து, மாதவனையே மணமுடித்துக் கொள்ளப் போகும் இன்ஜினியர் மகள், நித்யா.

''இல்லை.. இல்லை... உங்களுக்கான தொகையை நேற்றே மாதவன் கொடுத்துவிட்டான்.''

''அப்படியா?''

''ஆமாம். 'உங்கள் அப்பா காம்ப் போயிருக்கிறார். வந்ததும் தரவேண்டும்' என்று சொல்லிக் கொண்டிருந்தீர்களாம்., அதனால்,... அவனே கொடுத்து விட்டான்.''

''ரொம்ப அட்வான்சாக இருக்கிறீரே.''

''இருக்க வேண்டாமா,... வருங்கால மனைவி ஆயிற்றே!'' சிரித்தான், ராம்குமார்.

''சரிதான். நீங்களே நிச்சயம் பண்ணி, முகூர்த்தத்தையும் முடித்து விடுவீர்கள் போலிருக்கே!''

''நிச்சயமாய்ச் செய்வேன். நம் குரூப்பில் நடக்கப் போகும் முதல் திருமணம் இதுதான். அதுமட்டும் இல்லை. காதலித்துக் கல்யாணம் செய்து கொள்ளப் போகும் முதல் ஜோடியும் நீங்கள்தான். ஆகவே இவ்வாண்டு புது வருஷ நிகழ்ச்சியை ரொம்பச் சிறப்பாய்க் கொண்டாடப் போகிறோம்.''

''தாங்க் யூ ராம்.''

''அப்புறம்... நான் உங்களைப் பார்க்க வந்த சமாசாரமே வேறே.''

''என்ன?''

''உங்களுக்கு என்னை நன்றாகத் தெரியும். எல்லோரிடமும் சரளமாய்ப் பேசுவேன். உங்களிடம் பேசுவது போலத்தான் சுகந்தியிடமும் பழகினேன். ஆனால்... ஆனால்... சுகந்தி அதை வேறு விதமாய்க் கற்பித்துக் கடிதம் எழுதி விட்டாள்... இதோ அந்தக் கடிதம்...'' பாண்ட் பையிலிருந்து எடுத்துக் கொடுத்தான், ராம்குமார்.

படித்த நித்யா, வறட்சியுடன் புன்னகை செய்தாள்.

''ஆஸ்பத்திரியில் இருக்கிறபோது நெகடிவாகப் பதில் எழுதினால் உடல்நிலை பாதிக்கக் கூடும் என்று, தொடர்ந்து நானேதான் காலை டிபன் கொண்டு போய்க் கொடுத்தேன். அதனால் நான் அவளது காதலை ஏற்றுக் கொண்டதாக அர்த்தம் பண்ணி இருப்பாள், சுகந்தி. ஆனால்... எனக்கு அம்மாதிரி எண்ணம் துளிக்கூட இல்லை...''

''......''

''மாதவனிடம் இதைச் சொன்னால் விபரீதமாக ஏதும் ஆகிவிடுமோன்னுதான் உங்களிடம் சொல்லவந்தேன். சுகந்தியிடம் நீங்கள்தான் என் நிலையைப் பக்குவமாய் எடுத்துச் சொல்லி, அவள் மனத்தை மாற்ற வேண்டும். எனக்காக இந்த உதவியைச் செய்வீர்களா...?'' தயங்கிக் கேட்டான், அவன்.

நித்யா, சிலைபோல் தலையசைத்தாள்.

சூர்விளக்குகளின் மத்தியில் மத்தாப்புகளின் வெளிச்சம் கண்ணைப் பறித்தது.

சித்ரான்னங்களைச் சிலர் ருசி பார்க்க, வேறு சிலர் ஐஸ்கிரீம் கப்புடன் ஆர்க்கெஸ்ட்ராவுக்கு ஏற்ப ஆடிக் கொண்டிருந்தனர்.

''டியர் ஃபிரெண்ட்ஸ், அனைவருக்கும்

தமிழினியன்




புத்தாண்டு வாழ்த்துக்கள்.''

''இந்த அருமையான சந்தர்ப்பத்தில் ஒரு மகிழ்ச்சியான செய்தியைச் சொல்லப் போகிறேன். நம் சங்கத்தின் உறுப்பினர்களான மாதவனும், நித்யாவும் ஒருவரை ஒருவர் மனமார விரும்பி, வரும் தை மாதம்...''

''எக்ஸ்க்யூஸ் மீ'' என்று எழுந்தாள் நித்யா.

இசைத்துக் கொண்டிருந்த ஆர்க்கெஸ்ட்ரா சட்டென நின்றது.

ஆட்டமும், பாட்டும் மறைந்து, அனைவரின் பார்வையும் நித்யாவைச் சூழ்ந்து கொண்டன. நித்யாவோ, அருகில் இருந்த மாதவனை அருவருப்புடன் பார்த்துவிட்டுச் சொன்னாள்:

''நானும் மிஸ்டர் மாதவனும் ஒருவரை ஒருவர் காதலித்தோம் என்பது உண்மைதான். ஆனால்... அது இறந்த காலம்... இப்போது நான் அவரைக் காதலிக்கவில்லை..''

''நித்யா...'' அதிர்ச்சியுடன் குறுக்கிட்டான், மாதவன்.

''வெயிட் பிளீஸ்'' என்று கையமர்த்தி விட்டு மறுபடியும் சபையோர் பக்கம் திரும்பினாள், நித்யா.

''காதல் என்பது இயல்பாகப் பூத்து நளினமாக வளர வேண்டிய அற்புதமான உறவு. அது புரியாமல் ஒரு பெண் எப்படியாவது கல்யாணமாகிக் கையைவிட்டுக் கழிந்தால் போதும் என்று எண்ணுவதும், அதற்காக யாரையேனும் அவள் காதலிக்க மாட்டாளா என்று அவசரப்படுவதும் கேவலமான காரியம். அப்படிஓர் ஈனச்செயலில்தான்மாதவன் ஈடுபட்டிருக்கிறார்...''

கசமுசாவென்று சலசலப்பு ஏற்பட்டது கூட்டத்தில்.

''சொல்கிறேன், கேளுங்கள். மாதவனின் தங்கை சுகந்தி ஆஸ்பத்திரியில் இருந்தபோது ராம்குமார் அவளுக்கு உதவி ஒத்தாசைகள் செய்து வந்தார். சுகந்தியும் சரி, ராம்குமாரும் சரி, இருவருமே யதார்த்தமாய்த்தான் பழகினார்கள். ஆனால், மாதவன் இருவருக்கும் காதல் முடிச்சுப் போடும் நப்பாசையில், இவரே தங்கையைப் போலக் காதல் கடிதம் எழுதி இருக்கிறார், ராம்குமாருக்கு. இல்லையா, மிஸ்டர் மாதவன்.''

''ஆங்... அது... வந்து... அது...''

''தடுமாற வேண்டாம். இதோ இருக்கிறது அக்கடிதம். நீங்கள் எனக்கு எழுதிய கடிதங்களை எல்லாம் வைத்துச் சரிபார்த்தேன். இது உங்கள் கையெழுத்துத்தானே?''

மாதவன் தலைகுனிந்தான்.

''நண்பர்களே... காதலை கடைச்சரக்காய் நினைத்த மாதவன் வாழ்க்கைக்குத் தகுதியற்றவர் என்பது என் அபிப்பிராயம். அவரிடமிருந்து தப்பித்தது என் அதிர்ஷ்டம்தான். என்றாலும், தாய் தகப்பன் இல்லாத சுகந்திக்கு இதுபோல் ஓர் அண்ணன் கிடைத்ததை எண்ணி வருந்தாமல் இருக்க முடியவில்லை, ஸாரி!''

உட்கார்ந்தாள் நித்யா.

நின்று போன கிதார் இசை நீண்ட நேரம் கழித்து மீண்டும் ஒலிக்கத் தொடங்கியது. ஆனால், சுருதி சேராமல்...





* ஓடாத குழந்தை ரயில்

கள் வேகத்தைக்கட்டுப்படுத்தயாரும் இல்லை; எதுவுமில்லை. பயத்துடன்தான் நடக்க வேண்டும் என்பது பரிதாபம். வாகனப் போக்குவரத்தைத் தடை செய்தால் தேவலை. அட்லீஸ்ட் வேகத் தடைகளையாவது நாலைந்து போட்டுக் கட்டுப் படுத்தப் பட வேண்டும்.

**பா**லத்தைத் தாண்டி, அந்தண்டை போனால்தான் முக்கொம்பின் முழுப் பரிமாணமும் தெரியும். பிரும்மாண்டமான பூங்கா. காவிரித் தண்ணீரில் இறங்கிக் கொண்டு நின்று, சிறுசிறு மீன்கள் கால்களை முத்தமிடுவதை ரசித்தபடி அலுப்புத் தீரக் குளித்துவிட்டுக் குடும்பத்துடன் உட்கார்ந்து பேச, சாப்பிட, ஏன் கொட்டாவி விட்டபடி தூங்கக் கூட வசதி இருக்கிறது. குடி தண்ணீர் வசதியை நிச்சயம் பாராட்டலாம். நிறையக் குழாய்கள். சுவையான காவிரித் தண்ணீரைக் குடித்துக் கொண்டே இருக்கலாம்.

இன்னொரு வித்தியாசமான விஷயம் குப்பைத் தொட்டிகள். ஒவ்வொரு குப்பைத் தொட்டியும் ரொம்ப ஆர்ட்டிஸ்டிக்காக இருக்கின்றது. கலைநயத்தைக் கெடுக்க விருப்பமில்லாமலோ என்னவோ, வருகிறவர்கள் சாப்பிட்ட பின் இலைகளைத் தொட்டியில் போட மனமில்லாமல், வெளியிலேயே போட்டு விடுகிறார்கள். பொதுமக்களின் இந்த மனோபாவம் ரொம்ப ரொம்ப அசிங்கமாக இருக்கிறது.

காவிரியிலிருந்து கொள்ளிடம் தனியாகப் பிரிந்து நடுவில் இடம் கொடுக்கும் நிலப்பகுதியின் ஆரம்ப இடம்தான் முக்கொம்பு. இங்கு ஓடும் காவிரியில் புதை



* முக்கொம்பு நுழைவாயில்

மணல் பகுதிகள் அதிகம். புது மாப்பிள்ளைகள் உட்படப் பலர் சிக்கி மடிந்துள்ளனர் என்று சொல்லப்படுகிறது. நாங்கள் சென்று வந்த பிறகு கூட அண்மையில் இரண்டு இளம் பெண்கள் குளிக்கச் சென்று புதை மணலில் சிக்கி மடிந்து போயிருக்கிறார்கள். இத்தனைக்கும் முக்கொம்பைப் பராமரிக்கும் பொதுப் பணித் துறை, 'இது புதை மணல் பகுதி. நீச்சல் தெரிந்த பலர் கூட இங்கே சிக்கி, மரணமடைந்துள்ளனர்' என்று கொட்டை எழுத்துக்களில் எழுதி ஆங்காங்கே வைத்துள்ளது. இந்த எச்சரிக்கைகளையெல்லாம் அசட்டை செய்துவிட்டு, நீரில் குளிக்கப் போய், மூழ்கிச் செத்தால் யார் பொறுப்பு? வேண்டுமானால் மக்கள் அதிகம் குளிக்க வரும் இடங்களில் ஆற்றோரமாய், பாதுகாப்புச் சங்கிலிகள் அமைக்கலாம். இந்த விஷயத்தில் பொதுமக்கள்தான் ஜாக்கிரதையைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று தோன்றுகிறது.

கடைசியாய் ஒரு விஷயம்... திருச்சி வரை போகிறீர்களா? அப்படியே முக்கொம்பையும் ஒரு தடவை விஸிட் பண்ணுங்க சார்! **It's worth visiting!**

— ஜூலி

# 7

(அத்தியாவசியமான இடைச் செருகல்)

"அப்புறம் என்னய்யா? அந்த சராகா மானேஜர் சிவம்தான் சாவியை எடுத்துக் கொடுத்து, ரகசிய ஃபைல்களைப் பார்த்துக் கொள்ளும்படி அருணிடம் சொல்லிவிட்டாரே! அவன் தனக்குத் தேவையான அந்த மருந்து ஃபார்முலாவை எடுத்து, லேகாவிடம் தந்துவிட வேண்டியதுதானே? கதை முக்கால் வாசி முடிந்துவிட்டது போலிருக்கிறதே!" என்று கதை சொல்லி வந்த வேதாளத்திடம் குறுக்குக் கேள்வி கேட்டார் அற்புதசாமி.

வேதாளம் நாளொன்றுக்கு அரை டஜன் ஜர்தா பீடா போட்டுக் காவியேறிய பற்களைக் காட்டிப் பகபகவென்று சிரித்தது. "உமக்கு அவசரசாமி என்று பெயர் வைத்திருக்க




முகுந்தன்

லாம்.... சரி, ஃபார்முலா சுலபமாகக் கிடைத்து விடுகிறது என்றே வைத்துக்கொள்வோம்.... இன்னும் எத்தனை முடிச்சுகள் போட்டு வைத்திருக்கிறேன்.... அதையெல்லாம் அவிழ்க்க வேண்டாமா?"

"அதென்ன பிரமாதம்! சிவத்தைப் போல இன்னும் சில பேர் கதையிலே மூக்கை நீட்டி சத்யாவுக்கும் அருணுக்கும் உதவி செய்தால் முடிச்செல்லாம் தன்னாலே அவிழ்ந்து போகிறது....! என்கிட்டே விட்டால் நானே மீதிக் கதையைச் சொல்லி முடிக்கிறேன்!"

வேதாளம் அற்புதசாமியை அலட்சியத்துடன் பார்த்தது. "சரி, நீர் கதை சொல்லும்; நான் கேட்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை. எங்கேயாவது உமக்குத் திணறல் ஏற்பட்டுக் கதை சொல்லத் திண்டாடினால் என்னிடம் விட்டு விட வேண்டும்! சரியா?"

அற்புதசாமி ஒப்புக் கொண்டு, சொல்ல ஆரம்பித்தார்.

வழக்கப்படி, போன் காலை எதிர்பார்த்துப் பச்சை நிறக் கார்ப்பெட் விரித்த அறையில் நடைபயின்று கொண்டிருந்தார் அந்தப் பெரிய மனிதர்.

நேரம் ஆக ஆக, எல்லாம் நல்லபடியாக நடந்து முடிய வேண்டுமே என்ற கவலை அவரை அரிக்கத் தொடங்கியது. போன் கால் வராமலே போய் விடுமோ என்ற சந்தேகம் வேறு அவ்வப்போது எழுந்து பயமுறுத்திக் கொண்டிருந்தது. சந்திப்பு உண்டா இல்லையா என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளலாமென்றால், எந்த நம்பருடன் தொடர்பு கொள்ள வேண்டும் என்பது கூட அல்லவா அவருக்குத் தெரியாது!

கையைப் பிசைந்து கொண்டார். கட்டிலுக்கு அருகே சிறிய மேஜை மீதிருந்த பெட்டியிலிருந்து ஒரு சுருட்டை எடுத்து, நுனியைக் கடித்துத் துப்பி, வாயில் வைத்துப் பற்ற வைத்துக் கொண்டார். உயர்ந்த வர்ஜினியா புகையிலையின் மணத்தை அனுபவிக்கத் தொடங்கினார்.

மூன்று முறை கூட உறிஞ்சியிருக்க மாட்டார். போன் ஒலித்தது.

"ஐயா! நான்தாங்க முப்பத்திரண்டு பேசறேன்!"

"பல்லைக் காட்டாதீர்! இங்கே என் மேலே வந்து இடிக்கிறது!" என்று கிண்டல் செய்தது மறுமுனைக் குரல்.

"சொல்லுங்க ஐயா! பார்ட்டியை எங்கே பார்க்கலாம்?"

"எங்கேயும் பார்க்க முடியாது!"

"ஏனுங்க ஐயா?"

"பார்ட்டி கொண்டு வந்த பணம் பறி போய்விட்டது!"

"எப்படி ஐயா? எப்படி?"

"பார்ட்டி ஹோட்டலில் வந்து நுழைந்திருக்கிறார்.... அவர் வரப் போவதை எப்படியோ மோப்பம் பிடித்துக் காத்திருந்து, பணத்தைத் தட்டிக் கொண்டு போய் விட்டான் அந்த ராஸ்கல்!"

"யாருங்க அது?"

"பெயர் சொன்னால் தெரிந்து விடுமா உமக்கு.....? உடனே அவனைத் தேடிப் பிடித்துத் தீர்த்துக் கட்டி விடுவீராக்கும்!"

"உத்தரவு கிடைத்தால் முயற்சி பண்ணிப் பார்க்கலாம்ங்க. எனக்கு டிரேட் யூனியன் புள்ளிகள் சிலரைக் கணக்குத் தீர்த்த அனுபவம் உண்டுங்க...."

"அப்படியா! பெயர் சொல்றேன்: சத்யா!"

"ஆள் எப்படி இருப்பானுங்க?"

"தமிழ்ச் சினிமா பார்க்கிற வழக்கம் உண்டா?"

"இந்த ஏழைக்கு அதுக்கெல்லாம் நேரம் ஏதுங்க?"

"சினிமாப் பத்திரிகையாவது பார்ப்பீரா?"

"எப்பவாவது புரட்டுவேனுங்க...."

"டி. ராஜேந்தர்னு ஒரு பிரபல ஆசாமி.... அவரைப் போலவே இந்த சத்யாவும் இருப்பான்... தாடி, மீசை உண்டு.... கறுப்புக் கண்ணாடி போட்டிருப்பான்...."

"ராத்திரியிலே கூடவா?"

"கிண்டலா....? அந்த சத்யா அகப்படுகிறானா, பாரும்!"

"சரிங்க ஐயா!"

பெரிய மனிதர் போனை வைத்தார். மணியடித்து வேலையாளை அழைத்தார். "இந்த மாசம் வந்திருக்கிற தமிழ்ச் சினிமாப் பத்திரிகை அத்தனையையும் வாங்கிட்டு வா! ஓடு!" என்று சொல்லி சில்க் ஜிப்பா பாக்கெட்டிலிருந்து நூறு ரூபாய்த் தாள் ஒன்றை எடுத்து வீசினார்.

"என்ன, ஏதாவது நியூஸ் உண்டா?"— லேகா கேட்டாள்.

அருணும் லேகாவும் பிரபல ஹோட்டல் ஒன்றின் ஏ.ஸி. அறையில் உட்கார்ந்திருந்தார்கள். அந்த ஹோட்டலில் தயாராகும் சிற்றுண்டிகள் எத்தனை பிரசித்தமோ அத்தனை பிரசித்தம் சர்வர்களின் மெத்தனமும். இதன் காரணமாகவே பேசுவதற்கு நிறைய விஷயங்கள் உள்ளவர்களே அங்கு டிபன் சாப்பிட வருவார்கள். பெண்ணைப் பெற்றவர் ஒருவர், ஒரு பிளேட் போண்டா சாம்பாருக்கு ஆர்டர் கொடுத்துவிட்டு, அது வந்து சேர்வதற்குள் பிள்ளையின் தந்தையுடன் கல்யாண சம்பந்தமே பேசி முடித்துவிட்டதாகச் சொல்வார்கள்....

"நியூஸ்தானே? நிறைய இருக்கிறது!" என்றான் அருண் மெனு கார்டைப் பிரித்தபடி. "ரகசிய ஃபைல்கள் உள்ள காபினெட்டின் சாவியே என் கைக்குக் கிடைத்து விட்டதாக்கும்!"

"வெரிகுட்! ஃபார்முலா பேப்பர்கள் ஏதேனும் கண்ணில் பட்டதா?"



"ஏகப்பட்ட ஃபார்முலாக்கள்.... ஆனால் எது எந்த மருந்துக்கு என்று கண்டுபிடிக்க முடிந்தால்தானே? எல்லாமே கெமிக்கல் பெயர்கள், சிம்பல்களாக இருக்கின்றன!"

"நீங்கள் பி.எஸ்ஸி கெமிஸ்ட்ரிதானே? உங்களுக்குக் கொஞ்சமாவது புரியாதா?"

"விஷயம் தெரியாமல் பேசாதே லேகா! நான் ஃபர்ஸ்ட் கிளாஸ்லே பாஸ் பண்ணினதே ஒருவித அதிர்ஷ்டம்தான்!"

"எப்படி?"

"நான் பரீட்சை எழுதின அதே வருஷம் ஒரு மினிஸ்டருடைய பையனும் பி.எஸ்ஸி எழுதியிருந்தான்.... அவன் ஒற்றைப் படையிலே மார்க் வாங்கவே, எல்லாருக்கும் ஐம்பது மார்க் கூட்டிப் போடணும்னு மினிஸ்டர் உத்தரவு போட்டுட்டார். அப்படிப் போட்டதிலேதான் எனக்குப் ஃபர்ஸ்ட் கிளாஸ் மார்க் கிடைத்தது. இல்லையென்றால் நான் பெயிலாகித் தொலைச்சிருப்பேன்!"

"சரி, ஒன்று செய்யுங்களேன். எல்லா ஃபார்முலா பேப்பர்களையும் எடுத்து என்னிடம் தந்துவிடுங்கள்!"

"ஐயோ! ஆறேழு ஃபைல்களை அப்படியே அபேஸ் செய்வதாவது! அது நடக்காது, லேகா!"

"போகட்டும்... கொஞ்சம் கொஞ்சமாக எல்லா ஃபார்முலாக்களுக்கும் ஜெராக்ஸ் காப்பி எடுத்துவிட்டால்....?"

"அதற்கும் நிறையப் பேப்பர்களை ஆபீஸிலிருந்து வெளியே கொண்டு வர வேண்டியிருக்குமே? அது ஆபத்தான விஷயம்!"

லேகா ஒரு விநாடி யோசித்தாள். "ஓகே! இப்படிச் செய்வோம். எங்கப்பாவிடமிருந்து மைக்ரோ ஃபிலிம் கேமரா வாங்கி வந்து தரேன்... எல்லாவற்றையும் 'கிளிக்' பண்ணிக் கொடுத்து விடுங்கள்!"

"அதுதான் சுலபமான வழி!" என்று அருணும் ஒப்புக் கொண்டு நாற்பது நிமிடம் வேறு பேச்சுக்களில் கழிந்த பின்னர், கட்லெட் வந்து சேரவும், வெட்ட ஆரம்பித்தார்கள்.

மறுநாள் லேகா கேமராவைக்



**தூதுவன்: நடந்து முடிந்த போரில் இரண்டுபக்கமும்சமமாகச்சேதம்அடைந் திருப்பதாக அந்நாட்டு அரசர் கூறு கிருர் அரசே!**

**அரசன்: அதனுல்?**

**தூதுவன்: போரை டிராவில் முடிந்ததாக அறிவிக்கச் சொல்கிருர்!**

**— புதூர் ஆர். பிரசாத்**

கொண்டு வந்து கொடுத்ததுடன் அதை எப்படி இயக்க வேண்டும் என்றும் சொல் லிக் கொடுத்தாள். அருண் ஏற்கெனவே எடுத்து வைத்திருந்த ஃபைல்களைத் தன் அறையில் வைத்து, ஒருவரும் பார்க்காத நேரத்தில் போட்டோ எடுத்தான். மாலையில் கேமராவை லேகாவிடம் கொடுத்தான். "ரொம்ப தாங்க்ஸ் அருண்! நாளைக்குப் புது சாக் ஃபிலிம் லோட் பண்ணிக் கொண்டு வருகிறேன்!" என்றலேகாவின் உதட்டோரப் புன்னகையிலும்ஒருகோணல்பார்வையிலும் சிக்கிக் கொண்டு அன்றிரவெல்லாம் தூக்க மின்றித் தவித்தான்.

இரண்டாம் நாளும் முடிந்த வரையில் ஃபார்முலாக்களைப் படமாக்கினுன். முதல் நாளை விட அன்று இடையூறுகள் அதிக மிருந்தன. யாராவது எதையாவது கேட்டுக் கொண்டு அடிக்கடி அறைக்குள் வந்து போனுர்கள்.

ஒருவழியாக நான்கு நாட்களுக்குள் எல்லா ஃபார்முலாக்களையும் போட்டோ எடுத்துக் கொடுத்துவிட்டான்.

அவனுக்கிருந்த ஆச்சர்யமெல்லாம் ஒரே ஒரு விஷயத்தில்தான். சாவிக் கொத்தைத் தன்னிடம் தூக்கிக் கொடுத்த மானேஜர் சிவம் அதைத் திருப்பிக் கேட்கவே இல்லை யே — ஏன்? ரகசிய ஃபைல்களை அவன் அடிக் கடி தன் அறைக்கு எடுத்துச் செல்வதைக் கண்கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந் தும், 'ஜாக்கிரதையாகக் கையாளு! என்றோ அல்லது வேறுவிதமாகவோ எச்சரிக்கை எதுவும் செய்யவில்லையே — ஏன்? ஆர்வக் கோளாறினுல் அரைமணிக்கு ஒரு தரம் லேகா அவனது அறைக்குப் போவதைக் கண்டும் காணுதது போலிருந்தாரே — ஏன்?

ஏன்? ஏன்? ஏன்?

மேலும் இரண்டு நாள் கழித்து லேகா அவனிடம் வந்தாள். முகத்தில் வழக்கமான உற்சாகமில்லை.

"அருண்! நம்முயற்சியெல்லாம்வேஸ்ட்! நீங்கள் போட்டோ எடுத்துக் கொடுத்த எதிலும் எங்க அப்பா தேடுகிற விஷயம் இல்லை.... வேறு இடத்தில்தான் தேடிப் பார்க்க வேண்டும்...." என்று வருத்தத்துடன் அவள் சொன்னபோது, அருணின் மூளைக் குள் ஆயிரம் வாட் பல்பு ஒன்று பிரகாசித் தது. ரகசியம் என்று குறிக்கப்பட்ட ஃபைல் களில் அவன் தேடுகிற ரகசிய ஃபார்முலா நிச்சயமாக இல்லை என்பது தெரிந்துதான் சிவம் அவ்வளவுதாராளமாகநடந்துகொண் டிருக்கிருர் போலிருக்கிறது!

"என்ன! ஆட்டு மந்தையையே திருடிய வன் போலவிழிக்கிறீர்களே! நான் சொன்ன விஷயம் மூளையிலே பதிவாயிற்ரு இல்லை யா....?"

தலையாட்டினுன். "மேலே என்ன செய்ய லாம் லேகா? யாரைப் போய்க் கேட்பது? அதுதான் யோசனையாக இருக்கிறது...."

அவனுக்குப் பதில் சொல்வது போல, மேஜை மீதிருந்த போன் ஒலிக்கவும், எடுத் துக் கேட்டான்.

"முட்டைக் கண்ணு! நான்தான்!" — என்ற சத்யாவின் குரலைக் கேட்டதும் உடம்பில் தனி உற்சாகம் ஊற்றெடுத்தது.

"சொல்! என்ன விஷயம்?"

"மெரீனுவிலே உழைப்பாளர் சிலை இருக் கிறதல்லவா?"

"பேஷாக, திடமாக, இருக்கிறது.... பத்து நாளைக்கு முன்னுலே கூடப் பார்த்தேன்... அதற்கென்ன?"

"அந்தச் சிலைக்குப் பின்னுல் கொஞ்சம் தள்ளி, மணலில் உட்கார்ந்திரு.... இன்று சாயந்தரம் ஆறரை.... வர்றியா?"

"வந்தால் என்ன தருவாய்?"

"வந்து பார், தெரியும்!"

"சரி, கட்டாயம் வரேன்!" — போனை வைத்தான்.

லேகா குறும்புச் சிரிப்புடன் கேட்டாள். "எங்கேஜ்மெண்ட்டாக்கும்? எங்கே? யாரைச் சந்திப்பதாக உத்தேசம்?"

"பீச், காதலி, இச்.... இச்....!"

அவள் பொய்க் கோபம் காட்டி விட்டு எழுந்து போனுள்.

**க**டற்கரை மணல் இன்னும் சூடாக இருந்தது. அருணின் கண்கள் கலங்கரை விளக்கத்தின் விளக்குக்குப் போட்டியாக நாலாபுறமும் சுழன்று சுழன்று சத்யா வரு கிருளு என்று வலை வீசின. மனமோ, 'எதற் காக வரச் சொல்லியிருப்பாள்?' என்று பல வித கற்பனைகளில் ஈடுபட்டிருந்தது.

சுண்டல், முறுக்கு, வேர்க்கடலை வியா பாரிகள் மொய்த்தார்கள். எல்லாரையும் விரட்டியடித்தான். எதிரிலிருந்த மணலைக் கோபுரம் போல் குவித்தும் கலைத்தும் வெட்டிப் பொழுது போக்கினுன். மணி ஏழும் ஆகிவிட்டது. இன்னும் ஓர் ஐந்து நிமிஷம் பார்த்துவிட்டுப் புறப்பட வேண்டி யதுதான் என்று தீர்மானம் செய்து கொண் டான்.



**தயாரிப்பாளர்: படத்தில் கோர்ட் சீன் இருக்கா?**

**கதாசிரியர்: இல்லே. ஒருவேளை படம் வெளி வந்ததும் வரலாம்!**

**— கீழை அ. கதிர்வேல்**

---

மடித்துக் கட்டிய வேட்டி, தலையில் முண்டாசு, கையில் பெரிய தகர டின் — இவற்றுடன் ஒரு ஆள் எதிரில் வந்து நின்று, "கைமுறுக் வேணுமா சார்? சூடான கைமுறுக்!" என்றான், கட்டைக் குரலில்.

"வேணும் போப்பா!"

"சீப்பா தரேன் சார்!"

"வாழைப்பழம்தான் சீப்புச் சீப்பாகத் தருவார்கள்... முறுக்குக் கூடவா?"

"பார்த்தா ரீஜண்ட்டா இருக்கே... இப்படி அறுக்கிறியே சார்!"

"அப்படியும் நீ போக மாட்டேங்கறியே!"

"சாம்பிள் வேணு தின்னு பாரு சார்... ருஸியான முறுக்!"

"ஏன்யா உசிரை வாங்கறே?"

"சாம்பிளுக்குத் துட்டு வேணாம் சார்!"

"யோவ்! நீ போக மாட்டே?"

"போறதுக்காக வரல்லே சார்..." என்ற முறுக்கு வியாபாரி டின்னை வைத்து விட்டு, பக்கத்தில் உட்கார்ந்து, "என்னடா முட்டைக் கண்ணு! முறுக்குத் தின்ன முறுக்கிக் கொள்றியே!" என்று சிரித்தான்.

"டேய்! சத்யா! என்னடா வேஷம் இது!"

"வேஷம் போடறதே வாழ்க்கையாய்ப் போச்சுடா!" — அலுத்துக் கொண்டான்.

"டின்னிலே நிஜமாகவே முறுக்குத் தானா?"

"நீயே பார்த்துக் கொள்!" என்று சத்யா திறந்து காட்டவும், அருண் டின்னுக்குள் கை விட்டான். மேலாகச் சில முறுக்குகள், அவற்றின் அடியில் —

"என்னடா இது பாக்கெட்?"

"பணம்! புத்தம் புதுக் கரென்ஸி நோட்!"

"ரியலி?"

"நூறு ரூபாய்க் கட்டு.... இரண்டு லட்சத்துக்கு!"

"ஏதுடா? கொள்ளை கிள்ளை எதுவும் அடித்தாயா?"

"கிட்டத்தட்ட அப்படித்தான்... அப்புறம் விவரம் சொல்றேன்.... கையிலே பை ஏதாவது இருக்கிறதா?"

"இல்லையே!"

"பரவாயில்லை.... பிரவுன் பேப்பரில் அழுத்தமாகச் சுற்றி, ட்வைன் போட்டுக் கட்டியிருக்கிறேன்..., எடுத்துக் கொண்டு போய் வீட்டிலே வை...."

அருண் தயங்கினான். "ஆபத்தில்லையே?"

"என்னிடம் இருந்தால்தான் ஆபத்து. அதனால்தான் உன்னிடம் ஒப்படைக்கிறேன்...."

சட்டென்று கேட்கத் தோன்றியது அருணுக்கு. "அதிருக்கட்டும் சத்யா.... உனக்கு எங்க சராகாவைப் பற்றி ஏதாவது விஷயம் தெரியுமோ?"

"உனக்குத் தெரிந்ததைவிட அதிகமாகவே தெரியும். ஒன்று மட்டும் சொல்லவா? எயிட்ஸ் நோய்க்கு நல்ல மருந்து கண்டு பிடித்துவிட்டு அதைத் தயாரிக்காமல் உட்கார்ந்திருக்கிறார் புராணி.... சுத்தக் கல்லுப் பிள்ளையார்டா அந்த ஆள்!"

"கரெக்ட்! ஆமாம், அந்த மருந்து ஃபார்முலா இருக்கிற இடம் பற்றி...."

"அந்தவிஷயத்திலே பாணி கெட்டிக்காரத்தனமாகத்தான் நடந்து கொண்டிருக்கிறார். ஆபீஸ், பாக்டரி, பங்களா, எதிலும் வைக்கவில்லை அந்தப் பேப்பர்களை...."

அருணின் இதயத் துடிப்பு அதிகமாகியது.

"எவனாவது திருடி விடுவான் என்ற பயத்தினால் தன் தங்கை மகளிடம் கொடுத்து வைத்திருக்கிறார்...."

"இஸிட்? அந்தப் பெண்ணின் பெயர் என்ன? எங்கே இருக்கிறாள்?"

"அம்பிகா என்று பெயர். அடையாறிலே தனி பங்களாவிலே அம்மாவுடன் இருக்கிறாள்... அப்பா இல்லை.... தினமும் சாயந்தரம் அடையாறு கிளப்லே டென்னிஸ் ஆட, பழங்கால ஆஸ்டின் காரில் வருவாள்.... இன்னமும் கல்யாணம் ஆகவில்லை. போதுமா தகவல்? அதுசரி, உனக்கு எதற்காக அந்த ஃபார்முலா?"

"நீ மட்டும்தான் எனக்கு சஸ்பென்ஸ் வைக்கலாமென்று சட்டமா? நான் வைக்கிற சஸ்பென்ஸ் இது!"

"ஏதோ தப்புத் தண்டாவிலே இறங்கியிருக்கிறாய் என்று புரிகிறது.... அது உன் தலைவலி.... சரி பாக்கெட்டை வாங்கிக் கொண்டு கிளம்பு. நேரமாகிறது!"

அருண் அவனிடமிருந்து பணப் பார்சலைப் பெற்றுக் கொண்டதும், "அப்புறம் சந்திக்கிறேன்!" என்று சொல்லி மணலில் வேக வேகமாக நடந்து நிமிடத்தில் இருளில் மறைந்தே போனான் சத்யா.

சாலைக்கு அருண் வந்தபோது ஆட்டோ ரிக்ஷா ஒன்று தலைதெறிக்கும் வேகத்தில் வரவும், கைகாட்டி நிறுத்தினான். "சென்ட்ரலுக்குப் போவுது சார் வண்டி!" என்று ஆட்டோ டிரைவர் ஆரம்பிக்க, சட்டென்று ஏறி உட்கார்ந்து, "எனக்கும் அங்கேதான் போக வேண்டும்!" என்று பொய்யை உதிர்த்தான் அருண்!

(தொடரும்)

# வரதட்சிணையை எதிர்த்து ஒரு போராட்டம்!

கதை: கவிதா

படம்: கரோ


அன்றிரவு சேகர் வீட்டில்...
பெண் அடக்கமா, அழகா இருக்கா. என்னடா சேகர், சம்மதம்தானே?
ஓ.கே.!


மறுநாள் சேகரின் தந்தை வந்து...
ஸார், பையனுக்குப் பெண்ணைப் பிடிச்சிருக்கு... லௌகீகம் பேசலாமா? வரதட்சிணை பத்தாயிரம் ரூபாய் போதும்...


திமுக்கிட்ட சிவராமன், மறுநாள் முடிவு தெரிவிப்பதாகக் கூறி அவரை அனுப்பி விட...
என்னாங்க, வந்த வரனை நழுவ விடாதீங்க!
வரதட்சிணை பத்தாயிரத்துக்கு எங்கே போவேன், ஜகதா?


படிப்பிலும் பேச்சுப் போட்டிகளிலும் வித்யா பெற்ற வெள்ளிக் கோப்பைகளை விற்றால் ஐயா-யிரம் தேறும். கட்டுரைப் போட்டிப் பரிசு ஐயாயிரமும் பாங்கில் இருக்கு...


விவரமறிந்த வித்யா...
நாலுநாள் டயம் கொடுங்க, அப்பா!







அன்புள்ள வித்யா,
உன் கடிதமும் பரிசு பெற்ற உன் கட்டுரையின் ஜெராக்ஸ் காப்பியும் கிடைத்தன.
வரதட்சிணையை எதிர்த்து நீ பேசியதற்கும் எழுதியதற்கும் கிடைத்த பரிசுகளே உன் கல்யாணத்துக்கு வரதட்சிணையாக உருமாறவிருக்கும் கொடுமையைத் தவிர்க்க...

...'தயவுசெய்து என்னைப் பிடிக்கவில்லை என்று கூறி விடுங்கள்' என்று என்னைக் கெஞ்சிக் கேட்டிருக்கிறாய். ஆனால் உன் விருப்பம் நிறைவேறப் போவதில்லை! என்ன செய்ய, உன் கடிதத்தையும் கட்டுரையையும் படித்த பிறகு உன்னை எனக்கு முன்னிலும் அதிகமாகப் பிடித்திருக்கிறதே! இப்படிக்கு, சேகர்.





# தென்றலுக்குள் ஒரு தீப்பிழம்பு

இருப்புக் கொள்ளாமல் தவித்தான் ண்ணன். கால்களோடு மனமும் நிலை கொள்ளாமல் பரபரத்தது. எத்தனை முறை விரட்டினாலும் திரும்பத் திரும்ப அதே இடத் துக்கு வருகின்ற எறும்பு மாதிரி, மனத்துக் குள் அந்த நினைவே வந்து வந்து அலைக்கழித் தது.

இவ்வளவு பெரிய வீட்டில் தனியாய் இருக்கிறோமே என்ற பய உணர்வும் எட்டிப் பார்த்தது. ஹாலில் இங்குமங்குமாக நடை போட்டு வியர்த்தான்.

இந்நேரம் ராதாவின் கற்பை அந்த இளை

ஞர்கள் சூறையாடி இருப்பார்களோ! நகைகளை மட்டும் பறித்துக் கொண்டு ஆளை விட்டிருப்பார்களோ?

இரண்டாவது விதமாய் நடந்திருந்தால் தேவலாமென்று மனம் நினைத்தது. அப்படியே நடந்திருக்கவேண்டுமென்று ஆண்டவனை ஒருகணம் மனத்துக்குள் பிரார்த்தனை செய்தான். — ஒருவேளை கொலை செய்திருந்தால்!

திரும்பவும் இருள் மண்டிக் கிடந்த அந்த இடத்துக்கு ஸ்கூட்டரில் சென்று பார்க்கவும் இவனது கோழை மனம் அஞ்சியது.

போலீசுக்குத் தகவல் தெரிவிக்கலாமென்றால் தன் மனைவியின் கற்பு பறிபோன விஷயத்தை மறுநாள் செய்தித் தாள்கள் நாறடிக்குமே என்று பயந்தான்.

'அதிருக்கட்டும். போலீசை விடு. கற்பைப் பறி கொடுத்த நிலையில் ராதா மீண்டும் வீட்டுக்கு வந்தால் மனதார அவளை உன் மனைவியாக ஏற்றுக் கொள்வாயா? நடந்த அசம்பாவிதம் அத்தனையையும் மறந்து, முன் போலவே எந்தவித விகல்பமான எண்ணமுமின்றி அவளோடு தாம்பத்யம் நடத்த உன்னால் முடியுமா?' என்றுகேட்டது மனசாட்சி...

கண்ணன்—ராதாவை மனைவியாக ஏற்று இன்றோடு மூன்று ஆண்டுகள் நிறைகின்றன.

இருவருமே வெவ்வேறு வங்கிகளில் உத்தியோகம் பார்ப்பவர்கள். தேவைக்கு மிஞ்சிய வருமானம் கிடைத்ததால் கண்ணன் படாடோப வாழ்க்கை நடத்தினான். வாலிபத்தில் தான் கண்ட கனவுகளை நனவாக்கினான். குழந்தைப் பேற்றைத் தள்ளிப் போடலாமென்ற யோசனைக்கு ராதாவும் சம்மதித்தாள்.

ஒவ்வொரு திருமண நாளிலும் அவர்கள் சொர்க்கத்தை வீட்டிற்கே இறக்குமதி செய்வார்கள்.

இன்றும் அப்படித்தான்!

வங்கிக்கு இருவருமே லீவு போட்டார்கள். வேலைக்காரிக்கு லீவு கொடுத்து அனுப்பினார்கள்.

காலையில் குளித்து முடித்து இருவரும் புத்தாடை உடுத்தி ஸ்கூட்டரிலேயே இஷ்ட தெய்வங்கள் அனைத்தையும் கும்பிட்டு வந்தார்கள். வரும் வழியிலேயே மூன்று வேளைக்கும் தேவையான உணவு வகைகளைக் கண்ணன் மறவாமல் வாங்கிக் கொண்டான். மாலைப் பொழுதானதும் மீண்டும் ஒருமுறை குளித்து விட்டு, கண்ணன் ஏற்கெனவே 'ரிசர்வ்' பண்ணி வைத்திருந்த ஒரு மலையாளப் படத்துக்குக் கிளம்பினார்கள்.

தியேட்டரில் படம் ஓடிக் கொண்டிருக்கையில் ராதா ஸீட்டில் நெளிந்தாள்.

"என்ன ராதா, மலையாளப் படம் என்றால் அப்படித்தான் இருக்கும்..." என்று கண்ணன் கிசுகிசுத்தான்.

"அதில்லைங்க. பின்னால் உட்கார்ந்திருக்கிறவன் காலால் நிமிண்டுறான்!"

"அப்படியா!" என்ற கண்ணன் சட்டெனத் திரும்பிப் பார்த்தான். அவன் படத்தை ஆழ்ந்து பார்ப்பதைப் போல் முகத்தை வைத்துக் கொண்டிருந்தான்.

"இனிமே ஒண்ணும் பண்ணமாட்டான்... நீபேசாமபடத்தைப்பாரு!" என்றுகண்ணன் ராதாவிடம் சொன்னபோது, பின்னால் உட்கார்ந்திருந்த நான்கு பேரும் தமக்குள் என்னவோ பேசிச் சிரித்தார்கள்.

'ஓ! நான்கு பேராய் வந்திருக்கிறார்களோ!' என்று கண்ணனின் மனம் சற்றே அஞ்சியது.

மீண்டும் நெளிந்த ராதா, "என்னங்க... திரும்பவும் அந்தக் கம்நாட்டி சில்மிஷம் பண்ணுது... இப்ப நீங்க எழுந்திரிச்சுக் கண்டிக்கிறீங்களா.... இல்லே, நான் கண்டிக்கட்டுமா?" என்று கண்ணனிடம் கத்தினாள்.

"கத்தாதே ராதா... பப்ளிக் ப்ளேசிலே அசிங்கமாப் போயிடும்... நீ வேணா இந்த ஸீட்டுக்குவந்திடேன்!" என்றுசொன்னவன் வேறு யாரோ ஓர் ஆடவனுக்குப் பக்கத்தில் தன் மனைவியை அமர்த்துவதா என்று பிறகு அசடு வழிந்தான்.

ராதா பற்களைக் கடித்தாள்.

இடைவேளை விட்டு அரங்கத்தில் விளக்குகள் ஒளிர்ந்ததும் ராதா 'சட்' டென எழுந்து நின்று திரும்பினாள். "ஏண்டா ராஸ்கல்ஸ். நீங்கள்லாம் அக்கா தங்கச்சி கூடப் பிறக்கல்லே...." என்று கத்தியவள் எச்சிலைக் கூட்டி அவர்களின் முகத்தில் உமிழ்ந்தாள்.

அதிர்ச்சியில் மிரண்டு விழித்த நான்கு இளைஞர்களும் எதுவும் பேசாமல் உடனே அங்கிருந்து வெளியேறினார்கள்.

சுற்றி உட்கார்ந்திருந்த எல்லாருமே அமைதி காக்க, ஒரு பெரியவர் மட்டும், "நல்லாச் சூடு கொடுத்தேம்மா!" என்று ராதாவைப் பாராட்டினார்.

"என்ன இருந்தாலும் நீ இப்படிப் பண்ணியிருக்கக் கூடாது ராதா!" என்ற கண்ணனை ராதா எரிப்பது போலப் பார்த்தாள்.

இடைவேளைக்குப் பிறகு அந்த நால்வரும் படம் பார்க்க வரவே இல்லை. கண்ணன் ராதாவுக்கிடையே எந்தப் பேச்சுமில்லை!

படம் விட்டு இருவரும் ஸ்கூட்டரில் வீடு திரும்பிக் கொண்டிருந்தபோது, இருள் மண்டிக்கிடந்த, ஜன நடமாட்டமில்லாத ஒரு சந்தின் முனையில் திடீரென்று நீளமான சவுக்குக் கம்பு ஒன்று குறுக்கிடவும் கண்ணன் ஏகமாய்ப் பயந்து ஸ்கூட்டரை நியூட்ரலுக்குக் கொண்டு வந்தான்.

தியேட்டரில் பின்னால் உட்கார்ந்திருந்த அந்த நான்கு இளைஞர்களும் நெருங்கி வந்தார்கள். அவர்களின் கையில் கத்தி பளபளத்தது.

"தியேட்டர்லே என்னம்மா கண்ணு கேட்டே.... எனக்கு அக்கா தங்கச்சியே

பட்டுக்கோட்டை ராஜா

கிடையாது'.... கொஞ்ச நேரம் நீ எனக்குத் தங்கச்சியாயிரு, இவன் உனக்கு மச்சானு யிருப்பான்.... அப்புறம் அவனுக்குத் தங் கச்சியாயிரு, நான் உனக்கு மச்சானுயிருப் பேன்!'' என்றபடியே ராதாவின் கையை ஒருவன் பிடித்திழுக்க, அவனது கையைப் 'பட்'டென்று உதறிய ராதா இருள் மண்டிய சந்துக்குள் தலைதெறிக்க ஓடினுள். நால்வரும் அவளைத் துரத்திக் கொண்டே ஓடினர்கள்.

தப்பித்தோம், பிழைத்தோமென்று கோழைக் கண்ணன், மனைவியை அந்தக் கொடியவர்களிடமிருந்து காப்பாற்ற முயற்சி செய்யாமல், ஸ்கூட்டரைக் கிளப்பிக் கொண்டு வீடு வந்தடைந்தான்.

சற்று நேரத்திற்கெல்லாம் போலீஸ் ஜீப் வந்து வாசலில் நிற்கவும் கண்ணன் வாசலுக்கு ஓடினுன்.

ஜீப்பிலிருந்து ராதா எந்தச் சேதமு மின்றி இறங்கினுள். ஆனுல் வியர்த்திருந் தாள்.

ஓடி வந்த கண்ணன், ''ராதா.... என் ஞச்சு?'' என்றுன்.

''நீங்கதான் ராதாவோட கணவரா... அவங்களுக்கு எதுவும் ஆகலே.... சும்மா நாலு ரவுடிகள் இவங்ககிட்டே கலாட்டாப் பண்ணியிருக்காங்க. யதேச்சையா ஒரு கள் ளச்சாராயக்கோஷ்டியைப்பிடிக்கிறதுக்காக அங்கே போன நான், எந்த அசம்பாவிதமும் நடக்காம காப்பாத்திட்டேன்.... அந்த நாலு ரவுடிகளையும் ஸ்டேஷனில் ஒப்படைச்சுட்டு இவங்களை விட்டுட்டுப் போகலாம்னு வந் தேன்!'' என்றுர் ஜீப்பை ஓட்டி வந்த இன்ஸ் பெக்டர்.

''தேங்க்யூ வெரிமச் இன்ஸ்பெக்டர்!'' என்று கண்ணன் அவர் கைகளைப் பற்றிக் கொண்டான்.

''பரவாயில்லே மிஸ்டர்.... இனிமே உங்க மனைவியைத் தனியா சினிமாவுக்கு அனுப் பாதீங்க.... நான் வரேன்!''

இன்ஸ்பெக்டரிடம் தன்னைக் கையா லாகாதவன் என்பதை ராதா காட்டிக் கொடுக்கவில்லையென்று நினைத்துக் கண் ணன் பெருமிதம் கொண்டான்.

வீட்டுக்குள் சென்று கதவைத் தாழிட்டு விட்டு, ''ராதா, நாம கும்பிட்ட தெய்வம் நம்மைக் கைவிடலே!'' என்று நெருங்கிய கண்ணனை நெட்டித்தள்ளியராதா, ''தொடா தீங்க.... இனிமே என்னைத் தொடற அரு கதை உங்களுக்கில்லே!'' என்று வெறிபிடித்த வள் போலக் கத்தினுள்.

''ராதா! நீ என்ன சொல்றே... உனக்கு என்னுச்சு? ஏன் பைத்தியம் பிடிச்ச மாதிரி உளர்றே?''

''இல்லே, நல்ல நிதானத்தோடதான் சொல்றேன்.... ஒரு பெண் ஒரு ஆணுக்குக் கழுத்தை நீட்டித் தாலி வாங்கறுன்னு, அவ னேட இந்திரிய சுகங்களைத் தீர்க்கிறதுக்காக மட்டுமில்ல.... இந்தத் தூய்மையான உடம் போட உள்ளத்துக்கும் எந்தப் பங்கமும் வராம நீதான் என்னை ஆயுள் முழுக்கப் பாதுகாக்கணும்னு அவன்கிட்ட மானசீகமா வேண்டிக்கிறு... நீங்க மூணு முடிச்சுப் போடறப்போ அய்யர் சொல்ற மந்திரத்துக்கு அர்த்தமே அதுதாங்க... ஆனு நீங்க அதுப் படி நடந்துக்கலே. இன்பம் தர்ற இயந்திரமா மட்டும்தான் என்னை நெனைக்கறீங்க... துன்பம் வர்றப்போ உங்களை மட்டுமே காப் பாத்திக்க நெனைக்கிற கோழை நீங்க... உங் களோடு வாழ இனிமே ஒருக்காலும் நான் சம்மதிக்க மாட்டேன்... நாளைக்கே நான் எங்க அப்பா வீட்டுக்குப் போறேன். குட் நைட் அண்ட் குட் பை!'' என்றவள் அறைக் குள் நுழைந்து கதவை அடைத்துக் கொண் டாள்.




(ஓர் அமெரிக்கக் கார்ட்டூன்)
(நன்றி: ஸ்பான்)

# நிழலின் அருமை

அறுபதாம்நம்பர் டவுன்பஸ்ஸிலிருந்து சின்னக் கருப்பன் இறங்குவதற்கும், பிக்ஷாண்டார் கோயிலில் கெட்டி மேளம் முழங்குவதற்கும் சரியாக இருந்தது.

ஒன்றுவிட்ட மாமாவின் மகனுக்குத் திருமணம். மாமா நேரில் வந்து பணம் பாக்கு வைத்துப் பத்திரிகை தந்திருந்தார். முறைப்படி அண்ணனும் மதனியும் தான் இந்தத் திருமணத்துக்கு வந்திருக்க வேண்டும். பெரிய கருப்பன் கூடக் கிளம்பிவிட்டார். ஆனல் மதனி சண்பகம், 'என்னையும் என் மூளிக் கழுத்தையும் பாருங்கோ, நான் எப்படி வர்றது?' என்று தெரியாத்தனமாய்ச் சொல்லிவிட, வந்ததே கோபம் அம்மாவுக்கு. 'துளித் தங்கம் கூட உடம்புலே இல்லாம இருக்கிறது அவமானம்னு இப்போவாவது தெரியுதாடி? உடனே அப்பன் வீட்டுக்குக் கிளம்பிப் போய், இந்தாய்யா, நீர் சோத்துக்கு உப்புக் கல் போட்டுச் சாப்பிடறவரா இருந்தா, பேசின பவுனை என்னோட கழுத்தில் போட்டுட்டு றுேவேலை பாருமய்யான்னு கேட்டு வாங்கிக்கிட்டு வர்றது!''

ஆயாசப்பட்ட பெரிய கருப்பன், அருகில் வந்து கிசுகிசுத்தார். ''எலே சிறிசு! கிணறு வெட்டப் பூதம் கிளம்புதுடா. மேற்கொண்டு பேச்சை வளர்த்தாமல் நீயும் உன் பெண்சாதி லட்சுமியும் கண்ணுளத்துக்குப் போயிட்டு வந்திருங்கடா...''

ஆனல் லட்சுமி மறுத்துவிட்டாள். ''கிளம்புன பூதம் பலி வாங்காமல் தடுக்கணும்னு நான் இப்போ வீட்லே இருந்தாகணும் மாமா! அதனல் நீ மட்டும் கண்ணுளத்துக்குப் போயிட்டு வந்துரு!'' என்று!

இதே பிக்ஷாண்டார் கோயிலில்தான் பதினைந்து வருடங்களுக்கு முன்னல் அண்ணனுக்கும் மதனிக்கும் கல்யாணம் நடந்தது. அப்போது சின்னக்கருப்பனுக்கு பதின்மூன்று வயதுதான் இருக்கும். எனினும் நேற்றைக்குத்தான் நடந்த மாதிரி எல்லாமே ஞாபகத்துக்கு வருகிறது.

அந்தக் கல்யாணத்தில், ''பொண்ணை அழைச்சுண்டு வாங்கோ'' என்று சாஸ்திரிகள் நான்கைந்து முறை சொல்லியும், பன்னீர் மாமா கைகளைப் பிசைந்தவாறு நின்றரே தவிர நகரவில்லை. மாப்பிள்ளைக் கோலத்தில் மாலையும் கழுத்துமாய் உட்கார்ந்திருந்த அண்ணன் பெரிய கருப்பன், ''என்ன மாமா விசயம்?'' என்று உலுக்கவும், கடைசியாய்த் தழுதழுத்தார் அந்த மனிதர். ''தர்றேன்னு சொன்ன பாவிங்க அத்தினி பேரும் கடைசியாக் கையை விரிச்சுட்டானுங்க மாப்ளே! இந்த வருசம் காவேரியில் தண்ணித் தட்டுப்பாடு ஏற்பட்டதனல் வெள்ளாமை சாவியாகிப் போனதுதான் காரணம். அதனல்பேசினபட்டிபொண்ணுக்கு அஞ்சு பவுன் சங்கிலி போட முடியலே. பெரிய மனசு பண்ணி என் மக கழுத்தில் தாலியைக் கட்டுங்க. அடுத்த வருச அறுவடையில் கண்டிப்பா நகை வாங்கியாந்து போட்டுடறேன்...''

கல்கிதாசன்



அம்மா சிறுத்தையாய்ச் சீறிஞள். "அப்போ அடுத்த வருசமே கண்ணுளத்தை வச்சுக்கிறலாமே? எதுக்கு அவசரப்பட டுங்க?"

ஆச்சர்யமாய் இப்போர்து சண்பகம் வந்து நின்று கண்ணீர் வடித்தவாறு கூறிஞள்... "கல்யாணப் பெண்ணுன நான் பேசறதுக் காகச் சபையில் உள்ளவங்க என்னே மன்னிக் கணும். ஆஞ இப்போ நான் கூச்சமும் வெட் கமும் பட்டுப் பேசத் தயங்கிட்டால் அப்புறம் என் வாழ்நாள் பூராவும் அழுதாகணும். அதான் உண்மையைச் சொல்றேன். மாப் பிள்ளேயும் அவரைப் பெத்த தாயாரும் தயவு பண்ணி எங்கப்பாவோட வாக்குறுதியை நம் பாதீங்க. அவர் ஒரு மொடாக் குடிகாரர். கல்யாண தினமான இன்னேக்கே போடாத நகையை, அவர் என்னேக்குப் போடப் போகி ருர்? அதஞல் கண்டிப்பாய் நகை வேணும்னு நினேச்சீங்கன்ஞ தயவு பண்ணி இந்தக் கண் ணுளத்தை நிறுத்திப்புட்டு வேறு வசதியான இடத்தில் பொண்ணுப் பார்த்துக்குங்கோ. அதுக்குப் பதிலா நல்ல குணமான பொண்ணு கிடைச்சாப் போதும்னு நீங்க நினேச்சால் என் கழுத்தில் தாலியைக் கட்டி அழைச்சுக்கிட்டுப் போங்க. அதுக்கு நன்றி யா என் வாழ்நாள் பூராவும் உங்க வீட்லே நாயா - உழைச்சு தொண்டூழியம் பண் றேன்."

அம்மா விருட்டென்று எழுந்து, "அதான் கண்ணுளப் பெண்ணே சொல்லிட்டாளே.



அப்புறம்ரெண்டா இன்னமும்குந்தி இருக்கே?" என்று அழைக்க, எழாத பெரிய கருப்பன் அமைதியாய்க் கூறினர். "இந்தப் பெண் ணோட சத்திய நடத்தையும் ஒளிவு மறைவு இல்லாத பேச்சும் தங்கமா மின்னுது அம்மா! அப்புறம் தனியா எதுக்குத் தங்கம்?" என்று.

"மாப்ளேயே நகை வேணும்னு சொல்லிட் டார். அப்புறம் நீங்க ஏம்மா குறுக்கே நிக் கறீங்க?" என்று மற்றவர்கள் இப்போது பிடித்துக் கொள்ள, வேறு வழி இல்லாமல் அம்மா அரைமனதாய்ச் சம்மதிக்க, அண்ணன் தாலி கட்ட, நல்ல வேளேயாய்க் கல்யாணம் சுமுகமாய் முடிந்தது!

மதனி கூறியபடியே அதற்கப்புறம் அறு வடைதான் வந்து சென்றதே தவிர, நகை வரவில்லை.

எப்போதாவது முணுமுணுக்கும் அம்மா வின் வாயைச் சின்னக் கருப்பன் அடைப் பது வழக்கம். "அதான், நகை கண்டிப்பா வேணும்னு கட்டாதீங்கன்னு சொல்லிப் புட்டுத்தானே மதனி கழுத்தை நீட்டுச்சு? அப்புறம்தாலியைக்கட்டுவானேன்?இப்போ முணுமுணுப்பானேன்?"

அப்படி முணுமுணுக்கும் அம்மாவுக்குப் பணிவிடை செய்வதிலாகட்டும். உறக்கத் தைப் பாராமல் ராத்திரியில் இரண்டு மூன்று தடவையாவது எழுந்து எருமைமாடுகளுக்குத் தீனி போட்டுத் தண்ணீர் வைப்பதிலாகட் டும், குடும்பத்தைக் கவனிப்பதிலாகட்டும், மதனிக்கு நிகர் மதனியேதான்!

அதிலும் சின்னக் கருப்பன் மீது அவ ளுக்கு உயிர். அவனைக் கொழுந்தன் என்று நினையாமல் பெற்ற மகனுக்குத்தான் வளர்த்து வந்தாள்.

ஆனல் அண்ணன் ரொம்பக் கருரும் கண்டிப்புமான பேர்வழி. சின்னத் தப்பு செய்தால்கூட பெல்ட்டால்விளாசிவிடுவார். அப்படித்தான் அவரிடம் போன வருடம் மாட்டிக் கொண்டான் சின்னக் கருப்பன். சினிமா பார்க்கச் சிநேகிதர்களுடன் டவுனுக் குப் போனவன் கிராமத்துக்குத் திரும்பும் வழியில் ரொம்ப வற்புறுத்தியதால் அவர்களு டன் சேர்ந்து சாராயக் கடைக்குப் போய்க் குடித்துவிட்டான். கொஞ்சம்தான். ரொம்ப நிதானமாகத்தான் நடந்து வந்தான். அப்படி யும் கண்டுபிடித்துவிட்ட அண்ணன், அர்த்த ராத்திரி என்றும் பாராமல், அண்டை அயலார் வந்து சொல்லியும் கேளாமல் பெல்ட்டால் விளாசினரே பார்க்கலாம்.

தடுப்பதற்காகக் குறுக்கே வந்து பாய்ந்த மதனிக்கும் அடி. "நீ செல்லம் கொடுத்த தனல்தாண்டீ இம்புட்டுத் தூரம் இந்தத் தடியன் கெட்டுப் போயிட்டான்."

'உன் தம்பி பண்ணின தப்புக்கு என்னே ஏன்யா அடிக்கிறே?' என்று கேட்கவில்லை மதனி. மாருக, "என்னே அடிய்யா, உதைய்யா. கொல்லணும்னுலும் கொன்னு போட்டுருய்யா. ஆனு நான் வளர்த்த சிறுசு உடம்புலே என்னேட கண் முன்னுலே கை வைக்காதேய்யா!" என்றுதான் கதறினள்.

இன்னும் கோபம் கொண்ட பெரிய கருப் பன், "அப்படீன்னு அவனுக்கும் சேர்த்து நீயே அடி தின்னுடி...." என்று பெல்ட்டால் விளாச, சண்பகம் ஒவ்வொரு அடிக்கும் வீறிட்டுத் தரையில் புரள.... துடிதுடித்துப் போன சின்னக் கருப்பன் கண்ணீர் வடித்த வாறு கால்களைப் பற்றிக் கொண்டு தழுதழுத் தான். "மன்னிச்சிடு அண்ணே! இனி குடிக்க மாட்டேன். மதனி மேலே ஆணேயா குடிக் கவே மாட்டேன்!"

அப்புறம்தான் பெல்ட்டைக் கீழே போட் டார் பெரிய கருப்பன். ஆனலும் குந்த வைத்து உட்கார்ந்து, 'மடேர் மடேர்' என்று தலையில் அடித்துக் கொண்டு, புலம்ப ஆரம் பித்தார். "எப்பேர்ப்பட்ட குடும்பம் எங் களது! காந்தி மகான் சொற்படி கள்ளுக் கடை மறியலில் கலந்துக்கிட்டவர் எங்கப் பன். அப்புறம் உப்புக் காய்ச்சுறதிலும் கலந்து ஜெயிலுக்குப் போனுர். அவருக்குப் பொறந்த மவன் இன்னிக்குக் குடிச்சுப்புட்டான். இனி பொய் சொல்லுவான். திருடுவான். கொலை செய்வான். இப்படி எல்லாத் தீமைகளுக்கும் ஆரம்பமான குடியை இன்னிக்குத் தொட் டுட்டானே!"

அந்தப் பக்கமாய் மதனியும், இந்தப் பக்க மாய் சின்னக் கருப்பனும் உட்கார்ந்து இப் போது அவரைத் தேற்ற வேண்டியதாயிற்று.

"அதான் இனிமே குடிக்க மாட்டேன்னு மதனி மேலே சத்தியம் வச்சுட்டேனே அண்ணே!"

"சிறிசு சொல்லிடுச்சுல்லே? அப்புறம் இன்னமும் ஏன் அழறே மச்சான்? எந் திரிச்சு வந்து கஞ்சி குடி. நீ சாப்பிடாததால் சிறுசும் சாப்பிட வரமாட்டேங்குது."

கல்யாணத்தில் மொய் எழுதி, சாப் பிட்டுவிட்டு, சின்னக் கருப்பன் ஊருக்குத் திரும்பியபொழுது இரவு ஆகிவிட்டது.

வீட்டில் ஏதோ ஓர் அபஸ்வரம் சோக ராகமாய் மெல்ல ஒலித்துக் கொண்டிருந் தது.

இவனது தலையைக் கண்டதும் புன்னகை யோடு, 'என்னலே சேதி?' என்று விசாரிக் கும் அண்ணன், இப்போது பார்க்காதது போல் ஜடமாய்த் தூணில் சாய்ந்திருந்தார்.

'உடனே அப்பன் வீட்டுக்குப் போய் பேசின பவுனே வாங்கிக்கிட்டு வாடீன்னு கார்த்தாலேயில் அம்மா கத்தினபடி மதனி யை விரட்டிப்புடுச்சா?' பதறிய சின்னக் கருப்பன் கொல்லைப்புறத்தில் எட்டிப் பார்க்க, நல்லவேளேயாய்ச் செண்பகம் மாட்டுத் தொழுவத்தில் எருமைகளுக்குக் குழுதாடிகளில் புண்ணுக்கைக் கரைத்துக் கொண்டிருந்தாள். "கண்ணுளம் முடிஞ்சு வந்துட்டியா சிறுசு?"

"அதிருக்கட்டும் மதனி. ஏன், எல்லோரும் என்னவோ போல் மூஞ்சியைத் தூக்கி வைச் சுக்கிட்டு இருக்கீங்க?"

"உன்னேட பெண்சாதி.... லட்சுமி.... கோவிச்சுக்கிட்டுப் பொறந்த வீட்டுக்குப் போயிட்டா...."

திடுக்கிட்டான் சின்னக்கருப்பன். "ஏன் மதனி?"

"அத்தையை எருமைன்னு லட்சுமி திட்டினு...." பொங்கி வரும் அழுகையை, இதழ்களைப் பற்களால் கடித்தவாறு அடக்கிய சண்பகம் கண்ணீருடன் தழுதழுத்தாள். "பேச முடியாமல் அழுகையா வருது, மேற்கொண்டு அத்தைகிட்டே போய்க் கேட்டுக்கோ சிறுசு!"

அவன் வேதனையும் கோபமுமாக அம்மாவிடம் போய்க் கேட்டபோதுதான் உண்மை தெரிந்தது. மதனியைத்தான் அதிகக் கேவலமாகப் பேசியிருக்கிருள் லட்சுமி. "நீ குந்துமணித் தங்கம் கூட இல்லாமல் மூளி உடம்பா இந்த வீட்டுக்குள்ளே நுழைஞ்ச பொம்பிளே. அதனுல் நீ சமைக்க வேண்டியதுதான். வீட்டுக்குள்ளாரே காலை நீட்டிக் குந்தி இருக்கிற மாமியார் எருமைக்கும், வெளியே மாட்டுப் பட்டியில் நிக்கற அசல் எருமைங்களுக்கும் நீ தீனி வைக்க வேண்டியதுதான். ஆனு நான் நகையும் நட்டுமா சீரும் செனத்தியுமா இந்த வீட்டுக்குள்ளே நுழைஞ்சவ. அதனுல் நான் எதுக்காக உன்னை மாதிரி கஷ்டப்படணும்?"

இதுமாதிரி லட்சுமி நிறையவே பேசியும், மதனி வாயைத் திறக்கவே இல்லையாம். கடைசியில் அண்ணன் சொல்லியும் கேளாமல், அம்மா தடுத்தும் லட்சியம் செய்யாமல் டிரங்க் பெட்டியைத் தூக்கிக் கொண்டு லட்சுமி பிறந்த வீட்டுக்குக் கிளம்பிவிட்டாளாம்!

கோவைப் பழமாய் கண்கள் சிவக்க, பற்களை நறநறவென்று கடித்தவாறு எழுந்த சின்னக் கருப்பன், "வயித்தை வலிக்குது. வாய்க்

# நல்ல திட்டத்திற்கு ஒரு நாகலிங்கம்


நாகலிங்கம்


வேலி போட்டு நடப்பட்டுள்ள தென்னைகள்......

திருச்சி—கரூர் சாலையில் குளித்தலையை ஒட்டி அமைந்துள்ளது ராஜேந்திரம் கிராமம். தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட நாகலிங்கத்துக்கு வரிச் சுமைகளை அதிகரிக்காமலேயே பஞ்சாயத்தின் நிதி நிலைமையை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்ற பலமான எண்ணம்!

என்ன செய்வது? யோசித்துக் கொண்டே இருந்தார். ஒன்றியப் பொறியாளர் நடராஜன்தான் அந்த 'ஐடியா'வைக் கொடுத்தவர். 'என்ன தலைவரே! உங்க ஊரோ காவிரிக் கரைப் பகுதி. தென்னை மரங்கள் வளர்வதற்கு ஏற்ற மண்வாகு. பஞ்சாயத்துச் செலவில் ஓர் ஆயிரம் தென்னையை நடுங்கள். காய்க்க ஆரம்பித்துவிட்டால் நல்ல வருமானம் வரும்' என்றுர் அவர்.

நாகலிங்கம் அந்த ஐடியாவை அப்படியே செயல் மேற்கொண்டார். சுமார் ஏழாயிரம் ரூபாய் செலவு செய்து ஆயிரம் தென்னங் கன்றுகளை, பிரதான சாலையின் இரு ஓரங்களிலும் நட்டுவிட்டார்.

நட்டுவிட்டால் போதுமா? பராமரிக்க வேண்டாமா? மாவட்டக் கலெக்டர் அந்த ஊரிலுள்ள ஒரு சிறிய பாலத்தைத் திறப்பதற்காக அங்கு வந்தபோது, அந்தத் தென்னங் கன்றுகளைப் பராமரிக்க ஆள் போட வேண்டிய அவசியத்தை எடுத்துச் சொல்லி அதற்காகத் தேசிய ஊரக வேலை வாய்ப்புத் திட்டத்தின் கீழ் ஏழு பேரையும் நியமனம் செய்துவிட்டார்!

"எதிர்காலத்தில் இந்தத் தென்னைகள் பலனளிக்கத் துவங்கும்போது ஆண்டொன்றுக்கு ரூபாய் ஒரு லட்சம் அளவுக்கு வருமானம் வரும். அப்போது, பொது மக்கள் தலையில் வரிச் சுமைகளை ஏற்றத் தேவையில்லை. எந்தத் திட்டங்களானுலும் பணப் பயமின்றி நிறைவேற்றலாம்... என்கிருர் நாகலிங்கம். இவரை முன்னுதாரணமாகக் கொண்டு இதுபோன்ற பிரயோஜனமான திட்டங்களை மற்ற ஊர்களிலுமுள்ள தலைவர்கள் மேற்கொள்ளலாமே!

— கௌசல்யா

கால் பக்கமா போயிட்டு வரேன் அம்மா!'' என்று கூறிவிட்டு புறப்பட்டான். கொல்லைப் புற எற வானத்தில் சொருகியிருந்த பாச்சூர் வீச்சரிவாளை, மதனிக்குத் தெரியாமல் எடுத்து, இடுப்பில் செருகி, சட்டையால் மூடிக் கொண்டான். பூமி அதிர ஆங்கார மாய் எட்டு வைத்து நடந்தான்.

இவனைக் கண்டதும் வாயெல்லாம் பல்லாகி ஓடி வந்த லட்சுமி, ''ஏய்யா இம் புட்டு லேட்டு? நீ வருவேன்னு முட்டைக் கோழி அடிச்சுக் கொழம்பு வச்சுக்கிட்டு எவ் வளவு நேரமா காத்திருக்கேன் தெரியுமா? சீக்கிரம் கைய்ய அலம்பிக்கிட்டு சாப்பிட வாய்யா...'' என்று வரவேற்றாள்.

'இந்தக் கொஞ்சலுக்கு எல்லாம் குறைச் சல் இல்லே' சின்னக் கருப்பன் கோபமாய் வெடித்தான். ''மதனியை என்ன வார்த்தை சொல்லிட்டு ஓடியாந்தே சொல்லு?''

திரும்பவும் புன்னகை செய்தாள் லட்சுமி. ''உன்னோட மதனியை நானும் தெய்வமா மதிக்கிறபடியால்தான் இந்தக் காரியம் பண் ணிட்டு வந்தேன்.''

''என்னடி சொல்றே?''

''இதோ புரியும்படியா சொல்றேன்யா. நீ கண்ணுளத்துக்குப் புறப்படும்போது, 'இப் பவே உன்னோட அப்பன் வீட்டுக்குப் போய்ப் பேசின பவுனை வாங்கிக்கிட்டு வா' என்று அத்தை உன்னோட மதனியை விரட்டிக் கிட்டு இருந்துச்சுல்லே? அந்த இம்சை நீ போனதுக்கப்புறம் அதிகமாயிருச்சு. அத்தை உன்னோட மதனியின் பொட்டியைத் தூக்கி வெளியே எறிஞ்சுருச்சு. போடீன்னு பிடரி யைப் பிடிச்சுத் தள்ளவும் தொடங்கிடுச்சு. உன்னோட அண்ணன் தலையைத் தொங்கப் போட்டுக்கிட்டுக் குந்தி இருந்தாரே தவிர, அம்மாவை எதிர்த்து ஒரு வார்த்தையும் பேசலே. உன்னோட மதனியும் கதறி அழுதுக் கிட்டு கிளம்ப ஆரம்பிச்சுட்டாங்க. அப்படி அவங்க பொறந்த வீட்டுக்குப் போயிட்டா அவங்களோட குடிகாரத் தகப்பனார் நகை போடப் போறதும் இல்லே. அவங்களும் இங்கே திரும்பி வரப் போறதும் இல்லே. கல்யாணத்தன்னைக்கே... 'நகை கண்டிப்பா வேணும்னு தாலி கட்டாதீங்க' என்று அவங்க கறாரா சொல்லி இருக்காங்க. வேணும்னு அப்போ தாலி கட்டிப்புட்டு, இப்போ நகை கேட்டு விரட்டுறது நியாயமே இல்லே. உன் னோட மதனி உங்க குடும்பத்துக்கு இவ்வளவு உழைச்சும் கூட, அதை எல்லாம் மறந்துட்டு பவுன் கேட்டுப் பொறந்த வீட்டுக்கு அனுப் பறது தர்மமும் இல்லே. இதெல்லாத்துக் கும் காரணம் உங்கம்மா உன்னோட மதனி யின் அருமையைப் புரிஞ்சுக்காததுதான். அந்த நிழலின் அருமை வெயிலில் தவித் தால்தான் உங்கம்மாவுக்குப் புரியும். அதான் வெயில் எவ்வளவு கொடுமையா இருக்கும்னு உங்கம்மாவுக்கு நான் காண்பிச்சேன். மூத்த வளை விரட்டிப்புட்டு அவ்வளவு வேலைகளை யும் இளையவளான என்னைப் பார்க்கச் சொல்லலாம்னு நினைச்சியா கிழவி? நகை நட்டு, சீர் செனத்தியோட வந்த நான், எதுக் காக உன்னோட மூத்த மருமக மாதிரி லோல் படணும்? அப்படீன்னு சீறிப்புட்டு நான் என்னோட பொட்டியோட கிளம்பிட்டேன். அப்புறம் வீட்டிலே கஞ்சி காய்ச்சணுமே? எருமைங்களுக்கு ராத்திரியும் பகலுமா வைக் கோல் உதறிப் புண்ணாக்குக் கரைச்சு வைக் கணுமே? கருக்கலிலும் அந்தியிலும் பால் பீய்ச்சணுமே? இம்புட்டையும் செய்ய பொம் பிளை வேணுமே? யோசிச்ச உங்கம்மா, எறிஞ்ச பொட்டியைத் தானே எடுத்தாந்து உள்ளே வைச்சு, 'அந்த அடங்காப் பிடா ரிக்கு நீ எவ்வளவோ தேவலைடீ' என்று உன் னோட மதனியிடம் சொல்லித் திரும்ப வீட்லே இருக்க வச்சுருச்சு. அப்படி அந்தத் தெய்வம் உங்க வீட்லே இருக்கணும் என்பதற்காகத் தான் நான் என்னோட பொறந்த வீட்டுக்கு வந்திருக்கேன்யா. இப்போ சொல்லு, நான் செஞ்சது தப்பா?''

சொல்லி முடித்து லட்சுமி விக்கி விக்கி அழ, ''இல்லே லட்சுமி! பத்தரை மாத்துத் தங்கமான உன்னைப் போய்த் தப்பா நினைச் சேன் பாரு, அதான் தப்பு! அதுக்காக நீ தான் என்னை மன்னிக்கோணும்'' மடியி லிருந்த வீச்சரிவாளைத் தூர எறிந்துவிட்டு, அவளை இறுகத் தழுவியவாறு சொன்னான் சின்னக் கருப்பன். ''நீ சரியான காரியத் தைத்தான் புத்திசாலித்தனமா பண்ணி இருக்கே. ஆனா மதனி அங்கேயும் நீ இங்கே யுமா எத்தனை நாளைக்கு இருக்க முடியும் லட்சுமி?''

''அதுக்காகத்தான் என்னோட அப்பா விடம் சொல்லி இருக்கேன் மாமா! நானும் என்னோட புருசனும் சந்தோசமா இருக் கணும்னா நீங்க ஒரு உதவி செய்யணும். அந்தக் குடிகாரத் தகப்பனார் தர வேண்டிய நகையை நீங்க பண்ணித் தரணும். அதை யாருக்கும் தெரியாமல் என்னோட புருசன் தன்னோட மதனிக்குத் தந்து இந்தப் பிரச்னை யைத் தீர்த்துருவார்....அப்படீன்னு நான் கெஞ்ச, அப்பாவும் சரீன்னுட்டார். இந்த முறை அறுவடை முடிஞ்சு பணம் கைக்கு வந்ததும் முதல் வேலை, நகையை வாங்கித் தந்து உன்னை உன் புருசன் வீட்டுக்கு அனுப் பறதுதான்னு சொல்லி இருக்கார். அது வரைக்கும் நான் இங்கேயும், நீ அங்கேயு மாக இருந்துக்க வேண்டியதுதான். நினைப்பு வந்தால் அப்பப்போ, நீ வந்து இப்படிச் சந்தோஷமா இருந்துட்டுப் போய்க்கிற வேண்டியதுதான் மாமா!''

குதூகலமும் பிரியமுமாக லட்சுமி சொல்ல வும், நெகிழ்ந்து போன சின்னக் கருப்பன், ''எங்கண்ணன் மட்டும்தான் அருமையான பெண்டாட்டி கட்டிய அதிர்ஷ்டசாலின்னு நினைச்சேன். ஆனா, இப்போ, நான் ரொம்ப அதிர்ஷ்டசாலின்னு புரியுது'' என்று சந் தோஷமும், பெருமிதமுமாகக் கூறியவாறு கிளர்ச்சியும் ஆவலுமாக அவளை இறுக்க மாகத் தழுவிக் கொண்டான்.

# ஆபத்தான உளவுகள்



## 8

அந்த லேடீஸ் கிளப்புக்குள் அருண் நுழையும்போதே வாசலில் நின்றிருந்த கிழக் காவல்காரன், 'உனக்கு இங்கே என்னப்பா வேலை?' என்பது போல அலட்சியமாகப் பார்த்தான்.

கிளப் வாசலில் நின்ற புராதன ஆஸ்டின் காரைப் பார்த்து, 'பாணியின் தங்கை மகள் உள்ளே இருப்பாள்' என்ற நம்பிக்கையுடன் தான் அருண் வந்திருந்தான். அவளை எப்படி அடையாளம் கண்டுபிடிப்பது என்ற தவிப்பு ஒரு பக்கம் இருந்தது.

பெரிய காம்பவுண்ட். மத்தியில் கிளப் கட்டடம். அதைச் சுற்றி வர மண் பாதை. அது பின்னாலிருந்த மைதானத்துக்குக் கொண்டு சேர்க்கும். அங்குதான் டென்னிஸ் கோர்ட் இருந்தது.

கட்டடத்துக்குள்ளிருந்து சில பெண்மணி கள் (சராசரி வயது 56) முறைத்துப் பார்ப் பது தெரியாமல் அருண் மண் பாதையில் நடந்து போய், டென்னிஸ் கோர்ட்டை அடைந்தான்.

டென்னிஸ் விளையாட்டு மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. ஒரு ஸைடில் இரண்டு பேரிளம் பெண்கள்; எதிர் ஸைடில் ஒரே ஓர் இளம் பெண் — என்று இரண்டுங் கெட்டான் ஆட்டம்.

அந்த இளம் பெண்ணின் தோற்றம் பீக்— அவர் டிராபிக்கையே நிறுத்தக் கூடிய விதத் தில் இருந்தது. இறுக்கத்திலும் இறுக்கமான ஷார்ட்ஸ் — மிளகாய்ப்பழச் சிவப்பில் — அணிந்திருந்தாள். மேலே, கண்ணை உறுத் தும்பனியன். தலைமுடியைத்தங்கநிறஹெட்— பாண்ட் இறுக்கியிருந்தது. ஷூக்கள் வித்தி யாசமாக — சகிக்காத மஞ்சளும் பச்சையு மாக—இருந்தன. மொத்தத்தில் டென்னிஸ் ஆட்டக்காரர்கள் எவரும் ஏற்றுக் கொள்ள முடியாத ஒரு கெட் — அப்.

அருண் அந்தப் பெண்ணைப் பார்த்துத் திகைத்து நிற்கும்போது காதருகில் ஒரு பறவை வந்து, "அவள்தான் அம்பிகா. செல்லப் பெயர் ஜிங்லி!" என்று கீச்சுக் குரலில் சொன்னது போலிருந்தது. திரும்பிப் பார்த்தபோது, ஒரு முக்கால் கிழவி வேறொரு அரைக்கிழவியிடம் சுட்டிக் காட்டிப் பேசிக் கொண்டிருப்பதை உணர்ந்தான்.

"அது சரி மிஸஸ் ராமாமிர்தம்! என்ன இழவு டிரஸ் இது! மாமாவைப் போலவே இதுவும் லூஸ்தான் போலிருக்கிறதே!" என்ற விமர்சனமும் காதில் விழுந்தது. 'லூஸாக இருந்தால் வளைத்துப் போடுவது சுலபம்தான்' என்றெண்ணிக் கொண்டான் அருண்.

மிஸஸ் ராமாமிர்தக் கிழம், "பையா! யார் நீ?" என்று அருணை நேருக்கு நேர் முறைத்துப் பார்த்துக் கேட்டதும் திடுக்கிட்டான்.

"நானு! ஜிங்லியின் ஃப்ரெண்ட்!"

"ஓ!" என்று சொல்லி, கழுத்தை அநாவ சியமாக ஒரு முறை வெட்டி, சுளுக்கை வரவ ழைத்துக் கொண்டு அப்பால் நகர்ந்தாள் முக்கால் கிழவி.

அருண் ஆட்டத்தைக் கவனிக்கலானான். டிரஸ் எப்படியிருந்த போதிலும் அம்பிகா வின் ஆட்டம் அபாரமாகவே இருந்தது. எதிரில் இருந்தவர்களுக்குச் சளைக்காமல் ஈடு கொடுத்து ஆடினாள். ஆனால் ஒவ்வொரு முறை பந்தை அடிக்கும் போதும் சந்தோஷம் அல்லது கோபத்தில் அம்பிகா போட்ட காட்டுக் கூச்சல்தான் கர்ணகடூரமாக இருந் தது.

ஆட்டம் ஒருவழியாக முடிந்தவுடன் அம்பிகா ஓர் அமானுஷ்யக் கூச்சல் போட்டு, ஈட்டி எறிவது போலத் தனது 'ரேக்கட்'டை மைதானத்தின் ஒரு மூலையை நோக்கித் தூக்கி யெறிந்தாள்.

வியர்வை வழியும் முகத்தை ஒரு டவலால் துடைத்தபடியே அம்பிகா கிளப் கட்டடத்தை நோக்கி மெதுவாகச் சென்றபோது பின் தொடர்ந்தான் அருண் — 'மிஸ்', 'மேடம்', 'அம்பிகா', 'ஜிங்லி' — எப்படி அழைத்தால் சரியாக இருக்கும் என்று யோசித்தபடியே.

சட்டென அம்பிகா நின்றாள். திரும்பினாள். "மிஸ்டர்! வாட் டூ யூ வான்ட்? ஏன் என் பின்னாலேயே வர்றீங்க?"

"ஐ வான்ட் யூ..."

"வாட்?"

"...டு மாடல் ஃபார் மி!" என்று ஆங்கி லத்தை வெட்டிவிட்டுத் தாய்மொழிக்கு வந் தான். "அதாவது... நான் ஒரு அட்வர்டைஸிங் எக்ஸிகியூடிவ். ஒரு விளம்பரத்துக்கு நீங்கள் மாடல் பண்ண வேண்டும் என்று கேட்கத் தான் வந்தேன்..."

"என்ன பிராடக்ட்?"

"பேன்ட்டீஸ்... நூற்றுக்கு நூறு சில்க்.

மகுந்தன்

அத்தனையும் வெளிநாட்டுக்குத்தான் போகிறது!''—நாக்கில்பொய்தாராளமாகவழி)ந்தது.

''ஷ்யூர்! ஃபீஸ் எவ்வளவு கொடுப்பீர்கள்?''

விளம்பர நிறுவனங்கள் பற்றிச் சுத்தமாக எதுவும் தெரியாததால் அவன் சற்றுத் தடுமாறவும், ''ஓ.கே! ஃப்ரீயாகவே நான் மாடல் பண்ணுகிறேன். சரியா?'' என்று கேட்டு அவள் சிரித்தபோது மேல்வரிசைப் பற்களில் கிளிப் மாட்டியிருப்பது துல்லியமாகத் தெரிந்தது.

''தாங்க்யூ வெரிமச்...''

''அதோ அந்த லான்லே கொஞ்ச நேரம் உட்கார்ந்திருங்கள். டிரஸ் மாற்றிக் கொண்டு வந்து விடுகிறேன்!''

அவள் சுட்டிக்காட்டிய நாற்காலியில் உட்கார்ந்திருந்தநேரத்தில்இன்னும்என்னென்ன ரீல் விடலாம் என்று மூளையைக் கசக்கிக் கொண்டிருந்தான் அருண்.

ஐந்தே நிமிடங்களில் வந்து விட்டாள் அம்பிகா.இப்போதுபுடைவைக்குமாறியிருந்தாள். கறுப்புப் புடைவை. அதே கலரில் படுலோ—கட்பிளவுஸ். ஹெட்—பேன்ட்டை நீக்கியிருந்ததால் குழல் கற்றைகள் நெற்றியில் சுதந்திரமாக உருண்டு புரண்டன.

''ஆமாம், நீங்கள் யாரென்று சொன்னீர்கள்? திருப்பூர் பனியன் வியாபாரியா?''

''இல்லை.நான்விளம்பரஏஜென்ஸிநடத்துகிறேன்...''

''பெயர்?''

''வி. அருண்!''

''ஏஜென்ஸி பெயரைக் கேட்டேன்!''

''சதா அஸோஸியேட்ஸ்...''

''சதா என்பவர் யாரு? உங்க அப்பாவா?''

''நோ நோ... சதா என் பார்ட்னர்!''

''அவர் ஏன் வரவில்லை?''

''யூ ஸீ... அவருக்குத் தலைக்கு மேலே வேலை. அரைகுறையாக எந்த வேலையையும் விட்டுவிட்டுப் போக முடியாது. கொஞ்சம் அசந்தாலும் கிளையண்ட்களிடம் பேச்சுக் கேட்க வேண்டி வரும்... அதனாலே அவர் இன்டோர், நான் அவுட் டோர் என்று பொறுப்புக்களைப் பிரித்துக் கொண்டிருக்கிறோம்...''

''அப்படியா...?'எனக்குக்கூட ஒரு அட்வர்டைசிங் ஏஜென்ஸியிலே சேர்ந்து வேலை செய்ய வேண்டுமென்று ரொம்ப ஆசை!''

''இப்போதைக்கு எங்க யூனிட்லே பெண்களைச் சேர்த்துக் கொள்வதில்லை என்று வைத்திருக்கிறோம்...''

''ஒய்? ஒய்? ஒய்?''

''உங்களைப் போல அழகான பெண்கள் இருந்தால் எங்களுக்கெல்லாம் வேலை ஓடாதே! அதனால்தான்!''

சிரித்தாள். ''அது போகட்டும்... உங்களுக்கு டென்னிஸ் ஆடத் தெரியுமோ?''

''தெரியாது!''

''சுத்தமாகத் தெரியாதா?''

''அசுத்தமாகக் கூடத் தெரியாது!'' என்று



அவன் அசட்டு ஜோக் அடித்ததற்குத் தண்டனையாகவோ என்னவோ, மேலே பறந்த காகம் அவன் இடது கையில் எச்சமிட்டு விட்டுச் சென்றது.

''அந்த மூலையில் குழாய் இருக்கிறது... போய்க் கழுவிக் கொண்டு வாருங்கள்!'' என்று வழிகாட்டினாள் அம்பிகா.

அப்படியே செய்தான்.

''டென்னிஸ் ஆடத் தெரியாது என்றீர்கள்... அந்த கேம் பற்றியாவது ஏதாவது...''

'தெரியாது' என்று பலமாகத் தலையாட்டினான்.

''ரியலி? அவுட், அம்பயர், ஸ்ட்ரோக், நெட்—இப்படி ஒரு வார்த்தை கூடத் தெரியாதா?''

''ஆடறியேன் அவுட்டறியேன்
அம்பயரும் நானறியேன்
நெட்டறியேன் ரூலறியேன்
ஸ்ட்ரோக்கு வகை தானறியேன்!''

''ஆச்சரியமாகஇருக்கிறதே! என் அபிப்பிராயத்தைச் சொல்லட்டுமா? டென்னிஸ் பற்றித் தெரியாதவன் முட்டாள். டென்னிஸ் ஆடாதவன்காட்டுமிராண்டி.டென்னிஸைக் குறை சொல்பவன் பைத்தியக்காரன்... எப்படி?''

அருண் வாயடைத்துப் போய் உட்கார்ந்திருந்தான்.

கமான் மிஸ்டர் அருண்! டேக் இட் ஈஸி! நீங்களும் டென்னிஸ் ஆடக் கற்றுக் கொண்டு விடுங்களேன்!''

''ஐயோ! என்னாலே முடியாது!''

''ஒய்? ஒய்? ஒய்?''

''அதைக் கற்றுக் கொள்வதால் எனக்கு என்ன பிரயோஜனம்? நான் என்ன விம்பிள்டனிலா போய் ஆடப் போகிறேன்? பணமும் நேரமும் தண்டமாகும். எனக்கு எதற்கு டென்னிஸ்? இன்னும் சொல்லப் போனால் 'டென்னிஸ் த மெனஸ்' என்ற தலைப்பில் கட்டுரை கூட எழுதலாமா என்று நினைக்கிறேன்!''

''யூ ஆர் ராங்க்! நான் சொல்வதைக் கேளுங்கள்: டென்னிஸ் உங்கள் உடம்பை மட்டுமல்ல, மனசையும் டிரிம்மாக வைத்திருக்க உதவும்... டென்னிஸ் ஆடினாலே பெருமை. ஆடிப் பார்த்தால் தெரியும் மகிமை!''

''மகிமையாவது, மண்ணாங்கட்டியாவது!



பேத்தல்!''

''லிஸன்... டென்னிஸில் எதிராளியின் பலம், பலவீனம், மனப்போக்கு எல்லாம் உங்களுக்குத் தெரிய வரும். தவிர, உங்கள் சக்தியும், அதை நீங்கள் உபயோகிக்கும்முறைகளும் வெளிப்படும்... உங்கள் ஆத்ம சக்தி எப்படிப்பட்டது என்பதை நீங்கள் அறிய முடியும்... யோகாஸ்வைக் காட்டிலும் டி. எம். மைக் காட்டிலும் டென்னிஸ் மூலம் மன அமைதி பெற முடியும்... குண்டலினியைத் தட்டி எழுப்புகிற பவர் டென்னிஸுக்கு உண்டு... தெரியுமா உங்களுக்கு!''

''லுக்... ஆயிரம்சொன்னாலும்நான் டென்னிஸ் கற்றுக் கொள்வதென்பது நடக்காத காரியம்!''

''கெட் லாஸ்ட், தென்! நானும் உங்களுக்காக மாடல் பண்ண முடியாது!''

அம்பிகாவின் குழந்தைத்தனமான பேச்சு அருணை ஒருமுறை சிந்திக்க வைத்தது.

'லேகாவின் காதல் வேண்டுமென்றால் மருந்து ஃபார்முலா தேவை. ஃபார்முலா வேண்டுமென்றால் அம்பிகாவின் நட்பும் அது அளிக்கும் நெருக்கமும் தேவை. அந்த நட்பு தேவையானால், நீ டென்னிஸ் கற்றுக் கொண்டேயாக வேண்டும். தப்ப முடியாதப்பா!'

''சரி மிஸ் அம்பிகா! உங்களுக்காக — நீங்கள் இவ்வளவு சொல்கிறீர்களே என்பதற்காக — நான் டென்னிஸ் கற்றுக் கொள்கிறேன்!''

''குட்! நாளைக்கே பிராக்டீஸை ஆரம்பித்து விடலாம்!''

''நாளைக்கேவா?''

''ஏய்? ஏய்? ஏய்? நாள், நட்சத்திரம் பார்க்க வேண்டுமா? நல்ல முகூர்த்தம் தேட வேண்டுமா?''

''நோ நோ! அதெல்லாம் எதுவுமில்லை...''

''யூ ஆர் ஸ்டார்ட்டிங் டுமாரோ.... மார்னிங்சரியாகஃபைவ்டென்னுக்கு இங்கே வந்து விடுங்கள்.... ஆரம்பித்துவிடலாம்... ஸீ யூ!''

விருட்டென்று எழுந்து, வேகமாக வெளியே சென்று காரில் ஏறிக் கொண்டாள். கதவை அறைந்து சாத்தினாள். ஸ்டார்ட் செய்தாள். ஒரே சமயத்தில் மலேரியாவும் டெங்கு ஜுரமும் வந்தவனின் உடம்பு போல ஏகத்துக்கு நடுங்கிவிட்டு, கரும் புகையைக் கக்கியவாறே அந்தப் பழைய கார் புறப்பட்டுச் சென்றது.

பார்த்துக்கொண்டுநின்றிருந்த அருணின் தோளில் வாட்ச்மேன் தட்டினான். ''இது தானா சார் உனக்குக் கிடைச்சுது? சுத்த முரடாச்சே!'' என்று அனுதாபப்பட்டான்.

அன்று அருண் வீடு போய்ச் சேர வழக்கத்தைவிட நேரமாகிவிட்டது. விநாயகம் வாசலிலேயே காத்திருந்தார்.

''அருண்! தெருமுனையிலே யாரையாவது பார்த்தாயா?'' என்று கேட்டார்.

''இல்லையே, என்ன விஷயம்?''

''உன்னைத் தேடிக் கொண்டு யாரோ ஒருத்தன் ஸ்கூட்டர்லே மூணு தடவை வந்துட்டுப் போயிட்டான். தெருமுனையிலே காத்



"அதோபோருளே, ரொம்பஜம்பம்!"

"எதை வைத்துச் சொல்றே?"

"தான் கலர் டீ.வி. வைத்திருப்பது ஊருக்கெல்லாம் தெரியணுமாம்; ஆண்டெனாவில் கலர் கலராப் பெயிண்ட் அடித்து வைத்திருக்கிறான்!"

— திருமலை கோவிந்தன்

திருக்கிறதாகச் சொன்னான். அதனாலே கேட்டேன்...."

"அவன் எப்படி இருந்தான்?"

"இருட்டிலே முகம் சரியாத் தெரியவில்லை. நடுத்தர உயரம்... தலையிலே ஹெல்மெட் மாட்டியிருந்ததாலே மொட்டையா, கிராப்பா என்று கண்டு பிடிக்க முடியவில்லை... மூக்கு, யாரோ குத்து விட்டது போலச் சப்பையாக இருந்தது...."

"தாடி...?"

"நிச்சயமாக இல்லை!"

"ஏதாவது விஷயம் சொன்னானா?"

"இல்லை. அர்ஜெண்ட்டாக உன்னைப் பார்க்கணும் என்றான்...."

"வழக்கமாக வர்ற என் ஃப்ரெண்ட்ஸ் யாரும் இல்லையே!"

"உன் சிநேகிதர்கள் மூஞ்சியையெல்லாம் நான் போட்டோ பிடிச்சா வச்சிருக்கேன்? கம்பேர் பண்ணிச் சொல்வதற்கு? எவனோ ஒருத்தன்...."

தேடி வந்தது யாராக இருக்கும் என்ற யோசனையுடனேயே சாப்பிட்டு முடித்தான். வழக்கம் போல ஒரு 'ரவுண்ட்' — சிகரெட்டும் கையுமாக சுற்றி விட்டு வரலாமென்று கிளம்பினான்.

மெயின் ரோடில் ஒரு பார்க் இருந்தது. இருட்டில் போனால் அதன் உள்ளே எல்லா விதமான அக்கிரமங்களும் நடக்கும். இது பேட்டை அறிந்த சமாசாரம்.

அருண் அந்தப் பார்க்கின் காம்பவுண்ட் சுவரில் உட்கார்ந்து சிகரெட் இழுத்துக் கொண்டிருந்தபோது, ஒரு ஸ்கூட்டர் அவனருகில் வந்து நின்றது.

"அருண்?"

"எஸ்....!"

ஸ்கூட்டரை நிறுத்திவிட்டு, பக்கத்தில் வந்து உட்கார்ந்தான் அந்த ஆசாமி.

"மூணு தடவை வீட்டுக்கு வந்திருந்தேன்..."

"அப்பா சொன்னார்!"

"இப்போது கூட வீட்டுக்குப் போய்விட்டுத்தான் வருகிறேன்.... ஒரு முக்கியமான விஷயம் பேச வேண்டும்....."

"சொல்லு!"

"உன் ஃப்ரெண்ட் சத்யா ஆபத்திலே இருக்கிறான். அவனைச் சுட்டுக் கொல்ல முயற்சி நடக்கிறது..."

"தெரியும்..."

"ஏற்கெனவே வைத்த குறி தப்பிவிட்டது. ஆனால் இந்தத் தடவை தப்பாது..."

"அப்படியா?"

"இன்றைக்குத் தேதி என்ன? பதினாறு... 21—ம் தேதி இரவு சத்யா சுட்டுக் கொல்லப்படுவான்..."

"உனக்கு எப்படித் தெரியும் இது?"

"சத்யாவின் எதிரி கேம்ப்பிலிருந்து திரட்டிய ரகசியத் தகவல் இது..."

"அது சரி.... நீ யார்? அதைச் சொல் முதலில்!"

"உன்னைப் போலவே சத்யாவுக்கு நானும் ஒரு நண்பன்..."

"சரி. இந்த விஷயத்தை என்னிடம் ஏன் வந்து சொல்கிறாய்!"

"நான் நாளைக் காலை என் தங்கை திருமணத்தை முன்னிட்டு, கிராமத்துக்குப் போகிறேன்... திரும்பி வர, பதினைந்து நாளாகும். நான் இங்கிருந்தால் சத்யாவை எப்படியும் காப்பாற்றி விடுவேன்..."

"ஏன்? இப்போதே சத்யாவை எச்சரித்து விட்டு, ஊருக்குப் போயேன்!"

"செய்யலாம்தான். ஆனால் சத்யா ஊரில் இல்லை. 21—ம் தேதி இரவுதான் வருகிறான். வந்தவுடனே நேராக வடசரவாக்கம் வீட்டுக்குத்தான் போவான். பதினொரு மணி வாக்கில் வீட்டுக்குள் நுழைவான். அங்கு தயாராகக் காத்திருக்கும் எதிரியின் ஆள் அவனைச் சுடப் போகிறான்!"

"ஐஸீ!"

"எதிரியின் ஆள் சரியாக ஒன்பது மணிக்கு வீட்டில் புகுந்து ஹாலில் பதுங்கியிருப்பான். சத்யா நுழைந்ததும், துப்பாக்கிக் குண்டு அவன் உடலில் பாயும்!"

"அப்படியா?"

"அதனாலே நீ ஏழு மணிக்கெல்லாம் சத்யாவின் வீட்டுக்குப் போய்க் காத்திரு. ஒன்பது மணிக்கு எதிரி நுழைவான் அல்லவா? அவனை நீ தீர்த்து விடு!"

"வெறுங் கையினாலா? எப்படி முடியும்?"

"இதை வைத்துக் கொள்!" என்று பாண்ட் பாக்கெட்டிலிருந்து, சைலன்ஸர் பொருத்தப்பட்ட பிஸ்டல் ஒன்றை எடுத்து நீட்டினான். அருண் தயங்கவும், "நான் ஊரிலிருந்தால் உன்னைத் தொந்தரவு செய்யவே மாட்டேன்.... சீக்கிரம் பிடி....! டிரிக்கரை இழுப்பது எப்படி என்றுதான் நிறைய சினிமாக்களில் பார்த்திருப்பாயே! ஜாக்கிரதையாகக் கையாண்டு, சத்யாவைக் காப்பாற்றுகிற வழியைப் பார்.... நான் வரட்டுமா? போய்ப் பாக்கிங்வேறு செய்ய வேண்டும்" என்று கூறிய இளைஞன், ஸ்கூட்டரை நெருங்கி ஸ்டார்ட் செய்தான்.

"அது சரி, உன் பெயர் சொல்லவே இல்லையே!"

"தர்மராஜ்....! சத்யாவை நான் ரொம்பவும் விசாரித்ததாகச் சொல்லு!"

கையிலிருந்த துப்பாக்கியைத் திருப்பித் திருப்பிப் பார்த்தபடியே நின்றிருந்தான் அருண்.

(தொடரும்)

# சந்தோஷ இடைவெளிகள்



**கோ**பமாய் இருக்கும் எல்லா நாட்களும் இப்படித்தான் விடியும். "இந்தாங்க... நேரமாச்சு" என அவள் எழுப்பவில்லை.

காப்பி போடவில்லை.

வெந்நீர் வைக்கவில்லை.

சபிக்கப்பட்ட யாரோ அன்னியப் பெண்மணியைப் போல முதுகைக் காட்டிக் கொண்டு அடுப்படியில் இருந்தாள். இடையிடையே பையனை அதட்டுவது கேட்டது — ஆங்காரக் குரல்.

"சனியனே.... நீயும் உசிரை வாங்காதே. சித்த பொறு....."

"ம்.... பசிக்குதும்மா....." — பையனின் சிணுங்கல்.

"பால் கொதிச்சுதானே ஆகணும்? என்ன அவசரம்? எமனு வந்து தூக்கிட்டுப் போறான்?"

பையனின் முதுகில் 'ணச்' சென்று அடித்தாள். பேச்சும், செயலும் குழந்தையின் பொருட்டு அல்ல எனத் தண்டபாணிக்குச் சந்தேகம் இன்றிப் புரிந்தது. கோபம் சுரீரிட —

அலறி வந்த பையனை அணைத்துக் கொண்டான்.

"த்தா.... த்தா..... அழுகக் கூடாது. என் கண்ணு.... செல்லம்...."

தகப்பனின் பாதுகாப்பு. உடம்பு இதம். பையன் ஒட்டிக் கொண்டான்.

"அம்மா அடிக்குதுப்பா...." மழலையில் புகார் செய்தான்.

மற்ற நாட்களில்,"அவளுக்குக் கொழுப்பு. நீ அழுகாதே...." எனச் சமாதானப்படுத்துவான். "ஏண்டி அடிச்சே?" என அதட்டவும் செய்வான். தனது அன்னியோன்யத்தை உணர்த்தும் ஒன்றின் குறியீடாகவே சந்திராவும் அதை எடுத்துக் கொண்டு பதில் சொல்வாள். சண்டை நாட்களில் முடிகிறது இல்லை.

"சித்த பொறு.... பால் இப்ப வந்துடும், தங்கம்..."

சண்டைகளைவிட அதன் தொடர்ச்சியாக நீளும் பிரதிபலிப்புக்கள் மோசமானவை. நேற்று காலை, தான் கோபப்பட்டிருக்கக் கூடாது என்று நினைத்தான். குடும்பவாழ்க்கையில் சச்சரவுகளுக்கு இடம் தரலாகாது. மதிப்பும், மரியாதையும் போகிறது. 'இனி என்ன செய்வே?' என நெஞ்சை நிமிர வைக்கிறது. நிமிர்ந்த பிறகு யாரைத்தான் அடக்க முடியும்?

எதற்காகத் தனக்கு அத்தனை கோபம்?

பத்மாவோடு இணைத்துப் பேசியதற்கா?

பத்மாவோடு நிகழ்ந்திருக்க வேண்டிய உன்னத வாழ்க்கை கற்பனையில் விரிந்தது. அதில் சண்டைகள் இல்லை. மனமுறிவுகள் இல்லை. சந்தோஷமும் கேளிக்கையும் நிறைந்த இன்ப வாழ்வு அது.

"ம்ஹ்ம்....." என்று நீண்ட பெருமூச்சு விட்டான் தண்டபாணி.

**ப**த்மா அவனுக்குக் கனவாகத் தேங்கிப் போனவள். எதிர் வீடு.

புருஷன் வீட்டிலிருந்து வந்திருந்தாள்.

நேற்று மாலே ஆபீஸிலிருந்து சீக்கிர மாகவே திரும்பியிருந்தான். அந்தி நேரம் ஈஸி சேரில் சாய்ந்து ரேடியோச் செய்தி கேட்டுக் கொண்டிருக்க —

எதிர் வீட்டு வாசலில் ஆட்டோ நிற்கிற சத்தம். தொடர்ந்து, 'பத்மா....' என்ற அவளது அம்மாவின் ஆச்சரியப் பெருங் குரல்.

நெஞ்சில் சலங்கை ஒலித்தது.

பத்மாவா?

'விசுக்'கென்று எழுந்து ஜன்னலருகே நின்ருன்.

அவளே அவள்.

சிவந்தநிறம்.மினுக்கும்மூக்குத்தி.நெற்றிக் குங்குமம். நேர் வகிடு. புடைவையை இழுத் துப் போர்த்தி இருந்தாள். அம்மாவின் சத்தம் கேட்டு வெளியே வந்த குடும்பத்தின் அகன்ற பரவசத்திற்கு, மெல்லிய புன்னகை யை உதிர்த்துவிட்டு, ரிக்ஷாவுக்கு வாடகை கொடுத்தாள்.

"என்னடி.... திடீர்னு?"

"சும்மாதான்."

"அவரு வரலே?"

"வரலே."

சுருங்கிய பதில். ஒன்றிரண்டு வார்த்தை கள். உணர்ச்சிகளே அடக்கி வெளியிட முடி கிற மனுஷி அவள்.

"ஏன் பத்மா இப்படி?" என அவனே கேட்டிருக்கிருன்.

"எதுக்கு ஆர்ப்பாட்டம்.... விஷயம் புரியற அளவுக்குப் பேசினுல் போதாதா?"

"மத்தவங்க எதிர்பார்க்கிற விதத்துல சரி இல்லேயே...."

"என்ன செய்ய.... என் இயல்பு அது. சுருக்கமா வெளிப்பட்ற வார்த்தைகளுக்குத் தானே அழுத்தம் அதிகம்."

அம்மா பெட்டியை எடுத்துக் கொள்ள, உள்ளே போய்விட்டாள்.

தன்னே — தன் வீட்டை — திரும்பிப் பார்ப் பாள் என்ற எதிர்பார்ப்பு பொய்யாக, கட்டி லில் சாய்ந்தான் தண்டபாணி.

மூன்ருண்டுகளுக்கு முன்பு அவள் இந்தத் தெருவிற்குக் குடி வந்தது — அவனேடு சினேகிதமானது — பேசியது....

இனிப்பும், புளிப்புமாய் எத்தனேயோ நிகழ்வுகளில் லயித்துக் கண்கள் கிறங்க —

"வந்ததும் என்ன தூக்கம்?" சந்திரா உசுப்பினுள். "இந்த நேரத்துக்கு வர்றதே அபூர்வம். அதுல தூக்கம் வேறே...."

"என்ன செய்யணும்ங்கிறே...."

"கடைக்குப் போய்ட்டு வாங்க. பையனே வைச்சுக்கிட்டு வேலே செய்யருளேன்னு ஒரு நாளாச்சும் தோணுதா? எல்லாத்துக்கும் நானேதான் போகணும் இந்த வீட்டில்...."

குறைவாகப் பேச வேண்டும் என்பது உனக்கு ஏன் தெரியவில்லே என் அருமை மனேவியே.

"என்ன வேணும்?"

"அரிசி, சோப்புத் தூள்.... அப்படியே நாளேக்குச் சமைக்கக் காய்கறி...."

சரியான மாதக் கடைசி. சம்பளத்திற்கு இன்னும் ஐந்து நாட்கள் இருந்தன. கை இருப்பிற்கு ஒத்து வராத பெரிய செலவு. எரிச்சல் வந்தது.

"அதான் மாசத்துக்குன்னு மொத்தமா வாங்கிப்போடறேனே....இடையில்எப்படித் தீர்ந்துச்சு?"

"ம்... நான்தான் தின்னுட்டேன்...." என்ருள் சந்திரா.

"பணமில்லே. கடை வீதிக்குப் போக முடி யாது" என்று பையை விட்டெறிந்தான் அவன்.

இரவு, சண்டைக்கு அப்போதே அஸ்தி வாரம் போடப்பட்டு விட்டது.

"மணி ஒம்பதரை ஆச்சு. சாப்பிடலே யா?" கத்திக் கொண்டே முன் அறைக்கு வந்த சந்திரா அவன் ஜன்னலருகே நிற் பதைக் கண்டு திகைத்தாள்.

"இந்நேரத்துல என்ன பராக்கு? அப்புறம் லேட்டாயிருச்சுன்னு என்னேத் திட்டறது."

"ரொம்பவும் பயந்தவதான் நீயும்...." தண்டபாணி மனசுக்குள் சொல்லிக் கொண் டான்.

தானும் ஜன்னலுக்கு வந்து சந்தேகத்து டன் அவன் நின்ற திசையில் பார்த்தாள்.

எதிர் வீட்டு ஹாலில் பத்மாவின் முகம் தெரிய, "இதாளு?" எனக் கோபத்துடன் திரும்பினுள்.

தண்டபாணி பதில் சொல்லவில்லே.

"இப்படியும் ஒரு ஆம்பளே உண்டோ? அங்கேதானே பார்த்துக்கிட்டு இருந்தீங்க..."

"..............."

"இன்னும் மறக்கலே. அதானே.... அப் புறம் எதுக்கு நான் ஒருத்தி இங்கே?"

தட்டை வரக்கென்று இழுத்து, தோசை களே ஓர் அடி உயரத்திலிருந்து போட்டாள். நான்கு கவளம் உள்ளே போயிற்று. தண் ணீர்ச் செம்பு, தளும்பும்படி 'ணங்' கென்று வைக்கப்பட்டது.

"என்னடி?"

"இங்கே அதிகாரம் பண்ண ஒருத்தி. அங்கே ஆசைக்கு ஒருத்தி...."

"..............."

"பிரியம்ளு வச்சுக்க வேண்டியதானே. என்னே ஏன் கட்டிக்கிட்டு வரணும். இப்படி கொடுமைப் படுத்தணும்....?"

"இப்ப உன்னே என்ன செஞ்சுட்டேன்?"

"இவ்ளோ போதாதா.... அவ சொல்லித் தர்ருளாக்கும்? அதான் மாசம் நாலு தடவை வர்ருளே....."

"வாயை மூடு நாயே...."

"வலிக்குதா... அவளே ஒண்ணும் சொல் லப்படாது? பொண்ணுப் பொறந்ததுக்கு..."

பளாரென்று எழுந்து அறைந்தான்.

"குடும்பங்கிறது கோயில் மாதிரி. ஒருத் தரை ஒருத்தர் கடிச்சுக்கிட்டு இருக்கிறதுக்குப்

முமதாஜ்யாசீன்

## பொன்மொழிப் போட்டி-10 முடிவு:

சரியான விடை:

சத்தியசாயி பாபா: மனிதனிடம் மிருகத் தன்மையும் உண்டு; தெய்வத்தன்மையும் உண்டு. கலையின் இலட்சியம் மிருகத் தன்மையை அடக்கி தெய்வத்தன்மையை வெளிப் படுத்துவதாகவே இருக்க வேண்டும்.

பெர்னார்ட்ஷா: 'வாய்ப்பு இல்லை; அதனால் முன்னுக்கு வர முடியவில்லை' என்று முணு முணுப்பது முட்டாள்தனம். முன்னுக்கு வருகிறவர்கள் வாய்ப்புக்கள் தங்களை நாடி வரக் காத்திருப்பவர் அல்லர். அதனைத் தேடிச் செல்பவர்களே. தேடி அகப்படா விட்டால் வாய்ப்பை அவர்களே உருவாக்கிக் கொள்வார்கள்.

கல்கி: மனிதனுக்கு ஆண்மையும் அறிவும் ஊக்கமும் உறுதியும் அளித்த இறைவன், இவ்வளவும் பயன்படாமல் போக, ராகு காலத்தையும் வாரசூலையையும் வைத்திருப் பான் என்று என்னால் நம்ப முடியவில்லை.

தியாகையர்: நல்லோரின் சேர்க்கை என்பது இறைவனின் கடாட்சத்துக்கு ஒப்பானது.

நியூட்டன்: கண்டுபிடிக்கப்படாத உண்மை கள் நம் முன் சமுத்திரமாகப் பரந்து விரிந்து கிடக்க, நாம் உணர்ந்த உண்மைகள் கரை யோரம் காணப்படும் சில கிளிஞ்சல்களே!

கீழ்க்கண்ட 76 வாசகர்கள் சரியான விடையை எழுதியுள்ளார்கள். பரிசுத் தொகையான ரூ. 200/— ஐ இவர்கள் சம மாகப் பகிர்ந்து கொள்கிறார்கள்:

டி. முருகேசன், மதுரை; எஸ். வேதாம்பாள், திருச்சி; ரெ. மகாதேவன், போடிநாயக்கனூர்; எஸ். நாகசுந்தரம், திருவாடானை; பி. தங்கபாண்டியன், பம்பாய் — 58; ஏ. பி. நாயகம், சென்னை — 1; டி. ரங்க சாமி, கோயமுத்தூர் — 37; எஸ். நரசிம்மன்,

---

பேரு வாழ்க்கை இல்லை. நரகம். நல்ல புருஷ னும் நல்ல மனைவியும் இணையறது ஆயிரத் தில் ஒண்ணுத்தான் இருக்கு.''

''நாம ஆயிரத்துல ஒண்ணு பத்மா?''

''எனக்குத் தெரியாது. கல்யாணத்துக்கு அப்புறம்தான் அதைச் சொல்லணும்...'' குறும்புடன் சிரித்தாள்.

''அப்ப.... சீக்கிரமே ஏற்பாடு பண்ணிட வேண்டியதுதான்'' தண்டபாணியும் சிரித் தான்.

''அதிலும் எனக்குப் பயம்'' என்றாள் அவள்.

''என்னன்னு?''

''கல்யாணத்துக்கு அப்புறம் காதல் செத்துப் போகுது. அரிசி, பருப்பு, குழந்தை ஏக்கம், நோய்கள்னு நிறைய எதிரிகள் காத லுக்கு.''

''இப்படியே இருந்துரலாமா?''

''இதுவும் சுகந்தான். கண்ணை மூடிக் கிட்டுச் சங்கீதம் மாதிரி ரசிச்சுக்கிட்டே இருக்கலாம்.''

''இப்பவே உன்னை உதைக்கணும்னு வருது.....''

''அய்யே.... அடிக்கிற ஆம்பளை எனக்கு வேணும்ப்பா.''

தாம்பத்தியத்திற்கு உரிய சீரிய அம்சங்க ளோடு நிறைவேறியிருக்க வேண்டிய வாழ்க்கை. அம்மாதான் குறுக்கே விழுந்த வள்.

எப்படியோ தெரிந்து,கொதித்தாள். ''நிசந் தானு.... நிசந்தானு'' என உயிரை எடுத் தாள்.

''ஆமாம்மா....'' என்ற பதிலுக்குப் பின் எதிர் வீட்டு மாமியை ரகசியமாகக் கூப்பிட் டாள். ''இதான் பொண்ணை வளர்க்கிற லட் சணமா?'' என்று கேட்டாள்.

குடும்பம் அதிர்ந்தது. மாமி ஊர் அறியா மல் மகளை விளக்குமாற்றால் அடித்தாள். பத்மா எங்கோ இருக்கிற சொந்த கிராமத் திற்கு அனுப்பப்பட்டாள். ஆறு மாதம் வரை தகவல் இல்லை. இங்கே அம்மாவும், சொந்த மும், இவனைக் கலக்க, மாமா பெண் சந்திராவுக்கு மாங்கல்யம் பூட்டுகிற முகூர்த் தம் நடந்தது.

ஊருக்குத் திரும்பிய பத்மா அவன் முகத் தில் கூட விழிக்கவில்லை.

போன வருஷம் அவளுக்கும் கல்யாண மாகிவிட்டது. வாத்தியார் மாப்பிள்ளை. கொடுத்து வைத்தவன் என்று நினைத்தான் தண்டபாணி.

ஆனால் கேள்விப்பட்டது அப்படியில்லை. அடிக்கடி பிறந்த வீட்டிற்கு வந்து கொண் டிருந்தாள். ''அவங்களுக்குள்ளே அவ்ளோ ஒத்துமையைக் காணோம்'' என்று ஊர் சொல் லிற்று.

''நல்ல புருஷனும் நல்ல மனைவியும் இணையறது ஆயிரத்துல ஒண்ணுத்தான் இருக்கு.''

அவளுக்கு வாய்த்தவன் நல்லவன் இல்லை யோ?

பத்மா பிறந்தகத்திற்கு வருகிற ஒவ்வொரு முறையும் தண்டபாணிக்கு வலியும் இம்சை யும் ஏற்பட்டன.

ஆனால் அதற்காக என்ன செய்துவிட முடியும்?

**பா**ல் கொதிக்க இவ்வளவு நேரமா? சட்டென்று சூடேறிப் பொங்கி விடுகிற

திருநெல்வேலி — 6; பாளை அசோக், திருச்சி — 1; ஆர். சீத்தாலட்சுமி, திருச்சி — 8; வி. பாக்யலக்ஷ்மி, மதுரை — 3; எஸ். இராமமூர்த்தி, பாளையங்கோட்டை— — 2; எல். செப்தரிஷி, பெங்களூர் — 3; வி. பாலகிருஷ்ணன், ஓசார் (மகாராஷ்டிரா); வே. முருகன், குளிக்கரை (தஞ்சை மா.வ.); சூ. ஜார்ஜ் மனோகர், பாளையங்கோட்டை — 2; ரகு, திருநெல்வேலி — 57; ஜி. ஜானகிராமன், திருபட்டினம் (பாண்டி); வீ. ரெங்கம், ஸ்ரீவைகுண்டம்; எஸ். சரஸ்வதி, இலுப்பையூரணி; திருமதி பி. சத்யபிரபா, சென்னை — 21; திருமதி டி. மல்லிகா, சென்னை — 81; லலிதா வைத்யநாதன், சென்னை — 4; டி. உஷா ஞானம், கடலூர்; பா. மு. முஸ்தபா, சேலம் — 6; அ. சம்பத், கலியாணபுரம்; ஆர். சந்திரசேகரன், தஞ்சாவூர் — 6; ஆர். ஜயந்தி, திருதுறைப்பூண்டி திருமதி ஆனந்தி, கல்கத்தா — 45; ஆர். வெங்கட்ராமன், டோம்பிவிலி (மகாராஷ்டிரா); என். சுப்பிரமணியன், சென்னை — 14; கே. கே. பச்சையப்பன், கூகலூர் ஸ்ரீமதி ஜானவி, நாக்பூர் — 10; ஸி. எச். ரகோத்தமன், கோயமுத்தூர் — 9; எல். சுதா, நரிமேடு (மதுரை); ஜி. பொன்னம்மாள், சென்னை — 14; பி. பாலசுப்பிரமணியன், பெங்களூர் — 75; எம். நடராஜன், சென்னை — 15; ஆர். ராமமூர்த்தி, செகந்தராபாத் — 61; கே. ராகினிஸ்ரீ, சென்னை — 5; இரா. பிரபாகரன், தஞ்சாவூர் — 2; சு. இளங்கோவன், பொகளூர்- ஆர். ஜயந்தி, பண்ருட்டி; ஜி. முத்துகிருஷ்ணன், சென்னை — 10; என். ஜெயஸ்ரீ, கும்பகோணம் — 1; கே. டி. ஜெயராம், ஒசூர்; அ. ராணி, சென்னை — 75; பாலசுப்பிரமணியன், புதுதில்லி — 67; ஆர். பாஸ்கர கிருஷ்ணமூர்த்தி, சேலம் — 5; பி. கே. மூர்த்தி, மதுரை — 18; சுந்தரி மோகன், தூத்துக்குடி — 2; ம. ரமேஷ், சென்னை — 34; வி. ரங்கசாமி, அய்யனேரி (நெல்லை மா.வ.); என். ஆனந்தகுமார், ஈரோடு; ஜி. வி. அர்த்தநாரி, வேலூர் (சேலம்); ராஜீவி நரசிம்மன், பம்பாய் — 38; கே. வி. கிருஷ்ணன், தஞ்சாவூர் — 4; திருமதி லலிதா மணியன், சென்னை — 51; இரா,. ரமேஷ், திருப்பத்தூர் (வ.ஆ.); ஸ்ரீ. பாலசந்தர், திருவாரூர்; கே. என்., லலிதா, சென்னை — 23; நா. இராஜேஸ்வரி, சென்னை — 34; ச. சா. வெங்கடேசன், சென்னை — 90; கே. எஸ். பரமேசுவரன், சென்னை — 41; டி. எம். இரத்தினவேல், தூ. நா. பாளையம்; இரா. செண்பகராஜ், திருநெல்வேலி — 1; ராஜ்குமார், கம்பம்; திருமதி எம். கே. வசந்தபிரேமகுமாரி, சிவகங்கை, என். சுகன்யா, சென்னை — 44; நா. சீ. ராமமூர்த்தி, திருப்பூர்; லலிதா ராமகிருஷ்ணன், மதுரை — 14; எம். ரவீந்திரன், கச்சனம் (தஞ்சை); கே. ஆர். ஸ்ரீனிவாசன், மதுரவாயல்; பி. எம். பிரபாகரன், திருமருகல்; எல். கே. சபேஷ், ஸ்ரீவைகுண்டம்; வெ. கலைச்செல்வி, பண்ருட்டி.

பெயரும் விலாசமும் குறிப்பிடாததால், சரியான விடை எழுதியும், ஒருவருடைய கூப்பன் நிராகரிக்கப்பட்டுள்ளது.

---

வஸ்து. தற்செயலாகச் சந்திரா திரும்ப.... வீம்புதான் இது.

அழுகையை நிறுத்தி இருந்தாலும் பையனைப் பார்க்கப் பாவமாக இருந்தது. சின்ன வயிறு. எவ்வளவு நேரம்தான் பசியைத் தாங்கும்?

திடீரெனச் சந்திராவும் பாவப்பட்டவளாகத் தெரிந்தாள். சண்டைக்குப் பிறகு இரவு அவள் சாப்பிடவில்லை. அழுது கொண்டிருந்தவள் அப்படியே தூங்கிப் போனாள். எதற்கு இதெல்லாம்? தன்னையும் வருத்தி, குடும்ப அமைதியையும் கெடுத்து....

ஒருவேளை அவளுக்கும் "நல்ல புருஷனைப் பற்றிய கனவு இருந்திருக்குமோ? அவளுடைய அர்த்தத்தில் மாதக் கடைசியிலும் செலவைப் பற்றிக் கவலைப்படாதவனாக, சினிமாவுக்குக் கூட்டிப் போகிறவனாக, எதிர் வீட்டில் எவளையும் சினேகிதம் கொள்ளாதவனாக இருப்பவன் நல்ல கணவன். நிஜத்திற்கும் கற்பனைக்கும் இடையே உள்ள இடைவெளிதானே இந்தச் சண்டையும், சச்சரவுகளும்?

ஒவ்வொருத்தருக்கும் ஒவ்வொரு கனவு. கைக்கு எட்டாத நிஜ வாழ்க்கை. பத்மா புருஷனைப் பிரிந்து வாடுகிறாள். இருந்து கொண்டே சந்திராவும் வாழ்வை நரகமாக்குகிறாள். தனது வீட்டில் வாத்தியாரும் இப்படி குறுகிப் போய் அமர்ந்திருக்கக் கூடும்.

"அப்பா.... பசிக்குதுப்பா..." பையன் மீண்டும் சிணுங்கினான்.

"பொறு.... இந்தா வந்திடும்..."

எழுந்து நின்று தூக்கிக் கொண்டான்.

"இந்தாடா.... குடிச்சுத் தொலை" சந்திரா பால் தம்ளரை மேஜையில் வைத்து விட்டுப் போனாள்.

ஆபீஸுக்கு லேட்டாகி விட்டது.

"குட்மார்னிங் ஸார்...."

"ஸே.... குட் ஆஃப்டர் நூன்" என்றார் மேனேஜர். சம்பிரதாயமாகச் சிலர் சிரித்தார்கள். ஏதோ ஒரு சினிமாவில் இப்படி வருகிறது. தனக்குரியதாக அவர் அந்த வார்த்தைகளைப் பயன்படுத்துவதும், அடிக்கடி கேட்க நேர்ந்தாலும் மற்றவர்கள் சிரிப்பதும்....

"ஒரு அவசர வேலை ஸார். அட்டண்ட் பண்ணிட்டு வர வேண்டியதாச்சு."

தனது இருக்கைக்கு வரும்போது மனம் சோர்ந்துவிட்டது.

"வீட்ல சண்டையா?" முகத்தைப் பார்த்துக் கேட்டான் ராகவன். பக்கத்து மேஜை. ஆபீஸில் ஓரளவுக்கு நெருங்கிப் பழக முடிகிற நண்பன். இவனுக்கு எப்படித் தெரிந்தது?

ஆமோதித்து தலையசைக்க —

"நினைச்சேன்...." என்று இழுத்து ராகவன் சொன்னான்: "நம்ம ரெண்டு பேருக்கும் விடிவு காலமே கிடையாது."

"ப்த்ஸ்...."

"என்ன சண்டை?"

"வழக்கம் போலத்தான்."

"பொம்பளைகளுக்கு உள்ள திமிரு இருக்கே...."

பேச ஆரம்பித்தால் சீக்கிரம் முடியாது.

"அப்புறம் பேசலாமே ராகவன்....?"

பதிலுக்குக் காத்திருக்காமல் லெட்ஜரை இழுத்து, 'என் அப்பனே....' என மனத்துக்

குள் வேண்டி, பேனுவைக் கையில் எடுத்தான் தண்டபாணி.

''இன்னிக்கு நானும் சண்டை போட்டுட்டுத்தான் வந்தேன். சாம்பார் வைக்கிருளாம். உப்பு இல்லாம. என்னடீன்னு கேட்டா....''

''மேனேஜர் நம்மையே பார்க்கிருர் ராகவன்....''

''கேன்டீனுக்குப் போறப்ப கூப்பிடு...''

''ம்.... இப்பச் சொல்லு? என்ன சண்டை?'' ராகவன் கான்டீன் காப்பியை உறிஞ்சிக் கொண்டு அவனது முகத்தைப் பார்த்தான்—கதை கேட்கப் போகிற குழந்தை மாதிரி.

சுருங்கச் சொன்னுன்.

''குடும்பம்னு அப்படித்தான்...'' என்றுன் ராகவன். ''இன்னிக்கு எங்க வீட்ல கூட சண்டை. ஒரு அல்ப காரணம்.''

''அது வேறு. என்னது உரிமை மாறிப் போன விஷயம்.''

''அப்படீன்னு?''

''நாங்க சரியான ஜோடி இல்லேயோன்னு தோணுது.''

''ஏன்?''

''வாரம் ரெண்டு சண்டை.... போதாதா? பிரியம் இருக்கிற மனசுக்குக் கோபம் வராது ராகவன்.''

''அப்ப உலகத்துல எந்தக் குடும்பத்திலும் அது இல்லாமப் போயிருச்சுங்கிறியா? உன் பத்மாவையே எடுத்துக்க. ஏன் கோவிச்சுக்கிட்டு வர்ரு...''

''தப்பு பண்ணிட்டேண்டா. அவளேக் கல்யாணம் பண்ணியிருந்தா ரெண்டு பேர் வாழ்க்கையும் நல்லா இருந்திருக்கும்.''

தண்டபாணி கைக்கடிகாரத்தைப் பார்த்தான். முகம் ரொம்பவும் மாறிப் போயிருந்தது.

ராகவன்சிறிதுநேரம்எதுவும்பேசவில்லே.

கேன்டீனில் கூட்டம் குறைந்து கொண்டிருந்தது.

எதையோ யோசித்து விடை கண்டவன் போலப் பேசினுன் ராகவன்.

''நான் லவ் மேரேஜ்தான் பண்ணிக்கிட்டேன். காதலிதான் மனேவி. இப்ப.... சாம்பார்ல உப்பு குறைஞ்சதுக்குச் சண்டை வருது....''

''அது உன் பலவீனம்.''

''அப்படி அல்ல. கல்யாணத்துக்குப் பிறகு பிரியத்தை வெளிப்படுத்த சந்தர்ப்பம் அற்றுப் போகுது. குடும்பச் சுமை. மளிகை பாக்கி. உற்சாகமற்ற உத்தியோகம், சம்பளத் தேதி கவலே.... மனேவி கோபத்தை வடிக்க வேண்டிய பொருளா ஆயிடறு.... யாரைக் கட்டிக்கிட்டாலும் இதான் நடக்குது.

''இன்னிக்கு அவ கேக்கிரு... இந்தச் சம்பளத்தை வச்சுக்கிட்டு என்னே ஏன் காதலிச்சீங்கன்னு....''

''நீ என்ன சொன்னே?''

''தப்புதான்னு ஒத்துக்கிட்டேன்...'' — சிரிப்பு.

ராகவன் எழுந்தான். ''வா நேரமாச்சு.''

இருவரும் ஆபீஸுக்கு நடந்தார்கள்.

''மனுஷன் சூழ்நிலேகளின் கைதிங்கறது தான் நிஜம். இந்த நிலேயில் இந்த வாழ்க்கை தான் சாத்தியம். எனக்குத் தெரிஞ்சது இது. அப்பப்ப கிடைக்கிற சந்தோஷம், பிரச்னே களின் இடைவெளியில்கிடைக்கிறபோனஸ். என்னங்கிறே?''

தண்டபாணி பதில் சொல்லவில்லே. அப்படித்தானேஎனதனக்குள்ஒருமுறைகேட்டுக் கொண்டான். நிஜத்திற்கும் கற்பனேக்கும் இடையே நிலவிய இடைவெளிகளே மறந்து இந்த 'இடைவெளிகளே' அதிகமாக்க முயற்சி செய்ய வேண்டும் என்று நினேத்துக் கொண்டான்.

---



## அரசியல்வாதி

பயிற்சியும் பக்குவமும் தேவைப்படாத ஒரே தொழில் அரசியல்தான் என்று கூறலாம். — ராபர்ட் ஸ்டீவன்ஸன்

கட்சி கொடிகளின் நிழலில்தான் நாட்டுப் பற்று புதைக்கப் படுகிறது. — ஸெயின்ட் பியர்

ஓர் அரசியல்வாதி தான் சொல்வதைத் தானே ஒருபோதும் நம்பாததால், மற்றவர்கள் நம்பும்போது பெரிதும் வியப்படைகிருன். — சார்தெகோல்

அரசியல்வாதிகள் எல்லா இடங்களிலும் ஒன்றுபோலத்தான். ஆறு இல்லாத இடத்தில்கூடப் பாலம் கட்ட வாக்களிக்கின்றனர். — குருஷ்சேவ்

தொகுப்பு: எஸ். முகம்மது யூசுப்

# முகம் மூடாத் திருடர்க



"**எ**தையோ தேடுகிறீர்கள் போலிருக்கிறதே.... இது உங்களுடையதா? பாருங்கள்'' அய்யாக்கண்ணுவின் கையில் காசு மாலை பளபளத்தது! அந்தப் பெண்ணின் கண்களிலும்ஆசைமின்னியது.அவள்பக்கத்தில் குழந்தையைத் தோளிலும், பையைக் கையிலுமாகச் சுமந்தபடி நின்றிருந்த அவள் கணவனுக்கு ஒன்றும் புரியவில்லை! அவர்கள் அதுவரை எதையும் தேடவில்லை.

''எங்களுடையதுதான் போலிருக்கிறது!'' — அவள் கைகள் காசுமாலையை வாங்கிக் கொண்டன. அய்யாக்கண்ணு கையில் காசுமாலை மடித்த புதிய செவ்வூதா டிஷ்யூ காகிதம் மட்டும் இருந்தது....

''அடையாளத்தைச் சொல்லிட்டு எடுத்துப் போங்க.... எத்தனை காசுகள் இருக்கும் உங்க மாலையிலே?'' அய்யாக்கண்ணு கேட்டான். அவள் கண்ணில் சிறிது ஏமாற்றம்.

''இதெல்லாம் யார் எண்ணி ஞாபகம் வச்சிருக்காங்க? என் கூட வந்த என் தங்கையுடையது....'' அவள் கண்கள் அவசரம் அவசரமாய்க் காசுகளை எண்ணத் துவங்கின.

'சட்'டென்று பிடுங்கினுற் போல காசு மாலையை வாங்கிக் கொண்டான் அய்யாக்கண்ணு.

''உங்கள் தங்கையையும் அழைச்சுக்கிட்டு வந்து போலீஸ் அவுட் போஸ்டிலே அடையாளத்தைச் சொல்லி வாங்கிகிட்டுப் போங்க....'' அய்யாக்கண்ணு நடக்க ஆரம்பித்தான்.

''நீதான் ஒங்கம்மாவுக்கு ஒரே பெண்ணுச்சே... உனக்கு ஏதடி அக்காவும் தங்கையும்?'' என்று அவள் கணவன் அவளைக் கேட்டது அய்யாக்கண்ணு காதிலும் விழாமலில்லை!

•

**க**ண்ணபுரம் தேர்த் திருவிழா அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது.... பொரி அவல் கடை முதல் 'புடைவைக் கடல்' வரை தெருவை முற்றிலுமாக ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன. ''மணமான், சுவையான காப்பிக்கு மணீஸ் காப்பி''யும், ''சுகமான குளியலுக்கு சுந்தர் சீயக்காய்ப் பொடி''யும் கலந்து கலந்து ஒன்ருக ஒலிபெருக்கியில்

ஒலித்துக் கொண்டிருந்தன.

இடையிடையே'குழந்தைகள் ஜாக்கிரதை! உங்கள் குழந்தைகள் ஜாக்கிரதை!

''திருடர்கள் ஜாக்கிரதை!'' என்று எச்சரிக்கை வேறு!

அய்யாக்கண்ணு சிரித்துக் கொண்டான். குழந்தைகள் திருடர்களா? திருடர்கள் குழந்தைகளா? குழந்தைகள் ஜாக்கிரதை.. திருடர்கள் ஜாக்கிரதை! என்றுல் என்ன பொருள்?

போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகுமுன் இன்னும் ஓரிருவரையாவது கேட்டுவிட வேண்டும் என்றுதான் அவன் நினைத்தான்.

அரசமரத்தடியில் ஒதுக்குப்புறமாகத் துண்டுக் காகிதங்களை விநியோகித்துக் கொண்டிருந்தனர் சில பெண்கள்... அவர்களில் (தனியாக நின்றிருந்த) ஒருவரை நெருங்கினுன் அய்யாக்கண்ணு. "சிஸ்டர் இது உங்களுடையதா பாருங்கள்!''

காசு மாலை கைமாறியது.... திருப்பித் திருப்பிப் பார்த்தாள் அவள். சிறிது நேரம் தான். "நாங்கள் இதெல்லாம் போட்டுக் கொள்வதில்லை... ஆனல் என் எதிர்வீட்டில் ஒரு பேபி இது மாதிரி போட்டிருந்தது. திருவிழாவுக்கு அவங்க அண்ணனேடு வந்திச்சு. அது மாதிரிதான் இருக்கு இது....''

''உங்க வீட்டு விலாசம்....?''

''தேவையில்லை. என்கிட்டே கொடுத்தால் நானே சேர்த்துடுவேன்.''

''இல்லை... நான் போலீஸ் அவுட் போஸ்டிலே கொடுத்துடறேன்.... அடையாளத்தைச் சொல்லி வாங்கிக்கச் சொல்லுங்க!'' அய்யாக்கண்ணு காசுமாலையுடன் நடந்தான்.

அல்ப ஆசையால் ஒருகணம் மதிமயங்கிச் சொல்லிவிட்ட பொய்க்காக அவள் மனம் அவசரம் அவசரமாகப் பாவ மன்னிப்பு வேண்டி, பிரார்த்திக்கத் தொடங்கியது! அய்யாக்கண்ணு சிரித்துக் கொண்டான்!

**அ**வுட் போஸ்ட்டுக்குள் அய்யாக்கண்ணு நுழைந்தபோது எஸ்.ஐ.யும் உள்ளே 'ஏட்'டுடன் பேசிக் கொண்டிருந்தார்.

''வணக்கமுங்க.''

''வாப்பா அய்யாக்கண்ணு, வா....ரொம்ப நாளாச்சே பார்த்து.... என்ன விஷயம்?'' அவனுக்கு வரவேற்பு பலமாகத்தானிருந்தது அங்கு!

''இந்தக் காசு மாலை கீழே கெடைச்சதுங்க... வழியிலே ரெண்டொருத்தரை விசாரிச்சேன். ஒண்ணும் தோதுப்படலை. அதான் இங்கே கொண்டு வந்துட்டேன்!''

காசு மாலை கை மாறியது... எஸ்.ஐ. அதை வாங்கிப் பார்த்துவிட்டு, மறுபடியும் அதே டிஷ்யூ காகிதத்தில் பொட்டலமாகக் கட்டி பாக்கெட்டுக்குள் திணித்துக் கொண்டார். ''கத்தரிக்கோல் வேலை இல்லையே?'' எஸ்.ஐ. மீண்டும் சந்தேகத்தோடு கேட்டார்.

''திருடியிருந்தால் ஏன் அதை நான் திருப்பிக் கொடுக்க இவ்வளவு முயற்சி செய்யணும்? சேட் கடையிலே காயிதம் வாங்கி மடிச்சுக் கொண்டு வந்தேன் சார்; புதுசா இருக்குதேன்னு.''

ஹெட்கான்ஸ்டேபிளுக்கு ஒரே எரிச்சல். எஸ்.ஐ. இல்லாதபோது வந்திருக்கக் கூடாதா என்று அவருக்குத் தோன்றியிருக்கலாம்.

''யாராவது வந்து கேட்டால் கொடுத்துடலாம் போ!'' எஸ்.ஐ. அழுத்தமாகச் சொன்னுர்.

''ஏதாவது லெட்டர், ரிப்போர்ட்....'' இழுத்தான் அய்யாக்கண்ணு....

''அதெல்லாம் ஒண்ணும் வேண்டாம். பார்த்துக்கலாம்!'' எஸ்.ஐ. வெளியே வந்தார்.

''இன்னும் ஏன் நிக்கறே? அம்பது நூறு அவார்டு வேணுமா? எல்லாம் கெடைக்கும். கொடுக்கிறேன். போ!'' எஸ்.ஐ. மோட்டார் சைக்கிளில் ஏறினுர்.

''காசு மாலை விஷயத்தை ஸ்பீக்கர் பெட்டியிலே சொன்னல் தொலைச்சவங்க வருவாங்க....'' இழுத்தான் அய்யாக்கண்ணு.

''ஸ்பீக்கரிலே சொன்னல் தொலைக்காதவங்கதான் வருவாங்க.... தொலைச்சவங்க போலீசிலே தான் ரிப்போர்ட் செய்வாங்க. இனிமே அது எங்க சொத்து... எங்க கடமை....'' மோட்டார் பைக் சீறிக் கொண்டு புறப்பட்டது!

அய்யாக்கண்ணுவும் புறப்பட்டான்!

**போ**திமரத்தடியில் புத்தருக்கு ஏற்பட்ட ஞானேதயம் போலத்தான் அய்யாக்கண்ணுவுக்கு அன்று அந்த சந்தேகம் தோன்றியது... 'உலகத்தில் எல்லார் மனசுமே ஒரு வகையிலே திருட்டு மனசுதானே....? தைரியமும் பலமும் இருக்கிறவன் திருடனுயிடருன்... மத்தவங்க, ஆபத்து பார்க்காமல் திருடிக் கொடுத்தால் வாங்கிக்கத் தயாராயிருக்காங்க.... சிலர் கௌரவமா எப்படி எப்படியோ எங்கெங்கோ திருடருங்க....

இதைப் பரீட்சை செய்து பார்த்து, உறுதிப் படுத்திக் கொள்ள அய்யாக்கண்ணுவுக்கு ஏற்பட்ட நஷ்டம் — எப்போதோ போட்டதேட்டையில்கிடைத்தஒருவெள்ளிக் காசு மாலை — அதற்குத் தங்கக் கில்ட் போட முப்பது ரூபாய்!

அந்த நஷ்டம் அவனுக்கு ஒரு பொருட்டே அல்ல.... ஆனல் அவனுக்கு இன்னும் ஒரு சந்தேகம்.... பத்திரிகையில் எல்லாம் வருகிறதே...'முகமூடித் திருடர்கள்!'' என்று...

யார் முகமூடித் திருடர்கள்? யார் முகம் மூடாத திருடர்கள்?

ஸ்பீக்கர் வியாபார விளம்பரங்களை நிறுத்திவிட்டு, பொதுமக்கட்கு எச்சரிக்கை விடுத்துக் கொண்டிருந்தது.

''திருடர்கள், கேடிகள் நடமாட்டம் இருப்பதாகத் தகவல் கிடைத்துள்ளது. பொதுமக்கள் எச்சரிக்கையாக, விழிப்புடனிருக்க வேண்டும் — திருடர்கள் ஜாக்கிரதை!'' அய்யாக்கண்ணு சிரித்துக் கொண்டான்!

**— ஆர். பி. சாரதி**

* வாழ்க்கையில் அவன் ரொம்பவும் முன்னேறிவிட்டான். பதினைந்து வருஷங்களுக்கு

# பாரு நிலாவே



அடிக்கடி பாடப்படுவதாலேயே, 'மலையோரம் வீசும் காத்து' பாடல் மனத்தில் நிற்கிறது. மற்றபடி வேறு எந்தப் பாடல்களும் இதயத்தைச் சுண்டி இழுக்கக் காணும்!

மிடுக்கான நடை இறுக்கமான, தேவைப்பட்டால் கருணை பொழியும் முகபாவம் கொண்ட ஜெயிலர் ஏ.ஆர்.எஸ். டாப்!

ஏதாவது ஒரு மலையும், மலைப்பாங்கான இடமும் என்று தேர்ந்தெடுத்துவிட்டாலே, காமிரா தானாக,கண்ணுக்குக் குளிர்ச்சியான காட்சிகளைத்தான் கட்டித் தழுவும் போல.

மீண்டும் ரவிச்சந்திரன்! அப்பா—கம்—வில்லன். சொந்தக் குரலா என்ன? அவ்வப்போது எட்டிப் பார்க்கும் எலித் தலை போல ஏறி ஏறி உள்வாங்குகிறதே அந்தக் குரல்.

இரண்டு ஸீன்களில்தான் என்றாலும் சென்ட்ரி கான்ஸ்டபிளான மோகன் போடும் காக்கிச் சட்டையும்,தொப்பியும் அவருக்குஒட்டவே யில்லை. மற்றபடி மாடர்ன் உடைகளில் பரவாயில்லை. நதியாவும் மோகனும் அப்படி ஒன்றும் ஸ்பெஷலாகப் பண்ணி விடவில்லை என்றாலும் ஜோடி நன்றாகத்தான் இருக்கிறது — தேன் சிட்டுக்கள் போல.

ஒரு சாதாரண ரசிகன், டாப் ஸிங்கராக மாறுவது பழைய மாவு. ஆனால் கொலைக் கைதி அப்பா, தற்கொலை செய்து செத்துப் போகும் அக்கா, இருவரையும் ஒரு ரயில் பயணத்தில் தவற விட்ட மகன் ஆகியவை அந்தப் பழைய மாவில் சேர்க்கப்பட்ட விறு விறுப்பு இஞ்சி, காரக் கடுகு, வாசனைக் கொத்துமல்லி. திரைக்கதையைப் பின்னியிருக்கும் விதத்தில் குறை சொல்ல அதிகம் வாய்ப்பில்லைதான்.

வெண்ணிற ஆடை மூர்த்தி, செந்தில் கறிவேப் பிலைகள்.

முதலில் ஒரு பாடகிக்காகப் பனியனில் பாடகியின் உருவத்தை அச்சடித்துக் கொண்டு சுற்றும் ரசிகர்கள், அப்புறம் பாடகனுக்காக பனியனில் பாடகனின் உருவத்துடன் உலா வரும் வாலிப உள்ளங்கள். நிஜத்தில் இப்படி இருந்தால் எஸ்.பி.பி.யும் ஜானகியும் எவ்வளவு சந்தோஷப் படுவார்கள், என்ன சொல்கிறீர்கள், டைரக்டர் ஸார்?

சுற்றி வரும் பவர்ஃபுல் விளக்குகள், அலையும் போலீஸ், இத்தனைக்கும் நடுவில் ஏதோ ஒரு டி.வி. டவர் போன்ற உயரமான டவரில் டெலிஸ்கோப் பொருத்திய துப்பாக்கியுடன் வில்லன் ஏறி, டுமீல் என்று சுட்டு, சுடப்பட்டு, கீழே விழுந்து, திருந்தி..... க்ளைமாக்ஸ்தான் சீரான கதையில் அபத்தம்.

— ஜெயமன்மதன்

# ஆபத்தான வளைவுகள்

9 — மேகுந்தன்

அந்த அதிகாலை வேளையில், அசுரத்தனமான ஒரு வெறியுடன் டென்னிஸ் ஆடப் பழகிக் கொண்டிருந்தான் அருண். அன்று பயிற்சியின் ஏழாவது நாள்.

சென்ற வாரம், முதல் முதலாகப் பயிற்சிக்கு அவன் போய்ச் சேர்ந்தபோது, லேடீஸ் கிளப்பின் டென்னிஸ் கோர்ட்டில் குட்டையான ஓர் ஆசாமியுடன் காத்திருந்தாள் அம்பிகா.

அந்த ஆள் 'பந்து பொறுக்கிப் போடும் பையனாக இருக்கும்' என்றுதான் முதலில் நினைத்தான் அருண்.

''மீட் அவர் கோச் மிஸ்டர் பஞ்ச்!'' என்று அம்பிகா அவரை அறிமுகப்படுத்தியதும் வியப்பை விழுங்கிவிட்டு, ஏற இறங்க ஒரு பார்வை பார்த்தான் அருண்.

குட்டையான தோற்றம். இரண்டரை ரூபாய் இளநீர்க் காய் போலப் பெரிய மண்டை. அதன் மேற்புறத்தில் சாம்பல் நிறத்தில் ஒரு 'விக்'. மேலே வரி வரியாய் டிஸைன் போட்ட பனியன் அணிந்திருந்தார் பஞ்ச். அதே போல் ஷார்ட்ஸ். அசப்பில் பார்த்தால் — அதாவது உயரத்தை ஒதுக்கி வைத்தால் — ஸ்பைடர் மேன் தினுசில் இருந்தார். வாய் சூயிங்கத்தை ஓயாமல் மென்று கொண்டிருந்தது. இருபது செகண்டுகளுக்கு ஒரு தரம் வாயைத் திறந்து 'தூ! தூ!' என்று, அக்கம்பக்கத்தில் இருப்பவர்களை லட்சியம் செய்யாமல், எச்சில் துப்பி அசிங்கப்படுத்திக் கொண்டிருந்தார்.

''இவரா கோச்? நம்ப முடியவில்லையே?'' என்று அம்பிகாவை ஆறடி தள்ளித் தனியே அழைத்துப் போய், தனது சந்தேகத்தை வெளியிட்டான் அருண்.

''மசமசவென்று நிற்காதீர்கள்... போய், பிராக்டீஸை ஆரம்பியுங்கள்..''

''வந்து... ஒரு சந்தேகம்: பிராக்டீஸ் எத்தனை நிமிஷத்துக்கு — பதினைந்தா? இருபதா?''

''நாசமாப் போச்சு! ஒண்ணரை மணி நேரம் ஆட வேண்டுமாக்கும்! அதற்கு ஒரு நிமிஷம் குறைந்தாலும் பஞ்சுக்குக் கோபம் வந்து விடும்...''

''வந்தால் என்ன?''

''கோபம் வந்தால் தன் ரேக்கெட்டை முழங்காலில் வைத்து மளக்கென்று முறித்துப் போட்டுவிடுவார். புது ரேக்கெட்டை வாங்கிக் கொடுக்க வேண்டியது உங்க பொறுப்பு...! டென்னிஸ் ரேக்கட் என்ன விலை விற்கிறது, தெரியுமா?''

பஞ்சை முறைத்தபடியே களத்தில் இறங்கினான் அருண்.

பஞ்ச் தமது இடது கையில் அரை டஜன் பந்துகளை அநாயாசமாக அடக்கிக் கொண்டார். முதல் பந்தை அடித்து, அருண் பக்கம் வீசினார். பந்து ஆகாயத்தில் போனதும் ரஜினிகாந்த் ஸ்டைலில் வாயில் சிகரெட் பொருத்தி, லைட்டரால் கொளுத்திக் கொண்டார்.

அருண் பந்து வரும் திசையை ஊகித்துத் தனது ரேக்கட்டைக் கொண்டு போனான். பந்து பட்டால்தானே? பஞ்ச் வீசிய இரண்டாவது பந்தையும் தவற விட்டான். மூன்றாவது பந்தை மெதுவாக அடிக்கவும், 'நெட்'டில் போய் விழுந்தது. அடுத்ததை ஆத்திரத்துடன் அடிக்க, அது ஜிவ்வென்று வானில் எழுந்து, கோர்ட்டைத் தாண்டி, காம்பவுண்ட் சுவரைத் தாண்டி, கிளப்புக்குப் பின்புறமி



ருந்த தென்னந்தோப்பில் போய் விழுந்தது. ஐந்தாவது, ஆறுவது பந்துகள் ரேக்கட்டைக் கண்டு வெட்கப்பட்டுக் கொண்டு, மூலேயில் ஒதுங்கின. (அப்படித்தான் அருண் நினைத் துக் கொண்டான்.)

தொண்ணூறு நிமிடப் பயிற்சியின் விளே வாக முதல்நாளே தொய்ந்து துவண்டு போனன் அருண். உடம்பின் ஒவ்வொரு மில்லி மீட்டரும் வலித்தது. வாயைத் திறந்து தான் மூச்சுவிட முடிந்தது.

இப்படி மூன்று நாட்கள் பயிற்சி செய்த தன் விளேவாக, ஆபீஸில் போய் உட்கார்ந்த துமே அலுப்பும் களேப்புமாகச் சேர்ந்து தூக் கம் வந்தது. எதைக் கண்டாலும் எரிச்சலாக வந்தது.

''நீங்கள் மாறிக் கொண்டு வருகிறீர்கள் போலத் தெரிகிறது!'' என்ருள் லேகா ஒரு நாள்.

''மாறுதல் என்ருல் எப்படி? கொஞ்சம் தெளிவாகச் சொல்!'' என்ருன் ஒரு கொட் டாவியை வெளித் தள்ளியபடியே.

''முகத்திலே வழக்கமான மலர்ச்சி, கல கலப்பு எதையும் காணும்... ஏன் இந்தத் திடீர் மாறுதல்? நான் தெரிந்து கொள்ள லாமா?''

''எல்லாம் உன்ஞல்தான்! அந்தப் பாழாய்ப் போன ஃபார்முலாவாலே தான்!''

''அதற்காக ரொம்பச் சிரமப்படுகிறீர் கள் — அவ்வளவுதானே?''

''லேசாகச் சொல்கிருயே! நாய் படாத பாடு பட்டுக் கொண்டிருக்கிறேன் தினமும்! என்ன அலேச்சல், எத்தனே சிரமம்! உனக்கு என்ன தெரியும்?''

''நானே கேட்க வேண்டுமென்றிருந் தேன்... அதென்ன தினமும் சாயந்திரம் ஆபீஸ் விட்டதும் பிய்த்துக் கொண்டு கிளம்பி விடுகிறீர்கள்? முன்னேப் போல நின்று என்னிடம் இரண்டு வார்த்தைகள் பேசுவது கூடக் கிடையாது!''

''நான் எங்கே போகிறேன் என்று தெரிந் தாக வேண்டுமாக்கும்? கேட்டுக் கொள்: தினமும் லேடீஸ் கிளப்புக்குப் போகி றேன்...''

''மெம்பராகச் சேர்ந்திருக்கிறீர்களா?''

''இல்லே... உன்னேவிட அழகான — கவர்ச்சியான — ஆனல் உன்னேப் போலவே பிராணனே வாங்குகிற ஒரு பெண்ணேச் சந் திக்கத்தான் போகிறேன் — நாள் தவருமல்,... போதுமா?''

அவன் கிண்டல் செய்வதாக நினேத்துக் கொண்டாள் லேகா. ''எப்பவும் உங்களுக்குக் கேலிதான், குறும்புதான்!''

''இல்லே... உண்மையைத்தான் சொல் கிறேன்... சந்தேகமிருந்தால் வந்து பாரேன்!'' என்று சொல்லி, கிளப்பின் இருப்பிடத்தையும் அவன் சொல்லவே, லேகாவுக்கு என்னவோ போலாகி விட்டது. அவனுடன் மேலே எதுவும் பேசாமலே, தன் சீட்டுக்குப் போய்விட்டாள்.



அவளுடைய தொந்தரவு இன்னும் கொஞ்ச நேரத்துக்கு இருக்காது என்று உறுதிப்படுத்திக்கொண்டு, பருமனுன ஃபைல் ஒன்றை எடுத்து மேஜை மீது வைத்து முகத்தை மறைத்துக் கொண்ட அருண், ஆபீஸ் நாற் காலியில் உட்கார்ந்தபடியே தூங்கத் தொடங் கினுன்!

இருபத்தோராம் தேதி காலையில் எழுந் திருக்கும் போதே அன்று தனக்கு மிக முக்கிய மான பொறுப்பு ஒன்று காத்திருப்பது அரு ணுக்கு நினைவு வந்துவிட்டது.

சென்ற வாரம் அந்தத் தர்மராஜன் வந்து என்ன சொல்லிவிட்டுப் போனுன்? இருபத் தோராம்தேதிவளசரவாக்கம்வீட்டில் சத்யா வை அவனது விரோதிகள் சுட்டுக் கொல்ல முயல்வார்கள். அதைத்தடுக்கும்பொறுப்பை யும் அதற்கென ஒரு பிஸ்டலையும் அருணிடம் அல்லவா' ஒப்படைத்துவிட்டுப் போயிருக் கிருன்!

இன்று சாயந்தரம் கிளப்புக்குப் போய் அம்பிகாவுடன் இரண்டே இரண்டுவார்த்தை பேசிவிட்டுச் சீக்கிரமாகக் கழன்று கொள்ள வேண்டும். அப்போதுதான் வளசரவாக்கம் வீட்டுக்குக் குறித்த நேரத்தில் செல்ல முடியும்' என்று காலையிலேயே தீர்மானித்து விட்டான் அருண்.

அதன்படி மாலையில் லேடீஸ் கிளப்புக்கும் போனுன். அம்பிகா இவனைக் கண்டதும் தன் மகிழ்ச்சியை வெளிப்படுத்த ஒரு காட் டுக் கூச்சல் போட்டு, கிளப் கட்டடத்தில் அரட்டையிலும், சிண்டு முடிவதிலும் பிஸி யாக இருந்த மற்ற பெண் — உறுப்பினர்களை வெளியே ஓடிவரச் செய்து, அமளி கிளப்பி னுள்.

அருண் முள்ளின்மேல் நிற்பவன் போல் துடிக்க ஆரம்பித்தான். காரணம், நேரம் ஓடியதே தவிர, அம்பிகா டென்னிஸ் ஆடு வதை நிறுத்துகிற வழியாகக் காணேம். ஓரிரு முறை 'நான் போகிறேன்!' என்று கையால் ஜாடை செய்ததற்கு, 'இரு! வருகிறேன்!' என்று உரக்கக் கத்தி அவள் பதிலளிக்கவே, நிற்க வேண்டியதாகி விட்டது.

ஒருவழியாக ஆட்டத்தை முடித்துக் கொண்டு வந்த அம்பிகா நேரே வாசலுக்கு வந்து காரில் ஏறிக் கொண்டாள். ஒரு பக்கக் கதவைத் திறந்து விட்டு, "கெட் இன்!" என்ருள் அதிகாரக் குரலில்.

போகும் வழியில் இறக்கி விடுவாளாக்கும் என்ற எதிர்பார்ப்பில் அருணும் ஏறிக் கொண்டான்.

கார் நடுங்கிக் கொண்டே புறப்பட்டது. "இப்ப ரொம்பப் பிஸியா நீங்கள்?" — விசா ரித்தாள் அம்பிகா.

"ஆமாம்... ஒரு முக்கியமான வேலை இருக் கிறது... அவசரமாகப் போயாக வேண் டும்..."

"லைட்டாக டிபன் — காப்பி சாப்பிட்டு விட்டுப் போகலாமே! ஆட்சேபணை இல் லையே?"

தட்ட முடியவில்லை. தலையாட்டினுன்.

அம்பிகா காரை வேகமாக ஓட்டினுள். காரின் வேகத்துக்குஈடுகொடுக்கும்வகையில் வாய் ஓயாமல் பேசவும் செய்தாள். எல்லாம் டென்னிஸ் புராணம். புள்ளி விவரங்களை அவள் அநாயாசமாக அள்ளி வீசியபோது, பிரமித்துப் போனுன்.

கார் இப்போது சாஸ்திரி நகரைத் தாண்டி, திருவான்மியூர் நோக்கிச் சென்று கொண் டிருந்தது.

"ஹேய்! எங்கே போகிறேம் நாம்?" என்று கூவினுன்.

"அதுதான் சொன்னேனே — ஹோட்ட லுக்கு!"

மேலும் ஒரு நாற்பத்தைந்து நிமிடம் கழித்து, கார் மெயின் ரோடிலிருந்து ஒரு கிளைச் சாலையில் நுழைந்து, கடற்கரையை ஒட்டியிருந்த ஒரு ஹோட்டலை நோக்கிச் சென்றது.

காரை நிறுத்திக் கீழே இறங்கினுள் அம்பிகா. "கெட் டவுன்! மனசு வரவில்லை யா இறங்க?"

அருணின் பிரமிப்பு இன்னும் நீங்கவில்லை. "அம்பிகா! டிபன் சாப்பிட நாம் இங்கே வருவோமென்று எதிர்பார்க்கவில்லை...."

"நான் டிபன் சாப்பிடுவதென்ருல் இங்கே தான் வருவேன்... இங்கே ஒரு ரவா பொங்க லும் சட்னியும் தருவார்கள் பாருங்கள், அதைப் போல மெட்ராஸ் சிட்டியிலே எங்குமே நீங்கள் சாப்பிட முடியாது!"

ரவா பொங்கல் என்றதும் வெறுப்பில் முகம் சுளித்தான் அருண்.

"என்ன! முகம் ஏன் ஒருமாதிரி ஆகி விட்டது? உங்களுக்குப் பிடிக்காதோ ரவா பொங்கல்!"

"உவ்வே!" என்று சொல்லி நாக்கை வெளியே நீட்டித் தனது வெறுப்பைப் பிர கடனப்படுத்தினுன்.

"அதுதான் இன்றைக்குச் சாப்பிடப் போகிறேம்!" என்ருள் அம்பிகா தீர்மான மாக.

மணற்பரப்பில் மேஜை — நாற்காலிகள் போடப்பட்டிருந்தன. கையெழுத்து மறை கிற வேளையாகவும் இருந்தது. இரண்டை யும் பயன்படுத்திக் கொண்டு, அம்பிகா கவனிக்காத நேரம் பார்த்து, பிளேட்டில் வைக்கப்பட்ட ரவா பொங்கலில் எழுபது சதவிகிதத்தை மணலில் வீசினுன் அருண். அப்படியும் முப்பது சதவிகிதத்தை விழுங்க வேண்டிய கட்டாயம் நேர்ந்தது.

காப்பியை உறிஞ்சும்போது, "மாடலிங் பண்ண வேண்டும் என்று சொன்னீர்களே, எப்போது போட்டோகிராபி செஷன்?" என்று கேட்டாள் அம்பிகா திடீரென்று.

"அதுவா? ஊட்டி டீ எஸ்டேட்காரர் வெளிநாடு போயிருக்கிருர். அவர் திரும்பி வந்தவுடன்!"

"திருப்பூர் பேன்டீஸுக்கு மாடல் என்று சொன்னீர்களே!"

"முதலில் டீ, அப்புறம் பேன்ட்டீஸ்!"

"ஐ டோன்ட் மைண்ட்!"

"அந்த இரண்டுக்கும் முன்னுலே ஒரு

அவளைக் கண் இரண்டாவது சந்திப்பிலிருந்துதான் அவன் காதலித்தான். காரணம் *

பப்ளிக் சர்வீஸ் கேம்பெய்ன் இருக்கிறது. எயிட்ஸ் பற்றியது. அந்த நோய் பற்றிய முழுத் தகவல்களும் கொண்ட விளம்பரங்கள்....

''எயிட்ஸ்? எங்க மாமா ஃபாக்டரியிலே கூட அதற்கு ஏதோ மருந்து கண்டு பிடித்திருக்கிறார்கள். தெரியுமா உங்களுக்கு?''

''தெரியாதே!''

''வேடிக்கை பாருங்கள். ஆனால் அந்த மருந்தை இப்போது தயாரிக்கப் போவதில்லையாம்... அங்க்கிள் சொல்றார். சுத்தக் கிறுக்கு!''

''தயாரிக்கப் போவதில்லையா? ஏன்?''

''காரணம் சொல்லவில்லை.... ஆனால் அந்த மருந்து ஃபார்முலாவை எங்கிட்ட கொடுத்து வைத்திருக்கிறார்....'' 'பத்திரம்! பத்திரம்!' என்று சொன்னார்...

''நீ பத்திரமாக வைத்திருக்கிறாய், இல்லையா?''

அம்பிகா அவுட்டுச் சிரிப்புச் சிரித்தாள். ''என்கிட்டே இருந்தால் தொலைந்து போய் விடுமென்று என்.... என்... என்....''

''உன்.... உன்.... உன்... என்ன சமாசாரம்? சொல்லும்மா சீக்கிரம்?''

''என் லவர் கிட்ட தள்ளி விட்டுட்டேன். அவருக்குத் தெரியாமலே!''

''எப்படி? எப்படி?''

''என் லவர் ஒரு சரியான ஊர் சுற்றி... எப்போதாவது என்னைப் பார்க்க வருவார். அஞ்சு நிமிஷம் கூடப் பேசமாட்டார். ஓட்டம்தான்! அப்படி வந்திருந்த ஒரு சந்தர்ப்பத்திலே அவருக்குத் தெரியாமல் அவருடைய ஷர்ட் பாக்கெட்லே ஃபார்முலா பேப்பரைத் திணித்து அனுப்பிவிட்டேன்!''

''சின்ன பேப்பர்தானா அது?''

''நோட்புக் பேப்பர் அளவுக்குத்தான் இருக்கும்....பொடிப்பொடியான எழுத்திலே யாரோ எழுதியிருக்கிறார்கள்....''

''டைப் செய்யப்பட்டதில்லையா?''

''நோ! கையெழுத்து! என் கண்ணாலப் பார்த்தேனே!''

''அதிருக்கட்டும். உன் லவர் அதற்கப்புறம் உன்னை வந்து பார்க்கவே இல்லையா?''

''இல்லையே! எங்கேயாவது சுற்றிக்கொண்டிருப்பார்! அவருடைய விலாசம்கூட எனக்குத் தெரியாது. தெரிந்திருந்தால் நானே போய்ப் பார்த்து, 'என்னப்பா! என்னாச்சு உனக்கு? ஏன் வர்றதே இல்லை?' ன்னு கேட்டிருப்பேன்!''

தன் முயற்சிப் பாதையில் திடுமென கான்கிரீட் சுவர் ஒன்று குறுக்கே எழுப்பப்பட்டு விட்டது போலத் தோன்றியது அருணுக்கு.

வெறுப்புடன் முகத்தைத் திருப்பிக் கொண்ட அருண் யதேச்சையாகத் தனது கடிகாரத்தைக் கவனித்தான்.

மணி 7.40.

அவன் இந்நேரம் வளசரவாக்கம் வீட்டில் இருக்க வேண்டியவன். சத்யா கொல்லப்படுவதைத் தடுக்க வேண்டியவன்.

'சே!' என்று வாய் விட்டுச் சொல்லி, தன்னையே நொந்து கொண்டான்.

(தொடரும்)

# பிறவிப் பயன் பெற்று வாழ்க!



(ஆதிசங்கரரின் பல உபதேச கிரந்தங்களின் சாரமாக அமைவது "சோபான பஞ்சகம்." அந்த ஐந்து சுலோகங்களின் தமிழாக்கம் கவிதை வடிவில் வழங்கப் படுகிறது.)

வேதத்தைத் தினந்தோறும் பயிற்சி செய்தும்
விதிக்கின்ற கருமநெறி கடைப்பிடித்தும்
போதிக்கும் முறையோடு பூசை செய்தும்
பூவுலக இன்பசுகப் பற்று நீக்கி
பாதிக்கும் கருமவினைப் பாவம் போக்கி
பயன்கருதாச் செயல்புரிந்து பதமே பெற்று
சாதிக்கும் ஆத்மஞான மார்க்கம் பற்ற
சம்சார வீட்டைவிட்டுச் சலனம் தீர்ப்பாய். (1)

நல்லோரைத் தேர்ந்தெடுத்து இணக்கம் கொண்டு
நல்லபணி செய்வதையே இலக்காய்க் கொண்டு
பொல்லாங்கு தீவினைகள் புறத்தே விட்டு
புனிதமய பிரும்மத்தின் வித்தை வேண்டி
கல்லாலின் கீழமர்ந்து ஞானம் ஊட்டும்
கலைஞான குருவேபோல் ஆசான் பெற்று
எல்லோரும் போற்றிவரும் இறைவன் தன்பால்
இடையறு பக்திதனைப் பெருகச் செய்வாய் (2)

வேறு:

மறையின் பொருளுணர்ந்து மனத்திலே கருவம்நீக்கி
மமகார அகங்கார மாயை விட்டொழித்து
நிறைகின்ற நெஞ்சமெலாம் "நானே பிரும்ம"மென
நெறிபுகட்டும் உபநிஷத்தின் சாரம் பற்றி
திரைமூப்புத் தழுவுகின்ற "உடலே நான்" எனுமோர்
திங்கான தோற்றமதை அறவே விட்டு
முறையிலா வாதத்தை அகற்றிவைத்து மேன்மையுற
முழுமுச்சாய் "சைதன்ய" நிலையே யறிவாய். (3)

வேறு:

வாட்டும் பசிப்பிணியை வெல்லுதற்கோர்
வல்லமை பெறவே நீயாசித்திடல் வேண்டும்.
ஈட்டும் உணவதனில் ருசியொன்றும் பாராது
இறைவனருளெனப் புசித்தெதிலும் ஈடுபாடின்றி
நாட்டும் பார்வையிலே விருப்பு வெறுப்புமில்லாது
நடுங்கும் குளிரோ சுடும்வெயிலோ நாட்டமின்றி
காட்டும் கருணையோ குரூரமோ அல்லாத சமநிலையில்
காலமெலாம் வீண்சொல் பேசாமோன நிலைபெறுவாய். (4)

வேறு:

தனியிடத்தில் வீற்றிருந்து தவயோக சித்திபெற்று
தன்மயமாய் பிரும்மமதை லயிக்கச் செய்து
இனியெங்கிலும் இருப்பதுவோ "ஆத்ம சொரூபந்தான்
இவ்வையமெலாம் பொய்" யெனும் தத்துவத்தால்
மனித இனம் அனுபவிக்கும் முற்பிறவி கருமவினை
மாசகல ஞானவை ராக்கியத் துறவுநிலை
புனிதமிகும் இப்பிறவியதன் பயனே பெற்று
போற்றத்தகு பரப்பிரம்ம சொரூபமாவாய். (5)

— கலாபாரதி

இவ்விதழின் மையப் பகுதியில் இடம் பெற்றுள்ள வண்ணப் படங்கள்: ஹரலிங்கம், ஜனார்த்தனன், விக்னேஷ் ஸ்டுடியோ ஆதிசங்கரர் படம் நன்றி: மீனாட்சிசுந்தரம்.

# சிங்காரம் என்றொரு மனிதனும் வீரன் என்கிற குதிரையும்

சரியாகக் கள்ளுக்கடைக்கு முன்னால் வந்து நின்றது குதிரை. கழுத்தைத் திருப்பிச் சிங்காரத்தைப் பார்த்து 'ஹி... ஹி...' என்று கனைத்தது.

வண்டிக்குள் உட்கார்ந்திருந்த செங்கேணி கேட்டாள். 'இன்னா வண்டிக்காரரே?' உன்னை மாதிரியே ஆக்கி வச்சுட்டே உன் குதிரையையும்?'

சிங்காரம் தலை அசைத்துக் கொண்டான். 'ம்... என்னா பண்ணுவேன் நானு... மனுஷனோடே பழகிப் பழகி அதுக்கும் மனுஷ புத்தி வந்துட்டுது... காலேலே கள்ளுத் தண்ணியை மோந்தாத்தான் நடப்பேங்குது...' என்று விட்டுக் குதிரையின் பக்கம் திரும்பி, 'போயுடு வம்பா... வரப்போ சாப்பிட்டுக்கலாம்... போ... போ... நகரு...' என்றான். சாட்டைக் குச்சியைச் சக்கரத்தில் கொடுத்து 'கடகடகட' என்று சத்தம் எழுப்பினான்.

குதிரை அவன் பக்கம் திரும்பி 'ஹி... ஹி' என்றது. ஆனால் நகர மறுத்தது. கால் மாற்றிக் கால் வைத்துக் கொண்டு கடையின் பக்கமாகத் தலையைத் திருப்பிப் பார்த்தது.

'இது இன்னாடியம்மா கூத்தா இருக்கு? போயும் போயும் ஒரு குதிரை, குடிக்கணும்னு சண்டித்தனம் பண்ணறதைப் பாரேன்...' என்று வண்டிக்குள் உட்கார்ந்து கொண்டிருந்த இன்னொரு பெண்ணான அஞ்சலை, கன்னத்தில் கை வைத்துக் கொண்டு சொன்னாள்.

'மனுஷனா இருந்தா இன்னா, மிருகமா இருந்தா இன்னா, பழக்க தோஷம்னு ஒண்ணு இருக்கே' என்று அஞ்சலையைப் பார்த்துச் சொன்ன சிங்காரம், "தோ பாரு வீரா! கையில் கால் காசு இல்லே... நேத்து ராத்திரி நான் ஒரு டீ குடிச்சதோட சரி.. உனக்கே தெரியும். நீயும் பார்த்துக்கிட்டுத்தான் இருந்தே. விடிஞ்சி இம்மா நாழி ஆச்சி. ஒரு இட்டிலியைப் புட்டு வயித்துல போட வழியில்லே... இந்த நெலமையிலே கள்ளு குடிச்சுத்தான் தீருவேன்னு சண்டி பண்ணறியே, நான் இன்னா பண்ண? நானே குடிகாரன் தான். நீ என்னைக் காட்டியும் மோசமாப் பூட்டியேப்பா'' என்று குதிரையிடம், மன்றாடும் தொனியில் சொன்னான்.

குதிரையாகிய வீரன், தலையைத் தரையைப் பார்த்துக் குனிந்து 'ப்ஹ்' என்று சத்தத்தோடு மூச்சுவிட்டு, 'ஹி' என்று சின்னக் குரலில் கனைத்தது. ஆனால் நகர மறுத்தது.

''தோ... வண்டிக்காரரே. அது மனசுக்குள்ள குடிக்கணும்னு நெனப்பு வந்துடுச்சி. பாவம். வாங்கிக் குடுத்துட்டுப் போயேன்... எங்களுக்கும் வேபாரத்துக்கு நேரமாவுதில்லே?''

''இன்னும்மா சொல்றே நீ... கையில காசு இருந்தா வாங்கித் தராமலா இருப்பேன் இன்னேரம்? ஒத்தை ஓட்டைக் காசு கூட இல்லியே... காலங்காத்தால போயி கடன் கேட்டா கடைக்காரக் கிராமணி என்னா நினைப்பாரு...?''

''சர்த்தான் போ... இந்தா வண்டிச் சத்தக் காசு. போயி, வாயில்லா சீவனுக்கு வாங்கிக் குடு...'' என்று அஞ்சலை இடுப்பில் செருகியிருந்த துணிப்பையை உருவிக் காசை எடுத்துச் சிங்காரத்திடம் கொடுத்தாள். அவன் வாங்கிக் கொண்டான்.

காட்டாமணக்குச் செடிகள் வேலியாய் அடைத்திருந்த கள்ளுக்கடைக்குள் நுழைந்தான் சிங்காரம். தெருவை விட்டுக் கொஞ்சம் உள்ளே பதுங்கி, தென்னந்தோப்

பிரபஞ்சன்

புக்குள் இருந்தது கடை. மரத்து நிழலில் குத்துக்காலிட்டு உட்கார்ந்து, மொந்தையில் இருக்கும் கள்ளைக் குடித்தும், பூவரச இலையில் வைத்த ஏதோ ஒரு காரத்துணையைத் தின்றும் பொழுதைப் பொன் செய்து கொண்டிருந்தார்கள் மனிதர்கள். உள்ளே மேடையில் பிரும்மாண்டமான சிங்கப்பூர் பானையில் கள்ளை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார் கிராமணி. பின்னால், சாணி மெழுகிய சுவரில் மதுரை வீரன், காத்தவராயன் படங்களும், நடுவே இராமலிங்க சுவாமிகள் படமும் மாட்டியிருந்தது. கிராமணியின் பக்கத்தில் வட்ட வட்டமான அலுமினியக் குண்டானில் கறி வறுவல், மீன் பொரியல், இரத்தப் பொரியல் முதலான பொருள்கள் மணத்தை வாரி வீசிக் கொண்டிருந்தன.

'கும்பிடறேன் முதலாளி' என்றான் சிங்காரம்.

கிராமணி, பானையிலிருந்த கள்ளை ஒரு மொந்தையில் மொண்டு அவன் முன்னால் வைத்தார்.

சிங்காரம் தலையைச் சொறிந்தான்.

"இன்னாப்பா சமாசாரம்?" என்றார் கிராமணி.

"ஒண்ணுமில்லே முதலாளி... இப்பத்தான் சவாரி ஏத்தினேன். கையில் பொத்தக் காசு இல்லே. நான் வரும் போது சாப்பிட்டுக்கலாம்னு வந்தேன். இந்தக் கழுதைதான் நவர மாட்டேன்னு சண்டித்தனம் பண்ணுது. சும்மா கொஞ்சோண்டு, ஒரு கொட்டாங்கச்சியிலே ஊத்திக் கொடுத்தீங்கன்னா..." என்று முடிக்காமல், காசை அவர் முன் வைத்தான் சிங்காரம்.

"ஏண்டா குடிகாரா! நீதான் குடிச்சுக் கெட்டுப் போனவன். நீ எப்படியாவது ஒழி. அந்த வாயில்லாச் சீவனை ஏன் கெடுக்கிறே?" என்று சீறினார் கிராமணி.

"ஐயாவே, சின்னக் கடை மணிக் கூண்டிலேந்து, மனுஷங்களையும் சுமந்துக்கிட்டு, அவங்களோட கூடைகளையும் சுமந்துக்கிட்டு வண்டியையும் இழுத்துக்கிட்டு லோல்படுதே இந்தப் பிராணின்னு, நான் சாப்பிடறப்போ, கொஞ்சம் கொடுக்கிறேங்க. அந்த ருசி கண்டுகிச்சு. கள்ளுக்கடை வாசலுக்கு வந்தாப் போதும், நவர மாட்டேங்குது... எனக்கும் கள்ளு வாங்கிக் கொடுடாங்குது... என்ன பண்றதுங்க ஐயாவே..." என்றான் சிங்காரம்.

"சரி... சரி... காசு அப்புறம் கொடு. நீ எங்கே ஓடிப் போறே... இந்த மொந்தையைக் கையில் எடு..." என்ற கிராமணி, அப்படியே பக்கவாட்டில் திரும்பி, ஒரு பூவரச இலையில், சிவந்து, காய்ந்த மிளகாய் மிதக்கிற ரத்தப் பொரியலைக் கொஞ்சம் கையில் எடுத்து நீட்டினார். சிங்காரம் வாங்கிக் கொண்டான். யாழ்ப்பாணத் தேங்காயின் கொட்டாங்கச்சியை எடுத்துக் கொஞ்சம் கள்ளை மொண்டு ஊற்றிக் கொடுத்தார்.

கள் சிந்திவிடாமல் வெகு ஜாக்கிரதையாக அவற்றை எடுத்துக் கொண்டு, காலியாய் இருந்த ஒரு தென்னை மரத்தின் அடிநிழலில் வந்து, அமர்ந்தான். கள்ளின் பச்சையான, புளித்த நெடியே அவன் சோர்வை விரட்டிப் புத்துணர்ச்சியை அளித்ததாய் உணர்ந்தான். வெளியே வீரனும், பெண்களும் காத்துக் கொண்டிருப்பது, உறுத்தவே, கொஞ்சம் அவசரமாகவே குடித்துப் பொரியலைத் தின்றான். மொந்தையை எடுத்துக் கொண்டு போய்க் கொடுத்துவிட்டு வெளியே வந்தான். தலையைத் திருப்பி வாசலையே பார்த்துக் கொண்டிருந்த வீரன், பொறுமை இழந்து கால் மாற்றிக் காலை வைத்துக் கொண்டிருந்தது, சிங்காரத்தைப் பார்த்ததும், சந்தோஷத்தோடு 'ஹி... ஹி' என்றது.

"வந்துட்டேண்டா. என் கண்ணு வந்துட்டேன்" என்றவாறு குதிரைக்கு அருகே வந்து அதன் வாயருகில் கொட்டாங்கச்சிக் கள்ளைக் கொடுத்தான். அது, 'ப்ருஹ்' என்கிற சத்தத்தோடு கள்ளை விழுங்கி வைத்தது.

திருப்தியுடன் உள்ளே போய்க் கொட்டாங்கச்சியைக் கொடுத்துவிட்டு வந்து, சிங்காரம் வண்டியில் ஏறி உட்கார்ந்தான்.

"இன்னா வண்டிக்காரரே... நீயும் ஊத்திக்கிட்டு வந்துட்டியா...?" என்றாள், செங்கேணி.

"ஹஹ்... ஹா..." என்று பெரிதாகச் சிரித்த சிங்காரம், "தாய்ப்பாலுக்கு அப்புறம் தென்னம் பாலுதான் தெரியுமா?" என்று கண்ணடித்துக் கொண்டு சொன்னான்.

வாடிக்கை மீனவப் பெண்ணான அஞ்சலை, "டாத்தியாடி... கிழவனுக்குத் திடீர்னு மப்பு வந்துருச்சி..." என்றாள். வீரன் அரியாங்






ஆயிரக்கணக்கான கண் சிகிச்சை முகாம்களில் பணிபுரிந்து கண் ஆபரேஷன்கள் ஐந்து லட்சத்துக்கும் மேல் செய்துள்ள இவருடைய இந்தச் சாதனை 'கின்னஸ்' புத்தகத்தில் இடம் பெறுகிறது. ஒரே நாளில் 833 கண் ஆபரேஷன்களைச் செய்த சாதனையும்கூட! ஆனால் டாக்டர் மோடி சாதனையிலேயே 'கண்'ணாக இருப்பதில்லை. சேவையில்தான் 'கண்'ணாக இருக்கிறார். 43 ஆண்டுகளாக ஏழை நோயாளிகளின் நலன் கருதித் தொண்டாற்றி வரும் இவருக்கு இன்று வயது எழுபதானபோதிலும் வருடத்தில் முந்நூறு நாட்கள் கிராமங்களில் ஏழை நோயாளிகளுக்காகவே செலவிடுகிறார். தாம் பங்கு பெறும் கண் முகாம்களில் தாம் ஆபரேஷன் செய்த நோயாளிகள் அனைவரும் டிஸ்சார்ஜ் ஆன பின்புதான் முகாமிலிருந்து புறப்படுகிறார்.

ஆதாரம்: 'தி வீக்'

தகவல்: முரளி

---

குப்பத்தை நோக்கித் தாவிக் கொண்டு ஓடினான்.

சிங்காரத்துக்குச் சமீப காலமாகவே மரணத்தைப் பற்றிய பயம் வந்து கொண்டிருந்தது. முதுமையும், அதோடு சேர்ந்து வருகிற தள்ளாமையும் காரணமாக இருக்கக் கூடும். தனக்குப் பிறகு வீரனின் நிலை என்னவாகும் என்பது குறித்து அவனுக்கு முன் ஒரு கேள்வி எழும்.

ஓதியஞ்சாலை தண்ணீர்த் தொட்டிக்குப் பக்கத்தில் இப்போது நெகுநெகுவென்று வளர்ந்து நிற்கும் அரச மரம், அப்போது சின்னக் கன்றாக இருந்தது. வீரன் அவனிடம் வந்து சேர்ந்த போது, செம்பழுப்பு நிறமும், நெற்றியில் வெள்ளைச்சுட்டியுமாய், விளக்கிய பித்தளைக் குடம் மாதிரி இருந்தது. ராவுத்தர் சொன்னார். "அடேய் சிங்காரம். நல்ல வம்சம்டா இந்தக் குட்டி.... இத்தோட அப்பா யாருங்கறே? உடையார் பாளையம் ஜெமீன்தார் வச்சிருந்தாரே ஒரு குதிரை. அதான். குதிரையா அது? எமன்டா... எமன். இன்னா மிடுக்குங்கறே? இன்னா அறிவுங்கறே? என்னமோ அதன் தலையெழுத்து, அது வயித்துல பிறந்தது உன்கிட்டே வந்து சேர்ந்துருக்கு... நீ செத்தாலும் சரி... அதை மட்டும் பட்டினி போட்டுடாதே" என்றார் அவன் கையைப் பிடித்துக் கொண்டு.

ராவுத்தர் வார்த்தையைக் காப்பாற்றி விட்டான் சிங்காரம். புல்லில்லாமல் படுத்த நாள், ஒரு நாளும் இல்லை வீரனுக்கு. எத்தனையோ இரவுகள் டீயோடும், சில நாட்களில் அதுவும் இல்லாமல் வாழ்ந்து விட்டான் அவன். அவனுக்குப் பிறகு?

"வீரா! தாயும் பிள்ளையுமாப் பழகிட்டோம்... வரவர உடம்பு தள்ளலே. மார்வலி வேறே அடிக்கடி வந்து உயிரைப் பிடுங்கி எடுக்குது. ஏதாச்சும் ஆச்சுன்னா நீ இன்னா பண்ணுவே? யாருகிட்டே போவே? ஐயோ, மனுஷனாப் பிறக்கலாம், மிருகமாப் பிறக்கக் கூடாதுப்பா..."

அரியாங்குப்பத்தில் மீனவப்பெண்கள் இருவரும் தங்களின் மாபெரும் கூடைகளை இறக்கி எடுத்துக் கொண்டு போனார்கள். இதோடு சாயங்காலம் அவர்கள் மீண்டும் திரும்பும் வரையில், சில்லறைச் சவாரி ஏதேனும் வந்தால் அடிக்கலாம்.

காலை எதிர்வெயிலில் சாப்பிட்ட கள், சுரத்தாகத்தான் வேலை செய்தது. மாதா கோயில் ஓரம் வண்டியை அவிழ்த்துப் போட்டான். காய்ந்த புல்லை வண்டியின் அடிப்பகுதித் தொட்டிலிலிருந்து எடுத்து வீரனிடம் போட்டான்.

புல்லைத்தின்றுகொண்டிருந்தகுதிரையைப் பார்த்தான் சிங்காரம். 'எத்தனை விசுவாசமான சினேகிதன். காலம் முழுக்க உப்பளம் மீனவப் பெண்களையும், மீன் கூடைகளையும் ஏற்றிச் சுமந்து, சுமந்து தனக்குச் சோறு போட்ட பிராணி. சரியாகக் கள்ளுக் கடையைப் பார்த்ததும் டக்கென்று நின்று கள் கேட்கிற சண்டித்தனம்.

உரக்கச் சிரித்தான் சிங்காரம். குதிரை தலையைத் தூக்கி அவனைப் பார்த்தது.

சோர்வாலும் களைப்பாலும் போதையாலும் கண் செருகிக் கொண்டு வந்தது சிங்காரத்துக்கு.

"அண்ணே... சிங்காரம் அண்ணே... எந்திருங்க... உங்களை எங்கே எல்லாம் தேடறது?' என்று சொல்லிக் கொண்டே வந்தான் கந்தன், சக குதிரை வண்டியோட்டி.

"இன்னாடா சங்கதி கந்தா?"

"மாரிமுத்தண்ணன் செத்துப் போச்சு..."

"இன்னாடா சொல்றே..." ஒரு பாறாங்கல் வந்து மார்பில் உட்கார்ந்து கொண்டது போல் இருந்தது. நாற்பது வருஷத்துச் சினேகிதன். ஒரே பேட்டையில் பிறந்து வாழ்ந்து, வண்டி ஓட்டி, இப்போது செத்துப் போனான். அவனும் தன்னைப் போலவே அனாதை என்பது ஞாபகத்துக்கு வந்தது சிங்காரத்துக்கு.

"எப்படா அடக்கம்?"

"சாயங்காலம்தான்."

"ஏற்பாடெல்லாம் யார் பண்றது?"

"நம்ம தொழில் காரங்கதான்... நீங்க போங்கண்ணே... நானும் பின்னாலேயே வந்துடறேன்..."




வண்டியைப் பூட்டிக் கொண்டு கிளம்பினான் சிங்காரம். தவளக்குப்பம் கள்ளுக் கடையைக் கடக்கும்போது, வீரன் நிற்காமல் ஓடியது. அதற்கு ஒரு வேளை கள் போதுமானதாய் இருந்தது. இரண்டாம் முறை கொடுத்தால் கூடக் குடிக்காதே!

மாலை எல்லாம் வாங்கிப் போட்டிருந்தார்கள். இரவல் பெஞ்சில் நீட்டிப் படுத்திருந்தார் மாரிமுத்து. தூங்குவது மாதிரி இருந்தது. சிங்காரம் நண்பனின் பக்கத்தில் வந்து அவர் முகத்தைப் பார்த்தான். அவனை அறியாமலே அவன் கண்களில் கண்ணீர் வழிந்தது.

''யார்ரா காரியம் பண்றது?''

''மண்ணுங்கட்டி அண்ணே தான்'' என்றான் ஓர் இளைஞன்.

தண்டலுக்குப் போயிருந்த மண்ணுங்கட்டி திரும்பியதும் சிங்காரம் சொன்னான்.

''செலவுக் கணக்கைக் குறிச்சு வச்சுக்கப்பா. அப்புறமா என் பங்கை நான் குடுத்திடறேன். கையில் காசு இல்லே.''

''அதனாலே என்னண்ணே! பொறுமையா குடுங்க.''

மாலை நாலு மணி போலச் சாராய பாட்டில்கள் வந்தன. சிங்காரத்துக்கும் கணிசமாகக் கொடுத்தார்கள்.

''பெரிய மனுஷன்... நிறைய ஊத்துங்கடா'' என்றான் மண்ணுங்கட்டி.

தள்ளு வண்டியில் மாரிமுத்தைப் படுக்க வைத்துக் கொண்டு ஊர்வலம் தொடங்கியது.

தாரை தப்பட்டை தாளம் ஆடச் சொல்லியது சிங்காரத்தை. கையையும் காலையும் விசித்து, ஆட்டித் தாளத்துக்கு ஏற்றாற் போல ஆடினான்.

''சவாஸ்... கிழவன் இன்னா மாதிரி ஆடறான் பாத்தியா?'' என்று ஒரு பாராட்டு வேறு சிங்காரத்தின் காதுகளில் விழுந்தது. 'டண்டணக்க, டண்டணக்க... டனக்... டனக்...' என்கிற பறைக்கு ஏற்றாற் போலக் குனிந்தும், விழுந்தும், எழுந்தும் வெறிபிடித்தாற்போல ஆடிக் கொண்டே வந்தான் சிங்காரம்.

ஆடி நிறுத்தியபோது இரைத்தது. ஊர்வலத்துக்கு முன்னால் இருந்து, 'ராசா மவனுட்டம்... மந்திரி மவனுட்டம்... எசமான் மவனுட்டம்... எங்களோட இருந்தீரே... ரோசா மாலையோட... மல்லிகைப்பூ செண்டோட ரவுசோட போறீரே... எங்க துரை போறீரே...'' என்று ஒப்பாரிக் குரல் கேட்டது.

சிங்காரம், படுத்திருந்தவரின் முகத்தைப் பார்த்தான். திடீரென்று தானே பாடையில் படுத்திருந்தது மாதிரி தோன்றியது. திடுக்கிட்டு, உடம்பு சில்லிட்டுப் போயிற்று அவனுக்கு.

தான் போனால் வீரன் என்ன பாடும்? என்ற நினைப்பு வந்தது.

அடக்க மாட்டாமல் தேம்பித் தேம்பி அழத் தொடங்கினான் சிங்காரம்.

* அவர் ஒரு மாதிரிப் பேர்வழி! அவர் இறந்த ஆட்டோமாடிக் கதவு, தானாக மூடிக் கொண்டால் கூட 'நன்றி' சொல்வார்!



# று ஒலிபரப்பு

"அப்பாடா! உன்னை இங்கே வர வழைக்கிறதுக்குள்ள பெரும்பாடாப் போச்சே! இப்படி உட்கார்...."

சிரித்தபடி சொன்னார் சபாபதி.

"பார்வதி! பிள்ளையாண்டானுக்கு காப்பி கொண்டா...."

உட்புறம் நோக்கிக் குரல் கொடுத்தார்.

"என்ன விஷயம் மாமா? எதுக்காக வரச் சொன்னேள்....?"

"சொல்றேன் ராஜா. முதல்ல கொஞ்ச நேரம் காத்து வாங்கு.... ஃபேனைத் தட்டி விடறேன். முகமெல்லாம் இப்படி வேர்த்துப் போயிருக்கே! எங்கே சுத்திட்டு வரே....?"

பித்தானை அழுத்தினார். மின் விசிறி சுழலத் தொடங்கிற்று.

"மங்களாம்பிகா வரைக்கும் போயிட்டு வரேன்...."

"டிபன் சாப்பிடவா....?"

"ஆமாம்...."

"சாப்பாட்டுக்கு என்ன பண்ணப் போறே?"

"ஆபீசுக்குப் பக்கத்துலயே வெங்கட்ரமணா ஒட்டல்ல....."

"சரி, எத்தனை நாளைக்கு இது நடக்கும்?"

"ஏன் மாமா? வேலைக்குப் போறேன். சம்பாதிக்கறேன். செலவழிக்க முடியாதா?"

"ராஜா! உன்னோட கோபம் இன்னும் அடங்கலே போலிருக்கு. இந்தக் கோபம், ரோஷம், வைராக்கியம் எல்லாம் இயற்கை நமக்குக் கொடுத்திருக்கிற வரப்பிரசாதங்கள்னு நினைக்கறே இல்லையா....?"

"அப்படியில்லே மாமா. அவ என்ன கேள்வி கேட்டா தெரியுமா?"

"எல்லாத்தையும் கேட்டுண்டுதான் இருந்தேன். நீ போட்ட கூச்சல்லே இந்தத் தெருவே கிடுகிடுத்ததே!"

"கூச்சல் மட்டும்தானே மாமா? அவ பேசின பேச்சுக்கு அவளை வெளியே தள்ளி...."

"ஊஹூம். அதெல்லாம் ரொம்ப தப்புப்பா. ஒரு நல்ல முகூர்த்தத்துல அவளைத் தொட்டுத் தாலி கட்டியிருக்கே. தன்னோட அம்மா, அப்பா, கூடப் பிறந்தவா எல்லாரையும் விட்டிட்டு ஆயுசுக்கும் நீதான்னு நம்பி உன்னோட குடித்தனம் நடத்த வந்திருக்கா. அப்படியிருக்கறப்ப அவளை வாய்க்கு வந்தபடி நீ பேசலாமா....?"



அவர்: என் எழுத்துக்கு ஏக கிராக்கி. எழுதிய மறு விநாடியே காசாயிடும்!

எழுத்தாளர்: அப்படியா? ரொம்பச் சந்தோஷம்! அப்படி என்னதான் எழுதறீங்க? மாதாந்திர நாவலா, சிறுகதையா, கட்டுரைகளா, தொடர்கதையா....?

அவர்: ஊஹூம்.... அதெல்லாம் இல்லே, ஓட்டல்ல பில் எழுதறேன்!

— ஆர். கே. அருள்செல்வன்.

---

"உன்னைக் கட்டிண்டு என்ன சுகத்தைக் கண்டேன்னு கேட்கறு. 'முதல்லயே தெரிஞ்சிருந்தா இந்தக் கல்யாணம் என்கிற கிணத்துல காவு கொடுத்திருக்க மாட்டேன்'னு பேசினு....."

"எக்கச்சக்கமா வேண்டாத வார்த்தைகளைப் பேசி அவ மனசை ரணமாக்கிட்டே. அதான் அப்படிச் சொல்லியிருக்கா..."

"அப்படி என்ன மாமா சொல்லிட்டேன்?"

"ஒரு சின்னத் தப்பு. அதைப் பெரிசு படுத்தி அவ குடும்பத்தையே நாற அடிக்கற மாதிரி அப்பன், ஆத்தான்னு.... சரி சரி. முதல்ல காப்பியைக் குடி. ஆறிப் போறது. வயிறு நிரம்பச் சாப்பிட்டியா இல்லையா...?"

அவன் பதில் சொல்லாது காப்பியைப் பருகி முடித்தான்.

"ராஜா! நமக்கு நாமே சத்ரு. நல்லது பொல்லாததுக்கு நாமேதான் காரணம். இந்த நாக்கு இருக்கே அது மகா சத்ரு. கீதையில பகவான் என்ன சொல்லியிருக்கார் தெரியுமா? சகிக்க முடியாத துன்பங்கள் வந்தாலும், துடிக்காத மனத்தை உடையவனுகவும், சுகம் வந்தாலும் அதில் பற்றற்றவனுகவும், விருப்பம், அச்சம், கோபம் இல்லாதவனுகவும் இருந்தா அவனுடை ஞானம் நிலைச்சிருக்குமாம். இதுலேருந்து என்ன தெரியறது....?"

"கோபத்தை அடக்கணும்னு சொல்றேள். மாமா! அவளோட கொட்டத்தை, அவளோட திமிரை எப்படி அடக்கறதுன்னு கொஞ்சம் சொல்லுங்களேன்....!"

"அப்படி என்னப்பா பெரிய தவறு நடந்து போச்சு....? பெத்தவாளைப் பார்க்கணும் போல இருக்குன்னு. அது தப்பா? அதுக்கு நீ என்ன சொன்னே? போனு அங்கேயே இருந்துரு. திரும்பி வராதேன்னே. அவ மனசு சங்கடப்பட்டதுல ஆச்சரியம் என்ன இருக்கு? அந்த வருத்தத்துல அவ ரெண்டு வார்த்தை பேசியிருக்கலாம்....

அவன் அமைதியாக இருந்தான்.

"முடிவாச் சொல்றேன். பக்கத்து வீடு எதிர் வீடுன்னு இல்லாம ஒரே குடும்பம் மாதிரி நினைச்சு ஒருத்தருக்கொருத்தர் அனுசரணையா பழகிண்டு வர்றோம். அந்த உரிமையில நான் அதிகப்படியா பேசிட்டேன்னு நினைக்கிறேன். தயவு பண்ணி இந்தக் கோபத்தை விட்டொழி. இதமா நாலு வார்த்தை அவகிட்ட பேசு. பெண்டாட்டி என்கிறவ நமக்குச் சமைச்சுப் போடற, துணி துவைச்சுப் போடற, உபாதை வந்து படுத்துக்கிடந்தா காலைக் கையைப் பிடிச்சு விடற மனுஷ எந்திரமா நினைக்கக் கூடாது. நமக்குள்ள உரிமை அவளுக்கும் இருக்கு. நம்மைப் போல அவளுக்கும் ஆசைகள், அபிலாஷைகள் இருக்கலாம். அதனுல நான் என்ன சொல்ல வரேன்னு...."

ஒரு நீண்ட சொற்பொழிவை அவனே இடைமறித்து நிறுத்தினுன்.

"சரி மாமா. ரெண்டு முழம் பூ வாங்கிக் கொடுத்து, ஒரு சினிமாவுக்குக் கூட்டிண்டு போய், ஒரு ஓட்டல்ல ஸ்வீட் காரம் காப்பியோட விருந்து வச்சு அவளைச் சமாதானப் படுத்திடறேன். போதுமா....?"

"என் காதால இப்படிக் கேட்கறப்ப எனக்கு எவ்வளவு சந்தோஷமா இருக்கு தெரியுமா? ராஜா! தவறை உணர்ந்து தன்னைத் திருத்திக்கறவன்தான் மனுஷன். அந்த மனுஷத் தன்மை உன்கிட்ட நிறையவே இருக்கு. உனக்கு எந்தக் குறைவும் வராது. நீ நன்னு இருப்பே. போயிட்டு வா...."

முக மலர்ச்சியோடு வழியனுப்பி வைத்தார்.

புன்சிரிப்போடு புறப்பட்டுப் போனுன்.

**அ**ரை நாள் சென்ற பின் —

"யாரங்கே....?"

ஓங்கிக் குரல் கொடுத்தார் சபாபதி.

பார்வதி பதறியவள்ாக இடத்திற்கு வந்தாள்.

"சட்டையில ரெண்டு பித்தான் அறுந்து விழுந்திருக்கு. தைச்சு வைன்னு சொன்னேன் இல்லே....?"

"ஆமான்னு! வேலைத் தொந்தரவுல மறந்து போச்சு...."

"அது எப்படி மறந்து போகும்? மூணு வேளையும் சம்பிரமா உட்கார்ந்து மூச்சு முட்டச் சாப்பிடறே இல்லே.... அதான் உடம்பு கொழுத்துப் போய் இப்படி எல்லாமே மறந்து போறது...."

"ஏன்னு அப்படிப் பேசறேள்... கொழுப்பெடுத்து அப்படி என்ன நான் தப்புக் காரியம் பண்ணிட்டேன்....?"

"எதிர்த்துப் பேசாதே. பல்லை உதிர்த்துப் பிடுவேன். கொட்டிக்கறது, தலைப்பை விரிச்சுப் போட்டுத் தூங்கறது தவிர பெரிசா என்ன வெட்டி முறிக்கிறே? இந்த லட்சணத்துல பேச்சு வேறே. உங்களையெல்லாம் நிக்க வைச்சுச் சுடணும்டீ....."

சற்று முன் வரை கீதோபதேசத்தை மறு ஒலிபரப்புச் செய்து கொண்டிருந்த சபாபதியின் தர்பார் நாடகத்தை அடுத்த வீட்டிலிருந்து சுவாரசியமாக ரசித்துக்கொண்டிருந்தார்கள் ராஜாவும் அவன் இளம் மனைவியும்!

— **விநோதானந்த்**

கொஞ்சமே பிஜ், கொஞ்சுமே பளபளப்பு
மிஞ்சுமே பிஜ், மிச்சமே பணம்.




ஸூப்பர் பிஜ்—
பாத்திரங்களுக்கு அளிக்கிறது பளபளப்பு...ஒளி விடும் நட்சத்திரம் போல! பாத்திரங்களுக்கு மட்டுமல்ல...தரை, வாஷ்-பேஸின், டைல்ஸ், கதவு மற்றும் ஜன்னல்களின் கண்ணாடிகள் இவை அனைத்திற்கும் பளபளப்பு அளிக்கிறது. பிஜ்–சிறிது உபயோகித்தாலே சிறப்-பான பளபளப்பு. விலையும் குறைவு—சிக்கனமோ சிக்கனம்.

கோத்ரெஜ்
அளிக்கும்

ஸூப்பர்
பிஜ்
துலக்கும் பவுடர்

வேலை...விலையை விட அதிகம




CLARION/B/GS/49/173 TAM

# ஆபத்தான வளைவுகள்

## 10

ஆற்காடு சாலையில் வடபழனி, ஸ்டூடியோக்கள் எல்லாம் தாண்டி, கொளுத்தும் வெயிலில் நின்று கொண்டிருந்தது ஒரு படகுக் கார். அதன் பானெட்டைத் திறந்து, எஞ்சின் பகுதியில் தலையும் கழுத்தும் நுழைத்து, ஏதோ குடைந்து கொண்டிருந்தார் சில்க் ஜிப்பாவும், மில் வேஷ்டியும் அணிந்திருந்த ஒருவர்.

சாலையில் இரண்டு மற்றும் நாலு சக்கர வாகனங்கள் தலைதெறிக்கும் வேகத்தில் பறந்து கொண்டிருந்தன தொடர்ச்சியாக. தொகுதிப் பக்கம் தலைகாட்டுகிற எம்.எல்.ஏ. மாதிரி எப்போதாவது ஓரிரு ஆட்டோக்களும் லொடலொடத்துக் கொண்டு சென்றன. ஆனால் ஒருவராவது ஒரு செகண்ட் வண்டியை நிறுத்தி, ''என்ன டிரபிள்?'' என்று விசாரிக்க வேண்டுமே! ஊஹூம்!

பத்து நிமிடம் போல வியர்த்து விறுவிறுத்த பிறகு, தலையை வெளியே எடுத்தார் அந்த மனிதர். ஜிப்பா கறைபடுவதைப் பற்றிக் கவலைப்படாமல், பைக்குள் அழுக்குக் கையை நுழைத்து, சென்ட் தெளித்த கர்ச்சீப்பை எடுத்து முகம் துடைத்தார். சற்று ஓய்வெடுக்கும் உத்தேசத்துடன் காரின் உள்ளே போய் உட்கார்ந்தார். ஏஸியின் குளுமையை அனுபவித்துக் கொண்டே, பின்புறக் கண்ணாடி வழியாகப் போக்குவரத்தை நோட்டம் விட்டார். நூல் பிடித்தாற் போல வெகு தூரத்துக்கு நீண்டிருந்த சாலையில் மூன்று விளக்குக் கம்பங்கள் தாண்டி ஓர் ஆசாமி சைக்கிளில் வருவதைக் கண்டார். முகம் மலர்ந்தார். காரை விட்டிறங்கி, பானெட்டை மூடினார். ரோட்டில் நின்ற வாறே காத்திருந்தார்.

அந்தச் சைக்கிள்காரன் நெருங்கியதும், ''தம்பி! ஒரு நிமிஷம்!'' என்று கைகாட்டி நிறுத்தினார்.

''என்னங்க?''

''இந்த விலாசத்துக்கு வழி சொல்லுங்க தம்பி!'' என்று பாக்கெட்டிலிருந்து ஒரு சீட்டை எடுத்து நீட்டினார்.

முகுந்தன்

''சின்மயா நகரா? இங்கேருந்து ரொம்பத் தூரம் போகணுங்க!''

''அப்படியா....! எனக்கு ஒரு உதவி பண்ணுவீங்களா?''

''என்னங்க?''

''எங்கூட வந்து, வழி காட்டிட்டுப் போங்களேன்....''

''அதெப்படிங்க முடியும்? எனக்கு நிறைய வேலை இருக்கு. தவிர....'' என்று சைக்கிளைப் பார்த்தான்.

''கவலைப்படாதீங்க.... சைக்கிளைத் தூக்கி டிக்கியிலே போடுங்க. காரிலே ஏறிக்கிட்டு, எனக்கு வழி காட்டுங்க. அப்புறம் உங்களுக்கு எங்கே போகணுமோ அங்கே கொண்டு போய் விட்டுடறேன்!''

கொஞ்சம் யோசித்தான் இளைஞன். பிறகு, தலையாட்டினான். அந்தப் பெரிய மனிதர் டிக்கியைத் திறந்ததும் சைக்கிளைத் தூக்கி அதில் போட்டான்.

இருவரும் ஏறிக் கொண்டதும் கார் புறப்பட்டது. ஏர் கண்டிஷன் குளுமையுடன் இனியதொரு நறுமணம் கலந்து வந்தது. அந்த இளைஞனின் நாசியில் நெருடியது. இரண்டு, மூன்று முறை மூக்கை உறிஞ்சினான்.

''ஃபாரின் சென்ட்டுங்களா?''

''எஸ். நீங்களும் வேணா கொஞ்சம் போட்டுக்கறீங்களா?''

''வாணாங்க....''

''கூச்சப்படாதீங்க. போட்டுக்குங்க...'' என்றபடியே இடதுபுறம் சாய்ந்து, டாஷ்—போர்டைத் திறந்து, அழகான 'ஷேப்'புடன் கூடிய பெர்ஃப்யூம் பாட்டிலை எடுத்து, மூடியை உருவி 'விஷ்க் விஷ்க்' என்று அந்த இளைஞனின் சட்டையின் மீது திரவத்தைப் பீய்ச்சினார். அதே வேகத்தில், சடாரென்று அவனது முகத்துக்கு எதிரே பெர்ஃப்யூம் புட்டியைக் கொண்டு போய் அழுத்தவும், திரவம் கன்னாபின்னாவென்று மூக்கு, கண், வாய், என்று தெறிக்க, அது தந்த எரிச்சலில் இளைஞன் திணற —

சென்ட் புட்டியை அப்படியே நழுவ விட்டு ஸீட்டில் பக்கத்தில் கிடந்த ஒரு சிறிய டவலை எடுத்து இடது கையாலேயே இளைஞனின் முகத்தில் வைத்துப் பலமாக அழுத்தினார் ஜிப்பாக்காரர்.

கண்ணைத் திறக்க முடியாமல் அவஸ்தைப்

பட்டுக் கொண்டிருந்த இளைஞன் டவலைப் பறித்து எறிய முற்பட்டபோது, சடாரென்று வண்டியை பிரேக் போட்டு நிறுத்தினர். இரண்டு கைகளாலும் அந்த டவலை அவன் முகத்தோடு சேர்த்து இறுக்கமாகச் சில வினாடிகளுக்கு அழுத்தவும், அவன் கொஞ்ச நேரம் எதிர்ப்புக் காட்டி, பிறகு திணறலுடன் சட்டென ஓய்ந்து போனான்.

இளைஞனின் உடம்பு தொய்ந்து விட்டிருந்தது இப்போது. அவன் ஸீட்டில் தலையைச் சாய்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பது போல லாகவமாக அவனை நகர்த்தி வைத்தார் சில்க் ஜிப்பா. பெர்ஃப்யூம் புட்டியையும் டவலையும் டாஷ்–போர்டில் திணித்து மூடி, காரை வேகமாகக் கிளப்பி, நேராகப் பறந்து சென்றார்.

மூன்று மணி நேரம் கழித்துப் பச்சை நிறக் கார்ப்பெட் விரித்த அந்தப் பங்களா அறையில் போன் செல்லமாகச் சிணுங்கியது. ஆவலுடன் ரிஸீவரை எடுத்தார்.

''ஹலோ முடிச்சுட்டேங்க!''

''என்னத்தை முடிச்சீர்? உம்முடைய கறுப்புப் பணத்தை எண்ணி முடிச்சீரா?'' என்று கிண்டல் செய்தது மறுமுனைக் குரல்.

''இல்லீங்க.... நீங்க ஒரு வேலை சொன்னீங்களே கொஞ்ச நாட்கள் முன்னாலே — அதைச் செய்து முடிச்சுட்டேன்...''

''சரக்கு டெலிவரி கொடுக்கும்படி நான் ஒன்றும் உம்மிடம் சொல்லவில்லையே?''

''அதில்லீங்க.... அந்த ஆளு — சத்யா — அவனைத் தீர்த்துக் கட்டச் சொன்னீங்களே....''

''ஆமாம்.... ஆள் கிடைச்சானா உங்க கையிலே? எப்போது, எப்படிச் சிக்கினான், விவரமாகச் சொல்லும்!''

ஆற்காடு சாலையில் சத்யாவுக்காகத் தினமும் வேவு பார்த்துக் காத்திருந்ததையும் அன்று நடுப்பகல் வேளையில் அவன் வசமாக வந்து சிக்கிக் கொண்டதையும் விவரித்தார். தொடர்ந்து, ''பல்லாவரத்திலே என் கெஸ்ட் ஹவுஸ் இருக்கிறதல்லவா — அதிலே வச்சு ஆளைத் தீர்த்தாச்சு — பெத்தடின் இஞ்செக்ஷன் போட்டு!'' என்று சொல்லி முடித்தார்.

''வெரி குட்! பாடியை என்ன செய்தீர்?''

''கெஸ்ட் ஹவுஸ் கிணற்றில் பாறாங்கல்லுடன் சேர்த்து உருட்டி விட்டாகி விட்டது....''

''சபாஷ்!''

''நீங்க கொடுத்த தகவலிலே ஒரு அயிட்டம் தப்புங்க.... அந்த ஆளைத் தீர்த்துக் கட்டினதுக்குப் பிறகுதான் அதை நானே கவனிச்சேன்....''

''என்னய்யா உளறுகிறீர்?''

''அந்த சத்யா, சினிமா நடிகர் டி. ராஜேந்தர் போலத் தாடி மீசை வச்சிருப்பான்னு சொன்னீங்களே — அதிலேதாங்க நீங்க நல்லா ஏமாந்து போயிட்டீங்க!''

''புரியும்படியாச் சொல்லித் தொலையுமய்யா! நான் சொன்னதிலே என்ன தப்பு?''

''சத்யா வச்சிருந்தது பொய்த் தாடி, மீசைங்க! ஸ்பிரிட்–கம் போட்டு நல்லா ஒட்டி வச்சிருந்து, ஏமாத்தியிருக்கான் எல்லாரையும்....!''

''..............''

''அவனை ஊசி போட்டுக் கணக்கு முடிச்சதுக்கு அப்பாலே தரையிலே இழுத்துக்கிட்டுப் போனேனா — தாடியும் மீசையும் தனியா கழண்டு விழுந்துடுச்சுங்க! ஆள் மூஞ்சியைப் பார்த்தா, பளபளன்னு ஷேவிங் பண்ணின மாதிரி இருந்தது! ஹஹ்ஹஹ்...''

சிரிப்பை வெட்டியது மறுமுனைக் குரல். ''ஷட்டப்! சத்யாவாவது, பொய்த் தாடி



வைத்துக்கொள்வதாவது! சுத்தப் பேத்தல்...! நான் சொல்கிறேன் கேளும். நீர் சொல்வது உண்மையாயிருக்கும் பட்சத்தில்...."

"முருகன் பேர்லே ஆணையா — விட்டேன்! — சத்தியமுங்க!"

"நீர் கொன்ற ஆள் நிச்சயமாக சத்யா இல்லை!"

"ஐயையோ! அப்படீன்னா அது யாருங்க?"

"யாருக்குத் தெரியும்! யாரோ ஒரு அப்பாவி! அவ்வளவுதான் என்னாலே சொல்ல முடியும்.....!"

"இப்ப நான் என்னங்க செய்யறது?"

"உம்ம பக்கத்திலே யாரும் இல்லையே?"

"இல்லீங்க."

"போனை வச்சுட்டு, எதிர்ச் சுவரிலே போய் முட்டிக்குங்க! அப்புறமாவது புத்தி வருகிறதா பார்க்கலாம்....! உம்மையெல்லாம் நம்பி ஒரு வேலையில் விட்டேனே — என்னைச் சொல்லணும்!"

சில்க் ஜிப்பாக்காரர் திருதிருவென்று விழிக்க, போன் வைக்கப்பட்டு விட்டது.

அம்பிகாவும் அருணும் மகாபலிபுரச் சாலை ஹோட்டலில் டிபன் சாப்பிட்டு விட்டு நகருக்குத் திரும்பிக் கொண்டிருந்தார்கள். போகும்போது எத்தனைக்கெத்தனை வேகமாகக் காரை ஓட்டினாளோ அதற்கு நேர் மாறாகக் கல்யாண மாப்பிள்ளை அழைப்பு ஊர்வலம் போல மெதுவாக ஓட்டி வந்தாள் அம்பிகா. அருணுக்கோ அந்த நத்தை வேகம் படு எரிச்சலைத் தந்தது.

"ஜிங்லி! இன்னும் கொஞ்சம் ஸ்பீடாகப் போக மாட்டாயா நீ....? எனக்குச் சீக்கிரம் வீட்டுக்குப் போயாக வேண்டும்!" என்று சொல்லிப் பார்த்தான்.

சட்டென்று வண்டியை நிறுத்தினாள் 'ஜிங்லி'. எட்டி, அருண் பக்கத்துக் கதவைத் திறந்துவிட்டாள். "கெட் டவுன் ப்ளீஸ்!" என்றாள்.

"எ.... எ... எதற்காக இறங்கச் சொல்கிறாய்?"

"பின்னே என்ன? நான் என்ன உங்க பெர்ஸனல் ஷோஃபரா? பெரிசாக அதிகாரம் பண்ணுகிறீர்களே! அவசரமென்றால் இறங்கி, பஸ்ஸோ, லாரியோ பிடித்து வீடு போய்ச் சேருங்கள்!"

"நோ நோ... நான் அந்த அர்த்தத்தில் சொல்லவில்லை!" என்று அவசர அவசரமாக அருண் மன்னிப்புக் கோரும் குரலில் சொல்ல, அதைக் காதில் போட்டுக் கொள்ளாமலே, "இறங்குங்க மிஸ்டர் அருண்!" என்றாள் அம்பிகா.

தலைக்கு மேல் கைகளைத் தூக்கிக் குவித்தான் அருண். "ஸாரி மிஸ் அம்பிகா! நான் சொன்னதை வாபஸ் வாங்கிக் கொள்கிறேன்.... உனக்குப் பிடித்த ஸ்பீடில் டிரைவ் பண்ணிக் கொண்டு போ! என்னை இறக்கி மட்டும் விட்டு விடாதே! இந்தப் பொட்டைக் காட்டில், இருட்டு வேளையில் கைகாட்டினால் எந்த பஸ்காரப் பாவியும் வண்டியை நிறுத்த மாட்டான் என்பது சர்வ நிச்சயம்!" — கெஞ்சினான்.

அம்பிகா மறுபடியும் வண்டியை ஸ்டார்ட் செய்தாள்.

"பாஸ்! சிட்டி வந்தாகிவிட்டது... உங்களை எங்கே டிராப் செய்ய வேண்டும் பாஸ்? தயவு செய்து சொல்கிறீர்களா?" என்று போலி மரியாதையுடன் கேட்டாள் அம்பிகா.

'என்னதான் செய்கிறாள் பார்ப்போமே' என்ற அசட்டுத் துணிச்சலில், "வளசரவாக்கத்தில் டிராப், பண்ணிடு ஜிங்லி!" என்றான்

# பொன்மொழிப் போட்டி - II முடிவு

சரியான விடை:

கீதையில் கண்ணன்: இறைவனை வியந்து பார்ப்பவர்களும் இறைவனைப் பற்றி வியந்து பேசுபவர்களும் அப்படிப் பேசப்படுவதை வியந்து கேட்டுக் கொள்பவர்களும் உண்டு. ஆனால் அவனை அறிந்தவர் யாருமில்லை.

வால்டேர்: கடவுள் இல்லையென்றால் மனிதன் அவரை உருவாக்க நேர்ந்திருக்கும்.

பெர்னார்ட் ஷா: இளமை இளைஞர்களிடம் வீணடிக்கப்படுகிறது!

ஸி.வி. ராமன்: நவீன விஞ்ஞானம் பல விஷயங்களை நிச்சயப்படுத்துகிறது. அவற்றுள் ஒன்று, நிச்சயமற்ற விஷயங்கள் ஏராளமாய் உள்ளன என்பது.

சத்ய சாயி பாபா: நிசப்தத்தின் ஆழ்ந்த அமைதியிலேயே கடவுளின் குரலைக் கேட்க முடியும்.

**கீழ்க்கண்ட 101 வாசகர்கள் சரியான விடையை எழுதியுள்ளார்கள். ரூ 200/— பரிசு அவர்களிடையே சமமாகப் பகிர்ந்தளிக்கப்படுகிறது.**

**பி. லதா, கோவை—18; பி.கே. தங்கம், இராஜபாளையம்; எஸ். யோகாம்பாள், சென்னை—2; பி.எஸ். பரந்தாமன், புதுப்பேட்டை (வடார்க்காடு); டி. ரங்கசாமி, கோவை—37; மு. சம்பத், கோவை—14; எஸ். உமா ராணி, சிவகாசி; கே.ஜி. துர்கா மகேஸ்வரி, கோவை—1; வி. மாலினி, சென்னை—102; செ. சிவசுப்ரமணியன், காஞ்சிபுரம்—1; ஜே. சுதாகரன், குமாரபாளையம்; எல். கணேசன், திருப்பத்தூர் (வடார்க்காடு); பி. ராமச்சந்திர முரளி, செகந்திராபாத்; மு. அருணாசலம், சேலம்—7; சி. ஞான சுந்தரன், ஈரோடு; கா. கண்ணன், மதுரை—18; மா. சண்முகம், சென்னை—45; பி.எம். பிரபாகரன், திருமங்கலம்; எல். சேகர், திருவாரூர்—2; எஸ். இராஜகோபாலன், மதுரை—6; கே.**

அருண் அதிகாரமாக.

"எஸ், பாஸ்!" என்றவள், மேற்கொண்டு எதுவும் பேசாமல் வளசரவாக்கத்தில் அவன் குறிப்பிட்ட மெயின் ரோடில் கொண்டு போய் நிறுத்தினுள். அவசர அவசரமாக இறங்கிக் கொண்டான் அருண்.

"மிஸ்டர் அருண்! தாங்க் யூ வெரி மச் ஃபார் கீப்பிங் கம்பெனி.... நாளைக் காலை வழக்கம் போல டென்னிஸ் பிராக்டீஸுக்கு வந்து விடுங்கள்! மறந்து விடாதீர்கள்! குட் நைட்!"

அருணுக்குப் பைத்தியம் பிடிக்காத குறை தான். இந்த அம்பிகாவை எதில் சேர்ப்பது? கால், அரை, முக்கால் அல்லது முழு லூஸ்...? சட்டுச் சட்டென்று கோபம் வருகிறது. சில சமயம் குழந்தைத்தனமாகவும் நடந்து கொள்கிறுள்... இவளை எப்படிச் சமாளிப்பது எப்படி இந்த ஃபார்முலாவைக் கைப்பற்றப் போகிறோம்?

பிரமிப்பாக இருந்தது.

ஆனுல் அதிக நேரம் யோசித்துக் கொண்டு நிற்கவும் நேரமில்லை. ஏற்கெனவே ரொம்ப நேரமாகிவிட்டது. ஏழு மணிக்குள் அவன் சத்யாவின் வீட்டுக்குள் நுழைந்திருக்க வேண்டும்....

விறுவிறுவென்று நடந்தான். சத்யாவின் வீட்டுக்கு எதிர்ப்புறக் கடையில் இவன் போய்க் கேட்டதுமே சாவி கிடைத்துவிட்டது. கதவைத் திறந்து கொண்டு வீட்டு ஹாலில் போய் உட்கார்ந்தான்.

காலையில் ஆபீசுக்குக் கிளம்பும்போதே, ஞாபகமாகக் கொண்டு வந்திருந்த பிஸ்டலை, பாண்ட் பாக்கெட்டிலிருந்து உருவி, கையில் வைத்துக் கொண்டான். கை நடுங்கியது லேசாக.

சத்யாவைக் கொல்வதற்காக வரவிருக்கும் கொலையாளியை எதிர்நோக்கிக் காத்திருக்க ஆரம்பித்தான் அருண்.

அம்பிகா தன் பங்களாவை அடைந்த போது அவள் சற்றும் எதிர்பார்த்திராத ஒரு நபரைக் கண்டதும் ஆச்சர்யத்தால் துள்ளினுள். அவளது உள்ளம் கவர்ந்த இளைஞன் தான் ஹாலில் சோபாவில் உட்கார்ந்திருந்தான்.

"ஹாய்! நீ எப்ப வந்தே ஊரிலேருந்து?" என்று கேட்டு சந்தோஷக் கூச்சல் போட்டபடியே அவன் எதிரில் போய் உட்கார்ந்தாள்.

"சாயந்தரம்தான் வந்தேன்.... இந்தத் தடவை அலைச்சல் அதிகம்.... அதனுல் ரொம்பக் களைப்பாயிருந்தது... தியாஸாஃபிகல் சொஸைட்டிக்குப் போய், குளுகுளு மர நிழலில் ஓய்வெடுத்துக் கொண்டேன்... வெளியே வந்தபோது முதலில் ஒரு தூங்கு மூஞ்சி மரம்தான் கண்ணில் பட்டது. உடனே உன் ஞாபகம் வரவே, நேராக இங்கே வந்து விட்டேன்!"

"என்னைத் தூங்கு மூஞ்சி என்று சொல்கிறுய்!" என்று செல்லமாகக் கோபித்து, விளையாட்டாக அவன் முதுகில் அரை டஜன் குத்துவிட்டாள் அம்பிகா.

"இது போதாது.... வேலை மெனக்கெட்டு உன்னை லவ் பண்ணினேன் பாரு — அதுக்கு இதற்கு மேலும் தேவை!" என்று அம்பிகாவைச் சீண்டி விட்டான் அவன்.

கொஞ்ச நேரம் வெட்டிப் பேச்சில் கழிந்தது. அம்பிகாவின் தாயார் கொண்டு வந்து கொடுத்த ஜூஸை ருசித்தார்கள் இருவரும்.

பிறகு திடீரென்று நினைவு வந்தவள் போல, "ஹேய்! லிஸன்.... உன் டிரெஸ்ஸை

---

சரவணன், சேத்திரபாலபுரம் (தஞ்சை); த. வாசுதேவன், புதுவை—9; டி. கோபாலன், ஸ்ரீவைகுண்டம்; ஆர். லக்ஷ்மி நாராயணன், கோவை—37; சி.எஸ். ரே, புதுவை—1; வி.வி. வல்லி, செகந்திராபாத்; ஆர். நடராஜன், முடிகொண்டான்; திருமதி ருக்மிணி, திருப்பூர்; ஏ. ஜே. தெய்வசிகாமணி, நெல்லிக்குப்பம்; ஜி. கோமதி, கடலூர்; ஜி. செல்வராஜன், வெங்கலம்; எல்.ஏ. சப்தரிஷி, பெங்களூர்—3; என். சிவகுமார், கோவார்பட்டி அஞ்சல்; எம். ராஜய்யா, தேவகோட்டை விரிவு; எம். சந்திரசேகர், கோவை—32; வி. இரவிச்சந்திரன், தொளசம்பட்டி அஞ்சல்; கே. சியாமளா, பம்பாய்—80; எம். ரவீந்திரன், கச்ச நகரம்; ஏ.ஜி. கல்யாணசுந்தரம், கோவை—6; எஸ்.ஆர். ராஜகோபாலன், சென்னை—4; எஸ்.காயத்ரி, சென்னை—88; ஆர். விஸ்வநாதன், சென்னை—33; இரா. சேகரன், அனிக்கொரை அஞ்சல்; ஜி. முருகவேல், மதுரை—1; ஆர். சாவித்ரி, கோவை—22; பி.வி. தங்கவேல், சேலம்—5; க. கோகிலவாணி, சங்கமங்கலம்; எஸ். பத்மநாபன், லக்ஷ்மிபுரம்-602024; வி. கல்யாணசுந்தரம், சென்னை-18; வி. கோபிநாத், நெய்வேலி-3; வெ. உஷாராணி, பொன்னேரி அஞ்சல்; என். பாலசுப்பிரமணியன், சென்னை-101; எஸ். விசாலம், சென்னை—4; என். காமாக்ஷி, சென்னை—87; நிர்மலா கேசவராஜ், சென்னை—9; ஆர். சரவணன், வளவனூர்; சு. வசந்தா, நாமக்கல்; ஜி. இராசேந்திரன், கடலூர்—2; என். சுகன்யா, சென்னை—44; என். இராமநாதன், மயிலாடுதுறை; வி. ராஜகோபால், புதுவை—1; என். பாலகிருஷ்ணன், சென்னை—43; இந்திரா, பம்பாய்—22; எஸ்.எஸ்.என். சர்புதீன் பரீதா, திருமயம்; ஆர். ராமமூர்த்தி, ராமநாதபுரம்; மீடா சர்கார், கொப்பம்பட்டி; எஸ். அருள்மொழி, காட்டூர்; வி. சுவாமிநாதன், குத்தாலம்; என். விஜயலக்ஷ்மி, சென்னை—61; ப. லில்லி சந்திரா, திருவையாறு; ஆ. பெருமாள், உசிலம்பட்டி; எஸ். மேகநாதன், சென்னை—13; ஏ.என். பாலசுப்ரமணியன், புதுதில்லி—67; ஆர். சாய்சுதா, கே.கே. புதூர்; இ. சந்திரா, சோழபுரம்; பி. ஆனந்தன், நீலகிரி; எஸ். கண்ணன், சென்னை—53; பி. சரோஜா, திருநெல்வேலி; திருமதி டி. விமலா, தஞ்சை; அ. அனந்த பத்மநாதன், புதூர் (தஞ்சை); ஆர். வெங்கட கிருஷ்ணன், காரைக்கால்; கே. எஸ். கணபதி, சென்னை—87; ஜி. மலர்கண்ணன், வடோதரா; பி. சங்கர், சென்னை—21; எஸ். அருள்சாமி, கணபதிபுரம் அஞ்சல்; ஜி. ப்ரபாகர், மதுரை—1; எஸ். இராமமூர்த்தி, பாளையங்கோட்டை; ஜி. ராமபிரசாத், மயிலாடுதுறை; ராஜீவி நரசிம்மன், பம்பாய்—38; எஸ். பிரபு ராஜ், ஈரோடு—1; வள்ளி, சென்னை—18; மு. பொன்னம்மாள், திருநெல்வேலி, பா. நாகராஜன், பொரையார்; ஜி. கோவிந்தன், நெல்லிகுப்பம்; எஸ். ருக்மிணி, நெய்வேலி—1; விஜயா சேஷாத்ரி, பெங்களூர்—70; எல். இராஜ் குமார், நாகர்கோவில்; எஸ். லக்ஷ்மணன், ஸ்ரீவைகுண்டம்; பி. கௌசல்யா, சென்னை—41; கே.வி. கிருஷ்ணன், தஞ்சை—4; எஸ்.பி. தங்கராஜ், கோவை—12.



அருள்வாக்கு

ஸகல ஜாதியாரும் சேர்ந்து கோயில் திருப்பணி, அல்லது தூர்ந்த ஏரியில் மண் வாருவது என்கிற மாதிரியான பெரிய காரியங்களை எடுத்துக் கொண்டு, ஓயாமல் பொதுத் தொண்டுகளில் ஈடுபட்டிருந்தால் தன்னால் அன்பும் ஸமூஹ ஸௌஜன்யமும் ஏற்பட்டுவிடும். இப்போது காரியம் இல்லாமலிருப்பதால்தான் எதையாவது நினைத்துக் கொண்டிருக்கத் தோன்றுகிறது. இதிலிருந்துதான் விதண்டாவாதம், வம்பு தும்பு, 'ஒழிக' சண்டை எல்லாம் உண்டாகின்றன. ஒரு சண்டை பூசல் என்று கிளம்பிவிட்டால்தான் ஸ்வாரஸ்யமாயிருக்கிறது; கிளர்ச்சி, ஆர்ப்பாட்டம், புரட்சி என்று கிளப்பி விட்டால்தான் தங்களைச் சுற்றி 'ஜே' போடப் பத்துப் பேர் சேர்கிறார்கள்' என்பதால் இம்மாதிரி செய்கிறார்கள். இதற்கெல்லாம் பொழுதே இல்லாதபடி காரியங்களில் ஈடுபட்டிருந்தால் எல்லாம் சரியாகிச் சாந்தமாகிவிடும். தொண்டைத் தண்ணீர் வற்ற 'ஒழிக' கூச்சல் போட்டுக் கொண்டு, கால் வலிக்க ஊர்வலம் வருவதற்குப் பதில் இந்த Man Power ஐ (மனித சக்தியை) ஏதாவது ஆக்க ரீதியான திசையில் திருப்பிவிட்டால் எத்தனையோ வளர்ச்சி ஏற்படும். எல்லாவற்றையும் விடப் பெரிய வளர்ச்சி ஸமஸ்த ஜனங்களிடையும் உண்டாகிற அன்புதான். அநுஷ்டானங்கள் பண்ணுவது கோவிலுக்குப் போவது, உபந்நியாசத்துக்குப் போவது, லீவு நாளானால் ஸகல ஜாதியாரும் சேர்ந்து நாள் முழுக்கத் தெய்வப் பணி ஸமூகப் பணி செய்வது என்று 'டைட்'டாக டைம் டேபிள் போட்டுக் கொண்டு பண்ண ஆரம்பித்து விட்டால் இந்த 'ஒழிக' 'வீழ்க'வுக்கெல்லாம் அவகாசமேயில்லாமல் எல்லாரும் வளர்ந்து வாழ்ந்து கொண்டிருப்பார்கள்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

யெல்லாம் ஒழுங்காக லாண்டிரிக்குப் போடுகிற பழக்கம் உண்டா உனக்கு!" என்று கேட்டாள்.

"எதற்காகக் கேட்கிறாய்?"

"முன்னே ஒருசமயம் நாம் சந்தித்த போது உனக்குத் தெரியாமல் உன் ஷர்ட் பாக்கெட்டில் ஒரு காகிதம் செருகினேன்..."

"லவ் லெட்டரா?"

"உன் முகரைக்கு அது ஒன்றுதான் குறைச்சல்! குறுக்கே பேசாமல் கேள்.... நீ துணிகளை லாண்டிரிக்குப் போடும்போது, ஏதாவது பேப்பர் கையிலே கிடைச்சு, எடுத்து வைத்த ஞாபகம் இருக்கா, சொல்லு!"

"பஸ் டிக்கெட்டைக் கூடப் பத்திரப்படுத்தி வைக்கிறவன் நான். உன் பேப்பரும் பத்திரமாகத்தான் இருக்கும்!"

"ஹை! வெரிகுட்....! நான் வச்ச அந்தப் பேப்பர் எனக்கு வேணுமே!"

"வீட்டிலே எந்த இடத்திலே எடுத்து வச்சேன்னு ஞாபகப்படுத்திப் பார்க்கணும். அப்புறம் தேடணும். அது கிடைக்கணும்... அதுக்கும் அப்புறம்தான் உன் கைக்கு வந்து சேரும். அது சரி, அது என்ன காகிதம்? எதற்காக அதைக் கேட்கிறாய்?"

"லிஸன்.... அந்தக் காகிதத்திலே ஒரு ஃபார்முலா இருந்தது...."

அந்த இளைஞன் நிமிர்ந்து உட்கார்ந்தான்.

"அது வேண்டுமென்று கேட்டுக் கொண்டு ஒரு யங் மேன் என்னிடம் வந்திருக்கிறான்...."

இளைஞனின் கண்கள் பளிச்சிட்டன.

"அவனை இப்போ நான் படாத பாடு படுத்திக் கொண்டிருக்கிறேன். சில சமயங்களில் எனக்கே அவனைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. அவனிடம் இந்த ஃபார்முலாவைக் கொடுத்தால் என்ன என்று தோன்றுகிறது.... பாவம், அவனும் தான் பிழைத்துப் போகட்டுமே...."

இளைஞன் பளிச்சென்று சொன்னான்: "நன்றாக யோசித்துப் பார்த்து விட்டுச் செய் அம்பிகா! அதைக் கொடுப்பதால் தகராறு ஏதாவது வந்து தொலைக்கப் போகிறது!"

"அதெல்லாம் ஒன்றும் வராது! மாமாவைச் சமாளித்துச் சரிக் கட்ட எனக்குத் தெரியும்!"

அவள் சொல்லி முடித்த அதே நிமிடம், போர்ட்டிகோவில் ஒரு கார் வந்து நிற்கும் ஓசையும், "ஜிங்லி இருக்கிறாளா? அல்லது கிளப்பிலேருந்து இன்னும் வரவில்லையா?" என்ற கனமான குரலும் கேட்டன.

"ஹை! மாமாவே வந்துட்டார்!" என்று அம்பிகா துள்ளிக் குதிக்க, அந்த இளைஞன் சட்டென்று எழுந்து, "ஸீ யூ அம்பிகா!" என்று சொல்லி, பங்களாவின் பின்புறக் கதவு வழியாக வெளியேறும் உத்தேசத்துடன் விரைந்தான்.

(தொடரும்)

# மாதக் கடைசியில் வந்த மாமனார்!

கதை: தமிழினியன்
படம்: கரோ













பத்து ரூபாய்க்குப் பாங்குப் பத்திரம் உன் பேரில் வாங்கியிருந்தேனே, ஞாபகம் இருக்கா? ஆறு மாதத்துக்கு ஒரு தரம் சீட்டுக் குலுக்கு வாங்க. இந்தத் தடவை உனக்கு விழுந்திருக்கு... மூன்றாம் பரிசு... இருநூற்றைம்பது ரூபாய்... இந்தா...


ஜானகி மகிழ்ச்சியுடன் அதைக் கணவனிடம் தந்து...
சீக்கிரம்! காய்கறி, பருப்பு, காப்பிப் பொடி வாங்கிட்டு வாங்க...
அது சரி, ஆறு மூன்றாம் பரிசு ஐந்நூறு ரூபாய்னு ஞாபகமாச்சே...


அன்று காரியாலயத்தில் நாளிதழ்களைப் புரட்டிய சுதாங்கன்...
டக்கு டப்பா! டமுக்கு டப்பா! மூன்றாம் பரிசு, ரூபாய் ஐந்நூறு! தெளிவாப் போட்டிருக்கே!


மாலை வீடு திரும்பி...
ஜானகி! எங்கே பட்டாளம்?
உச்சிப்பிள்ளையார் கோயிலுக்குப் போயிருக்காங்க...


பார்த்தியா, உன் அப்பாவின் மோடி மஸ்தான் வேலையை? பாதிப் பணத்தை அபேஸ் பண்ணிட்டார். வரட்டும், மானத்தை வாங்கற மாதிரி, மாமி எதிரேயே ரெண்டு கேள்வி கேட்கிறேன்!

ப்போது
ராமசாமி
வந்து...

அப்படி மானம் போகக்கூடாதுன்னுதான் அவங்களை அனுப்பிட்டுத் தலைவலின்னு பொய் சொல்லி நான் மட்டும் திரும்பி வந்தேன், மாப்பிள்ளை...

மாசக் கடைசின்னா என்னன்னு எனக்கும் தெரியும். நானும் உத்தியோகத்தில் இருந்து ஓய்வு பெற்றவன்தானே...

அதுல...?

அதுல நீங்க சிரமப் படுவீங்களேன்னு தான் ரூபாய் தந்தேன். ஆனா மாமி, குழந்தைங்க எதிரே தானமாக் கொடுத்தா வாங்க மாட்டீங்க. தன் மானம்...! எனவேதான் பரிசு விழுந்ததா டுப் விட்டேன்!

டூப்பா?

ஆமாம், மாப்பிள்ளை! பாங்குப் பத்திரம் ஊரிலே பத்திரமா இருக்கு. அதுக்குப் பரிசு விழலை. இது என் சொந்தப் பணம்!

ஹிம்... ஹிம்...

அப்படிச் சொல்லாதேம்மா. மாப்பிள்ளை நிலையிலே இருந்திருந்தா நானும் இப்படித்தான் சந்தேகப் பட்டிருப்பேன்...

நல்லா வழிங்க...!

# ஆயிரம் இரவுகள்

**கதை சொல்லுவதில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு பாணி உண்டு. அண்மையில் மறைந்த கே. ஏ. அப்பாஸ் பாணியே தனி. அவருடைய ஒவ்வொரு கதையிலும் மனித நேயம் மேலோங்கி நிற்கும். 1956—ல் எழுதப்பட்ட இந்தக் கதையும் அப்படிப்பட்ட ஒன்றுதான்.....**



பத்திரிகைகளை விரித்துப் படித்துக் கொண்டிருந்தேன். ‘முதல் இரவு கடுமையானதாகத்தான் இருக்கும்’ என வயது முதிர்ந்த அந்தப் பிச்சைக்காரன் கூறியிருந்தான்.

முதல் இரவு. ஒடுங்கிய அந்தச் சந்தில் நான் மிகவும் ஜாக்கிரதையாகச் சென்றேன். தவறான ஒரு காரியத்தைச் செய்கிறோம் என என் மனசாட்சி உறுத்தியது. என்னையும் மீறிய ‘வெட்கம்’ என்னை ஆட்கொண்டது.

பம்பாய்நகரத்துக்குவந்துஒருமாதமாகிவிட்டது. முப்பதே நாட்கள்தான். ஆனால் என்னுள் எத்தனையோ ஆண்டுகள் கடந்து விட்டது போன்ற ஓர் உணர்வு. வயதாகிவிட்டது போன்ற ஓர் எண்ணம். உத்திரப்பிரதேசத்திலுள்ள ஹத்ராஸ் என்னும் ஊரிலிருந்து உட்காரக் கூட இடமில்லாத நிலையில் உள்ளமூன்றாம்வகுப்புவண்டியில்நான்பம்பாய்க்கு வந்தேன். ஓசிப் பயணம் அல்ல. டிக்கெட் எடுத்துக் கொண்டுதான் ரயிலில் பயணம் செய்தேன். என் பையில் இருபது ரூபாய்களுக்கு மேல் இருந்தது. உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்த சர்டிபிகேட்டையும் வைத்திருந்தேன். இளமைப் பருவத்து இன்பக் கனவுகளில் மிதந்து கொண்டிருந்த நான் வாழ்க்கையில் வெற்றி காணுவோம் என்ற நம்பிக்கையுடன்தான் பம்பாய்க்கு வந்தேன். எனக்கு ஒரு வேலையும், சொந்தமாகத் தங்குமிடமும் கிடைக்கும் வரை தன்னுடன் வைத்துக் கொள்ளுமாறு பம்பாய் வாசி ஒருவருக்கு அவரது நண்பரிடமிருந்து கடி

தம் வாங்கி வந்தேன். அவர் ஒரு பஞ்சாலையில் பணியாற்றுகிறவர். பரேல் பகுதியில் ஒரு கட்டடத்தின் ஐந்தாவது மாடியில் உள்ள ஓர் அறையில் அவர் குடியிருந்தார். அந்த அறைதான் அந்தக் குடும்பத்திற்குச் சமையலறை, படுக்கை அறை, குளிக்கும் அறை எல்லாம். குழந்தை குட்டிகளுடன் குடித்தனம் செய்தார் எனது நண்பரின் நண்பர். கட்டடத்தில் வரிசை வரிசையாகக் கட்டப்பட்டுள்ள அறைகளுக்கு முன்னல் ஒரு 'வராந்தா' உண்டு. அந்த வராந்தாவில்தான் இரவில் நான் சயனிப்பேன். ஓரத்திலுள்ள கக்கூஸின் மணமும் பாக்டரியிலிருந்து கிளம்பி வரும் புகையின் மணமும் சேர்ந்து ஒரு புதிய சகிக்க முடியாத மணம் வீசும்.

பகல் முழுவதும், நான் தொழிற்சாலைகள், அலுவலகங்கள், ஸ்டூடியோக்கள், வேலை தேடித் தரும் நிலையம் முதலியவற்றிற்கு ஏறி இறங்கினேன். படுக்கைக்குச் செல்லும்போது அலுத்துக் களைத்துப் போவேன். தூக்கமும் உடனே வந்துவிடும். எனவே அந்த வராந்தாவில் வீசும் துர்நாற்றம் என் தூக்கத்திற்கு இடையூறாக இருக்கவில்லை. அங்கு படுத்துத் தூங்க முடியாது தான். ஆனல் படுப்பதற்கென்று ஓர் இடம் கிடைத்ததல்லவா! இதுதான் விஷயம்.

ஒருநாள் இரவு. என்னைப் பரார் பாக்கிய இரவு. அந்த இரவுதான் என்னைப் பிளாட்பாரத்து ராஜாவாக்கியது. அந்த இரவில் மருந்துக்குக்கூட காற்றில்லை. வெப்பம் மிகுந்த இரவு, வராந்தாவில் படுத்திருந்த எனக்கு வீட்டினுள்ளே இடம் கொடுத்த தம்பதிகள் பேசும் குரல் கேட்டது.

''ஐயோ! அப்பா! வெப்பம் தாங்க முடியவில்லையே' என்ருள் மனைவி. 'கதவையாவது திறந்தால் கொஞ்சம் காற்று வரும்.'

'கதவை எப்படியம்மா திறப்பது? அவர் அங்கேபடுத்திருக்கிருரே' என்ருன் கணவன்.

இதற்குப் பின்னும் நான் அங்கிருப்பது சரியல்ல என்ற முடிவுக்கு வந்தேன். மறுநாள் 'வேறிடத்தில் படுத்துக் கொள்ள ஏற்பாடு செய்து கொள்கிறேன்' என்று அவர்களிடம் கூறிவிட்டேன்.

வேண்டா வெறுப்பாக, 'சௌகரியமாக இருக்குமல்லவா' எனக் கேட்டார்.

'பெரிய இடம். மிகவும் வசதியுள்ள இடம்' என நான் பொய் சொன்னேன்.

## முதல் இரவு

**ப**ம்பாய் நகரத்தின் பிளாட்பாரத்தில் படுத்திருந்த பிச்சைக்காரன் 'முதல் இரவு கடுமையாகத்தான் இருக்கும். பழகி விட்டால் சரியாகப் போய்விடும்' என்ருன்.

அன்று இரவு நான் கொஞ்ச நேரமே தூங்கியிருப்பேன். பிளாட்பாரத்தில் கிடந்த சின்னஞ்சிறு கற்கள் எனது சதையையும், எலும்பையும் கூடப் பதம் பார்த்தன. மூடப்படாத சாக்கடையிலிருந்து கிளம்பி வரும் துர்நாற்றம் மூக்கைப் பிய்த்தது. சாக்கடையில் புரண்டெழுந்த ஒரு நாய் புதுமுகம் என்ற முறையில் என் முகத்தருகே வந்து மோப்பம் பிடித்தது. சிறிது நேரத்திற்கு முன் தான் என் கால் விரல்களை ருசி பார்த்துச் சென்ற எலியைத் தேடி வந்த பூனை என் காலை நக்கியது. உடனே காலணியை அணிந்து கொள்ள நினைத்து எழுந்து உட்கார்ந்தேன். காலணிகளைக் காணவில்லை. எந்தப் புண்ணியவானே திருடிக் கொண்டான். இல்லை, எடுத்துக் கொண்டான்.

வானத்தைப் பார்த்தேன். சந்திர மண்டலத்திற்கும் அப்பாலுள்ள நட்சத்திரக் கூட்டம் மினுக் மினுக்கென ஒளி வீசின. பம்பாய் நகரத்தின் வானளாவிய மாடமாளிகைகளைப் பார்த்தேன். ஒருகணம்! என்னைப் பயம் ஆட்கொண்டது. எந்த நிமிடத்திலும் அந்த மாடமாளிகைகள் தகர்ந்து தரை மட்டமாகிவிடும் என்ற உணர்வு எனக்குள் தோன்றியது.

மாநகராட்சிக்குச் சொந்தமான குப்பை வண்டியொன்று நின்றது. இரவில் நெடு நேரம் வரை வேலை செய்யும் குடும்பப் பெண்கள் வீடுகளிலிருந்து அன்றைய எச்சில் உணவையும், காய்கறித் தோல்களையும் வீசினர்கள். அவற்றில் சில என் மீதே விழுந்தன. மறுகணம் ரஸ்தாவின் எங்கோ நின்று கொண்டிருந்த நாய்கள் ஓடோடி வந்தன. குரைத்துக் கொண்டே வந்த அவை போட்டி போட்டுக் கொண்டு உணவைப் பகிர்ந்தன. பிரதான ரஸ்தாவில் ஒரு கார் பறந்து சென்றது. காருக்குள் இருந்த பெண்மணிகள் உரக்கச் சிரித்தனர். அவர்கள் வேறு உலகத்தை சேர்ந்தவர்கள் போல் தோன்றியது. பக்கத்திலுள்ள ஒரு பாலத்தின் வழியாக ஒரு ரெயில் சென்றது. ரயில் சக்கரங்களின் சத்தம் ஒலித்தது எதிரொலித்து இடி முழக்கமென கேட்டது.

இவ்வளவையும் சகித்துக் கொண்டு என தருகில் படுத்திருந்த பிச்சைக்காரன் குறட்டை விட்டுத் தூங்கினன். அவனைப் பார்த்து நான் பொருமைப்பட்டேன்.

## 57—வது இரவு

**பா**தையோர வாசிகள் பட்டணத்தில் நானும் இப்பொழுது ஒரு சிப்பாய்.

முதல் இரவு அனுபவத்திற்குப் பின் சில நாட்கள் பாதையோரத்தில் படுத்து உறங்க நான் சிரமப்பட்டேன். சௌபாத்தியிலுள்ள தொங்கும் தோட்டத்தின் பெஞ்சில் படுக்க முயன்றேன். கடற்காற்றில் சுகமாகத் தூங்கலாம் என்ற எண்ணத்துடன் 'மரைன் டிரைவ்' பகுதியில் ஒரு சினிமா நடிகையின் வீட்டு முன்னல் படுத்து உறங்க முயன்றேன். ஆனல் நடக்கவில்லை. இங்கெல்லாம் இரவில் ரோந்து சுற்றும் போலீசார்கள் விரட்டியடித்தார்கள். எனவே மீண்டும் பாதையோரத்திற்கே வந்தேன்.

**கே. ஏ. அப்பாஸ்**

இறுதியில் ஓர் அருமையான இடத்தைக் கண்டு பிடித்தேன். பெரோஸ்ஷா மேத்தா ரோட்டில் ஒரு பாங்கியின் முன்னல் படுக்க ஆரம்பித்தேன். அந்த இடம் ஒரு பாதுகாப்பான இடம் என என் உள்ளுணர்வில் தோன்றியது. அந்தப் பாங்கே என்னுடைய பாங்க் என்ற விசித்திரமான உணர்வுடன் என்னுடைய உடமைகளைப் பாதுகாப்பதற்காக அங்கு படுத்தேன்.

நான் எப்பொழுதும் அந்த பாங்கை நோக்கியே முகத்தை வைத்துத் தூங்குவேன். பாங்கியின் பிரும்மாண்டமான கண்ணாடிச் சுவர்களில் தங்க நிறத்தில் பாங்கின் பெயர் பொறிக்கப்பட்டிருந்தது. பாங்கியின் மூலதனம் 50,00,00,000 ரூபாய் எனக் கொட்டை எழுத்துக்கள் டாலடித்தன. இப்பொழுது எனக்கு நன்ருகத் தூக்கம் வருகிறது. தூங்குவதற்கு முன்னல் பாங்கில் கொட்டை எழுத்துக்களில் தோன்றும் 50,00,00,000 என் கண்களில் பளிச்சிடுகின்றன 5 கோடியா அல்லது 50 கோடியா? எனக்கு கணக்கு நன்ருக வராது. பணத்தை நினைத்துக் கொண்டே நன்ருகத் தூங்கி விடுவேன். நேற்று இரவு லட்சக்கணக்கான ரூபாய் எனக்குக் கிடைப்பதாகக் கனவு கண்டேன். அவற்றைப் பம்பாயிலிருந்து உத்திரப் பிரதேசத்திலுள்ள எனது சிறிய ஊரான ஹத்ரஸுக்கு அனுப்புவதுபோல் கனவு கண்டேன். ஆம். எனது பெற்ருேர்களும் தன்னுடைய மகன் பம்பாயிலிருந்து ஏராளமான பணத்துடன் திரும்புவான் என நம்பிக்கையுடனிருக்கின்றனர்.

## 127—வது இரவு

நான் அருமையாகத் தூங்கிக் கொண்டிருந்த அந்த இடத்தையும் இழக்க நேரிட்டது. கொள்ளைக்காரர்கள் அந்த பாங்கை முற்றுகையிட்டுக் கொள்ளையடித்தனர். அன்று இரவு நடந்த நிகழ்ச்சிகளை நினைத்தாலே புல்லரிக்கிறது. அந்த பாங்கில் தானுக இயங்கும் மணிகள் உண்டு. அன்று இரவு அவை திடீரென ஓசையெழுப்பின. மணியோசை எங்களை எல்லாம் ஆழ்ந்த தூக்கத்திலிருந்து எழுப்பியது. கண் விழித்துப் பார்த்தேன். கொள்ளைக்காரர்கள் ஓடுவதற்கான ஆயத்தம் செய்தார்கள். எனக்கு அவர்கள் மீது கடுமையான கோபம் ஏற்பட்டது. என்னுடைய 'பாங்க்' அல்லவா கொள்ளையடிக்கப்பட்டது.

ஆத்திரமடைந்த நான் கொள்ளைக்காரர்களில் ஒருவனின் ட்ரவுசரைப் பிடித்திழுத்தேன். அவன் கைகள் இரண்டிலும் கத்தை கத்தையாக கரன்சி நோட்டுக்கள் இருந்ததால் என்னை உதற முடியவில்லை. ஓடிக் கொண்டே என்னையும் சமாளிக்க நினைத்தான். ஆனல் போலீஸ்காரர்களின் விசில் சத்தம் கேட்கவே நிதானம் இழந்த அவன் தன் காலால் என் மீது ஓங்கி ஓர் உதை கொடுத்தான். நான் கீழே விழுந்தேன். அவன் ஓடிவிட்டான். அவனது ட்ரவுசர் துணியின் ஒரு பகுதி மட்டும் என் கையிலேயே இருந்தது. ஒரு நல்ல குடிமகன் என்ற முறையில் கொள்ளைக் காரன் அணிந்திருந்த ஆடையின் ஒரு பகுதியை நான் போலீஸ்காரர்களிடம் தந்தேன். அதைக் கொண்டு கொள்ளைக்காரர்கள் பற்றிப் போலீஸார் துப்பறியலாம் அல்லவா ? ஆனல் நான் ஒரு பிளாட்பாரம் வாசி என்று தெரிந்ததும் போலீஸார் என்னையே கைது செய்துவிட்டார்கள். அவர்களிடமிருந்து மீண்டது பெரும்பாடாகிவிட்டது. இனியும் பாங்குகளின் முன்னல் படுப்பது சரியல்ல என்ற முடிவுக்கு வந்தேன்.

எனவே என்னுடைய சயனத்தை தாஜ் மஹால் ஹோட்டலுக்கு மாற்றினேன். தாஜ் மஹால் ஹோட்டல் என்றதும் அங்கு ஓர் அறை எடுத்துவிட்டேன் என நினைத்து விடாதீர்கள். என்னைப் போன்று பதிவு செய்யாத விருந்தினர்களுக்காக தாஜ்மஹால் ஹோட்டலில் ஓர் அழகான வெளி வராந்தாவைக் கட்டியிருக்கிருர்கள். அதில் ஒரு நல்ல இடத்தை தேர்ந்தெடுத்தேன். ஹோட்டலில் தயாராகும் உணவின் வாசனை 'ஜம்'மென்று வீசும். அத்தோடு இரவில் அகாலத்தில் ஹோட்டலில் தங்க வருபவர்களையும் ஒரு கண் பார்த்துக் கொள்ளலாம். அழகிய கருப்பு நிற ஆடை அணிந்த அந்நிய நாட்டுக் கனவான்கள், செக்கச் சிவந்த உடம்புக்கு மெருகேற்றும் வகையில் பட்டாடை அணிந்து வரும் பாவையர், கதராடை உடுத்தும் தலைவர்கள், அவர்களது நாகரிக மனைவியர், மெருகு கலையாத மோட்டார் கார்களில் ஜ்வலிக்கும் நகையணிந்து வரும் ராஜா ராணிகள், இத்தகைய திருக்கூட்டத்தினர் கொடுத்து வைத்தவர்கள். 'டாட்டா' பை பை டார்லிங்' என்ற குரல்கள் ஒலிக்க வந்து போவது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது. பணம், நாகரிகம், அழகு இவைகளின் அற்புதக் காட்சியை அங்கே காணலாம். ஒரு சினிமாக் காட்சியைவிட இவை அற்புதமாக இருந்தன. சினிமாவில் வரும் யுவதிகளை படத்தில்தானே பார்க்கிருேம். இங்கே அந்த

### அருள் வாக்கு

இஷ்ட தெய்வம் என்று ஒன்று இருக்கலாம். ஆனல் அதுதான் எல்லாமாயிருக்கிறது என்பதால் அதுவேதான் மற்ற தெய்வங்களுமாகியிருக்கிறது என்ற எண்ணம் இருக்க வேண்டும். ஒன்றைப் பிடித்துக் கொண்டாடுவதற்காக இன்னென்றை நிந்திக்கக் கூடாது. விஷ்ணுதான் கடவுள், சிவன் ஒரு ஜீவன் — அல்லது சிவன் தான் கடவுள், விஷ்ணு ஒரு ஜீவன் — என்ருல்கூட ஒரு மூர்த்தியிடம் துவேஷம் பாராட்ட இடமில்லை. ஒருத்தர் ஸ்வாமி, இன்னெருத்தர் பக்தர் என்ருலும் பக்தருக்குரிய மரியாதையைச் செய்யத் தானே வேண்டும்? சிவன் விஷ்ணுவுக்கு பக்தன்; அல்லது சிவனுக்கு விஷ்ணு பக்தன் என்றே சொல்கிருர்களே தவிர இருவருமே பரஸ்பரம் துவேஷித்துக் கொள்ளும் விரோதிகள் என்று யாரும் சொல்ல

வில்லையே. அப்படியிருக்க அவர்களில் ஒருவரை நாம் ஏன் துவேஷிக்க வேண்டும்?

ஒரு புராணத்தில் சிவன் விஷ்ணுவை நமஸ்கரிக்கிறார்; இன்னொரு புராணத்தில் விஷ்ணு சிவனை நமஸ்கரிக்கிறார் என்பதால், இவர்கள் சின்னவர்களாகிவிடவில்லை. சிவனை நமஸ்காரம் பண்ணு என்று சிவனே சொல்லாமல் விஷ்ணு அதை நமக்குக் காரியத்தில் உபதேசிக்கிறார். இப்படியே நமக்கு விஷ்ணு பக்தி உண்டாக்கவே சிவன் விஷ்ணுவைப் பூஜிக்கிறார். ஜனங்களின் விதவிதமான ருசிக்குத் தகுந்த மாதிரி ஒரே பரமாத்மா வேறு வேறு ரூபத்தில் வருகிறார். அவரவருக்கும் தங்கள் இஷ்டமூர்த்தியிடம் திடபக்தி உண்டாவதற்காக, தாமே இன்னொரு மூர்த்தியால் இந்த மூர்த்தியை நமஸ்காரம் பண்ணுகிறார். பகவானைப் பூஜிக்கிற மாதிரியே பாகவதர்களையும் பூஜிக்க வேண்டும் என்று வைஷ்ணவர்கள் சொல்கிறார்கள்.



சிவனைப் போலவே சிவனடியாரையும் வழிபட வேண்டும் என்று சைவர்களும் சொல்கிறார்கள். எனவே இவர்களில் ஒருத்தர் இன்னொருத்தரைப் பூஜை செய்கிறார் என்னும் போது கூட, பூஜை செய்பவரை நாம் நமஸ்கரிக்கத்தான் வேண்டும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

நாரீமணிகளை அவர்களது லீலா வினோதங்களை நேரில் பார்க்கும்போது எப்படியிருக்கும்! ஆம்! திரையழகைவிட இங்கு நேரில் பார்க்கும் காட்சிகள் சிறப்பாகவேயிருந்தன. அங்கு வரும் எழிலரசிகளின் ஆடைகளிலேதடவப்பட்டிருந்தவாசனைத்திரவியங்களின் நறுமணத்தை நான் நுகர்ந்தேன். ஒரு சமயம் ஒரு பேரழகி என்னைக் கடந்து சென்றாள். அவளது சேலையின் ஒரு பகுதி என் முகத்தில் பட்டது. அவளையே பார்த்து மெய்மறந்திருந்த எனக்குச் சேலைப் பகுதி முகத்தில் பட்டது இடையூறாகத்தான் இருந்தது. ஆனாலும் இனிமையாக இருந்தது. கொடுத்து வைக்க வேண்டுமே! மற்றுமொரு நாள் இரவு, நடு இரவில் காதலர்கள் ஜோடி ஜோடியாக வந்தார்கள்.

மதுபானம் அருந்தும் அறைக்குள் கொஞ்ச நேரத்தைக் கழித்துவிட்டு வெளியே வந்தனர். வராந்தாவில் படுத்துக் கிடந்த எங்களை அவர்கள் உயிரற்ற சடலங்கள் என எண்ணியிருப்பார்கள் போலும். அல்லது தூங்கிவிட்டார்கள் என்று நினைத்திருக்கலாம். அல்லது அங்கு படுத்திருக்கிறவர்களுக்கு ஆங்கிலம் தெரியாதென்று நினைத்திருக்கலாம். நான் பத்தாவது வரை படித்தவன். எனது நண்பன் அங்கு படுத்து வரும் ராஜு ஒரு பட்டதாரி என்பதை அவர்கள் அறிந்திருக்க நியாயமில்லை அல்லவா? அதனால்தான் அவர்கள் ஜோராகப் பேசினார்கள். 'கண்ணே, வா?' 'எங்கே இந்நடு இரவில் போவது?' 'ஜுஹூவுக்குப் போகலாம். அங்கு போய் கொஞ்ச நேரம்.... அல்லது நீ விரும்பினால் இரவு முழுவதும் நிலவு ஒளியில் நாம் இருவரும் ஜாலியாக இருக்கலாம்.'

மறுகணம் ஆனந்தக் கூத்தாடிக் கொண்டு காரில் ஏறி அவர்கள் கடற்கரையை நோக்கிச் சென்றார்கள். எனது கற்பனை கடிவாளமற்ற குதிரையைப் போல் பறந்தது. நிலவொளியிலே ஜுஹூ பீச் கடற்கரையில் வீசும் இனிமையான தென்றல் கடற்கரை மணலில் புரளுவது போன்ற எண்ணம். எல்லாம் சேர்ந்து இவைனைத்தும் எனக்கு மனமயக்கத்தைத் தந்தன.

## 276—வது இரவு

**தா**ஜ் ஹோட்டலில் நான் தங்கியிருந்த அறையை, இல்லை வராந்தாவைக் காலி செய்து எத்தனையோ நாட்களாகிவிட்டன. காலி செய்யவில்லை. காலி செய்யப்பட்டேன். தாஜ் ஹோட்டலில் தங்க வரும் சிலருக்கு நாங்கள் வராந்தாவில் 'சனியன்'களாகத் தென்பட்டோம். எனவே புகார் செய்தனர். உடனே நாங்கள் வெளியேற்றப்பட்டோம்.

அதிலிருந்து நான் பருவ காலத்திற்கேற்ப எனது படுக்குமிடத்தை பல இடங்களுக்கு மாற்றிக் கொண்டிருந்தேன். வெயில் காலத்தில் அப்பல்லோ பந்தரில் தூங்கினேன். மழை காலத்தில் மகாத்மா காந்தி ரஸ்தாவிலுள்ள ஒரு பெரிய கடையின் முன்னால் மழை நீர் மேலே விழாதபடி பாதுகாக்கப்பட்டிருந்த இடத்தில் படுத்து உறங்கினேன். கடைக்கு எதிரே பிரகாசமான விளக்குகளின் ஜோதியில் நீச்சலழகிகள், தங்கள் தயாரிப்பான பெண்கள் அணியும் பாடிகளை விளம்பரப்படுத்த பாடிகள் மட்டும் அணிந்த பெண்மணிகளின் உருவங்கள், எடுப்பாக அமைக்கப்பட்டிருந்தன. மறுபடியும் நான் நிம்மதியாகத் தூங்க முடியாத நிலை.

இப்பொழுது நான் வேலையில்லாத ஒருவனல்ல. எப்படியோ மாதம் ரூ 45 சம்பளத்தில் ஒரு வேலை கிடைத்துவிட்டது. ஏற்றுமதி இறக்குமதி செய்யும் ஓர் அலுவலகத்தில் நான் பியூனாக வேலை பார்த்தேன். அந்த அலுவலகத்தில் ஏற்றுமதியும் நடக்கவில்லை. இறக்குமதியும் நடக்கவில்லை. எல்லா வியாபாரமும் கடிதங்கள், தந்திகள், தொலைபேசிகள் அல்லது பின்னறையில் ரகசியப் பேச்சுக்கள் மூலமே நடந்தன. அங்கு நடந்த

வியாபாரம் கள்ள மார்க்கெட் வியாபாரமோ என நான் சந்தேகித்தேன். எப்படியிருந்தால் எனக்கென்ன? எனக்கு மாதம் ரூ 45 கிடைக்கிறது.

எனக்கு வேலை கிடைத்துவிட்டது. ஆனால் தங்குவதற்கு ஓர் இடம் கிடைக்கவில்லை. ஒரு சின்னஞ்சிறு இடத்திற்குக் குறைந்தபட்சம் ரூ 200 'பகரி' (இனாம்) தர வேண்டியுள்ளது. நகரத்து வெளிப்புறத்தில் தென் இந்தியாவைச் சேர்ந்த வீடு கட்டும் தொழிலாளர்கள் வாசம் செய்யும் குடிசைகள் ஒன்றில் நானும் தங்கலாம். ஆனால் அவை வெகு தூரத்தில் உள்ளன. மேலும் நகர வாழ்க்கை, சுறுசுறுப்பு நிறைந்த, ஒளிவிளக்குகள் நிறைந்த, போக்குவரத்து நிறைந்த நகர வாழ்க்கையை நான் விரும்பினேன். நகரத்தில் வேறு சிலருடன் சேர்ந்து மாதம் ரூ 10 வாடகை கொடுத்து, ஒரு பெரிய வீட்டின் ஓர் அறையில் தங்கலாம். அதையும் முயற்சி செய்தேன். ஆனால் ஓர் இரவு கூட என்னால் தங்க முடியவில்லை. ஜன்னல் கூட இல்லாத அந்த அறையில் ஆறு பேர்களுடன் என்னால் படுத்து உறங்க முடியவில்லை. எனவே பரந்த வானத்தின் கீழே மீண்டும் பாதையோரத்திற்கு வந்துவிட்டேன்.

இப்பொழுது நான் லாமிங்டன் ரஸ்தாவில் தங்குகிறேன். சினிமாவுக்குச் செல்ல பணம் இல்லாத நாட்களிலும் சாரி சாரியாக சினிமாப் பார்க்கச் செல்லும் கூட்டத்தினரை இலவசமாகப் பார்க்க முடியும். தங்களது அழகான மெருகு கலையாத மோட்டார்களில் போகும் சினிமா நட்சத்திரங்களைக் கூட என்னால் பார்க்க முடியும். ஒருநாள் திலீப் குமாரைப் பார்த்தேன். திலீப் குமாரென்று உரக்கக் கத்தினேன். கூட்டத்தில் என்னுடைய குரலை அவர் கேட்கவில்லை. அவரது கார் வேகமாகச் சென்றது. பின் தொடர்ந்து திலீப் குமாரின் வீட்டைக் கண்டு பிடித்துவிட்டேன். ஆனால் வீட்டுக்குள் நுழைய தைரியமில்லை. அவரது வீடு போலீஸ் ஸ்டேஷனுக்கு அருகாமையில் இருந்தது.

## 537—வது இரவு

இப்பொழுது இரவு நேரங்களில் குளிர் வாட்டியது. எனவே மறுபடியும் எனது படுக்கையை திலகர் பாலத்திற்குக் கீழே மாற்றிக் கொண்டேன். ஒரு பெரிய 'கான்வஸ்' போஸ்டர் எனக்குக் கிடைத்தது. அதை வைத்து குளிரிலிருந்து என்னைப் பாதுகாத்துக்கொண்டேன். அந்தப் போஸ்டரில் ஓர் அழகான நடிகையின் படம் வரையப்பட்டிருந்தது. சாஞ்சல் பாலாவின் படம்தான் அது. 'பெயிண்ட் பூசியிருந்த பாகத்தை மேலே வைத்து என்னைப் போர்த்திக் கொண்டு படுத்து வந்தேன். ஆனால் அதற்கும் இடையூறு வந்துவிட்டது. குறுகிய மனம் படைத்த சில பொறுக்கிகள் படத்தை ரசிக்க ஆரம்பித்துவிட்டனர். ஏதேதோ பேசினார்கள். சிலர் படத்தையில்லை, படத்திலுள்ள சாஞ்சல் பாலாவின் அழகிய அதரங்களை முத்தமிடவே ஆரம்பித்துவிட்டனர். இனி என்ன செய்வது. சாஞ்சல் பாலாவின் முகத்தை என் முகத்தோடு வைத்துக் கொண்டு கான்வஸ் துணியை மாற்றிப் போட்டுக் கொண்டு தூங்க ஆரம்பித்தேன்.

## 840—வது இரவு

வசந்த காலம் துவங்கியது. பாதையோர வாசிகளுக்கும் வசந்தத்தின் இன்பம் கிடைத்தது. இலைகளே இல்லாத 'குல் மோகர்' மரம் செக்கச் சிவந்த மலர்களைக் கொண்ட மரமாயிற்று. அந்த மலர்களைப் பார்த்ததும் நான் ஒரு தத்துவ ஞானி போன்று சிந்திக்கிறேன். "எனது வாழ்க்கையும் இலைகளற்ற மரம் போல்தான் இருக்கின்றது. திடீரென எனது வாழ்விலும் வசந்தம் ஏற்படாதா? வாழ்வு மலராதா?" இத்தகைய எண்ணங்கள். சிந்தனையை விடுகிறேன். சினிமாவில் தோன்றும் பிச்சைக்கார வேதாந்தியல்ல நான்.

ஆனால் இங்கே 'வசந்தம்' உண்டு என்பதை நானறிவேன். செந்நிறப் பூக்களைப் பார்த்து ரசிக்க விரும்புகிறேன். அதே சமயம் 'சம்பா'வையும் பார்க்க விரும்புகிறேன். பாதையோரவாசிகளில் அவள் பேரழகி! இலைகளில்லாத மரத்தில் தோன்றும் அழகான செந்நிறப் பூக்களைப் போல் அவள் ஓர் அழகி.

அவள் எங்கிருந்து வந்தாள் என்பதை நானறியேன். ஆனால் அவள் அழகின் இருப்பிடம் என்பதை நானறிவேன். அவளது சிவந்த மேனி, நீலநிறக் கண்கள், கருமையான கூந்தல், கால்களை நீட்டி உட்கார்ந்து கொண்டு அவள் தலை சீவி முடிப்பது, இவற்றையே நான் பார்த்துக் கொண்டிருந்தேன். நான் மட்டுமென்ன? எல்லோருமே பார்த்தார்கள், ரசித்தார்கள். ஆனால் அவள் என்னை மட்டுமே நோக்கினாள். குழாயடிக்கு நான் சென்றால் அவளும் வந்து விடுவாள். குழாயைத் திருகும் சில சமயங்களில் என் கை அவளது கைமேல் படும். கையை அவள் எடுக்க மாட்டாள். நமது ஸ்பரிச சுகத்தை அவள் விரும்புகிறாளோ? இவ்வாறு எண்ணினேன்.... ஒருவேளை அது கற்பனையாக இருக்கலாம்.

சம்பா ஒரு நல்ல பெண். பாதையோரத்தில் வருடக் கணக்கில் தங்கி வரும் நான் பலரை அறிவேன். அவர்கள் எல்லோரையும் விட 'சம்பா' நல்லவள்தான். அதில் சந்தேகமே கிடையாது. அவளது கண்களில் ஏதோ ஒரு கவலை தோய்ந்திருந்தது. பயமும் கலந்திருந்தது. சில சமயங்களில் வேடனின் அம்புக்கிரையான மான்களின் கண்களைப் போன்று சம்பாவின் கண்கள் தோற்றமளித்தன. ஆனால் வேறு யாருமில்லை — நான் மட்டுமே அவளைப் பார்க்கிறேன் என்று தெரிந்தால் அவளது அழகிய கண்கள் ஒளி வீசும். அவளை அறியாமலே புன்னகை பூப்பாள். அப்போது கடந்த காலத்தின் இன்பானுபவங்களை நினைத்து அவள் புன்னகை பூப்பது போன்றிருக்கும்.

அவள் யாரிடமும் பேசுவது கிடையாது.

எல்லோரும் அவளுடன் அளவளாவ — சிநேகம் கொள்ள விரும்பினர். அதற்கான முயற்சி செய்தனர். சிலர் கெட்ட நோக்கத்துடன் அவளுடன் பழக ஆசைப்பட்டனர். அவளுக்கு ஒரே ஒரு சிநேகிதன்தான் உண்டு. அந்த நண்பன் பட்டினியால் நோஞ்சு போன ஒரு கால் இல்லாத நாய்தான். அந்த நாயை 'மோத்தி' என அவள் பிரியமாக அழைப்பாள். 'இவ்வளவு அழகான ஒரு பெண் அந்த அவலட்சணமான நாயின் மீது எவ்வாறுதான் அளவு கடந்த அன்பு வைத்திருக்கிறாளோ?' என எல்லோரும் ஆச்சரியப்பட்டனர். ஆனால் பாதையோரவாசிகள் எத்தனையோ விசித்திரமான சம்பவங்களைப் பார்க்கிறார்கள். விசித்திரமான நிகழ்ச்சிகளை அனுபவிக்கிறார்கள். அத்தகைய விசித்திரங்களில் இதுவும் ஒன்று.

பகல் நேரங்களில் சம்பா என்ன செய்கிறாள் என்பது யாருக்கும் தெரியாது. ஆனால் ஒவ்வொரு நாளும் நான் வேலையை விட்டுத் திரும்பும்போது என் வயிறு சரியாக இருக்காது. என்னவென்று விவரிக்க முடியாத ஒரு பயம் என்னை ஆட்கொள்ளும். இருப்பிடத்திற்கு வந்து அந்த நாயுடன் 'சம்பா' செல்லமாகப் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்ததும் என்னுள் இருக்கும் சிரமம் எல்லாம் எங்கோ பறந்து விடும். அந்த ஒரு கணம் என்னுள் தெம்பும் திராணியும் வந்து விடும். அந்த ஒருகணம்தான் — சம்பாவைப் பார்த்ததும்தான் நான் வாழ்வதாக உணர்வேன்.

இரவில் நாங்கள் எல்லோரும் படுப்பதற்கு தயாராவோம். சிலர் பாய்களை விரிப்பார்கள். சிலர் பேப்பர்களை விரிப்பார்கள். சம்பாவுக்கு அருகில் படுக்கையை விரிப்பதற்கான முயற்சிகளை மேற்கொள்வார்கள். குறிப்பாக ஒரு பயில்வானைப் போன்ற உடம்பைக் கொண்ட 'ராகியா'வும், சதா வெற்றிலை போட்டுக் கொண்டு சினிமாப் பாடல்களைப் பாடிக் கொண்டிருக்கும் 'பான்சி'யும் சம்பாவை நெருங்க நினைப்பார்கள். ஆனால் 'சம்பா' இவர்களுக்கெல்லாம் சரியான பதில் கொடுக்க தனதருகில் மோத்தியை வைத்திருந்தாள். யாராவது சம்பாவை நெருங்க நினைக்கிறார்கள் என்று தெரிந்த மறுகணமே, 'மோத்தி' குரைக்க ஆரம்பித்துவிடும். நேற்று இரவு தண்ணீர் குழாய்க்குப் போவதுபோல் பாசாங்கு செய்து சம்பாவின் அருகே வர நினைத்த ராகியாவின் காலை மோத்தி கடித்தே விட்டது. நான் அந்த நாயையும் நேசித்தேன். சம்பாவைக் காதலிக்கிறேன் அல்லவா?



## 907—வது இரவு

இன்று இரவு நான் மகிழ்ச்சிக் கடலில் நீந்தினேன். எனக்குத் தூக்கமே வரவில்லை.

முதல் முதலாக 'சம்பா' இன்று இரவுதான் என்னிடம் பேசினாள்.

இரவு எனது பாதையோரத்துக்கு வந்ததும் அங்கு யாருமில்லாதிருப்பதைப் பார்த்து ஆச்சரியப்பட்டேன். பிறகுதான் அன்று தீபாவளி தினம் என்பதை உணர்ந்தேன். எனது சகாக்கள் — பாதையோரவாசிகள் தீபாவளித் திருவிழாவைக் கண்டுகளிக்க, அந்தக் கூட்டத்தில் பிக்பாக்கெட் அடிக்க, கோவில்களில் இலவசமாகப் பிரசாதங்கள் வாங்க இன்னபிற காரியங்களுக்காகச் சென்று விட்டனர். ஆனால் 'சம்பா' மட்டும் வழக்கம் போல் அங்கிருந்தாள். தனது அன்பான நாயைத் தடவி, அதன் மேலுள்ள அழுக்கைத் துடைத்துக் கொண்டிருந்தாள். என் பக்கத்தில் அவள் கவனத்தைத் திருப்ப நினைத்தேன். அவளிடம் பேசுவதற்குத் துணிச்சலில்லை. உரத்தகுரலில் இருமினேன். பாயை எடுத்து உதறி எனது வருகையைத் தெரிவித்தேன்.

'ஏய்மோத்தி நீ தீப வேடிக்கைகளைப் பார்க்கச் செல்லவில்லையா?' என்றாள். மோத்தி நாய் தலையை ஆட்டியது. சம்பா கேட்டது நாயை அல்ல. என்னைத்தான் கேட்டாள். எனினும் அவளிடம் பேச எனக்குத் துணிச்சல் ஏற்படவில்லை.

"கூட்டத்தைக் கண்டு பயமா? தெருக்களில் ஏகப்பட்ட கூட்டம். கூட்டத்துக்குள் உன்னால் போக முடியாது. இல்லையா?" என மறுபடியும் சம்பா கேட்டாள்.

இப்போது நான் பேசினேன். "நீ சொன்னது சரிதான் சம்பா. எனக்குக் கூட்டம் என்றால் பிடிக்காது."

நான் பேச வேண்டுமென்றுதான் சம்பா விரும்பினாள். எனினும் நான் பேச ஆரம்பித்ததும் அவள் திகைத்தாள்.

பிறகு எழுந்து நின்று மோத்தியையும், என்னையும் பார்த்து "வாருங்கள் போகலாம், ஒளி விளக்குகளைக் கண்டு களிக்கலாம். ஆனால் கூட்டத்தோடு சேரக் கூடாது. ஒதுங்கி நின்று பார்க்கலாம்" என்றாள்.

சம்பா, நான், மோத்தி மூவரும் ஊர்வலம் கிளம்பினோம். சம்பாவின் கண்கள் லட்சோப லட்சம் ஒளி விளக்குகள் தரும் ஒளியைப் போன்று பிரகாசித்தன. அவளது கண்களையே பார்த்துக் கொண்டு சென்றேன். எனினும் நாங்களிருவரும் பேசிக் கொள்ளவில்லை. இருப்பிடத்திற்குத் திரும்பி வரும் போது சம்பா ஒருகணம், கடையின் முன்னால் நின்றாள். கடையிலே பொருத்தியிருந்த கண்ணாடியில் சம்பாவின் முகத்தைப் பார்த்தேன். அந்தக் கடையில் கண்டோர் கண்ணைப் பறிக்கும் வகையில் பட்டாடைகளைப் பரப்பி வைத்திருந்தனர். கண்ணாடியில் சம்பாவின் கண்களில் அவளிடம் காணப்பட்ட ஆதங்கத்தைக் கண்டேன். அந்தப் பட்டாடைகளும், அந்த ஆடைகள் பிரதிநிதித்துவப்படுத்தும்

வாழ்க்கையையும் அவள் விரும்புகிருள் என்பதை என்ஞல் புரிந்து கொள்ள முடிந்தது. சௌகரியமும் உத்திரவாதமும் உள்ள வாழ்க்கையை அவள் விரும்புகிருள் என்பது நிதரிசனமாகத் தெரிந்தது.

'சம்பா! சம்பா! நீ ஓர் அழகு தேவதை. உலகத்தின் அழகெல்லாம் உனக்குச் சொந்தமாக்கப்பட வேண்டும். பட்டாடைகள், வைர நகைகள் எல்லாம் உனக்கு வாங்கித் தர விரும்புகிறேன். உனக்கென்று ஒரு வீடு — குடும்பம் — குழந்தைகள் எல்லாம் வேண்டும். நீ மட்டும் என்னிடம் பேச மாட்டாயா?" என்று உரக்கக் கேட்டு விடுவோமா என நினைத்தேன்.

அவளோ என்னிடம் பேசவில்லை. "வா மோத்தி, வீட்டிற்குப் போகலாம்" என்ருள்.

வீடு! — பிளாட்பாரத்தைத்தான் அங்கு கிடக்கும் கிழிந்த பாய்களைத்தான் அவள் வீடு எனக் குறிப்பிடுகிருள். உண்மையான ஒரு வீட்டை நான்தான் அவளுக்குக் கொடுக்க வேண்டும்.

இப்போது தெரு விளக்கினடியில் நான் இதை எழுதிக் கொண்டிருக்கும் பொழுது சம்பா பிளாட்பாரத்தின் மூலையில் அமைதியாகத் தூங்கிக் கொண்டிருக்கிருள். அவளது மெய்க்காப்பாளன் மோத்தி கண் விழித்து அவளைக் காத்துக் கொண்டிருக்கிறது. தூக்கத்தில் அவள் தனிச்சோபையுடன் விளங்குகிருள். அவளது அதரங்கள் இலேசாகத் திறந்து புன்சிரிப்பை வீசுகின்றன. அவள் கனவு காண்கிருள். இன்பக் கனவு காண்கிருள். அவளது ஆனந்தக் கனவில் ஒரு வேளை நான் தோன்றியிருப்பேஞ!

## 943—வது இரவு

பாதையோர வாசிகளாகிய நாங்கள் அரசியல் விஷயங்களில் அக்கறை செலுத்துவதில்லை. திட்டங்கள், ஆக்க வேலைகள், வரி, இது போன்றவை எங்களுக்குச் சம்பந்தமில்லாதவையாகும். செய்தித் தாள்கள் எல்லாம் எங்களுக்குப் படுக்கைகளாகத் தான் பயன்படும். சில சமயங்களில் அவை போர்த்திக் கொள்வதற்கும் பயன்படும். அவ்வளவுதான்.

ஆஞல் இன்று காலையில் நான் கண் விழித்ததும் நான் படுத்திருந்த பேப்பரைப் பார்த்தேன். அதில் இருந்த ஒரு செய்தியைப் பார்த்து ஆச்சரியமடைந்தேன். செய்தியின் தலைப்பில் 'வீடில்லாத மக்களுக்கு வீடு' எனக் கொட்டை எழுத்தில் பிரசுரமாகியிருந்தது. செய்தியை முழுவதும் படித்தேன். 'குறைந்த வருமானமுள்ள, வீடில்லாத மக்களுக்கு அரசாங்கம் ஆயிரக்கணக்கான சிறிய வீடுகளைக் கட்டிக் கொடுக்கத் திட்டம் தீட்டியுள்ளது' எனப் பிரசுரமாகியிருந்தது. செய்தியை மட்டும் கிழித்தெடுத்து என் சட்டைப் பைக்குள் மடித்து வைத்தேன்.

நான் செய்தியைக் கண்டு மகிழ்ச்சியடைந்தேன். அன்று முழுவதும் ஆனந்தமாகக் கழித்தேன். வேலைக்குப் போகும் போது வழக்கத்திற்கு மாருக மகிழ்ச்சியுடன் சென்



"நம்ப தொகுதி எம். எல். ஏ. மந்திரி ஆயிட்டாருங்க!"

"அப்பாடா...! இனிமேலாவது பத்திரிகை, நியூஸ் ரீல்... இப்படி எதுலயாவது அவர் திருமுகத்தைப் பார்க்கலாம்."

— சி. என். சுப்ரமணியன்

றேன். ஆபீசில் சந்தோஷத்தில் விசில் அடித்ததற்காக என் முதலாளி கூடக் கடிந்து கொண்டார்.

மாலையில் சாப்பாட்டைக் கூட முடிக்காமல் இருப்பிடத்திற்கு விரைந்தேன். நான் அதிர்ஷ்டக்காரன். வேறு யாருமில்லை. சம்பா மட்டும் தனது நாய் மோத்தியுடன் செல்லமாகப் பேசிக் கொண்டிருந்தாள்.

"சம்பா, இதோ பார்." துணிச்சலுடன் பேசினேன். "ஒரு நல்ல செய்தி". மடித்து வைத்திருந்த பேப்பரை எடுத்து அவளிடம் கொடுத்தேன்.

தலையை அசைத்த சம்பா, "என்ஞல் படிக்க முடியாது. என்னவென்று சொல்லுங்கள்" என்ருள்.

"நமது அரசாங்கம், பாதையோர வாசிகளுக்கு வீடுகள் கட்டித்தரப் போகிறதாம். ஆச்சரியமாயில்லை சம்பா? இனி நமக்குச் சொந்தமான வீடு கிடைக்கும். இனி நாம் பிளாட்பாரத்தில் தூங்க வேண்டியதில்லை. இனி நானும் நீயும்... புரிகிறதா சம்பா."

புரிந்து கொண்டதை அறிவிக்கும் முறையில் சம்பா தலையை அசைத்தாள். கொஞ்சம் வருத்தம் தோய்ந்த கம்மிய குரலில் "எப்போது கிடைக்கும்?" எனக் கேட்டாள்.

மறுபடியும் செய்தியைப் படித்தேன். வீடுகளில்லாத லட்சக்கணக்கான மக்களுக்கு வீடு கட்டிக்கொடுக்கதிட்டம்தீட்டப்பட்டுள்ளது. பத்தாண்டு காலத்திற்குள் திட்டம் பூர்த்தியாகும் எனக் கண்டிருந்தது.

காலையில் நான் அடைந்த ஆனந்தமும், நம்பிக்கையும் ஒருகணத்தில் தூள் தூளாகின. எனினும் நான் சோர்வடைந்து விடவில்லை. இந்தப் புதிய வடுகள் எப்போது கிடைக்கும் என்பதைப் பற்றியே சிந்தித்தேன். இப்போது என் சிந்தனை ஒரு வீட்டைப் பற்றியே இருந்தது. திருமணம், குடும்பம், குழந்தைகள் இவற்றிற்குக் குறைந்த பட்சம் ஒரு வீடில்லாவிட்டால் எவ்வாறு முடியும்!

## 976—வது இரவு

இன்று இரவு நான் மகிழ்ச்சிக் கடலில் நீந்தினேன். எனது மகிழ்ச்சியை வருணிக்க

# ஆனால் உங்கள் ஈறுகளின் ஆரோக்கியத்தை பெரிதும் பாதிக்கும்.

உங்கள் ஈறுகள் ஆரோக்கியமாக இல்லாவிட்டால், நீங்கள் கெட்ட சுவாசத்தால் பாதிக்கப்படுவீர்கள். பலகீனமான ஈறுகள், பற்களிலிருந்து விலகிவிடும்; துர்நாற்றத்தை உண்டாக்கும் பாக்டீரியாக்களைப் பெருக்கும். அதன் பின்பு, உறுதியான மணமுள்ள வேறு எந்த டூத்பேஸ்ட்டும் கூட உங்களுக்கு உதவமுடியாது.

ஆகவே உங்களுக்குத் தேவை—உங்கள் வாய்க்கு புத்துணர்ச்சி அளிக்கும் போதே உங்கள் ஈறுகளைப் பராமரிக்கும் ஒரு டூத்பேஸ்ட்!

போர்ஹென்ஸ்—ஒரு பல் டாக்டரால் விசேஷமாக உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட். போர்ஹென்ஸில் உள்ள ஒரு விசேஷ அஸ்ட்ரிஞ்ஜெண்ட், ஈறுகளை இறுக்கி, அவற்றை உறுதியோடும் ஆரோக்கியத்தோடும் வைத்துக்கொள்கிறது. பாக்டீரியா பெருகுவதைத் தடுத்து உங்கள் மூச்சுக்கு தூய்மையும் புத்துணர்ச்சியும் தருகிறது.

அதுவே புகழ்பெற்ற போர்ஹென்ஸ் பராமரிப்பு. உபயோகித்து பாரீர்! வேறுபாட்டை அறிவீர்.

போர்ஹென்ஸ்—
உங்கள் ஈறுகளுக்கான டூத்பேஸ்ட்.

புதிய மேம்படுத்தப்பட்ட பேக்கிலே!






**போர்ஹென்ஸ்**
பராமரிப்பு
32 என்றும் பத்திரம்

GM-37/87. Tm

---

திருமணங்கள் சொர்க்கத்தில் நிச்சயிக்கப்படுகின்றன.

புவியில் அதன் முடிவுகள் **சுமங்கலி**யில் அறிவிக்கப்படுகின்றன.



பல்வேறு ஜாதியினரின் படித்த வேலைக்குச் செல்லும் மணப்பெண்கள் நல்ல நிலையிலுள்ள பட்டதாரி மணமகன்கள் வெளி நாட்டில் வேலை செய்வோர் ஆகியோரது விபரங்கள் / ஜாதகங்கள் எங்களது நவீன கம்ப்யூட்டரின் மெமரியில் உள்ளன. உங்களது விருப்பத்திற்கு ஏற்ப அல்லது ஜாதகப் பொருத்தப்படி உங்கள் துணைவரை / துணைவியை கண்டு பிடிக்க உங்கள் விபரங்களை / ஜாதகங்களை பதிவு செய்து கொள்ளுங்கள்.

விபரங்களுக்கு நேரில் அணுகவும் அல்லது (ரூ. 1.00 தபால் தலையுடன்) தொடர்பு கொள்ளவும்.

**dhirgha Sumangali bhava**

**COMPUTERISED MARRIAGE BUREAU FOR ALL CASTES**

A to Z

46, SIDCO Ind Estate Pollachi Road Coimbatore 641 021 Phone (0422) 86257

Bus Route : 12A, 12D, 33A, 33B, 47A, 50, 71, 73, 84, 84A, 106A, 106B

enquiries from computer owners, data centres are welcome for franchise representation in their city

வார்த்தைகளே இல்லை. சம்பாகூட இன்று மகிழ்ச்சியுடனேயே இருக்கிருள். நான் இதை எழுதும் போது சம்பா சமைத்துக் கொண்டிருக்கிருள். அவளது வாய் பாடிக் கொண்டிருக்கிறது. கிராமப் பெண்கள் கல்யாண காலங்களில் பாடும் பாட்டைத் தான் சம்பா பாடிக் கொண்டிருக்கிருள். பாதையோரத்திலுள்ள எல்லோரும் சம்பா விடம் காணப்பட்ட மாற்றத்தைக் கண்டு ஆச்சரியப்படுகிருர்கள். நான் ஆச்சரியப் படவில்லை. அவள் ஆனந்தக் கூத்தாடுவதன் காரணத்தை நானறிவேன்.

நானும் மகிழ்ச்சியுடன்தானிருக்கிறேன். நாங்கள் குடியிருக்கப் போகும் வீட்டைக் காட்டுவதற்காக இன்று அவளை அழைத்துச் சென்றிருந்தேன். அது எவ்வாறிருக்கும் என்பதை நாங்கள் முன்னரே அறிவோம்.

சில நாட்களாக எங்களது பிளாட்பாரத் திற்குக் கொஞ்ச தூரத்தில் ஓரிடத்தில் பிரகாசமான விளக்குகள் எரிந்து கொண் டிருந்தன. அங்கே ஒலிபெருக்கிகள் ஓயாமல் பாடிக் கொண்டிருந்தன. ஒரே இரைச்சல். எங்களால் தூங்க முடியவில்லை. அது ஒரு கண்காட்சி. காட்சியின் முன்வாசலில் 'ஐந் தாண்டுத் திட்டம்' என எழுதப்பட்டிருந்தது.

பாதையோர வாசிகளாகிய நாங்கள் இதைப்பற்றியெல்லாம் அக்கறை கொள் வதில்லை என்று கூறியிருக்கிறேன். எனினும் கூட, 'ஐந்தாண்டுத் திட்டம்' என்ற வார்த் தைகள் என் இதயத்தில் இடம் பெற்று விட்டன. ஏனென்ருல் 'வீடில்லாதவர்க ளுக்கு வீடு' என்ற செய்தி வந்த பத்திரிகைத் தாளில் இரண்டாவது 'ஐந்தாண்டுத் திட்டத் தின் ஒரு பகுதி எனப் பிரசுரமாகியிருந்தது.

கூட்டத்தோடு கூட்டமாகக் கண்காட்சிக் குள்நுழைந்தேன். அங்கே எத்தனையோ காட்சி கள், புள்ளி விவரங்கள் வரை படங்கள். எனக்குப் புரியாதவை. ஒன்றே ஒன்று மட்டும் என்னைக் காந்தம் போல் கவர்ந்தது. அதன் முன்னுல் வைத்த கண் வாங்காமல் நின்றேன். சில நிமிடங்கள் கழித்து இருப்பிடத்திற்கு ஓடி னேன். என்னுடன் வாசம் செய்பவர்களின் அவதூறுப் பார்வையையும் பொருட் படுத்தாமல் தைரியமாகச் சம்பாவின் கையைப் பிடித்தேன். "வா, என்னுடன்" எனக் கண்காட்சிக்கு அழைத்துச் சென் றேன்.

"சம்பா, பார்! இதுதான் நம் வீடு" என இரண்டு அறைகள் கொண்ட ஒரு வீட்டின் மாதிரியைக் காட்டினேன். அதன்முன்னுல் கட்டப்பட்டிருந்த அட்டையில் 'வீடில்லாத மக்களுக்கு இது போன்ற வீடுகள் கட்டித் தரப்படும்' என எழுதப்பட்டிருந்தது.

அது ஒரு மாதிரிப்படம்தான். எனினும் நாங்கள் அதை வைத்தகண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தோம். எங்கள் கன வெல்லாம் நனவாகிவிட்டதாக உணர்ந் தோம். ஓர் அறை, சமையலறை, வராந்தா, முற்றத்தில் ஒரு மரம். மரத்தின் கீழே குழந் தைகள் விளையாடுவது போன்று மூன்று பொம்மைகள்! அதன் அழகை வார்த்தைக



* மறைந்த எழுத்தாளர் கே. ஏ. அப்பாஸ்.

ளால் வர்ணிக்க முடியாது. நாங்கள் ஆச்சரி யத்திலாழ்ந்தோம். சிறிதுநேரம் பேசாமல் நின்றேம். நாங்கள் திரும்பும்போது சம்பாவின் கண்களில் ஆனந்தக்கண்ணீர் மல்கியது.

சம்பா தூங்கிக் கொண்டிருக்கிருள். அழகு ததும்பும், அவளது வதனத்தில் மகிழ்ச்சி துள்ளி விளையாடுகிறது. நம்பிக் கையும் திருப்தியும் அவளது முகத்தில் களிநடம் புரிகின்றன.

## 978—வது இரவு

கண்காட்சியில் அந்தவீட்டைப்பார்த்த திலிருந்து நானும், சம்பாவும் கொண்டி ருந்த மகிழ்ச்சிகரமான வாழ்க்கையில் சிறு கஷ்டம் ஏற்பட்டது.

இன்று 'மோதி' மரணமடைந்துவிட்டது. யாரோ அதற்கு விஷமிட்டுக் கொன்று விட்டார்கள். ராகியாவின்முகத்தில்வெற்றிக் களை தென்பட்டது. அவன்தான் மோதியைக் கொன்றிருக்க வேண்டும் எனச் சந்தேகித் தேன்.

சம்பாசோகத்தின்பிம்பமாய்த்துயரத்தின் செம்பொருளாய் விளங்கிஞள். கண்ணீரும் கம்பலையுமாக, மோதியைக் கைகளில் தாங்கிக் கொண்டு நீண்ட நேரம் என்ன செய்வதென்று தெரியாமலிருந்தாள் சம்பா. திடீரென்று எழுந்தாள். குழந்தையைப் பறி கொடுத்த தந்தையைப் போல் மோதியை எடுத்துக் கொண்டு மயானத்திற்குச் சென் ருள். அவளுடன் நானும் செல்ல நினைத் தேன். ஆனுல் சம்பா அதை விரும்பவில்லை. 'என்னுடைய கவலைகள் என்னேடிருக்கட் டும்' என்று சொல்லுவதைப் போன்று என்னைநோக்கினுள். நானும் அவளைப்புரிந்து கொண்டு அவளைத் தொடர்ந்து செல்லாமல் இருக்குமிடத்திலேயே இருந்துவிட்டேன்.

தனது அன்புக்குரிய மோதியின் ஈமச் சடங்குகளை முடித்துவிட்டு ஒரு மணி நேரத் திற்குப் பின் சம்பா திரும்பினுள். அவளது கண்களில் கண்ணீர் இல்லை. ஆனுல் அவ ளது முகத்தில் சோகம் குடி கொண்டிருந்தது. அவளை ஆசுவாசப்படுத்த நினைத்து "சம்பா, வா ஏதாவது சாப்பிடலாம்" என்றேன்.

சம்பா பதில் சொல்லவில்லை., ஆனுல் அவளது பார்வை 'மோதியைப் பறி

கொடுத்து விட்டுச் சாப்பிடுவதா?' என்று கூறுவது போலிருந்தது. வற்புறுத்தல் பயனளிக்காதெனத் தெரிந்த நான் மேலும் சாப்பாடு பற்றிப் பேசவில்லை.

முரட்டுக் குணம் படைத்த ராகியா திமிருடன், "என்ன சம்பா? இரவில் இனிமேல் உன்னை யார் காவல் காப்பது? மோதிக்குப் பதில் என்னை நீ வைத்துக் கொள்ளலாம்" என்றான். எதையோ கண்டுவிட்டதுபோல் சிரித்தான். ஆனால் அவனுடன் சேர்ந்து யாரும் சிரிக்கவில்லை. சம்பா ஒன்றும் பேசவில்லை. ஒருகணம் அந்த அரக்கனை அருவருப்புடன் பார்த்தாள். அவன் சிரிப்பை மறைப்பதற்காக இருமினான். மறுகணம் சம்பா தனது உடைமைகளை எடுத்துக் கொண்டு பிளாட்பாரத்தின் ஓரத்தில் சென்று படுத்துக் கொண்டாள். படுத்தாள். ஆனால் தூங்கவில்லை; நட்சத்திரங்களைப் பார்த்துக் கொண்டு சிந்தனை செய்து கொண்டிருந்தாள். மோதி இல்லை. எனவே நான் தூங்குவது சரியில்லை எனக் கண்விழித்துக் கொண்டிருந்தேன். நானும் தூங்கிவிட்டால் ராகியா போன்ற துர்க்குணம் படைத்தவர்களிடமிருந்து சம்பாவை யார் காப்பாற்றுவது?

### 989—வது இரவு

காலப் போக்கில் சம்பா மோதியை இழந்த துக்கத்திலிருந்து தன்னைத் தேற்றிக் கொண்டாள். இன்று இரவு நான் வேலை முடிந்து வந்ததும் சிரித்த முகத்துடன் அவள் என்னை வரவேற்றாள்.

நான் அவளுக்கு ஒரு பரிசு கொண்டு வந்திருந்தேன். நாங்கள் கனவு கண்டு கொண்டிருந்த அந்த வீட்டின் படம்தான் அந்தப் பரிசு. எனது அலுவலகத்தில் கிடந்த ஒரு பத்திரிகையிலிருந்து அப்படத்தை வெட்டிக் கொண்டு வந்தேன். படத்தை அவளிடம் கொடுத்தேன். படத்தைப் பார்த்துப் புரிந்து கொண்ட அவள் மிகுந்த ஆர்வத்துடன் அதை வாங்கினாள். 'நான் இதை வைத்துக் கொள்ளட்டுமா?' என்றாள். கட்டாயம். உனக்காகத்தான் அதைக் கொண்டு வந்தேன்' என்றேன் நான். குழந்தையைப் போன்று நன்றியுணர்வுடன் சம்பா என்னைப் பார்த்தாள்.

பல நாட்களுக்குப் பின் சம்பா இன்றிரவு அமைதியாகத் தூங்கினாள். கடைசியாகச் செல்லும் டிராம் வண்டியும் போய்விட்டது. பல்கலைக்கழகக் கட்டடத்துக் கடிகாரம் 'இரண்டு' என அறிவித்தது. எனக்கும் தூக்கம் வந்துவிட்டது.....

### 990—வது இரவு

ஒரே இரவில் ஒரு சில வினாடிகளில் உலகமே அழிந்துவிடும். நமது நம்பிக்கைகள், ஆசைக் கனவுகள் எல்லாமே தகர்ந்து தரை மட்டமாகிவிடும். என்று நான் கனவிலும் கருதியதில்லை...

நேற்று இரவு இரண்டு மணிக்கு மேல்

தான் நான் தூங்கினேன். கனவொன்று கண்டேன். நானும் சம்பாவும் எங்களது புதிய வீட்டில் குடியேறுகிறோம். அடுப்பங்கரையில் நெருப்பு வெளிச்சம் தெரிகிறது. அடுப்பில் அரிசி காய்ந்து கொண்டிருக்கிறது. காம்பவுண்டுக்குள் இருந்த மரத்தில் ஒளி வீசியது. மரத்தின் கீழ் எங்களது செல்வங்கள் இரண்டு பையன்களும், ஒரு பெண்ணும் விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். திடீரென்று புயல் கிளம்பியது. இடியும் மின்னலும் பயங்கரமாகத் தோன்றி எங்கள் சின்னஞ்சிறு வீட்டை அசைத்தன. நான் பயத்தினால் வெலவெலத்துப் போனேன். புகைக்கூண்டின் வழியே மின்னல் ஒளி வீட்டிற்குள் வந்தது. சம்பா சமையலறையில் எங்களுக்குச் சமைத்துக் கொண்டிருந்தாள். நான் எச்சரிப்பதற்கு முன்னால் இடி முழக்கத்துடன் ஒளி எங்கள் வீட்டைத் தாக்கியது. வேகமாக வந்த ஒரு கார் சுவரில் மோதியது போன்றிருந்தது. கனவு கலைந்து விழித்து எழுந்தேன். என்ன செய்வதென்று தெரியாமல் எல்லோரும் திகைத்தோம். உடைந்து நொறுங்கிய ஒரு கார் இன்னும் ஓய்ந்து போகாமல் தனது போக்கிலேயே போய்ச் சம்பாவின் மேல் மோதுகிறது. சம்பாவின் உடம்பிலிருந்து ரத்தம் வழிகிறது. ரத்தம். ரத்தம். பச்சை ரத்தம். சம்பாவின் ரத்தம்!

சம்பா இருந்த இடம் நோக்கி ஓடினேன். அவள் படுத்திருந்தாள். உடம்பெல்லாம் காயங்கள். ஆனால் அவளது முகத்தில் காயமேதும் ஏற்படவில்லை. அமைதி தவழும் அவளது அழகு முகத்தில் இன்னும் அந்தப் புன்முறுவல் தோன்றியது. ஏதோ இன்பக் கனவு காண்கிறாள். அவளது கைகள் எதையோ இறுகப் பிடித்திருந்தன. வேறொன்றும் இல்லை, அந்தப் படம்தான். எங்களது கனவு மாளிகையின் படம்தான்.

காரை ஓட்டி வந்த அதன் சொந்தக்காரருக்கு லேசான காயம்தான். கூடியிருந்த மக்கள் அவரைக் காரிலிருந்து இறக்கிவிட்டனர். கறுப்புக்குழாயும், வெள்ளை நிறச் சட்டையும் அணிந்திருந்த ஓர் இளைஞன். நன்றாகக் குடித்திருந்தான். 'எனது காரின் ஸ்டியரிங் வீல் உடைந்து விட்டது. இவர்கள் ஏன் பிளாட்பாரத்தில் படுத்திருக்க வேண்டும்?' என்று முனகினான். எதற்காகப் படுத்திருக்கிறோம் என்று சொல்ல விரும்பினேன். ஆனால் என்னிடம் பேசுவதற்குத் தெம்பில்லை. பார்ப்பதற்கும் கேட்பதற்கும் மட்டுமே என்னால் முடிந்தது. போலீஸ் வந்தது. அவனிடம் ஊர் பேர் முதலியவற்றை விசாரித்தனர். 'மலபார் ஹில்' என அவன் கூறியதைக் கேட்டேன்.

"உன் வீட்டு நம்பர்?" என்று கேட்டான் போலீஸ்காரன்.

"கட்டடம் முழுவதுமே எங்களதுதான்" என்றான் இளைஞன்.

சம்பா போகாத இடத்திற்குப் போய்விட்டாள். இப்பொழுது பிளாட்பாரத்தில் அவளது ரத்தக் கறை மட்டுமே படிந்திருந்தது.



"என்ன தாத்தா... ரொம்பத்தான் கிண்டல் பண்றீங்களே!"

"பின்னே என்னடா... நாங்கல்லாம் அந்தக் காலத்துல தண்ணியில கப்பல் விடுவோம். உங்கக் காலத்துல கப்பல்ல தண்ணி வருதே!"

— ரம்யா

நான் செய்திப் பத்திரிகையொன்றின் மீது படுத்திருந்தேன். அதில் பம்பாய் அரசு பாதையோர வாசிகளுக்காக அழகான பல கட்டடங்களைக் கட்டியுள்ளது எனக் கண்டிருந்தது.

## கடைசி இரவு (1000—வது இரவு)

எனது நாட்குறிப்பில் இதுதான் கடைசியாக எழுதப்படுவதாக இருக்கலாம். அதிகாலையில் நான்கு மணிக்கு இதை எழுதுகிறேன். சம்பாவின் நினைவினுல் பத்து தினங்கள் நான் தூங்கவில்லை — தூங்க முடியவில்லை. அவளது நினைவு என்னை வாட்டி வதைத்துவிட்டது. பத்து தினங்களுக்குப் பிறகு இன்றுதான் தூங்கினேன். உரத்த குரல் கேட்டுக் கண் விழித்தேன்.

சில போலீஸ்காரர்களும் சமூக ஊழியர்களும் வந்திருந்தனர்.

பாதையோர வாசிகளின் ஜனத்தொகையைக் கணக்கெடுப்பதாக அவர்கள் கூறினர். பாதையோரத்தில் தங்கி இருப்பவர்களின் எண்ணிக்கை இருபதாயிரம் என்று அவர்களில் ஒருவர் என்னிடம் கூறினுர். அவரிடம் ஒரு நபரைக் குறைத்து 19,999 பேர் எனக் குறித்துக் கொள்ளுமாறு கூறினேன். சம்பா போய் விட்டாள். எனவே எண்ணிக்கையில் ஒன்று குறையுமல்லவா?

முனிசிபல் சத்திரத்தில் நாள் ஒன்றுக்கு ஐந்தணு வாடகைதானே? நீங்கள் ஏன் பாதையோரத்தில் படுக்கிறீர்கள் என ஒருவர் கேட்டார்.

அந்தச் சத்திரம் எவ்வளவு சுத்தமாகவும், சௌகரியமாகவுமுள்ளது என அவர் விவரித்தார். எனக்கு அதுபற்றி ஏற்கெனவே தெரியும். சத்திரத்திற்கு நான் சென்றிருக்கிறேன். அங்குள்ள அறைகளில் நன்ருகக் காற்றுவீசும். நல்ல வெளிச்சமுள்ள அறைகள். பாதையோரத்தோடு ஒப்பிடும்போது சத்திரம் அரண்மனைதான். அங்குள்ள குளிக்கும் அறைகள் அருமையானவை. சாப்பிடும் ஹால் கண்ணைக் கவரும் வண்ணப்படங்கள் நிறைந்தது. ஓர் அரங்கமும் உள்ளது. வீடில்லாதவர்கள் அவ்வரங்கத்தில் ஆடிப்பாடி மகிழ்வார்கள்.

நீ ஏன் அங்கு படுக்கக் கூடாது? என மீண்டும் என்னிடம் கேட்டார்கள். "ஒரு நாளைக்கு ஐந்தணு உன்னுல் செலவு செய்ய முடியாது?"

"நாள் ஒன்றுக்கு ஒரு ரூபாய்க்கும் அதிகமாக நான் சம்பாதிக்கிறேன்" என்று சொன்னேன்.

"அவ்வாருனல் ஏன் சத்திரத்தில் படுக்கக் கூடாது? ஏன்? ஏன்? ஏன்?" அவர்கள் என்னிடம் கேள்விக்கணைகளைத் தொடுத்தனர். நான் பதில் சொல்ல நினைத்தேன். ஆனுல் முடியவில்லை. என்னை அவர்கள் புரிந்து கொள்வார்களோ இல்லையோ என ஐயுற்றேன்.

"சத்திரம் அழகான இடம்தான். ஐந்தணு வாடகை என்பது மிகவும் குறைவுதான். ஆனுல் சத்திரத்தின் அறையில் மற்றவர்களுடன் நான் படுக்க விரும்பவில்லை. நான் ஒரு குடும்பஸ்தன். எனக்கென்று ஒரு தனியறையும், ஒரு சமையலறையும் என் மூன்று குழந்தைகளும் விளையாடுவதற்கேற்ற ஒரு தோட்டமும் கூடிய ஒரு வீடு வேண்டும். நானும் சம்பாவும் அதில் குடியேற வேண்டும்" என்று அவர்களிடம் கூற விரும்பினேன். ஆனுல் பேசவில்லை.

எனக்கு மூளைக் கோளாறு என நினைத்து அவர்கள் போய் விட்டனர்.

தெரு விளக்கின் ஒளியில் அமர்ந்து நாட்குறிப்பை எழுதுகிறேன். சம்பாவின் ரத்தக் கறை படிந்த இடமும் அவளது இன்பக் கனவுகளும் எனக்கு அருகாமையிலேயே இருந்தன.

சிறிது நேரத்தில் மழை பெய்யும். அந்த ரத்தக் கறையும் மழைத் தண்ணீரோடு கலந்துவிடும், பின்னர் சம்பாவின் நினைவுக்கு — என் நினைவுக்கு என்ன மிஞ்சும்?

கற்கள் நிறைந்த பாதையோரப் படுக்கையின் ஆயிரம் இரவுகளின் வரலாறு இத்துடன் முற்றுப் பெற்றுவிட்டது. ஆம்; முற்றுப் பெற்றுவிட்டது

**பின் குறிப்பு:** அரசாங்கத்தின் அருமையான பல திட்டங்களைப் போடுகிறவர்கள் யார் என்பதை நானறியேன். திட்ட கர்த்தாக்களில் ஒருவர் இந்தக் குறிப்புக்களைப் பார்த்தால் அவரைப் பார்த்து, "ஐயா திட்டகர்த்தாக்களே! எங்களை, என்னையும் என் அருமைச் சம்பாவையும், எங்களுக்கு இனிப் பிறக்கவே பிறக்காத மூன்று குழந்தைகளையும் உண்மையிலேயே நீங்கள் காப்பாற்ற விரும்பினுல், திட்டத்திலுள்ள அந்த வீடுகளைக் கட்டி முடியுங்கள்" என்று கேட்பேன்.

தமிழில்: **நெல்லை எஸ். வேலாயுதம்**

# ஆபத்தான வளைவுகள்

## 11

ராயபுரம் கிடங்கில், பூட்டிய ஷட்டர்களுக்குப் பின்னால், ரகசியக் கூட்டம் நடந்து கொண்டிருந்தது. பெரும்பாலும் நள்ளிரவில்தான் இந்தச் சந்திப்புகள் நடைபெறும். ஆனால் இன்று மட்டும் மாலை ஏழு மணிக்கே தொடங்கி விட்டிருந்தது.

நடுநாயகமாக இருந்த நாற்காலியில் கறுப்பு இளைஞன் உட்கார்ந்திருந்தான். அவனைச் சுற்றிலும் அடியாட்கள் மூவர் பிறை வட்டமாகப் பாதுகாப்பு வளையம் அமைத்திருந்தார்கள்.

எதிரிலிருந்த நாற்காலியில் அந்தப் பெரிய மனிதர். அவருக்கு இந்தச் சூழல் முற்றிலும் புதிது என்பதாலோ என்னவோ அடிக்கடி தம்மைச் சுற்றி நோட்டம் விட்டபடி இருந்தார்.

"உங்களை நான் அழைத்து வரச் சொன்னதன் காரணம் தெரியுமா?" என்று அவரைக் கேட்டான் இளைஞன். 'தெரியாது' என்று தலையசைப்பிலேயே பதிலளித்தார்.

"சரக்கு கொண்டு வரச் சொன்னேனே?"

"இதிலே இருக்கிறது!" — மடியிலிருந்த ப்ரீஃப் கேஸைத் தட்டிக் காட்டினார்.

"இது இருபது சதம்தானே? மீதி?"

"என் கோடவுனில் பத்திரமாக இருக்கிறது!"

"வெரிகுட்! இப்போது இந்தப் பெட்டியைக் கொடுத்துவிட்டுப் போங்கள். நாளைக் காலை எட்டு மணிக்கு இதோ இங்கே நிற்கிற மூன்று பேரும் உங்கள் கோடவுனுக்கு வருவார்கள் ஒரு டெம்போவில்.... அதிலே மீதி சரக்குகளைப் போட்டு அனுப்பி விடுங்கள்...."

பெரிய மனிதர் முகத்தில் கலவரம் பரவியது. "அப்படியானால்.... நான்... நான்... இனிமேல்...."

"நீங்கள் எனக்குத் தேவையில்லை... இன்றுடன் நம் உறவு, எழுதப்படாத ஒப்பந்தம் எல்லாமே முடிவுக்கு வருகின்றன.... ஒரே ஒரு எச்சரிக்கையுடன் இந்த உறவை முறிக்க விரும்புகிறேன். இந்தவிவகாரம்பற்றி எவரிடமாவது நீங்கள் வாய் திறந்தீர்களானால் சர்வநாசத்தைத்தான் சந்திப்பீர்கள் என்பது நினைவிருக்கட்டும்... என்னைக் காட்டிக் கொடுக்க நீங்கள் முயற்சி செய்யக் கூடும்..."

"ஐயா! நான் அப்படியெல்லாம் செய்யவே மாட்டேன்...."

"பொறுங்கள். நான் இன்னும் சொல்லி முடிக்கவில்லை.... நீங்கள் முயற்சி செய்யக் கூடும் என்று நான் நினைக்கவே இல்லை — நேற்று வரையில்.... நேற்றுத்தான் எனக்கு ஓர் உண்மை தெரிய வந்தது...."

பெரிய மனிதர் மௌனமாக இருந்தார்.

"அதிலிருந்து எனக்கு உங்கள் மீதிருந்த நம்பிக்கைபோய்விட்டது.... நீங்கள் எனக்குத் துரோகம் செய்யத் துணிவீர்கள் என்று தோன்றிவிட்டது. அதனால்தான் உங்களைக் கழற்றி விட — மன்னிக்கவும் — உங்களிடமிருந்து கழன்று கொள்ள நான் முடிவு செய்தேன்... போய் வாருங்கள்!"

பெரிய மனிதருக்கு ஒன்றுமே புரியவில்லை. எல்லாமே புதிர்ப் பேச்சாக இருந்தது. இந்த மனிதர் என்ன சொல்கிறார்? நான் துரோகம் செய்வேன் என்ற பயம் நேற்று முதல் வந்து விட்டதாமே! அப்படி நம் மீது சந்தேகம் கொள்ளும்படியாக நேற்று என்ன நடந்திருக்கும்? கேட்டு விடுவதுதான் நல்லது என்று தீர்மானித்தார்.

"ஐயா....! மன்னிச்சுக்குங்க... நீங்க சொல்றது எதுவும் எனக்கு விளங்கல்லீங்க. 'இந்த மரமண்டைக்கும் புரியும்படியாக எடுத்துச் சொல்லுங்க. இத்தனை நாளும் இல்லாதபடிக்கு நேற்று எப்படிங்க திடீரென்று உங்களுக்கு என் மேலே சந்தேகம் விழுந்துச்சு?"

கறுப்பு இளைஞன் சிரித்தான் கேலியாக.

"நன்றாகவே நடிக்கிறீர்கள் எதுவும் தெரியாத மாதிரி! உண்மையைச் சொல்லுங்கள்.... அருணைத் தெரியுமல்லவா உங்களுக்கு?"

"யாருங்க அது?"

"சபாஷ்! என்னையே கேட்கிறீர்களா? சொல்றேன். நம்ம பரம விரோதி சத்யா இருக்கிறானே—அவனுக்குமிகவும்வேண்டிய நண்பன் இந்த அருண்.... அது மட்டுமல்ல; உங்கள் வீட்டுப் பெண்ணுக்கு மிகவும் நெருக்கமாக இருப்பவனும்கூட....! என் கண்ணாலேயே அந்த நெருக்கத்தைப் பார்த்த பிறகுதான் நான் இப்படியொரு முடிவுக்கு வந்தேன்...."

பெரிய மனிதர் குழப்பத்தின் உச்சியில் இருந்தார். அவரைப் பொறுத்த வரையில் அருண் என்ற பெயரைத் தம் வீட்டுப் பெண்ணுடன் சம்பந்தப்படுத்திப் பார்த்தது கூடக் கிடையாது... சத்யா மட்டுமே ஒற்றைத் தலைவலியாக விளங்கி வந்தான். இதென்ன புதுசாக இன்னொரு தலைவலி கிளம்புகிறது? சத்யாவையே தீர்த்தபாடில்லை.... அடுத்து இவனா? ஆனால் அதற்கெல்லாம் தேவையிராது போலிருக்கிறதே! அவரே ஒதுக்கப் பட்டுவிட்டாரே! இனி எவன் வாழ்ந்தால் என்ன? எவனை, யார், எப்படித் தீர்த்துக்

முகுந்தன்

கட்டினால் என்ன?

இந்த எண்ணத்துடன் கூடவே, 'நாளை முதல் நமது வருமானம் பறி போய் விடும்' என்ற எண்ணமும் தோன்றவே, தமக்கு இத்தனை நாளும் போன் மூலமே படியளந்து வந்த புண்ணியவானை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்தார். ஆனால் பதிலுக்கு அவரை நான்கு ஜோடிக் கண்கள் விரோத பாவத்துடன் வெறிக்கவே, மேலே ஒரு வார்த்தையும் பேசாமல் வெளியேறினார்.

அந்தக் காம்பவுண்டை விட்டு வெளியேறும்போதே ஒரு தீர்மானமும் செய்து கொண்டார்: 'அந்த ஃபார்முலாவை எப்படியாவது உடனடியாகக் கைப்பற்றி, எய்ட்ஸ் நோய்க்கான மருந்தைத் தயாரிக்க ஆரம்பித்து விட வேண்டும்.'

**அ**ம்பிகாவின் பங்களாவுக்குள் அடியெடுத்து வைக்கும்போதே, பாணி கொஞ்சம் படபடப்பாகத்தான் இருந்தார்.

''குட் ஈவினிங் அங்க்கிள்! நீங்கள் எப்போதும் போன் செய்து விட்டுத்தானே வருவீர்கள்? இன்றைக்கு என்ன திடீர் விஸிட்? எனி ப்ராப்ளம்?'' என்ற மருமகளின் கேள்வியையும்;

''என்ன அண்ணா! ரொம்ப இளைச்சுப் போயிட்டே போலிருக்கே இந்த ஒரு மாசத்திலே! வேளாவேளைக்குச் சரியாகச் சாப்பிடுவதில்லையோ?'' என்ற தமது சகோதரியின் விசாரிப்பையும் காதில் வாங்கிக் கொள்ளவே இல்லை பாணி.

அம்பிகாவைநோக்கி,''கொண்டுவாம்மா அதை!'' என்றார் மொட்டையாக.

''எதைக் கேட்கிறீர்கள் அங்க்கிள்? நாய்க்குட்டியா, வீடியோ கேஸட்டா, ஆவக்காய் ஊறுகாய் புட்டியா — எது வேண்டும் உங்களுக்கு!''

''அதாம்மா.... கொஞ்ச நாளைக்கு முன்னாலே உன்கிட்டே ஒரு பேப்பரைக் கொடுத்து, பத்திரமாக வைத்திருக்கச் சொன்னேனே — அதைத்தான் கேட்கிறேன்... அது இப்போது எனக்கு அவசரமாகத் தேவைப்படுகிறது... கெட் இட்! க்விக்!''

அம்பிகாவின் அம்மாவுக்குத்தான் எதுவுமே புரியவில்லையே தவிர, அம்பிகா சட்டென்று புரிந்து கொண்டு விட்டாள். அவர் அந்த ஃபார்முலா பேப்பரைக் கேட்கிறார்!

கண்ணில் மிரட்சியைக் காட்டாமல், கைகளைப் பிசையாமல், குரலில் பயத்தைச் சேர்க்காமல், சர்வ சாதாரணமாக, ''ஓ! அந்த நோட்புக் பேப்பரா? அது என்கிட்டே இல்லையே மாமா?'' என்றாள்.

பாணி உதைபட்ட பந்தாகத் துள்ளினார். முன் மண்டை, நெற்றி, கண்கள் எல்லாம் ஏகத்துக்குச் சிவக்க, ''வாட்! இல்லையா! தொலைச்சுத் தலைமுழுகிட்டியா!'' என்று உச்சக் குரலில் வீறிட்டார்.

''தொலைக்கவில்லை.... பத்திரமாக ஒருத்தர் கிட்டக் கொடுத்து வச்சிருக்கேன்.''

''என்னது! வேறே ஒருத்தர்கிட்டக் கொடுத்துட்டியா! யூ, ஸில்லி கூஸ்! அது ரொம்ப கான்ஃபிடென்ஷியல் சமாசாரம் என்று சொன்னேனா இல்லையா? அதைப் போய்க் கொடுக்கலாமோ....? சரி, யார் கிட்டே கொடுத்தே — அதையாவது சீக்கிரம் சொல்லித் தொலை!''

அம்பிகா யோசிப்பது போலப் பாவனை செய்தாள். சுபா, ரேவதி, ரம்யா, நிஷா, உஷா, ஏஞ்செல், சாயிரா — என்று தன்



சிநேகிதிகளின் பெயர்களை ஒவ்வொன்றாகச் சொல்லி, மறுப்பாகத் தலையையும் ஆட்டி, கடைசியில் உதட்டைப் பிதுக்கி, கையை விரித்து, ''ஸாரி அங்கிள்! மறந்து போச்சு!'' என்று முத்தாய்ப்பு வைத்தாள்.

அதுவரையில் நின்று கொண்டே இருந்த பாணி, பொத்தென்று ஒரு சோபாவில் உட்கார்ந்தார். ''உன்கிட்டே கொடுத்தேன் பாரு, என் புத்தியைச் சொல்லணும்! என் மண்டைக்குள்ளே பண்ருட்டிக் களிமண் தான் இருக்கு....! மறந்து போச்சாமே, மறந்து....! போச்சு! போச்சு! எல்லாமே போச்சு! என் எதிர்காலமே போச்சு!'' என்று ஆத்திரத்துடன் கத்தியபடியே இரு கைகளாலும் தமது நூற்றுக்கு நூறு சுத்தமான வழுக்கை மண்டையில் 'மடேர்! மடேர்!' என்று போட்டுக் கொண்டார்.

அவரது சகோதரி மட்டும் பாய்ந்து வந்து கையைப் பிடித்துத் தடுத்திருக்காவிடில், பாணி உண்மையிலேயே தமது மண்டையைப் பிளந்து உள்ளே என்ன இருக்கிறது என்று சந்தேகத்திற்கிடமின்றிப் பார்த்து விட்டிருப்பார்.

''என்னண்ணு இது! ஏன் இப்படி ஆர்ப்பாட்டம் பண்ணுகிறீர்கள்? என்ன நடந்து விட்டது இப்போது!'' என்று கடிந்து கொண்டவள் அம்பிகாவையும் விடவில்லை. ''என்னடி இதெல்லாம்? மாமா எதையாவது கொடுத்தால் அதை ஒழுங்காக வைத்துக் கொள்ள வேண்டியதுதானே உன் பொறுப்பு? தொலைத்து விட்டு நிற்கிறுயே! என்ன பெண் நீ! துப்புக் கெட்ட ஜென்மம்!'' என்று சாடவும் செய்தாள்.

''லிஸன் மம்மி... நான் தொலைக்கல்லே. அதை ஒருத்தர்கிட்டக் கொடுத்திட்டேன்... யாரென்று ஞாபகம் வரவில்லை.... தட்ஸ் ஆல்....''

''பரவாயில்லை.... உன் ஃப்ரெண்ட்ஸ் லிஸ்டைக் கொடு! நானே ஒவ்வொருத்தி வீட்டுக்கும் போன் பண்ணிக் கேட்கிறேன்!''

''இல்லேம்மா.... அது.... வந்து....'' — விரல்களைப் பின்ன ஆரம்பித்தாள் அம்பிகா.

அம்மா வாழ்க்கையில் அடிபட்டவள், அனுபவப்பட்டவளல்லவா? மகளைத் தனியே ஓர் அறைக்கு அழைத்துச் சென்று, விஷயத்தை ஒட்டக் கறந்து கொண்டாள். பிறகு ஹாலுக்குத் திரும்பி வந்தாள்.

''அண்ணு! நீ கவலைப்படாதே! எனக்குத் தெரிந்து விட்டது — இந்த அசடு என்ன செய்திருக்கிறதென்று! நீ கொடுத்த பேப்பரை வாங்கிக் கொடுக்க வேண்டியது என் பொறுப்பு!'' என்று அறிவித்தாள்.

பாணியின் முகத்தில் பழைய களையில் நாற்பது சதம் திரும்பி வந்தது. ''நீ எப்படி....'' என்று ஏதோ கேட்கத் தொடங்கியவரை ஒரு பார்வையாலேயே அடக்கினுள்.

''இனிமேல் அதைப் பற்றி நீ பேசக்கூடாது. எல்லாம் நான் பார்த்துக் கொள்கிறேன்... கவலையை விடு! ராத்திரி டிபனுக்கு இட்லி பண்ணியிருக்கிறேன். சாப்பிட்டு விட்டுப் போ!'' என்ருள்.

பாணியின் 'மூட்' அன்று அவுட் ஆகி விட்டிருந்ததால் அவர் பதினெட்டு இட்லிகள் மட்டுமே சாப்பிட்டார். (சாம்பாருடன் நாலு; சட்டினியுடன் நாலு; மிளகாய்ப் பொடியுடன் ஆறு; பைனப்பிள் ஜாமுடன் நாலு.)

அவர் இட்லிகளை மளமளவென்று தீர்த்துக் கட்டுவதையே பார்த்தவாறு நின்றிருந்த அம்பிகாவுக்கு மனசுக்குள் ஒரே ஆச்சர்யம்! நம்முடைய காதலர் இருக்கிற இடம் எது என்று நமக்குக் கூடத் தெரியாது. ஆனுல் இந்த மம்மியோ 'அவரிடம்தான் ஃபார்முலா இருக்கிறது' என்று நான் சொன்னவுடன், 'சரி... அவன் வீட்டுக்கு நானே நாளைக்குப் போய்ப் பார்க்கிறேன்' என்று சொன்னுளே— அது எப்படி?

**அ**ருண் தனது இடது கையைத் திருப்பி, கடிகாரத்தில் மணி பார்த்தான். மணி 9.15. அந்தத் தர்மராஜன் சொன்னபடி, சத்யாவைக் கொல்ல இருப்பவன் ஒன்பது மணிக்கு வந்திருக்க வேண்டும்... ஆனுல் இன்னும் வரவில்லை. எப்படியும் அவன் வருவான். அவனை முடிக்கிற வேலை நம் தோளில் சுமத்தப்பட்டிருக்கிறது.... சத்யாவைக் காப்பாற்றிவிட்டால் ஒரு பெரிய பொறுப்புத் தீர்ந்துவிடும். இன்றைக்கு எப்படியும் சத்யாவிடம் அவன் ஈடுபட்டிருக்கிற வேலை பற்றி முழு விவரங்களையும் கேட்டறிந்தாக வேண்டும். இரவு பதினெரு மணிக்கு வருவான். அவனைப் பாதுகாப்பாக நம் வீட்டுக்கு அழைத்துப் போய்விட வேண்டும்....

வெளி வாசற் கதவு திறக்கப்படும் மெலிதான ஓசை கேட்கவும் அருண் சிந்தனைத் தளைகளிலிருந்து தன்னை அறுத்துக் கொண்டான்.

வந்துவிட்டான் கொலையாளி!

வா, மகனே வா! சத்யா என்கிற உத்தமமான மனிதனைச் சாய்க்க வருகிறுயா? நான் இதோ தயாராகக் காத்திருக்கிறேன், உன்னை வீழ்த்த. என் கையில் உள்ள துப்பாக்கி, உன் உயிரைக் குடிக்கப் போகிறது. இது என் கன்னி வேட்டை. சீக்கிரம் வா!

வீட்டின் மரக் கதவைத் திறந்து வைத்திருந்தால் வருகிறவன் சந்தேகப்படக் கூடும் என்பதால் பூட்டி விட்டு உட்கார்ந்திருந்தான் அருண். 'பாட்லாக்'கில் ஒரு சாவி நுழைக்கப்பட்டு 'க்ளிக்' ஓசையுடன் அது திறந்து கொள்ள, ஒரு கதவைத் தள்ளிக் கொண்டு பூனை போல் அடியெடுத்து வைத்து வாசற்படியில் வந்து நின்றுன் அந்த ஆசாமி.

அருண் ஒளிந்திருந்த இடத்திலிருந்து வந்தவனை நன்றுகப் பார்க்க முடிந்தது. வந்தவன் மேலும் சில அடிகள் நெருங்கி வரச் சந்தர்ப்பம் கொடுத்துச் சுட வேண்டும் என்ற எண்ணத்தில் அருண் துப்பாக்கியை ஸ்டெடியாகப் பிடித்துக் காத்திருந்த வேளையில் —

டார்ச்சிலிருந்து வெளிப்பட்டது போல பளிச்சென்று ஓர் ஒளிக் கற்றை எதிரிலிருந்து அருணின் முகத்துக்கு நேரே பாய்ந்ததில் — கண் கூசிப் போன அந்த நொடிப்

# நீண்ட காலம் நிற்காமல் உழைக்கும் சக்தி

## நிப்போ சூப்பர் பென்லைட்



**புதிய நிப்போ சூப்பர் ஜிங் குளோரைடு பென்லைட் செல்கள்.**




- உங்களுடைய காமிரா ஃப்ளாஷ், வாக்மன் மற்றும் உங்கள் குழந்தைகளின் எலெக்ட்ரானிக் விளையாட்டுப் பொருள்களுக்காக மட்டுமே சிறப்பாகத் தயாரிக்கப் பட்டவை.
- அகில உலகப் புகழ் பெற்ற நேஷனல், ஜப்பானின் தொழில் நுட்ப கூட்டுறவுடன் இந்தியாவில் இன்டோ நேஷனல் லிமிடெட்டினால் உருவாக்கப்பட்டவை. உங்களுக்கு இன்று உலகமெங்கும் உபயோகிக்கப்படும் நவீன ஜிங்க்ளோரைட் டெக்னாலஜியின் தரமான பயன் கிடைக்கிறது.
- 'மல்டிபிள் இன்டக்ரேடட் ஸீலிங்' உங்களுக்கு நீண்ட கால உழைப்பை உறுதி செய்கிறது. உங்களுடைய எலெக்ட்ரானிக் சாமான்களுக்கு இரட்டிப்பு பாதுகாப்பு கூட.
- இன்டோ நேஷனலின் அதி நவீன தொழிற் கூடத்தில் தயாரிப்பு.

National **நிப்போ சூப்பர்**



*அபார சக்தி கொண்ட பாட்டரி*

everest/S/87/INL/61 Tam B

பொழுதில் — சட்டென்று டிரிக்கரை இழுத் தான் அருண். 'விஷ்க்' என்று காற்றில் சீறிப் பறந்த தோட்டா எதிரிலிருந்தவன் மீது பாய்ந்து சாய்த்த அதே விநாடியில் —

''முட்டைக் கண்ணு! நீயா!'' என்ற பழக்க மான குரலும் அந்த இருட்டில் கேட்க —

அப்படியே உறைந்து போனுன் அருண். உடம்பு மொத்தமும் நடுங்கியது. சுவர்ப் பக்கமாக ஊர்ந்து சென்று, தட்டுத்தடுமாறிய படியே மின்விளக்கு ஸ்விட்சைக் கண்டு பிடித்துத் தட்டி விடவும் —

அந்த ஹாலில் வெளிச்சம் பரவ, தன் செய்கையின் விபரீதத்தை அப்போதுதான் முற்றிலுமாக உணர்ந்தான் அருண்.

அவன் எதிரி என்று நினைத்துத் தோட்டாவைச் செலுத்தியிருந்தது சத்யா வின் மீதுதான்!

தரையில் சுருண்டு கிடந்த சத்யா, வலி யில் துடித்துக் கொண்டிருந்தான். அவனைச் சுற்றிலும் ஆரத்தி கரைத்து ஊற்றியது போல ரத்தம்.

அருணுக்கு மயக்கம் வராத குறைதான். சமாளித்துக் கொண்டான். சத்யாவுக்குத் தன் நிலைமையை விளக்க வேண்டும். அதற்குக் குறைந்தபட்சம் ஐந்து நிமிடமாவது தேவைப்படும்.... ஆனுல் அதற்கு இது நேர மல்ல. சத்யாவைக் காப்பாற்றியாக வேண் டும். ஒவ்வொரு நிமிடமும் பொன்னை விட மதிப்பு மிக்க தருணம் இது.

மூளை மட்டுமே பரபரத்ததே தவிர, கையும் காலும் தீவிரமாக ஒத்துழைக்க மறுத்தன. அருண் இவ்வாறு அவஸ்தைப்பட்டுக் கொண்டு நின்றபோது, கீழே சரிந்திருந்த சத்யா, ''அடே பாவி! முட்டை! கிட்டே வாடா இப்படி!'' என்று ஈனக் குரலில் அழைத்தான்.

படபடக்கும் இதயத்தோடு சத்யாவின் அருகில் மண்டியிட்டு உட்கார்ந்தான் அருண். காதைத் தீட்டிக் கொண்டான்.

அற்புதசாமி கதை சொல்வதை நிறுத்தி னர். நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு, ''எப் படிய்யா இருக்கு நம்ம கைச் சரக்கு?'' என்று வேதாளத்தைக் கேட்டார்.

வேதாளம் வெறுப்புடன் அவரை முறைத் துப் பார்த்தது. ''படுபாவி மனுஷா! நான் அருமையாக வளர்த்துவிட்ட கதையை, உம் முடைய அவசரம் பிளஸ் ஆத்திர புத்தியால் இப்படிக் குறைப் பிரசவம் பண்ணி விட் டீரே!''

''அதை மட்டும் சொல்லாதே! உனக்குச் சந்தேகம் ஏதாவது இருந்தால் கேளு.... எனக்குத் தெரிந்த வரையில் பதில் சொல் கிறேன்....''

''மூன்றே கேள்விகள்தான். ஒன்று: அம்பிகாவின் காதலன் யார்...? இரண்டு. மர்மமான நடவடிக்கைகளில்ஈடுபட்டிருக்கிற அந்தப் பெரிய மனிதர் யார் — பாணியா அல்லது வேறு யாரேனுமா? மூன்று. இந்தக் கதையில் சத்யா ஒரு முக்கியமான புள்ளி. கடைசி அத்தியாயத்தில் அவன் மூலமே பல புதிர்களை விடுவித்தாக வேண்டும்... அப் படிப்பட்ட ஒரு பாத்திரத்தைச் சுட்டு விட் டீர்.... அடுத்தபடி என்ன செய்வதாக உத் தேசம்?''

அற்புதசாமி இரண்டு கைகளையும் விரித் துக் காட்டினர்.

''நான் பரத நாட்டியம் பார்த்துப் பல வருஷங்களாகின்றன. ஆகவே இது போல முத்திரை காட்டினுல் எனக்குப் புரியாது... இதற்கு அர்த்தத்தையும் நீரே சொல்லும்!''

''சரக்குத் தீர்ந்துவிட்டது என்று அர்த்தம்!''

''ஓகோ! அப்படியானுல் நமது ஒப்பந்தப் படி நீர் ஒதுங்கி நிற்க வேண்டும்.... இனி இந்தக் கதையைச் சொல்லும் பொறுப்பு என்னுடையது!''

வேதாளம் நிதானமாக ஒரு கட்டு கரீம் பீடியை ஊதித் தள்ளிய பிறகு, கதையைத் தொடர்ந்தது.....

(அடுத்த இதழில் முடியும்)

# மாதம் ஒரு மாவட்டம்



நினைவுபடுத்துகிறோம்.

பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்ட மக்களே, உங்கள் மாவட்டம் பற்றிய பிரச்னைகளும் குறைகளும் அநீதிகளும் தவிர, சாதனைகளும் மாவட்ட வளர்ச்சிக் கான ஆலோசனைகளும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 20.6.87.

உடனடியாக எழுதி அனுப்புங்கள்!

— ஆசிரியர்

# சித்ரா



பிறந்தபோது அப்படியே வரைந்த சித்திரம் மாதிரி இருந்தேனும், அதனுல்தான் சித்ரா என்று பெயர் வைத்ததாய் அப்பா சொன்னுர்.

''அதெல்லாமில்லே. சித்திரை நட்சத்திரத்தில் பிறந்ததினுல் உனக்கு அந்தப் பேர்...'' என்று அம்மா மறுத்தாள்.

''எதுவுமில்லே. சந்திரா என்கிற என் பெயரோடு மேட்ச் ஆகிற மாதிரி உனக்குச் சித்ரான்னு வைத்திருக்கிருர்கள்!'' அக்கா அலட்சியமாய்க் குறுக்கிட்டாள்.

ஷைலஜா

# பொய்யான ஒரு கடிதமும் மெய்யான ஒரு பிரச்னையும்!

கல்கி 31.5.87 இதழில், மூன்றும் கட்டளை மூகாம்பிகை அம்மன் கோயிலில் நடந்த சதசண்டீ ஹோமம் தொடர்பாக ரத்னம் கிருஷ்ணமூர்த்தி என்பவர் எழுதியுள்ள ஒரு செய்தி உண்மைக்குப் புறம்பானதாகும். ஹோமத்தின் போது ராம்ஜியின் கச்சேரி நடந்த சமயம் சாந்தா அம்மையார், அமைச்சர் செளந்தரராஜன் அவர்களுடனும், மற்றும் சில பிரமுகர்களுடனும் உரையாடிக் கொண்டிருந்தார். எனவே, தலைமை சிவாச்சாரியார் பாட்டுக் கச்சேரியைப் பற்றி அம்மையாரிடம் குறைகூறிப் பேசியதாகவும், 'அட்ஜஸ்ட் செய்து கொண்டு போக வேண்டும்' என்று மதிப்பிற்குரிய சாந்தா அம்மையார் பதில் கூறியதாகவும் எழுதி இருப்பது அபத்தமானது.

சென்னை — 28, மணி.

இதே பாணியில் நமக்கு மேலும் சில கடிதங்கள் வரவே, மேற்படி செய்தியை அனுப்பிய ரத்னம் கிருஷ்ணமூர்த்திக்கு விளக்கம் கோரிக் கடிதம் எழுதினோம். அவருடைய பதில்:

தங்கள் கடிதம் கிடைக்கப் பெற்றேன். 31.5.87 கல்கி இதழில் என் பெயரால் எழுதப்பட்டிருந்த கடிதம் கண்டு அதிர்ச்சியும் வேதனையும் அடைந்தேன்.

மூகாம்பிகை கோவிலில் நடந்த வேள்வி

---

எப்படியோ எனக்கு என் பெயர் ரொம்பவும் பிடித்திருந்தது. பல பேருக்கு அவர்கள் பெயர் கொஞ்சம் நாளானால் பிடிப்பதில்லை. என் ஃப்ரெண்ட் ஜம்பகலட்சுமிக்கு அவள் பேரை நீட்டி முழக்கிக் கூப்பிட்டால் அழுகையே வந்து விடும். மைதிலி கூட, 'என்னடி பேர் இது, மைதிலி யுவர்திலின்னு அபத்தமாய் இருக்கு' என்று அலுத்துக் கொள்வாள். எனக்கும் உள்ளூற ஒரு குறை. இருபது வயதாகியும் இன்னமும் அந்தக் குறை, குறையவே இல்லை. அதுதான் என் பெயரை யாருமே ஒழுங்காய்க் கூப்பிடுவதில்லை என்பது.

அம்மாவுக்கு நான் கடைக்குட்டி என்பதால், ''சித்ரா குட்டி!'' என்றுதான் இன்னமும் கூப்பிடுகிறாள்.

''வேண்டாம்மா.... அழகாய்ச் சித்ரான்னு கூப்பிடு!''

''போடி. கடைக்குட்டியை நாங்க குட்டி போட்டுத்தான் கூப்பிடுவோம்...''

அப்பா, 'சித்திரா!' என்று அழுத்தம் திருத்தமாய் விளிப்பார். 'சந்திரா' என்பதற்குச் சரியாய் இருக்கிறதாம் 'சித்திரா' என்கிறது.

''போப்பா.... நீ கூப்பிடறது சகிக்கலை.''

சந்திராவிற்குத் திமிர் அதிகம். எனக்குத் தன்னை விட நல்ல கவர்ச்சியான பெயர் என்பதில் பொறாமை. ஆகவே, ''சித்ரா தேவி!'' என்பாள் கிண்டலாய்.

''சினிமா நடிகை மாதிரி இருக்கு. அப்படிக் கூப்பிட வேண்டாம்'' என்று எச்சரிப்பேன்.

இருந்தாலும் சந்திரா இன்னமும் அப்படியே கூப்பிடுகிறாள்.

பாட்டிக்கு, தனியாய்ச் சித்ரா என்பது மொட்டையாய் இருக்கிறதாம். மாலை போட்டு, ''சித்ரமாலா'' என்று கொஞ்சுவாள். டி.வி. நிகழ்ச்சி ஒன்று நினைவிற்கு வர, ''பாட்டி! எனக்கு இரட்டைப் பெயர் தேவையில்லை. அழகாய்ச் சித்ரான்னு கூப்பிடு....'' என்று சீறுவேன்.

''அழகாயிருக்குடிம்மா! மாலாங்கிறது உங்க அப்பனைப் பெத்த பாட்டி பெயர். சுபிட்சமாய் வாழ்ந்து சுமங்கலியாய்ப் போன அந்தப் புண்ணியவதி பேரை உன் பேர் கூடச் சேர்த்துக்கோ... நல்லது!''

''போ பாட்டி.... போரடிக்காதே!''

பள்ளிக்கூடத்தில் படிக்கிற நாட்களில் சக மாணவிகள், 'ச்சித்த்ரா' என்று வாயில் சாக்லேட் போட்டுக் கொண்ட மாதிரி கூப்பிடுவார்கள். டீச்சர்கள் சிலர் 'ஸித்ரா!' என்று விசில் அடிக்கிற மாதிரி அழைப்பார்கள். ஆங்கிலோ இண்டியன் டீச்சர் 'ஷித்ரா!' என்பாள். ஊரிலிருந்து வரும் சித்தப்பா ஸ்டைலாய், 'சிட்ரா!' என்று கூவி, நான் முறைத்ததும் சிரிப்பை அடக்கிக் கொள்வார்.

சின்னத்தம்பிக்கு 'ச' வராது. 'ஜித்ராக்கா' என்பான்.

ஆக என் பெயரை ஒழுங்காய் ஒருத்தரும் விளித்ததில்லை. ஒருத்தர் பெயரை நளினமாய்க் கூவி அழைக்கவும் நாகரிகம் தெரிந்திருக்க வேண்டும். என் பெயர் எனக்கு நளினமான பொக்கிஷமும்கூட.

யில் நாங்கள் குடும்பத்துடன் பங்கு கொண்டது உண்மை. ஆனால் 31.5.87 இதழ் கல்கியில், என்னால் எழுதப்பட்டதாகப் பிரசுரம் செய்து இருப்பதை நான் வன்மையாக மறுக்கிறேன். அந்தக் கடிதம் என்னால் எழுதப்பட்டது அல்ல என்பதையும் யாரோ விஷமிகள் எனது பெயரைப் பயன்படுத்தி இவ்வளவு தூரம் இதைச் சர்ச்சைக்குரிய விஷயமாக்கி விட்டார்கள் என்பதையும் வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

குன்றத்தூர், ரத்னம் கிருஷ்ணமூர்த்தி.

**ஏமாற்றப்பட்டு ஒரு பொய்க் கடிதத்தைப் பிரசுரிக்க நேர்ந்ததற்கு வருந்துகிறோம். இத்தகைய அற்பத்தனங்களால் சாந்தா அம்மையாரின் நற்பெயருக்கு எந்தவிதமான மாசும் ஏற்பட்டு விடாது என்பதில் உறுதியாக இருக்கிறோம். ஆனால் அடிப்படைப் பிரச்னை நம் அனைவரது கவனத்தையும் கவர வேண்டிய ஒன்று. அது, 'கோயில்களில் தரக் குறைவான சினிமாப் பாடல்களுக்கு இடம் தரப்பட வேண்டுமா?' என்பது. இதோ குன்னக்குடி பாலா (சென்னை — 20)வின் கடிதம்:**

கோவில்களில் சினிமாப் பாடல்களைப் பாடும் நபர்களை ஏன் அழைக்க வேண்டும்? 'அபஸ்வரம் ராம்ஜி' என்ன பக்திப் பாடல்கள் பாடுவதில் புகழ்பெற்றவரா? இல்லையே! சினிமாப் பாட்டுக்குழு வைத்திருப்பவர் என்பது ஊரறிந்த விஷயம். அவர் தரமான பாடல்களைப் பாடினால்கூட மக்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். அவருக்கு, ஹோமங்களும் மந்திரங்களும் சூழ்ந்த சூழ்நிலையில் வாய்ப்பு அளிக்கத்தான் வேண்டுமா? பக்திப் பாடல்களைப் பாடும் வேறு குழுவே இல்லையா?

சென்னை — 20, குன்னக்குடி பாலா.

**திருவனந்தபுரம் எஸ்.எஸ். மணியின் கடிதம் தமிழர்களாகிய நமக்குச் சூடு போடுவது போலிருக்கிறது:**

திருவனந்தபுரம் சாலை சபாபதி கோவிலில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ உஜ்ஜயினி மகாகாளி அம்மன் கோவில் கும்பாபிஷேகம் அண்மையில் நடந்தபோது, ஓர் இசை நிகழ்ச்சி நடந்தது. அதில் முழுவதும் அம்மன் பாடல்களே பாடப்பட்டன. ஒரு சினிமாப் பாடல் கூடப் பாடப்படவில்லை. மக்களும் முழுமையாக இருந்து இசையைக் கேட்டுச் சென்றார்கள். இம்மாதிரி சந்தர்ப்பங்களில் கேரள மக்கள் விழிப்புணர்ச்சியோடுதான் நடந்து கொள்கிறார்கள்.

திருவனந்தபுரம், எஸ். எஸ். மணி.

"சித்ராக்குட்டி! எழுந்திரு! பெண் பார்க்க பிள்ளை வீட்டார் வருகிற நேரமாச்சு....'' அம்மா அன்பாய் அதட்டுகிறாள்.

சந்திரா கையில் பவுடர், சீப்போடு வந்து என் அருகில் உட்காருகிறாள். "திரும்புங்க சித்ரா தேவி! தலை சீவி விடணும்!''

"சித்ராதேவின்னு கூப்பிடாதே. 'சித்ரா' எத்தனை அழகான பெயர்!''

சந்திராவிற்குப் போன வாரம் பிள்ளை வந்து பார்த்து நிச்சயம் ஆகிவிட்டது. இன்று எனக்கு வேறு ஒரு பிள்ளை பெண் பார்க்க வந்து, சம்மதம் தெரிவித்ததும் கல்யாணத்துக்குத் தேதி நிச்சயம் செய்வார்களாம். இரண்டு பெண்களுக்கும் கல்யாணமாகி விட்டால் அம்மாவுக்குப் பெரிய சுமை இறங்கிய மாதிரியாம்.

எனக்கும் சந்திராவிற்கும் ஒரே பந்தலில் இரட்டைக் கல்யாணம். சிக்கனச் செம்மல் அப்பாவின் ஏற்பாடு போலும்!

பிள்ளை, என்னைப் பார்த்ததும், "உங்க பேர் சித்ராவா?'' என்று கேட்டார்.

அவ்வளவுதான்! ஆயிரம் தாமரைகள் பூத்து, ஆனந்தக் கும்மி அடித்தாற்போல் இத்தனை வருஷமாய் அடக்கி வைத்திருந்த உணர்வுகள் பீறிக் கிளம்பின.

சித்ரா! சித்ரா! சி..த்..ரா!

ஒவ்வோர் எழுத்தையும் நான் விரும்பியதுபோல் உச்சரித்தார். இதுநாள் வரை என் பெயரை இப்படிச் சொல்லி யார் அழைத்திருக்கிறார்கள்?

நான் நாணமும், பெருமையுமாய்த் தலையாட்டுகிறேன்.

"உங்களைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள எனக்குச் சம்மதம். ஆனா ஒரு சின்ன வேண்டுகோள்....''

"மாப்பிள்ளை எதுவானாலும் சொல்லுங்க. தயங்க வேண்டாம்....'' அப்பா உற்சாகத்தில் உத்தரவு போட்டார்.

"வந்து....'' மாப்பிள்ளை என்னைத் தயக்கமாய்ப் பார்த்துவிட்டுப் பிறகு சொன்னார்.

"வந்து.... எங்க வீட்ல என் தங்கை, எங்க அண்ணி இரண்டு பேர் பெயரும் சித்ரா. மூணாவதாய் ஒரு சித்ரா வந்தால் குழப்பமாயிடும். அதனால பெண் பெயரை மாத்தணும். கல்யாணத்துக்குப் பிறகு அந்தப் பெயர்தான் நிரந்தரமாகணும்.''

"ஆஹா! ஆஃப்டர் ஆல் பெயர்தானே, உங்க வசதிப்படி மாற்றிவிட்டால் போயிற்று!'' என்று தோள்களைக் குலுக்கி, கைகளை நீட்டிச் சம்மதம் தெரிவித்தார் அப்பா.

தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டு, "அப்படியே செய்துடலாம்'' என்றாள் அம்மா.

சந்திரா நமுட்டுச் சிரிப்புடன் உள்ளே ஓடிவிட்டாள்.

தனிமையில் விடப்பட்ட எனக்கு, உயிரையே யாரோ பறித்துவிட்ட வேதனை. பரிதாபமாய்க் கண்கள் இரண்டு சொட்டுக் கண்ணீரை விட்டன.

'சி த் ரா....' நெஞ்சில் என் பெயரைக் கடைசியாய் ஒருமுறை எழுதிக் கொள்கிறேன்!

அவரைப் பற்றிக் கிடைத்த விவரங்களி லிருந்து ஹரிஹரன் மிகவும் முற்போக்கான வராய்த் தோற்றமளிக்கிருர். பெண்களை அடக்கி வைக்காதவர். திறமை இருப்பின் ஊக்குவிப்பவர். எனக்கு ஜானகியின் சந் தோஷம் முக்கியம். இது நல்ல இடம் என்று படுகிறது. அவள் எனக்கு ஒரே பெண். ரேஸ் குதிரை மாதிரி இருப்பாள். நம்மூர்ச் சராசரி அம்பிப் பயல்களுக்கு அவளைப் பார்த்தால் காம்ப்ளெக்ஸ் வந்துவிடும். புத்திசாலி. அதே போலத் தைரியம். அவள் நல்லபடியாய் இருக்க வேண்டும். ஹரிஹரன் வீட்டு வாசல் திறந்தே இருக்கிறது. வலது காலைத் தூக்கி வைத்து உள்ளே நுழைந்தேன்.

வரவேற்பறையில் யாரோ பையன் இருந் தான். பேரனுக இருக்க வேண்டும். ஒரு பார்வையில் அளந்து உட்காரச் சொன்னுன். மின்விசிறியைச் சுழலவிட்டு உள்ளே போனுன். ஹாலில் அழகாய் ஒரு வீணையை நிறுத்தியிருந்தார்கள். வாசிக்கத் தெரிந்தவர் கள் யாரேனும் இருக்க வேண்டும். எனக்கு அந்த ஆசை மீண்டும் வந்துவிட்டது. இந்த இடம் ஜானகிக்கு அமைய வேண்டும். இந்தப் பொடியன், ஒன்பது வயது இருக் காது இவனுக்கு. மரியாதை படித்திருக் கிருன். இதெல்லாம் கற்பித்து வருவதில்லை. இரத்தத்தில் பெறுவது. ஹரிஹரன் குடும்பம் பண்பு தெரிந்த குடும்பம். ஜானகி இங்கே வாழ்க்கைப் பட வேண்டும். இந்த வீட்டுக்கு ஒரு வாசனை இருக்கிறது. ஒவ்வொரு வீட் டுக்குமே ஒரு வாசம் உண்டு. இந்த வீட்டின் வாசனை விசேஷமாய் இருக்கிறது. கல்வியும் இசையும் பண்பும் கலந்து மூக்கைத் துளைக் கிறது. கர்ச்சீப்பை எடுத்து ஒரு தடவை முகத்தை அழுந்தத்துடைத்துக்கொண்டேன்.

கர்ட்டன் விலகியது. ஹரிஹரன் வந்தார். இந்த ஆள் எனக்கு எல்லாவிதங்களிலும் ஈடு கொடுக்கிருர். சிவப்புத்தான். மங் கோலிய உருண்டை முகத்தில் கண்ணுடி போட்டு அழகாய் நரைத்த தலை. "ஹலோ" கை குலுக்கிக் கொண்டோம். ஆசாமி சிரிக் கக் கொஞ்சம் காசு கேட்பார் போலிருக் கிறது. ஆனுல் நன்ருகப் பேசினுர். முதலில் பூர்வீகங்களைத் துழாவினேம். ஹரிஹரன் மனைவி காப்பி கொண்டு வந்து, கைகூப்பி, புன்சிரித்துப் போனுள். அவரும் 'திருச்சி ராப்பள்ளி' என்ருர். 'அடடே' என்றேன். உதிர்த்த பெயர்களை வைத்து உறவு உண்டா எனத் தேடினேம். கிட்டி முட்டி வந்து அப் புறம் ஒன்றும் புரியவில்லை. அந்தப் பொடி யன் வந்து என் கையில் மாப்பிள்ளைப் பையன் போட்டாவை வைத்தான்.

சபாஷ். சரியான ஜோடி. ஜானகிக்கு இணையான கம்பீரம். எனக்கு உள்ளங்கால் வியர்த்தது. கடவுளே, இந்த இடம் என் மக ளுக்கு அமைய வேண்டும். சீர்வரிசையெல் லாம் தடபுடல் பண்ணிவிடலாம். ஆனுல் ஒரு சின்னச் சிக்கல் இருக்கிறது. ஜானகிக்கு ஆயில்யம் நட்சத்திரம். பிள்ளைக்கு அம்மா வோ அல்லது அப்பாவோ இருக்கக் கூடாது. ஹரிஹரன் பக்கத்தில் இப்போது அவர் மனைவி வந்து உட்கார்ந்து கொண்டாள்.

அந்தப் பொடியனின் தாயார் ஹரிஹர னின் மூத்த மகள். லீவிற்கு வந்திருக்கிருள். இவள்தான் வெளிநாட்டில் படித்தவள். எளிமையாய் இருக்கிருள். பொதுவாகவே அடக்கமான குடும்பம். ஹரிஹரன் மகன் அபாரமாய்ப் படித்திருக்கிருன். பெய ருக்குப் பின்னுல் ஏகமாய் அவன் ஒட்டி யிருந்த எழுத்துக்களைப் பார்த்து அசந்து போனேன். அவனைப் பற்றிய பேச்சில் அவன் குடும்பத்தாருக்கு இயல்பான ஒரு மரியாதை ஓடியது. அந்தப் பொடியன் யாரும் சொல்லாமலே வந்து காலி தம்ளர் களை எடுத்துப் போனுன். ஜானகி இந்த வீட்டில்தான் வாழ்க்கைப் பட வேண்டும். இது புரிந்து செயல்படுகிற குடும்பம். நான் செய்யக் கூடியது எதுவுமில்லை. ஆயில்யம் நட்சத்திரம் பற்றிய உரையொன்றை எப் போதும் நான் மனத்தில் வைத்திருக்கிறேன். பலமுறை சொல்லித் தோற்றுப் போன உரை. என் மகளின் நல்வாழ்வுக்கு நான் ஆசைதான் படலாம். எதுவும் செய்ய முடி யாது. தொண்டையைக் கனைத்துக் கொண் டேன். ஹரிஹரன் குடும்பத்தாரைப் பார்த்து என்னுடைய கால்கேட் சிரிப்பை உதிர்த் தேன். ஆயில்யம் நட்சத்திரத்தைப் பற்றிய தான எனது ஆராய்ச்சிகளைத் தாக்கல் செய்யத் தயாரானேன்.

"அதில்பாருங்கள் மிஸ்டர்ஹரிஹரன்...." ஒருகணம் நிறுத்தினேன். ஹரிஹரன் முகத் தைப் பார்த்தேன். மாநிலச் செய்திகள் கேட்



"ரம்பை, ஊர்வசி, மேனகா... நீங்கள் மூவரும் உடனே பூலோகத்திற்குச் செல்ல வேண்டும்!"

"எதற்குப் பிரபு?"

"பிரேக் டான்ஸ் கற்றுக் கொள்ள...!"

— ரம்யா

கிறவர் மாதிரி உணர்ச்சியற்று இருந்தது. என்னுடைய தைரியம் உடைந்து போனது. நம்பிக்கை விழுந்து கொண்டிருந்தது. நாக்குக் குழற, நான் "ஜானகிக்கு நட்சத்திரம் ஆயில்யம்" என்றேன்.

"ஆனாலும் என்ன? நாம் எல்லாம் முற்போக்காய்ச் சிந்திக்கிறவர்கள். பொதுவாக இந்த நட்சத்திரத்தில் பிறந்தவர்களை மணம் செய்து கொடுக்குமிடத்தில் தாயோ, தகப்பனோ இருக்கக் கூடாது என்று சொல்லுவார்கள். இது வெறும் நம்பிக்கைதான். மனிதனின் படிப்படி வளர்ச்சியில் ஏதோ ஒரு படியில் நிர்ப்பந்தம் காரணமாக விளைந்த மூட நம்பிக்கை. சிறிய கிராமங்களில் தனித் தனியாக நாம் அப்போது இருந்திருக்க வேண்டும். சிறிய ஊர் என்பதால் சம்பந்தம் பேச வருபவர்களைத் தவிர்ப்பது கஷ்டமாயிருந்திருக்கும். அப்புறமும் அதே கிராமத்தில் அதே முகத்தைப் பார்க்க நேரிடுமே; அவ்வாறு நேரிடுகிற சங்கடத்தைத் தவிர்க்க சிருஷ்டிக்கப்பட்ட நம் முன்னோரின் குயுக்தி.

"நாம் உலகம் முழுவதையும் பார்த்திருக்கிறோம். அவர்கள் கம்ப்யூட்டரைக் கண்டு பிடித்தார்கள். நாம் கம்ப்யூட்டரில் ஜாதகம் எழுதி வாங்கிக் கொள்கிறோம். ஆஃப்செட் மிஷினில் பஞ்சாங்கம் அடிக்கிறோம். மிஸ்டர் ஹரிஹரன், நான் உங்களை மிகவும் நம்பியிருக்கிறேன். எனக்கு இந்த சம்பந்தத்தில் கொள்ளை ஆசை வந்துவிட்டது. உங்கள் பையனின் போட்டோ பார்த்தேன். விவேகானந்தருடையது போல ஒரு தெளிவு அவன் முகத்தில் இருக்கிறது. நீங்கள் தயவு பண்ண வேண்டும். ஜானகியை ஒருதரம் நேரில் பார்த்தால் நீங்களே நல்லவிதமாய்த் தான் முடிவு எடுப்பீர்கள். மாமிதான் சொல்ல வேண்டும். உங்கள் வீட்டுப் பொடியன் வெகு சமர்த்து. வந்தவுடன் உட்காரச் சொல்லி மின்விசிறி போட்டான். உங்கள் குடும்பம் எனக்குப் பிடித்திருக்கிறது. என் மகளை உங்களுக்கு நிச்சயம் பிடிக்கும். தவணை முறையில் அநேக நம்பிக்கைகளை மூடத்தனம் என்று விட்டிருக்கிறோம். முற்றாகவும், முடிவாகவும் எல்லாவற்றையும் மொத்தமாய் களைவோம், ஆமென்!"

நான் எழுந்து கொண்டேன். ஹரிஹரன் ஒன்றும் அவ்வளவு முற்போக்கானவரில்லை போலிருக்கிறது. என் பிரசங்கத்தின் பின் பகுதியில், அவர் முகம் போன போக்கு, அவர் ஓர் அம்மாஞ்சியெனக் காட்டிக் கொடுத்துவிட்டது. செருப்பை மாட்டிக் கொள்ளும்போது நான் தடுமாறினேன். ஹரிஹரன் குடும்பத்தினர் மரியாதை தெரிந்தவர்கள். எழுந்து நின்றிருக்கிறார்கள். மெதுவாகப் படியிறங்கி நடந்து.... கேட் வந்தது.

'கிடக்கிறது..... அவர்கள் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். ஜானகி எவ்வளவு புத்திசாலிப் பெண்!' வீட்டுக்குச் சீக்கிரமே போய்ச் சேர்ந்தேன். கேபிள் ஒன்று ஜானகி கொடுத்திருந்தாள்:

"ஒரு நல்ல ஜெர்மன் இளைஞனை மணந்து கொண்டேன். **To hell with your Ayilyam!**"



## அருள்வாக்கு

**சாதாரணமாக, பத்துப் பேருக்கு, நூறு பேருக்கு அன்னதானம் செய்கிற ஒரு நல்ல ஜீவனின் முகத்தைப் பார்த்தால் அதில் எத்தனை அன்பு சொட்டுகிறது? அன்னதானம் செய்து, பலர் வயிறுரச் சாப்பிட்டு சந்தோஷப்படுகிற போது, அந்த அன்னதாதாவின் சந்தோஷத்தைப் பாருங்கள். அந்த சந்தோஷத்தில் அவன் முகத்தில் எவ்வளவு அன்பு சொட்டுகிறது? சாப்பிடுகிறவனை விடச் சாப்பாடு போட்டவனுக்குத்தான் அதிக ஆனந்தம் இருக்கிறது. ஒரு பத்து பேர் அல்லது நூறு பேருக்கு மட்டும் ஒரே ஒரு வேளை சோறு போடுகிறவனிடமே இத்தனை அன்பும் ஆனந்தமும் இருக்கின்றன. மகாபாபங்களைச் செய்து — காரியத்தில் செய்யாவிட்டாலும், மனசினால் மகா பாபங்களை நினைத்து — ஒருவேளை சோறு கிடைக்கக் கூட யோக்யதையில்லாத நம் இத்தனை பேருக்கும், கோடானு கோடி ஜீவன்களுக்கும் கல்ப கோடி காலமாகச் சோறு போட்டுக் கொண்டிருக்கிற ஒருத்தி அன்னபூரணேசுவரியான அம்பாள்தான். அவளுடைய அன்பையும் அதனால் உண்டான ஆனந்த ஸ்வரூபத்தையும் நம்மால் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியாது. அம்பாள் ஸௌந்தர்ய ஸ்வரூபம் என்கிறார்கள். அவளைப் பற்றி 'ஸௌந்தர்ய லஹரி' என்றே ஆசார்யாள் ஸ்தோத்திரம் செய்திருக்கிறார். இத்தனை சௌந்தர்யம், லாவண்யம் அவளுக்கு எப்படி வந்தது என்றால் அன்புதான் அழகாகிறது. காருண்யம்தான் லாவண்யம். பாக்கி சரீர அழகு ஓர் அழகல்ல. கொஞ்சம் கோபம் வந்தால், துளி ஜுரம் வந்தால் சரீர அழகு போய் விடுகிறது. அம்பாளோ நிரந்தரமான கருணாமூர்த்தியாக எப்போதும் லாவண்யமாக இருக்கிறாள். எந்த பக்தருக்கு எந்த ரூபத்தில் மனசு ஈடுபடுமோ அந்த ரூபத்தில் வந்து அருள் செய்வதற்காகப் பல ரூபங்கள் எடுத்துக் கொண்டிருக்கிறாள்.**

***— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்***




சத்யா தீர்க்கமாக ஒரு மூச்சு இழுத்துக் கொண்டான். பிறகு பேச ஆரம்பித்தான். "கையைப் பிசைந்து கொண்டு நிற்காதேடா முண்டம்! வெளியிலே போய், எதிர்க் கடைக்காரர் கிட்டச் சொல்லி, சீக்கிரமாக ஒரு ஆட்டோ பிடித்துக் கொண்டு வரச் சொல்! வலி பிராணன் போகிறது!"

"ஸாரி சத்யா.... தெரியாத்தனமாகச் சுட்டு விட்டேன்... அந்த நாசமாய்ப் போன குண்டு உன் மார்பிலே பாயும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லை...."

"முட்டாள்! மார்பிலே குண்டு பாய்ந்திருந்தால் நான் இப்படி உன்னோடு பேசிக் கொண்டிருக்க முடியுமா? நீ என் முழங்காலிலே சுட்டுத் தொலைத்திருக்கிறாய்... தொணதொணவென்று பேசிக் கொண்டிருகாமல் நான் சொன்னதைச் செய், போ!"

அடுத்த ஐந்தாவது நிமிடம் ஓர் ஆட்டோ சத்யா, அருண், எதிர்க் கடைக்காரர் ஆகிய மூவரையும் சுமந்து கொண்டு பறந்தது. போகும்போதே, "எனக்குத் தெரிந்த டாக்டர் ஒருத்தர் கோடம்பாக்கத்தில் நர்ஸிங் ஹோம் வைத்திருக்கிறார். அங்கேயே போகலாம்" என்று சொல்லிவிட்டான் சத்யா.

அருணின் தோளில் ஒரு கையும், கடைக்காரர் தோளில் ஒரு கையுமாக நொண்டிய படியே நர்ஸிங் ஹோமுக்குள் நுழைந்த சத்யாவை, "வாய்யா! நீ எந்த நிமிஷமும் வருவேன்னு எதிர்பார்த்துக் காத்திட்டிருந்தேன்!" என்று உற்சாகத்துடன் வரவேற்றார் அந்த டாக்டர். முழங்காலில் அவசரத்துக்குப் போடப்பட்டிருந்த கட்டைப் பிரித்துப் பார்த்துவிட்டு, "அச்சா!" என்று வியந்தார். "எந்த வாத்து மடையன் சுட்டான் இப்படி?"

"நா.... நா.... நான்தான் டாக்டர்!" — மெதுவாகச் சொன்ன அருணை முறைத்தார்.

"முழங்கால் சில்லைப் பெயர்க்கக் கூடத் தெரியல்லியேடா அம்பி! நீ சுட்ட குண்டு முட்டிக்கு ஒண்ணரை அங்குலம் மேல் பக்கமாக உராய்ந்து கொண்டு போயிருக்கு.... துப்புக் கெட்ட பயலா இருக்கியே!"

"குண்டு உள்ளே போயிருக்குமா டாக்டர்?"

"நீ எந்த இடத்திலே வச்சு இவனைச் சுட்டியோ அங்கேயே ஒரு மூலையிலே கிடக்கும். தேடி எடுத்து, கோலி ஆடுடா அம்பி! துப்பாக்கி என்று சொல்லக் கூட நீ லாயக்கில்லை!" என்று டாக்டர் சொன்னதைக் கேட்டதும் அத்தனை வலியிலும் வேதனையிலும் சத்யாவும் வாய் விட்டுச் சிரித்தான்.

காயத்தைச் சுத்தம் செய்து, தையல் போட்டு, ஊசி ஏற்றி, தூக்க மாத்திரை கொடுத்து, ஓர் அறையில் சத்யாவைப் படுக்க வைத்துவிட்டு வெளியே வந்த டாக்டரிடம் அசட்டுத்தனமாக "உயிருக்கு ஒன்றும் ஆபத்தில்லையே!" என்று கேட்டுவிட்டு, நாக்கைக் கடித்துக் கொண்டான் அருண்.

"இன்னும் அஞ்சு நிமிஷம் நீ இங்கே நின்றால் உன் உசிருக்குத்தான் ஆபத்து! உன் வயிற்றைக் கிழித்து, குடலை உருவிப் பார்த்து



விடுவேன்! போய்யா வெளியே!''

டாக்டர் போட்ட சப்தத்தில் மிரண்டு போய் வாசலுக்கு விரைந்து ஆட்டோவில் தாவி ஏறிக் கொண்டான் அருண்.

மறுநாள்.

ஆபீசுக்கு மட்டம் போடுவதென்று முடிவு செய்துவிட்டு, காலை டிபனை முடித்துக் கொண்டு நர்ஸிங் ஹோமுக்கு விரைந்தான் அருண்.

அவன் சென்ற சமயம், கட்டிலில் எழுந்து உட்கார்ந்து பூரி கிழங்கை ஒரு பிடி பிடித்துக் கொண்டிருந்தான் சத்யா. அவனிடம் கால் நலன் விசாரித்துவிட்டு, தான் அவனைச் சுட நேர்ந்த பின்னணியை விளக்கினான் அருண். அவன் சொல்லச் சொல்ல, மெலிதாகச் சிரித்துக் கொண்டிருந்தான் சத்யா.

''அடே முட்டைக் கண்ணு! நீ எதையும் சுலபத்தில் நம்பி விடுவாய் என்று நன்றாகத் தெரிந்து வைத்துக் கொண்டு என் எதிரிகள் உன்னைப் பயன்படுத்தியிருக்கிறார்கள். நான் நேற்று ஒன்பது மணிக்கு வீடு திரும்புவேன் என்பதை எப்படியோ முன்கூட்டியே தெரிந்து கொண்டு, உன்னிடம் அழகாக ஒரு கதை ஜோடித்திருக்கிறார்கள்... ஒன்பது மணி வாக்கில் நுழைபவன் என் எதிரியாகத்தான் இருப்பான் என்று நீ முடிவு கட்டி, சுட்டு விட்டாய். சரி.... போனதெல்லாம் போகட்டும். நான் உன்னிடம் கொடுத்த டயரியையும், இரண்டுலட்சரூபாய்பணத்தையுமாவது பத்திரமாக வைத்திருக்கிறாயா — அல்லது அவற்றையும் என் பெயரைச் சொல்லி உன்னிடமிருந்து எவனாவது அடித்துக் கொண்டு போய்விட்டானா?''

''ஒரேயடியாக மட்டம் தட்டாதே சத்யா... நீ கொடுத்த அந்த இரண்டுமே படுபத்திரமாக இருக்கின்றன....

''எங்கே வைத்திருக்கிறாய்—உங்க வீட்டிலே தானே?''

''இல்லை.... வேறு வேறு இடத்திலே.... அதைப் பற்றி அப்புறம் சொல்கிறேன்... முதல்லே உன் விவகாரம் பூராவும் எனக்குத் தெரிந்தாக வேண்டும்... ஒவ்வொரு தரமும் உன்னைச் சந்திக்கும்போதெல்லாம் எதையும் விலாவாரியாகக் கேட்டுத் தெரிந்து கொள்ள முடியாமலே தட்டிப் போய் விடுகிறது.... இப்போது நீ சும்மாதானே இருக்கிறாய். சொல்லு!''

''ஸாரி முட்டைக் கண்ணு! எனக்கு இன்றைக்குத் தலைக்கு மேலே வேலை இருக்கிறது... டிபனைச் சாப்பிட்டுவிட்டு வெளியே புறப்பட போகிறேன்.''

''அடிபட்ட காலும் பேண்டேஜுமாகவா?''

''கூட நாலு சக்கரமும் வைத்துக் கொள்ளப் போகிறேன். நீயும் வேண்டுமானால் என்னோடு வா. எனக்கு ஆட்சேபணை யில்லை...''

டாக்டர் சிரித்துக் கொண்டே உள்ளே நுழைந்தார். அருணைக் கண்டதும், ''என்ன! இன்னிக்கு யாரைச் சுடப் போறே?'' என்று விசாரித்தார். சத்யாவிடம், ''பிரைவேட் டாக்ஸிக்குப் போன் பண்ணிச் சொல்லிவிட்டேன்... இப்போது வந்துவிடும்.... ரொம்பவும் ஸ்ட்ரெயின் பண்ணிக் கொள்ளாமல் போய் வாருங்கள்!'' என்றார்.





"பல வருஷமாக எழுதிப் பார்த்த பிறகுதான் தெரிந்தது நமக்கு எழுத வராது என்று!"
"அப்புறம்? எழுதறதை நிறுத்திட்டீங்களா?"
"பிரபல எழுத்தாளனாக ஆன பிறகு எப்படி நிறுத்த முடியும்?"
— திருமலை கோவிந்தன்

**கா**வல் துறையின் ஒரு பிரிவான 'நார்காட்டிக்ஸ் இன்டெலிஜன்ஸ் பீரோ'வின் தலைவரை முதலில் பார்க்கச் சென்றான் சத்யா. அந்த அலுவலகத்தின் ரிஸப்ஷன் பகுதியிலேயே அருணை வடிகட்டி உட்கார்த்தி வைத்துவிட்டார்கள். சத்யா மட்டுமே உள்ளே செல்ல அனுமதிக்கப்பட்டான்.

சத்யா கொடுத்த தகவல்களைக் கேட்டுப் பிரமித்துப் போனார் அந்த அலுவலகத் தலைவரான ராஜகோபால். டெலிபோனை எடுத்து மளமளவென்று சில உத்தரவுகளைப் பிறப்பித்துவிட்டு, அலுவலக ஜீப்பில் ஆயுதம் தாங்கிய காவலர்களுடன் அவரே புறப்பட்டுவிட்டார், வேட்டைக்கு.

சத்யாவின் அம்பாஸடர் வழி காட்ட, ஜீப் ஒரு பெரிய பங்களாவின் காம்பவுண்டுக்குள் நுழைந்தது. சத்யா, ராஜகோபால், காவலர்கள் தோரணையுடன் இறங்கியபோது அருணும் பந்தாவாக இறங்கினான்.

"ஐயா இருக்கிறாரா?" என்று துள்ளி வந்த வேலைக்காரனிடம் ராஜகோபால் விசாரித்தார்.

"மாடியிலே ரூம்லே இருக்காருங்க.... உட்காருங்க இப்படி.... நான் போய்த் தகவல் கொடுத்துட்டு வாரேன்...." என்றவனைப் புறக்கணித்து, "பரவாயில்லை.... நாங்கள் மேலேயே போய்ப் பேசிக் கொள்கிறோம்!" என்று சொல்லி, மாடிப் படிகளில் விரைந்து ஏறினார் ராஜகோபால்.

பச்சை நிறக் கார்ப்பெட் விரித்த அறையில் ஓர் ஒற்றை சோபாவில் கன்னத்தில் கை வைத்தபடி அமர்ந்திருந்த அந்தப் பெரிய மனிதர் எதிரில் ராஜகோபால் போய் நின்றதும், பேயைக் கண்டது போல மிரண்டார் அவர்.

"பயப்படாதீர்கள். உங்களிடம் சும்மா ஒரு தகவல் கேட்டுவிட்டுப் போகலாமென்று வந்தேன்...." என்று ராஜகோபால் சொன்னதும், தடுமாறினார் பெரிய மனிதர்.

"தகவலா? என்ன விஷயம்? எதைப் பற்றித் தகவல்?"

"உங்கள் மருந்துக் கம்பெனி பற்றித்தான்...."

"தாராளமாகச் சொல்கிறேனே!"—பெரிய மனிதருக்குத் திடீரென்று தெம்பு வந்துவிட்டது. "இருமலுக்கு ஃபர்ஸ்ட் கிளாஸ் ஸிரப் தயாரிக்கிறோம்... தவிர, தலைவலி, ஜலதோஷம், ஃப்ளூ இவற்றுக்கான டாப்லெட்ஸ்...."

"வெயிட், வெயிட்! இந்த லிஸ்ட் எனக்குத் தேவையில்லை. உங்கள் தொழிற்சாலைக்கென்று மூணு மாசத்துக்கு முன்னாலே ரா—மெடீரியல்ஸ் வரவழைத்தீர்களே அயல் நாட்டிலிருந்து...."

"எஸ் எஸ்.... அதற்கென்ன?"

"அதிலே கொஞ்சம் சாம்பிள் வாங்கிக் கொண்டு போகலாமென்று வந்தேன்... அநாவசியமாக ஆபீசில் வந்து தொந்தரவு செய்ய வேண்டாமென்றுதான் இங்கேயே வந்துவிட்டேன்..... நீங்கள்தான் வீட்டிலே கூட சாம்பிள் வைத்திருப்பீர்களே....!"

பெரிய மனிதரின் முகம் வெளிறியது. சத்யாவும் அருணும் அவரையே பார்த்துக் கொண்டிருந்தபோது, ராஜகோபாலின் பார்வை அந்த அறையை ஒரு வட்டம் அடித்து, சற்றுத் தொலைவில் இருந்த ஒரு மேஜை மீது பாய்ந்தது. சட்டென்று எழுந்து மேஜையருகில் சென்றுவிட்டுத் திரும்பியவர், தாம் எடுத்த பொருளை எல்லாரும் பார்க்கும்படியாகக் காட்டினார்:

ஒரு ரூபாய் ஷாம்பூ பொட்டலம் போல இரண்டு பொட்டலங்கள்.

அவற்றைக் கண்டதும், பெரியவருக்கு மாரடைப்பே வந்துவிடும் போலிருந்தது. "அது... அது... நான்... என்னுடையதில்லை.." என்று திணறித் திணறி ஏதோ சொல்ல முயன்றார். அத்துடன், ராஜகோபால் கையிலிருந்து பொட்டலங்களைப் பறிக்கவும் முற்பட்டார்.

ராஜகோபால், "அசையாதீர்கள் இருந்த இடத்தை விட்டு!" என்று அதிகாரக் குரலில் போட்ட அதட்டலில் அடங்கிப் போய் சோபாவில் தொப்பென்று உட்கார்ந்தார் பெரியவர்.

"நீங்கள் சமீப காலமாகச் செய்து வந்த பிஸினெஸ் பற்றிய முழுத் தகவல்களையும் — இதோ இருக்கிறாரே மிஸ்டர் சத்யா, இவர் எங்களுக்குக் கொடுத்திருக்கிறார். ஓரிரண்டு பாயிண்ட்டுகளை மட்டும் நீங்கள் தெளிவுபடுத்தினால் போதும். இந்தப் பிரமாதமான ஐடியாவை உங்களுக்குச் சொல்லித் தந்தது யார்?"

"எல்லாவற்றையும் சொல்கிறேன்... அதற்கு முன்னால் ஒரே ஒரு போன் மட்டும் பண்ணிக் கொள்ளலாமா?"

"உங்கள் கோடவுனைக் கூப்பிட்டு, சரக்குகளை அப்புறப்படுத்தச் சொல்லி, சங்கேத பாஷையில் உத்தரவு போடுகிற உத்தேசம் ஏதுமிருந்தால், அதை நீங்கள் கைவிட்டு விடலாம். ஏனென்றால் போலீஸ் படை இந்நேரம் உங்கள் கோடவுனைச் சுற்றி வளைத்திருக்கும்...."

"நோ நோ... இது என் சொந்த மகளுக்கு... அவள் லேடீஸ் ஹாஸ்டலில் தங்கியிருக்கிறாள்... அவளுடன் ஒரு வார்த்தை..."



Cadbury's
Bournvita
MILK
Bournvita
SUGAR




Cadbury's
Bournvita
Rs. 2/-
LESS
MILK
Bournvita
SUGAR
The Tastier Food Drink



“அதோ போர்ருளே, அவள் காதலைப் பெற நானும் இருபது வருஷமா முயற்சி செய்கிறேன்! முடியலே!”
“யார் அந்தப் பெண்?”
“என் மனைவிதான்!”
— கடலூர் கன்னியப்பன்.

“சார்! உங்க பெண் சராகா பார்மாவிலே தானே வேலை பார்க்கிருள்? அவள் பெயர் லேகாதானே?” — சட்டென்று கேட்டான் அருண்.

“இவரும் உங்க இன்ட்டலிஜென்ஸ் ஆபீசர்களிலே ஒருத்தரா?”

“எஸ்! அப்படித்தான்!” —ராஜகோபாலை முந்திக் கொண்டு தானே பதிலளித்தான் அருண்.

'அட அல்பமே!' என்று ராஜகோபால் அவனை ஒரு பார்வை பார்த்தார். பிறகு, “உம், சொல்லுங்கள் மிஸ்டர் பாலசுந்தரம்! எப்படி இந்த ஹெராயின் கடத்தல் தொழிலை ஆரம்பித்தீர்கள்?” என்று அந்தப் பெரிய மனிதரிடம் கேட்டார்.

“என் பிஸினெஸ்லே எனக்கு அதிக லாபம் கிடைக்காததாலே, எயிட்ஸ் நோய்க்கு மருந்து கண்டுபிடிச்சு, ஏராள மாகப் பணம் சம்பாதித்து விடலாமென்று அதற்கான முயற்சிகளில் என் ஆராய்ச்சிப் பிரிவை முடுக்கிவிட்டேன்... பணத்தைத் தண்ணீராகச் செலவழித்தேன்... வெளி யிலே நிறையக் கடன் வாங்கினேன்... பதி னைந்து லட்ச ரூபாய் செலவானதாக எல்லா ரிடமும் சொன்னேனே தவிர, அதைப் போல நாலு மடங்கு ரகசியமாக வாரி இறைத் தேன்... என்னுலே மருந்துக்கான ஃபார்மு லாவைக் கண்டுபிடிக்க முடியல்லே... சராகா அந்த விஷயத்தில் என்னைத் தோற்கடித்து விட்டது. பண நஷ்டம்... தவிர, வழக்கமான தயாரிப்புகளை உற்பத்தி செய்யப் பணமில் லாத குறை... இப்படிப்பட்ட சந்தர்ப்பத்திலே தான், பிஸினஸ் டூர் போய் விட்டுத் தாய் நாடு திரும்புகிற போது, பாரிஸ் டி கால் ஏர் போர்ட்லே ஆல்பர்ட் செக்வைரா என்பவ னைச் சந்தித்தேன்... அவன்...”

“கோவாவிலே பிறந்து, பெங்களூரிலே வாழ்ந்து, ரொம்ப வருஷங்களுக்கு முன்னு லேயே மெட்ராசுக்கு வந்து போக ஆரம் பித்தவன்... நிறைய மொழிகள் தெரிந் தவன்... தமிழ் ரொம்ப நன்ருகப் பேசு வான்... அவன் கடத்தல் செய்யாத பொருளே கிடையாது...”

ராஜகோபால் விவரம் சொல்லச் சொல்ல, அருணின் காதில், “என் டயரியிலே இந்த விவரமெல்லாம் இருக்கு!” என்று கிசுகிசுத்தான் சத்யா.

“ஆல்பர்ட்டுக்கு ஹெராயின் கடத்துவ தில் சிரமம் ஏற்பட்டிருந்ததால் என் உதவியை நாடினன். அதன்படி, என் ஃபாக்டரிக்கு ரா—மெடீரியல்ஸ் இறக்குமதி செய்கிற சாக் கில், அயல்நாடுகளிலிருந்து ஹெராயின் பொட்டலங்களையும் வரவழைத்தேன்... கெமிகல்ஸ் பாக்கேஜுக்குள் சின்னச் சின்ன ஹெராயின் பொட்டலங்களையும் ஒளித்து வைத்து அனுப்புவார்கள்... தன்மீது சந்தே கம் வராதபடி இருக்க, இப்படி ஒரு யுக்தியைக் கையாண்டான் ஆல்பர்ட்... சரக்கு எங்கள் கோடவுனுக்கு வந்துவிடும்... நானே பாக்கேஜைப் பிரித்து, ஹெராயின் பொட்ட லங்களை இந்தப் பங்களாவுக்குக் கொண்டு வருவேன்... அவ்வப்போது ஆல்பர்ட் எனக்கு ஃபோன் பண்ணுவான்... நான் இந்த ஹெராயின் பாக்கெட்டுகளை அவன் சொல்கிற பார்ட்டியிடம் கொடுத்துவிட்டு, பணத்தை வாங்கி வருவேன்... ஆல்பர்ட் ஆளனுப்பி, பணத்தை கலெக்ட் பண்ணிக் கொள்வான்... எனக்கும் கைநிறையக் கமி ஷன் கிடைக்கும்... நான் என்னவோ டெம்ப ரரியாகத்தான் இந்த வேலையில் ஈடுபட்டிருந் தேன்... என் நஷ்டத்தை ஓரளவுக்கு ஈடு கட்டிக் கொண்ட பிறகு, எயிட்ஸ் நோய்க் கான மருந்து தயாரிப்பில் ஈடுபடத் தீர்மா னித்திருந்தேன்... அதற்காகவே அந்த மருந்து ஃபார்முலாவை எப்படியாவது கைப்பற்றிக் கொண்டு வரச் சொல்லி, என் மகள் லேகாவை சராகாவில் வேலையில் அமர்த்தியு மிருக்கிறேன்... இதுதான் சார் உண்மை..”

சொல்லி முடித்துவிட்டு, ஒரு பெருமூச்சு விட்டார் அந்தப் பெரிய மனிதர் பாலசுந் தரம்.

“சரி... மற்ற விஷயங்களை எங்கள் ஆபீ சில் போய்ப் பேசிக் கொள்வோம்... அதற்கு முன்னுல் இந்த அறையை ஸெர்ச் பண்ண வேண்டிய வேலை இருக்கிறது...” என்ற ராஜ கோபால் மளமளவென்று காரியத்தில் இறங்கினுர்.

நாற்பது நிமிடங்களுக்குப் பிறகு பால சுந்தரத்தையும் ஜீப்பில் ஏற்றிக் கொண்டு புறப்பட்டார்கள்.

ஜீப்பில் போகும் போது சத்யாவிடம் மெதுவாக விசாரித்தான் அருண். “இப்போ ஆபீசுக்குப் போன உடனே, பாலசுந்தரத் திடம் ஸ்டேட்மென்ட் எழுதி வாங்கிக் கொண்டு விட்டு, பெயிலில் விட்டுவிடு வார்களா?”

பலமாகத் தலையாட்டினுன் சத்யா. “அது அவ்வளவு சுலபத்தில் நடக்கிற விஷய மில்லை... பொய் சொல்கிருரா அல்லது அவர் சொன்னது முழுவதும் உண்மை தானு என்று லை—டிடெக்டர் கருவி வைத்துப் பார்ப்பார்கள். திருப்தி ஏற்படவில்லையென் ருல் பென்டதால் ஊசி போடுவார்கள்... எனக்கென்னவோ இந்த ஆள் ஜெயிலுக்குப் போய், சோள தோசையும் கடலை உருண் டையும் தின்னுவார் என்றுதான் தோன்று கிறது...”

“அதனுலென்ன? அவருடைய பெரிய மனுஷ இமேஜ் பாதிக்காதே!”

"அதென்னவோ உண்மைதான்!"

"இவருக்காகத்தான் — இன்னும் குறிப்பாகச் சொல்ல வேண்டுமானல் — இவருடைய மகள் லேகாவுக்காக அந்த ஃபார்முலாவைத் தேடி அலேகிறேன்... அதுவாளுல் கைநழுவிப் போய்க் கொண்டிருக்கிறது!"

"ஃபார்முலாதானே! எங்கும் போய்விடவில்லே... பத்திரமாக இருக்கிறது!"

"எங்கே? எங்கே?"

"நான் கொடுத்தேனே டயரி — அதற்குள் அந்த ஃபார்முலா பேப்பரை எடுத்து வைத்தேன்..."

"வண்டியை நிறுத்தச் சொல்லுடா சத்யா... இப்பவே போய் அதை எடுக்க வேண்டும்..."

"டயரிதான் பத்திரமாக இருப்பதாகச் சொன்னயே!"

"அதை எனக்கு வேண்டிய சலூன்காரர் சதாவிடம் கொடுத்து வைத்திருக்கிறேன்... அந்த ஆளுக்கு அவ்வளவாகப் பத்திர உணர்ச்சி கிடையாது!"

"அலட்டிக் கொள்ளாமலிரு... ராஜகோபால் சார் நம்மை விட்டதும் நேரே சதா கடைக்குப் போவோம் இரண்டு பேரும்..."

**பி**ற்பகல் 12.40 க்கு அருணும் சத்யாவும் சதா கடைக்குப் போய்ச் சேர்ந்த போது, அவர் கன்னுபின்னுவென்று இரைச்சல் போட்டுக் கொண்டிருந்தார். இவர்களேக் கண்டதும், "கேளு சார் அக்கிரமத்தை!" என்று ஆரம்பித்து, புதிதாகக் கடையில் அப்ரெண்டிஸாகச் சேர்ந்திருந்த பையன் மீது புகார்க் காண்டம் படித்தார். "ஷேவிங் கத்துக்கடா கய்தேன்னேன்... செய்ஞ்சான் சார்... கத்தியிலே இருந்த சோப் நுரையை, இந்த டிராயர்லே இருந்த பேப்பர்கள்லே வழிச்சுக் குப்பைத் தொட்டியிலே கடாசிட்டான் சார், கஸ்மாலம்... மூணும் மாசம் ஏம்சந்த் மார்பாடி கடைலே மோ தரம் அடகு வச்ச ரசீது, கல்யாண நோட்டீசு, என் மச்சான் போட்ட லெட்டரு... அல்லாமே பூடுச்சு சார்..."

"சதா! நான் உங்ககிட்ட ஒரு டயரி கொடுத்தேனே — அது..."

"அது இருக்குது சார்... அதுக்குள்ளே ஒரு துண்டுக் காகிதம் செருகியிருந்தே பாரு, அதைக் கூட இந்த சோமாறி வுட்டு வைக்கல்லே சார்..."

தொப்!

மயங்கி விழுந்த அருணின் முகத்தில் தண்ணீர் பீய்ச்ச, கண்ணடி புட்டியை எடுத்தார் சதா.

**நா**ன்கு நாட்களுக்குப் பிறகு, கடற்கரையில் மாலேநேர ஜோடிகளின் எண்ணிக்கையில் அன்று இரண்டு கூடுதலாக இருந்தது.

அருண் — லேகா; சத்யா — அம்பிகா.

"உங்களுக்கு விஷயம் தெரியுமா அருண்! இவர் எனக்கு ஏதோ தூரத்துச் சொந்தமாம்... எங்கம்மா சொல்லித்தான் எனக்கே தெரியும்... மாமாவுக்குக் கூட அந்த உறவு முறை தெரியாதாம்!" என்ருள் அம்பிகா முகமெல்லாம் பூரிப்பாக.

"அது சரி சத்யா... நீ ஏன் சராகா ஆபீசுக்குப் பாணியைப் பார்க்க வந்தாய் என்று சொல்லவே இல்லேயே!" என்று கேட்டான் அருண்.

"பாலசுந்தரம் வரவழைத்த 'ரா — மெடீரிய'லின் சாம்பிள் எனக்குக் கிடைத்திருந்தது... அதை டெஸ்ட் செய்வதற்காக சராகா ஆய்வுக் கூடத்தை அணுகினேன்... அப்போதுதான் அந்த சாம்பிளில் ஹெராயின் கலந்திருக்கிற விஷயம் தெரிய வந்தது... அதிலிருந்துதான் என் வேட்டையைத் தீவிரமாக்கினேன்..."

"என் அப்பா இவ்வளவு கீழ்த்தரமாக ஒரு கடத்தலில் இறங்குவார் என்று நானே எதிர்பார்க்கவில்லே..." என்ருள் லேகா வருத்தத்துடன்.

"அவர் ஜெயிலிலிருந்து திரும்பி வந்த பிறகாவது ஒழுங்காக பிஸினஸைக் கவனித்தால் சரி..." — அருண்.

"முட்டைக் கண்ணு! நீ செய்ததிலேயே புத்திசாலித்தனமான காரியம் அந்த இரண்டு லட்சரூபாயைப் பத்திரப்படுத்தியதுதான்!"

"அப்படி எங்கே வைத்திருந்தார் பணத்தை?" — அம்பிகா கேட்டாள்.

"சென்டிரல் ஸ்டேஷன் குளோக் ரூமில் வைத்துப் பூட்டி, ரசீதை ஆபீசில் வைத்திருந்தான்..."

"உண்மையைச் சொல்லட்டுமா? கையிலே பணக்கற்றையை வைத்துக் கொண்டு ஆட்டோவைக் கூப்பிட்ட போது 'வராது சார்! வண்டி சென்டிரலுக்குப் போவுது!' என்று சொன்னன்... 'நானும் அங்கேதான் போகணும்!' என்று சும்மாவானும் சொல்லி ஏறிக் கொண்டு விட்டேன்... சென்டிரல் ஸ்டேஷனுக்குள் நுழைந்து பிளாட்பாரத்தில் அலேந்தபோதுதான் குளோக் — ரூம் என் கண்ணில் படவும், அந்த ஐடியா வந்தது!"

"ராஜகோபாலே மத்தியானம் பார்த்தேன்... ஆல்பர்ட் செக்வைராவின் கும்பலே அன்றைக்கே மடக்கிப் பிடித்து விட்டாராம்... நான் செய்திருக்கும் உதவிக்கு, கேஷ் அவார்ட் வாங்கித் தருவதாகச் சொல்லியிருக்கிருர்..." என்ருன் சத்யா.

"நீ அவார்ட் வாங்கி என்னடா புண்ணியம்? அநியாயமாக அந்த ஃபார்முலா போய்விட்டதே!" — அருண்.

"அந்த ஃபார்முலாவுக்காக என்னுலான ஒரே ஒரு உதவியை எந்த நிமிஷமும் நான் செய்யத் தயார்!"

"என்ன உதவி?" — அருண், லேகா, அம்பிகா மூவரும் ஒரே சமயத்தில் கேட்டார்கள்.

"வேறென்ன? ஒரு நிமிஷம் மௌன அஞ்சலி செலுத்துவதுதான்!"

**வே**தாளம் சொல்லி முடித்ததும் வெகு நேரத்துக்கு மண்டையைப் போட்டு ஆட்டிக் கொண்டிருந்தார் அற்புதசாமி.

(முற்றும்)

பம்பாய் புறநகர் வாசிகளின்
சௌகரியத்தை முன்னிட்டு

# சக்தி பைனான்ஸ் லிமிடெட்

தனது பம்பாயின் இரண்டாவது கிளையை

# செம்பூரில்

24/7 சர்வோதயா எஸ்டேட் போஸ்டல் காலனி,
ஆர்.ஸி. மார்க், யதுகல் கோவபரேடிவ்
ஹவுஸிங் சொசைட்டி கட்டடத்தில் தனது
சொந்த இடத்தில் தொடங்குகிறது.

தொடக்க விழா

நாள்: 28-6-1987 (ஞாயிறு) மாலை 5 மணி
இடம்: அஹோபில மடம், 8-வது சாலை, செம்பூர்

அனைவரும் வருக

எம்.எஸ். ஷெனுய்
டிவிஷனல் மானேஜர்

எஸ்.என். பய்
நிர்வாகத் தலைவர்

பம்பாய் பிரதான கிளை
1012, டலாமல் டவர், 211 நரிமன்பாயிண்ட், பம்பாய் 400021




## சக்தி பைனான்ஸ் லிமிடெட்

பதிவு அலுவலகம்: 475 டாக்டர் நஞ்சப்பா சாலை
கோயம்புத்தூர் 641 018 போன்: 32240: 30500.

ரூ. 190 கோடி பெறுமதியுள்ள "சக்தி" குழுவின் ஓர் அங்கம்

UIPC: SF: 11: 1987

# முழுவரையில் ஒரு முகவரி

— ஜீஷ்மன் —

மணி நாலரை. ஆஸ்பத்திரி சந்தைக் கடையாகிவிட்டிருந்தது. நாலு மணியானுலே இந்த நிலேதான். நோயாளிகளேப் பார்க்க வருகிறவர்கள் அது ஓர் ஆஸ்பத்திரி என்பதையே மறந்து விடுகிருர்கள். எத்தனே கூச்சல் போட்டுப் பேசுகிருர்கள்!

கேசவன் படுத்திருந்த வார்டு ஸ்பெஷல் வார்டு என்பதால் அதில் ஆறு படுக்கைகள் தாம். ஜெனரல் வார்டில் இருப்பதைப் போல, இங்கே அத்தனே கும்பல் வரா தென்ருலும் ஒவ்வொரு கட்டிலேச் சுற்றியும் நாலு மணியானுல் நான்கைந்து பேருக்குக் குறைச்சல் இல்லே. அவனேப் பார்க்க மாலே யில் நாராயணன் வருவான். காலேயில் அவன் மனேவி வருவாள். மாலேயில் நார்ா யணன் வரும்போது, என்ருவது அவன் பையன் பாஸ்கரையும் அழைத்து வருவான்.

நாராயணனேப் பற்றி அவன் நினேத்துக் கொண்டிருக்கும்போதே கையில் பிளாஸ்டிக் கூடையில் அவனுக்கு இரவுச் சாப்பாட்டுடன் நாராயணன் உள்ளே நுழைந்து கொண்டிருந் தான். கட்டிலில் படுத்துக் கொண்டிருந்த கேசவன் மெல்லிய புன்னகையுடன் எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

எதிரேயிருந்த ஐந்தாம் எண் கட்டிலில் படுத்துக் கொண்டிருந்த கிழவர், சிரமப்பட்டு எழுந்திருந்து, தலேக்கடியிலிருந்த தலேயணே யைச் சாய்மானமாக வைத்துக் கொண்டார். அறையைச் சுற்றித் தன் பார்வையை ஓட விட்ட அவர் முகத்தில் சொல்லவொண்ணுத சோகம் கப்பியிருப்பதாகக் கேசவனுக்குத் தோன்றியது.

கிழவர் கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு சோகமாக உட்கார்ந்திருந்தார். அந்த அறையில் மற்ற கட்டில்களுக்கு அருகே யெல்லாம் கூட்டம் நிரம்பி வழிந்தது. நோயாளிகளேப் பார்க்க வந்த கூட்டமாக இல்லே அது. ஏதோ உல்லாசமாகப் பொழுது போக்க ஓர் இடம் கிடைத்துவிட்டதைப் போன்ற துறுதுறுப்புடன் அவர்கள் பேசிக் கொண்டிருந்தார்கள்.

இந்தக்கிழவரைப் பார்க்க மட்டும் யாருமே வரக் காணும். தினம் பகல் ஒரு மணிக்கு, யாரோ ஓர் ஆள் டிபன் காரியரில் சாப்பாடு எடுத்துக் கொண்டு வந்து அவர் கண்ணில் படும்படி வைத்துவிட்டுச் செல்கிருன். அதே ஆள் இரவு ஏழரை அல்லது எட்டு மணிக்கு ஒரு பிளாஸ்டிக் கூடையில் அவருக்கு ஏதோ பலகாரமோ — ரொட்டி, பழங்களோ கொண்டு வந்து கொடுத்துவிட்டுப் போகிருன்.

அவன் அவரை ஏதும் விசாரிப்பதாகத் தெரியவில்லே. அவரும் அவனிடம் ஒன்றிரண்டு வார்த்தைகளுக்கு மேல் பேசி அவன் கேட்டதில்லே. சாப்பாடு கொண்டு வரும் ஆள் எடுபிடி ஆளாகத்தான் தோன்றினுனே தவிர, கிழவரின் உறவுக்காரன் என்று எண்ணும்படியாகத் தெரியவில்லே.

அப்போ.... இந்தக்கிழவர் என்ன அனுதை யா?

இவன் சிந்தனேகளே யூகித்துவிட்டார் போல, கிழவர் இவனேயே தீவிரமாகப் பார்த்துக் கொண்டிருந்தார். கேசவனுக்குச் சங் கடமாக இருந்தது.

நல்லவேளே. "அநேகமா நீ திங்கட்கிழமை டிஸ்சார்ஜ் ஆயிடுவே. கவலேயை விடு...!" என்று சொல்லிக் கொண்டே வந்தான் நாராயணன்.

"என்ன ஸார் சாப்பிடலேயா...?" என்று கேட்டுவிட்டு, ஸ்டூலே எடுத்துப் போட்டுக் கொண்டு சம்பிரமமாகச் சாப் பாட்டுக் கடையைத் தொடங்கினுர் நான்காம் எண் படுக்கையில் இருந்த சாயபு.

கேசவன் கைக்கடிகாரத்தைப் பார்த்



தான். மணி எட்டுத்தான் ஆகியிருந்தது. வந்தவர்கள் எல்லாம் போய், ஆஸ்பத்திரியில் அநேகமாக அரவம் ஒடுங்கிப் போயிருந்தது. ஜெனரல் வார்டில் யாரோ ஒரு நோயாளி ஈன ஸ்வரத்தில் இடைவிடாமல் முனகிக் கொண்டிருந்த ஒலி, அங்கு நிலவிய அமைதிக்கு ஒருவிதச் சோகம் கூட்டிக் கொண்டிருந்தது.

ஐந்தாம் எண் கட்டில் கிழவர் சாய்ந்தவாறு தூங்கிக் கொண்டிருந்தார்.

கேசவன் எழுந்து போய்க் கை கழுவி விட்டு வந்து சாப்பிட உட்கார்ந்தபோது, கிழவரின் கட்டிலுக்கருகில் பிளாஸ்டிக் கூடையில் அவருக்கு ஏதோ உணவுப் பொட்டலம் கொண்டு வைத்துவிட்டுப் போய்க் கொண்டிருந்தான் ஒருவன். வெளியே சென்ற அவனிடம் வார்டு பாய் ரத்தினம் ஏதோ பேசிவிட்டுச் சிரித்துக் கொண்டே உள்ளே வந்தான்.

"ஏன் ரத்தினம், அந்த ஆள் பாட்டுக்கு சாப்பாட்டுக்கூடையைவைச்சுட்டுப்போயிட்டானே! கிழவரை எழுப்பி சாப்பிடச் சொல்லக் கூடாது....?"

ரத்தினம் சிரித்தான்.

"பெத்த பிள்ளைக்கே அக்கறை இல்லீங்களே ஸார். இவன் யாரு...? வேலைக்காரன் தானே...? இவனுக்கு என்ன வந்தது...? நீங்களுந்தான் பாக்கறீங்களே! இந்தக் கிழவருக்கு உறவு முறையின்னு யாராச்சும் வந்து பார்க்கறாங்களா? இவ்வளவுக்கும் கிழவரோட பிள்ளை பெரிய ஆபீஸராம்! எப்பவாவது காரிலே வருவாரு. வந்தா ரெண்டு நிமிஷம் கூட இங்கே அப்பாருகிட்ட நின்று பேச மாட்டாரு. டாக்டருகிட்டப் பேசிட்டுப் போயிடுவாரு...."

சுவாரசியமாகக் கேட்டவாறே, கேசவன், டிபன் காரியரைத் திறந்து வைத்துக் கொண்டு சாப்பிட ஆரம்பித்தான்.

"பாவம்... கிழவர் கேஸ் ஒண்ணும் தேருதுன்னு பேசிக்கிறுங்க...!" என்று மெதுவாகச் சொல்லிவிட்டுப் போனான் ரத்தினம்.

சாப்பிட்டு முடித்து, டிபன் காரியரைக் கழுவிவிட்டு வந்தபோது, கிழவர் பிளாஸ்டிக் கூடையிலிருந்து பொட்டலத்தை எடுத்துப் பிரித்துக் கொண்டிருப்பதைக் கவனித்தான் கேசவன்.

தண்ணீர் கூட எடுத்து வைத்துக் கொள்ளாமல் பொட்டலத்திலிருந்த இட்லியை விண்டு விண்டு வாயில் போட்டுக் கொண்



டிருந்தார் அவர்.

அவரைப் பார்க்கும்போது கேசவனுக்குப் பாவமாக இருந்தது.

எழுந்து போய், அவரருகில் இருந்த பிளாஸ்கில் இருந்து தம்ளரில் வெந்நீர் ஊற்றி அவர் அருகில் வைத்தான்.

''தாங்க்யூ'' என்று சொல்லிவிட்டுக் கனிவுடன் அவனைப் பார்த்தார் அவர்.

இந்தக் கனிவை வாங்கிக் கொள்ளத் தெரியவில்லையே அவர் பிள்ளைக்கு — என்று தோன்றியது கேசவனுக்கு.

பெரிய உத்தியோகத்தில் இருப்பதால் அவருடைய பிள்ளையால்தான் அடிக்கடி வந்து போக முடியவில்லை. மருமகள் கூட ஒருமுறை வந்ததாகத் தெரியவில்லையே!

''வீட்டுலேருந்து 'துணைக்கு யாரையாவது வரச் சொல்றதுதானே?''

கிழவர் ரொம்ப நிதானமாகத் தலையை உயர்த்தி, தீர்க்கமாக அவனைப் பார்த்தார்.

''யார் வர முடியும் ஸார்? பையனுக்குப் பெரிய வேலை. மருமக எங்கேயுமே வர மாட்டா. பேரனும் பேத்தியும் காலேஜிலே படிக்கிறாங்க. யார் வருவாங்க? டாக்டர் கிட்டே போன் பண்ணிச் சொல்றான் பையன். அவர் கவனிச்சுக்கிறார்.'' —

கவலையில்லாமல்தான் பேசுகிறாரா, இல்லை, வெறுப்பை மறைத்துப் பேசுகிறாரா என்று அவருடைய பேச்சிலிருந்து கேசவனால் எதையும் புரிந்து கொள்ள முடியவில்லை.

பணமும் செல்வாக்கும் இருந்துவிட்டால் மட்டும் போதுமா? பாசம் என்பதை வலுக்கட்டாயமாக எப்படி இறக்குமதி செய்வது?

**10**றுநாள் பிற்பகல் திடீரென்று கிழவருக்கு மூச்சு வாங்க ஆரம்பித்துவிட்டது. அவர் படும் அவஸ்தையைப் பார்த்துப் பயந்து போய், கேசவன்தான் ஸ்டாப் நர்ஸைக் கூட்டிக் கொண்டு வந்தான்.

அவள் பரபரத்து, டியூட்டி டாக்டரை வரவழைக்க, அவர் கிழவருக்கு ஆக்ஸிஜன் செலுத்தச் செய்ய.... ஓர் அரை மணி நேரத்தில் அந்த வார்டே திமிலோகப்பட்டுவிட்டது.

அவரை தினமும் கவனித்துக் கொண்டிருந்த பெரிய டாக்டரும் வந்து விட்டார்.

எப்படியோ... கிழவரை ஒரு நிதானத்துக்குக் கொண்டு வந்தாயிற்று.

ஒன்றுமே நடக்காதது போல, அன்று சாயங்காலம் அவர் கட்டிலில் சாய்ந்து கொண்டு முகட்டு வளையைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

கிழவரின் பிள்ளை, அல்லது வேறு யாராவது அவர் வீட்டிலிருந்து அன்று கட்டாயம் வருவார்களென்று கேசவன் எதிர்பார்த்தான்.

யாரும் வரவில்லை.

வழக்கம் போல, அந்த வேலைக்காரன் தான் வந்துவிட்டுப் போனான். கிழவர் அவனிடம் ஏதும் விசாரிக்கவில்லை. அவர் யாரையும் எதிர்பார்த்து ஏமாந்ததாகவே தெரியவில்லை.

கேசவனுக்கு வேடிக்கையாக இருந்தது.

**தி**ங்கட்கிழமை காலை அவனைப் பரிசோதித்த அவனுடைய டாக்டர், ''யூ ஆர் ஆல் ரைட் மிஸ்டர் கேசவன், யூ கேன் கோ ஹோம் டுடே,'' என்று சொல்லிவிட்டுச் சென்றார்.

''எனக்கு இன்னைக்கு டிஸ்சார்ஜ் பர்வதம்'' என்று ஒரு குழந்தையின் குதூகலத்துடன் அவன் மனைவி பர்வதம் வந்த போது சொன்னான்.

''மருந்தெல்லாம் எழுதி வாங்கிண்டீங்களா?''

''இங்கே பார்மாலிடியெல்லாம் முடிஞ்சு நாம கிளம்பறச்சே நாலு மணி ஆயிடும். அஸிஸ்டென்ட் டாக்டர் எழுதித் தரேன்னார். வாங்கிக்கலாம்!''

''ஒரு பெரிய நிம்மதி!'' என்று நிம்மதிப் பெருமூச்சு விட்டாள் பர்வதம்.

சாயங்காலம் வீட்டுக்குப் புறப்படும் போது ஐந்தாம் எண் கட்டிலருகில் போய் நின்று, ''என்னை டிஸ்சார்ஜ் பண்ணிட்டாங்க தாத்தா. நான் வரேன்'' என்றான் கேசவன்.

கிழவர் எழுந்து உட்கார்ந்தார்.

''ஆஸ்பத்திரியிலிருந்து டிஸ்சார்ஜ் ஆறவங்க திரும்பி இங்கே வர நெனைப்பே இல்லாம்ல்தாம்பா போகணும். சௌக்கியமா இரு!''

வீட்டுக்குப்போகும்போது, பர்வதத்திடம், கிழவரைப் பற்றி, எத்தனையோ செல்வமிருந்தும், அவர் வீட்டில் யாருமே வந்து அவரைக் கவனிக்காததைப் பற்றியெல்லாம் கதை கதையாய்ச் சொல்லிக் கொண்டே வந்தான் கேசவன்.

''அது சரி, இந்தக் கிழவர் அந்த ஆபீஸரோட சொந்த அப்பாதானுமா...?'' என்று கேட்டாள் பர்வதம்.

''ஆமாம். டாக்டரே தன்னுடைய அஸிஸ்டென்ட்கிட்ட சொல்லிக்கிட்டிருந்ததை நான் கேட்டேன்.''

பர்வதம் அப்புறம் ஒன்றும் பேசவில்லை.

''காரணமே இல்லாம திடீர்னு அந்த எம். எல். ஏ. ஏன் வெளிநடப்புச் செய்யறாரு?''

''அட நீங்க ஒண்ணு! அவருக்குத் தூக்கத்திலே நடக்கிற வியாதிங்க!''

— ஆர். அரிகோபி.



அடுத்த இதழில்...



விலைவாசி உயர்வால் திணறும் குடும்பத் தலைவி

—ஓர் அலசல்

இரண்டு மாதத்திற்குமேல் மேல் ஆகி விட்டது, கேசவன் ஆஸ்பத்திரியில் இருந்து டிஸ்சார்ஜ் ஆகி வந்து.

மறுபடியும் வாழ்க்கை, ஆபீஸ், நண்பர்கள், வீடு என்று பழைய கதியில் இயங்க ஆரம்பித்து விட்டது.

திருச்சிக்குச் சென்றிருந்த தன் மனைவியை அழைத்துவர நாராயணன் அன்றிரவு ஊருக்குப் போவதாக இருந்தான். எனவே, ஆபீஸ் விட்டதும் அவனுடன் ஓட்டலில் ஏதாவது சாப்பிட்டு விட்டு, அவனை வண்டியேற்றி விட்டு வீட்டுக்குத் தாமதமாகத்தான் வர இயலும் என்று காலையிலேயே வீட்டில் சொல்லி விட்டு வந்திருந்தான் கேசவன்.

சாயங்காலம் ஆபீஸ் விட்டதும் நேராக அருகேயிருந்த ஓட்டலில் அவர்கள் நுழைந்தார்கள்.

அவர்கள் சாப்பிட்டு முடித்து வெளியே வந்தபோது, தெருவில் வாண வேடிக்கையும் பாண்டு வாத்தியமுமாய் ஏதோ ஊர்வலம் அமர்க்களப்பட்டுக் கொண்டிருந்தது.

"இந்த ஊர்வலம் நகர அரை மணி ஆகும் போலிருக்கே!" என்றுசொல்லிக்கொண்டே வெளியே இருந்த பெட்டிக் கடையில் சிகரெட் வாங்கினான் நாராயணன்.

"என்ன ஸார் சௌக்கியமா?"

கேசவன் திரும்பிப் பார்த்தான். ஆஸ்பத்திரி வார்டுபாய் ரத்தினம் நின்று கொண்டிருந்தான்.

"இன்னைக்கு ஆஃப்ஸார்! அதுதான்சும்மா இப்படி வந்தேன். இந்த ஊர்வலம் எதுக்குத் தெரியுமா ஸார்?" என்று கேட்டான் ரத்தினம்.

சிகரெட்டைப் பற்ற வைத்துக் கொண்டு புகையை ஒருதரம் இழுத்து உறிஞ்சி விட்டுக் கொண்டே அவன் சொல்வதைக் கேட்க அருகே வந்து நின்றான் நாராயணன்.

"சொல்லு...!"

"ஐந்தாம் நம்பர் கட்டில்லே, ஒரு தாத்தா இருந்திச்சே அது 'டெத்' ஆயிடுச்சு! அதை எடுத்திட்டுப் போறாங்க. நான் சொல்லலை? அந்தத் தாத்தாவோட பையன் பெரிய ஆபீஸர்னு...! சாவுக்கு இன்னு் செலவு பார்த்திங்களா?"

சர்... சர் என்று சீறிக் கொண்டு ஆகாயத்தில் வாணங்கள் பறந்து சென்று வெடித்துக் கொண்டிருந்தன.

பாண்டு வாத்தியம் முழங்கிக் கொண்டிருந்தது.

தெருவை அடைத்துக் கூட்டம் நெருக்கிக் கொண்டிருந்தது.

மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பட்டுத் தூரத்தில் வந்து கொண்டிருந்த பெரிய படகுக் காரில் ஆஸ்பத்திரியில் அனாதை போலக் கிடந்த கிழவரின் சடலம் ராஜ மரியாதையுடன் பவனி வந்து கொண்டிருந்தது!

கேசவன் நாராயணனைப் பார்த்தான்.

சிகரெட்டைத் தூர எறிந்து விட்டுத் தெருவில் காறி உமிழ்ந்து கொண்டிருந்தான் நாராயணன்.

# வேண்டாம், பெருந்தன்மை!

கதை - கா.சு.வேலாயுதன்
படம் - கரோ

இன்டர்வியூவுக்குச் சென்று மீண்டும் தோல்வியைத் தழுவிய மூர்த்தி...




சாலை ஓரம் மறைந்தும் மறையாமலும் ஒரு புதரின் இடையில்...




கையில் எடுத்தான் மூர்த்தி... விஸிட்டிங் கார்டு செருகியிருந்தது.




வினோத் வீட்டுக்குச் சென்றான் மூர்த்தி...







அந்தப் பக்கமா ஆட்டோலே போயிட்டிருந்தேன். இதைக் கையிலே பிடிக்காம ஸீட் மேலே பக்கத்தில் வச்சிருந்தது தப்பு. குலுக்கல்ல எகிறி விழுந்திருக்கு! நான் கவனிக்கலே....


... ரொம்ப வால்யுபிள் டாகுமெண்ட்ஸ் இருக்குப்பா இதிலே... உனக்குப் பிரதியுபகாரமா என்னால் முடிந்த எதையும் செய்யக் கடமைப் பட்டிருக்கேன்... அது சரி...


நல்ல சான்ஸ்! இவர் கம்பெனியிலேயே நமக்கு ஒரு வேலை போட்டுக் கொடுக்கச் சொல்லலாம்!


மூர்த்தி யோசித்து முடிவதற்குள், விநோத் பேசிக் கொண்டே போனார்...
நீ யாரு? என்ன பண்றே...?
பி. எஸ்ஸி முடிச்சிருக்கேன் ஸார். பஸ்ட் கிளாஸ். வேலை தேடிக்கிட்டிருக்கேன். என் அப்பா சச்சிதானந்தம் ஸெயிண்ட் மைக்கேல் பள்ளியில் பிஸிக்ஸ் மாஸ்டர்.


விநோத் வியப்பும் மகிழ்ச்சி-யுமாக ...
அட, சச்சிதானந்தம் மகனா நீ! அதான் பிரதி-யுபகாரமா எதையுமே என்னைக் கேட்க மாட்டேங்கறே! அப்பாவின் பெருந்-தன்மை மகனிடம் இருக்காதா, பின்னே!

மூர்த்தி திடுக்கிட்டு...

ஸார், ஸார்! நீங்க தப்பா புரிஞ்சுக் கிட்டீங்க. வந்து நான்... நான் அப்படியெல்லாம் இல்லே ஸார்!

ஆஹா! எவ்வளவு அடக்கமா பேசறே- அசல் அப்பா மாதிரியே! இதைக் கேளு...












ஏமாற்றத்துடன் திரும்பினான் மூர்த்தி...



ராஜம். இளப்பமாகத்தான் பார்த்தாள்.

அவரது பரபரப்பை!

ஆர்வத்தை!

டைம் என்னாச்சு... பாரு.... என்ற அவசரத்தை.

டிபன் ரெடி பண்ணிடு. அம்மாவுக்குப் பசி தாங்காது எனும் உத்தரவை!

அம்மாவை அழைக்கப் போவது கேலிக்குரிய விஷயமா?

சட்டையை மாட்டிக் கொண்டு வாசலில் இறங்கியவரிடம், "சீக்கிரம் வந்துடுங்க..." என்றாள்.

"ம்...."

"எட்டு மணி ஆகுமா?"

"ஏழு இருபதுக்கு வண்டி. வீட்டுக்கு வர.... ம்ம்.... ஆகும்."

"ஆபீஸுக்கு....?"

"வந்ததும் கிளம்பணும். ஆடிட் நடக்கிறப்ப லீவு எங்கே எடுக்கிறது?"

அவள் 'அப்பாடா' என்று பார்ப்பதைப் போல் இருந்தது. லீவு என்றால் வாடி இருப்பாளா?

"எங்க அண்ணன் வந்தப்ப ரெண்டு மணி நேரம் ஒதுக்க முடியலை. இப்ப உங்க அம்மா வரும்போது மட்டும்....

இருபது வருஷத் தாம்பத்தியத்திற்குப் பின்பும், என் சொந்தம் — உன் சொந்தம் — எல்லைக் கோடு விலகாதது ஆச்சரியம்தான்: மாமியாரை ஆகாத மனுஷியாக்கிய முதல்



**நே**ற்றுதான் கடிதம் வந்தது.

ஆபீஸிலிருந்து திரும்பி, கை கால் அலம்பி, காப்பி குடித்து, எஞ்சிய செய்திகளைப் படிக்கபேப்பரோடுதன் அறைக்குள்நுழைய— மேஜையில் அனுதையாகக் கிடந்தது — மடித்த உறை. கோணல் எழுத்து: 'சிரேஷ்ட புத்திரன் பத்துவுக்கு எனத் துவங்கும் வாச கங்கள். பிரியத்தைக் கொட்டி, பேரன் பேத்தி களை ஆசீர்வதித்து, மருமகளை விசாரித்து, பத்துவின் B.P. க்காகக் கவலைப்பட்டு, கடைசி யாய் எல்லாரையும் பார்க்க ஆசையா இருக்கு. புதன்கிழமை வர்றேம்ப்பா....

பத்மனுபன் எல்லாம் கண்டவர்தான்.

ராஜத்தின் ஸ்பரிசத்தை,

மூன்று குழந்தைகளுக்குத் தகப்பன் என்ற தகுதியை,

நடுத்தர ஆபீஸராய் அதிகாரத்தை.

எதிரில் வருகிறவர் இரண்டு அடி தள்ளி நிற்கிற மரியாதையை.

— எல்லாவற்றையும் பின்னே தள்ளி, அவரை அம்மணச் சிறுவனுக உணர்த்துகிற விஷயம் அம்மாவின் கடிதம் மட்டும்தான். விரல் சூப்பும் குழந்தையாக நினைத்துத்தான் இன்னும் எழுதுவாள்.

'உடம்பைப் பார்த்துக்கோப்பா. சனிக் கிழமை எண்ணெய் தேய்ச்சுக் குளி... இத்யாதி.

தன்னுல் ஏன் இப்படிஎழுத முடியவில்லை? நேசிப்பு இல்லை. ஆழமாய் அவளது சுகத் தில் கவனத்தைப் பதிக்க முடியவில்லை. தவரு மல் மாதம் ஒன்ருக வரும் கடிதத்திற்கு எப் போதாவது இரண்டு வரிகளில் பதில் எழுதிப் போட்டால் அதிகம்.

காரணம் ராஜமா? குழந்தைகளா?

சுகித்து, பெற்று, தனி மரமாய் வேர் ஊன்றிக் கொண்ட தென்பா?

பாசம் ஒரு வழிப்பாதை போலவே இருந் தது. பெற்றவன் (ள்) குழந்தை மீதும், குழந்தை தான் பெற்றவைகளின் மீதும்... தள்ளிக் கொண்டே போய்.....

எங்கு நிற்கும் இது?

''லெட்டர் எப்ப வந்தது?''

> கைதி 1: ஆச்சர்யமாயிருக்கே! நீ அரசு அலுவலகத்துள் புகுந்து பைல்களைத் திருடினதுக்கு நீதிபதி உன்னைப் பாராட்டி ஞரா?
>
> கைதி 2: ஆமாம். எப்படியோ பைல்கள் நகர நான் ஒரு காரணமாக இருந்துள் ளேனே, அதனுல்தான்!
>
> — கீழை அ. கதிர்வேல்



பத்மனுபன் அறையை விட்டு வெளியே வந்தார்.

ஹாலில், குடும்பம் முழுக்க டீ.வி.யில் ஆழ்ந்திருந்தது.

''காலையில்.....'' என்ருள் ராஜம்.

''லஞ்சுக்கு வந்தப்ப ஏன் சொல்லலை?''

''மேஜைல இருந்ததைப் பார்க்கலைன்னு நான் என்ன பண்றது?'' ராஜம் அவர் பக்கம் திரும்பவில்லை.

''அம்மா நாளைக்கு வர்றதா எழுதி இருக்கா....''

அவளிடமோ குழந்தைகளிடமோ சலனம் எதுவும் தென்படவில்லை.

தனது ஸ்தானத்தில் ஏதோ குறைப்பட்ட மாதிரி இருந்தது அவருக்கு.

தமது உழைப்புத்தான் இவர்களை சௌகர்யமாய் வைத்திருக்கிறது. சோறும், துணியும் சந்தோஷம் தருகிற வாழ்க்கையு மாய். ஆனுல் தன்னைப் பெற்ற மனுஷியோ, அவள் முக்கியம் என்று கருதிப் பேசுவதோ யாருக்கும் தேவையாயில்லை.

''முதல்ல இந்த டீ.வி.யை உடைச்சு எறிய ணும். அப்பத்தான் இந்த வீடு உருப்படும்'' என்ருர்.

''அப்பாவுக்கு என்ன கோபம்?'' என்ருள் மஞ்சு.

''உங்க பாட்டியின் கடிதாசைப் படிச் சிருக்கார். அதுல அப்படி எழுதி இருக்கோ என்னமோ....'' என்ருள் ராஜம்.

''என்னன்னு?''

''டீ.வி.யை உடைக்கணும்னு.....''

ஹாலில் எல்லோரும் சிரித்தார்கள்.

இவளுக்கு அம்மாவிடம் என்ன கோபம்?

உலகில் தொண்ணூறு சதம் மருமகள் களுக்கு என்ன கோபம்?

'உங்கம்மாவைப் பத்திப் பேசாதீங்க. கொஞ்சமாவா படுத்தினு.....? பெரியவன் வயித்துல இருந்தப்ப....

ஏதோ ஒரு அல்லது சில சம்பவங்களால் வெறுப்பேற்றிக் கொண்டவளாய், உள்ளே சிணுங்கி, உதட்டில் சிரிக்கிறவளாய், கட னுக்கு நடிக்கிறவளாய்.....'

**அ**ம்மாவைக் கண்டு பிடிப்பது சிரம மாயில்லை.

ரயில் நிற்பதற்கு முன்பாகவே, ஜன்ன லால் பார்த்துவிட்டுக் கூப்பிட்டாள்.

''பத்தூ.... பத்மனுபா.....''

அத்தனை இரைச்சல், சத்தத்திலும் துல்லிய மாகக் கேட்டது அவள் குரல்.

அம்மா!

முன்னைவிட இளைத்திருந்தாள். தோல் வெளுத்திருந்தது. நடையில் தளர்வு. தனி ஆளாய் இன்னும் எத்தனை நாட்கள் காலம் தள்ளுவாள்?

அம்மாவைத் தன்னுேடு வைத்துக் கொள்ளுவதைப் பற்றி அவர் பேசியது உண்டு. ராஜம்தான் தடுக்கிறவள்: ''வேணும். இந்தச் சூழ்நிலை அந்தம்மாவுக்கு ஒத்து வராது. தன்னுேட ஜனங்க, ஊர், வீடுன்னு தான் நினைப்பு இருக்கும். வயசானவங்

இவன் : ரெண்டாயிரம் படங்களில் பங்கு பெற்றதாக கின்னஸ் புத்தகத்தில் போட்டிருக்காங்களாம்!

அவன் : யாராம் அந்த நடிகர்?

இவன் : மைசூர் பிருந்தாவனம்!

— லஷ்ஜ்ஞ



களுக்குப் பழகின வாழ்க்கையை மாத்திக்கிறது அவ்வளவு சுலபம் இல்லே.'' காரணம் அதுவல்ல என்பது பத்மனாபனுக்குத் தெரியும்.

அம்மாவுக்கும் மருமகளின் ஜாடை புரிந்திருக்குமோ என்னவோ அவர் தயங்கித் தயங்கிக் கேட்பதை ஒற்றை வரியில் மறுத்து விடுவாள்.

''வேணும்ப்பா... நான் அங்கே நல்லாத்தான் இருக்கேன்'' ஆனாலும் அவளது வார்த்தைகளைத் தாண்டி உள்ளூர ஒரு சோகம் இருப்பது புரியும் — 'என் மகன், என் உறவுன்னு நெருங்கி இருக்க முடியலேயேடா' என்கிற மாதிரி.

இந்தத் தடவையாவது ஓர் இரண்டு மாதம் சேர்ந்தாற்போல் வைத்துக் கொள்ள முடியுமா?

அம்மா தகரப் பெட்டியுடன் இறங்கினாள். கூடவே இரண்டு தூக்குக் கூடைகள், பித்தளை வாளி.

''என்னம்மா இதெல்லாம்?''

''பலகாரம்..... சும்மா எப்படி வர்றது?''

''இவ்வளவு எதுக்கும்மா?''

''குழந்தைகள் வச்சுத் திங்கட்டுமேப்பா.''

பத்மனாபனுக்கு உள்ளூர உதைத்தது. ராஜம் ஏதாவது சொல்வாளோ? போன தரம் எள்ளு மாவு இடித்துக் கொண்டு வந்தாள். ராஜமோ, குழந்தைகளோ அதைத் தொடவில்லே.

''இதெல்லாம் வேணும். வயிற்றுக்கு ஆகாது....''

ஒரு வாரம் கழித்து வேலைக்காரி கொண்டு போனாள்.

பத்மனாபன் போர்ட்டரைக் கூப்பிட்டார்.

வீடு வந்துவிட்டது.

''வாங்க அத்தை....'' என எழுந்து நின்றாள் ராஜம்.

''வர்றேம்மா.... எங்கே குழந்தைகள்?'' அம்மா வீட்டை அண்ணாந்து பார்த்தபடி உள்ளே நுழைந்தாள்.

''மஞ்சு இருக்கா.... பசங்க கிரிக்கெட் விளையாடப் போயிருக்கானுக...''

''ம்....?'' என்றாள் அம்மா.

''கிரிக்கெட்.... பந்து விளையாட்டு....''

மஞ்சு சல்வார் கம்மீஸில் வெளிப்பட, ''இதென்னம்மா கோலம்? தாவணி போடப்படாதோ....'' என்றபடி உட்கார்ந்தாள் அம்மா.

யாரும் பதில் சொல்லவில்லே.

''வெந்நீர் போடு. குளிச்சுட்டு ஓய்வு எடுக்கட்டும். டிபன் என்னன்னு கேட்டுச் செய்...''

ராஜம் தலேயசைத்தாள்.

பத்மனாபன் ஆபீஸுக்குப் புறப்பட்டார்.

அம்மா வந்த ராசியோ என்னவோ. ஆபீஸில் நெட்டி முறித்தது. ஆடிட்டில் கேட்கும் ஒவ்வொரு தகவலுக்கும் இரவு பகலாக வேலே பார்க்க வேண்டியிருந்தது.

அம்மாவுடன் மனம் விட்டுப் பேச நேரம் இல்லே.

இரவு நேரம் கழித்து வரும்போது சில சமயம் அவள் தூங்கி இருப்பாள். விழித்திருந்தால் அசதியில் ஒன்றிரண்டு வார்த்தைகள்.

''எல்லாம் வசதியா இருக்காம்மா....''

''இருக்குப்பா.....''

சில வேளைகளில் குழந்தைகளோடு, குறிப்பாக கடைசி வாண்டு ரமேஷுடன் பேசிக் கொண்டிருப்பதைக் காண முடியும். விசித்திரமான கதைகள் சொல்வாள். அல்லது டி.வி.யில் படம் பார்த்து, 'இது என்ன... அது என்ன....' என்ற விசாரிப்பு....

ராஜம்கூட அம்மாவின் இருப்பில் அசௌகரியம் எதுவும் அடையாதவள் போலத்தான் தோன்றினாள்.

சாப்பாடு, டிபன் வேளைகளில், ''பாட்டியைக் கூப்பிடு....'' எனக் குழந்தைகளிடமோ, ''ஏம்மா.... ஆறிப் போயிடும். வாங்க....'' என்று அவளே அழைப்பதையும் கூடப் பார்க்க முடிந்தது.

அம்மா, ''ஊருக்குப் புறப்படறேம்ப்பா...'' என தகரப் பெட்டியை எடுத்துக் கொள்வது இவள் வெளிப்படுத்தும் குறியீடுகளைச் சார்ந்தது.

அம்மாவும் இங்கேயே இருந்து, இவர்களும் இப்படி இணைந்து பழகினால் எவ்வளவு நன்றாக இருக்கும்?

ஆசை முளைவிட்ட இரண்டாம் நாளே முதல் சம்பவம் நடந்துவிட்டது.

அன்றைக்கும் பத்மனாபன் வீடு திரும்ப நேரமாகிவிட்டது. டி.வி.யில் ஒளியும் ஒலியும்.

வாசலில் ஸ்கூட்டரை நிறுத்தும் சப்தம் கேட்டு அம்மாதான் முதலில் எழுந்தாள். மருமகளைக் கவனப்படுத்துகிற அக்கறையுடன், ''ராஜம்.... தம்பி வந்திருச்சு'' என்றாள்.

''வரட்டும் ஃப்ளாஸ்கில் காப்பி இருக்கு. ஊத்திக் குடிக்கச் சொல்லுங்க....''

''என்னடீம்மா.... களைச்சு வர்ற பிள்ளைக்குக் காப்பி கூட போட முடியாமட...''

ராஜம் அதைப் பொருட்படுத்தவில்லே.

"எல்லாம் அவரே எடுத்துப்பார்" என்றான்.
"ரொம்ப நல்லா இருக்கு குடும்பம் நடத்தற லட்சணம்...." அம்மா பொறுமிக் கொண்டே எழுந்து வந்தாள். "அந்த நாள்லே அவங்க அப்பா கூப்பிட்டதுக்கு உடனே வரலேன்னு எச்சில் தட்டை விட்டெறிஞ்தார். அந்தத் தழும்பு நெத்தியிலே இன்னும் இருக்கு.... இங்கே நிலைமை இப்படி.... ம்....

தான் இதைச் சொல்லி இருக்கக் கூடாது என்பது அவளுக்குப் புரியவில்லை.

பத்மனாபன், "சும்மா இரும்மா...." என்றார்.

"இருக்கேம்ப்பா.... இதெல்லாம் பார்க்கத் தானே வந்திருக்கேன்...."

"உங்க பிள்ளையையும் விட்டெறியச் சொல்லி அதையும் பார்த்திடுங்கோ...."

"ராஜம்...." என அதட்டல் போட்டார் பத்மனாபன்.

"செஞ்சிடுங்கோ.... அதான் சொல்லித் தர அம்மா வந்தாச்சே?"

"நான் என்னடீம்மா இப்ப சொல்லிட்டேன்?" அம்மா தழுதழுத்த குரலில் கேட்க, ராஜம் முகத்தைத் தோள்பட்டையில் இடித்துக் கொண்டு உள்ளே போனாள்.

"அவ புத்தி தெரியாதா... நீ போய்ப் படும்மா" என்றார் பத்மனாபன்.

அன்றைக்கு அவள் ரொம்ப நேரம் தூங்கவில்லை என்பது, இடையிடையே புரண்டு படுப்பதிலிருந்து தெரிந்தது.

மறுநாள் அவர் ஆபீஸுக்குக் கிளம்புகிற வரை அம்மா கண்ணில் படவே இல்லை.

புறப்படுகிற அவசரத்தில், "அம்மா சாப்டாச்சா?" எனக் கேட்டார். யாரும் பதில் சொல்லவில்லை. "ஏண்டி.... உன்னைத்தான்...." என ராஜத்தை குறிப்பாகக் கேட்க, "தெரியாது...." என்றாள்.

"மணி என்னாச்சு? கூப்பிடலையா?"

"பசி இல்லேன்னா என்ன பண்றது... ஊட்டியா விட முடியும்?" வார்த்தைகள் வெடுக்கென்று வந்தன.

வாசல்வரை வந்தவர் திரும்பவும் உள்ளே போனார்.

அம்மா புழக்கடைத் தாழ்வாரத்தில் பாய் போட்டு உட்கார்ந்திருந்தாள்.

"பசிக்கலேப்பா...." என்றுதான் அவருக்கும் சொன்னாள்.

"கொஞ்சமாச்சும் சாப்டும்மா...." என வற்புறுத்த, "சரி.... நீ போ" என்றாள்.

பனிப் போர் துவங்கிவிட்டது என்பது பத்மனாபனுக்குப் புரிந்தது.

ஆபீஸில் அம்மாவின் முகம்தான் அடிக்கடி ஞாபகத்திற்கு வந்தது. மனத்தில் கஷ்டத்தை ஏற்படுத்தியது.

வருஷத்திற்கு ஒருதரம் வருகிறாள். கொஞ்ச நாளாவது நிம்மதியாகத் தங்க முடிகிறதா? அன்னியமாய், வரும்போதே புறப்படுவது தீர்மானம் ஆனவளாய்....

இரவு அப்பாவின் ஞாபகத்தில் ஏதோ சொன்னாள். ராஜத்திற்கு ஏன் கோபம் வர வேண்டும்? அம்மாவுக்கும் அப்பாவின் முரட்டுத்தனத்தை அந்த நேரத்தில் சொல்ல வேண்டும் என்று ஏன் தோன்றியது?

யார் ஆரம்பித்து வைத்த சண்டை இது? மருமகள் என்றால் இப்படித்தான் இருக்க வேண்டும். மாமியார் என்றால் அப்படித்தான் இருக்க வேண்டும் என்று?

முகம் தெரியாத எத்தனையோ மனுஷிகளின் கதைகள் நினைவுக்கு வந்தன. அம்மாவிற்குக் கூடத் தனது மாமியாரிடத்தில் மதிப்பு இருந்ததில்லை. எப்போதாவது சொல்ல நேரும்போது கஷ்டப்படுத்திய கெட்ட மனுஷியாகத்தான் சித்திரிப்பாள்.

ராஜம் கூடத் தனது சந்ததியினால் இப்படி அனுபவப்படக் கூடும். அப்போதும் இதே குணம் இருக்குமா?

இருக்கலாம். எல்லோருக்கும் தங்கள் முகம் மட்டுமே நல்ல முகமாகத் தெரிகிறது. சிநேகிதமாகிறது.

மற்றவர்களையும் நேசிக்க இந்த மண் என்று கற்றுக் கொள்ளும்?

ராஜமும் அம்மாவும் பேசிக் கொள்வது இல்லை என்று இரண்டு நாட்களுக்குப் பிறகுதான் தெரிந்தது பத்மனாபனுக்கு.

வீட்டு எஜமானி அவள். குழந்தைகள் அவளை மீறி எவ்விதம் சிநேகிதம் கொள்ளும்? தவிர ஸ்கூல், விளையாட்டு என்று திரியும் அதுகளைப் பாட்டியின் எதிரிலேயே இரு என்று எப்படிக் கட்டாயப் படுத்த முடியும்?

அம்மா சங்கடத்தை உணர ஆரம்பித்து விட்டாள்.

மகன் இருக்கும்போது பிரச்னை இல்லை.

மற்ற வேளைகளில் வாய் பேசாமல் தன் எதிரே 'ணங்'கென்று வைக்கப்படும் தட்டிலிருந்து எடுத்துச் சாப்பிடக் கூசிற்று அவளுக்கு.

எல்லோரும் போனதும், சமைத்து வைத்து விட்டு ராஜம் பக்கத்து வீட்டுப் பெண்களிடம் பேசப் போனாள். பின்னல், தையல் என்று உட்கார்ந்தாள்.

அம்மா உத்திரத்தைப் பார்த்தபடி படுத்துக் கொண்டும், வெளி வாசலில் உட்கார்ந்து வீதியைப் பார்த்துக் கொண்டும் இருக்க வேண்டியதாயிற்று.

பளிச்சென்ற வீதி, விர்விர்ரென்று ஓடும் வாகனங்கள், பெரிய பெரிய வீடுகள், பூத்து நிறையும் பெயர் தெரியாத பூக்கள், செடிகள்.....

மனிதர்கள் சிநேகிதமாகாத நிலையில், இதனையெல்லாம் அவள் பரவசமாக அடைய முடியும்? ஏதோ அன்னிய தேசம் போல இருந்தது. தன் சொந்தக் கூட்டை நினைக்கும் குருவியாகச் சோர்ந்து போனாள். அவளுக்கு அங்குதான் சொந்தம். வயிற்றில் உதிக்கா விட்டால் என்ன? நெருங்கிய மனிதர்கள், பழகிய வாசனை, பறவைகள், மிருகங்களின் ஒலி, தெருப் புழுதி, சாணித் தெளிப்பு, கோவில் மணி ஓசை.....

சீக்கிரம் ஊருக்குப் புறப்பட்டு விடுவாள்

என்று தோன்றியது.

இரவுச் சாப்பாட்டிற்குப் பிறகு சமையல் அறையைச் சுத்தம் செய்து கொண்டிருந்த ராஜத்திடம் மெதுவாக வந்தார். குழந்தைகள் தூங்கி இருந்தன. வீடு அமைதியாக இருந்தது.

"ஏண்டி.... நீ செய்யறது உனக்கே நல்லா இருக்கா?"

அவள் புரியாமல் விழிக்க, "என்ன வீம்பு இது.... ரெண்டு வார்த்தை பேசினா என்ன குறைஞ்சா போயிடுவே....?" என்று கேட்டார்.

ராஜம் புரிந்து கொண்டாள். "எனக்குத் தான் வீம்பு. உங்கம்மாவுக்குஒண்ணுமில்லே... அதானே...." என்றாள்.

"வயசாயிடுச்சு. நாமதான் அட்ஜஸ்ட் பண்ணிக்கணும்...."

"முதல்ல வயசானவங்களைப் பொறுத்துப் போகச் சொல்லுங்க...."

"இதான் வேணுங்கறது... குடும்ப அமைதி உன்னால கெட்டுப் போகுது...."

"இத்தனை வருஷத்துக்கு அப்புறம் கண்டு பிடிச்சாச்சு... வேறே ஏற்பாடு பண்ணிக்குங்க.... உங்கம்மாகிட்டச் சொல்லி...."

"வாயை மூடு நாயே...."

தமது குரலும் கையும் ஓங்கியது அவருக்கே அவமானமாக இருந்தது.

"உன்னையெல்லாம் திருத்த முடியாதுடி...' தம் அறைக்குத் திரும்பினார்.

பின்னால் ராஜத்தின் அழுகைச் சத்தம் கேட்டது.

அம்மா அதிகாலையே எழுந்துவிட்டாள். குளித்தாள். உடை மாற்றி, நெற்றியில் விரல் தடிப்பில் திருநீறு இட்டு.....

தகரப் பெட்டியும், துணிப் பையும் ஹாலுக்கு வந்தன.

'தம்பி எந்திரிச்சுட்டானா....' என அடிக்கடி கேட்டுக் கொண்டிருந்தாள்.

புறப்பட்டு விட்டாளா?

ராத்திரிக்குப் பிறகு நிலைமை ரொம்பவும் மோசமாகிவிட்டது. அவள் போய்விடுவது கூட நல்லதுதான்.

வலித்தது.

பத்மனாபன் வெளியே வந்தார். "என்னம்மா....?"

"வந்து நாளாச்சு.... ஊருக்குப் போறேம்ப்பா.... ரயில் ஏத்தி விட்டுடு..."

"இரும்மா.... அதுக்குள்ளே என்ன அவசரம்?"

எதற்கு இந்த வேஷம் என்பது போல அவரை நிமிர்ந்து பார்த்தாள். "இல்லேப்பா, அங்க மாடு, கன்னுன்னு விட்டுட்டு எவ்வளவு நாள் இருக்கிறது...."

அவர் பேச எதுவும் இல்லை. "இரும்மா..." எனப் பின்பக்கம் போனார். அவருக்குத் தோன்றியது, அம்மாவின் கோப விலகல் தான் இது! ஆனால் நிரந்தரமாக அல்ல. மறுபடியும் நெருங்கி வருவாள். மீண்டும் விலகுவதற்காக. வருஷா வருஷம் இது நடக்கும்— அவள் உயிரோடு உள்ளவரை.

## உபநயனம் ஏன் 8 முதல் 16 வயதுக்குள் செய்ய வேண்டும்?

உள்ளம் வளர்ந்து வந்து கருத்தைக் கிரஹிக்கும் சக்தியைப் பெறுகின்ற பொழுதுதான் உபநயனம் என்னும் தீட்சையைச் செய்விக்க வேண்டும். எட்டு வயதிலிருந்து பதினாறு வயதுக்குள் உபநயன தீட்சை தந்துவிட வேண்டும். உள்ளம் வளர்ச்சி அடையும்பொழுது, அதில் காம உணர்ச்சி தலை எடுக்கிறது. காம உணர்ச்சி, உள்ளத்தில் புகுவதற்கு முன்பு உபநயன தீட்சை செய்துவிட வேண்டும்.

## ஸந்தியாவந்தனம் செய்வதின் அவசியம் என்ன? ஸந்தியா வேளை எத்தனை

இரண்டு வேளைகள் சந்திக்கும் நேரத்தை ஸந்தியா வேளை என்கிறோம்.

1. இரவு முடிந்து பகல் வரும்பொழுது பகலும் இரவும் சந்திக்கின்றன. அந்த காலை நேரம் ஒரு ஸந்தியா நேரமாகும்.
2. நண்பகலில் முற்பகலும் பிற்பகலும் சந்திக்கின்றன. அது ஒரு ஸந்தியா வேளை.
3. பகல் முடிந்து இரவு வருகின்ற மாலை வேளையும் ஒரு ஸந்தியா வேளை. அதில் இரவும் பகலும் சந்திக்கின்றன.
4. நள்ளிரவில் முன் இரவும் பின் இரவும் சந்திக்கின்றன. எனவே அதுவும் ஒரு ஸந்தியா வேளை.

இச்சந்தியா வேளைகளில் இயற்கையில் சத்துவ குணம் ஓங்கியிருக்கின்றது.

— எனவே, அவ்வேளைகள் வழிபாட்டுக்குப் பொருத்தமானவைகளாக இருக்கின்றன. அவ்வேளைகளில் நாம் செய்கின்ற வழிபாட்டுக்கு ஸந்தியாவந்தனம் என்று பெயர்.

காலை நேரத்தையும், மாலை நேரத்தையும் நாம் வழிபாட்டுக்கு நன்கு பயன்படுத்தலாம். காலையிலும் மாலையிலும் நாம் செய்கின்ற வழிபாட்டுக்கு ஸந்தியாவந்தனம் என்று பெயர்.

உள்ளத்தில் அன்பையும் அறிவையும் வளர்ப்பதற்கு ஒரு நாளைக்கு இரண்டு வேளைகளாவது ஸந்தியாவந்தனம் செய்ய வேண்டும்.

ஸந்தியாவந்தனம் செய்பவர் உடல் பிறப்புக்கும் மேலான ஞானப் பிறப்பைப் பெறுகின்றார். ஞானப் பிறப்பை எடுத்ததற்குப் புறச் சின்னமாக பூணூலையும் தலையின் உச்சியில் சிகையையும் வைத்துக் கொள்கின்றார். நூல் வேத மந்திரத்துச் சின்னமாகும். எனவேதான், "நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்" என்று கோட்பாடு வந்துள்ளது.

மந்திர உபதேசம் செய்வித்து மந்திரத்தை உச்சரிக்க கற்றுக் கொடுக்கும் செயலுக்கு உபநயனம் என்று பெயர். "உப" என்றால் பிரம்மத்துக்குச் சமீபத்தில் என்பது பொருள். "நயனம்" என்றால் ஆச்சாரியன் சிஷ்யனைப் பிரம்மத்துக்குச் சமீபத்தில் அழைத்துச் செல்கின்ற செயலுக்கு "உபநயனம்" என்று பெயர்.

ஸந்தியாவந்தனம் செய்வதின் மூலம் நம் உள்ளத்தைத் தூய தாக்கி உள்ளிருக்கும் ஆன்ம ஒளியை காண்கின்ற ஞானக் கண் பெறுகின்றோம். உயிர் வாழ்க்கைக்குச் சுவாசிப்பது எவ்வளவு அவசியமோ, மனத் தெளிவுக்கு ஸந்தியாவந்தனம் அவ்வளவு அவசியமாகும்.

ஸந்தியாவந்தன வழிபாட்டில் கீழ் வரும் மந்திரத்தை உச்சரிக்க வேண்டும்.

அச்சுதாய நம: அனந்தாய நம: கோவிந்தாய நம:

பொருள்:

பெருநிலையிலிருக்கின்ற பேரறிவு வாய்ந்த அழிவில்லாத பொருளுக்கு வணக்கம் செலுத்துகின்றேன் என்பது மேற்கூறிய வணக்கத்துக்குப் பொருள்.

கேசவ நாராயண, மாதவ, கோவிந்த, விஷ்ணோ, மதுசூதன, த்ரிவிக்ரம, வாமன, ஸ்ரீதர, ஹ்ருஷீகேச, பத்மநாப, தாமோதர.

— என்று உம்மைப் பன்னிரு திருநாமங்களால் போற்றி என் இந்த்ரியங்களையும் மனத்தையும் உம்மிடம் ஒப்படைப்பேனாக.

அடுத்து கணபதியைத் தியானிக்க வேண்டும். கணபதியை தியானிப்பதற்குரிய மந்திரம் வருமாறு:

சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்புஜம்
ப்ரஸன்ன வதனம் த்யாயேத் ஸர்வ விக்னோப சாந்தயே

— இதன் பொருள், வெண்மையான ஆடை உடுத்தவரும், நிலவு போன்ற ஒளியுள்ளவரும், நான்கு கையுள்ளவரும், ஆனந்தம் பொங்கும் முகமண்டலத்தையுடையவரும் ஆகிய கணபதி எல்லா இடையூறுகளையும் விலக்கிச் சாந்தியை உண்டாக்குவாராக.

அடுத்துப் பிரம்ம காயத்ரீ ஜபம் செய்ய வேண்டும். காயத்ரீ மந்திரம் வருமாறு:

ஓம் பூர்புவஸ்ஸுவ: தத்ஸவிதுர் வரேண்யம்
பர்கோதேவஸ்ய தீமஹி தியோயோன: ப்ரசோதயாத்

— இதன் பொருள், யார் நம் அறிவைத் துண்டுகிறாரோ, அந்தச் சுடர்க் கடவுளின் மேலாம் ஒளியைத் தியானிப்போமாக.

இம்முறையில் ஸந்தியாவந்தனம் தினந்தோறும் ஸந்தியா வேளைகளில் செய்துவந்தால், நம்மிடமுள்ள தெய்வத்தன்மை வெளிப்பட்டு, நாம் பரிபூரணர்களாவது திண்ணம். ஆற்றலை வளர்ப்பதும், அறிவைத் தீட்டுவதும், அன்பைப் பெருக்குவதும், மானுட வாழ்வின் லக்ஷியமாகும். ஸந்தியாவந்தனம் செய்வதன் மூலம் மனிதன் அப்பெருநிலையை அடையலாம். எனவே நாம் பெருநிலை அடைவதற்கு ஸந்தியாவந்தனம் அவசியமாகிறது.

**ஆதாரம்: தர்ம சக்கரம் ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம்**

முடிவாக என் தீர்மானத்தைச் சொன்னேனோ இல்லையோ, வீட்டில் அத்தனை பேரும் அரண்டு போய் விட்டார்கள்.

என் சித்தி மகன் ராஜா 'மொபெட்' ஓட்டக் கற்றுத் தருகிறேன் என்று போன வாரமே, பூரி மசாலா தின்று முடித்த கையோடு, என் கையில் அடித்துச் சத்தியம் பண்ணிக் கொடுத்திருந்தான்.....

ஞாயிற்றுக்கிழமை பகல் பதினொரு மணிக்கெல்லாம் வந்து விடுகிறேன் என்று சொல்லியிருந்தான்.

"ஏங்க? இங்கே பாருங்க? ராஜா வரேன்னு சொல்லியிருக்கான். எல்லாரும் மத்தியானச் சாப்பாட்டைக் கொஞ்சம் நீங்களே எடுத்துப் போட்டுக்கிட்டுச் சாப்பிடுங்க.... சி.பி.டி. ரோடு பக்கமாகப் போய் அவன்கிட்டே 'மொபெட்' கத்துக்கப் போறேன்...."

ஷீலாவும், மீனுவும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்! பிறகு இருவருமாகச் சேர்ந்து, அப்பாவை ஒரு பார்வை பார்த்தார்கள்.

அவர் ஒரு மாதிரியாக என்னைப் பார்த்தார். "இனிமேல் ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் இந்த வேலைதானு?"

"ப்ச்ஸ்! ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் என்ன வேண்டிக் கிடக்குது? ஒரு மணி நேரத்துலே ஈஸியாக் கத்துக்கலாமாம்..."

"அப்படின்னு, திரும்பி வர்றப்போ நீயே கூட, ஓட்டிக்கிட்டு வருவே! ஏன் சாருமதி?"

ஏதோ நான் போர்க்களத்திற்குப் போவதைப் போல மீனுவும், ஷீலாவும் சங்கடப்பட்டார்கள். துக்கம் தொண்டையை அடைக்க, "அம்மா! ஜாக்கிரதைம்மா! மாமா! அம்மா ஜாக்கிரதை!" என்றபோது எனக்கும் ஓர் இதுவாகத்தான் இருந்தது.

குழந்தைகளுக்குத்தான் என் மீது எவ்வளவு பாசம்?

"அதெல்லாம் நான் ஜாக்கிரதையாத்தான் இருப்பேன் ஷீலா! மீனு!"

"ஐயோ! நீ ஒண்ணும்மா! ஒன்னைச் சொல்லலேம்மா! ராஜா மாமா மொபெட் வாங்கி ரெண்டு மாசம் கூட ஆகலே! புது வண்டி.... வண்டி ஜாக்கிரதைம்மா! மாமா! பை!"

நான் 'மொபெட்'டில் வேகமாகப் போய்க் கொண்டிருக்கிறேன். மவுண்ட் ரோட் அருகில் ஒரு ரவுடி ஓரமாகப் போய்க் கொண்டிருக்கிற பெண்மணியின் செயினைப் பிடுங்கிக் கொண்டு ஓடுகிறுன்.... அவன் கூட்டாளியின் மோட்டார் பைக் போலிருக்கிறது!

ஓடிப் போய்ப் பின்னுல் ஏறிக் கொள்கிறுன். 'பைக்' பறக்கிறது....

நான் விடுவேனு? என்னுல் அப்படி விடத்தான் முடியுமா? என் மொபெட்டில் பின்னுலேயே விரட்டிக் கொண்டு போகிறேன். அவன் பிசாசு வேகத்தில் பறக்கிறுன்! நானும் வேகத்தைக் கூட்டுகிறேன்....

# இந்த ராஜா ரொம்ப மோசம்...

அரசு மணிமேகலை

"சொல்றதுக்கில்லே.... நானே ஓட்டிக்கிட்டு வந்தாலும் வருவேன்! ஒரு மணி நேரத்துலே ஈஸியாக் கத்துக்கலாமாம். நான் விட்டு விட்டு மூணு ஹார்ன் அடிக்கிறேன். வாசலுக்கு வந்து பாருங்க எல்லாரும்."

க்ண்ணுடியைப் பார்த்துப் பொட்டைச் சரி செய்து கொண்டேன். என்னவோ அலாதியாய் ஒரு தேஜஸ் வந்துவிட்டாற் போலத் தெரிந்தது.

"வா வா ராஜா! ஒங்க அக்கா உனக்காக ரெடியாயிக்கிட்டே இருக்காப்பா..."

ஓ! ராஜா வந்துவிட்டான் போலிருக்கிறது....

"போய்ட்டு வரேன்...." கிளம்பினேம். அப்பாவும், பெண்களும் ஏகத்திற்கு — 'திரு திரு'வென்று விழித்தார்கள்.

அவனைப் பிடித்துக் கீழே தள்ளி, கராத்தே ஸ்டைலில்.... சுற்றி இருப்பவர்கள் மரியாதை கலந்த பயத்துடன் என்னைப் பார்க்கிறுர்கள். ஒன்றிரண்டு பேர் கிட்டே வந்து பாராட்டுத் தெரிவிக்கிறுர்கள்....

பாராட்டு விழாவில் போலீஸ் கமிஷனர் வால்டேர் தேவாரம் வெள்ளிக் கோப்பையைத் தருகி.....

"அக்கா! இறங்கு.... என்ன அப்படியே ஒக்காந்துக்கிட்டிருக்கே?"

ஓ! பகல் கனவா?

"ஏண்டா ராஜா? இதுதான் சி.பி.டி. ரோடா?"

"இது தரமணி ஸைடு... ஆள் நடமாட்டமே ரொம்ப இருக்காது. இதுதான் கத்துக்கச் சரியான இடம்.... இதோ பார், இது தான் பிரேக்கு....."



"அட! அது ஸ்டிக்கர்னு இல்லே நினைச்சேன் இத்தனூண்டு.... இதுவா பிரேக்கு?"

"ஐயோ! அது ஸ்டிக்கர்தான்! இது! இது! வண்டியை நிறுத்தணும்னு நினைச்சே! உடனே பிரேக்கு போட்டுடுக்கா! இதுதான் பிரேக்கு!"

"அதெல்லாம் கரெக்டாப் போட்டுடு வேண்டா! ஆமாம். இதை எடுத்து எங்கே போட்றது ராஜா?"

"ஒன் தலையிலே! என்னுக்கா நீ? எங்கியும் போட்டு ஒழிக்க வேணும்! இதோ பாரு... இப்படி இந்த ரெண்டையும் இறுக்கிப் பிடிச்சியானால் வண்டி நின்னுடும்.... இதோ பார்!"

அவன் காட்டியது போலவே, நானும் ஒரு முறை பிரேக்கைப் பிடித்து அழுத்தினேன்்.

பெருச்சாளி அடிபட்டால் வினோதமான அடிக் குரலில் அலறுமே, அதைப் போல ராஜா கத்தினான்....

"என்னடா.... என்ன ஆச்சி?"

"ஸ்ஸா! நீ பிரேக்கை விடு.... ஸ்ஸா! என் விரலையும் சேர்த்தா ஒன்னைப் பிரேக் போடச் சொன்னேன்?"

பிரேக்கிலிருந்து வெகு சிரமத்தின் பேரில் அவன் தன் விரல்களை விடுவித்துக் கொண்டான்.

"இதோ பாரு! அக்கா! வலது பக்கம் இதோ பாரு! இதை இப்படி மெள்ளத் திருப்பினியானா, வண்டி ஓடத் தொடங்கும். ஸ்ட்ரெய்ட்டா ஓட்டு. ஆடாதே! மெள்ளமா ஓட்டு..... இரு. வண்டியை ஸ்டார்ட் பண்ணித் தரேன். நீ ஒக்காரு.... ம்!"

ஏக அட்டகாசமாக உட்கார்ந்தேன். சினிமாவில் கதாநாயகிகள் பாடிக்கொண்டே ஸ்டைலாக ஓட்டி வருவார்களே.... அந்தக் காட்சிகள் நினைவுக்கு வந்தன....

"ஒன் மினிட் ராஜா! இரு! பட்டை போட்டுக்கறேன்."

"வாட்! பட்டை போட்டுக்கறயா?" என்னவோ தகாத செயல் போல அப்படி அதிர்ந்து போய்விட்டான் ராஜா.

"அப்பத்தாண்டா ஒக்கார்ரப்போ, புடைவையோட பார்டர் பட்டையா, ஸ்டைலாத் தெரியும்...."

"அதைச் சொல்றியா? ஐயோ சாமி! ஒண்ணும் வேணும். இழுத்து இடுப்பிலே செருகிக்கோ...."

அரைகுறை மனத்தோடு செருகிக் கொண்டேன்.

"ரெண்டு காலையும் என்னடா பண்றது?"

"இது என்னக்கா கேள்வி? பெடல்லே வைய்யி...."

சொன்னபடியே வைத்தேன். இருக்கட்டும். இருக்கட்டும். காரியம் ஆக வேண்டும். இப்போது ஒன்றும் சொல்லக் கூடாது. சாதாரணமாய்க் கேட்டால், பொறுமையில்லாம பதில் சொல்கிறான்! இருந்தாலும் அவரைப் போல ஆகுமா? கல்யாணமான இத்தனை வருஷங்களில் இப்படி ஒரு வார்த்தை பதற்றமாய்ச் சொல்லியிருப்பாரா? இவன் 'படக்கு படக்கு' என்று எப்படி சொல்லுகிறான்?

"என்னக்கா நீ? பெரிய ஞானி மாதிரி அப்பப்ப சிந்திக்க ஆரம்பிச்சுடறே? ஸ்டார்ட் பண்ணு...."

அவன் சொன்னபடியே மெல்லத் திருகி



"இன்னொரு அட்டாக் வந்தா நான் பிழைக்க மாட்டேன்னு டாக்டர் உறுதியாச் சொல்றார்!"

"அதனால?"

"உங்க வியாபாரம் வெற்றிகரமா நடக்கிற விஷயத்தை விலாவாரியாச் சொல்றதை இனிமே நிறுத்திடுங்க!"

— மணியன் தர்மலிங்கம்

னேன்.

ஏகமாய்ச் சீறிப் பாய்ந்தது.... ஏன் இந்தச் சனியன் ஒரு பக்கமே வளைகிறது? திடும்மென்று ஒரு பயம்.... எதையோ அழுத்தினால் நிற்கும் என்றானே படுபாவி. அழுத்தினேன். அழுத்தி இறுக்கி.... ம்கூம்!

தத்தக்கா புத்தக்கா என்று ஜதிகள் சொல்லியபடி எகிறிப் பாய்ந்தது வண்டி. வளைந்து, திரும்பி. சாலையை விட்டுக் கீழே இறங்கி, பள்ளத்தில் இருந்த பாறாங்கல்லில் முட்டிக் கொண்டதில் நானும், மொபெட்டும் பொதேர் என்று விழுந்தோம்.

"என்னடா நீ? கூடவே வருவேன்னு நினைச்சா, அங்கேயே நின்னுட்டே?"

"நீதான் ஜெட் வேகத்தில் பறக்கறியே..."

மகிழ்ந்தேன். "நிஜம்மாவா? ஜெட் வேகத்திலியா?"

"ஆமா! ஸைடுலியே ஜெட் வேகம் எடுக்கிறே! நல்லா நிமிர்ந்து ஒக்காரு! ஆம்மா! நீ சைக்கிள் கத்துக்கலே?"

"எங்கடா நானு சைக்கிளு கத்துக்கிட்டேன்? ஒங்கம்மாவும், எங்கம்மாவும் எங்க விட்டாங்க?"

"அடடே! ஒனக்குச் 'சைக்ளிங்' தெரியும்னு இல்லே நினைச்சேன்?"

தூரத்தில் சாணி பொறுக்கிக் கொண்டிருந்த சிறுமி கிட்டத்தில் வந்தாள். இரண்டு மூன்று தலைகள் சாலையின் கோடியில் தெரிய ஆரம்பித்தன.

"ம்! சரி! நீ ஸ்ட்ரெய்டா ஒக்காரு! என்னக்கா?"

"அவங்க போவட்டும்டா ராஜா!"

அவர்கள் போகிறவரையில் ராஜா எதிர்த் திசையையே பார்த்துக் கொண்டிருந்தான். கழுத்து, முகவாய், நரம்புகள் அசைவதனாலும் "போறாத வேளை — சனியன் — வெயிலு" என்பவை துண்டு துண்டாகக் கேட்டதனாலும் ஏதோ முணுமுணுக்கிறான் என்பது புரிந்தது.

"ம்! இப்ப நான் ரெடிடா! நீ கூடவே வண்டியைப் பிடிச்சுக்கிட்டு வாடா...."

"இதோ பாரு! பிரேக்கை அழுத்தறப்போ இந்த ரெண்டையும் சேர்த்து இல்ல அழுத்தணும்? நீ வெறுமனே ஹாண்டில்ல மட்டும் அழுத்தறியே?"

"ஸ் ஸ்! அதுதான்.... பிரேக்கே விழலே! நானும் மொபெட்டும் மட்டும்தான் விழுந்தோம்...."

அவன் அனுதாபமாக, பாசங் கொப்பளிக்க ஒரு பார்வை பார்த்தபடி, "புவர் திங்" என்று தட்டிக் கொடுத்தான் — மொபெட்டை!

'உடன் பிறப்பு' என்பதோ, 'ரத்தத்தின் ரத்தம்' என்பதோ சுத்தமாய் இந்தப் படுபாவிக்கு நினைவில்லையே!

திரும்பவும் மொபெட்டில் உட்கார்ந்தேன்... கறுப்புக் கண்ணாடியும், ஸ்கார்பும் கொண்டு வந்திருக்க வேண்டும். அது இரண்டும் இருந்தால் இன்னும் அம்சமாக இருக்கும்....

"மெள்ள ஓட்டு.... ரெண்டடி தூரம்! மூணடி தூரம்...." ராஜா முகத்தில் களையே இல்லை....

தவளையைப் போல, வண்டியை எகிறி எகிறிப் பாய விட்டேன். கொஞ்ச தூரம் கூட நேராக அது ஓடவில்லை.

ஓட ஆரம்பித்தவுடனேயே, "ஐயோ! ஓடுதுடா! ஓடுதுடா" என்று நான் அலற...

"ஆடாமே ஒக்காந்திருக்கா! எப்படியும் விழமாட்டே! பயப்படாதே! பாலன்ஸ் பண்ணிக்கலாம்....."

அறிவு கெட்டவன். சற்று நேரத்திற்கு முன் விழுந்ததைத் தன் ஆந்தைக் கண்களால் பார்த்த பிறகும் இப்படிச் சொல்கிறான்!

வண்டி 'சர்'ரென்று பக்கவாட்டில் போய், மதில் சுவரை இடித்துக் கொண்டு நின்றது.....

திரும்பிப் பார்த்தேன். ஸ்ரீதேவி, ஜித்தேந்திரா ஷூட்டிங் போல ஜேஜே என்று கூட்டம்!

தரமணியில் இவ்வளவு ஜனம் இருக்கிறதா? ஆச்சரியப்பட்டு முடிப்பதற்குள் பின்னால் உட்கார வைத்துக் கொண்டு, விர்ரென்று அடுத்த ரோடுக்குப் போய்ச் சேர்ந்தான் ராஜா.

திரும்பவும் முழுக்க விவரித்தான்.

"அந்த ரோட்லியும் அதைத்தானே சொன்னே? அப்புறம் என்ன? ஒரு ரோடு தாண்டின உடனே பிரேக்கு அந்தப் பக்கமும் ஸ்டார்டர் இந்தப் பக்கமுமா வந்துடும்? சரியான இவன்டா நீ! எல்லாம் எனக்குத் தெரியும்!"

"அந்த ரோட்டை முடிச்சிட்டீங்க! இப்ப இந்த ரோட்டுக்கு வந்திருக்கீங்களா?"

ஒரு ஜிப்பாக்காரர் புன்முறுவலுடன் கேட்டுவிட்டுப் போனார்.

எனக்கென்னமோ அவனைப் பார்த்தால் ஆங்கிலேய ஆட்சியின் கைக்கூலி போலத்தான் தோன்றியது. நான் ஜான்சி ராணி

லட்சுமி பாய்.... அதோ! அவன் ஓடுகிறுன்! பேர்! போய்த் துரத்திப் பிடி....

என்ன செய்தேனே? எப்படி வண்டி நேராகப் பறந்ததோ? ஜிப்பாக்காரர் அவசர அவசரமாக ஒரு மரத்தின் மேல் ஏறிக்கொண்டார்....

அதற்குப் பிறகு.... என் பழைய பயம் கட்டி அணைத்துக் கொண்டது.... கண்களை மூடிக் கொண்டேன்... எதிரில் மூன்று நான்கு பேர் வருகிறுர்கள்.... ஐயோ!

ரோட்டை விட்டு வானத்தில் மொபெட் எம்பிப் பறந்தது உண்மையில் பெரிய திரில்லிங்.... அவர்கள் விலகி ஓடினுர்கள்.

ஒரு டீ.வி. கம்பெனியின் மதில் சுவரில் போய் முட்டிக் கொள்ள வேக வேகமாகப் பயணப்பட்டுக் கொண்டிருந்தேன்.... ஓ!

காலில் என்னவோ நெருப்பு.... படுபாவி! ராஜா! இது என்னடா? நெருப்பு எங்கிருந்துடா வந்தது? காலுக்கு மேலே சதை 'சுரு சுரு'வென்று பொசுங்கிற்று. ஐயோ! ஐயோ! இது என்னடா நீளமாய் ஒரு குழல் போல! என்ன சூடு இதில்! ஒருமுறையாவது இதைச் சொன்னுயா? உனக்குச் சாமர்த்தியமே அவ்வளவாகப் போருதுடா பாவி....!

டமார்.... வழக்கப்படி இடித்து நிறுத்தினேன். வழக்கப்படி பொதேர் என்று நானும் மொபெட்டும் விழுந்தோம்.

இத்துடன் முடிந்திருந்தால் ஒன்றுமே இல்லே! ஒரு சோம்பேறி எருமை மாடு சாலே ஓரத்தில் புல் மேய்ந்து கொண்டிருந்தது.

அதற்கு என்ன ஆயிற்றோ? என் வீர தீர சாகசத்தைப் பார்த்ததும் அது அரண்டு மிரண்டு போனதில் மாரத்தான் ஓட்டம் போல ஓடி வர ஆரம்பித்தது....

நான் செய்த ஒரே புண்ணியம் — என் வீர புருஷர் பண்ணிய புண்ணியம் — நல்ல காலமாக அதற்கு 'மொபெட்' ஆங்கிலேயக் கைக்கூலி போலவும், தான் ஜான்சி ராணி, லட்சுமிபாய் போலவும் தோன்றியிருக்கிறது....

நான்கு கால் பாய்ச்சலில் ஓடி வந்த அது கீழே பரிதாபமாகக் கிடந்த 'ஆங்கிலேயக் கைக்கூலி'யைக் கொம்புகளால் புரட்டி புரட்டிக் காலால் நெம்பி ஆக்ஷன் ரீப்ளே செய்து கொண்டிருந்தது.

இந்தப் படு பாவி ராஜாவுக்குக் கொஞ்சமாவது ஒரு பாசம் இருக்க வேண்டாம்! குரோதமாக எருமையை மட்டுமே பார்த்துக் கொண்டிருந்தான்.

மூட்டை விழிகளில் கோபக் கனல் தெறிக்க ராஜா முன் சீட்டில் உட்கார்ந்திருந்தான்.

டிக்கியில் போஸ்ட் மார்ட்டம் பண்ணப்பட்ட உடம்பைப் போல, 'மொபெட்' கிடந்தது.

பின் சீட்டில் நான் திருதிருவென்று விழித்தவாறு அமர்ந்திருந்தேன்.

சொல்லி வைத்தாற்போல, டாக்ஸி டிரைவர் எங்கள் வீட்டு வாசலே அடைந்ததுமே மூன்று முறை ஹார்ன் அடித்தார்....

# கவிதாவிடம் வாங்கிய கடன்

கதை: இலக்குவன்

அன்று சம்பளம் வாங்கிக் கொண்டு வீடு திரும்பினாள், அனுசூயா –

அம்மா, இதை, மளிகை அரிசி, பால், காய்கறி எல்லாத்துக்கும் கொடுத்துக் கணக்கைத் தீத்துடு... இதை அப்பா கைச்செலவுக்குக் கொடு

படம்: சிஜ...

மிஞ்சியது –

எண்பது ரூபாய்! பரவாயில்லை, சமாளிக்கலாம்!

திடீ என்று ஞாபகம் வந்தது –

போனமாசம் அப்பாவுக்கு உடம்புக்கு வந்தப்போ கவிதாவிடம் கடன் ஐம்பது ரூபாய் வாங்கினேமே!

அனு, உடனே சிநேகிதி வீட்டுக்குச் சென்றாள். அங்கே கவிதாவின் மாமியார் –

வாம்மா, அனு! கவிதா ஒரு கல்யாணத்துக்காகக் காரைக்குடி போயிருக்கா. என்ன விஷயம்?

அனு நடந்ததைக் கூறி –

இந்த ஐம்பதை அவளிடம் சொல்லிக் கொடுத்து விடுங்கள்.

இரு தினங் கழிந்துப் பிறகு —

BUS STOP

என்ன கவிதா, கல்யாணத்துக் கெல்லாம் போய்ட்டு வந்தாச்சா?.. பணம் கொடுத்துட்டேனே, மாமி சொன்னாங்களா?

ஆமாம், ஐம்பது ரூபாயை எடுத்துக் கொண்டு அலறியடித்து ஓடிவந்தாயாக்கும்? உன்னை யார் வீட்டுக்கு வரச் சொன்னது?

நீ என்ன சொல்றே?

என்னிடம் ஆபீஸிலே வாங்கின பணத்தை ஆபீஸிலேயே திருப்பித் தரலாமில்ல?!

ஏன்? இப்ப என்ன ஆச்சு?

'நம் வீட்டுச் செலவுக்கே பத்தலே, இதிலே கடன் வேறே தந்தியா'ன்னு மாமியார் என்னைத் திட்டித் தீர்த்துட்டாங்க..

உனக்கு உபகாரம் பண்ணினதுக்கு நல்லா பழி வாங்கிட்டே! திருப்தி தானே!

அட ராமா!

சரி வா, பஸ் வந்துட்டுது!..



பர்ஸை எடுக்க ஹாண்ட் பாகில் கைவிட்டாள். என்னவோ குறைவது போல் தோன்றியது. இனம் புரியாத படபடப்புடன் விரல்களால் துழாவினாள். ஒரு மின்னல் போல் அது என்ன என்று அவளுக்குப் புரிய, அவள் உடம்பு அதிர்ந்து குலுங்கியது. ஒரு கணம் மூச்சே நின்று போய்விட்டது.

''என்னம்மா, என்ன ஆச்சு?'' கண்டக்டர் சில்லறைக்காக நீட்டிய கை அப்படியே நிற்கக் கேட்டான்.

''பர்ஸ்......'' என்று மூச்சுத் திணறலுக்கு இடையே சொன்னாள். உடம்பெங்கும் வியர்வை ஆறாக ஓடியது.

''பர்ஸ் எடுக்க மறந்துட்டியா? வீட்டில வச்சிருப்பே. எறங்கணுமா?''

''ம்.''

''உய்.''

பஸ் நின்றது.

இறங்கிக் கொண்டாள். வியர்வையில் ஈரமான உடம்பு குளிர ஆரம்பித்தது. ஹாண்ட்பாகைத் திறந்து தேடினாள். உள்ளே பர்ஸ் இருந்தது. டிபன் பாக்ஸ் இருந்தது. கர்சீப் இருந்தது.

மூச்சிரைக்கவீட்டுப்படியேறினாள்.ஓசைப் படாமல் செருப்பைக் கழற்றி விட்டு உள்ளே போனாள்.

ஹாலில் ஹாண்ட்பாகை முன்னம் வைத்திருந்த மேஜை மேல் புத்தகங்கள் குவிந்து கிடந்தன. படபடவென்று தேடினாள்.

ஓரத்து அறையின் கதவு இலேசாக ஒருக்களித்திருந்தது. சிகரெட் மணம் வந்தது. மணிகண்டன் உள்ளே இருக்கிறான். இந்த வாரக் கடைசியில் அவன் விடுமுறை முடிகிறது. ராணுவத்தில் காப்டனாக இருக்கிறான்.

அவள் விரல்கள் கட்டுப்பாடின்றி நடுங்கின. புத்தகங்களில் தேடுவது மிகவும் சிரமமாக இருந்தது. எங்கே வைத்தேன் அதை. ஞாபகமில்லை. கைத்தவறுதலாய் ரவியின் புத்தகங்கள் எதிலாவது வைத்துவிட்டேனா? இந்தப் பெண் மீனா ஹாண்ட்பாகைத் திறந்து திறந்து பார்க்குமே, அது எங்கேயாவது எடுத்திருக்குமோ, முருகா.....!

''என்னது திரும்பி வந்துட்டே?''

அடிபட்டதுபோல் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். அறை வாசலில் கதவில் கை ஊன்றியபடி மணிகண்டன் நின்றிருந்தான். அவன் கண்கள் அவள் மேல் ஊன்றியிருந்தன.

''ஒண்ணுமில்லே. நான்....''

''என்ன தேடறே?'' அவன் குரல் இறுக்கமாக இருந்தது.

அவள் தன் கால்கள் நடுங்குவதை உணர்ந்தாள். ஏதாவது பதில் சொல்லியே ஆகவேண்டும்.... ஆனால் என்ன சொல்வதென்று தெரியவில்லை.

அவன் அவளை உற்றுப் பார்த்தான். ''என்னமோ ரொம்ப அவசரமா தேடற மாதிரி இருக்கு, என்னது?''

''அது...., வந்து....''

''ஏதாவது கடிதாசா?''

பளீரென்று நெற்றிப் பொட்டில் ஓர் ஒளி வெடித்தது போலத் தோன்றியது அவளுக்கு. ஒருகணம் அவன் விழிகளை அவள் விழிகள் வெட்டின. அவளுக்குப் புரிந்தது. அவன் எல்லாவற்றையும் அறிந்தாகிவிட்டது. கடிதத்தை அவன் பார்த்துவிட்டான்.

விழுந்து விடுவோம் என்று தோன்றியது அவளுக்கு.

''உள்ளே வா. உன் கூடக் கொஞ்சம் பேசணும்'' அவன் உள்ளே போனான்.

ஹாலிலிருந்து அறைவரை நடக்க அவளால் முடியவில்லை. உடம்பே அவள் பிடியிலிருந்து நழுவிப் போவதுபோல் இருந்தது. விழாமலிருக்கக் கதவை இறுகப் பிடித்துக் கொண்டாள்.

அவன் தன் வழக்கமான நாற்காலியில் காலை நீட்டி அமர்ந்து, ஜன்னலுக்கு வெளியே வெறித்துப் பார்த்தபடி இருந்தான். ஆனால் அவன் பார்வை தன்மேல் கூர்மையாகப் பதிந்திருப்பது போன்ற உணர்வுதான் அவளுக்கு இருந்தது.

சட்டென்று திரும்பி அவளைப் பார்த்தான். ''எத்தனை நாட்களா நடந்துட்டிருக்கு இது?''

என்னென்னவோ பதில்கள் அவளுக்குள் பொங்கின. ஆனால் மொழியே மறந்துவிட்டது போலிருந்தது.

''சொல்லுடி, யார் இவன்?''

தன் இதயத் துடிப்பைத் தவிர வேறெதையும் கேட்க முடியவில்லை அவளால்.

''யாருடி இந்த ராஜகோபால்?''

''இல்லை.... இல்லை.....'' என்று சம்பந்தமின்றி உளறியபடி அவள் விம்மினாள்.

மணிகண்டன் மிகுந்த சிரமப்பட்டுத் தன் ஆவேசத்தை விழுங்கிக் கொண்டான். முடிந்தவரை தாழ்ந்த குரலில், ''நான் இப்ப என்ன பண்ணணும்? டிவோர்ஸ் வேணுமா உனக்கு? இல்லை, தீர்த்துக் கட்டிடறதா தீர்மானிச்சிருக்கீங்களா?'' என்றான்.

அடிவயிற்றிலிருந்து பீறிட்டு ஒரு கேவலாய் வெடித்த அழுகையுடன், பிடித்துத் தள்ளப்பட்டவளைப்போல, அவள் ஓடி அவன் கால்களில் மடங்கிவிழுந்தாள். எல்லா உணர்வுகளையும் வெளிக் கொட்டுபவளைப் போல் பொங்கிப் பொங்கி அழுதாள்.

அவள் அழுகை ஒரு கணம் அவனை இளக

ஜெயகுமாரன்

வைத்தது. மறுநிமிடம் ஆவேசத்தை வரவழைத்துக் கொண்டவனாக அவன் அவளை நெட்டித் தள்ளிவிட்டு எழுந்தான். நாற்காலி கிரீச்சென்று பின்னால் நகர்ந்தது.

"ச்சீ. முப்பது வயசில், ரெண்டு பெத்ததுக்கு அப்புறம் உனக்குக் கள்ளக் காதல்... அல்ப ஜென்மம்... உன்னை... உன் கூட..."

எந்த வார்த்தையும் வெளிவராமல், சிவந்த முகத்துடன் நின்று, திக்கித் திணறித் துடித்தான். சட்டென்று கொடியிலிருந்து சட்டையை எடுத்துப் போட்டுக் கொண்டான். செருப்பில் கால் நுழைத்து, லுங்கியை மடித்துக் கட்டியபடி அவளைப் பார்த்து, பதறிய குரலில் சொன்னான்.

"போயிடு, உன் காதலன் கூட. என் கொழந்தைகளை நான் பார்த்துக்கறேன். திரும்பி வர்றதுக்குள்ள பெட்டியைக் கட்டிட்டு அவன் கூடவே போயிடு..."

தடதடவென்று இறங்கி அவன் போன பின் அவள் வெறும் தரையில் குப்புறப் படுத்து விம்மி, குலுங்கி அழுதாள். வெகு நேரம் அழுது முடித்து விம்மல்கள் ஓய்ந்த பிறகு அவள் மனத்தில் பயங்கரமான சூன்ய உணர்வு குடியேறியது.

கதகதப்பான ஓர் உறவு முடிந்துவிட்டது போலவும் இனி ஒருபோதும் அவனது அன்பும் அணைப்பும் தனக்குக் கிடைக்கப் போவதில்லை என்றும் அவளுக்குத் தோன்றியது. ஒருவேளை அவன் இனி திரும்பி வரவே மாட்டானோ என்று தோன்றிய போது வயிறு சில்லிட்டது.

அந்தப் பீதியிலும் விரக்தியிலும் கூட ஓர் ஓரத்தில் ஒரு நம்பிக்கை மின்னியது அவளுக்கு. தான் தப்பு செய்யாத வரைக்கும் பயப்பட வேண்டியதில்லை என்று நினைத்தாள். அத்தனை அநியாயமாகத் தன்னைக் கடவுள் தண்டித்துவிட மாட்டார் என்று சொல்லிக் கொண்டாள். அதையே மீண்டும் மீண்டும் நினைத்து நம்பிக்கையைப் பெருக்கிக் கொள்ளப் பாடுபட்டாள். அவள் சொன்னால் அவன் புரிந்து கொள்வான். அவளை அத்தனை எளிதாக வெறுத்துவிட அவனால் முடியாது. பீதியும்விரக்தியும்நம்பிக்கையுமாய் அவள் மனம் அலைபாய்ந்தது.

மதியம் அவன் சாப்பிடவில்லை. அவன் வர மாட்டான் என்றுதான் நினைத்தாள். மாலையில் குழந்தைகள் திரும்பி வந்தன. மாலை சரியச் சரிய அவள் மனம் மீண்டும் கொந்தளிக்க ஆரம்பித்தது. வருவானா? முருகா! வராமலே இருந்து விட்டால்... யோசிக்கும்போதே 'பகீர்' என்றது. வாசலில் அசையும் ஒவ்வொரு நிழலும் நம்பிக்கை அளித்துப் பின் ஏமாற்றியது. இருள் கனக்கக் கனக்க, அவள் மனம் பீதியில் நிறைந்தது.

ஒன்பது மணிக்கு அவன் வந்தான்.





> "ஆபீஸ் நேரத்தில் வெளியில் போய் சூதாடுறவங்களைத் தடுக்க எங்க ஆபீஸ் நிர்வாகம் ஒரு ஏற்பாடு செய்திருக்கு!"
> "என்னங்க அது?"
> "தனியறை ஒதுக்கி சீட்டுக்கட்டு வாங்கிப் போட்டிருக்கு!"
> — மணியன் தர்மலிங்கம்

அந்தப் பழக்கமான காலடியோசை அவள் உடம்பைப் புல்லரிக்க வைத்தது. அவள் கைகளால் நெஞ்சை அழுத்தியபடி, 'முருகா!' என்றாள்.

அவளைக் கவனிக்காத மாதிரி அவன் நடந்து அறைக்குள் புக முயன்றான்.

"சாதம் போடவா?" என்றாள்.

"ச்சீ" என்று அவன் சீறினான்.

அவன் அறைக்குள் நுழைந்தபின் கதவைத் தடாலென்று மூடிக் கொண்டான்.

அவள் தரையில் அமர்ந்தாள். அவளை அறியாமலேயே அழுகை வந்தது. இருளில் தனிமையில் அழுதாள். அந்த ஓசையற்ற அழுகை—தேற்ற ஆளில்லாத, நிராதரவான அந்த அழுகை, அது அவளுக்கு வினோத மான ஒரு சுகத்தைக் கூட அளித்தது.

கதவைத் தட்டி அவனை எழுப்பி எல்லா வற்றையும் கூறி விடவா? தன்னால் முடியாது. அப்போதும் தன்னால் அழ மட்டும்தான் முடியும். இந்த எண்ணமே அவளுக்கு மூச்சுத் திணற வைத்தது. மெல்லத் தூங்கிப் போனாள் — தூக்கமல்ல, அரை மயக்கம்... காற்றின் ஒலியும் கடிகார டிக்டிக்கும் அவ ளுக்குக் கேட்டுக் கொண்டிருந்தன.

— கிரீச் என்று கதவு திறந்தது.

திடுக்கிட்டு எழுந்து அவள் நிதானிப்ப தற்குள் மணிகண்டன் அவளைக் கடந்து சென் றிருந்தான். இரவு வெகு நேரமாகியிருக்கக் கூடும்.

பாத்ரூம் போய்விட்டு அவன் திரும்பி வந்தபோது அவள் அறை வாசலில் நின்றி ருந்தாள்.

அவன் அவளை உற்றுப் பார்த்தான். அவன் முகம் இப்போது அத்தனை இறுக்க மாக இல்லை.

அவள் மூக்கு துடிக்க அழ ஆரம்பித் தாள்.

"வழியை விடு" என்றான்.

அவள் விலகினாள். அவன் அவளைக் கடந்து சென்று அறைக்குள் கட்டிலில் அமர்ந்து கொண்டான்.

"பானு" என்றான்.

அவன் குரலில் ஒரு மென்மை இருந்தது. அவள் மனம் மெல்ல அமைதி அடைந்தது.

"வா, இங்கே."

அவனருகே சென்றாள். அவன் காலடி யில் அமர்ந்தாள். அவன் கால்களில் முகம் புதைக்க மனம் திமிறியது. ஆனால் அவனைத் தொட அவளுக்குத் துணிச்சல் வரவில்லை.

அவன் அவள் தலையில் கை வைத்தான். அவளது காதோர மயிர் இழைகளில் அவன் கைகள் மெல்லத் துழாவின. சுற்றி இறுக்கின.

அந்த ஸ்பரிசமும்—வலியும் அவளை அப்ப டியே நெகிழ வைத்தன. தன் முதுகின் மேலி ருந்து ஒரு பெரிய பாரத்தை யாரோ இறக்கி வைத்தது போல் அத்தனை எளிதாக உணர்ந் தாள்.

"பானு..."

"ம்."

"யார் இந்த ராஜகோபால்."

அவள் தொண்டை அடைத்தது. "அவன்... எங்க ஆபீஸ்ல..."

"உன் கூட வேலை செய்யிறவனா?"

"ம்."

"ரொம்பச் சின்னப் பையனா இருப்பான் போல இருக்கு. கடிதம் அத்தனை அசட்டுத் தனமா எழுதியிருக்கான். எத்தனை வயசிருக் கும் அவனுக்கு? ஒரு இருபத்தஞ்சு இருக் குமா?"

"ம்."

"அவனுக்கு ஏன் இப்படித் தோணிச்சு? நீ அவன் கூடக் கொஞ்சம் ஃப்ரீயா பழகு வியா?"

"இல்லை. சத்தியமாக இல்லை. எல்லார் கிட்டேயும் பேசற மாதிரிதான் பேசு வேன்."

"அவன் உன்கிட்டே கொஞ்சம் உரிமை எடுத்துப்பானா?"

"ம்."

"உரிமைன்னா... டிரஸ் பண்ணிட்டு வந் தால் பாராட்டாக ஏதாவது சொல்றது. அழகைப் பற்றி முகஸ்துதி செய்யறது..."

அவள் உதட்டைக் கடித்தாள். கண்கள் மறுபடியும் நிறைந்தன.

"பரவாயில்லை. இதெல்லாம் எந்தப் பொண்ணுக்கும் பிடிக்கிற விஷயம்தான். நீ சந்தோஷப்படறதை அவனுக்குக் குடுக்கிற அனுமதியா அவன் நெனச்சிருப்பான். உன்னை வளைச்சிட்டதாத் தப்பாக் கற்பனை பண்ணியிருப்பான்."

"என்னை மன்னிச்சிடுங்க. நான் தப்புப் பண்ணிட்டேன். என்னை என்ன வேணும் னாலும் செய்யுங்க."

"நான் இப்ப உன்னை விசாரணை பண் ணலை. இந்த விஷயத்தைக் கிளியராப் பேசி டறது நல்லது. இந்த லெட்டரை எப்பக் குடுத் தான்?"

"போன திங்கட்கிழமை."

"நேரில் குடுத்தானா?"

"இல்லை. மேஜை டிராயரில் கிடந்தது."

"படிச்சிட்டு நீ புகார் எதுவும் பண்ண லியா? பண்ணத் தோணலியா உனக்கு?"

"நான் அவனைக் கான்டீனுக்குக் கூட் டிட்டுப் போய் 'பர்சனலா' பேசினேன். இந்த மாதிரி எண்ணத்தோட என்கிட்டே

இனிமேல் பழகவேண்டாம்னு சொன்னேன். இந்த ஒரு தடவை விட்டுடறேன். இனிமேல் இப்படி செஞ்சா மானேஜர்கிட்டே கம்ப் ளெயின்ட் பண்ணுவேன் அப்படீன் னேன்.''

''அவன் ரொம்ப ஆடிப் போயிருப் பானே?''

''ரொம்ப! கண்ணீர் விட்டு அழவே ஆரம் பிச்சிட்டான். 'என்னமோ ஒரு வேகத்துல எழுதிட்டேன் ஸிஸ்டர். இப்ப அதை நெனச்சி வருத்தப்படறேன் ஸிஸ்டர். எழு தினதுக்கு அப்புறம் நான் தூங்கவே இல்லை ஸிஸ்டர் அப்படீன்னு ஆயிரம் ஸிஸ்டர் போட்டான்.''

''அது நடிப்பில்லை பானு. அந்த வயசில் ஒரு தடவையாவது புத்தி அப்படிப் போகும். நான் எம். ஏ. படிக்கிறப்ப இப்படி ஒரு லெட் டர் எழுதினேன். யாருக்குத் தெரியுமா? கூடப் படிக்கிற ஸ்டூடன்டுக்கு இல்லை. புரொபசருக்கு. ஒரு வயசான அம்மாள். அப்பவே என்னை விடப் பெரிய பையன் இருந்தான் அவளுக்கு'' மணிகண்டன் 'ஹஹ்ஹா' வென்று சிரித்தான்.

''ஸ்ஸ்... மெள்ள! குழந்தைங்க பயந் துக்கப் போறது.''

''சரி. அந்தக் கடிதாசை நீ ஏன் கிழிச்சுப் போடலை?''

அவள் கண்கள் தாழ்ந்தன.

''நான் சொல்லட்டுமா? அந்தப் பயல் சகட்டு மேனிக்கு உன்னைப் புகழ்ந்திருக்கான் அதை வாசிக்கிறதில் ,உனக்கு ஒரு 'திரில்' —என்ன? சரி சரி, மறுபடியும் அழ ஆரம்பிச் சிராதே. இதுக்காக உன்னை யாரும் தூக்கில் போடப் போறதில்லை.''

அவள் அவன் கால்களின் மேல் முகம் புதைத்துக் கொண்டாள். அவன் அவள் தலை மயிரில் முத்தமிட்டான்.

''இதோ பார் பானு. நமக்குக் கல்யாண மாகி ஏழெட்டு வருஷங்களாகுது. நமக் குள்ளே இருந்த வேகமெல்லாம் தணிஞ் சாச்சு. லைப் இப்ப ஒரு மாதிரி போர்தான். உனக்கு என் மேலேயோ எனக்கு உன் மேலேயோ அலுப்புக்கூடத் தட்ட ஆரம் பிக்கலாம்...''

''அய்யோ... நான்...''

''சரி, சரி. இல்லேங்கலை. ஆனால் இருபது வயசில் நம் உறவில் இருந்த வேகம் இப்ப இல்லை. இருக்கமுடியாது. மறுபடியும் அதைக் கொண்டு வரவும் முடியாது. இப்ப மனசு கொஞ்சம் பரபரப்பா ஒரு விஷயத்திற்கு ஆசைப்படலாம். மனசைப் படபடக்க வைக் கிறதா — ராத்திரி தூக்கத்தைக் கெடுக்கிறதா ஒரு அனுபவத்துக்கு மனசு ஏங்கலாம். மனசு அப்படித்தான். அதுக்குத் தர்ம நியாயம்லாம் தெரியாது. ஆனால் மன்சை மனசின் போக் குக்கு விட்டுட்டா என்ன ஆகும்? உன் பேரில் ஒரு சின்ன களங்கம் வந்தால் அது என்னை எப்படிப் பாதிக்கும்? நம்ம தாம்பத்தியமே குலைந்து போகும்? அதனால் பாதிக்கப்பட றது நம்ம குழந்தைங்க! நம்ம சந்தோஷத்திற்கு அவங்களைப் பலி கொடுக்கலாமா? ஆணும்



ஒருவர்: ராமசாமி மொப்பெட் வாங்கியதும் ஆளே மாறிட்டான். ஒரே கர்வம்!

மற்றவர்: எப்படிச் சொல்றே?

ஒருவர்: பின்னே பாரேன், இப்பல்லாம் வாக்கிங் போறப்பக்கூட மொப்பெட்டைத் தள்ளிட்டுத் தான் போறான்!

— ந. மாணிக்கவாசகம்

பெண்ணும் சுகமா இருக்கணும்கறதுக்காக மட்டுமே பெரியவங்க குடும்பம்னு ஒண்ணை ஏற்படுத்தலை. புதிய தலைமுறையோட பாது காப்புக்காகவும் இப்படி ஓர் ஏற்பாட்டைச் செய்தாங்க.....'' தன் பேச்சு நீண்டுவிட் டது என்று உணர்ந்து ஹாஸ்யமாகச் சிரித்த படி, ''என்ன பரவாயில்லயா நம்ம சொற் பெருக்கு?'' என்றான்.

அவள், ''என்னை மன்னிச்சிடுங்க'' என் றாள்.

''சரி, மன்னிச்சாச்சு. நாம இந்தச் சம்ப வத்தையே மறந்துடலாம் என்ன?''

ஒரு வேகத்துடன் அவள் அவன் முகத் தைப் பார்த்தாள். ''மறந்துடுவீங்களா? எல் லாத்தையும் மறந்துடுவீங்களா?''

அவள் தலைமேல் முத்தமிட்டபடி அவன் சொன்னான். ''சத்தியமா.''

அவள் அவனுடன் ஒட்டிக் கொண் டாள். பரிச்சயமான இழைதல், வெட்பம், மிகவும் அறிமுகமான அந்த மணம்.... அரை மயக்கத்திலும், 'மறந்துடுவீங்களா, மறந்துடு வீங்களா' என்றுதான் அவள் கேட்டுக் கொண்டிருந்தாள்.

**தூ**யில் கலைந்த ஒரு நிமிடம் அவள் திகைத்தாள். அவளருகே அவன் இல்லை. அறை இருட்டாக இருந்தது. ஹாலில் இருந்து வெளிச்சம் உள்ளே வந்தது. உடைகளை உடுத்திக் கொண்டு எழுந்து மெல்ல நடந்து ஹாலில் எட்டிப் பார்த்தாள்.

விளக்கு மிகப் பிரகாசமாய் எரிந்து கொண்டிருந்தது. சோபாவில் சாய்ந்து இருளை வெறித்தபடி மணிகண்டன் அமர்ந் திருந்தான். அவன் கையில் சிகரெட் அனு தையாய்ப் புகைந்தது. தரையில் சிகரெட் சாம்பலும் எச்சங்களும் கிடந்தன. அவன் முகத்தில் மனப்போராட்டம் தெரிந்தது. நெற்றியிலும் கன்னத்திலும் கவலையின் கோடுகள்.

— இனி ஒரு போதும் திரும்பி வராதபடி எதுவோ ஒன்று தன்னை விட்டு விலகிப் போய் விட்டதை அவள் உணர்ந்தாள். அவள் மனம் எல்லையற்ற சூனியவெளியில் திசை தவறியது.

* பாய்லரிலிருந்து உமி சாம்பல் வெளியேற்றப்படு கிறது.

* தவிட்டிலிருந்து பெறப்படும் பொருள்கள்

# உமியும் தவிடும் நாட்டையே உயர்த்தும்!

"நீ அவலைக் கொண்டு வா, நான் உமியைக் கொண்டு வரேன்; இரண்டு பேரும் ஊதி ஊதிச் சாப்பிடலாம்!" என்பதாக ஒரு வேடிக்கைப் பழமொழி உண்டு.

ஆனால் உமி, தவிடு என்பன அப்படி யொன்றும் கேவலமான பொருள்கள் அல்ல என்பதை நவீன விஞ்ஞானம் நமக்கு உணர்த்தி இருக்கிறது.

உதாரணமாக, இந்திய உணவுக் கார்ப்பரேஷன் தமிழ்நாட்டில் மட்டும் நான்கு நவீன அரிசி ஆலைகளை இயக்கி வருகிறது. இவை தஞ்சை, செம்பனார் கோயில், மன்னார்குடி, சிதம்பரம் ஆகிய ஊர்களில் உள்ளன. இங்கே போய்ப் பார்த்தால் நெல்லிலிருந்து முதலில் உமியைத் தனியே பிரித்து எடுத்து விடுவதைக் காணலாம். அதன் பிறகு அரிசியைப் பாலிஷ் செய்யும் போது உபபொருளாகத் தவிடு கிடைக்கிறது. இந்தத் தவிட்டிலிருந்து தொழிற்சாலை எண்ணெய், சமையல் எண்ணெய், வனஸ்பதி, மெழுகு முதலியன தயாரிக்கப்படுகின்றன. இவற்றைத் தயாரிக்கத் தேவைப்படும் எரிபொருளாக முதலில் பிரித்தெடுக்கப்பட்ட உமியே பயனாகிறது!

அரிசியைப் பாலிஷ் செய்வதால் அதிலுள்ள சத்தெல்லாம் போய் விடுவதாகவும் அதனால் கைக்குத்தல் அரிசியே மேலானது என்றும் எவ்வளவு சொன்னாலும், வெள்ளை வெளேரென்று பாலிஷ் செய்யப்பட்ட அரிசிக்குப் பழகிவிட்ட நாம், கைக்குத்தல் அரிசிக்கு இனி திரும்பப் போவதில்லை. மேலும் அனைவருக்கும் கைக்குத்தல் அரிசி சப்ளை செய்வது என்பது இயந்திர யுகத்தில் சாத்தியமுமில்லை. ஆனால் செய்யக் கூடியது ஒன்று உண்டு. பாலிஷ் செய்வதால் அரிசி இழக்கும் சத்தைத் தவிட்டு எண்ணெய் மூலமாகச் சமையலில் திரும்பச் சேர்ப்பது தான் அது. இதுதான் இப்போது தவிட்டு எண்ணெய் என்பதாக மார்க்கெட்டுக்குள் வந்திருக்கிறது. (**Rice Bran Oil** ).

அது
மிக உன்னதமான கவிதை
நீ கூறும்போது
அதை
மிக விருப்பத்தோடு கேட்டேன்
அந்தச்
சிந்தனையை
நான் விரும்புகிறேன்
அக்கவிதை வீச்சினை
நான் காதலிக்கிறேன்
அதில்
எல்லாவற்றையுமே
நான் நேசிக்கிறேன்
ஏனென்றால் அது
என் கவிதை!

— ஆர். ஏ.



## கவிஞர் வைரமுத்துவின் நகைச்சுவைக் கவிதைகள்

### (1) காத்திருந்த காதல்

கடைசியில்
அவள்
என் காதலுக்குச்
சம்மதம் சொல்ல வந்தபோது
அவளுக்குப் பரிசளித்தேன்
ஒரு
வெள்ளிப்பூண் போட்ட
கைத்தடி.

### (2) பதில்

எல்லா ஏரியாவும்
விற்று விட்டீர்களா
என்று வினவிய போது
தயாரிப்பாளர் சொன்னார்:
"ஊரிலிருந்த தென்னந்தோப்பு
விருகம்பாக்கத்து வீட்டடி
நன்னிலத்தில் இருந்த நன்செய்
எல்லா ஏரியாவும் விற்றுவிட்டேன்."

### (3) முடிவு

அந்த எழுத்தாளர்
தமிழை வாழ வைப்பதாய்
முடிவு செய்துவிட்டார்
அதாவது —
எக்காரணம் கொண்டும்
இனிமேல் எழுதப் போவதில்லை.



# விளம்பர மாடல் அப்புசாமி!

பாக்கியம் ராமசாமி மாதிரி எழுத முயற்சி செய்திருப்பது: 'கடு

மரவட்டை மாதிரி நன்றாகச் சுருட்டி படுத்துக் கொண்டு விடிகாலைத் தூக்கத்தை ரசித்துக் கொண்டிருந்தார் அப்புசாமி. அபாரமான கனவு.

ராத்திரி வெகுநேரம் வரை தெரு வோர விளக்கின் கீழ் அவருடைய நண்பர்கள் ரசகுண்டுவும் பீமாராவும் தாங்கள் பார்த்த விட்டலாசார்யா படத்தை அப்புசாமிக்குக் காட்சி காட்சியாக விவரித்திருந்தார்கள்.

''தாத்தா, நீ ஜெயமாலினியின் அட்டகாசமான டான்ஸைப் பார்த்திருந்தால் ஸும்மா கிர்ரிங் ஆயிருப்பே'' என்றான் ரசம்.

''டேய் அவரேனு ஹாகே ஆகுவதில்லா. அவரு தும்ப வயசாதவரு'' என்றான் பீமா.

''யாருடா கெய்ம்....? நீ கெயம், ஒன் தாத்தா கெயம்.... அந்தத் தாத்தாவுக்குத் தாத்தா கெயம்.... வாயை வாஷிங் சோடா போட்டுக் கழுவு. அய்யாவா கெயம்... ஊடு கட்டிடுவேன்'' என்று பீமாராவின் மேல் பாய்ந்தார்.

''தாத்தா..... பீமாவை வுடு. கதையைக் கேளு. ஒரு சீன்லே ஜெயமாலினி பயங்கர மழையிலே மாட்டிக்கிறா.... அடாடா...''

''ஏய், ரசம்..... நீனு ஏனுதரு ஹேளி அவரிகே வயித்தெரிச்சலைக் கிளப்பாதே. அவரெல்லி சினிமா, சினிமாகே ஹோகுத்தாரே? பாட்டிதான் ஃபுல் கண்ட்ரோல் நல்லி இட்டித்தாரே.....''

''போடா குண்ரோல்! கண்ட்ரோலாம் ஒண்ணும்....! மேலே கதையைச் சொல்லுடா.....''

''தாத்தா மீதிக் கதை நாளைக்கி ராத்திரிதான். ருக்மணி திட்டும்....'' என்று ரசகுண்டு சொல்ல, கூட்டம் கலைந்தது.

அப்புசாமி, மரவட்டை அவதாரத்தில் இருந்தாலும், சுகமான கனவில் மிதந்து கொண்டிருந்தார். கம்பீரமான கவர்ச்சி நாயகனாக! ஜெராக்ஸ் காப்பி எடுத்தது போல் பல ஜெயமாலினிக்கள் அவரைச் சுற்றி மழையில் நனைந்து கொண்டிருக்க, எல்லாரும் சடாரென்று தண்ணீரைத் தெளிக்க —

சட்டென்று கண்விழித்துப் பார்த்தார்.

''வாட் ஈஸ் தி டைம்.... எய்ட் ஆச்சு. நீங்க எழுந்துக்கலே. ஐ டோண்ட் அண்டர்ஸ்டாண்ட் வாட் எ ஜென்மம் யூ ஆர்? தூங்கறதுக்கு லிமிட் வேண்டாம்.''

''சீதே..... உனக்குத்தான் அம்னீசியா, மலேசியா எல்லாம்.... உனக்கு வயசாயிடுத்து. கிழக்கோட்டான் மாதிரி நைட்டெல்லாம் முழிச்சுண்டு இருக்கே.....''

''ஆகாகா... பெரிய இளைஞர் திலகம். உங்க மூஞ்சியை மிர்ரர்லே பாருங்க. அது கூட வேறே பக்கம் திரும்பிக்கும். கெட் அப்....''

''டூ மினிட்ஸ், சீதே....''

''நீங்க என்ன மேக்கியா, டூ மினிட் என்று டி.வி.யிலே சொல்ற மாதிரி சொல்றீங்களே.... சீக்கிரம் எழுந்திருங்க. மிஸஸ் அலமேலு சந்தானத்தின் கிராண்ட் சன் பர்த்டே செலிபரேஷனுக்குப் போகணும்னு தௌசண்ட் டைம்ஸ் நேற்று சொன்னேன். சீக்கிரம் எழுந்து கிளம்புங்க.''

''சீதே.... என்ன பிரமாத பர்த் டே? அது அப்பர் பர்த் டேயாக இருந்தாலும் சரி, லோயர் பர்த் டேயாக இருந்தாலும் சரி, நம்பளை இந்த ஸ்லீப்பர்லேருந்து கிளப்ப முடியாது'' என்று சொல்லிவிட்டு அப்புசாமி 'மீண்டும் மரவட்டை' யானார்!

ஆனால் தூக்கம் வரவில்லை. 'சீதே.... என் தூக்கத்தைக் கலைத்தாயே, நீ நன்னா இருப்பியா? என் மூஞ்சியைப் பத்தி என்ன சொன்னே? என் மூஞ்சியிலே விழுந்திருக்கிற ஒவ்வொரு வரியும் ரவி வர்மா பிரஷ்ஷால் போட்ட வரி மாதிரி' என்று மனத்திற்குள் பேசிக் கொண்டார்.

வேஷ்டியின் நுனியை நன்றாகத் திருகிக் காதில் விட்டு, சுகமாகக் காது குடைந்து கொண்டிருந்தார் அப்புசாமி.

சட்டம் தெரியாது என்பதால் யாரும் தப்பிக்க முடியாது — வழக்கறிஞர்களைத் தவிர.
— ஜெரமி பெண்ட்ஹாம்

பீமாராவும் ரசகுண்டுவும் வந்தார்கள்.

''தாத்தா.... நீவு தும்ப அதிர்ஷ்டசாலி. நிம்மகே ஐந்நூறு ரூபாய் பருத்தே'' என்றான் பீமாராவ்.

''என்னடா ரசம், பீமா என்ன ரீல் வுடறான், பருத்தே, இளைச்சேன்னு!''

''ரீல் இல்லே தாத்தா.... நெஜம்மாதான் சொல்றான். பீமாவின் மாமா ஒரு விளம்பரக் கம்பெனியிலே இருக்கார். புதுசா ஒரு 'டெய்லி' பத்திரிகை வரப் போறது. அதைப் பத்தி விளம்பரம் போடறாங்க. நீங்க பேப்பர் படிக்கிற மாதிரி படம் எடுக்கணும்.''

''அப்புறம் டீ.வி.யிலே கூட வருமா?''

''ஹௌது தாத்தா ஹாகே கேள்தீரீ? மவுண்ட்ரோடில் ஸ்ரீதேவியின் புயல் சினிமா பேனர் பக்கத்தல்லி நிம்ம பேனரை இடுத்தாரே....''

''ஏண்டா ரசம்.... டீ.வி. விளம்பரங்களில் அழகழகா குட்டிப் பொண்ணுங்க வர்றாங்களே. அதுமாதிரி நம்பளோட ஏதாவது கிட்டு கித்வானி, சுப்ரியா பதக், ரீனு குப்தான்னு இளசா ஒண்ணை ப் போட்டா சர்க்குலேஷன் 'கும்'னு தூக்கிடும். பீமா ஒன் மாமா கிட்டே சொல்லும்மா'' என்றார் அப்புசாமி.

''மாமா முதல்லே இந்த மாடலிங் லைன்லே பூருங்க. அப்புறம் பாருங்க நான், நீயின்னு மேலே வுழுவாங்க....''

''யாருடா வுழுவாங்க.... இளசுங்களா?''

''சொல்ல முடியாது தாத்தா. கவர்ச்சித் தாத்தான்னு உங்களுக்கு ஒரு இமேஜ் வந்துடுத்தானல் பணம் மழையா கொட்டும்''

''பீமா.... நீ சொல்றதாலே ஒத்துக்கறேன். ஐந்நூறு ரூபாய் எப்படிடா போறும்?''

''தாத்தா வர்ற லட்சுமியை வேணும்னு சொல்லாதீங்கோ. பிகு பண்ணுதிங்க...''

''ரசம்.... நீ சொல்றதாலே ஒத்துக்கறேன். போட்டோ எடுக்கறதுக்கு முன்னே பத்து கமர்கட் தரணும். அப்பத்தான் ஜாலி மூடு வரும்....'' என்றார் அப்புசாமி.

ஒரு பொறை பிஸ்கெட்டை, பாதாம் அல்வா சாப்பிடுவதுபோல் கொஞ்சம் கொஞ்சமாகக் கடித்துச் சுவைத்துக் கொண்டே மேலே பார்த்து ரசித்துக் கொண்டிருந்தார் அப்புசாமி.

இடம்: மவுண்ட் ரோடு. அண்ணா சிலை சமீபம்!

ரசகுண்டு, ''தாத்தா.... தூள் கிளப்பிட்டீங்க. அதென்ன ஸ்டைல் தாத்தா! படா ஷோக்காக இருக்கீங்க....'' என்றான்.

''தாத்தா.... நீவு ஒந்து ஸ்டார் ஆகிபிட்றி. நோடு தீரா... பக்கத்தல்லி ஸ்ரீதேவி. வெச்ச கண்ணை தொகையுவதில்லா, நிம்ம பேனர் நோடுதவரு'' என்றான் பீமாராவ்.

''பீமா.... எல்லாம் சரிதான். இதைச் சீதாக்கிழம் பார்க்கணும். சும்மா வயிறு எரியணும். 'மங்கையர்மலர்'லே அவளோட போட்டோ வந்ததாம். என்னமா குதிச்சா? அது மட்டுமாடா ரசம்... உங்க போட்டோ வரணும்னு நீங்களே பத்திரிகை ஆரம்பிச்



''எங்க ஆபீஸ்ல ஒரு சின்னக் குண்டூசி விழுந்தால் கூட சத்தம் கேட்கும்!''

''கொடுத்து வெச்சவர் சார், நீங்க. அமைதியா தூங்குறீங்க!''

— கடுவை. கோபால்சாமி.



அவர் விளக்கத்துக்கு அவர்தான் விளக்கம் கூற வேண்டும். — பைரன்

சாத்தான் உண்டு'ன்னு இன்ஸல்டிங்கா சொன்னாளேடா.... இந்தப் பேனரைப் பார்த்தா நம்ப காலில் வுழுந்து மன்னிப்புக் கேட்பாடா.... ஏண்டா பீமா... என் தலே இவ்வளவு வழுக்கையாவா இருக்கு. கொஞ்சம் டச் அப் பண்ணியிருக்கலாம். வாங்கடா.... சோன்பப்டி சாப்பிடலாம். ஐந்நூறு ரூபாய்லே அந்தக் கிழவிக்கு அரிசி மிட்டாய் கூட வாங்கித் தரப் போறதில்லே. ரசம்... சாயங்காலம் திருவல்லிக்கேணி பீச்சுக்குப் போய் மிள்காய் ப்ஜ்ஜி அடிக்கலாம்....'' அப்புசாமி, விசு எழுதிய டயலாக் மாதிரி விடாமல் பேசிக் கொண்டிருந்தார்.

''**ஐ**நெவர் தாட் நீங்க இந்த லெவலுக்கு ஸ்டூப் பண்ணுவீங்கன்னு. பொன்னம்மா டேவிட், பா.மு. கழக மீட்டிங்க்லே உங்களைப் பத்தி, அதாவது நீங்க போஸ் கொடுத்திருக்கிறதைப் பத்தி கமென்ட் அடிச்சா. எனக்கு வாழ்க்கையே வெறுத்துப் போய்ட்டுது....''

''சீதே.... அதுலே நல்லபடியாகத்தானே போட்டோ பிடிச்சுப் போட்டிருந்தாங்க.''

''அக்ரிட்.... பட், நீங்க பேப்பரில் என்ன நியூஸ் படிக்கிறதாக் காட்டியிருந்தாங்க. முதல்லே அதைப் போய் அப்ஸர்வ் பண்ணிக்கிட்டு வாங்க. ஹாப் நேக்கட் கேர்ள் படத்தை வாயைத் திறந்து பார்த்துக்கிட்டிருக்கீங்க. இந்த மாதிரி மாடலிங் செய்றதுக்கு முன்னே என்கிட்ட ஒரு வார்த்தை கர்ட்டிசிக்காகவாவது கேட்டீங்களா?''

''சீதே.... அது மாடலிங். ஒரு ஆக்டிங் மாதிரிதான். இப்போ நான் ஒரு சோப் விளம்பரத்துக்கு மாடலிங் பண்ண, அந்தச் சோப்பை நான், அதாவது இந்த அப்புசாமி யூஸ் பண்றேன்னு அர்த்தமா.....''

''இந்த விஷயத்துலே யாரும் அப்படி நினைக்கமாட்டாங்க.நீங்ககுளிச்சாத்தானே ரெகுலரா....'' இந்த சமயத்தில் டெலிபோன் மணி அடிக்கவே சீதாப் பாட்டி அதைக் கவனிக்கச் சென்றுவிட்டாள்.

''**எ**ன்னடா ரசம்.... நீ என்ன சொல்றே? இந்தப் படத்தைப் பார். இந்த மாதிரி படம் எடுத்துக்கணுமாம்.''

''ஹேனு தாத்தா.... யோசனே. மாடலிங் சும்மனேனு மாடுதிரீ? எங்க மாமா, ஆகாகே காசு கொடுத்தாரே. பாக்கெட் மணிகே பாட்டி ஹத்திர கை நீடு போகா கில்லா!''

''அதில்லே பீமா.... அவர் என்னவோ நாலைஞ்சு பொம்மனாட்டிப் பசங்களுக்கு நடுவுலே நிக்கணும்னு சொல்றாரு. எனக்கு வெக்கமா இருக்குமே....''

''அந்தப் பொண்ணுங்களுக்கே வெக்கம் வருவதில்லா. நிம்மகேக ஏன் வரப் போவுது, தாத்தா? ஆயிரம் ரூபாய் கசக்குதா?''

''ஸோன்பப்டி வாங்கிச் சாப்பிட்டா கசக்காது. பாவக்காய்ச் சாப்பிட்டா கசக்கும். டேய் பீமா, நான் ரெடிடா.... ஸ்விம்மிங் டிரஸ்லே கூட ரெடி. எவண்டா போட்டோ எடுத்துப் பணமும் கொடுக்கிறான், இந்தக் காலத்திலே.''

''தாத்தா.... சின்ன வயசிலேயே இந்த லைன்லே நீங்க பூந்திருந்தா எக்கச்சக்கமா சம்பாதிச்சுப் பெரிய வூடு கட்டியிருப்பீங்க....''

''ஏண்டா ரசம். இப்ப மட்டும் என்னவாம்? இப்போ ஒரு சின்ன வீடாவது கட்டறேன். பீமா, உன் மாமாகிட்ட சொல்லு, நான் ரெடி'' என்றார் அப்புசாமி.

''**டே**ய் பீமா.... சுளை சுளையா நோட்டு....''

''நோட்டு இருக்கட்டும் தாத்தா. நிம்ம போட்டோ காட்டு.''

உறையிலிருந்த போட்டோவை நாசூக்காக எடுத்துக் கொடுத்தார் அப்புசாமி.

''தாத்தா.... ஹேனு தாத்தா இது....''

''பீமா.... அவருக்கு அதிர்ஷ்டம்டா. எத்தனை பொம்மனாட்டிங்க! அப்படியே கடிச்சுச் சாப்பிடற மாதிரியில்லே சூழ்ந்துகிட்டு இருக்காங்க. லட்டு கணக்கா இருக்காங்க. தாத்தா கொடுத்து வச்சவரு.''

''ஹேனு தாத்தா. இது என்ன அட்வர்டைஸ்மெண்ட்டு?''

''ஏதோ லேகியமாம். எதுவாயிருந்தால் என்ன? நாய் வித்த காசு குரைக்குமா? வாங்கடா, பீச்சிலே போய் பஜ்ஜி சாப்பிடலாம். ராத்திரி செகண்ட் ஷோ போய்ட்டு மசாலா பால் அடிக்கலாம். அடி சீதே பாட்டி.... உனக்கு பாக்கெட் மணி வேணுமா என்னைக் கேளு!'' என்று நாடக பாணியில் கூறித் தன் மார்பைத் தட்டிக் கொண்டார்.

துரதிர்ஷ்டம்! அடுத்த அறையில் உறங்குவது போலிருந்த சீதாப்பாட்டி எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்தாள்!

அப்புசாமி, போட்டோவைத் தன் ட்ரங்கில் வைத்துவிட்டு பீச்சுக்குப் புறப்பட்டதும், ட்ரங்கைத் திறந்து பார்த்ததும் சீதாப் பாட்டிக்கு ஏற்பட்டது ஷாக்!

''திஸ் ஈஸ் அட்ரோஷியஸ்..... இந்த லேடீஸ் எல்லாம் டிரஸ் பண்ணிண்டா இருக்காங்க. பார்க்கக் கண் கூசறது. ஐ

திங் திஸ் ஓல்ட் மேன் ஹேஸ் கான் மேட்! என்னமோ லேகியமாமே.... ஓ, காட்.... இது ஏதோ டர்ட்டி விளம்பரமாக இருக்கும். ஐ ஷுட் ஸ்டாப் திஸ்."

சீதாப்பாட்டியின் கம்ப்யூட்டர் மூளை மளமளவென்று வேலை செய்தது. போட்டோவைத் திருப்பிப் பார்த்ததில் போட்டோக்காரரின் பெயர் விலாசம் இருந்தது. அவருக்குப் போன் பண்ணி, பீமாவின் மாமாவைக் கண்டு பிடித்தாள்.

"ஐ எம் மிஸஸ் அப்புசாமி. எஸ். எஸ். உங்க லேகிய விளம்பர மாடல்.... அவர் மாடலிங்குக்காக இப்ப வெளியே போயிருக்கார். ஒரு சின்ன விஷயம். வேறே ஒரு லேகியக் கம்பெனிக்காரங்க அவரை மாடல் பண்ணச் சொல்லிக் கூப்பிடறாங்க. இப்ப உங்களுக்காக ஒரு லேகிய விளம்பரத்திற்குப் போஸ் கொடுத்திருக்காரு இல்லையா? அதனுல் ஒத்துக்கமாட்டோம்னு சொல்ல நினைக்கிறேன். பை தி வே, என்ன லேகியக் கம்பெனி உங்களுடையது.... திஸ் ஈஸ் ஜஸ்ட் ஃபார் அவர் இன்ஃபர்மேஷன். இன்சிடென்ட்லி ஐ எம் சீதாப்பாட்டி, பிரசிடெண்ட் ஆஃப் பா.மு. கழகம்...

"இஸ் இட் மேடம். உங்க ஹஸ்பண்ட் தான் தி கிரேட் அப்புசாமி.... ஹி ஈஸ் எ ஒண்டர்ஃபுல் மாடல்.... யெஸ். அந்த லேகியம்.... அது வந்து...."

"ஏன் ஹெஸிடேட் பண்றீங்க.... மாடலிங்னு வந்துட்டால் யு ஷுட் பி ரெடி ஃபார் எவ்வரிதிங்...."

"தட் ஈஸ் தி ஸ்பிரிட் மேடம். அது வந்து ரதி—மன்மத லேகியம்.... யூ நோ த ஸ்டஃப்... ரிஜுவெனேஷனுக்கு...."

"ஓ அப்படியா, இட் ஈஸ் பர்ஃபக்ட்லி ஆல்ரைட்.... தேங்க்யூ....."

"யூ ஆர் வெல்கம் மேடம்!" போனை வைத்தும், சீதாப்பாட்டி தன் மூளையைக் கசக்கிக் கொண்டாள்!

**டை** கட்டி ட்ரிம்மாகக் காரில் வந்து இறங்கிய ஆசாமியைப் பார்த்து அப்புசாமி அசந்துவிட்டார். கார் என்றால் படகுக் கார்!

"மிஸ்டர் அப்புசாமி? ஐ எம் மோகன் ராஜ். மோகன் மாடலிங் ஏஜென்ஸி நடத்தறேன். இண்டியாவிலேயே இது பெரிய ஏஜென்சி".

அப்புசாமி மனத்திற்குள் 'ரேட்'டைப் பற்றி யோசிக்க ஆரம்பித்தார்.

"ஏதாவது மாடலிங் பண்ணணுமா?"

"கரெக்ட். எங்க கிளையன்ட், உங்க போட்டோவைப் பார்த்து அசந்துட்டாரு. அவரு பிராடக்ட் விளம்பரங்களுக்கு உங்களை எக்ஸ்க்ளூஸிவ்வா யூஸ் பண்ண ஆசைப்படறார்."

"அப்படின்னு?"

"அந்த பிராடக்ட் சம்பந்தப்பட்ட பத்திரிகை, டி.வி. விளம்பரங்கள், பேனர் எல்லாவற்றிலும் நீங்கதான் இருக்கணும். அதுக்காக ஒரு பத்து வருஷ காண்ட்ராக்ட் போட்டுக்கலாம் என்கிறார்."

# புதுக் கவிதைப் போட்டி



**நீங்கள் ப்ளஸ்டு அல்லது கல்லூரி மாணவரா? இதோ உங்களுக்காகவே ஒரு போட்டி:**

தேவை: ஒரு பேனு, ஒரு போஸ்ட் கார்ட், கொஞ்சம் மூளை, கொஞ்சம் கற்பனை +

**அடுத்த வார கல்கி இதழ்.**

அடுத்தவார கல்கிவருவதற்குள் போஸ்ட் கார்டை வாங்கி, அதன் பின்புறத்தில் பள்ளி அல்லது கல்லூரி முத்திரையைப் பெறுங்கள். உங்கள் பெயர், விலாசத்தை எழுதி வைத்துக் கொள்ளுங்கள்.

**9.11.86 கல்கி இதழின் மேலட்டைக்குப் பொருத்தமாக கற்பனையைத் தூண்டிவிட்டு ஒரு புதுக் கவிதையை போஸ்ட் கார்டின் மறுபக்கத்தில் எழுதி 17.11.86 க்குள் எங்களுக்குக் கிடைக்கும்படி அனுப்பி வையுங்கள்.**

கார்டில் நுணுக்கி நுணுக்கி நாற்பது வரி எழுதும் சாமர்த்தியத்துக்குப் பரீட்சை இல்லை இது. நறுக்குத் தெறித்த மாதிரி நாலு வரி, மிஞ்சிப் போனுல் எட்டைத் தாண்டக் கூடாது.

முதல் பரிசு: ரூ. 100/—

இரண்டாம் பரிசு: ரூ. 25/— தவிர ஆறு மாதங்களுக்குக் கல்கி இலவசம்.

தவிர, பிரசுரமாகும் கவிதைகள் அனைத்துக்கும் சன்மானம் உண்டு.

''அதாவது.....''

''காண்ட்ராக்ட் முடியற வரைக்கும் வேறே யாருக்கும் மாடலிங் பண்ணக் கூடாது. ஆனால் மாசா மாசம் உங்களுக்கு நாங்க 1000 ரூபாய் ரீடையினர் கொடுப் போம். மாடலிங் பண்ணும்போது 5000 ரூபாய், ஒவ்வொரு ஸிட்டிங்கிற்கும்.... ரேட் குறைவுதான். ஆனால் இப்போ நீங்க ஒத்துக்கணும். பிஸினஸ் இம்ப்ரூவ் ஆனால், ரேட்டை ஏத்தறோம்'' என்று வார்த்தைகளைச் சாக்ரீனில் தோய்த்துத் தோய்த்துச் சொன்னார்.

அப்புசாமிக்கு ஒன்றும் புரியவில்லை. 'நமக்கா இத்தனை அதிர்ஷ்டம்' என்று சந் தோஷத்தால் திக்குமுக்காடினார்.

அந்தச் சமயம் சீதாப்பாட்டி அங்கு வந் தாள், காப்பியுடன், ''சீதே.... இவர் வந்து....''

''ரீஸனபிள் ஆஃபர். கண்ணை மூடிண்டு கையெழுத்துப் போடுங்க.''

அப்புசாமிக்குத் தலைகால் புரியவில்லை. சீதா ஒரு வார்த்தைகூட எதிர்ப்பு தெரி விக்கவில்லை. ஸெவன்த் ஹெவனுக்குப் போய்விட்டார்!

அப்புசாமி கையெழுத்துப் போட்டார் காண்ட்ராக்டில். மோகன்ராஜ் ஆயிரம் ரூபாய் எண்ணிக் கொடுத்தார்.

**அ**ப்புசாமியைப் பார்க்க பீமாவின் மாமா வந்தார்.

''சார்.... அந்த லேகிய விளம்பரம் பிர மாதமான லே—அவுட் போட்டுத் தயார் பண்ணியிருக்கோம். க்ளையன்ட் அசந்து போய்ட்டான். நாலு லட்சம் போஸ்டர் அடிக்கச் சொல்லி, வேலை நடந்துண்டு இருக்குது....''

''ஹி.... ஹி.... அப்படியா. இனிமேல் தமிழ்நாட்டில் எல்லாச் சுவர்களிலும் நான் தானா?''

''நீங்கள் மட்டுமில்லை. ஜிலுஜிலு குமரி கள். குளுகுளு கன்னிகள்....''

''சார்.... ஒரு போஸ்டரை நான் பார்க்க லாமா?''

பீமாராவின் மாமா அந்த மூவண்ண போஸ்டரை எடுத்துக் காட்டினார்.

''சார்.... எனக்கு ஒரு காபி தர்றீங் களா?''

''இது ரஃப் ப்ரூப். வார்னிஷ் போட்டதைத் தர்றேன்.''

''அதுவரைக்கும் இதை வெச்சுக் கறேன்'' என்று கெஞ்சி வாங்கிக் கொண் டார் அப்புசாமி.

**''போ**ஸ்ட்மேன், ரிஜிஸ்தர் லெட்டரா யாருக்கு....? என் ஹஸ்பெண்டுக்கா. இதோ கூப்பிடறேன்...'' அப்புசாமியைச் சீதாப்பாட்டி கூப்பிட்டாள்.

''யார் எனக்கு ரிஜிஸ்தர் அனுப்பப் போறான். ஓ, செக்காக இருக்கும். சீதே கெட் மீ எ பென்'' என்று அலட்டலாகச் சொன்னார் அப்புசாமி.

கவரை வாங்கிப் பிரித்துப் பார்த்ததும் தேள் கொட்டியது போல் குதித்தார்.

''ஓய் ஆர் யூ ஜம்பிங் லைக் எ வால் அறுந்த பல்லி? எந்தப் பட்டணத்தை யார் ராப் பண்ணிட்டாங்க?''

''கொள்ளையடி சீதே.... கொள்ளை.... இந்த மோகன்ராஜ் வக்கீல் நோட்டீஸ் அனுப்பியிருக்கான். அவன் அனுமதி இல்லாமல் லேகிய விளம்பர போஸ்டர் என் படத்தோட அச்சடிச்சது தப்பாம். 25,000 ரூபாய் நஷ்ட ஈடு தர்ரணுமாம். காண்ட்ராக்டிலே அப்படி கண்டிஷன் இருக்குதாம்.''

''இருக்கட்டுமே. காண்ட்ராக்டில் கையெழுத்துப் போடறதுக்கு முன்னேயே மாடலிங் பண்ணதுதானே இது.... டேக் தி காண்ட்ராக்ட் காப்பி. லெட் மீ ஸீ.''

அப்புசாமி ஓர் அழுக்குத் துணியில் சுற்றிக் கட்டி வைத்திருந்த மோகன்ராஜ் காண்ட்ராக்ட்டை எடுத்து வந்தார்.

சீதாப்பாட்டி பிரித்துப் பார்த்தாள்.

''மோகன்ராஜ் ஈஸ் கரெக்ட். நீங்க காண்ட்ராக்ட்டைச் சரியாப் படிக்கலே. இது என்ன டேட் தெரியுமா. ஜூன் 18, 1985. தட் ஈஸ் லாஸ்ட் இயர்.''

''இந்த வருஷம்தானே நான் கையெழுத் துப் போட்டேன்.''

''அதை கோர்ட்டு ஏத்துக்காதே. இதிலே கிளியரா இருக்கே. அதனால் இந்த தேதிக் குப் பிறகு நீங்க லேகிய கம்பெனிக்கு மாடலிங் பண்ணியது தப்பு. இல்லீகல்.''

''இது தில்லுமுல்லு. என்னை ஏமாத்தி கையெழுத்து வாங்கிட்டாங்க.''

''கோர்ட்டு, கேஸுன்னு போய் ஊரெல் லாம் சந்தி சிரிக்கணுமா.... யூ டூ ஒன் திங். அந்த லேகிய கம்பெனியிலே போய், அவங்க கொடுத்த பணத்தைத் திருப்பிக் கொடுத்துடுங்க.''

''அவங்க போஸ்டரெல்லாம் அச்சடிச் சிருப்பாங்களே.''

''அந்தச் செலவையும் கொடுத்திடலாம். டேக் மை செக் புக். போய் செட்டில் பண்ணிட்டு வந்து, வர்ற வழியிலே ரோடு குழாயிலே முழுக்குப் போட்டுட்டு வாங்க, இந்த மாடலிங் வேலைக்கு.... அண்டர் ஸ்டாண்ட்....''

பதவி இழந்த மந்திரியைப் போல அப்பு சாமி செக்புக்குடன் லேகியக்கம்பெனிக்குச் சென்றார்!

**''தே**ங்க்யூ மிஸ்டர் மோகன்ராஜ்.... அவருக்கு ஒரு லெஸ்ஸன் டீச் பண்ணற துக்கு ஹெல்ப் பண்ணீங்களே.... ஆமாம். போஸ்டர் பிரின்ட் பண்ண என்ன செல வாச்சு?''

''அது ஃபர்ஸ்ட் ப்ரூப்தான். பிளாக் சார்ஜ் 500 ஆச்சு. அது போக மீதிப் பணத்தை அனுப்பிடறேன்.''

சீதாப்பாட்டி தன் காப்பில் மற்றொரு ஃபெதரைச் சூட்டிக் கொண்டாள்!

★★★★★

காதல் என்பது பித்துப் பிடித்த நிலை அல்ல; ஆனால் இரண்டுக்கும் பல ஒற்றுமைகள் உண்டு.
— தாமஸ் கார்லைல்

கேரளத்தில் 'ஈநாடு' படத்திற்குப் பிறகு கடந்த ஓணத்திற்கு ரிலீஸாகிப் பரபரப்பாய் ஓடிக் கொண்டிருக்கிறது 'ஆவநாழி'. போலீஸ் மற்றும் சமுதாயச் சுரண்டல் பேர்வழிகளின் அக்கிரமங்களை வெளிப்படுத்தும் இது சாஜ் மூவிஸ் தயாரிப்பு. அந்தப் படத்திலிருந்து சில பகுதிகள் இங்கே தரப்படுகின்றன.

குறிப்பு: இக்கதை யாரையும், எவரையும் குறிப்பது இல்லை. முழுக்க முழுக்க கற்பனையே.

### முக்கியமான பாத்திரங்கள்

பலராம்: கதாநாயகன், போலீஸ் இன்ஸ்பெக்டர். நேர்மை, நியாயத்திற்காகப் போராடும் அபூர்வப் பிறவி. யாருக்கும் பயப்படாமல்செயல்படுவான். எதற்கும்தயங்காதமுரட்டன். அதனாலேயே அல்லல்படுபவன்.

சத்யராஜ்: கடத்தல்காரர்களின் ஏஜெண்ட். இண்டர்நேஷனல் க்ரைம் மன்னன்! குற்றங்களுக்கு இவன் மட்டும் காரணமில்லை. இவனுக்குப் பின்னால், திரை மறைவில் பலரும் உண்டு. ஆனால் போலீஸில் அகப்பட்டால் இவன் மட்டும்தான் தண்டனை பெறுவான். திரை மறைவு ஆசாமிகள் பாதுகாப்பாய் மறைவிலேயே இருப்பார்கள்.



அவர்கள் எய்பவர்கள்: இவன் அம்பு. பின்வரும் மூவரும் இவனை எய்பவர்கள்.

**வின்ஸெண்ட்:** பழுத்த பிஸினெஸ்மேன். நியாயம், நீதி இவற்றிற்கு அப்பாற்பட்ட ஐம்பது வயதுப் பெருச்சாளி. கடத்தல், பிளாக் மார்க்கெட் பேர்வழி.

**ஜெயன்:** வக்கீல், அநீதிக்கும் அக்கிரமத்திற்கும் வாதாடுகிறவன். பணக்காரர்களின் அரிய நண்பன். நாயகன் பலராமின் மாஜி காதலியை மணந்து துன்புறுத்தி வருபவன்.

**சந்திரஹாசன்:** அரசியல்வாதி — அரசியல் வியாதி என்றும் சொல்லலாம். அரசியல்வாதிகளைக் கைகொடுத்துத் தூக்கி விடுகிற, பொலிட்டிக்கல் கிங். இவனது கையசைவுக்குக் காத்திருக்கும் மந்திரிகள் பலர்.

(சிமெண்ட் கடத்தல் சம்பந்தமாக வின்ஸெண்ட், சந்திரஹாசன், ஜெயன் ஆகிய மூவரிடமும் சாக்கோ என்ற அரசாங்க அதிகாரி தகராறு செய்கிறான். நிறையப் பணம் லஞ்சமாய்க் கேட்கிறான். அதனால் இவர்கள் சத்யராஜை அனுப்பிச் சாக்கோவைக் கொல்கிறார்கள். இது சம்பந்தமாக போலீஸ் ஸ்டேஷனில் ஒரே பரபரப்பு....)

டி.ஐ.ஜி: இது என்ன அநியாயம்? வர வர.... கொலைகள் அதிகமாகிகிட்டேயிருக்கு. நாயைச் சுடற மாதிரிச் சுட்டுட்டுப் போயிருக்கான். அவனைப் பிடிக்க முடியாம நமக்கெதுக்குத் தொப்பி — ஷேம்!

கமிஷனர்: கொலையாளி இம்முறை தப்பிக்க முடியாது சார். இன்ஸ்பெக்டர் பலராம் அவனைத் தேடிப் போயிருக்கான். அதான் பயமாயிருக்கு.

டி.ஐ.ஜி: பலராமா....? அவன் முரடனுச்சே! கொலைகாரனைப் பிடிச்சுக் குடுக்கறதுக்குப் பதில் அவனே தண்டனை குடுத்துடுவானே....!

கமி: ஆமாம் சார். முன்பு பாலக்காட்லே உன்னி'ங்கற ஸ்டூடண்டை அடிச்சே கொன்னவனுச்சே.... (இருவரும் ரகசியப் பார்வைகளைப் பரிமாறிக் கொள்கிறார்கள்) குற்றவாளியை நம்மகிட்டே ஒப்படைக்காம இவனே எப்படி தண்டனை தரலாம். ஒரு முறை சஸ்பெண்ட் ஆனப்புறமும் புத்தி வரலையே இவனுக்கு!

டி.ஐ.ஜி: இப்போ குற்றவாளியைக் கண்டு பிடிக்கிறதைவிட அவனுக்குப் பாதுகாப்பு கொடுக்கறதுதான் முக்கியம். அதுக்கரன எல்லா ஏற்பாடுகளும் பண்ணுங்க.

கமி: ஓ.கே. சார்.

★★★★★

(பலராம் சத்யராஜைப் பிடிக்க, ஒரு சக இன்ஸ்பெக்டர் அவனைத் தன் பொறுப்பில் அரெஸ்ட் செய்து கேஸ் பதிவு செய்கிறார். பணம் புகுந்து விளையாடுகிறது. சாட்சிகள் கட்சி மாறுகிறார்கள். கேஸ் தோற்க, சத்யராஜுக்கு விடுதலை என்றாலும் வேறு பல குற்றங்களுக்காக அவனை ரிமாண்டில் வைக்க கோர்ட் உத்தரவிடுகிறது.

கோர்ட்டை விட்டு வெளியே வரும்போது அந்தச் சக இன்ஸ்பெக்டருக்கும் பலராமிற்கும் சச்சரவு வந்து, பலராம் அவரை அறைந்து விடுகிறான். அதைத்



* "என்ன காரியம் செஞ்சுட்டீங்க பலராம்!"



* "எங்க வீட்டு வசந்தத்தை அழிச்சது போதாதா?"

தொடர்ந்து பலராமை ஸ்டேஷனில் விசாரிக்கிறார் டி.ஐ.ஜி.)

டி.ஐ.ஜி: மிஸ்டர் பலராம். என்ன காரியம் செய்துட்டீங்க. ஒரு சக இன்ஸ்பெக்டரை, கோர்ட் வாசலில் வைச்சு எப்படி நீங்க அறையலாம்? நிருபர்கள் எல்லாம் இருந் தாங்க. பத்திரிகைகள்ல என்ன கிழிகிழிக் கப் போறாங்களோ....

பலராம்: ஒரு குற்றவாளியை அதுவும் இன்டர்நேஷனல் குற்றவாளியைக் கஷ்டப் பட்டுப் பிடிச்சுக் கொடுத்தும், சாட்சிகளைப் பால்மாற விடுறானுங்கன்னு.... இவனுங்கள் லாம் எதுக்கு போலீஸுன்னு....

கமி: உஷ்ஷ்.... சத்யராஜ் நிரபராதின்னு கோர்ட் சொன்னதுக்கப்புறம் அதைப் பத்தி நீங்க பேச வேண்டாம். இன்ஸ்பெக்டரை அறைந்ததுக்குப் பதில் சொல்லுங்க.

பல: நான் அறையலே! என்னை அறைய வைச்சான் அந்த ஆள்....! (கோபத்துடன் வெளியேறுகிறான்.)

கமி: இவன் இப்படித்தான் சார், திமிராப் பேசுவான். இந்த ஆளால நமக்கு என்னைக் கும் தலைவலிதான். பேசாம இவனை டிரான்ஸ் பர் பண்ணிடுங்க...!

டி.ஐ.ஜி.: உம்.... நீங்க சொல்றதும் நல்ல யோசனைதான்.

★★★★★

(பலராம் புது இடத்தில் வீடு பார்த்துத் தங்குகிறான். பக்கத்து வீட்டிலிருந்து, "ஐயோ, என் மகனைக் கொல்லாதே... கொல்லாதே....." என்ற அலறலைக் கேட்டு ஓடுகிறான். அங்கே.....)

ராதா: ஆ! இன்ஸ்பெக்டர் பலராம்! நீயா....? அன்னைக்கு என் தம்பி உன்னியை அரெஸ்ட் பண்ணிக் கொண்டு போய் கொன்னு போட்டியே! பாவி! உன்னி போனதுக்கப்புறம் அவனை நினைச்சு நினைச்சு எங்க அம்மா பயித்யமாயிட்டா! எங்க வீட்டு வசந்தத்தை அழிச்சது போதாதா.... இப்ப எதுக்குத் திரும்பவும் வந்திருக்கே? யாரைக் கொல்ல வந்திருக்கே?

(ராதாவின் அப்பா வருகிறார்.)

அப்பா: சொல்லுங்க. ஏன் என் மகனைக் கொன்னீங்க. அவனை எங்கே புதைச்சிருக் கீங்க....?

பல: நான் அவனைக் கொல்லலே. சத்யமா எனக்கு எதுவும் தெரியாது.

அப்பா: நீங்க போலீஸ்.... எது வேணும்னா லும் செய்வீங்க. கேட்க நாதி இல்லே. இனி போன உயிர் திரும்பவாப் போகுது. அவனோட சாம்பல் ஒரு பிடி குடுங்க. போதும். பூஜை செய்யறோம். அவன் ஆத்மா சாந்தியடையத் தான் கேட்கிறோம்.

பல: என்னை நம்புங்க. நான் அவனைக் கொல்லலே. அவன் எப்படிச் செத்தான்னு எனக்குத் தெரியாது. எங்கே கொண்டு போனாங்கன்னும் தெரியாது.

ராதா: (ஆவேசத்துடன்) கெட் அவுட்! எங்க கண் முன்னால வராதே. தொலைஞ்சு போ!

(பலராம் வெளியேறுகிறான்.)

★★★★★

(ராதா பலராம் பேரில் கேஸ் போடு கிறாள். எப்படியாவது அவனுக்குத் தண்டனை வாங்கித் தந்துவிட வேண் டும் என்ற துடிப்பில் இருக்கிறாள். அவள் வக்கீல்.... ஜெயன்!)

★★★★★

(வீண் பழி சுமத்தப்பட்ட பலராம் வருத் தத்துடன் உட்கார்ந்து பழைய நினைவு களில் மூழ்குகிறான். அவன் மனத்திரை யில் ஓடும் காட்சி. ஸ்டேஷனில்.....)

டி.ஐ.ஜி: என்ன காரியம் செய்தீங்க பலராம். அடிச்சு அடிச்சே உன்னியைக்

கொன்னுட்டீங்களே.... போலீசுக்கு உங்களால எத்தனை கெட்ட பேர்....!

பல: நான் லேசாதான் சார் அடிச்சேன். சத்யமா என் அடியால் அவன் இறந்திருக்க முடியாது. இதுல ஏதோ மர்மம்....

டி.ஐ.ஜி: ஷட் அப்! கொன்னதும் கொன்னுட்டு மர்மம் அது இதுன்னு தப்பிக்கப் பார்க்கறீங்களா.... இவனை இப்போ என்ன செய்யறது....?

பல: பாடியை அவங்க வீட்டிலே சேர்த்துடலாம் சார்.

டி.ஐ.ஜி.: நோ. அது நமக்குக் கெட்ட பேர். பேசாம இவனைக் கட்டிக் கடல்லே போட்டுடுவோம். காணாமல் போன மாதிரி இருக்கட்டும்.

பல: நான் அவனை அரெஸ்ட் பண்ணிக்கிட்டு வந்தது எல்லோருக்கும் தெரியும் சார். இப்போ இவனைக் காணோம்னு என் மேலே தான் சந்தேகப்படுவாங்க.

டி.ஐ.ஜி: அதனால பரவாயில்லே பலராம். நீங்க குற்றத்தை ஒப்புக்குங்க, உங்களை வெளியே கொண்டு வர வேண்டியது என் பொறுப்பு.

(பலராம் மேல் கேஸ் போடுகிறார்கள். அவனுக்குத் தண்டனை கிடைக்கிறது. தண்டனை முடிந்து திரும்பும் அவனை டிரான்ஸ்ஃபர் செய்கிறார்கள். ஆனால் வின்ஸென்ட் மற்றும் சத்யராஜின் தூண்டுதலால் விஷம் கலந்த சாக்லேட்டை உன்னிக்குக் கொடுத்து அவனைக் கொலை செய்த உண்மைக் குற்றவாளியான எஸ்.பி. பிரமோஷனில் டி.ஐ.ஜி. யாகியிருக்கிறார்! பலராம் கொலையாளி என தீர்ப்பானதால் அவன் காதலி உஷாவை அவள் அப்பா, வக்கீல் ஜெயனுக்குக் கல்யாணம் பண்ணி வைத்து விடுகிறார்.)

★★★★★

(புது ஸ்டேஷனில்)

போலீஸ்காரர்: இன்ஸ்பெக்டர் பலராமை நம்ம ஸ்டேஷனுக்கு மாத்தியிருக்காங்களாமே.... ஆள் எப்படி....?

அடுத்த போலீஸ்: அந்த ஆள் கோபக்காரன். ரொம்ப ஸ்ட்ரிக்ட். யாருக்கும் பயப்படாதவன்.

போலீ: அப்போ இனி நம்ம பர்ஸ் காலின்னு சொல்லு! சம்திங் வாங்கற விஷயத்துல ஆளு எப்படி.....?

அ. போலீ: கவலைப்படாதே.... அந்த ஆள் வாங்க மாட்டான். ஆனால் நாம் வாங்கினால் கண்டுக்கமாட்டான்.

★★★★★

(சிறைச்சாலை. வக்கீல் ஜெயன் லாபிக்கு சத்யராஜை வரவழைத்துப் பேசிக் கொண்டிருக்கிறான்.)

சத்யராஜ்: மிஸ்டர் ஜெயன்! என்னை எப்போ வெளியே கொண்டு வரப் போறீங்க?

ஜெயன்: அவசரப்பட்டா எப்படி.... உன் மேலே ஒரு கேஸா.... ரெண்டு கேஸா... இன்டர்நேஷனல் அளவுல பல குற்றங்கள் செஞ்சிருக்கே. நாங்க முயற்சி செய்யாமலா இருக்கோம்?

சத்ய: எத்தனை நாளா முயற்சி செய்வீங்க? உங்களுக்காகத்தானே அந்தச் சாக்கோவைக் கொன்னேன்? நீங்க எப்போ கேஸ் ஜெயிச்சு எப்போ என்னை விடுவிக்கிறது.... ஜெயிக்காட்டியும் பரவாயில்லே, ஜெயில்லேருந்து தப்பிக்க உதவினாப் போதும்.

ஜெயன்: மெதுவாப் பேசு. அதுவும் அவ்ளோ ஈஸியா என்ன.... யோசிச்சுத்தான் செய்யணும். உன்னைத் தப்பிக்க வைக்கறது பெரிசில்லே. வெளியே வந்தின்னா எங்கே தங்குவே? போலீசு கண்ணுல விளக்கெண்ணெய் ஊத்திக்கிட்டு தேடுமே..... யோசிக்கணும்.



* "நீ கேஸை வாபஸ் வாங்க வருவேன்னு தெரியும்..."

சத்ய: தோ பார்.... யோசிக்கணும்... யோசிக்கணும்னு தெரியும் சேதி! என்னே உந்திவிட்டுக் காரியம் சாதிச்சுக்கிற உங்க எல்லாத்தையும் முச்சந்திக்குக் கொண்டு வந்துருவேன், ஜாக்கிரதை! சிமெண்ட் மட்டு மில்லே, தங்கம், சாராயம், அரிசின்னு நீங்க செய்யற எல்லா கடத்தலோட ஆதாரமும் எங்கிட்டே இருக்கு. எல்லாத்தையும் வெளியே விட்டேன்னு.... பெரிய மனுஷங் களோட குட்டெல்லாம் வெளிப்பட்டுடும்.

ஜெயன்: டோன்ட் பி ஸில்லி! நாங்க உன்னே இப்படியேவா விட்டுருவோம்.... கூடிய சீக்கிரம் நீ ஜெயில்லேருந்து தப்பிக்க வழி பண்றோம்.

★★★★★

(சில போலீஸ்காரர்கள் ரோடில் லாரி களை மறித்துப் பணம் வசூல் செய் ததைப் பார்த்து பலராம் அவர்களை அழைக்கிறன்.)

பலராம்: போலீஸ்காரனுக்கு எப்பவுமே கை அரிக்குமில்லே..... கவர்மெண்ட் குடுக் கற சம்பளம் போதாது இல்லே.... என்ன பெரிய சம்பளம் குடுத்துடறனுங்க! குடும்பம் குழந்தை, குட்டின்னு பெருகிடுச்சுன்னு நிச் சயமா போதாதுதான். அதுவும் மாசக் கடைசி வேறே. லஞ்சம் வாங்கித்தான் ஆகணும். அப்படி ஒரு தலையெழுத்து நமக்கு.

போலீஸ்கள்: சார்.....

பலரா: இன்னேக்கு எவ்ளோ வசூல் — எடுங்க பார்ப்போம்?

(எடுத்து வைக்கிறர்கள்.)

பல: இன்னேக்கு விடறேன். இனி இது கூடாது.

போலீ: சார்.... இதுல உங்க பங்கு....

பல: சீ! எடுத்துப் போங்கடா

★★★★★

(கல்லூரியில் பரீட்சை நடக்கிறது. பேராசிரியையாகப்பணியாற்றும்உஷா (பலராமின் மாஜிக் காதலி) மேற் பார்வையிட்டுக் கொண்டிருக்கும் போது அரசியல்வாதியின் மகன் நிர் மல் புத்தகத்தை மறைத்து வைத்து எழுதுவதைப் பார்த்துவிடுகிறள்.)

உஷா: நிர்மல்.... என்ன அது.... எடு வெளியே!

நிர்மல்: (மறைத்தபடி) இது ஒண்ணு மில்லே சும்மா....

உஷா: என்ன சும்மா.... வெளியே எடு!

நிர்மல்: (விசில் அடித்து) என்னம்மாக் கண்ணு.... என்ன வேணும் உனக்கு?

உஷா: என்ன மரியாதை குறையுது. ஒழுங்கா குடுத்துடு இல்லாட்டி ரிப்போர்ட் பண்ணிடுவேன்! (அவனிடம் புத்தகத்தைப் பறிக்க நெருங்குகிறள்.)

நிர்மல்: ஏய்.... குட்டி... கிட்டே வராதே... வந்தே.... முகத்துல ஆஸிட் ஊத்திடுவேன்!

உஷா: உனக்கு அவ்ளோ திமிரா.... அந்தப் புஸ்தகத்தைக் குடு இப்படி!

(உஷா கையை நீட்ட அவன் பிளேடு எடுத்துக் கையில் ஆழமாய்க் கீறி விடு கிறன். அவள் கையிலிருந்து ரத்தம் கொட்டுகிறது.)

★★★★★

(நிர்மலின் நடத்தை பற்றிப் போலீ சுக்கு கம்ப்ளெயின்ட் கொடுக்கிறள் உஷா. பலராம் நிர்மலின் வீட்டிற்குப் போகிறன். அங்கே நிர்மலின் அப்பா அரசியல்வாதி சந்திரஹாசன்....)

சந்திரஹாசன்: வாங்க மிஸ்டர் பலராம்... புதுசா டிரான்ஸ்பர் ஆகி வந்திருக் கிறதாக் கேள்விப்பட்டேன். நானே உங் களைக் கூப்பிட்டு விருந்து வைக்கணும்னு நினேச்சேன். நீங்களாவே வந்துட்டீங்க. சந் தோஷம். எந்தப் போலீஸ்காரனு இருந்தா லும் என் வீடு தேடி வராமல் இருந்ததில்லே. ஏன் நிக்கறீங்க.... உட்காருங்க!

பல: பரவாயில்லே.

சந்தி: இப்படித்தான் என் முன்னல உட் காரவே எல்லோரும் தயங்குவாங்க. எம் மேலே அத்தனே மரியாதை.... ஆமா என்ன



* "அந்த பலராம், இவளோட மாஜிக் காதலன்..."



இண்டர்நேஷனல் க்ரைம் மன்னன்!

விஷயம், என் உதவி ஏதாச்சும் தேவையா?

பலராம்: நான் உங்களைப் பார்க்க வரலே, உங்க மகனைத் தேடித்தான் வந்தேன்.

சந்தி: என் மகனையா.... ஏன்?

பலரா: கூப்பிடுங்க, சொல்றேன்.

(நிர்மல் வருகிறான். பலராம் அவன் கையைப் பிடித்துக் கொள்கிறான்.)

பல: பரீட்சை ஹால்ல காப்பியடிச்சானும் உங்க மகன். கண்டிச்ச டீச்சரை பிளேடால கீறியிருக்கான். முகத்துல ஆஸிட் ஊத்திடுவேன்னும் மிரட்டியிருக்கான். அதனால உங்க மகனைக் கைது பண்ணிக் கொண்டு போக வந்தேன்.

சந்தி: கைது பண்ண வந்தாயா.... எம் மகனையா.... நான் யார்ன்னு தெரியுமில்லே. வெளியே யாரை வேணுமானாலும் கேட்டுப் பார். இந்த சந்திரஹாசன் யார்ன்னு புரியும் உனக்கு. அரசியல் கிங். பெரும் பணக்காரன். நான் கைதட்டினா மந்திரிங்க ஓடி வருவாங்க. நான் கொடி காட்டினா மந்திரி சபையே ஆட்டம் காணும்.... தெரியுமில்லே....

பல: தெரியும். அது மட்டுமில்லே. ஊருல இருக்கிற நல்ல பொண்ணுங்களையெல்லாம் மந்திரிக்குக் கூட்டிக் கொடுக்கிற மாமா நீங்கன்னும்கூட தெரியும். அப்போ நிர்மல் போகலாமா கண்ணு....

சந்தி: அவனை நான் விட மாட்டேன். மந்திரிக்கு போன் பண்ணுவேன்.

பல: ஓயெஸ். தாராளமா பண்ணுங்க. ஆட்சேபணை இல்லே. இவனை நல்லபடியா அழைச்சுகிட்டுப் போகணுமா.... இல்லே! நாலு தாங்கு தாங்கிக் கொண்டு போகணுமா..... சொல்லுங்க!

(நிர்மலைப் போலீஸ் வேனில் ஏற்றிக் கொண்டு கிளம்புகிறார்கள்.)

*****

(போலீஸ் வேனிற்குள் நிர்மலை பல்ராம் அடி அடியென்று அடிக்கிறான்.)

பல: ஏண்டா.... டீச்சர் மேலே ஆஸிட் ஊத்துவியா நீ....

நிர்: இல்லே..... இல்லே.... என்னை விட்டுடுங்கோ, ஐயோ.....!

பல: நீ பெரிய அரசியல் கிங்கோட மகனா இருக்கலாம். ஆனா எங்ககிட்டே உங்கப்பன் பப்பு வேகாது. இங்கே என்ன நடந்ததுன்னு வெளியே சொல்லுவியா....

நிர்: ஐயோ.... அம்மா இல்லே என்னை அடிக்காதீங்க....

(வேன் போலீஸ் ஸ்டேஷனை அடையும் முன் அங்கு சந்திரஹாசன் வக்கீல் ஜெயனுடன் தயாராய் நிற்கிறார். நிர்மல் முகம் அடிபட்ட நிலையில், சோர்ந்து போய் இறங்குகிறான்.)

சந்தி: ஐயோ.... எம் மகன் மூஞ்சியெல்லாம்.... வீங்கிப் போயிருக்கே. என்ன பண்ணினீங்க அவனை?

பல: நிர்மல்.... அப்பா கேட்கறாரில்லே... என்ன விஷயம்னு சொல்லும்மா....

நிர்: அது வந்து வேறே ஒண்ணுமில்லே... வேனிலிருந்து குதிச்சுத் தப்பிக்கப் பார்த்தேன். அப்போ அடிபட்டுருச்சு.

ஜெயன்: நிர்மலை ஜாமீன்ல எடுக்க வந்திருக்கோம்.

பல: நீங்க யாரு?

ஜெயன்: இவரோட வக்கீல்.

பல: வக்கீலுக்கு போலீஸ் ஸ்டேஷன்ல என்ன வேலை.... கோர்டுல சந்திப்போம். கேஸ் பைல் பண்ணிட்டு நானே இந்தக் கழுதையை வெளியே விட்டுடறேன்.

போலீஸ் ஒருவர்: (ஓடி வந்து) இன்ஸ்பெக்டர். உங்களை மந்திரி போன்லே கூப்பிடறார்.

பல: நான் இல்லேன்னு சொல்லு. பண முதலையோட புள்ளையப் பிடிச்சுக் கொண்டு வந்தா, மந்திரிதான் கூப்பிடுவார்னு தெரியும்.

*****

(ஜெயனின் வீடு. உஷா கொடுத்த கம்ப்ளெயிண்டை வாபஸ் வாங்கச் சொல்கிறான் ஜெயன்.)

உஷா: அதெப்படி வாபஸ் வாங்க முடி

யும்.

ஜெயன்: நீ வாபஸ் வாங்கித்தான் ஆக ணும். இந்த கேஸ் எனக்கு மானப் பிரச்னே யாயிருக்கு. அந்த இன்ஸ்பெக்டர் பெரிய இவனுட்டம் நடந்துக்கருன். அவனுக்கு ஒரு பாடம் புகட்டியேயாகணும்.

உஷா: அதுக்கு நான்தான் கிடைச்சேனு... காலேஜ்ல எல்லார் முன்னுடியும்தான் என் கைலே கீறியிருக்கான். கம்ப்ளெயின்ட் கொடுத்தேன். இப்போ போய் அவன் என் கையைக் கீறலேன்னு எந்த மூஞ்சியை வச்சு கிட்டுச் சொல்வேன்? என்னுல முடியாது!

ஜெய: முடியாதா....? தெரியும்டி.... நீ ஏன் வாபஸ் வாங்க மறுக்கறேன்னு! அந்த இன்ஸ் பெக்டர் வெறும் இன்ஸ்பெக்டர் மட்டு மில்லேயே.... உன் மாஜிக் காதலனுச்சே. மாஜிக் காதலனே எப்படி விட்டுக் குடுப்பே நீ.

உஷா: அத்தான்!

ஜெய: ஏண்டி கத்தறே..... இன்னேக்கு ரெண்டுல ஒண்ணு தெரிஞ்சாகணும். நான் வேணும்னு கம்ப்ளெயிண்டை வாபஸ் வாங்கு. அவன்தான் வேணும்னு உன் இஷ் டப்படி நட.

★★★★★

(உஷா வேறு வழியில்லாமல் பலராமைச் சந்தித்து கம்ப்ளெய்ண்டை வாபஸ் பெறக் கோருகிருள்.)

பலராம்: நீ வாபஸ் வாங்க வருவேன்னு தெரியும். கொலே செய்யப்பட்டவனே பிழைச்சு வந்து என்னே யாரும் கொல்ல லேன்னு சொல்ற காலம் இது. நீ என்ன பண்ணுவே பாவம். அதுவும் ஓர் அயோக்கிய வக்கீலோட மனேவி வேறே!

★★★★★

(பலராமின் வீடு. ஒரு பத்திரிகை நிருபர் வருகிருர்.)

நிரு: வணக்கம். நான் 'கலே' வார இதழின் நிருபர்.

பல: கலேயா..... ஹாஹ்ஹா... ஊருலே நடக்கிற — நடக்காத 'கொலே' பத்திதானே நிறைய வெளியிடறீங்க நீங்க! பேசாம 'கொலே' வார இதழ்ன்னு பேர் வச்சுடுங்க.

நிரு: ஹி....ஹி.... அது வந்து ஜனங்க அதைத் தானே த்ரில்லாய்ப் படிக்கிருங்க. அதனுலதான். நான் இப்போ வந்தது எதுக் குன்னு.... இன்டர்நேஷனல் கிரிமினலான சத்யராஜை நீங்கதானே பிடிச்சீங்க... அதனுல்....

பல: அதனுல எனக்கு மெடல் கொடுக் கப் போறீங்களா? உங்களே மாதிரி உருப் படாத பத்திரிகைகளோட மெடல் எனக் கொண்ணும் வேண்டாம்.

நிரு: ஐயோ, நீங்க தப்பாப் புரிஞ்சுக் கிட்டீங்க. அந்த சத்யராஜ் பற்றி அவனுடை பயோகிராபியை எங்க பத்திரிகையில வெளி யிடலாம்னு இருக்கோம். அதனுல....

பல: எந்திரிய்யா!

நிரு: என்ன....?

பல: முதல்ல எந்திரிய்யா. இடத்தைக் காலி பண்ணு. அந்தச் சத்யராஜ் மட்டும் கிரிமினல் இல்லே. உன்னேப் போன்ற பத் திரிகைகாரங்களும்தான் நாட்டைக் குட்டிச் சுவர் ஆக்குறீங்க. அவன் கொலே பண்ருன், கொள்ளேயடிக்கிருன். அவனேப் பற்றி பயோகிராபி எழுத வந்திருக்கான். பயோ கிராபி! போய்யா! எதுக்கு அவனுடை பயோ கிராபி. அவனேப் பல பேரும் கடைப் பிடிக்கணும்னு?

(பத்திரிகை நிருபர் ஏமாற்றத்துடன் வெளியேறுகிருர்.)

(வின்ஸெண்ட், சந்திரஹாசன், வக்கீல் ஜெயன் இவர்கள் மூவரும் திட்ட மிட்டு, ஜெயில் சூப்பரிண்டெண்ட், டி.ஐ.ஜி., கமிஷனர் உதவியுடன் சத்ய ராஜை ஜெயிலிலிருந்து தப்பிக்க வைக் கிருர்கள். ஜெயில் சூப்பரிண்டெண்ட் தான் சத்யராஜ் தப்பிக்கக் காரணம் என அறிந்து பலராம் ஓர் அப்ளிகேஷன் தயாரித்து கமிஷனரைப் போய்ச் சந்திக் கிருன். கமிஷனர் கிளப்பில் சீட்டு


* கொலேயாளியைத் தேடி இன்ஸ்பெக்டர் பல ராம்!

(பணம் வைத்து) விளையாடிக் கொண்டிருக்கிறார்.)

பலராம்: சார்.... சத்யராஜ் ஜெயில்லேருந்து தப்பிக்கிறதுக்கு சூப்பரிண்டென்ட்டும் காரணம்னு விசாரணையில் தெரிய வருது. இந்தச் சம்பவத்துக்குப் பின்னால் பெரிய சதியே இருக்கிறதாகச் சந்தேகப்படறேன். அது பத்தின டீடெயில்ஸ்லாம் இதுல இருக்கு. இதை மேலிடத்துக்கு நீங்க பாஸ் பண்ணி வைக்கணும். (சில காகிதங்களைத் தருகிறான்.)

கமிஷனர்: (அதை வாங்கிப் பார்த்து) சத்யராஜ் தப்பிச்சது தப்பிச்சுட்டான். நீங்க உங்க வேலையைப் பாருங்களேன். எதுக்கு வீண் ஸ்ட்ரெயின் எடுக்கறீங்க....?

பல: இதுல ஸ்ட்ரெயின் என்ன சார் இருக்கு. அவனைப் போன்ற கிரிமினல்களைச் சும்மாவே விடக்கூடாது.

கமி: அது போகட்டும் பலராம். (பாக்கெட்டிலிருந்து ஒரு புக் எடுத்துத் தந்து) இது புட்பால் கேமோட டிக்கெட் புக். இதுல, பத்து டிக்கெட் இருக்கு. எல்லாமே ஐயாயிரம் ரூபாய் டிக்கெட். இதை வித்து இரண்டு நாள்ல பணத்தைக் கொண்டு வந்து குடுங்க.

பல: ஸாரி சார்.... என்னால அது முடியாது!

கமி: முடியாதுன்னா எதுக்குய்யா உனக்கெல்லாம் இன்ஸ்பெக்டர் வேஷம்?

பல: இந்த இன்ஸ்பெக்டர் வேஷத்தோட போனா ஐயாயிரம் என்ன, ஐம்பதாயிரம் ரூபா டிக்கெட்னாலும் விக்க முடியும். அப்படி வித்தேன்னா அப்புறம் அவனுங்களுக்கு நான் மணியடிக்க வேண்டியிருக்கும். அதனால தான் முடியாதுன்னு சொல்றேன்.

கமி: அப்போ நீர் போகலாம்.

பல: சார் இந்த அப்ளிகேஷன்...?

கமி: லெட் யுவர் அப்ளிகேஷன் கோ டு ஹெல்!

* "ஐயோ! அவன் இண்டர்நேஷனல் குற்றவாளியாச்சே!"



★★★★★

(தெருவில் சூதாடினார்கள் என்பதற்காகச் சில ரௌடிகளைப் போலீஸ்காரர்கள் பிடித்து வந்து ஸ்டேஷனில் வைத்து அடிக்கிறார்கள். அப்போது உள்ளே வருகிறான் பலராம்.)

பலராம்: கான்ஸ்டபிள். என்ன இங்கே ரகளை....?

போலீ: ரகளை இல்லை சார். இந்தத் தடிப் பசங்க தெருவில சூதாடுறானுங்க. இவனுங்களைச் சும்மா விடக் கூடாது. அடிச்சுக் கொல்லணும்.

பலராம்: ஸ்டாபிட்! அவங்களை விட்டுடுங்க. போனாப் போறாங்க. இல்லாத கொடுமையினால, ஏதோ நாலு காசு கிடைக்குமேன்னு சூதாடிட்டாங்க.

போலீ: சார்.... அப்போ சூதாடறது சரிங்கறீங்களா....

பல (கோபமாக): தப்புத்தான். சூதாட்டத்தை ஒழிக்கணும்னு நிஜமாலுமே எண்ணமிருந்தா தெருவிலே பிடிக்காதீங்க. பெரிய பெரிய ஆபீசிலும், போலீஸ் கிளப்பிலும், மந்திரிங்களோட கோட்டையிலும் ஆயிரம் ஆயிரமா வைச்சுச் சூதாடறானுங்களே, அவனுங்களைப் போய் முடிஞ்சாப் பிடியுங்க. இந்தப் பரிதாப கேஸ்களைப் பிடிச்சு இனி வதைக்காதீங்க.

★★★★★

(சத்யராஜ் தப்பித்தது பற்றி பலராம் கம்ப்ளெயின்ட் கொடுக்கப் போக டி.ஐ.ஜி. அவனை அழைக்கிறார்.)

டி.ஐ.ஜி: மிஸ்டர் பலராம். உங்களை இன்னையிலிருந்து டிராஃபிக் கண்ட்ரோலுக்கு டிரான்ஸ்பர் செஞ்சிருக்கோம்.

பல: என்ன அநியாயம் சார் இது. ஏன் இந்த டிரான்ஸ்பர்....? ஜெயில் சூப்பரிண்

டென்ட் பேர்ல கம்ப்ளேயிண்ட் கொடுத்த தாலேயா....

டி.ஐ.ஜி: நோ.... நோ! ஸீ.... வர வர நகரத்துல டிராபிக் கூடிகிட்டே வருது. உங்களை மாதிரி சுறுசுறுப்பான ஆட்கள் டிராபிக்குக்குப் போனால்தான் வாகனங்களைக் கண்ட்ரோல் பண்ண முடியும். அதனாலதான்.

பல: சார்.... எனக்குக் கொஞ்சம் அவகாசம் கொடுத்தீங்கன்னு அந்த சத்யராஜைப் பிடிச்சுக் குடுத்துட்டு அப்புறமா டிராஃபிக்குக்குப் போறேன்.

டி.ஐ.ஜி: நோ. அதை நாங்க பாத்துக்கிறோம். யு கான் கோ நவ்!

*****

(ராதா கேஸ் பற்றிப் பேச ஜெயனின் வீட்டிற்கு வருகிறாள். அங்கே உஷா வரவேற்கிறாள்.)

உஷா: வாங்க. உங்க தம்பிக்காக நீங்களும் எவ்வளவோ முயன்று கேஸ் நடத்திட்டுதான் இருக்கீங்க. அதனால் என்ன பிரயோஜனம்.... இந்த வக்கீல்கள், கேஸ் ஜெயிக்கிறதோ இல்லையோ.... பணம் பிடுங்கறதுல ஜெயிச்சுடறாங்க....

ராதா: உங்க கணவரே, ஒரு வக்கீல். நீங்க இப்படிப் பேசறீங்க....!

உஷா: என் கணவர் உங்க கேஸை நடத்தறதுனாலதான் சொல்றேன். தயவு செஞ்சு அவர் பேச்சை நம்பாதீங்க. அவர் மோசடி பேர்வழி. தம்பியை இழந்த நீங்க இருக்கிற பணத்தையெல்லாம் இழக்கிறவரைக்கும் விடமாட்டார்.

ராதா (கோபத்துடன்): உஷா. உங்க அட்வைஸ் எனக்கு ஒண்ணும் வேணாம். அயோக்கிய போலீஸ்காரங்க என் தம்பியை நாயை அடிக்கிறது போல அடிச்சுக் கொன்னிருக்கானுங்க. அந்தப் 'பலராமை நான் சும்மாவிட மாட்டேன்.

உஷா: நான் சொல்றதைக் கேளுங்க. உங்க தம்பியின் முடிவு துயரமானதுதான். ஆனால் அவனைக் கொன்றது பலராமில்லை.

ராதா: அது எப்படி உங்களுக்குத் தெரியும்....

(அப்போது ஜெயன் வருகிறான்.)

ஜெயன்: அப்படிக் கேளுங்கள் ராதா. நான் எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டுதானிருந்தேன். பலராம் கொல்லலேன்னு ஏன் அத்தனை உறுதியா சொல்றாத்தெரியுமா.. ஏன்னா அந்த பலராம் இவளோட மாஜிக் காதலன். அந்தத் தொடர்பு அறுந்து போச்சுன்னு நினைச்சேன். ஆனால் அது தொடருதுன்னு இப்போதானே தெரிய வருது....

உஷா: அத்தான்....!

ஜெயன்: சீ, வாயை மூடுடி. ராதா, நீங்க வாங்க. உள்ளே போய்ப் பேசுவோம். (வேறு அறைக்குப் போகிறார்கள்.)

ஜெய: உங்க தம்பியைக் கொன்னதை நேரில் பார்த்து படம்கூட எடுத்திருக்கான்

* "...பெரிய சதி இருக்கிறதாகச் சந்தேகப்படறேன்."



சத்யராஜ். அவனை ஜெயில்லேருந்து தப்பிக்க வைச்சுட்டோம். அவனை மறைவா எங்காச்சும் ஒளிச்சு வச்சாகணும். உங்க வீடுதான் அதுக்கு வசதின்னு நினைக்கிறேன். என்ன சொல்றீங்க?

ராதா: ஐயோ! அவன் இன்டர்நேஷனல் குற்றவாளியாச்சே!

ஜெய: இருக்கலாம். ஆனா நம்ம கேஸுக்கு உதவுகிற மாதிரி எவிடென்ஸ் அவன் கையிலதான் இருக்கு. அதை உத்தேசிச்சு நீங்க இந்த உதவியைப் பண்ணணும்.

ராதா: சரி, என் தம்பிக்காக இதைச் செய்யறேன். எப்படியாவது அந்தபலராமைத் தண்டித்தால் போதும்.

*****

(டிராஃபிக்கிற்கு மாற்றப்பட்ட பலராம் ஒரு சிமெண்ட் கடத்தல் லாரியைத் துரத்திப் பிடிக்கிறான். அந்த லாரி வக்கீல் ஜெயனுக்குச் சொந்தமானது என்று தெரிய வர, அவன் வீட்டிற்குச் சென்று, ஆராய்ந்து சில பைல்களைக் கைப்பற்றுகிறான் பலராம். அவற்றை டி.ஐ.ஜி.யிடம் கொடுக்கிறான்.)

பலராம்: சார்.... இந்த பைல்கள் முக்கியமானவை. இதையெல்லாம் பார்த்தால் சாக்கோவைக் கொன்ற விஷயம் வெளிப்படுகிறது. சுமார் இரண்டரை கோடி மதிப்புள்ள சிமெண்ட் கடத்தலும் புலப்படறது.

டி.ஐ.ஜி: அப்படியா.... (புரட்டிப் பார்க்கிறார்.)

பல: இவங்க மேலே உடனே நீங்க ஆக்ஷன் எடுக்கணும் சார். இல்லாட்டி தப்

பிச்சுடுவாங்க...

டி.ஐ.ஜி: நோ மிஸ்டர் பலராம். இந்த விஷயத்துல நாம அவசரப்படக்கூடாது. எதிரிங்க பலசாலிங்க. தந்திரசாலிங்களும் கூட. அதனுல சின்ன ஓட்டை கிடைச்சாக் கூட தப்பிச்சுடுவாங்க. அதனுல கேர்ஃபுலாத் தான் இதை டீல் செய்யணும். இந்த பைலே வேறே யார்கிட்டேயும் காட்டலேயே நீங்க.

பல: இல்லே சார்....

டி.ஐ.ஜி: வெரிகுட். இந்த விஷயம் நம்ம ரெண்டு பேரோடயே இருக்கட்டும். நான் ஆராய்ஞ்சு முடிவெடுக்கிறேன். அதுவரையிலும் இந்த பைல் பத்தின விஷயத்தை மறந்துடுங்க. என்ன....

பல்: சரி சார்....

டி.ஐ.ஜி: எனிவே யு ஹாவ் டன் எ பியூட்டிஃபுல் ஜாப். கீப் இட் அப்!

பல: தாங்க்யூ சார்!

*****

(பலராம் போலீஸ் ஜீப்பில் இருக்கும் போது, வயர்லெஸ் செய்தி வருகிறது. ஒரு மந்திரியின் கார் ஓர் ஆளே இடித்து விட்டுப் போவதாய்ச் சொல்கிறது. உடன் மந்திரியின் காரைப் போய் மறிக்கிருன்.)

பலராம்: (மந்திரியிடம்) சார். உங்க கார் ஓர் ஆளே இடிச்சுட்டு வந்திருச்சாம்.

மந்திரி: ஓ.... ஐஸீ.... அதனுல....?

பல: அந்த ஆளுக்கு ஸீரியஸாம்...

மந்திரி: அப்போ ஹாஸ்பிடல்ல சேர்த்துடுங்க. நான் வரட்டா....?

பல: ஒன் மினிட் சார். கொஞ்சம் கீழே இறங்குறீங்களா?

மந்: ஏன்?

பல: இந்தக் காரை கஸ்டடில எடுக்கணும்...

மந்: என்னது....?

பல: ஆமாம் சார். அதுதான் சட்டம்.

மந்: அப்போ நான் எதுல போவேன்.

பல: போலீஸ் ஜீப் இருக்கு சார்.

மந்: ஜீப்லேயா.....!

*****

(கமிஷனர் அறையில்)

கமிஷனர்: மிஸ்டர் பலராம்.... திரும்பவும் உங்க புத்தியைக் காமிச்சுட்டீங்களே!



* "என் குறி தப்பாது!"

* ''போலிஸ்காரனுக்கு எப்பவுமே கை அரிக்கு மில்லே... கவர்ன்மெண்ட் குடுக்கற சம்பளம் போதாது இல்லே...!''



மந்திரி காரை கஸ்டடில எடுத்தீங்களாமே... என்ன நினைச்சுக்கிட்டிருக்கீங்க உங்க மனசுல.

பல: என் மனசுலே எதுவும் நினைச்சுக்கல சார். ஆளை இடிச்சுட்டுப் பறந்து போனா எவன் பார்த்துட்டுச் சும்மா இருப்பான்.

கமி: நீங்க சும்மா இருக்க வேணும்! இந்தப் போக்குல போனீங்கன்னா அப்புறம், தெரியும் சேதி....! இந்த நிமிஷத்திலேயிருந்து உம்மை டிராஃபிக்கிலிருந்து ஸ்பெஷல் பிராஞ்சிற்கு மாற்றியிருக்கோம். யு கான் கோ.

★★★★★

(அன்று பலராம் கொடுத்த பைல்களை டி.ஐ.ஜி. இரகசியமாய் வின்ஸென்ட், சந்திரஹாசன், ஜெயனிடமே திருப்பிக் கொடுத்து விடுகிறார். பைல் விஷயமாகப் பலராம் இப்போது டி.ஐ.ஜி.யைப் பார்க்க வருகிறான்.)

பல: சார்.... அன்னைக்கு ஜெயன் வீட்டுல கைப்பற்றின பைல்களைக் கொடுத்தேனே... ஆக்ஷன் எதுவும் எடுத்தீங்களா சார்.

டி.ஐ.ஜி: மிஸ்டர் பலராம். நீர் உம்ம பொசிஷனுக்கு மேல் அதிகப்பிரசங்கித்தனமாய் நடந்துக்குறீங்க. அந்த பைல்களை நான் மேலே அனுப்பியிருக்கேன். அதோட முடிவு பத்தி நீங்க கவலைப்பட வேண்டாம். இட் ஈஸ் நன் ஆஃப் யுவர் பிஸினஸ்.

(அப்போது மறைவிலிருந்து சி.பி.ஐ. அதிகாரிகள் வந்து டி.ஐ.ஜி.யை அரெஸ்ட் செய்கிறார்கள்.)

பலராம்: என்ன சார் முழிக்கறீங்க. உங்க மேலே நம்பிக்கை இல்லாம அன்னைக்கே பைலோட போட்டோஸ்டேட் காப்பியை சென்டருக்கு அனுப்பியிருந்தேன்.

★★★★★

(இதற்குப் பிறகு சந்திரஹாசன் வின்ஸென்ட், வக்கீல் ஜெயன் ஆகியோர் கைது செய்யப்படுகின்றனர்.)

(சத்யராஜ், வெளிநாட்டிற்கு சென்று விடும் முயற்சியில் ராதாவின் வீட்டிலிருந்து வெளியேறுகிறான். பலராம் அவனைத் துரத்திப் பிடிக்கிறான்.)

பலராம்: ஏய் சத்யராஜ்! இதுவரை பல முறை உன்னைப் பிடித்துக் கொடுத்தேன். ஒவ்வொரு முறையும் போலீசும் சேர்ந்து உன்னைத் தப்பிக்க விட்டுவிடுவார்கள். போலீஸ் மேல் எனக்கே நம்பிக்கை இல்லை. அதனால் இம்முறை உன்னை அவர்களிடம் ஒப்படைக்கப் போவதில்லை. என் குறி தப்பாது! நானே உன்னை.... (சுட்டுத் தள்ளுகிறான்.)

— முற்றும் —

# அலுக்காமல் கொடுத்த துலுக்காணம்!

அந்த அதிகாலை வேளையில் 'மாத நாவல் மேதை' துரைசாமி தமது வீட்டின் முன் அறையில் உட்கார்ந்து, மளமளவென்று எழுதிக் கொண்டிருந்தார். அடுத்த மாதம் அவரது எட்டு நாவல்கள் வெளிவந்தாக வேண்டும். ஆறுவது நாவலை நாளைக் காலை கட்டாயம் தந்து விடுவதாக வாக்குக் கொடுத்திருக்கிறார். அவரது பேனா, கற்பனை வேகத்தில் நசுங்கிப் போன எழுத்துக்களை அவசர அவசரமாகத் துப்பிக் கொண்டிருந்தது.

அப்போதுதான் தலையில் முக்காடு தரித்து, இடுப்பு வரையில் கறுப்புப் போர்வையைச் சுற்றியபடி அந்த ஆள் துரைசாமியின் முதுகுப் பக்கம் ஓசைப்படாமல் வந்து நின்று, ஒற்றை விரலால் அவரது புறங்கழுத்தில் தொட்டான்.

துரைசாமி, சிலிர்த்துக் கொண்டு திரும்பியவர் அடுத்த விநாடி, "ஆ! ஐயையோ! முகமூடிக் கொள்ளைக்காரன்....! பேய், பிசாசு, ரத்தக் காட்டேரி!" என்று அலற முற்பட்டார்.

அந்த ஆள் முக்காட்டையும் போர்வையையும் விலக்கி, காவி படிந்த பற்களைக் காட்டிச் சிரித்தான். "பயந்துட்டீங்களா சார்? மன்னிச்சுக்குங்க!" என்றான், சுவாதீனமாக ஒரு நாற்காலியில் உட்கார்ந்தபடி.

"யாருய்யா நீ? எதுக்கு இப்படிக் காலையிலே வந்து கழுத்தறுக்கிறே?" என்றார் காரமாக.

"விலாவாரியாச் சொல்றேன் சார்... என் பேரு துலுக்காணம். சொந்த ஊரு மரக்காணம். அங்கே தென்னந்தோப்பு, ரைஸ்மில், சைக்கிள் ஷாப், மளிகைக் கடை எல்லாம் சொந்தத்திலே இருக்கு.... உங்க எழுத்துன்னா எனக்கு உசிரு.... உங்களை மாதிரி எழுத யாரு இருக்காங்க இப்ப...?"

"உம்... ஊம்..." என்றார் துரைசாமி. தோரணை வந்து விட்டது!

"உங்களுக்காக ரசிகர் மன்றம் ஏற்படுத்தலாம்னு நினைச்சேன்..."

"காப்பி கொண்டு வரச் சொல்லட்டுமா?" — பரபரத்தார் துரைசாமி.

"வேணாங்க... அப்பாலே, உங்களுக்கு ஒரு பாராட்டு விழா நடத்தி, பண முடிப்பு கொடுக்கலாம்னு யோசிச்சேன்..."

"டிபன் சாப்பிடுங்களேன்... பக்கத்து ஹோட்டல்லே இட்லியும், கொத்சும் பிரமாதமா இருக்கும்... தருவிக்கட்டுமா?"

"பரவாயில்லைங்க. நான் வந்த விஷயத்தைச் சொல்லிட்றேன்... நீங்க மனசு வச்சா நான் சந்தோஷமா இருப்பேன்... ஆயுசு முழுக்க உங்களை மறக்க மாட்டேன்..."

பொன்னாடைக்கும், பூமாலைக்கும் மை செட்டுக்கும் தன்னிடமே பணம் கறந்து விடுவானோ என்ற பயம் துரைசாமியின் மனத்தில் மெதுவாகத் தலைகாட்டியது.

"நான் மனசு வைக்கணுமா? என்ன சொல்றீங்க?"

"நீங்க இனிமேல் யாருக்கும் மாச நாவல் எழுதித் தரக் கூடாதுங்க!"

"கொஞ்சம் இடம் கொடுத்தால், அப மடியிலேயே கையைப் போடறீங்களே! இடத்தைக் காலி பண்ணுய்யா முதல்லே!"

"கொஞ்சம் பொறுமையாக் கேளுங்க சார்... மத்தவங்களுக்கு நீங்க நாவல் எழுதக் கூடாதுன்னுதான் சொன்னேன்..."

"அப்படீன்னா?"

"எனக்கு மட்டும் எழுதுங்கன்னு அர்த்தம்!"

"உனக்கா? நீயும் மாச நாவல் வெளியிடப் போறியா?"

"ஆமாம் சார்... 'வெந்தயம்'னு பே வச்சு, பதிவெல்லாம் கூடப் பண்ணிட்டேன்..."

"மளிகைக் கடை வாடை அடிக்குதய்யா! வேறே பேரே கிடைக்கல்லியா உனக்கு!"

"எல்லாம் முன் யோசனையோடுதான் செய்திருக்கேன் சார்... மூணே மாசத்திலே நம்ம நாவல் மற்ற எல்லாத்தையும் தூக்கியடிக்கப் போகுது... அப்ப 'பந்தயத்தில் வென்ற வெந்தயம்'னு பேட்டிக் கட்டுரை வெளியிடறதுக்கு வசதியாக இருக்குமில்லையா?"

"சரி...! என்னவோ செய்துட்டுப் போங்க... என் நாவல் வேணும்னு கேட்கிறீங்களே — என் ரேட்டு தெரியுமா?"

"மூவாயிரம்னு கேள்விப்பட்டேன்..."

"அது போன மாச ரேட்டு... இப்ப மூணரை வாங்கறேன்..." என்று சினிமா நடிக — நடிகை பாணியில் சின்னதாக 'ரீல்' விட்டார் துரைசாமி.

"எனக்கு அரை டஜன் நாவல் தொடர்ச்சியா வேணும்.... ரேட்டைச் சொல்லுங்க!"

கொடுக்கிற தெய்வம் கூரையைப் பிய்த்துக் கொண்டு கொடுத்தால் சிலர், 'ஐயோ, கூரைப் போச்சே!' என்று மூக்கால் அழுவார்கள்.



''அப்படீன்னு நாலாயிரம் கொடுங்க.''

''ஐயாயிரமா வாங்கிக்குங்க சார்! இந்தாங்க அட்வான்ஸ் பத்தாயிரம்!''

லுங்கி மடிப்பில் பதுங்கியிருந்த புத்தம் புதிய நூறு ரூபாய்க் கட்டு ஒன்றை அலட்சியமாக எடுத்து, மேஜை மீது வீசினான் துலுக்காணம். துரைசாமியின் இருதயம் இரண்டு 'லப்-டப்'பைக் கோட்டை விட்டது! சட்டென்று எடுத்து, மேஜை டிராயரில் போட்டு மூடினார். இந்த ஆசாமி மனசு மாறாமலிருக்க வேண்டுமே!

''சார்! ஒரே ஒரு கண்டிஷன். இந்த அரை டஜன் நாவல்களை எழுதி என்கிட்டே கொடுத்ததுக்கு அப்பாலேதான் நீங்க மத்தவங்களுக்கு எழுதணும்....''

''அதெப்படி? ஏற்கெனவே நிறைய பேருக்கு ஒப்புத்துக்கிட்டிருக்கேன்... அவங்க அறிவிப்பு கூடப் போட்டுத் தொலைச்சிருப்பாங்களே...!''

''ஏதாவது சாக்கு, போக்கு சொல்லுங்களேன்... உங்களுக்கு இல்லாத கற்பனை வளமா?''

''வீட்டு வாசல்லே கடன்காரங்க கணக்கா வந்து நிப்பாங்களே.... எப்படிச் சமாளிக்கறது?''

''அதுக்கும் ஓர் ஐடியா வச்சிருக்கேங்க...''

''உன்னை மாதிரி முகமூடி மாட்டிக்கிட்டு அலையச் சொல்றியா?''

''இல்லீங்க... சிங்கப்பூருக்கு ஒரு 'டிரிப்' அடியுங்க...!''

''அதுக்கு எவன்யா பணம் கொடுப்பான்?''

''நான் தர்றேங்க!''

துரைசாமியின் இருதயம் பத்து விநாடிகள் மௌனம் அனுஷ்டித்தது.

''என்ன! நீங்க கொடுக்கிறீங்களா?''

''உங்க சிங்கப்பூர் செலவு முழுக்க முழுக்க என்னுடையது... உங்ககிட்டே பாஸ்போர்ட் இருக்குமே — அதை இப்படிக் கொடுங்க... இன்னும் ரெண்டே நாள்லே நீங்க சிங்கப்பூர் போறீங்க. டிக்கெட் உங்க வீடு தேடி வரும்!''

முதல் முதலாக ஜர்தா பீடா போட்டவனுக்கு ஏற்படக் கூடிய கிறுகிறுப்புடன் துரைசாமி இரும்பு பீரோவைத் திறந்து பாஸ்போர்ட்டை எடுத்துக் கொடுத்தார்.

அவருக்குத் துலுக்காணத்தை ரொம்பப் பிடித்துப் போய்விட்டது. ஏதாவது பத்திரிகைக்காரர்கள் கட்டுரை கேட்டால், 'அலுக்காமல் கொடுத்த துலுக்காணம்' என்ற தலைப்புப் போட்டு அனுபவக் கட்டுரை எழுதிக் கொடுக்க வேண்டும் என்கிற அளவுக்கு அன்பு ஏற்பட்டுவிட்டது,

சரியாக இருபத்தைந்து நாட்களுக்குப் பிறகு, யானைக் குட்டி சைஸில் அரை டஜன் பெட்டிகளுடன் சிங்கப்பூரிலிருந்து திரும்பினார் துரைசாமி.

வீட்டுக்குவந்ததும்ஆளுக்கு ஆள் அவரை நச்சரித்தார்கள்.

''டாடி! நான் கொடுத்த லிஸ்ட் படி பெர்ஃப்யூம், சோப்பு, பௌடர், மேக்கப்—கிட் எல்லாம் வாங்கிட்டு வந்திருக்கீங்க, இல்லையா?'' என்றாள் மகள் கலா.

''பதினாறு புடவை, டூ — இன் — ஒன்,

ஒருவர் தன்னைப் பற்றி என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாரோ, அதையே நாம் கூறுவதுதான் புகழ்ச்சி!





அருள் வாக்கு

'மங்களம்' என்றால் மங்களந்தான்! ஆனந்தமாக அதிலேயே ஒரு கம்பீரத்தோடு, தூய்மையோடு, ஆனந்தமாக இருந்து கொண்டிருப்பதுதான் மங்களம். எதற்கெடுத்தாலும் எரிந்து விழுந்து கொண்டோ, மூக்கைச் சிந்திப் போட்டுக் கொண்டோ இல்லாமல் 'ஆஹா' என்று எப்போதும்ஸந்தோஷமாகஇருக்கவேண்டும். இதுதான் லோகத்துக்கு நாம்செய்கிற பெரிய ஒத்தாசை, பெரிய தொண்டு. பணத்தை வாரிக் கொடுப்பதை விட, வேறு ஸர்வீஸ்கள் பண்ணுவதை விட, நாம் போகிற இடமெல்லாம் நம் மங்களத்தாலேயே ஆனந்தத்தை உண்டாக்கிக் கொண்டிருப்பதுதான் மற்ற ஜீவர்களுக்குப்பெரியதொண்டு. 'லைட்' டாக, லேசாக எதையும் சாதிப்பது அநாயாஸம். போகிற இடமெல்லாம் நாமே ஒரு 'லைட்' (தீபம்) மாதிரி ஒளியை, ஆனந்தத்தைக் கொடுப்பது 'மங்களம்.' நாம் ஓர் இடத்துக்குப் போனால் அங்கேயிருப்பவர்கள் 'குற்றம் கண்டுபிடிக்க வந்து விட்டான்' என்று முகத்தைச் சுளிக்கும்படியாக இருக்கக் கூடாது. எங்கே நாம் போனாலும் அங்கே நல்ல தினுஸான ஸந்தோஷத்தை விருத்தி பண்ண வேண்டும். நாமும் மங்களமாக இருந்து கொண்டு, பொங்கும் மங்களம் எங்கும் தங்குமாறும் செய்ய வேண்டும்.'

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

ஹேர்—டிரையர், மௌலினெக்ஸ் மிக்ஸி கேட்டிருந்தேன்... அதெல்லாம் எந்தப் பெட்டியிலே இருக்கு?'' என்றாள் மனைவி அம்புஜம்.

''வீடியோ கேம்ஸ், ரிமோட் — கண்ட்ரோல் ப்ளேன், மெஷின் கன் எதையும் மறந்துடல்லியே?'' என்றான் மகன் முரளி.

தாக்குதல் நடத்தவும், கோபம் கொதி நிலைக்கு ஏறவே, சத்தம் போட்டார், துரைசாமி. ''மனுஷனைக் கொஞ்ச நேரம் நிம்மதியா இருக்க விட மாட்டீங்களா? இப்படிப் போட்டுக் குதறீங்களே!''

''அதான் சிங்கப்பூர்லே மூணு வாரம் நிம்மதியா இருந்துட்டு வந்திருக்கீங்களே — அப்புறம் என்ன புலம்பல்?'' என்று அதட்டினாள் அம்புஜம்.

''உளறாதே, ரொம்பத் தெரிஞ்ச மாதிரி! சிங்கப்பூர்லேயாவது, நிம்மதியாவது! நாய் படாத பாடு, கழுதை அலையாத அலைச்சல்!''

''வேளா வேளைக்குச் சாப்பிட வேண்டியது; ஹோட்டல் ரூம்லே உட்கார்ந்து நாவல் எழுத வேண்டியது; ஊர் சுற்றிப் பார்க்க வேண்டியது — இதுவா நாய் படாத பாடு?''

''வாயை மூடு! நான் நாவல் எழுதி நாசமாய்ப் போனேன்!''

''மூணு நாளைக்கு ஒரு நாவல் எழுதறவராச்சே நீங்க! அந்தக் கணக்குப்படிப் பார்த்தால் ஆறு நாவல்களையும் அதுக்குள்ளே எழுதி முடிச்சிருக்கணுமே!''

''மண்ணாங்கட்டி! அரை நாவல் கூட எழுதல்லே!''

''அவரும் உங்க கூட வந்திருந்தாரா என்ன?''

''அவன் இல்லே — அவன் கொடுத்திருந்த லிஸ்ட்கள் வந்தன..... ரெண்டு நாளைக்கொரு தரம் டிரங்க் கால், நாலு நாளைக்கொரு லெட்டர்னு வந்தது... சுத்த உபத்திரவம் பிடிச்ச மனுஷன்!''

''வீணாகத் திட்டாதீங்க... நாவல் எழுதப் பணமும் கொடுத்து, ஹாய்யாக இருக்கச் சிங்கப்பூருக்கும் அனுப்பி வச்ச புண்ணியவானாச்சே!''

''புண்ணாக்குவான்! மண்ணாந்தைப் பயல்! அவனும் அவன் பரட்டைத் தலையும், கொட்டைப் பாக்குப் பல்லும்! அவனுக்காகச் சாமான்கள் வாங்கிச் சுமந்தே முதுகு வலி வந்துட்டுது எனக்கு!''

''அப்ப இதெல்லாம்....''

''நமக்கில்லே! அவனுக்குத்தான்! இதையெல்லாம் வாங்க அலைஞ்சதிலே நாவல் எழுதவே நேரமில்லாமப்போச்சு! வரட்டும் அந்த நண்டுக் காலன்! நாக்கைப் பிடுங்கிக்கிற மாதிரி நாலு வார்த்தை கேட்கிறேன்!''

''என்ன துரைசாமி சார்! எப்ப வந்தாப்பலே?'' என்று கேட்டபடியே திடும் பிரவேசமாகத் துலுக்காணம் நுழைந்து விடவும், 'பிட்' அடிக்கும் போது பிடிபட்ட மாணவனைப் போல விழித்தார் துரைசாமி.

அவருடைய சுபாவம் என்னவென்றால் எப்பேர்ப்பட்ட இக்கட்டையும் இளித்தே சமாளிப்பது. இதன் காரணமாக அவரது வாய் வருஷம் ஒன்றுக்கு 0.5 மில்லி மீட்டர் வீதம் அகலமாகிக் கொண்டு வருவதாகக் குடும்ப டாக்டர் கண்டுபிடித்துக் கூறியிருந்தார்.

தமது வழக்கமான ஆயுதத்தை அன்று அவர் அளவுக்கு மீறிப் பிரயோகிக்கவும், அரை டஜன் ஆளுயர மாலைகளை ஒரே சமயத்தில் போட்டுக் கொண்ட அரசியல்வாதி போலக் கவிழ்ந்து போனான் துலுக்காணம்.

''சிங்கப்பூர் பிரயாணமெல்லாம் நல்லா

நமக்கு என்ன தேவை என்பது பலருக்குத் தெரியாது. ஆனால் அது நம்மிடம் இல்லை என்பது மட்டும் தெரியும்!

இருந்ததா?'' என்று கேட்டான்.

"உம்... இருந்தது... ஆனால் எங்கேயும் சுற்றிப் பார்க்கத்தான் முடியல்லே...''

அடுத்தபடி துலுக்காணம் சொன்ன வார்த்தைகள் துரைசாமியை ஒரு துள்ளுத் துள்ள வைத்தன.

"அதுக்கென்ன? இன்னொரு டிரிப் அடிச் சுட்டாப் போகுது!"

"இன்னொரு டிரிப்பா?''

"ஆமாம்... அடுத்த மாசம் 10 ஆம் தேதி போறீங்க...''

"ஒரு நிமிஷம்... இதோ வந்துட்டேன்!" என்று சமையலறைக்கு ஓடினார் துரைசாமி. "அம்பு! ஸ்ட்ராங்கா காப்பி போடு, துலுக் காணத்துக்கு!''

துரைசாமி கொண்டு வந்திருந்த பெட்டி களுடன் துலுக்காணம் புறப்பட்ட போது, "நாவல்களைக் கொடுங்க!'' என்று கையை நீட்டினான்.

"எழுதி முடிச்சாத்தானே கொடுக்கிற துக்கு? ஒரு நாவல் கூட 'கம்ப்ளீட்' செய்ய முடியல்லே....'' இழுத்தபடியே இளித்தார்.

"இங்கேதான் இன்னும் பதினைந்து நாள் இருக்கப் போறீங்களே... அதுக்குள்ளே அட்லீஸ்ட் மூணு நாவலாவது எழுதிக் கொடுத்துடுங்க!''

"ஷ்யூர்! ஷ்யூர்!'' என்று மண்டையைப் போட்டு ஆட்டினார் துரைசாமி.

அவர் அந்தக் காலக் கெடுவிற்குள் துலுக் காணம் கேட்டபடியே மூன்று நாவல்களை எழுதி முடித்திருக்கலாம்தான். விதி என்கிற விளையாட்டுப் பிள்ளை விட்டால்தானே?'' வலது ஆள்காட்டி விரலில் நகச்சுற்று வந்து விடவே, அதற்கு எலுமிச்சம்பழம் செருக வும், மஞ்சள் அரைத்துப் பூசவும், பாட்டி வைத்தியப்படிப் பாலேட்டைச் சுற்றி விட வுமே நேரம் சரியாக இருந்தது. போதாத குறைக்கு, "காலை வாரி விட்டுட்டீங்களே சார்!'' என்று புகார் சொல்லிக் கொண்டு வரும் மாத நாவல் பதிப்பாளர்கள் வேறு. ஒருநாள் விட்டு ஒருநாள் துலுக்காணம் வந்து, "இன்னா! எத்தினி பக்கம் முடிச் சிருக்கீங்க! கம்போஸுக்குக் கொடுத்தால் தேவலை?'' என்று உரிமையுடன் அதட்டல் போட்டுவிட்டுப்போனான். எலியை மடியில் கட்டிக் கொண்ட மசால் வடை வண்டிக் காரன் போலத் திக்குமுக்காடிப் போனார் துரைசாமி.

எப்படியோ சமாளித்து, சிங்கப்பூருக்குப் பிளேன் ஏறுவதற்கு முன்பு இரண்டு நாவல் களை ஒப்பேற்றித் துலுக்காணத்திடம் கொடுத்து விட்டார்.

இரண்டாவது பயணம் முடிந்து ஊர் திரும்பும்போது, தமது குடும்பத்தினர் போட்டுக் கொடுத்திருந்த பட்டியலில் சிலவற்றை மட்டும் வாங்கி வந்தார் துரை சாமி. எல்லாருமே, 'இவ்வளவுதானா?' என்று உதட்டைப் பிதுக்கவும், "இன்னொரு நடை போய்விட்டு வரும்போது நிறைய வாங்கிக் கொண்டு வருகிறேன்!'' என்று

தத்துவம்: தீர்விலாத பிரச்னைகளுக்குத் தரப்படும் புரியாத விடைகள்.
— ஹென்றி ஆடம்ஸ்



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

சமாதானம் சொன்னர்.

துலுக்காணம் வந்தான். துரைசாமி கொண்டு வந்திருந்த பெட்டிகளைப் பொறுக்கிக் கொண்டான். "அப்புறம்... இன்னு சார் சமா(ச்)சாரம்?" என்று விசாரித்தான்.

"அங்கே ஒரு நாவல்தான் எழுத டயம் கிடைச்சுது..."

"பரவாயில்லே... பத்து நாள் டயம் எடுத்துக்குங்க.... இன்னும்நமக்குரெண்டுநாவல் தானே பாக்கி....?"

"அட்வான்ஸ் போகப் பாக்கிப் பணம்...?"

"காலையிலே தம்பி கையிலே கொடுத்தனுப்பறேன்...." என்று சொல்லிப் புறப்பட்டவன் அநாவசியமாக ஒரு முறை சிரித்தான். "துரைசாமி சார்! பணத்தோடு கூட நீங்க எதிர்பார்க்காத அயிட்டம் ஒண்ணும் வரும்!"

அது என்னவாக இருக்கும் என்ற கவலை துரைசாமியை அரிக்கத் தொடங்கியது.

**ம**றுநாள் துலுக்காணம் சொன்ன படியே அவன் தம்பி—ஜூனியர் பரட்டை—துரைசாமியைத் தேடி வந்து, ஸீனியர் போலவே நூறு ரூபாய்க் கட்டை எடுத்து மேஜை மீது விசிறி விட்டு, கனத்த கவர் ஒன்றைக் கையில் கொடுத்துவிட்டுப் போனன்.

அவசர அவசரமாக உறையைப் பிரிக்க முயன்றார் துரைசாமி.

"லெட்டர் பாம் ஏதாவது வச்சிருப்பானே என்னவோ! எதற்கும் ஜாக்கிரதையாக இருங்கள்!" என்று பயமுறுத்தினள் அப்புஜம்.

"குட்டி சைஸிலே கட்டுவிரியன் பாம்பாகக் கூட இருக்கலாம்!" என்றன் முரளி.

லட்சியம் செய்யாமல் பிரித்தார் துரைசாமி. உள்ளே இருந்ததைப் பார்த்ததும் மயக்கம் வருவது போலிருந்தது.

ஹாங்காங் பயணத்துக்கான டிக்கெட்களும், பயணத் திட்டமும், தகவல் புத்தகங்களும் அனுப்பியிருந்தான் துலுக்காணம்.

"பயமுறுத்தினியே! பார்த்துக்கோ!" என்று டிக்கெட்டுகளைக் காற்றில் வீசிக் காட்டினர் மனைவியிடம்.

"அந்த ஆள் சரியான பைத்தியமாக இருப்பான் போலிருக்கிறது.... இல்லாவிட்டால் இப்படி உங்களை ஊர் ஊராக அனுப்பிக் கொண்டிருப்பான?"

"அவன் ரொம்பப் பெரிய மனுஷன். என்ன பெருந்தன்மை பாரு! தான் பே... மல் என்னை ஃபாரினுக்கு அனுப்பற... இந்தத் தடவை மீதி ரெண்டு நாவலை... முனைஞ்சு உட்கார்ந்து எழுதிக் கொடுத்... ணும்..." என்று சொன்ன துரைச... மேஜையடியில் போய் அமர்ந்தார்.

**ப**தினைந்து நாட்களுக்குப் பி... வெயில் கொளுத்தும் ஒரு பிற்பகல் நே... தில் ஹாங்காங் கடைவீதிகளில் துரைச... சுற்றியலைந்து கொண்டிருந்தபோது, து... காணம் சென்னை ஐந்து நட்சத்திர ஹோ... டல் ஒன்றில் நண்பர்களுடன் உல்ல... மாகப் பொழுது போக்கிக் கொண்டி... தான்.

"பிஸினஸ் நிலவரம் எல்லாம் எப்ப... இருக்கு வாத்தியாரே?" என்று கேட்டா... ஒருவன் துலுக்காணத்தை.

"அதுக்கென்ன? ஜம்முனு நடக்குது... நானே போய்ச் சரக்கு கொண்டாந்து வ... தால் மாட்டிக்குவேன்னுதானே துரைசா... என்கிற ஆசாமியைப் பிடிச்சிருக்கே... பிரபலமான எழுத்தாளராச்சே! அதனு... இங்கே கஸ்டம்ஸிலே அவருக்குத் தனி ம... யாதை, கௌரவம் கொடுக்கிறங்க. அ... வசியமா எந்தக் கேள்வியும் கேட்கி... தில்லே. கிரீன் சானல்லே ராஜா மாதி... வந்துடறரு.... நமக்கும் சரக்கு பத்திர... வந்து சேர்ந்துடுது. எத்தினி வாட்ச்... எத்தினி டு—இன்—ஒன், எத்தினி வீடியே... ரெகார்டர்...."

"எப்படி அண்ணே அவரைச் சம்மதிக்... வச்சே?"

"ரொம்ப ஸிம்பிள்.... அவர் எழுத... ஆறு கதைகளுக்கு மொத்தம் முப்பதாயிர... கொடுக்கிறதா சொன்னேன்.... ஆள் வ... யிலே விழுந்துட்டாரு."

"அந்த முப்பதாயிரமும் உனக்கு நஷ்ட... தானே? அதைக் கொடுக்காமல் காரிய... தைச் சாதிச்சிருந்தா நீ கில்லாடிதான்...."

"அவ்வளவு சுலபமா ஏமாந்துடுவேனு... துரைசாமி எழுதின நாவலைப் போட... துக்கு எத்தினி பேர் காத்துக்கிட்டிருக்காங்... தெரியுமா? அவங்ககிட்டே நாவல்களை... தள்ளிவிட்டேன். இருபத்து நாலாயிர... கிடைச்சுது...."

"அப்படியும் ஆறுயிரம் நஷ்டமாச்சே... உனக்கு?"

"அவசரப்படாதேடா அல்பம்! எனக்கு... எப்படிடா நஷ்டம் வரும்? நான் துரைசா... கிட்டே தள்ளிவிட்டது ஹாங்காங்கிலே... அச்சடிச்ச நோட்டுடா, முண்டம்!"



அளவுக்கு அதிகமான மருத்துவர்களின் உதவியுடன் நான் செத்துக் கொண்டிருக்கிறேன்.
— அலெக்ஸாண்டர்





இவர்: கணக்கு எழுதக் கொஞ்சம் பேன... கொடுங்க!

அவர்: என்னுடைய பேன பட்டை அடிக்கும்!

இவர்: பரவாயில்லே! நான் எழுதப் போறதே... சாராயக் கணக்குதானே!

— கடலூர் கன்னியப்பன்



மேனி
ரெக்ஸோனு



மின்னி மிளிரும் மேனி...எந்நாளும் உங்கள் பொன்னுன கனவு...நிறைவேற வரமளிப்பது ரெக்ஸோனு.

சரளம், கருவா, கிராம்பு, ஹபுஷா (தேவதாரம்) ஆகிய நாலு வகை இயற்கைத் தைலங்களின் நற்கலவையா ரெக்ஸோனு...சருமப் பராமரிப்பிற்கு இயல்பான வழியாகும்.

## ரெக்ஸோனு

**உங்கள் மேனியை மென்மையோடு மெருகு மிளிர வைக்கிற**

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரி

சிவகாமி எல்லா இடத்திலும் தேடி விட்டாள். அலமாரி, பீரோ, புருஷனுடைய மேஜை இழுப்பறை. எங்கேயும் கைமறதியாக வைத்த ஐந்து ரூபாய் நோட்டைக் காணவில்லை. ஐந்து ரூபாய் பெரிய தொகை இல்லை. இந்த நாளில், ஒரு பொழுது காய்கறிச் செலவுக்குக் கூடக் காணாது. ஆனாலும் சந்துரு வந்திருந்தான். அவன்தான் எடுத்தானா என்பதை உறுதி செய்து கொள்வதற்காக அவள் தேடியாக வேண்டும்.'

சமையலறைக்குள் நுழைந்தாள். அஞ்சறைப் பெட்டி, உப்பு டப்பா, காய்கறிக் கூடை என்று தேடிப் பார்த்தாள். ம்ஹூம்...

காலையில் சில்லறை மாற்றிய பணம்தான் அது. பால்காரனிடம் பத்து ரூபாய் நோட்டைக் கொடுத்து மீதியைச் சந்துருதான் வாங்கி வந்தான். ''அக்கா... மீதிப் பணம்...'' எனச் சத்தம் போட்டுச் சொல்லி, பருப்பு டப்பாவின் மீது வைத்தான். சமையல் அலமாரியில் கீழ்த்தட்டில் பருப்பு டப்பா இருந்தது. கறிவேப்பிலைக் காரிக்கு அதிலிருந்துதான் சில்லறை எடுத்தாள் சிவகாமி. அப்போது கூட நோட்டு இருந்தது.

அதற்குள் எங்கே போய் விடும் பறந்து? மற்ற சில்லறைகள் அப்படியே இருக்க, இந்த ஐந்து ரூபாய்க்கு மட்டும் எங்கிருந்து திருடன் வருவான்?

சந்துருதான் என்று மனம் திடமாக நம்பியது.

அவன் புத்தி வீட்டில் எல்லோருக்கும் தெரியும். 'நீளுகிற கை' அவனுக்கு. அம்மாவின் சுருக்குப் பையில், அப்பாவின் மணி பர்சில். சில வேளைகளில் பீரோவைத் திறந்து கூட....

# சந்துருவின் அந்தப் பழக்கம்...



எப்படி எடுக்கிறுன் என்பது யாருக்குமே தெரியாது.

ஒப்புக் கொள்ள மாட்டான். சத்தியம் பண்ணுவான். தன் படிப்பைச் சாட்சி சொல்லுவான். சேர்ந்து தேடுவான். பார்க்க, ஊர்ப் பழிகளைத் தான் சுமக்க நேர்ந்த துரதிர்ஷ்டசாலி மாதிரித் தெரியும். பாவமாகக் கூடத் தோன்றும்.

இரண்டு நாள் கழித்துத் துப்புக் கிடைக்கும். அவனது 'சேத்தாளிகளை' விசாரித்தால் தகவல் சொல்வார்கள்.

"சந்துரு நேத்து ஸ்கூலுக்கு வரலை. மாட்னி ஷோ போனுன்!"

"புதுப் பேனு வாங்கினுன்!"

"ஃபிரண்ட்ஸ்களோடு லிம்கா குடித்தான்!"

அப்பாவின் அடி, முரட்டு அடி. பயம் என்பது கொஞ்ச நாளைக்குத்தான்.

அம்மா கண்ணீர் விடுவாள். "ஆம்பளைப் பையன்டா... நாலு பேர் நம்பணும். வேணும்டா. எவ்வளவு வேணும்னு கேளு. தர்றேன். தானு எடுக்காதேப்பா..!"

"ம்...." என்று முனகுவதோடு சரி.

வீட்டில் என்னவோ தொலையட்டும். நான்கு சுவருக்குள் அடங்கி விடும். வந்த இடத்திலுமா? இதுவே தன் புருஷனின் பணமாக இருந்தால் என்ன நினைப்பார்? "உன் குடும்ப லட்சணம் இதுதானு?" என்று கேட்டால் எங்கே போய் முட்டிக் கொள்ள முடியும்?

அவனை இப்படியே விட முடியாது! சின்னக் குழந்தை இல்லை. மீசை அரும்பி விட்டது. ஏதாவது செய்தாக வேண்டும். இன்றைக்குத் தான் செய்கிற காரியத்தில் அவன் அடியோடு அந்தப் பழக்கத்தை விட்டு விட வேண்டும். அம்மாவின் கண்ணீரில், அப்பாவின் மிரட்டலில் ஒழியாத பழக்கம். தான் செய்கிற காரியத்தில் ஒழிந்து விட வேண்டும்.

சிவகாமி முன் அறைக்கு வந்தாள். சந்துருவைப் பார்த்தாள். ஜன்னல் அருகே சேரை நகர்த்திப் போட்டு ரேடியோ கேட்டுக் கொண்டிருந்தான்.

கேட்டு விடலாமா?

அதற்குள் இன்னும் தேடிப் பார்க்க வேண்டிய நாலைந்து இடங்கள் ஞாபகத்திற்கு வந்தன. கொஞ்சம் ஒத்திப் போட்டாள்.

முதலில் தான் என்ன தேடுகிறேம் என்பது அவனுக்குத் தெரியட்டும். அவனது கண்களில் படுகிற மாதிரி ரேடியோ ஸ்டாண்டு கண்ணுடித் தட்டு, பவுடர் கிண்ணம் ஜன்னல் விளிம்பு என்று தேடினுள். பலன் இருந்தது.

"என்னக்கா...?"

"பணம்டா... அஞ்சு ரூபாய். நீ பாக்கி வாங்கி வந்தியே அதைக் காணேம்."

அவனது முகத்தைக் கூர்ந்து பார்த்தாள். எந்த மாறுதலும் இல்லை.

"பருப்பு டப்பா மேலே வெச்சேனே..." ரேடியோவின் வால்யூமைக் குறைத்து விட்டு எழுந்தான்.

"காணேம்டா..."

"ஏத்தாச்சும் செலவு பண்ணி இருப்பே..."

வந்த ஆத்திரத்தில் சுடச் சுடக் கேட்டிருப்பாள். அதற்குள், வாசலில் "அக்கா..." என்ற அழைப்பு. "கொஞ்சம் மோர் வேணும்க்கா. இருக்குமா?"

சுமதி — எதிர் வீட்டுப் பெண் — உள்ளே வந்தாள். "இன்னிக்கு மோர்க்காரி வரமாட்டாளாம்... நாங்களும் புறை ஊத்த மறந்துட்டோம்."

"இருக்கு... பொறு தர்றேன்."

பொறுத்தாள்.

"இன்னிக்கு என்ன சமையல்க்கா...?"

"முருங்கைக்காய் சாம்பார்..."

"எங்க வீட்லியும் அதான்."

"மோர் போதுமா?"

"போதும்க்கா..."



வாங்கியவள் நகராமல், "சதீஷ் எங்கே?" என்று கேட்டாள்.

ஸ்கூல்நேரம்என்றுதெரியாதா?இதென்ன கேள்வி. சிவகாமி எரிச்சலடைவதற்குள் அவளே பதிலும் சொன்னாள். "ஸ்கூல் போயிட்டானு... இன்னிக்கு ஸ்கூல் உண்டா?"

சிவகாமி பதில் சொல்லவில்லை. சந்துரு ரேடியோவின் வால்யூமை மீண்டும் அதிகப் படுத்தியிருந்தான்.

"படிக்க ஏதாச்சும் புஸ்தகம் இருக்கு மாக்கா?"

அவளது குரலில் தெரிந்த உற்சாகம், அவள் மோர் வாங்க மட்டும் வரவில்லையோ என்ற சந்தேகத்தை ஏற்படுத்தியது.

"நான் எந்த புஸ்தகம் வாங்கறேன் சுமதி?"

பதிலுக்குச் சிரித்தாள்.

"சரி சுமதி... மோரைக் குடுத்துட்டு வா... எனக்கும் வேலை கெடக்கு."

சுமதி போய் விட்டாள்.

இப்போதாவது சந்துருவை விசாரிக்க லாமா?

என்னதான் சொந்தத் தம்பி என்றாலும், அவனை விட பலவருடங்கள் அவள் மூத்தவள் தான் என்றாலும் தயக்கமாக இருந்தது. அவ ளுக்குக் கல்யாணம் ஆன போது அவன் சின்னப் பையன். விவரம் போதாது. இப்போதுதான் உறவுகளுக்குஅர்த்தம்புரிந்து இருக்கிறது. அடிக்கடி வருகிறான். "ஏது உன் தம்பிக்குப் பாசம் பொங்கி வழிகிறது" என அவளது கணவனே கேலி செய்யும் அளவுக்கு நடந்து கொள்கிறான். பணத்தைக் காணவில்லை என்பது நிஜம். அவன்தான் எடுத்தானு என்பது தெரியாது. பார்க்கவில்லை. முன்பு அப்படிப் பழக்கம் இருந்தது என்பதற்காகக் கேட்டு விடுவதா? என்ன நினைப்பான்? ஊரில் அம்மா அப்பா வுக்குத் தெரிந்தால் நன்றாக இருக்குமா?"

என்னதான் செய்வது?

இப்படி ஆரம்பிக்கலாமா என நான்கு ஐந்து விதமாக யோசித்து, "சந்துரு..." என்று கூப்பிட்டாள்.

"என்னக்கா...?" — வந்தான்.

"என்னடா வந்ததுல இருந்து ரேடியோ... உன்னைப் பத்தி ஒண்ணும் சொல்ல மாட் டேங்கிறே...?"

"என்ன சொல்லணும்...?"

"பழைய பழக்கம்லாம் இருக்கா...? அப்பா அதைப் பத்தி ஒண்ணுமே எழுதறது இல்லே... ம்?"

கேள்வியின் அர்த்தம் புரிந்து தலைகுனிந் தான்.

"திருந்திட்டேன்க்கா. இப்பல்லாம் எடுக் கிறது இல்லே."

"நிஜந்தானு?"

"சத்தியமா...!"

"எப்படி நம்பறது?"

"உம்மேல ஆணை. போதுமா?"

"என் தலையிலேயே கை வச்சுட்டியா? பிரியமானவங்க மேல பொய் சத்தியம் பண் ணினு அவங்களுக்கு ஏதாச்சும் ஆகும் தெரியுமா?"

"நான் பொய் சொல்லலே..."

"எனக்கென்னமோ நம்பிக்கை இல் லேடா..." இந்த நேரத்தில் செயற்கையாக ஒரு புன்னகையை வரவழைத்துக் கொண் டாள்.

"உனக்கு நம்பிக்கை வர நான் என்ன செய்யணும்?"

"அஞ்சு ரூபாய் கொடுக்கணும்..."

"குடுத்துட்டாப் போவுது..."

அவனும் ஏதோ கேலிப் பேச்சாக நினைத்துச் சிரித்தான்.

சிவகாமிக்கு மேலும் பேச்சை எப்படி வளர்ப்பது என்று தெரியவில்லை. 'கடவுளே... இவனுக்கு நல்ல புத்தியைக் குடு' என்க் கண்களை மூடிக் கொண்டாள்.

மனத்தின் இறுக்கம் சற்றுத் தளர்ந்தது.

சமையல் முடிந்து விட்டது.

கூடைக்காரி வந்ததும் புருஷனுக்கு கேரியரில் சாப்பாடு கொடுத்தனுப்பினாள். சதீஷுக்கு ஒரு கிண்ணத்தில் போட்டுக் கொண்டு ஸ்கூலுக்குக் கிளம்பினாள். யு.கே.ஜி. படிக்கிற பையனுக்கு இன்னும் ஊட்டி விட வேண்டும்.

"சந்துரு... வீட்டைப் பார்த்துக்க... நான் ஸ்கூலுக்குப் போயிட்டு வந்துடறேன்."

"எவ்ளோ நேரமாகும்...?"

"இப்ப வந்துருவேன்டா..."

"நான் மேட்னி போகணும்க்கா..."

'சட்'டென்று அவளுக்கு மீண்டும் சந் தேகம் வந்தது. அப்பா பஸ் செலவுகளுக்கு அளவாகத்தான் பணம் கொடுத்திருப்பார். சினிமாவுக்கு ஏது காசு?".

"பொறு. நான் வந்ததும் சாப்பிட்டுட்டுப் போகலாம்..."

அவனைத் திரும்பிப் பார்க்காமல் விடுவிடு வென்று நடந்தாள்.

அன்றைக்கு ஸ்கூல் அரை நாள் லீவு. முதலிலேயே தெரிந்திருந்தால் ஒரு நடை மிச்சம் ஆகியிருக்கும். சதீஷ் வாசலிலேயே

---

**அவர்:** "பஸ்ஸில் என் பணத்தை பிக்—பாக்கெட் அடித்தவனைப் பிடிச்சுக் கிட்டு வந்து உங்ககிட்டே ஒப்படைத் தேன். நீங்க சகல மரியாதையோட அவனை வெளியில் போகச் சொல்லு றீங்களே! நியாயமா?"

**இன்ஸ்பெக்டர்:** "யோவ்! சும்மா இருய்யா! அவர் யாரு தெரியுமா? மாநில பிக் — பாக்கெட் சங்கத் தலை வர்!"

— மணியன் தர்மலிங்கம்





நின்று கொண்டிருந்தான்.

''வா சதீஷ்... போகலாம்.''

வெயில் சுள்ளென்று அடித்தது.

''இன்னிக்கு எங்க மிஸ் அடிச்சாங்க'' என்றான் சதீஷ்.

''ஏன்...?''

''பூபதியின் ரப்பரை எடுத்தேன். அதுக்கு!''

''அதை ஏன் எடுத்தே?''

''அவன் என் பென்சிலை எடுத்தான்...''

''அதுவும் தப்புத்தான். அடுத்தவன் பொருளைக் கேட்காம எடுக்கக் கூடாது.''

''மிஸ் அவனையும் அடிச்சாங்க...''

அடித்தது அவளுக்குப் பெரியதாகத் தோன்றவில்லை. தாய், தகப்பனை விட மூன்றாவது மனிதர்களுக்குத்தான் குழந்தைகள் அதிகம் பயப்படுகின்றன. பயம் தெளிகிற வயதுக்குள் நல்ல பழக்கங்களைக் கற்றுக் கொடுத்து விட வேண்டும். அப்புறம் சந்துருவைப் போல வளர்ந்து விட்டால் கோடரி போட்டாலும் வெட்ட முடியாது.

சந்துரு... சந்துரு...

மனத்துக்குள் முள் குத்துவதைப் போல இருந்தது.

அவனும் ரப்பர், பென்சிலில்தான் முதலில் ஆரம்பித்திருப்பானோ? எல்லாக் குழந்தைகளுக்கும் இயல்பான விஷயங்கள், ஒரு சில குழந்தைகளிடம் மட்டும் ஆழமாகப் படிந்து விடுகின்றன. இது இயற்கையாகக் கூட இருக்கலாம். எல்லாம் அவரவர் விதிப்படிதான் நடக்கிறது. ஓர் இருட்டு வீட்டில் இருந்து கொண்டு நீ கவலைப்படுவதனால் மட்டும் ஒன்றும் மாறி விடாது. மனத்தைத் தளர்த்து. சுவாசத்தை எளிதாக்கு. நடப்பது நடக்கட்டும்.

''என்னக்கா... சதீஷுக்கு லீவா...?''

சுமதி வாசலில் நின்று கொண்டிருந்தாள். ச்த்தம் நான்கு வீடு தள்ளிக் கேட்டது. நின்ற தோரணை, பேச்சு, கேள்வி....

என்ன ஆயிற்று இவளுக்கு? இரண்டு நாட்களாய்த் தான் அறிந்த சுமதியாக இல்லை.

ஏதோ பொறி தட்டத் திரும்பிப் பார்த்தாள்.

ஜன்னலில் சந்துரு. அவளைக் கண்டதும் தலையை உள்ளுக்கு இழுத்துக் கொண்டான்.

''நான் அப்பவே நினைச்சேன்க்கா. என்னவோ பண்டிகைன்னு ரேடியோவுல சொன்னானேன்னு...''

சிவகாமி காதில் விழுந்ததாகக் காட்டிக் கொள்ளவில்லை. விடுவிடுவென்று நடந்தாள். அவளது நடைக்கு சதீஷ் ஓடிவர வேண்டியிருந்தது. உள்ளே வந்ததும் கதவை அறைந்து சாத்தினாள்.

தன் மீதே கோபம் வந்தது. யார் இவர்கள்? எதற்காக இவர்களை மண்டையில் ஏற்றி, தன் மன அமைதியை இழக்க வேண்டும்? நடுத்தெருவில் பேசக் கூடாது என்று சொன்னால் சுமதி என்ன செய்து விடுவாள்? ஊருக்குப் போ எனச் சந்துருவை விரட்டினால் முடியாது எனக் கூற முடியுமா?

''உடுத்தி பழசாப் போன சேலைகளை வேலைக்காரிக்குக் கொடுக்கிற பழக்கம் வெச்சுக்கிட்டது தப்பாப் போச்சு.''

''ஏன்... இப்போ என்ன ஆச்சு?''

''நான் எனக்கு சேலை எடுக்க கடைக்குக் கிளம்பினா, டிஸைன் செலக்ட் பண்ண தானும் கூட வருவேன்னு சொல்றா...!''

— நித்யா

ரொம்பவும் சின்ன விஷயம். தன்னால் ஏன் செய்ய முடியவில்லை? திடீரென ஆவேசம் வந்தது. ''சந்துரு...'' எனக் கூப்பிட்டாள்.

''என்னக்கா?''

''காலையில் சொன்னேனே பணம் காணோம்னு... என்னாச்சு?''

''என்னைக் கேட்டா?'' அவனுக்குப் புரியவில்லை.

''நீதான் எடுத்தே...''

''இல்லை... நான் அந்தப் பழக்கத்தை எப்பவோ விட்டுட்டேன்...''

''பொய் சொல்லாதே. என்னால நிரூபிக்க முடியும்...''

''தாராளமாச் செய்...''

ஓரடி முன்னால் வந்தாள்.

''சினிமாவுக்கு ஏதுடா காசு?'' — சடக்கென்று எட்டி அவனது சட்டையைப் பிடித்தாள். திமிரத் திமிரப் பாக்கெட்டில் கைவிட்டாள். கண் இமைக்கும் நேரத்தில் உள்ளே இருந்ததை வழித்து, உள்ளங்கையில் விரித்தாள். இரண்டு ரூபாயும், சில்லறையும், சுமதியின் சிறிய போட்டோவும்...

நெஞ்சு 'திக்'கிட்டது...

''இது எப்படி உன் பாக்கெட்டுக்கு வந்திச்சு?'' — போட்டோவை மட்டும் தனியாக எடுத்துக் காட்டிக் கேட்டாள்.

''அது வந்து... நான்... இல்லை, அது... அவள்...''

அவளை யாரோ பள்ளத்தில் இறக்கினார்கள். 'பச்' சென்று நெற்றியில் அடித்தார்கள். 'குப்'பென்ற இருள் சிறையில் அடைத்தார்கள்.

அந்த நிலையிலும் அவளுக்குச் சில விஷயங்கள் புரிந்தன.

சந்துரு அக்காவைத் தேடி மட்டும் வரவில்லை —

சுமதியின் சந்தோஷம் இந்த இரண்டு நாட்களாக மட்டும் இல்லை —

அப்பா கடிதத்தில் குறிப்பிடுவது இல்லை என்பதால், சந்துரு தனது காசு திருடும் புத்தியை விட்டு விட்டான். பதிலுக்கு...

ஒரே சமயத்தில் காலையில் தொலைந்து போன பணத்திற்காகவும், எதிர்கால சதீஷைப் பற்றியும் பயந்து கவலைப்பட ஆரம்பித்தாள் அவள்.

என் போதாத வேளை! நான் ஏதோ டேப்பைப் போட்டபோதுமே அந்த டூ – இன் – ஒன்னுக்குச் சண்டித்தனம் பண்ணும் ஆசை வந்துவிட்டது! அது கமலாவின் டேப் ரிகார்டர். எனக்கு எத்தனை டூ – இன் – ஒன் (வசவும் திட்டும் சேர்ந்த சாபம்!) விழுமோ என்று பயந்தேன். ஏழு கொலை செய்து விட்டது போல் குற்ற உணர்வு ஏற்பட்டது.

நல்ல காலம், அந்தச் சமயம் கமலா வீட்டில் இல்லை. நவராத்திரி கொலுவிற்கு யாரோ அழைத்திருந்தார்கள். அதற்காகப் போயிருந்தாள்.

"என்ன டேப் ரிகார்டரைக் கெடுத்துட்டீங்களா? உங்க பரம்பரையிலே எது தொட்டாலும் சரி, நாசம்தான்.... என் டேப் ரிகார்டரைப் பாழ் பண்ணாதான் உங்களுக்குத் திருப்தி. நவராத்திரி முடியற வரைக்கும் தொடாமல் இருந்தால் என்னவாம்? தினமும் தேவி ஸ்லோகம் போட்டுண்டிருந்தேன்'' என்று கமலாவின் அசரீரி குரல் என்னைத் திட்டியது.

அவசரம் அவசரமாக ரிப்பேர் பண்ணிக் கொண்டு வருவதற்குத் தெருக் கோடியில் இருந்த ரேடியோ ரிப்பேர் கடைக்குச் சென்றேன்.

நாலடிக்கு ஆறடிக் கடையின் மேல் 'சகல விதமான கம்ப்யூட்டர், டி.வி., வி.சி.ஆர்., டேப் ரிகார்டர்கள் ஜப்பானில் பயிற்சி பெற்ற நிபுணர்களால் பழுது பார்க்கப் படும்' என்று போர்டு போடப்பட்டிருந்தது. அங்கு போய் டூ – இன் – ஒன் செட்டைக் காட்டினேன்.

"என்ன சார்... என்ன விஷயம்?''

"ரிப்பேர்...''

"ரிப்பேர் ஆயிடவேதான் கொண்டாந்திருக்கீங்க. நல்லா இருந்திச்சின்னு நம்பளையெல்லாம் கவனிப்பீங்களா?'' என்றார். இதற்கு என்ன பதில் சொல்வது என்று எனக்குத் தெரியவில்லை.

"பாடிக்கிட்டே இருந்தது, சட்டுன்னு நின்னு போயிடுச்சு... எப்படிப்பா திடீர்னு கெட்டுப் போகும்?''

"ஆனானப்பட்ட மனுஷனே பேசிக்கிட்டே இருக்கான். அடுத்த நிமிட் அவுட்டர் யிடறான்... இது மெஷினுச்சே... வள்ளலார் சொல்லியிருக்காரு...''

வாழ்க்கை, பிறப்பு, மரணம், நிலையாமை இவைகளைப் பற்றிச் சொற்பொழிவு நிகழ்த்த ஆரம்பிக்க விடாமல், "போகட்டும், கொஞ்சம் அவசரமாகச் சரி செய்து கொடுக்கணும். நவராத்திரி பூஜைக்காகத் தினமும் சுலோகம் போடறாங்க வீட்டிலே...'' என்றேன்.

"சார்... அது என்ன...?'' என்று கடை ஷெல்ஃபிலிருந்த ரேடியோவைக் காட்டிக் கேட்டார்.

"ரேடியோ!''

"அது எப்ப வந்தது தெரியுமா?'' வினாடி வினா மாதிரி கேள்வி கேட்கிறாரே என்று எண்ணிக் கொண்டு, "தெரியாது... ஏன்? 2, 3 நாள் ஆச்சா?'' என்று கேட்டேன்.

"நாளா? மாசம்னு சொல்லுங்க... அல்லாரும் ஒபயோகமத்த ஜப்பான் செட்டை வாங்கிட்றாங்க. அப்பப்ப ரிப்பேராவுது. நமக்கு எங்கே சார் டயம்? முடிஞ்ச வரைக்கும் சீக்கிரமா செய்து தர்றேன்'' என்றார், ஏதோ ரேடியோ ரிப்பேர் செய்வது பெரிய சமூக சேவை செய்வது போல் நினைத்துக்

# ஒரு சோகக் கதை



கடுகு

கொண்டு!

"இல்லேப்பா... கொஞ்சம் அவசரம். இப்பவே பார்த்துட்டா நல்லது. பணம் வேணும்னு மேலே கொடுத்துடறேன்..." என்றேன்.

"பணம் இன்னு சார்... பணம்? நான் பார்க்காத பணமா? மண்ணடியில் இரண்டு மாடி வீடு இருந்தது. போச்சு எல்லாம். குதிரையில் கட்டினு என்னவும்? உன்னே யார் ரேசுக்குப் போவச் சொன்னுங்க? இப்போ அவஸ்தைப்படு" என்று என்னைக் குற்றம் சாட்டுவது போல் தன்னையே சாடிக் கொண்டார்!

"சரி... இப்படிக் கொடு சார்... என்ன ட்ரபிள் சொன்னே...?"

"டேப் பாடிக்கிட்டே இருந்தது. திடீர்னு..."

தேள் கொட்டியவரைப் போல், "டேப்புங்களா?" அதை முதலிலேயே சொல்லியிருக்கக் கூடாதா? நான் ரேடியோ ரிப்பேர் தான் செய்வேன்... டேப்பெல்லாம் பழக்கமில்லேங்க" என்று உதட்டைப் பிதுக்கிவிட்டு பீடியைப் பற்ற வைக்க ஆரம்பித்தீர். 'ஜப்பானில் பயிற்சி பெற்ற நிபுணர்'

அடையாறு மார்க்கெட்டில் வேறு ஒரு ரிப்பேரிடம் போனேன். சொன்னேன்.

"அடப்பாவமே... உங்கபேட்டையிலேயே இருக்கிற கஜபதியிடமே காண்பிச்சிருக்கலாமே...!"

"அவர் ரேடியோதான் ரிப்பேர் செய்வாராம்."

"இது மட்டும் என்னவாம்? டேப்பாக இருந்தாலும் ரேடியோ சர்க்யூட் மூலமாகத்தானே பாடுதுங்க... அவர் கிட்டேயே கொடுங்க!"

"ஏன்? உங்களுக்கு இதை ரிப்பேர் செய்ய வராதா?"

"வரும் சார். கையிலே ஒரு வி. சி. ஆர். இருக்குது..."

"ரேட் வேண்டுமானல் எகஸ்ட்ரா தர்றேன்."

"நானூறு ரூபாய் தருவியா?"

"அதுக்கு ஒரு டேப் ரிகார்டரே வாங்கிடலாம்... சரி... சரி... உங்களுக்கு டேப் ரிகார்டர் ரிப்பேர் செய்து பழக்கம் இல்லே..."

"அதென்ன பழக்கம், கிழக்கம்...? கையை வெச்சா அரை அவர்லே டீக் பண்ணிடுவேன்."

"பாவம் வி. சி. ஆர். இருக்குது. உங்களுக்கு டயமும் இல்லே."

"அதென்ன சார் டயம், கியம்? நமக்கு டயம் அடிமையா? அதுக்கு நாம்ப அடிமையா? சவால்னு வந்தால் கோவிந்தன் கிட்டே பேசிக்கிட முடியாது."

நானும் கோவிந்தன் கிட்டே 'பேசிக்காமல்' செட்டைக் கொடுத்ததும் வீறுப்புடன் அதன்மேல் பாய்ந்து, கழற்றி மாட்டி, பற்ற வைத்து (இடைஇடையே தன் வாயில் பீடியையும்!) போட்டு மூடி டேப்பைப் போட்டார். அபாரமாகப் பாடியது.

"சபாஷ்... என்ன கொடுக்கட்டும்?"

"கொடுங்களேன் உங்க இஷ்டம். ஒரு சவாலுக்காகத்தான் செய்யறேன். பணத்துக்கு இல்லே" என்றார்.

இருபத்தைந்து ரூபாய் கொடுத்தேன். நெருப்பைத் தொட்டது போல் துள்ளிக் குதித்து, "இன்னு சார் இது... ஒரு நடை பெங்களூர் போய் வந்தால் நூறு ரூபா ஆவுது!" என்றார்.

பெங்களூர் போய் வரும் செலவைப் பற்றித் தொடர்பில்லாமல் கூற வேண்டிய அவசியமென்ன என்று நான் கேட்கவில்லே. (அவருக்கு பெங்களூரில் சின்னவீடு இருக்கலாம்!)

ஒரு மாதிரி ஐம்பது ரூபாய் கொடுத்துவிட்டு, செட்டுடன் வீட்டுக்கு வந்தால் — உள்ளே ஜம்மென்று டேப் ரிகார்டரில் 'அயிகிரி நந்தினி' பாடிக் கொண்டிருக்கும் ஓசை கேட்டது!

"என்ன கமலா... ஏது டேப் ரிகார்டர் உள்ளே பாடறது?"

"ஏன், நம்ப டேப் ரிகார்டர்தான்..."

"இல்லே... டேப்பைப் போட்ட போது இதுதகராறுபண்ணித்து. நம்படு—இன்—ஒன் தான் கெட்டுப் போச்சுன்னு..."

"அடேடே... இது எங்க 'வெட்னஸ்டே கிளப்' விசாலம்மாமியோட ரிகார்டர். கொஞ்சம் ட்ரபிள் கொடுக்கறதுன்னு சொன்னு... யாரோ — ரிப்பேர்க்காரர் ஐந்து ரூபாய் ஆகும், சரி பண்ணிக் கொடுக்கறேன்னு சொன்னுராம்... போகிற வழியிலே நேற்று இங்கே வந்தாள்... மறந்து வெச்சுட்டுப் போயிட்டா... ஆமாம்... அதை எடுத்துண்டு போனீங்களா? எங்கே போனீங்க?"

"போனேனு... ரிப்பேர் பண்ணிண்டு வந்திருக்கேன், கமலா!"

"நல்ல காரியம் பண்ணினீங்க... எவ்வளவு சார்ஜ் ஆச்சு?"

"அஞ்சு ரூபாய்" என்றேன். விசாலம் மாமியை மனத்திற்குள் சபித்துக் கொண்டே!

---

அவன்: மானேஜரும் லேடி ஸ்டெனேவும் ஒருத்தரை ஒருத்தர் காதலிக்கிறுங்க போல் இருக்குன்னு சந்தேகப் பட்டோமே! நாம் சந்தேகப்பட்டது எப்படியோ, மானேஜருக்குத் தெரிஞ்சு போச்சுடா!

இவன்: ஐய்யயோ! அப்புறம் என்ன ஆச்சு?

அவன்: நேத்து என்னைக் கூப்பிட்டு வீண் சந்தேகம் வேண்டாம். நிஜமாலுமே நாங்க காதலிக்கிறோம்னு சொல்லி அனுப்பினர்!

— மீனம் தனுசு



# க்க...
# வண்டிய
# கள்!

் கவனித்து, நாட்டு
ாது இவர்கள்
ர் கண்டிருக்கவேண்டும்!




உங்களை ஒரு குளவி கொட்டிவிட்டதாகக் கனவு கண்டால் உங்களுக்கு எதிர்பாராத வகையில் விபத்து ஏற்படும்.




வாலைக் கனவில் கண்டால் நீங்கள்
க்கும் எந்தக் காரியத்திலும் வெற்றியே
ம். உத்தியோக உயர்வு உண்டாகும்.




கிணற்றில் விழுவது போலக் கனவு கண்டால் நீங்கள் இதுவரை அனுபவித்து வந்த கஷ்டங்கள் தீரும். வாழ்வில் சுபிட்சமும் குடும்பத்தில் மகிழ்ச்சியும் வந்து சேரும்!



ஓர் அன்னியப் பெண்ணைக் கைப்பிடித்து இழுப்பதுபோல் கனவு கண்டால் உங்களுக்கு ஒரு பெண்ணால் விரைவில் அவமானம் உண்டாகும்.

ஆதாரம்: முருகு. இராசேந்திரன் எழுதிய "கனவுகளும் பலன்களும்"

"டக்,டக்... டக்,டக்,"

காலணிகளின் சீரான ஒலி. மானேஜிங் டைரக்டர் பாஸ்கர் வந்துவிட்டார். வரவேற்பு அறையில் காத்திருந்த பத்துப் பேரும் எழுந்து நின்றார்கள்.

எல்லோருக்கும் பொதுவாக ஒரு "குட் மார்னிங்" கூறிவிட்டு மானேஜிங் டைரக்டர் உள்ளே நுழைந்தார்.

மானேஜிங் டைரக்டரின் பி. ஏ. தன் குறிப்புப் புத்தகத்துடன் உள்ளே நுழைந்தாள்.

"குட் மார்னிங் ஸார்!" என்றாள் அவள்.

"குட் மார்னிங், ரேகா... யூ லுக் வெரி சார்மிங் டுடே!" என்றார் பாஸ்கரன்.

பெரிய பதவி வகித்தாலும் — அவர் பாஸ்கரன் — வயதில் சிறியவன்தான் — இன்னும் முப்பதைத் தாண்டவில்லை. இயற்கையாக அமைந்திருந்த திறமை, படித்த படிப்பு, கிடைத்த வாய்ப்புகள் அவனை இந்த நிலைக்கு — இந்தப் பெரிய பதவிக்கு உயர்த்தி விட்டன.

பாஸ்கரன் எப்போதுமே கடந்து போனதை நினைத்துப் பார்ப்பதில்லை. அடுத்து ஆக வேண்டியது என்ன என்பதே அவன் யோசனையாக இருக்கும். ஆனால் அன்று காலை, பழைய நினைவுகளே அசை போடும் ஒரு நிர்ப்பந்தத்திற்கு உட்பட்டிருந்தான்.

ரேகா தன் தொண்டையைச் செருமி, அவனை இந்த உலகத்திற்கு இழுத்து வந்தாள்.

"ஓ, ஐ ஆம் ஸாரி... உன்னைக் காக்க வைத்து விட்டேன்... ஏதானும் முக்கியமா சொல்லணுமா...?"

"எஸ், ஸார்... நம்முடைய திருச்சி கிளைக்கு ஒரு மானேஜர் போட வேண்டும். 'பர்ஸானல்' டிபார்ட்மெண்ட் பத்துப் பேரைச் சிபாரிசு செய்திருக்கிறது. அவர்களில் ஒருவரை நீங்கள் தேர்வு செய்து அனுப்புவதாகக் கூறி எல்லோரையும் வரச் சொல்லியிருக்கிறோம்... அவர்கள் காத்திருக்கிறார்கள்!" என்றாள் உச்சரிப்புப் பிசகாத ஆங்கிலத்தில்.

அவள் இதை ஞாபகப்படுத்தத் தேவையே இல்லை. இந்தப் பிரச்னைதான் காலையிலிருந்து அவன் நெஞ்சை அரித்துக் கொண்டிருந்தது.

முதல் நாள் மாலை, பர்ஸானல் டிபார்ட்மெண்ட் சிபாரிசு செய்த பத்துப் பேர் பற்றிய விவரங்களையும் பாஸ்கரன் ஒப்பிட்டுப் பார்த்தான். எல்லா விதங்களிலும் தகுதி பெற்று முன்னணியில் இருப்பவன் சந்திரமௌலி. காலேஜில் முதல். அவர்கள் வைத்த பரீட்சையில் முதல். தேர்வுக் கமிட்டி முதலிடமாகச் சிபாரிசு செய்திருப்பதும் இவனைத்தான்.

பையனின் புகைப்படம் விண்ணப்பத்தாளுடன் இருந்தது. நல்ல கம்பீரமான தோற்றம். கண்களில் விஷமம் இல்லை. மீண்டும் உற்றுப் பார்த்த பாஸ்கரனுக்கு ஒரு சந்தேகம். இந்த முகத்தை இதற்கு முன்பு எங்கோ பார்த்திருக்கிறான்! பையனின் விலாசத்தைப் பார்த்ததும் புரிந்தது.

பையன் அவன் சொந்த அத்தை மகன். ஏழு, எட்டு வயதில் பார்த்திருக்கிறான். அவன் முகம் இறுகியது. பழைய நினைவுகள் நெஞ்சில் அலைமோதின.

**பா**ஸ்கரனுக்கு அப்போது வயது பதினைந்து.

எஸ். எஸ். எல். சி. தேர்வு எழுதிவிட்டு ரிசல்ட்டுக்காகக் காத்திருந்த சமயம் —

அவனுடைய அப்பாவும் அம்மாவும், அவனைத் தனியாக வீட்டுக்குக் காவல் வைத்துவிட்டு — ஒரு டூரிஸ்ட் பஸ்ஸில் — புண்ணியஸ்தலங்களுக்குச் சுற்றுப் பிரயாணம் புறப்பட்டுப் போனார்கள்.



ஏழாம் நாள் காலை அந்தச் செய்தி அவனுக்குக் கிடைத்தது. அந்த பஸ் ஒரு லாரியுடன் மோதித் தீப்பிடித்து, அவன் அப்பா பஸ்ஸினுள்ளே அவன் கைக்கொள்ளிக்குக் காத்திராமல் பஸ்மமாகப் போனார். அம்மா மட்டும் சொற்பக் காயங்களுடன் தப்பினாள்.

அவன் அம்மா பிரமை பிடித்தவள் போல் இருந்தாள். தன் எதிரே தன் புருஷன் உயிருடன் எரிந்து போனதைப் பார்த்த அதிர்ச்சியிலிருந்து மீளவே இல்லை.

அடுத்த வேளை சாப்பாட்டிற்கு என்ன செய்வது என்று புரியாத நிலைமை. முதல் தேதி வீட்டு வாடகை எப்படிக் கொடுப்பது என்ற பிரச்னை. இந்த இரண்டு ஜீவன்களுக்கு அடைக்கலம் தர, யாரும் முன் வரவில்லை. புகலிடம் எது எனப் புரியவும் இல்லை.

பதின்மூன்று நாள் காரியங்களும் பணக்கார அத்தையின் தயவில் முடிந்தன.

அத்தையின் கணவர் பாஸ்கரனைக் கூப்பிட்டார். "இந்தப் பத்து நாள் காரியங்களுக்காகக் கிட்டத்தட்ட மூவாயிரத்துக்கு மேலேயே செலவழிந்து விட்டது... பாவம்! உன்னைக் கேட்டால் நீ எங்கிருந்து கொடுக்க முடியும்? அது என் செலவாகவே இருந்துவிட்டுப் போகட்டும்! அப்புறம் நீ என்ன செய்கிறாய்? உன் அம்மாவை ஏதாவது ஓர் அநாதை விடுதியில் சேர்த்துவிடு! நான் விலாசம் தருகிறேன்! உன் அப்பா வேலை



பார்த்த மண்டியில் உன்னை எடுபிடி வேலைக்கு எடுத்துக் கொள்வதாகக் கூறியிருக்கிறார்கள். பெரிய மனம் அவர்களுக்கு... உன் ஒருவன் வயிற்றைக் கழுவ அது போதும்...'' என்றார்.

பக்கத்தில் அத்தை வைரக் கம்மல்கள் மின்ன, துளிர் வெற்றிலையில் சுண்ணாம்பைத் தடவித் தடவி வாய்க்குள் திணித்துக் கொண்டிருந்தாள். அத்தனை பூர்வீக சொத்தையும் விற்று, தனக்கென்று வைத்துக் கொள்ளாமல், தன்னைப் பற்றியே நினைக்காமல், அவளைப் பெரிய இடத்தில் வாழ வைத்த அண்ணனுக்குச் செய்யக் கூடிய கைமாறு இந்த அசாதாரணமான மௌனம் தான்!

பாஸ்கரன் நொறுங்கிப் போனான். அவன் எதிர்காலத்தைப் பற்றி அவன் கட்டியிருந்த கோட்டைகள் என்ன? இப்போது நடப்பது என்ன?

சொந்தக்காரர்களைப் போல் வீட்டுக்காரர்கள் அத்தனை ஈரமற்றவர்களாக இல்லை. இரண்டு மாதங்கள் வாடகை இல்லாமல் இருக்க அனுமதித்தார்கள். மங்களம் அநாதை ஆசிரமம் போகவில்லை. யார் சிபாரிசிலோ, மகளிர் விடுதியில் சமையல் வேலை கிடைத்தது.

உழைப்பிற்கு அஞ்சாத மங்களம் அப்பளம் வடாம், சமையல் பொடிகள் தரமாகத் தயாரிக்க ஆரம்பித்தாள். மகளிர் விடுதியில் தங்கிய பெண் ஒருத்தி மங்களம் சொல்லச் சொல்லக் குறிப்பெடுத்து ஒரு சமையல் கலை புத்தகம் வெளியிட ஏற்பாடு செய்தாள். பத்திரிகைகளில் நல்லபடியாக விமர்சித்ததால் புத்தக விற்பனை திருப்தியாக இருந்தது. இரண்டே வருஷங்களில் மங்களம் உயர்ந்து விட்டாள்.

பாஸ்கரன் பெங்களூரில் மேல் படிப்பு படித்தான். பின்னர் அகமதாபாத்தில் எம்.பி.ஏ., படிப்பு முடிவதற்குள் வேலை வாய்ப்பு வரவேற்றது. வேலைக்குச் சேர்ந்த நான்காவது வருடம், கம்பெனியின் மானேஜிங் டைரக்டராக உயர்த்தப்பட்டு விட்டான்.

ஆனால் அவனுக்கு அத்தையின் பேரில் ஏற்பட்ட வெறுப்பைக் கால ஓட்டத்தால் அழிக்க முடியவில்லை. மங்களம் பழைய சம்பவம் பற்றி எது கூறினாலும் 'சள்' ளென்று விழுந்தான்.

இப்போது அந்த அத்தை பிள்ளை இந்த வேலைக்கு விண்ணப்பித்து இருக்கிறான். எல்லாத் தகுதியும் இருக்கிறது. இந்த வேலையை அவனுக்குத் தரக் கூடாது. ஏதாவது ஒரு காரணத்தைக் காட்டி, நிராகரித்து விட வேண்டும்... நேற்றே அப்படி ஒரு முடிவு செய்து விட்டான்.

தன் தாயிடம் இதுபற்றி மூச்சு விடவில்லை பாஸ்கரன். அந்தப் பத்தாம் பசலிக்கு நல்லதைத் தவிர எதுவும் நினைக்க வராது. ஆனால் அவளாகப் பேச்செடுத்தாள்.

''உன் அத்தை இங்கு வந்திருந்தாள்!'' எனத் தொடங்கினாள்.

''கழுத்தைப் பிடித்துத் தள்ள வேண்டியது தானே!'' எனக் கர்ஜித்தான் பாஸ்கரன்.

''அப்படிச் செய்ய முடியுமா அப்பா? வீட்டுப் பெண். நான் வளர்த்துக் கல்யாணம் செய்து கொடுத்தவள்.''

''சரி... கூப்பிட்டுச் சீராட்டு... இப்போ என்ன வேண்டுமாம்? இருக்கோமா, செத்தோமான்னு பார்க்க வந்தாளாமா...?''

''அவள் ரொம்ப நொந்து போயிருக்காடா! உங்க அத்திம்பேரோட அப்பா போனப்புறம் சொத்து பிரிஞ்சப்போ ஏழு பிள்ளைகளுக்கிடையில பகிர்ந்துக்கிட்டதாலே, பெரிசா ஒண்ணும் கிடைக்கலே. இதுலே அத்தை இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் செய்து கொடுத்திருக்கிறாள்... இப்போ வெறும் தாலிக் கயிறும் கண்ணாடி வளையலுமா வந்து நிக்கறா!''

''எதுக்காகக் கஷ்டப்படணும்... அத்திம்பேர் கிட்டச் சொன்னா இவளையும் ஓர் அனாதை ஆசிரமத்திலே சேர்த்து விடுவாரே!'' என்றான் பாஸ்கரன் கேலியாக.

''அப்படியெல்லாம் பேசாதே பாஸு.... அவருக்குப் பாரிச வாயுவாம்... படுத்த படுக்கையாக இருக்கிறாராம். அவருடைய ஒரே பிள்ளை சம்பாதிப்பது எல்லாம் வைத்தியத்திற்குப்போய்விடுகிறது. இன்னும் ஒரு பெண் கல்யாணத்திற்கு நிற்கிறாள்.''

''இத்தனை பீடிகை எதற்கு? இப்போ என்ன வேண்டுமாம்? ஏதாவது ஐம்பதோ, நூறோ கொடுத்து விரட்ட வேண்டியது



## ஷூட்டிங்குக்கு வர ஹெலிகாப்டர்!

ஷூட்டிங்குக்கு ஸ்டுடியோவுக்கு வர, தயாரிப்பாளர்கள் சினிமா நட்சத்திரங்களுக்கு கார் அனுப்புவது வழக்கம். சமீபத்தில் 'அமிதாப்' ஊட்டியில் ஓர் இந்திப் பட ஷூட்டிங்கில் கலந்து கொண்ட போது, அவரது ஓட்டலிலிருந்து ஷூட்டிங் நடக்கும் இடத்துக்கு வருவதற்காக அவருக்கு ஒரு ஹெலிகாப்டரே ஏற்பாடு செய்துவிட்டார் தயாரிப்பாளர்!

— சம்பத்குமாரி

ஆதாரம்: காரவான்

..ானே!''

''உனக்குக் கோபம் வர நியாயம் இருக்கு. இருந்தாலும் யாரையும் இப்படித் தூக்கி எறிஞ்சு பேசக் கூடாது. அவன் பிள்ளே ..ங்க சேலம் பிராஞ்சுலே கிள்ளர்க்காயிருக்..றனும். ஏதோ பரீட்சைகூடப் பாஸ் செய்து ..விட்டானும்... நீ மட்டும் மனம் வைத்தால்...''

பாஸ்கர் கோபமாக எழுந்தான். ''இப்போது நீ சொல்லிவிட்டாய் அல்லவா? நிச்சயம் இந்த வேலை அவனுக்குக் கிடையாது. அது மட்டும் இல்லே. இருக்கிற வேலையையும் பறிக்கப் போகிறேன். அவர்கள் நடுத் தெருவில் நிற்க வேண்டும். அடுத்த வேளைச் சோற்றுக்குப் பிச்சை எடுக்க வேண்டும்!

''பாஸு!''

''நீ பேசாதே அம்மா! நான் ஏற்கெனவே தீர்மானித்த விஷயம்!'' என அவன் நகர்ந்து போனுன்.

**பா**ஸ்கரன் மீண்டும் அந்த விண்ணப்பத்தை எடுத்துச் சேகர் படத்தைப் பார்த்தான். ரேகா மட்டும் இல்லாவிட்டால் அந்தப் படத்தின்மேல் முஷ்டியால் குத்தியிருப்பான்.

''ப்ளீஸ் ரேகா... ஐந்து நிமிஷம் என்னே யோசிக்க விடு! பிறகு உன்னேக் கூப்பிடுகிறேன்'' என்றுன்.

மறுபடியும் சேகரின் விண்ணப்பம்.... படித்த பள்ளி. இவன் படித்த அதே பள்ளிக்கூடம். நற்சான்றிதழ் கொடுத்த தலைமை ஆசிரியரை பாஸ்கரன் அறிவான்.

ஒருநிமிடம் மனம் 'இளகட்டுமா' என்றது.

பாஸ்கர் தலையை வேகமாக ஆட்டிக் கொண்டான். 'நோ! எந்த மாதிரியான மென்மை உணர்வுகளுக்கும் இடம் தர மாட்டேன்!' என உறுதி செய்து கொண்டான்.

டெலிபோன் மணி அடித்தது. அம்மா தான்.

''பாஸு! நான் ஊருக்குப் புறப்படலாம்னு தீர்மானிச்சுட்டேன்.''

''எங்கேம்மா, திடீரென்று?''

''உன் அத்தை வீட்டிற்குத்தான்.''

''என்ன, உனக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதா? போயும், போயும்?''

''எப்படி வேண்டுமானுலும் வைத்துக் கொள்! உன் அப்பா உயிருடன் இருந்தால் தங்கை கஷ்டப்படுவதைப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டார். அவர் இல்லாவிட்டால் என்ன? நான் இருக்கிறேனே.... என் கையும் காலும் நன்றுகத்தானே இருக்கின்றன. இன்னெரு தரம் அப்பளம் இட ஆரம்பித்தால் போகிறது.''

''அதற்கு இப்போது என்ன அவசரம்? சாயங்காலம் நான் வந்த பிறகு....''

''நல்லது செய்யத் தோன்றினுல் உடனே செய்துவிட வேண்டும். மனம் ஒரு குரங்கு. மாறினுலும் மாறும். நீ யாரையாவது அனுப்பு. நான் சாவியைக்கொடுத்து அனுப்புகிறேன்.''

''நீ எங்கேயும் போகாதே. நான் இதோ வருகிறேன்!'' என்றுன்.



**''அந்தக் கடைக்கு ஜவுளி எடுக்கப் போகும் பெண்மணிகளின் கணவன்மார்களுக்கு இலவசமா....''**

**''என்ன தருவாங்களாம்?''**

**''படுத்துத் தூங்க பாய் தலையணே தர்ருங்களாம்!''**

**— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா**

டெலிபோனேக் கீழே வைத்து விட்டு ரேகாவை அழைத்தான்.

''உடனே நான் வெளியே போக வேண்டும். காத்திருப்பவர்களேப் பகல் இரண்டு மணிக்கு வரச் சொல்!'' என்றுன்.

''ஒருவர் மட்டுமே உங்களே ஒரு நிமிஷம் பார்க்க விரும்புகிறுர்!'' என்றுள் ரேகா.

''வரச் சொல்!'' என்றுன் பாஸ்கர், சலிப்புடன்.

உள்ளே வந்தவன்.... சேகர்! இவனு? எதற்கு? தன்னைத் தேர்ந்தெடுக்கும்படி கேட்கப் போகிறுனு? நோ!

''மன்னித்துக் கொள்ளுங்கள், ஸார்! நான்கு நாட்கள் முன்தான் நீங்கள்தான் என் மாமா பிள்ளே பாஸ்கர் எனத் தெரிய வந்தது. நான் என்ன சொல்லியும் கேட்காமல் என் அம்மா உங்கள் வீட்டிற்குச் சிபாரிசு தேடி வந்துவிட்டார்கள். உங்கள் நிலைமை எனக்குப் புரிகிறது. நீங்கள் நேர்மையானவர், பண்பாளர் என்று கம்பெனியில் எல்லோரும் சொல்வார்கள். இந்த வேலையை நியாயமா எனக்குக் கொடுத்தாலும் உங்களேப் பற்றித் தப்பாகப் பேச இடம் இருக்கிறது. அந்தத் தர்மசங்கடமான நிலைக்கு நான் உங்களே உட்படுத்தமாட்டேன். இதைச் சொல்லிப் போகத்தான் வந்தேன். நான் வருகிறேன், ஸார்!''

அவன் போய்விட்டான்.

பதில் பேசத் தெரியாமல் திக்பிரமித்துப் போய் நின்றுன் பாஸ்கரன்.

**வீ**ட்டிற்குப் போகும் வழியில் பாஸ்கரன் யோசித்து யோசித்துக் குழம்பிப் போனுன்.

அம்மா மூட்டையும் முடிச்சுமாகக் காத்திருந்தாள்.

''நானே உன்னே அங்கே கொண்டு விடுகிறேன். நிரந்தரமாகத் தங்குவதற்கு அல்ல... உன் மருமகள் ஒருத்தி கல்யாண வயதில் இருப்பதாகச் சொன்னுயே.... அவர்கள் சம்மதித்தால் அவளே இந்த வீட்டு மருமகளாகக் கூட்டி வர.....'' என்றுன் பாஸ்கர்.

தான் கேட்பதை நம்ப முடியாத ஆனந்தத்தில் அப்படியே உறைந்து போனுள் மங்களம்.



# இப்போது கிரிதான் பிரச்னை

மலர்வண்ணன்

சண்முக சுந்தரத்தின் சந்தோஷமான மனத்துக்குள் கொஞ்சம் துயரமும் பரவிக் கிடந்தது. நிறைய நிறைய யோசித்துக் கொண்டு இருந்தான்.

உஷாராணி ஒரு குதூகலமான குழந்தையைப் போல, அவனுக்கு அருகில் படுத்திருந்தாள். இதுவரை கிடைக்காத ஒரு சந்தோஷம் இப்போது கிடைத்து விட்டது என்ற நிம்மதி அவள் முகத்தில் தென்பட்டது.

"என்னங்க, திடீர்னு ஒரு மாதிரி ஆயிட்டீங்க? இதிலே உங்களுக்கு சந்தோஷம் இல்லையா?"

கட்டிலில் இடதுபுறமாய்ச் சாய்ந்து, அவளை நோக்கிப் பார்த்துப் படுத்திருந்த சண்முகசுந்தரம், ஒரு நீண்ட பெருமூச்சோடு மல்லாந்து படுத்தான். வலது கையைத் தூக்கி நெற்றியின் மீது போட்டுக் கொண்டான்.

உஷாராணி வேகமாக எழுந்து உட்கார்ந்

சொத்து சுகம் ஏராளம். அது ஒண்ணு தின்னுட்டுப் போகட்டுமே?''

''நம்ம முதலாளி கஷ்டப்பட்டுச் சம்பாதிச்ச சொத்து புள்ளே, இது! கண்டவன் தின்னுட்டுப் போறதுக்கு, வாரிசா இல்லாமல் போச்சு? இன்னும் கொஞ்ச நாள்லே தங்க விக்கிரகம் மாதிரி அம்மாவுக்குப் பையன் பிறக்கப் போறுன். ஞாபகம் வச்சுக்க.''

''ஆமா... கிரி இல்லாமல்தான் இத்தனை சொத்தும் வந்துதா?''

''என்னடி உளர்றே?''

''நான் ஒண்ணும் உளறலே. நீ நல்லா ஞாபகம் வச்சுக்க, முதல்லே! மூணு வருஷத்துக்கு முன்னடி நம்ம முதலாளி இப்படியா இருந்தார்? நமக்கு இருக்கிறவசதிகூடக்கிடையாது. ஆனல் கோயில்லே கிரி கிடைச்ச நேரம்... அவன் வந்து சேர்ந்த நேரம்... உங்க முதலாளி லட்சம் லட்சமாப் புரட்ட ஆரம்பிச்சார். எல்லாம் அவனேட அதிர்ஷ்டம். அவன் மட்டும் வராமல் போயிருந்தால், உங்க முதலாளி சோத்துக்கே டிங்கி அடித்திருப்பார், தெரிஞ்சுக்க.''

முருகையனின் குரல் தாழ்ந்தது. ''அப்படியா சொல்றே நீ?''

''பின்னே?''

சண்முகசுந்தரம் மெல்லப் பின் வாங்கினன். மூளைக்குள் தேள் கொட்ட ஆரம்பித்திருந்தது.

'வள்ளி சொன்னதுதான் உண்மையோ?'

கிரி வந்த பிறகுதான், தனக்கு எல்லாக் காரியங்களும் ஆகி வந்ததை நினைத்துப் பார்த்தான். அதற்குமுன் ஆகாத காரியங்கள் எல்லாம் சொல்லி வைத்த மாதிரி நடந்தன.

'நூறு ரூபாயை எதிர்பார்த்துப் போன இடத்தில் ஆயிரம் ரூபாய் லாபம் கிடைத்ததே, அது கிரி வந்த அதிர்ஷ்டம்தானே!'

'ச்சே, அதிர்ஷ்டமாவது, ஒன்றுவது. எல்லாம் நம்ம திறமை!'

'அப்படியும் நினைக்க முடியலியே?'

சண்முகசுந்தரம் யோசித்தபடியே வீட்டுக்குள் நுழைந்த போது ஹாலில் போன் ஒலித்துக் கொண்டிருந்தது

ரிசீவரை எடுத்தான். ''ஹலோ!''

எதிர்முனையில் பரபரப்பு. மில் மேனேஜர் வேகமாகப் பேசினர்.

''நம்ம வேஸ்ட் காட்டன் மில்லில் திடீர்னு ஸ்ட்ரைக் சார். தொழிலாளர்கள் யாரும் உள்ளே வரலே. வெளியே ஒரே கலாட்டா. நீங்க உடனே வர்றீங்க சார்.''

சண்முகசுந்தரம் அதிர்ந்தான். ''என்ன ஸ்ட்ரைக்கா?''

''ஆமாம் சார். என்ன பண்றது? எனக்கு ஒண்ணும் புரியலே!''

''போலீசுக்குத் தகவல் கொடுங்க. நான் உடனே வர்றேன்.''

சண்முகசுந்தரம் ரிசீவரை யோசனையோடு வைத்தான்.

சற்று முன் கேட்ட வள்ளியின் வார்த்தைகள் அவன் நினைவில் வந்து மீண்டும் மீண்டும் ஒலித்தன.

'ஒருவேளை அதுதான் உண்மையோ? கி... வீட்டை விட்டு வெளியே போன உடனே... அசம்பாவிதம்! இந்த மாதிரி இதுவரை நட... ததே இல்லை!'

ச்சே, இது என்ன மூட நம்பிக்கை! வாழ்... கையில் இவையெல்லாம் சகஜம். அதிர்ஷ்ட... மாவது, துரதிர்ஷ்டமாவது.

'வெளியே, இது என்ன. இன்னும் நி... யவே பேசலாம். ஆனல் மனம்?'

சண்முகசுந்தரத்தின் மனம் குழம்பி... போயிருந்தது. எல்லாம் சற்று நேரம்தான்... கிரியை அழைத்து வந்துவிட வேண்டும் என்று முடிவு செய்து விட்டான்.

''அதிர்ஷ்டமாக இருந்தாலும் சரி, இல்லா... விட்டாலும் சரி.''

சண்முகசுந்தரம் பாய்ந்து வெளியே ஓடி... னன். காரின் கதவை இழுத்துத் திறந்து உள்ளே பரவி, இக்னிஷியன் கர்தைத் திருகி... சீறிப் பாயவிட்டான்.

அனதைவிடுதியை இரண்டே நிமிஷத்தில் அடைந்தது கார். இந்த இரண்டு நிமிஷத்தில் 'கிரியே சகலமும்' என்ற நினைவில் இருந்... தான் அவன்.

விடுதித் தலைவரிடம் விஷயத்தைச் சொன்ன போது, அவர் உதட்டைப் பிதுக்... கிஞர்.

''உங்க மேனேஜர் கிரியைக் கொண்டு வந்த போது, சில வெளிநாட்டுக்காரங்க இங்கே இருந்தாங்க சார். அனதைக் குழந்தையைத் தத்தெடுக்க வந்திருந்தாங்க. எதுவுமே பிடிக்காமல் யோசனையோடு இருந்தவங்க கிரியைப் பார்த்தவுடன் முகம் மலர்ந்தாங்க. கிரி உள்ளே கூட வரலே. அப்படியே வாங்கிக்கிட்டு போய்ட்டாங்க. ஆனல் குழந்தை பாவம் சார், ரொம்ப நேரம் அழுதுட்டே இருந்தான்.''

சண்முகசுந்தரம் கண் கலங்கினன். ''இப்போ அவங்க...?''

''உடனடியாகச் சொந்த நாட்டுக்குப் போறதாகச் சொன்னங்க. ஆனல் ஒரு மணி நேரம்தானே ஆச்சு. நீங்க வேணும்னு...''

''அட்ரஸ் இருக்கா?''



> ''உங்க கதையைப் படிச்சு அசந்துட்டேன்.''
>
> ''அப்படியா?''
>
> ''அட! கண் அசந்துட்டேன்னு சொல்ல வந்தேன்.''
>
> — கீழை அ. கதிர்வேல்

தலைவர் தலையைச் சொறிந்தார். ''அவங்க கனடாவைச் சேர்ந்தவங்க. அந்த அட்ரஸ் தான் இருக்கு!''

சண்முகசுந்தரம் எதுவுமே பேசாமல் திரும்பினன்.

அதன் பிறகு அவன் பேசவே இல்லை. 'கிரி' என்ற ஒரு சொல்லைத் தவிர!

உணர்ச்சிவசப்பட்டு விடுவார்கள். எதிர்க் கட்சித் தலைவர்களின் படங்களை ஒருவர் வைத்திருப்பதைக் கண்டால் இவர்களே ஏதாவது செய்துவிடுகிறார்கள். நான் சொன்னால்கூடக் கேட்பதில்லை.' அதற்கு நான் என்ன செய்ய முடியும்?''

''எந்தவொரு விஷயத்திற்கும் பலாத்காரம் தீர்வாகிவிட முடியுமா என்ன?''

''வேறு என்ன செய்யச் சொல்கிறீர்கள். உதாரணத்திற்கு ஒன்று சொல்கிறேன். என் தொகுதியிலேயே இழவு வீட்டுக்குத் துக்கம் விசாரிக்கப் போன ஒருவன், அங்கிருந்த ஒரு வேலைக்காரப் பெண்ணைக் கற்பழித்து விட்டான். அந்தப் பெண் அவனைத்தான் கல்யாணம் செய்து கொள்வேன் என்கிறாள். அவன் மறுக்கிறான். இதற்கு என்ன தீர்வு? நீங்கள் விஷயம் தெரிந்த பத்திரிகையாளராயிற்றே..... சொல்லுங்கள்!''

''அதற்குச் சட்டம் இருக்கிறது. நீதிமன்றம் இருக்கிறது.....''

''சட்டத்தின் துணை கொண்டு நீதி கிடைப்பது எப்போது? அவளுக்குக் குழந்தை பிறந்த பிறகா? அதனால்தான் இதற்கெல்லாம் நானே தீர்வு காண்கிறேன். இங்கே பலாத்காரம் தவறில்லை என்கிறேன். அடி உதை இல்லாவிட்டால் அவன் வழிக்கு வருவானா?''

''இதற்கெல்லாம் உங்களை எப்படி போலீஸார் அனுமதிக்கிறார்கள்?''

''அவர்கள் என்ன அனுமதி கொடுப்பது? அவர்களைப் பற்றி எனக்குத் தெரியாதா? விபசாரக் குற்றத்திற்காக ஒரு பெண்ணைக் கைது செய்தால் அவளை இவர்கள் என்ன செய்து அனுப்புகிறார்கள் என்று எனக்குத் தெரியாதா? என் விஷயத்தில் அவர்கள் தலையிட்டால், நானே ஒரு பெண்ணை 'செட் அப்' செய்து, 'இந்த இன்ஸ்பெக்டர் என்னைக் கைப்பிடித்து இழுத்தார்' என்று சொல்லச் செய்து அவர்கள் மேலேயே கேஸ் போடச் செய்வேன். அதனால் என் விஷயத்திற்கே அவர்கள் வரமாட்டார்கள்!''

''அதற்காகச் சட்டத்தை நீங்களே கையில் எடுத்துக் கொள்வதா?''

''வேறு வழியில்லை. நமது அதிகாரிகள் சோம்பேறிகள். கிராமத்திலிருக்கும் ஒருவன் மிகவும் கஷ்டப்பட்டு பஸ் சார்ஜுக்கு மட்டும் எப்படியோ பணம் புரட்டிக் கொண்டு போனால், ''நாளைக்கு வா!'' என்று நமது அதிகாரிகள் கொஞ்சம்கூட அக்கறையில்லாமல் சொல்கிறார்கள். அடுத்த நாள் போக அவன் பஸ் சார்ஜுக்கு என்ன செய்வான்? அங்குதான் நான் போகிறேன். அவன் பிரச்னைக்குத் தீர்வு காண்கிறேன். 'இன்று போய் நாளை வா!' என்கிற பிசினஸெல்லாம் என்னிடம் கிடையாது. உடனடி தீர்வுதான்!''

''நீங்கள் முன்பு சொன்னீர்கள்; குடிக்க வேண்டாமென்று நீங்களே பிரசாரம் செய்வதாக! ஆனால் உங்கள் கட்சி அரசுதானே கடைகளையே திறந்து வைத்திருக்கிறது! இது முரண்பாடாக இல்லையா?''

''அத்தனை ஏன்? நானே மூன்று சாராயக் கடைகளை ஏலம் எடுத்திருக்கிறேன். எதற்காக? நியாயமான விலையில் கள், சாராயம் கொடுப்பதற்காக! என் கடைகள் இல்லாவிட்டால் பக்கத்திலுள்ள கடைக்காரர்கள் தங்களிஷ்டத்திற்கு விலை வைத்து விற்பனை செய்வார்கள். நான் இருப்பதால்தான் அனைவரும் நியாயமான விலைக்கே விற்கிறார்கள்!''

''எதிர்க்கட்சி வேட்பாளர்கள் உங்கள் பகுதிக்குள் நுழைந்து வோட்டு கேட்கக் கூட நீங்கள் அனுமதிப்பதில்லையாமே? அடித்து விரட்டி விடுகிறீர்களாமே?''

''உங்களுக்கு ஒரு விஷயம் தெரியுமா? என் தொகுதியிலுள்ள இருநூற்று நாற்பது ஊர்களில் எட்டு ஊர்களுக்குள் இன்றைக்கும் நான் நுழைய முடியாது. அடித்து விரட்டி விடுவார்கள்! அப்படியிருக்கும்போது நான் மட்டும் அவர்களை எப்படி அனுமதிக்க முடியும்?''

''கடந்த பொதுத் தேர்தலின்போதுகூட உங்களை எதிர்த்துப் போட்டியிட்ட தி.மு.க. வேட்பாளரை நீங்கள் கடத்திக் கொண்டு போய்விட்டீர்களாமே?''

''அது சுத்தப் பொய்!''

''அந்தச் சமயத்தில் டி. ராஜேந்தர் பேச விருந்த பொதுக்கூட்டத்தைக்கூட நீங்கள் கலாட்டா செய்து கலைத்திருக்கிறீர்கள்!''

''நான் ஒன்றுமே செய்யவில்லை. என் ஆட்கள் அதையெல்லாம் அனுமதிக்கவில்லை. அவ்வளவுதான்.

''நீங்கள் ஆர்.எம். வீரப்பன் கோஷ்டியைச் சேர்ந்தவர். அதற்கு என்ன காரணம்?''

''நியாயத்தின் பக்கம்தானே நான் இருக்க முடியும்!''

''இரண்டு கோஷ்டிகள் இருப்பது நல்லதுதானா?''

''நல்லதில்லைதான். என்ன செய்வது? 'லஞ்சம் வாங்குங்கள். ஆனால் அதை இரண்டு கைகளாலும் வாங்காதீர்கள். ஒரு கையால் வாங்குங்கள், போதும்!' என்று சொல்கிறேன். அவர்கள் கேட்க மாட்டேன் என்கிறார்கள். அப்புறம் அவர்களை எப்படி ஆதரிக்க முடியும்?''

''அப்படியானால் நீங்கள் ஒரு கையால் வாங்குகிறீர்களா?''

''கேட்டுப் பாருங்கள். நான் யாரிடமாவது வாங்கியிருக்கிறேனா என்று! நான் சுத்தமானவன். அதனால்தான் நான் நின்றால் பொதுக் கூட்டம்; நடந்தால் ஊர்வலம் என்னும் அளவுக்கு என்னோடு எப்போதும் ஆட்கள் இருந்து கொண்டே இருக்கிறார்கள். அதோடு நான் நியாயத்தையும், திறமையையும் எங்கிருந்தாலும் மதிப்பவன். நல்லவனுக்கு நல்லவன்; கெட்டவனுக்குத்தான் நான் கெட்டவன்!''

சந்திப்பு: **இளங்கோவன்**

# உனக்காக ஒரு பொய்



**போட்டிக் கதை — 10**

அலுவலகத்தில் பணிபுரியும் மனித இயந்திரங்கள் அவசரமாய் வீடு திரும்பும் அசதியான மாலை வேளை!

ஐப்பசி மாதப் பனியிடம் தோற்றுப் போயிருந்தான் மாலைக் கதிரவன்.

கெம்பகௌடா ரோட்டில் வாகனப் போக்குவரத்தும் ஜன நெரிசலும் அதிகமாக இருந்தது. பிரபாத் தியேட்டர் பேனரில் ராஜ்குமார் பெரிதாய்ச் சிரித்துக் கொண்டிருந்தார். மைசூர் பேங்கிற்கு எதிரே பச்சை வாழைகளைக் கையில் ஏந்திக் கொண்டு, 'இப்பத்—திப்பத், இப்பத்—திப்பத்' என்று கூச்சலிட்டுக் கொண்டிருந்தான் வியாபாரி. நாற்சந்தி கோவில் மணி கணீரென ஒலித்தது.

யோசனையோடு நடந்தான் நரேந்திரன்.

காவிரிபில்டிங்ஸின் ஏழாவது ஃப்ளோரில் இருந்தது ராம் எக்ஸ்போர்ட்ஸ். வரிசையாய் இருந்த ஆபீஸர்கள் சேம்பர்களின் கதவில் ஒட்டிக் கொண்டிருந்த பெயர்ப் பலகைகளைப் பார்த்தவாறு மெல்ல நகர்ந்தான். மூன்றாவது அறையின் கதவு 'நளினி, அட்மினிஸ்ட்ரேடிவ் ஆபீஸர்' என்றது.

சில கணங்கள் தயங்கினான். பிறகு கதவை சற்றுத் தள்ளி, 'மே ஐ கம் இன்' என்றான்.

"எஸ்" என்றது இனிமையான குரல்.

எதிர்பார்க்கவில்லை என்று அவள் பார்வை சொன்னது. அனிச்சையாய் அவள் பார்வை நரேந்திரனின் வலது கையை ஆராய்ந்தது.

உத்தரவின்றி அமர்ந்தான்.

ஆள்காட்டி விரலால் டேபிளை சுட்டிக் காட்டி, "திஸ் ஈஸ் ஆபீஸ்" என்றாள்.

"முடியற நேரத்துலதான் வந்திருக்கேன்."

"எதற்கு வந்தீங்க?"

"எதிர்பார்த்த கேள்விதான்" புன்னகை செய்தபடி மூக்கை வருடிக் கொண்டான். பிறகு, "அம்மாதான் அனுப்பினாங்க" என்றான்.

அவனைப் பார்க்க விரும்பாதவள் போல முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள்.

சில கணங்கள் அமைதி நிலவியது.

என்ன நினைத்தாளோ! மெல்ல எழுந்து வெளியே சென்றாள். திரும்பி வந்தபோது, 'டச்—அப்' செய்து பளிச்சென்றிருந்தாள்.

மௌனமாய் அருகருகே நடந்தார்கள்.

நரேனுக்குச் சுகமாய் இருந்தது. தென்றலாய்த் தவழ்ந்த காற்றை அதிகமாய் இழுத்து, 'புஸ்' என்று பெருமூச்சுவிட்டான். மெள்ளத் திரும்பி எழிலோவியமென நடக்



கும் நளினியைக் கண்ணியமாய் ரசித்தான்; பூரித்தான். "இன்னிக்குத்தான் நாம ரெண்டு பேரும் முதல் முறையா வெளியே வந்திருக்கோம்!" என்றான் மலர்ச்சியோடு.

அவள் மௌனித்தாள்.

"எனக்குச் சந்தோஷமா இருக்கு. ஆனால் உனக்குச் சங்கடமாயும் குழப்பமாயும் இருக்கும்னு தோன்றது. ஐ'ம் வெரி சாரி!"

"பரவாயில்லே."

விஷ்ணு பவனில் நுழைந்தார்கள். மௌனமாய்க் காப்பி பருகினார்கள். சர்வர் பில் கொண்டு வந்தபோது, அவள் பர்ஸைத் திறந்தாள். "நான் கொடுக்கறேன்" என்றான்.

வெளியே வந்தபோது மெர்க்குரி விளக்கொளிக்கும் இருளிற்கும் இடையே மௌன யுத்தம் ஆரம்பமாகியிருந்தது. அவள் அருகில் இருந்ததாலோ என்னவோ, அந்தச் சூழ்நிலை அவனுக்கு மிகவும் பிடித்திருந்தது.

டிம் லைட்டோடு செல்லும் வாகனங்களையும், அங்காடிகளை அலங்கரிக்கும் வண்ண விளக்குகளையும், தியேட்டர் பேனர்களையும், ஊன்றிக் கவனித்து ரசித்தான். அவள் அழகாய் இருந்ததாலோ என்னவோ, ஒவ்வொன்றிலும் ஒருவித அழகைக் கண்டான்.

ஒருகணம் அவள் முகத்தைப் பார்த்தவன், 'காலமெல்லாம் நீயும் நானும் அருகருகே இப்படி நடந்துகிட்டே இருந்துட்டாக்கூடப் போதும்னு தோன்றது" என்றான் மெலிதான குரலில்.

சட்டென நின்று முறைத்தாள். "வள வளன்னு பேசாம வர்றீங்களா!"

அவன் முகம் குப்பென இருண்டுவிட்டது. மெஜஸ்டிக் சர்க்கில் நெருங்கியபோது, "ஒரு நிமிஷம்!" என்று கூறிவிட்டு இடதுபுறம் இருந்த ஆர்யபவனை நேர்க்கி ஓடினான்.

திரும்பி வந்தபோது அவன் கையில் ஸ்வீட் பாக்கெட்.

பஸ் நிறுத்தம் வந்தது.

"வீடு வரை வரட்டுமா?" தயங்கித் தயங்கி வினவினான்.

"எதற்கு?" கணீரென்று அவள் கேட்க,

"வரணும் போலிருக்கு" பார்வையைத் தாழ்த்தி பதில் சொன்னான்.

பால் பகுதி மாற்றமல் அமர்ந்தார்கள். இரண்டு டிக்கெட் வாங்கிவிட்டு அவள் பக்கம் திரும்பி, "வாங்கிட்டேன்" என்றான்.

பஸ் ஓடிக் கொண்டிருந்தது. வேதனையோடு வெளியே வெறித்து நோக்கினான். 'இன்னும் சில நிமிடங்களில் இவளைப் பிரியப் போகிறேன்' என்று நினைக்கையில்

மா. தமிழ்மணி

# கல்கி
# கோகுலம்
# மங்கையர் மலர்

ஆசிரியர் குழுவினர் மட்டும் புதிய முகவரியில் செயல்படுகின்றனர்:

28, ஐந்தாவது தெரு,
ஏரி வட்டம், நுங்கம்பாக்கம்,
சென்னை—600 034.
போன்: 4 7 3 3 8 9

மற்ற பிரிவினர் வழக்கம்போல்,

ரேஸ்கோர்ஸ் சாலை,
கிண்டி, சென்னை—600 032.
என்ற முகவரியிலேயே செயல்படுகின்றனர்.

போன்: நிர்வாகம்: 4 3 15 4 3
சர்க்குலேஷன்
விளம்பரம்: 4 3 4 1 5 7
அச்சகம்: 4 3 4 1 9 0


உலகமே அந்நியமாகிவிட்ட பயம்! கண்கள் கலங்கிவிடும் போலிருந்தது.

'ஹோட்டல் ஷியாம் பிரகாஷ்' என்ற சிவப்பு போர்ட் கண்களைக் கவர்ந்தபோது தான் இறங்க வேண்டிய ஸ்டாப்பைக் கடந்து வந்துவிட்டதை உணர்ந்தான். பெண்கள் இருக்கையைப் பார்த்தான். அவள் இறங்கியிருந்தாள். சிக்னலுக்காக நின்ற வண்டியில் இருந்து இறங்கி ஓடினான். உரிய நிறுத்தத்தில் அவள் நின்றிருந்தாள்.

'புஸ், புஸ்' என்ற பெருமூச்சுக்களுக் கிடையே, "சாரி, யோசனையில் இருந்துட்டேன்" என்றான் மன்னிப்புக் கேட்கும் தொனியில்:

கைக்குட்டையால் முகத்தைத் துடைத்தபடி அவளோடு சேர்ந்து நடந்தான். வியர்வையால் ஊறிய பனியனைத் துளைத்துக்கொண்டு, ஜில்லென்று உடலைத் தழுவியது காற்று.

வீட்டு வாயிலில் தயங்கி நின்றான்.

"உள்ளே வாங்க."

சோபாவில் அமர்ந்தான்.

தன்னால் ஆனது இவ்வளவுதான் என்பது போல் நலம் விசாரித்துவிட்டு உள்ளே சென்றுவிட்டார் நளினியின் அப்பா.

காப்பி கொண்டு வந்து டேபிள் மேல் வைத்தாள். ஸ்வீட் பாக்கெட்டை அவளிடம் நீட்டினான். வாங்கிக் கொண்டாள்.

காப்பியை ஆற்றி அண்ணாந்து குடித்தான். "புறப்படறேன்" என்றான்.

வாயில்வரை வந்தாள். "ப்ளீஸ், இனிமேல் வராதீங்க."

அவசரமாய்ப் படி இறங்கி வேகமாய் நடந்தான்.

மிக அருகில் நின்றிருந்த அப்பா, "என்னம்மா இது போலி நாடகம்?" என்று கனிவாகக் கேட்க, "நோ! என்னை ஒன்றும் கேட்காதீர்கள்" என்றவள் சட்டென அவர்மேல் சரிந்து தேம்பித் தேம்பி அழுதாள்.

சிறிது தூரம்தான் சென்றிருப்பான். இவளை என்றென்றும் பிரிந்து விடுவோமோ என்ற எண்ணம் மேலிட, அதன் பிரதிபலிப்பாய்க் கண்கள் கலங்கின.

சட்டெனச் சட்டையின் வலது கைப்பகுதியை உயர்த்தி முழங்கையைப் பார்த்தான். முட்டியில் முகாமிட்டிருந்த வெள்ளைத் தழும்பு மெர்க்குரி விளக்கின் ஒளியில் பளிச்செனப் பிரகாசித்தது.

இது வெண்குஷ்டமா?

டாக்டர் அப்படிச் சொல்லவில்லை. ஆயில் அலர்ஜியால்கூட இப்படி நேரலாம். ரிஃபைண்ட் ஆயில் யூஸ் பண்ணிப் பாருங்க, பலன் கிடைக்கலாம்' என்றார். முதலிரவு அறையில் குற்றவாளியாய் நின்று இதைத்தான் சொன்னான்.

நளினியோ நம்பவில்லை!

"என்னை ஏமாற்றித் திருமணம் செய்து கொண்டீர்கள்" என்றாள். "நான் ஒரு பெரிய பதவியில் இருப்பவள்; நாலு பார்ட்டியில் கலந்து கொள்ள வேண்டி வரும். இது உடம்பெல்லாம் பரவிடுச்சுன்னா உங்களைக் கூட்டிகிட்டுத் தலைநிமிர்ந்து போக முடியுமா?" என்று கோபமாயும் ஆவேசமாயும் கேட்டாள்.

எதையோ இழந்துவிட்டது போலக் கைகளில் முகம் புதைத்துக் கதறினாள். 'நான் என்ன பாவம் செய்தேனோ' என்று அரற்றினாள்.

அதிர்ந்து போனான் நரேன். ஆறுதல் சொல்ல, அவள் தோள்மீது கைவைத்த போது, "தொடாதீர்கள்!" என்று கர்ஜித்தாள். "ஐ ஹேட் யூ.... யூ சீட்.....!" என்று ஏசித் தலையணையை விட்டெறிந்தாள்.

சொல்லொணா வருத்தமும், பயமும், குழப்பமும் நரேனைச் சிலையாக்கியது.

"ப்ளீஸ் நளினி! நீ நினைப்பதுபோல் எனக்கு எதுவும் ஆகாது. ப்ளீஸ் பிலீவ் மி....." சொல்லி முடித்தபோது கண்கள் ஊற்றாயின.

'என்ன ஒரு கேவலமான நிலை எனக்கு. என்ன இந்த வெள்ளைச் சனியன்? நான் இவளை ஏமாற்றிவிட்டேனா? நோ!

'இது இத்தனை பெரிய பிரச்னையாகும் என்று எனக்குத் தோன்றவில்லையே! ஏன்...? சுயநலமா....? தாலி கட்டிய பிறகு இவளால் என்ன செய்ய முடியும் என்ற எண்ணமா...? ஆண்பிள்ளைதானே என்ற அலட்சியமா....? இல்லை, இல்லை! சத்தியமாய் நான் அப்படி நினைக்கவில்லை..... ஆனால், இதை ஒரு குறையாய்க் கருதி உன்னிடம் சொல்லாதது தவறுதான். அதற்காக.....!'

கண்களைத் துடைத்துக் கொண்டு உறுதியோடு நிமிர்ந்தாள் நளினி. "ஐ'ம் வெரி சாரி! மனம்திறந்து உண்மையைச் சொல்லிடறேன்.... உங்களைப் பார்க்கவே ரொம்ப அருவருப்பா இருக்கு. ப்ளீஸ் பிரிஞ்சுடுவோம்!"

பழுக்கக் காய்ச்சிய மெல்லிய ஊசி யொன்று பளிச்சென இதயத்தில் பாய்ந்தது போலத் துடிதுடித்துப் போனான் நரேன்.

இனியும் இவளிடம் யாசகம் கேட்பதில் அர்த்தமில்லை என்பதுபோலச் சிலகணங்கள் அவள் வதனத்தைக் கூர்ந்து நோக்கினான்.

அழகிய கருவிழியை, அசைந்தாடும் செவியோரக் கேசங்களை, வழவழப்பான கன்னங்களை, வரைந்த ஓவியம் போன்ற வடிவழகை.... ஓ, இவள் அழகி! ஓர் அழகனே தனக்கு மணவாளனாய் வரவேண்டும் என்றிவள் எண்ணுவதில் தவறில்லை. எனக்கும் முகலட்சணத்தில் எவ்விதக் குறையும் இல்லை! ஏன், நடை, உடை, பாவனையில் கூட குறைச்சல் இல்லை.... ஆனால்.... ஆனால்.... இந்த வெள்ளைச் சனியன்!

மெல்லச் செருமிக் கொண்டான். "பாதிப்பு உனக்குத்தான் அதிகம்னு நான் ஃபீல் பண்றேன்" என்றான் தெளிவாக.

எங்கோ திரும்பிக் கொண்டாள். "எதையும் சந்திக்கத் தயார் என்ற முடிவுக்கு வந்துட்டேன்."

'ஓ, அவள் வார்த்தைகள் அத்தனையும் அம்புகள். குறிப்பாக இதயத்தை நோக்கி எறியப்பட்டவை. கமல முகம் கொண்ட இவள் மனம் கல்லோ!

ஆனாலும் சேர்ந்து வாழத் துடிக்கும் எண்ணம் 'அவகாசம் கேள்' என்றது. "நீ ரொம்ப அவசரப்படறேன்னு தோணுறது. யோசிக்க மூணு மாசம் டைம் தர்றேன். நிதானமா யோசிச்சு உன் முடிவைச் சொல். இது வாழ்க்கைப் பிரச்னை" நிதானமாயும் தெளிவாயும் சொன்னவன் ஒதுங்கிப் படுத்தான்.

அடுத்த சந்திப்பு இன்றுதான். அதுவும் அம்மா வற்புறுத்தியதால்!

யார் பிரிவையும் பொருட்படுத்தாத நாட்கள் இயல்பாய் நகர்ந்தன. மூன்று மாதங்கள் முடிந்தே போயின.

"ஊழல் பேர்வழிகளின்மேல் நடவடிக்கை எதுவும் எடுக்க வேண்டாம்னு தலைவர் சொல்லிட்டார்!"

"ஏன்?"

"இருக்கிற ஒன்பது பேரும் போய்விட்டால் கட்சியைக் கலைக்க வேண்டியிருக்குமே, என்கிற பயம்தான்!"

— ச. பஞ்சு



அன்று தொலைபேசியில் அழைத்து, "என்ன முடிவு செய்தாய்?" என்று வினவினான் நரேன். வார்த்தைகளில் ஏக்கமும், எதிர்பார்ப்பும், பரபரப்பும் ஒன்றையொன்று மிஞ்சின.

எதிர்முனை சில நொடிகள் மௌனித்தது. பிறகு, "அதே முடிவுதான்!" என்றாள் அழுத்தமாக.

குழந்தைபோல அழுதான் சிலகணம். பாழும் மனம் 'அவள்! அவள்!' என்று அலைவானேன்? முறைத்துப் பார்த்து விலகி ஓடும் அவளிடம் எதைக் கண்டது இந்த மனம்!

ஆனாலும் அவள் முடிவைச் செயலாக்க வேண்டிய நிலை அவனுக்கு.

இரவு மணி எட்டு. நளினியின் வீட்டின் முன் டாக்ஸி ஒன்று வந்து நின்றது.

களையிழந்த முகத்துடன் உள்ளே நுழைந்தான் நரேன்.

வாயிலில் தயங்கி நின்ற வக்கீலையும் அந்தப் பெண்ணையும், "உள்ளே வாங்க!" என்றழைத்தான்.

நளினியும், அப்பாவும் யோசனையோடு பார்த்தனர்.

ஒருமுறை செருமிக் கொண்டு, "மேடம் நளினி!" என்று நரேன் ஆரம்பித்தபோது, இதுவரை விரும்பி எதிர்பார்த்த ஒன்று இதோ நிகழப் போகிறது என்பதை உணர்ந்த நளினிக்கு திடுமெனக் குழப்பம்!

"இவர் லாயர்! அடல்ட்ரி ப்ரூவ் பண்ணினால் விவாகரத்து எளிது என்று அபிப்ராயப்பட்டார். இவள் விலை மாது! இந்தப் பெண்ணுக்கும் எனக்கும் தொடர்பு இருப்பதாயும், அதனால் விவாகரத்து கோருவதாயும் நீங்க கேஸ் ஃபைல் பண்றீங்க. எனக்கும் இவளுக்கும் சம்மன் வரும். நான், நீங்க, இவள் மூவரும் கோர்ட்டில் ஆஜர் ஆவோம். உங்களுக்கும், இந்தப் பெண்ணுக்கும் சட்டத்திற்குப் புறம்பான உறவு உண்டான்னு என்னைக் கேட்பார்கள்...." சற்று நிறுத்தி மெல்லத் திரும்பி சோபாவின் மேல் கையூன்றிச் சுவரைப் பார்த்தவாறு நின்றான்.

அதிக சிரமத்துடன் தன்னைச் சுதாரித்துக் கொண்டாள். கண்களே! கண்களே! கலங்காதே என்று மானசீகமாய் மன்றாடினாள். பிறகு தழுதழுத்த குரலில் சொன்னாள்: "நளினி சொல்வது அத்தனையும் உண்மை. எனக்கும் இந்தப் பெண்ணுக்கும் தொடர்பு உண்டுன்னு நான் சொல்லிடறேன்."

சில கணங்கள் அமைதி நிலவியது.

பிறகு, காகிதங்களின் சலசலப்பு.

கைமாறிய காகிதங்களில் கையொப்பக் குடியேற்றம்.

வக்கீலும், உடன் வந்த பெண்ணும், டாக்ஸியும் சென்றுவிட.... வெளியே நின்று நளினியின் வீட்டை ஏக்கத்தோடு கூர்ந்தான் நரேன்.

பிறகு, மெல்லத் திரும்பி பொசுக்கென அடியெடுத்து வைத்தான்.

நிசப்தமான பாதை. லேசான இருள். தனியாக அவன்!




# பாயசமும், உப்புமாவும்
# ருசியோ ருசி, தனி ருசி

**7ஸ்டார் பாயசம் :**

200 கிராம் 7ஸ்டார் சேமியாவை நெய்யில் பொன் நிறத்துக்கு வறுத்து, 4 கோப்பை கொதிக்கும் நீரில் மிருதுவாகும் வரை சமைத்து வடிகட்டவும், 3 கோப்பை கொதிக்கும் பாலில் 1 கோப்பை சர்க்கரை, ஏலக்காய், பாதாம் பருப்பு ஆகிய வற்றைச் சேர்த்து 10 நிமிடம் மேலும கொதிக்க வைத்து அத்துடன் ஏற்கனவே சமைக்கப்பட்ட சேமியாவுடன் உலர்ந்த திராட்சையையும் போடுங்கள்,

10 பேருக்குப் பரிமாறலாம்.

**7ஸ்டார் உப்புமா :**

சிறிதளவு எண்ணெயில் 200 கிராம் 7ஸ்டார் சேமியாவை வறுத்து தனியாக வைத்துக் கொள்ளவும், கடுகு தாளித்து அத்துடன் கறிவேப்பிலை, சேமியா, மிளகாய் துண்டுகள், ஒரு முழு எலுமிச்சை பழச்சாறு, தேவைக்கேற்ற உப்பு, இவைகளுடன் 4 கோப்பை தண்ணீர் சேர்த்துதொடர்ந்து நீர் வற்றும் வரை சமைக் கவும்- வறுக்கப் பட்ட கடலை, கொத்துமல்லி சேர்த்து சூடாக பரிமாறவும்.

6 பேருக்கு பரிமாறலாம்.







## 7ஸ்டார்

## சிறந்ததோர் சேமியா!

## இந்திய பாரம்பரியம். இத்தாலிய தொழில் நுணுக்கம்.



தயாரிப்போர் :
**செவன் ஸ்டார் புட் ப்ராடக்ட்ஸ்** பிரைவேட் லிமிடெட்
திருப்பதி. ஆந்திர ப்ரதேஷ்

CLARION/SS/8643 TAM

"அவர் யாருங்க?"

— எதிர்ச் சுவரில் பாய்ந்த ஓட்ட வீரனைக் காட்டினாள் மல்லிகா.

"அவர்தான் கார்ல் லூயீஸ்" ஜகன் தன் அழகு மனைவியை அணைத்தபடி கூறினான்.

இருவருக்கும் சில நாட்களுக்கு முன்தான் திருமணம் நடந்தது. அதுவும் திடீர்க் கல்யாணம். ஆனால், பெற்றோர் பார்த்து முடிவு செய்ததுதான்.

"அப்படின்னா?"

"லாஸ் ஏஞ்சல்ஸ் ஒலிம்பிக்ஸ்ல ஹீரோ இவர்!"

"ஐயையோ, நான் இங்கிலீஷ் படம்லா பார்க்கறதில்லீங்க" அசடு வழிந்தா மல்லிகா.

இருவரும் திருமணத்திற்குமுன் சிறிது அறிமுகமற்றவர்கள்.

ஜகன் செல்லமாக மனைவியின் கன்ன தைத் தட்டினான். "இது சினிமாப் படமில்லை 1985ல் நடந்த நிஜ ஒலிம்பிக் பந்தயப் அதுலே இவர் ஃபோர் கோல்டு மெட வாங்கினார் தெரியுமா?" அளவுகடந் வியப்புடன் கூறினான் ஜகன்.

"ம்."

"நான்கூட ஸ்போர்ட்ஸ்ல நிறைய ப் சஸ் வாங்கியிருக்கேன். அது மட்டுமில்ல எனக்கு....."

அவளோ, சுவாரஸ்யமின்மையா



சுவரில் ஓடிய பல்லியை வெறித்தாள்.

வாசலில் காலடியோசை கேட்டது.

''ஸாரி ஃபார் த டிஸ்ட்ரஃபன்ஸ்'' மத்தாப்புச் சிரிப்புடன் உள்ளே நுழைந்தாள் சுகந்தா. இருபது வயது இளமை அவளிடம் குலுங்கியது.

''நாட் அட் ஆல்'' என்ற ஜகன் ''மீட் மை ஒய்ஃப் மல்லிகா, மல்லி ஷி ஈஸ் சுகந்தா.''

''நான் இவர் ஸ்டூடண்ட்,'' எனச் சுய அறிமுகம் செய்து கொண்டாள் சுகந்தா.

மல்லிகாவுக்கு அவளை ஞாபகம் இருந்தது. திருமணத்தின்போது சுகந்தா பம்பரமாகச் சுழன்றது யாரையுமே கவர்ந்திருக்கும்.

அதன்பிறகு சுமார் முப்பது நிமிடங்கள் அங்கே இருந்தாள். சுகந்தா. ஜகனுடன் சிரித்துச் சிரித்துப் பேசினாள்:

''அப்புறம் சார், அவளால ஃபைவ் ரவுண்ட்சுக்கு மேலே ஓட முடியல்ல. பாவம், ஸ்டாமினு அவுட்''-கூறிவிட்டுக் கலீரெனச் சிரித்தாள். விளைவாக, கன்னக் குழிகளைச் சுற்றி சிவப்பேறியது.

''ஸோ, யூ வன் டுடே, கன்ங்ராஜுலேஷன்ஸ்'' ஜகனும் அவளுடன் உற்சாகமாகப் பேசினான்.

தான் தனிமைப்படுத்தப்பட்டதாக உணர்ந்தாள் மல்லிகா. எனவே சுகந்தா போனபின் புயலுக்கு முன் நிலவும் நிசப்தச் சூழல் அங்கே குமிழியிட்டிருந்தது.

சுற்றிலும் பசுமையான மரங்கள் அடர்ந்த விளையாட்டு மைதானம். இதயத்துக்கு இதமளித்தது அந்த இடம்.

ஜகன் அதிகமாக வற்புறுத்திய பின்தான் இங்கு வரச் சம்மதித்தாள் மல்லிகா. ''வேணுங்க. எனக்கு அந்த மாதிரி இடத்துக்கு வந்து பழக்கமில்லைங்க...''

இப்போதும் அவளுக்கு அப்படித்தான். சூழ்நிலைக்கு ஒட்டாத உள்ளத்துடன் ஒடுங்கி நின்றாள் அவள்.

அருகாமையில் சிலர் ஆர்வமாகப் பயிற்சிகளில் ஈடுபட்டிருந்தார்கள். அதில் பலர் பருவப் பெண்கள்.

அவர்களின் குறைந்த உடை மல்லிகாவுக்குச் சற்றும் பிடிக்கவில்லை.

''ஹாய்....'' பழக்கமான குரல் கூப்பிட்டது. திரும்பினாள் மல்லிகா.

மாறாத சிரிப்புடன் சுகந்தா நின்றிருந்தாள்.

மல்லிகாவுக்கு லேசான அதிர்ச்சி. நேற்று சோளியும், புடைவையுமாக வந்தவள், இன்று ஜீன்சும், டீ—சர்ட்டும் அணிந்து ஒயிலுகின்றாளே!

''ஷல் வீ ஸ்டார்ட்?'' ஜகன் கேட்டான்.

''ஐ'ம் ரெடி'' என்ற சுகந்தா உடனே தனது ஜீன்ஸை அனுவசியமாக உருவினாள் நீல ஷார்ட்சுக்குக் கீழே வாழைத் தண்டாகத் தொடங்கிய சிவந்த தொடைகள் மாலை வெயிலினால் மெருகேற்றப்பட்டன.

மீண்டும் மல்லிகாவுக்கு அதிர்ச்சி.

அவளின் மருட்சியைப் புரிந்த சுகந்தா சிரித்தாள். ''வி ஹாவ் டு ப்ராக்டிஸ்.''

'கண்றாவி... கண்றாவி' மனத்துக்குள் திட்டினாள் மல்லிகா.

''மல்லிகா இங்கேயே வெயிட் பண்ணு'' என்ற ஜகன் சுகந்தாவை அழைத்துக் கொண்டு மைதானத்தின் நடுப்பகுதிக்கு நடந்தான்.

அங்கே, நீள்வட்டச் சாலையாக ஓடிய ட்ராக்கில் இருவரும் ஜாகிங் ஆரம்பித்தார்கள்.

பத்துச் சுற்றுகள் முடிந்தன. மீண்டும் புல்வெளிக்கு வந்தார்கள்.

அடுத்தது வார்மிங் அப். நெக்ரொட்டேஷனில் ஆரம்பித்து, டோ டச்சிங் வரை நீண்டது பயிற்சி.

நடுவில் ட்ரங்க் ரொடேஷனை சுகந்தா ஆர்வமாகச் செய்தபோது கவர்ச்சியாகத் தோன்றினாள். ஆனால், அது மல்லிகாவுக்கு அருவருப்பாகத் தெரிந்தது.

சுகந்தா கூச்சமின்றித் தன் அத்தனை அங்கங்களையும் அசைத்துப் பயிற்சியில் ஈடுபட்டதைத் தவறான காரியமாக உணர்ந்தாள் மல்லிகா. கூடவே, தன் கணவனும் அவளுடன் இணைந்து செயல்படுவது மல்லிகாவின்





## புதுக் கவிதைப் போட்டி-3

ப்ளஸ் டு மற்றும் கல்லூரி மாணவர்களே!
23.11.86 'கல்கி' இதழில் ஒரு சுவை யான கட்டுரை இடம் பெறவுள்ளது — அதன் தலைப்பு 'வைதேகி காத்திருக்கிறாள்!' 'வைதேகி'யை படித்துவிட்டு நகைச்சுவை

ஆத்திரத்தைச் சுண்டிவிட்டது. காரணம், அவளுக்கு எல்லாமே புதியவை.

**ந**ந்தனம் ஒய்.எம்.சி.ஏ. உடற்கல்விக் கல்லூரியை மானசீகமாகக் காதலிப்பவன் ஜகன்.

அங்கே படிக்கின்ற காலத்தில் 'ஈவினிங் ஆக்டிவிட்டீஸ்' முடிந்ததும், அனைத்து மாண வர்களும் 'ஹட்'டுகளுக்குப் பறந்துவிடுவார் கள்.

ஆனால், ஜகன் மட்டும் அந்தப் பசிய மைதானங்களை ஓடிக் கடந்து கொண்டே இருப்பான். அவன் பாதம் படாத அங்குலங் கள் அந்த வளாகத்தில் நிச்சயம் இருக்க வாய்ப்பில்லை.

இருட்டி வெகு நேரம் ஆனபின்னாலும் பயிற்சிகள் தொடரும். யாரும் பார்க்காத வேளைகளில் அந்த மைதானங்களில் உருண்டு புரண்டு தன்னுள் மோதிய இனம் புரியாத ஆசைகளையும், தவிப்புகளையும் போக்கிக் கொள்ள அவன் முயல்வதுண்டு.

வேலை பெறும் நோக்கத்தோடு மட்டு மின்றி, வேறு பல இலட்சியங்களையும் மனதிற் கொண்டே இந்தப் படிப்பைத் தேர்ந் தெடுத்தான் ஜகன்.

விளையாட்டுத் துறையில் தன்னால் எந்த தேசியச் சாதனைகளையும் நிகழ்த்த முடியா மல் போய்விட்டதில் அவனுக்கு மிகவும் மனக் குறை.

இருந்தாலென்ன? தன்னால் முடியாததைத் தான் ஒரு சிறந்த பயிற்சியாளராகப் பணி புரிவதன் மூலம் நிறைவேற்றிக் கொள்ள இயலுமே!

திண்ணமாக நம்பினான் ஜகன்.

அந்த ஆசை அவன் உடல் முழுவதும் 'ஸ்பிரிண்ட்' அடித்துக் கொண்டே இருந்தது.

படிப்பும் முடிந்தது.

உடனே, தன்னைப் போன்ற ஒரு லட்சிய வாதியைத் தேடினான். அந்த வகையில் கிடைத்தவள்தான் சுகந்தா.

ஒருமாலைவேளையில்மந்தகாசப்புன்னகை யுடன் ஓடிக் கொண்டு இருந்தவளைக் கண்டு பிடித்தான் ஜகன்.

ஆர்வத்தோடு சம்மதித்தாள் சுகந்தா.

அன்று ஆரம்பித்த பயிற்சிதான். அதன் பிறகு, இரவு, பகல் மறந்த நிலையில் கடுமை யாகப் பயிற்சியளித்தான் ஜகன்.

தன்னுள்ளே பொதிந்திருந்த திறமைகளை அறிந்து மகிழ்ந்தாள் சுகந்தா. அவை வளர் வதை உணர்ந்து பெருமிதப்பட்டாள்.

ஆரம்பகட்டமாக மாவட்ட அளவிலான போட்டிகளில் கலந்து கொண்டு பரிசுகளை வென்றாள். பிறகு, மாநிலம் தழுவிய வெற்றி களை அணைத்துக் கொண்டாள்.

சில மாதங்களுக்கு முன், தேசிய சாதனை யை நிகழ்த்தி ஜகனின் லட்சியத்தை நிறை வேற்றினாள் சுகந்தா.

இருவரும் மகிழ்ந்தனர். அவர்கள் மட்டுமா? முழு நாடே. பயனாக, தற்போது அவர்களே எதிர்பாராத அரிய சந்தர்ப்பம் தேடி வந்துள்ளது.

உலகம் தழுவிய ஓட்டப் பந்தயத்தில் கலந் து கொள்ளும் வாய்ப்பை அரசாங்கம் ஜகனின் மாணவியான சுகந்தாவுக்கு அளித்துள்ளது.

இடைவிடாத கடினப் பயிற்சிகள் தொடர்ந்தன.

இந்த வேளையில்தான் ஜகனின் திருமணம் திடீரென நடந்தது. சில தவிர்க்க முடியாத குடும்பக் கடமைகள் கருதி சம்மதித்தான் ஜகன்.

ஆனால், அவனுக்கு மனைவியாக வந்த மல்லிகாவோ, விளையாட்டில் விருப்பமற்ற வள். அவள் வளர்ந்த நிலைமை அப்படி.

**வீ**ட்டிற்குள் புயலடிக்கத் தொடங்கி விட்டது.

"மல்லி, என்ன நீ இப்படி....?" ஜகன் மனம் வெதும்பிக் கேட்டான்.

"போதும் நிறுத்துங்க. வெக்கங்கெட்டத் தனமா அவ நடந்துக்கறதும் அதுக்கு ஏற்ற மாதிரி நீங்க எழையறதும், ச்சீ....."

துடித்தான் ஜகன். "நீ தப்பாப் பேசறே மல்லிகா."

"ஆமா, அதுக்கு என்னை எதுக்காகக் கட்டிக்கறது? பேசாம அவளையே...."

மல்லிகாவை அறைந்தான் ஜகன்.

ஓலமிடுவாள் என எதிர்பார்த்தான். அவளோ, விசும்பினாள். "அவ உங்களை நல்லா மயக்கிட்டா. இது நான் எதிர்பார்த் ததுதான்."

"ப்ளீஸ் மல்லி. மறுபடியும் இப்படிப் பேசாதே. சுகந்தா நல்லவ. அவ என்னோ ஸ்டூடண்ட், நான் அவ கோச். எங்களுக் குள்ள இருக்கிற ரிலேஷன்ஷிப் அவ்வளவு தான்."

"பொய். சுத்தப் பொய். உங்க ரெண்டு பேருக்கும் ரகசியத் தொடர்பு இருக்கு. அதான் இப்படி அவ பின்னாலேயே ஓடறீங்க ச்சீ...."

பிளிர ஒரு புதுக் கவிதை எழுதுங்கள். எட்டே வரிகளில் சிரிக்க வைக்க வேண்டும்.

* போஸ்ட் கார்டின் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுதுங்கள்.

* கார்டின் மறுபக்கத்தில் பள்ளி அல்லது கல்லூரி முத்திரையைப் பெறவேண்டும்.

* உங்கள் பெயரும் விலாசமும் தெளிவாக எழுதப்பட்டிருக்க வேண்டும்.

* கவிதைகள் வந்து சேரவேண்டிய கடைசி தேதி: 1.12.86

முதல் பரிசு: ரூ 100/—

இரண்டாம் பரிசு: ரூ 25/— தவிர ஆறு மாதங்களுக்குக் 'கல்கி' இலவசம்.

தவிர, பிரசுரமாகும் அனைத்துக் கவிதைகளுக்கும் சன்மானம் உண்டு.

---

ஜகன் பொறுமையைக் கடைப்பிடித்தான். 'சரி, எப்போ இருந்துன்னு நெனைக்கறே?''

அவளின் கன்னங்கள் ஆத்திரத்தால் துடித்தன. ''அந்த எழவையும் நானே சொல்லணுமோ?''

''ஆமா.''

''கல்யாணத்துக்கு முன்னடி இருந்தே தான்'' அழுத்தமாகக் கூறினாள் மல்லிகா.

ஜகனுக்குச் சிரிப்பு வந்தது. ''அடியே பைத்தியக்காரி, அது உண்மைன்னு நாங்க மேரேஜ் செஞ்சுக்கிட்டிருப்போமே?''

''ம்.... அப்படின்னு, கல்யாணத்துக்குப் பின்னடிதானு இந்த அசிங்கமெல்லாம்?'' தடுமாறினாள் மல்லிகா.

மேலும் சிரித்தான் ஜகன். ''சந்தேகம் உன் புத்தியைச் சாப்டுடிச்சுடி. நான் பேச்சிலரா இருந்தப்ப இல்லாத தவறான எண்ணங்களா இப்போ எங்களுக்கு வந்துடப் போகுது? அடியே,சுகந்தா எனக்கு சிஸ்டர் மாதிரிடி. அதுகூட தப்பு. அவ எனக்கு ஒரு குழந்தை. தெரிஞ்சுக்க.''

''ஆகா, அதை நான் நம்பணுமோ?'' சினந்தாள் மல்லிகா.

வெளியே காலடியோசை கேட்டது. போய்ப் பார்த்தான் ஜகன்.

கலங்கிய விழிகளோடு நின்றிருந்தாள் சுகந்தா.

''எப்போ வந்தே சுகந்தா?''

''அப்பவே.''

''நீ.... தப்பா நெனைக்க வேண்டாம். வந்து....'' குளறிய ஜகனை அவள் பரிதாபமாகப் பார்த்தாள்.

''அவளோட அங்கே என்ன சல்லாபம்? உள்ளே வாங்க உடனே.'' மல்லிகாவின் குரல் முன்னறையிலிருந்து அதிர்ந்தது.

ஆத்திரமாகத் திரும்பினான் ஜகன். அதே சமயம், தெருவை நோக்கி ஓடினாள் சுகந்தா.

''சுகந்தா.... நில்லு.....''

ஜகன் பலமுறை கூப்பிட்டும் அவள் நிற்கவில்லை.

புல்லட் சாலை விதிகளை மீறியபடி சீறிப் பாய்ந்தது. ஓட்டியவன் ஜகன்.

உணர்ச்சி வயப்பட்ட நிலையில் சூழ்நிலைகளை மறந்தவனாக பைக்கைச் செலுத்தினான்.

ஆயிரம் சிந்தனைகள் அவனுள் ஆர்ப்பரித்தன.

முதலில் சுகந்தாவைப் பார்த்தாக வேண்டும். அவள் அறிவில் பண்பட்டவள். எடுத்துக் கூறினால் ஏற்றுக் கொள்வாள்.

நாம்தவறுசெய்யாதபோதுமற்றவர்களின் கீழ்த்தரமான விமர்சனங்களை உதாசீனப் படுத்திவிட வேண்டும் என அவளிடம் சொல்ல வேண்டும்.

பழையபடி பயிற்சிகளை இணைந்து மேற்கொள்ள அவளை இசைய வைக்க வேண்டும். வெற்றி பெற வேண்டியதின் அவசியத்தை அவளுக்கு உணர்த்த வேண்டும்.

நிச்சயம் புரிந்து கொள்வாள்.

ஒரு சாலை வளைவில் அனேகமாக சாய்ந்துவிடும் நிலையில் கடந்தது புல்லட்.

மைதானம் ஏறக்குறைய வெறுமையாகக் காட்சியளித்தது.

அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சிலர் பயிற்சிகளில் தீவிரப்பட்டிருந்தனர்.

களைத்துப்போனவனாகப் புல்வெளியைக் கடந்தான் ஜகன். நிச்சயம் சுகந்தா இங்கு இருக்கலாம்.

பார்வையைச் சுழற்றினான்.

அவன் யூகம் சரியாக இருந்தது. ஒரு மரத்தின் வேரில் யோசனையோடு அமர்ந்திருந்தாள் அவள்.

நெருங்கினான். அழைத்தான். ''சுகந்தா...''

அவள் திரும்பினாள்.

''வந்து..... வந்து..... சுகந்தா.....''

தயக்கத்தோடு அவனை இடைமறித்தாள் அவள். ''நீங்க எதுவும் சொல்ல வேண்டாம்.''

ஆனால் அவன் கெஞ்சினான். ''மல்லிகா அப்படிப் பேசினதுக்காக நான் மன்னிப்புக் கேக்கறேன் சுகந்தா.''

அவள் நிதானமாகக் கூறினாள்: ''எதுக்காக இந்த அனாவசியமான மன்னிப்பு?'' சில நிமிடங்கள் நிறுத்தினாள். ''நாம தவறு செய்யாதபோது மற்றவங்களோட கீழ்த்தரமான விமர்சனங்களை உதாசீனப்படுத்திடணும், தெரியுமா?''

''யூ..... யூ.....''

''எஸ். பழையபடி நாம ப்ராக்டிஸ் பண்ணணும். ஏன்னு, நாம வெற்றி பெற வேண்டியது ரொம்ப அவசியம் சார். ஆமா, சந்தேக மனம்கொண்ட ஒரு பெண்ணை நாமதிருப்திப் படுத்த விரும்பினு, நம்மை நம்பி இருக்கிற எழுபது கோடி மக்களை ஏமாற்ற வேண்டி இருக்கும் இல்லையா?'' சுகந்தாவின் குரல் தழுதழுத்தது. ''மல்லிகாவை என்னல் சரிப்படுத்த முடியும் சார்.''

ஆச்சரியத்தால் ஜகனின் விழிகள் பனித்தன. ''தேங்க் யூ சுகந்தா.''

இருவரும் (இலட்சியப் பாதையில்) ஓட த் தொடங்கினார்கள்.

# தோட்டா





செப்டம்பரோடு சிதம்பரத்திற்கு லீவ் முடிகிறது. மறுபடியும் அடுத்த வருஷம்தான். மறுபடியும் ஒரு வருஷம் யானை முதுகு போன்று, அவன் கிணற்றிலிருக்கிறபாறைகாத்திருக்க வேண்டும். அவன் பட்டாளத்துக்குப் போன ஒன்பது வருஷமாய் அதுவும் காத்திருக்கிறது.

கிணறு வெட்டும் ஆட்களைத் திரட்டுவது வேறு சிதறிய பாதரசத்தைத் திரட்டுகிற கஷ்டமாகிவிட்டது. சிதம்பரம் பதைத்தான். செப்டம்பரில் பருவ மழை தொடங்கிவிடப் போகிறேன் என்று பயமுறுத்திற்று.

மழை பிடித்துக் கொண்டால் கிணறு வெட்டுக்குக் கை கழுவ வேண்டியதுதான். சேர்த்த ஆட்கள் நாலைந்து நாள் வேலை செய்துவிட்டு இனி வெடி வைத்தால்தான் முடியுமென்று நிர்ச்சிந்தையாக அறிவித்துவிட்டனர்.

அந்த நேரம் பார்த்து ஊரில் கிணற்றுக்கு வெடிக்கத் தோட்டா 'டிமாண்ட்'. அக்கம்பக்கம் எல்லாம் சல்லடை போட்டு அலசிவிட்டான். ஒரு தகவல் கிடைத்ததுதான் மிச்சம்.

'கோபாலபுரத்தில் தோட்டா ஸ்டாக்கிஸ்டு இருக்கிறார். 'பிளாக்'கில்தான் கிடைக்கும். திருட்டுத்தனமாகக் கடத்தப்பட்டு வரும் தோட்டா. ஆகவே தனியே போனால் கிடைக்காது. தெரிந்தவர் மூலம் போக வேண்டும்.

கோபாலபுரம் ஆந்திரா எல்லைக்கு ஐந்து கி.மீ. முன்னே. அருகில் ஒரு சிற்றூரில் — குப்பமோ என்னவோ — சாமிக்கண்ணு லைன்மேனாக இருப்பதாகக் கேள்வி. அவனைப் பிடித்தால் வழி பிறந்து விடுமாம்.

தகவல் சொன்னவர்கள் உபாயமும் தெரிவித்தார்கள். ஒரு மணி நேரத்தில் சிதம்பரம் பஸ் ஏறினான்.





வையவன்

# யாரைத்தான் நோவதோ?

கோயமுத்தூர் டாடாபாத்தில் ப்ளாட் வாங்கி வீடு கட்டியிருப்பவர்களுக்கு ஒரு மாபெரும் பிரச்னை, அப்பகுதியிலிருக்கும் ஓர் ஏக்கர் தனியார் நிலத்தில் உள்ள குடிசை வாசிகள்தான்.

எங்களைச் சந்தித்த டாடாபாத் பெண்கள் சங்க உறுப்பினர்கள் அழாத குறைதான்! "இரவில் தனியாக வர எங்களுக்குப் பயமாக இருக்கிறது. கோயமுத்தூரில் எங்கு திருட்டு நடந்தாலும் போலீஸார் முதலில் சோதனை போடுவது இந்தக் குடிசைவாசிகளைத்தான். சில ஆண்டுகளுக்கு முன்னர் நான்கைந்து தான் இருந்தன. இப்போதோ நூற்றுக்கும் மேற்பட்ட குடிசைகள் முளைத்துவிட்டன. அரசு இவர்களுக்கு வேறு இடத்தில் புறம்போக்கு நிலம் தருவதாகச் சொன்னாலும் போக மறுக்கிறார்கள். இதுவரை கலெக்டரிடம் நூறு மனுக்கள் கொடுத்துவிட்டோம். எங்கள் தொகுதி எம்.எல்.ஏ. ரமணி அவர்களிடமும் எத்தனையோ முறை சொல்லிவிட்டோம். அவரோ, 'நீங்களும் துரதிர்ஷ்டசாலிகள், அவர்களும் துரதிர்ஷ்டசாலிகள்' என்று எங்களுக்கு ஆறுதல் கூறுகிறார்.

"நாங்களெல்லாம் நடுத்தர மக்கள்தான். கடன் வாங்கிக் கஷ்டப்பட்டு வீடு கட்டிக் கொண்டு வந்துள்ளோம். இங்கே என்னடாவென்றால், பட்டப் பகலில் கும்பல் கும்பலாக தெருவில் உட்கார்ந்தபடி கஞ்சா பிடித்துக் கொண்டும், சீட்டு விளையாடிக் கொண்டும் இருக்கிறார்கள். கோயமுத்தூர் கஞ்சா மார்க்கெட்டே இந்தக் குடிசைப் பகுதியில் தான் இருக்கிறது. போலீஸுக்கு நன்கு தெரிந்தும் நடவடிக்கை எடுக்கமாட்டேனென்கிறார்கள். ஏற்கெனவே பாதாளச் சாக்கடை இல்லாமல் தெருவில் சாக்கடை நீர் ஓடும் நிலை. அதோடு இந்தக் குடிசைவாசிகளும் சேர்ந்து ரோடு ஓரங்களில் அசிங்கப்படுத்துகிறார்கள். இந்தக் குடிசைப் பிரச்னை குறித்து கலெக்டர் ஒரு சர்வ கட்சி கூட்டம் கூடக் கூட்டிப் பேசினார். ஆனாலும் விடிவு காலம் வரவில்லை!"

தொகுதி எம்.எல்.ஏ.வான ரமணி (இ. கம்யூனிஸ்டு) அவர்களைச் சந்தித்து டாடாபாத் பெண்கள் சங்கத்தினருடைய முறையீடுகளைச் சொன்னதும், கொஞ்சம் உணர்ச்சி வசப்பட்டுப் போனார்.

"உங்களைச் சந்தித்த பெண்களெல்லாம் படித்தவர்கள், விஷயம் தெரிந்தவர்கள், ஓரளவுக்கு வசதியுள்ளவர்கள். அப்படிப்பட்டவர்கள், தங்களைவிடக் கீழான நிலையிலிருப்பவர்களுக்கு என்ன செய்ய வேண்

---

ஊர்த் திருப்பத்தில் பஸ் பாதிரித் தோட்டத்தைக் கடந்தது. சூரிய கிரணம் நுழையும் முன்பே நிழல் கவிந்துவிடும் தோட்டம் அது. அதைப் பார்க்கும்போதெல்லாம் சிதம்பரத்தின் மனசில் ஓர் அலை புரளும். வள்ளி. அப்புறம் பாதிரித் தோட்டத்தின் நீர் வற்றாத கிணறு. சில பொழுதுகள். சில ஏக்கங்கள் ஒரு சவால். ஒரு முடிவு. அலை இப்படிப் புரளும்.

இப்போதும் அதே அலை. பாதிரித் தோட்டம் பின்தங்கிவிட்டது. பஸ் போய்க் கொண்டிருந்தது. அவனும் வள்ளியும் பேசிய பேச்சு இன்னும் அங்கே தேங்கி நிற்கிறது.

"வள்ளி கெடைக்கிறது அத்தினி சுளுவில்லே தொரை!"

"புள்ளி மான் புடிச்சாரணுமா?"

"கல்லும் கரம்புமா மூணு ஏக்கரா, நெலம் வச்சிருக்கிறே. பாதாளக் குகை மாதிரி ஒரு மொட்டைக் கிணறு. இதுலே வீரம் வேறே பேசறே. வள்ளி வாய் வீரத்துக்குக் கெடைச்சுடமாட்டா!"

"என்ன பண்ணணுங்கிறே?"

"இதென்ன தொரை கேள்வி? கெணறு வெச்சிருக்கியே கெணறு. ஒரு களனிக்குத் தண்ணி பாயுமா... தோ பாரு பாதிரித் தோட்டக் கெணத்தை!"

"நான் என்ன பண்ணட்டும்? பாறை வுளுந்து போச்சு."

"இதே மாதிரி வள்ளியைக் கட்டிக்கினு போயி, 'நான் என்ன பண்ணட்டும், மானம் பொய்ச்சுப் போச்சு'ன்னு கையை விரிப்பே."

"இதோ இந்தக் கீழ்வெட்டெல்லாம் வேணும். என்ன வேணும்னு சொல்லு."

நேசிக்கிற பெண்ணிடம் மரியாதை குறைவது ஏற்கும் சக்தியற்றவனுக்கு நரகம். ஒன்பது வருஷத்துக்கு முந்தி ஊருக்குப் பஸ் வந்த புதுசில் சிதம்பரம் இப்படித்தான் பஸ் ஏறினான். பட்டாளத்திற்கு அவன் புறப்பட்டுப் போனபோதும் சரி, விடுமுறைகள் வந்து முடிந்து மீண்டபோதும் சரி, அவன் சென்ற ரயில்கள் கிருஷ்ணா, நர்மதா, கங்கா, பிரம்மபுத்திரா என்று பல நதிகளைக் கடந்திருக்கின்றன. பாலங்களைத் தாண்டியிருக்கின்றன.

பாதிரித் தோட்டத்துக் கிணறும், வள்ளியும் பட்டாளத்து இரவுகளும், அவனது ரைஃபிள் சுட்ட தோட்டாக்களும், அவனது ரயில் ஓடும் பாலங்களின் கீழே நுரை கப்பிச் சீறியோடும் வெள்ளத்தில் அடிபட்டுப் போகும்.

எல்லா ஐயனூர்க்காரனுக்கும் மூளுகின்ற அதே சோகம் அவனை வந்து கவ்வும்.

'என் ஊரை ஏன் இந்த இயற்கை வஞ்சித்தது?'

ஐயனூரில் ஆறு ஓடவில்லை. மூன்று கல்லில் மலையிருந்தாலும் வழியும் மழை வெள்ளம் கிழக்கே பிணங்கித் திரும்பிவிடும். ஊர் முழுக்க வானம் பார்த்த விவசாயம். தோண்டிய கிணறுகளில் பெரும்பான்மை, தோட்டாக்களை விழுங்கிவிட்டு லட்சக்கணக்கான வருஷப் பாறைகளின் தவத்தைக் குலைத்து வெளிப்பட்டதோடு சரி.

டும்? சுத்தத்தையும், சுகாதாரத்தையும் சொல்லித் தர வேண்டும். வீதியோரங்களை அசிங்கப்படுத்துகிறார்கள் என்றால், அதைத் தடுக்கக் கழிப்பிட வசதிகள் ஏற்படுத்தித் தர முயற்சி செய்ய வேண்டும். இதையெல்லாம் செய்யாமல் அவர்களைக் காலி செய்யச் சொல்ல இவர்கள் யார்? இவர்களுக்கு அந்தக் குடிசைவாசிகளைப் பிடிக்கவில்லையென்றால் இவர்களைக் காலி செய்து கொண்டு போகச் சொல்லுங்கள்!'' என்று பொரிந்து தள்ளிவிட்டார் ரமணி!



* ரமணி எம்.எல்.ஏ.



* நம்மிடம் முறையிடும் டாடாபாத் மாக்ஸ் சங்கத்தினர்

— கௌசல்யா

ஐயனூர் பகீரதர்கள் பாறையைப் பிளந்து பிளந்து பார்த்துவிட்டு பட்டாளத்தில் சேர்ந்து கொண்டிருந்தார்கள். சர்க்கரை வள்ளிக்கிழங்கு மாதிரி மதமதவென்றிருந்த வள்ளியின் வார்த்தைகள் சிதம்பரத்தையும் ஊர் வழக்கத்திற்கு உந்தின.

தோட்டா. பாதாள கங்கையின் மண்டையில் அடித்து வானம் பார்த்த விவசாயத்தைத் தலைமுழுகத் தேவையான தோட்டா. பாதிரித் தோட்டத்துக் கிணறு காட்டுகிற ஆசை பூர்த்தியாக அவசியப்படும் தோட்டா.

சிதம்பரம் சிட்டுக் குருவி மாதிரி பத்திரப்படுத்திய பட்டாளக் காசை வருஷத்திற்கு ஒருதரம் கொண்டு வந்து கிணற்றில் வேட்டுவிட்டுக் கொண்டிருந்தான். ஆகாச கங்கைக்கே ஆயிரம் வருஷம் வேண்டியிருந்தது.

மூன்றாம் வருஷம் லீவில் வந்தபோது சிதம்பரத்திற்கு வள்ளிக்குக் கல்யாணம் முடிந்துவிட்ட செய்தி தெரிந்தது. அவன் தன் கொல்லைக் கிணற்றில் கொலுவிருந்த பாறையை வெறித்துப் பார்த்தான். அது வேண்டுமானால் காத்திருக்க முடியும். வள்ளியை எவன் விட்டு வைப்பான்?

**ஆ**ப்பத்தில் இறங்கியதும் சீக்கிரமாகவே, சாமிக்கண்ணு கிடைத்துவிட்டான். வீட்டு எதிரில் நின்ற சைக்கிளும் அதில் அவனுக்குப் பரிச்சயமான சிமெண்ட் வர்ணமடித்த ஸைட் பாக்ஸும் அது சாமிக்கண்ணுவுடையது என்று நிச்சயப்படுத்தின.

''அடே... சிதம்பரம், எங்கே இவ்வளவு தூரம்?''

''ஒன்னைத் தேடித்தான் வந்தேன்.''

சாமிக்கண்ணு சைக்கிளைத் தள்ளிக் கொண்டு ஒரு ஹோட்டலுக்கு அவனை அழைத்துச் சென்றான். சம்சாரம் பிரசவத்துக்கு பிறந்தகம் போயிருக்கிறாளாம்.

ஊர் விட்டு ஊரில் நெடுநாள் கழித்துச் சந்திக்கிற மண் பாசத்துக்கு வேரும் விழுதும் நீளம். அதுவும் ஒரே தோப்பில் மாங்காய் அடித்து, ஒரே மரத்தில் கயிற்றில் கட்டப்பட்டிருந்தால் இன்னும் விசேஷம்.

மனசு பழைய கூடுகளுக்குப் பறந்தது. உற்சாகம் ஓய்கிறவரை பேச ஒரு தலைமுறை விஷயம் இருந்தது. வெகு நேரம் கழித்து சாமிக்கண்ணு விவகாரத்துக்கு வந்தான்.

''வந்த விஷயம் என்னடா சிதம்பரம்?''

''தோட்டாவுக்காக வந்தேன்.''

''என்னடா, சிப்பாய் வந்து என்னைத் தோட்டா கேக்கிறே?''

''கெணறு அப்படியே இருக்கு சாமிக்கண்ணு. கோபாலபுரத்திலே தோட்டாவும் கேப்பும் விக்கிறாங்களாமே.''

''யாரு சொன்னாங்க?''

''ஊர்லே பேசிக்கிட்டாங்க.''

''அங்கே ஒரு ரைஸ் மில்காரன்கிட்டே தோட்டா வருது. வாஸ்தவம்தான். நானும் நாலஞ்சு பேருக்கு வாங்கிக் கொடுத்திருக்கேன். ஆனா....'' என்று இழுத்தான் சாமிக்கண்ணு.

''என்னடா இழுக்கிறே?''

"ஒனக்குத்தோட்டாரொம்ப அவசியமா?"
"என்னடா வெளையாடறியா.... கெணத்து வெட்டை பாதியிலே நிறுத்திட்டு ஓடியாந்திருக்கேன். தோ பொறந்திடுச்சு செப்டம்பரு. காத்து மாதிரி நாளு பறந்துடும். லீவும் முடிஞ்சிடும். மழை ஆரம்பிச்சுட்டா, அவ்வளவுதான்."
"இல்லே...." சாமிக்கண்ணு மறுபடியும் இழுத்தான்.
"நீ வர முடியலேன்னு அட்ரஸ் சொல்லி ஒரு சீட்டு குடு."
"வர்றதுக்கு இல்லேடா. போனு நீ தாங்குவியா?"
"என்ன விஷயம்?"
"அங்கே வள்ளி இருக்கா."
சிதம்பரத்திற்குப் பொறியில் அடி விழுந்தது. சுதாரித்தான்.
"அவளை கெழக்கே மாங்குப்பத்திலே இல்லே கொடுத்தாங்க."
"இருக்க விடுவாளா புருஷனை ஒரு எடத்திலே. மேலே போ, மேலே போன்னு முடுக்கிவிட்டு இங்கே வந்திருக்காங்க. அவன் ரைஸ் மில்லை மேற்பார்வை பண்றான். கூட மாட விவசாயம் தோட்டா வாங்குறது விக்கிறது இவதான். இப்ப நாம்ப போனாலும் அவ கையிலேதான் தோட்டா வாங்கணும்."
சிதம்பரம் உள்ளுக்குள் சிரித்தான். கசந்த சிரிப்பு. அவள் தூண்டி, தோட்டாவுக்குப் பணம் சேர்க்கப் பட்டாளம் போய், இப்போது அவள் கையில்தான் தோட்டா வாங்க வேண்டும்.
"என்ன சிதம்பரம், ஊருக்குத் திரும்பிடலாம்னு தோணுதா?"
"யோசிக்கிறேன்."
சிதம்பரத்தின் யோசனைகளில் அவன் போகும் ரயில்களின் பாலத்துக்குக் கீழே ஓடும் நதிகளின் வெள்ளம்தான் முக்குளித்துப் பாய்ந்தது. இப்போதுவிட்டால் அடுத்த வருஷம்.
"சைக்கிள் போவுமா?"
"ஓ."
"நீ மிதிக்கறியா.... நான் மிதிக்கவா?"
"நீ உட்கார்டா சிதம்பரம்."

**கால்** மணி நேரத்தில் கோபாலபுரம் ரைஸ் மில். வள்ளி, சற்றுப் பருத்து நிழலிலேயே இருப்பதால், சிவந்து விட்டிருந்தாள். கைகளிலும் கழுத்திலும் தங்கம்.
கணவன் டவுனுக்குப் போயிருந்தான். அவனைப் பார்த்துக் கொஞ்சமாவது துணுக்குறுவாள் என்று எதிர்பார்த்தான் சிதம்பரம்.
அவள் மிஷினில் நெல் அரைக்க வந்தவனைப் பார்ப்பதுபோல் சகஜமாகப் பார்த்தாள். சிதம்பரத்தைத் தவிர்த்துவிட்டு சாமிக்கண்ணுவிடம் பேச்சுக் கொடுத்தாள்.
"என்ன சாமிண்ணே! ரொம்ப நாளா ஆளைக் காணோம்."
சாமிக்கண்ணுவுக்கு அவள் நெஞ்சழுத்தம் தெரியும்.
"வேலை. இன்னொரு லைன்மேன் லீவு போட்டுட்டான். அவன் ஏரியாவும் தலைமேலே விழுந்து போச்சு."
"பொஞ்சாதிக்குப் பிரசவம் ஆயிடுச்சா?"
"போனவாரம்தான் தாய் வூட்டுக்குப் போயிருக்கு. ஆகற நாளுதான்."
"என்ன விசேஷம்?"
"சிதம்பரம் வந்திருக்காப்லே."
"தெரியுதே."
"அவனுக்குக் கெணத்திலே வெடிக்கத் தோட்டா வேணுமாம்."
சிதம்பரத்தின் பார்வையும் வள்ளியின் பார்வையும் மோதிக் கொண்டன.
"சரக்கு ரொம்ப டிமாண்ட்! டஜன் நூத்தி ருபது ரூபா ஆவுமே."
"பணத்தைப் பத்திக் கவலை இல்லே" என்றான் சிதம்பரம். அவன் தொண்டை கரகரத்தது.
"பேசிக்கிட்டிருங்க! எனக்கு வயிறு சரியில்லே. அப்படி வரப்புக்கா போய்ட்டு வந்துடறேன்" என்று சமயமறிந்து நழுவினான் சாமிக்கண்ணு.
"இரு அண்ணே...." என்று அவள் குரல் கொடுத்தது காதில் விழாததுபோல் நெடுநெடுவென்று நடந்தான் அவன்.
வள்ளி திரும்பி சிதம்பரத்தைப் பார்த்து முறைத்தாள்.
"நெஜம்மா தோட்டாவுக்குத்தான் வந்தியா?" என்று கேட்டாள்.
"பின்னே நீ பண்ணின துரோகத்துக்கு நியாயம் கேக்க வந்தேன்னு நெனச்சியா?"
வள்ளியின் கை அவள் இடுப்பில் ஏறியது.
"துரோகமா? இன்னு தொரை பெனத்தறே."
"இல்லே. நம்பிக்கை மோசடின்னு வச்சுக்க."
"ச்சொச்சொச்சோ.... இன்னென்னமோ பேசறியே!"
"கெணறு வெட்டக் காசு இல்லேன்னேன். நீ என்னைப் பட்டாளத்துக்குப் போவச் சொல்லலே."
"சொன்னேன்."
"வள்ளி அத்தினி சுளுவிலே கெடைக்க மாட்டான்னு சொல்லலே?"
"சொன்னேன்."
"நான் போன ரெண்டு வருசத்திலே எவனுக்கோ கழுத்தை நீட்டிட்டியே!"
"கெணத்தை வெட்டினியா?"
சிதம்பரத்திற்கு வாயடைத்துப் போயிற்று.
"நான் ஒனக்குக் காலமெல்லாம் காத்திருக்கேன்னு கையடிச்சுக் குடுத்தனா?"
பேசத் தெரியாமல் உளறிவிட்டோம் என்று நினைத்தான் சிதம்பரம். வள்ளி இரண்டு மூன்று முறை அவனை விட்டு விட்டுப் பார்த்தாள். சிதம்பரம் முழுக்க முறியடிக்கப்பட்டு நொறுங்கி விழுந்தான்.
"ஒண்ணை நெனச்சுப் பாத்தியா?" என்று வள்ளி கேட்டாள்.
"என்னுது?"
"பாறை எவ்வளவு போயிருக்கு?"
"பாதி போயிருக்கு."

''ஒம்பது வருஷமாவா வெட்டிகிட்டிருக்கே?''

''ஆமா. இந்தத் தபா தண்ணி விழுந்திடும்.''

''இந்த வள்ளி அந்தச் சொல்லு சொல்லலேன்னு ஐயனூரை விட்டு நீ கௌம்பியிருப்பியா. அந்தப் பாறை மாண்டிருக்குமா?''

சிதம்பரம் பேசவில்லை.

''நான்தான் கல்யாணம் கட்டிக்கிட்டு வந்துட்டேனே... அப்புறம் நீ யாருக்காகக் கெணத்தை வெட்டறே?''

''நீ போயிட்டா என் வாழ்க்கை அதோட...'' என்று ஆரம்பித்த சிதம்பரம் முடிக்காமல் நிறுத்திவிட்டான்.

''அப்படித்தானே எனக்கும் இருக்கும்! அதுவும் நான் பொம்பளே...'' ஏன் நிக்கறே பெஞ்சியிலே உட்காரு. டேய்ய்ய்ய் முனிசாமி.... காப்பிக் கடைக்குப் போய் ஒரு காப்பி வாங்கியா.''

''வேணும். நான் காப்பி குடிக்க வரலே.''

''சும்மா உக்காரு தொரை!''

சிதம்பரம் உட்கார்ந்துவிட்டான்.

''தோ லீவிலே வந்திருக்கே! வேலே முடியணும்னு துடிக்கறே. லீவு காத்திருக்குமா?''

என்ன கிராதக நெஞ்சோடு பேசுகிறாள் என்று சிதம்பரம் குமைந்தான்.

''என்னடா இவ இப்படிப் பேசறாளே... வெட்டிடலாமான்னு வெறி வருதா?''

''இல்லே.''

''அதானே உண்மை.''

எல்லா ஐயனூர்க்காரனுக்கும் தெரிவது போல் அதுதான் உண்மையாகப் பட்டது. எத்தனையோ வள்ளிகள் அந்த மலைச் சாரல் ஊரின் தண்ணீர் ஏக்கத்திற்காக எத்தனையோ சிதம்பரங்களைப் பட்டாளத்திற்குத் துரத்தியதாக அவனுக்குத் தோன்றிற்று.

''காப்பியை வாங்கிக்கோ. இதான் என்னாலே குடுக்க முடிஞ்சுது.''

''தோட்டா?''

''பணம் கொண்டு வந்திருக்கியா?''

''ஓ.''

அட்டைப் பெட்டியில் தோட்டாக்களை அடுக்கி அழகாக சரடு போட்டுக் கட்டிக் கொடுத்தாள் வள்ளி. உபாதை நீக்கிக் கொண்டு சாமிக்கண்ணு வந்தான். அவன்தான் விடைபெற்றான்.

''வரட்டுமா வள்ளி? வூட்டுக்காரு வந்தா வந்துட்டுப் போனேன்னு சொல்லு.''

''சொல்றேன். நீ வந்துட்டுப் போசாமிண்ணே! சொந்த ஊர்க்காரு... எட்டிப் பார்த்துக்கிட்டாத்தானே எனக்கும் தெம்பு வரும்.''

''வர்றேன்.... வர்றேன்.''

மனசில் சிதம்பரம் வளர்த்திருந்த ஒரு பாறை சுக்கல் சுக்லாக நொறுங்கி லேசாகிற்று.

வள்ளி கையால் வாங்கி வந்த தோட்டாவுக்கும் நல்ல பலன். லீவு முடிவதற்கு முன்பே சிதம்பரத்தின் கிணற்றில் ஊற்று பிய்த்துக் கொண்டு கிளம்பிவிட்டது.

★★★

## வாசகர் கருத்து




தீபாவளி மலர்ப் பயணத்தை மேற்கொண்ட என் வாசக மனம் 'சிவக் கொழுந்தை'க் கண்டு குதூகலித்தது. க.நா.சு.வின் கட்டுரை வாசகர்களின் சிந்தனையைக் கிளறிவிடும் மருந்தாக அமைந்தது.

— ஆர். கோபாலன், ஸ்ரீரங்கம்.

இலக்கியத் தரமும், ஆன்மிக மணமும் கமழ, கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்து படைத்த பல்சுவைக் கட்டுரைகள், கதைகள், கவிதைகள் உள்ளத்தை மகிழச் செய்தன.

— ஏ.ஜி. அசோக்ராஜா, சென்னை — 4.

பருவங்களைப் பற்றியும், மாதங்களைப் பற்றியும் ஜெயரதனின் ரம்யமான கருத்துக்களும், எளிய நடையும், அழகிய மேற்கோள்களும் மிகச் சிறப்பாக இருந்தன. பல மலர்களைக் கொண்டு தொடுக்கப்பட்ட கல்கி (தீபாவளி மலர்) மாலையில் திரு ஜெயரதனது படைப்பு சரத்ருதுவில் மலர்ந்த அழகிய, வாசமுள்ள மலராக மணக்கிறது.

— ஹேமா ராஜன், சென்னை — 33.

கல்கி தீபாவளி மலர் எப்போதுமே பிரும்மாண்டமாக அமைந்து அசர வைக்கும் என்பது தெரிந்த விஷயம்தான்! ஆனாலும் மலரைப் பார்க்கும்போது வியக்காமல் இருக்க முடியவில்லை! ஏராளமான பக்கங்கள்! ஒவ்வொருபக்கமும்கலையழகுடன், அற்புதமாக இருக்கிறது. சிறுகதைகள், கட்டுரைகள், கவிதைகள், நகைச்சுவைத் துணுக்குகள், வண்ண வண்ணச் சித்திரங்கள், புகைப்படங்கள் என்று எல்லாமே மனத்தைக் கவரும் வண்ணம் தனிச்சிறப்புடன் திகழ்கின்றன. 'இந்தியாவின் ஆன்மா இங்கே இருக்கிறது' என்று கிராமங்களின் அழகை வண்ணப் படங்களாகத் தந்திருந்தவிதமும், 'வேற்றுமையில் ஒற்றுமை' என்று வண்ணத்தில் மனத்தைக் கொள்ளை கொண்ட விதமும் இந்த வருட கல்கி மலருக்குத் தனிச் சிறப்பு.

— ஆர். அமுதா, வடுகவிருட்சியூர்.

# ரசிகர்களும், மன்றங்களும்.

வாசகர் பட்டி மன்றம் — 8



**வாசகர் தீர்ப்பு:**

ரசிகர் மன்றங்களால் தொல்லையே 83%

ரசிகர் மன்றங்கள் தேவையே 17%

## ரசிகர் மன்றங்களால் தொல்லையே! முதல் பரிசு வாதம்

ரசிகர் மன்றங்கள் — கவர்ச்சிகரமான குப்பைத் தொட்டிகள்; வேலை வெட்டி இல்லாதவர்கள் கூடும் சத்திரங்கள்.

யாரோ ஒரு நடிகர் நடித்துப் புகழும், பணமும் சம்பாதிப்பதற்கு இந்த அப்பாவி ரசிகர்கள் ஏன் அடித்துக் கொண்டு சாக வேண்டும்? நன்றாகச் சிந்தித்துப் பார்த்தால், நடிகர்களால் இந்தச் சமுதாயத்திற்கு எந்த ஒரு முன்னேற்றமும் கிடையாது. ரசிகர் மன்றங்களால் ஏற்படும் தொல்லைகள் பல.

1. இளைஞர்களிடையே பகை உணர்வும், கோஷ்டிப் பூசலும் வளருகின்றன.

2. இளைஞர்களின் சக்தியும், ஆற்றலும் வீணடிக்கப்படுகின்றன.

3. சம்பந்தப்பட்ட நடிகர்களின் பாதிப்பு இளைஞர்களிடம் படிந்து விடுகிறது. தொடர்ந்து அதே பாணியில் பெண்களைக் கண்டால் கேலியும், கிண்டலும் செய்யத் தூண்டுகிறது.

4. நன்கொடை என்ற பெயரில் கட்டாய வசூல் கொள்ளை நடைபெறுகிறது.

5. பல இளைஞர்கள் சில தவறான வழிகளில் கெட்டுப் போவதற்கு இந்த ரசிகர் மன்றங்கள் காரணமாக இருக்கின்றன.

6. தியேட்டரில் பொது மக்கள் அமைதியாகப் படம் பார்க்க முடிவதில்லை. பல இடங்களில் கத்திக் குத்து, சோடாபாட்டில் வீச்சு போன்றவற்றுக்கு ரசிகர் மன்றங்களும் காரணமாக இருக்கின்றன.

7. கலை உணர்வு என்ற போர்வையில் இளைஞர்களிடையே வெறித்தனம் வளருகின்றது.

8. இளைஞர்களின் 'பர்ஸ்' காலியாக்கப் படுகிறது.

9. பாடுபட்டு வளர்த்த பெற்றோர்களின் சொல்லை அந்த இளைஞர்கள் கேட்பதில்லை. மாறாக அந்த நடிகர் ஏதேனும் சொன்னால் உடனே செய்யத் துடிப்பார்கள். ஆகவே ரசிகர் மன்றங்களால் தொல்லையே.

— டி. கிருஷ்ணமூர்த்தி, சென்னை — 23.

ஒரு திரைப்படம் என்பது பல நடிகர்கள், நடிகைகளைக் கொண்டு உருவாக்கப்படுவதாகும். மேலும் காமிரா, ஒலி அமைப்பு, வண்ணம், இசை முதலியவை ஒரு திரைப்படம் வெற்றியடைய முக்கியப் பங்கு வகிக்கின்றன. இந்த நிலையில் ஒரு தனிப்பட்ட நடிகனுக்கோ, நடிகைக்கோ ரசிகர் மன்றம் இருந்து வருவது கலையை ஒட்டு மொத்தமாக ரசிக்கத் தெரியாத ஓர் அவல நிலையைக் காட்டுகின்றது. இதர கலைஞர்களை அவமானப்படுத்துவதாகும்.

— டி. சுந்தரராமன், சென்னை — 83.

புதிய திரைப்படங்கள் வெளியாகும்



# வித்தியாசமானவன்

க. உப்பிலியப்பன்

"என்னங்க, உங்க பையில் காசு மாலை இருக்கிறதா, பாருங்க!" — பார்வதி பதற்றத்துடன் கூறியதும், குமரேசனுக்குத் திக்கென்றது!

"என்ன சொல்றே நீ, உன் கழுத்தில் இருந்த காசுமாலை என் பைக்குள் எப்படி வரும்? ஓட்டலில் டிபன் சாப்பிட்டோமே, அப்போது தவறி எங்கேயாவது போட்டுட்டாயா?" என்றவர், ஓட்டலை நோக்கி விரைய, பார்வதியும் பின் தொடர்ந்தாள்.

எப்படிப் பார்த்தாலும் பத்தாயிரம் பெறும் காசுமாலை; அத்துடன் குமரேசன் வீட்டில் மூன்று தலைமுறையாக இருந்து வரும் குடும்ப நகை. அது காணமல் போய் விட்டதே! இதனால் குடும்பத்தில் ஏதேனும் கஷ்டம் வரப் போகிறதா? — குமரேசனும் பார்வதியும் குழம்பித் தவித்தனர்.

குமரேசன் ஓட்டலை அடைந்து, முன்பு தாங்கள் டிபன் சாப்பிட்ட இடத்திற்குச் சென்றார். நல்ல காலம், அவர்கள் சாப்பிட்ட இடத்தில் தனியாக ஓர் இளைஞன் மட்டுமே அமர்ந்திருந்தான்.

"எக்ஸ்கியூஸ் மீ, இந்த இடத்தில் என் மனைவி ஒரு காசுமாலையைத் தவற விட்டு விட்டாள். உங்கள் கண்ணில் பட்டதா?" என்று மிகவும் மெல்லிய குரலில் கேட்டார்.

காப்பியை ஆற்றிக் கொண்டிருந்த இளைஞன் உடனே, "பதற்றம் வேண்டாம் சார். இந்தக் காசு மாலைதானே நீங்கள் தொலைத்தது?" என்று அவரிடம் அதைக் கொடுத்தான்.

"தேங்க்ஸ் எ லாட், டியர் பிரதர்!" என்று கண்ணீர் மல்க அவன் கைகளை ஆதங்கத்துடன் பிடித்துக் கொண்டார், குமரேசன்.

"நான்தான் உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும். டிபன் சாப்பிட இங்கு வந்து அமர்ந்ததும் காலில் ஏதோ இடற, என்னவென்று குனிந்து பார்த்தேன்; காசுமாலை! எனக்குத் திக்கென்று ஆகிவிட்டது சார். உடனே என்ன செய்வதென்றே புரியவில்லை. ஓட்டல் முதலாளியிடம் கொடுக்கலாமென்று நினைத்தேன். மறுகணம் போலீஸில் ஒப்படைத்துவிட நினைத்தேன். காசுமாலையைத் தவற விட்டவர்கள் மனம் இந்நேரம் என்ன பாடுபடும் என்பதை நினைத்தபோது, மனத்திற்கு மிகவும் சங்கடமாக இருந்தது. அந்த நிலைமைக்கு வாய்ப்பே ஏற்படாமல் நீங்களே இதோ நேரில் வந்து விட்டீர்கள். உரிய பொருள் உரியவரிடம் போய்ச் சேர்ந்தது மனத்திற்கு மிகவும் மகிழ்ச்சியளிக்கிறது சார். இந்த எனது மகிழ்ச்சிக்குக் காரணமான உங்களுக்கு, நான்தான் சார் தேங்க்ஸ் சொல்ல வேண்டும்!" என்றான் அந்த இளைஞன் புன்சிரிப்புடன்.

அவனையே சிறிது நேரம் பார்த்துக்கொண்டிருந்தார். அவனது களையான முகமும், இயல்பான பேச்சும் மேலும் அவன் மீது ஒரு மதிப்பை ஏற்படுத்தின. வெகுமதி, இனாம் என்ற பெயரில் அவனுக்கு எதையாவது கொடுத்து அவனது பெருந்தன்

மையைக் கொச்சைப் படுத்த விரும்பாத குமரேசன், அவனிடம் மீண்டும் நன்றி கூறி விடை பெற்றுக் கொண்டார். வெளியில் சிறிது தூரம் சென்ற பிறகுதான், அவனைப் பற்றி ஒன்றுமே தெரிந்து கொள்ளாமல் வந்து விட்டோமே என்று வருத்தப்பட்டார்.

குமரேசன் 'ராம் கெமிகல்ஸ்' என்ற உர நிறுவனத்தில் மானேஜர். கைநிறைய சம்பளம். நிறைவான வாழ்க்கை. ராம் கெமிகல்ஸில் அவர் வைத்ததுதான் சட்டம். அன்று வழக்கம் போல் வேலையை முடித்து விட்டு, வீடு திரும்பினார். வீட்டில் அவருக்காக அவருடைய பழைய பள்ளித் தோழர் ராகவன் காத்திருந்தார்.

நண்பர்கள் இருவரும் சிறிதுநேரம் பரஸ்பரம் ஒருவரையொருவர் விசாரித்துக் கொண்டார்கள். பின்னர் அவர்களது பேச்சு குடும்ப வாழ்க்கை, பிள்ளைகளின் படிப்பு, உத்தியோகம் என்று நீண்டது.

''ஆமாம் ராகவன், எம். எஸ்ஸி., படித்து விட்டு வேலை எதுவும் இல்லாமலா இருக்கிறான் உன் மகன்?''

''அதற்காகத்தான் நான் இப்பொழுது உன்னிடம் வந்தேன்!''

''நான் என்ன செய்ய வேண்டும்? சொல். உனக்குச் செய்யாமல் நான் யாருக்குச் செய்யப் போகிறேன்.''

''இந்த நம்பிக்கை எனக்கு நிச்சயம் கிடைக்கும் என்றுதான் நான் உன்னிடம் வந்தேன். உங்கள் நிறுவனத்தில் 'கெமிஸ்ட்டுகள் தேவை' என்று விளம்பரம் வந்தது. என் மகனும் அதற்கு விண்ணப்பம் போட்டுள்ளான். அடுத்த வாரம் இண்டர்வியூ. அதனால் உன்னிடம் முன்னாலேயே ஞாபகப் படுத்திவிட்டுப் போகலாம் என்றுதான் வந்தேன்!''

''சரியான நேரத்தில்வந்தாய். உன் மகனைப் பற்றிய விவரங்களைக் கொடு. அவன் அப்பாயின்ட்மெண்ட்டுக்கு நான் கேரண்ட்டி தருகிறேன்.''

ராகவனிடம் அவரது மகனைப் பற்றிய விவரங்களை வாங்கிக் கொண்டு, அவரை அனுப்பி வைத்தார் குமரேசன். மளமள வென்று நாட்கள் செல்ல, அந்த இண்டர் வியூ நாளும் வந்தது.

ராம் கெமிகல்ஸ் நிறுவனத்தில் அன்று ஏகப்பட்ட எம்.எஸ்ஸி. பட்டதாரிகள் கூட்டம். உதவி மானேஜர்கள் இருவர் வந்திருந்த பட்டதாரிகளின் கல்வித் தகுதி, முன் அனுபவம் முதலியவற்றைச் சரிபார்த்தனர்.

குமரேசன்தான் நேரடித் தேர்வினை நடத்திக் கொண்டிருந்தார். அவரது அறையில் நுழையும் ஒவ்வொரு நபரையும், அவர்களது திறமையை எடை போட, தகுந்தவாறு கேள்விகள் கேட்டுத் தேர்வினை நடத்திக் கொண்டிருந்தார். அப்போது ஆர். ரவி என்றபெயருள்ள இளைஞன் அவர் அறையில் நுழைந்ததும், குமரேசன் ஆச்சரியப்பட்டுப் போனார்! காரணம், ஓட்டலில் அவரது காசு மாலையைக் கொடுத்த அதே இளைஞன்! அதே புன்சிரிப்பு!

''உங்களை இங்கு சந்திப்பேன் என்று நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை, பிரதர்!'' என்றார் குமரேசன்.

''நானும்தான் சார்!'' என்றான் ரவி.

ரவியிடம் என்ன கேள்வி கேட்பது, ரவியைப் போய் கேள்வி கேட்பதா? ரவிக்கு நாம் எவ்வளவு நன்றிக் கடன்பட்டுள்ளோம். அதைத் தீர்ப்பதற்குக் கிடைத்த இந்தச் சந்தர்ப்பத்தை நழுவ விடுவதா...?

சிறிதுநேரம் சிந்தித்த குமரேசன், ரவியைப் பார்த்து ''ஓ.கே மிஸ்டர் ரவி, ப்ளீஸ் வெயிட் இன் தி ரிசப்ஷன் டில் ஐ கால் யூ அகெய்ன்'' என்றார்.

''தாங்க் யூ ஸார்'' என்ற ரவி அவர் அறையை விட்டு வெளியேறினான்.

உடனே ஸ்டெனோவைக் கூப்பிட்ட குமரேசன், ரவியின் பெயரைக் குறிப்பிட்டு ஓர் அப்பாயின்ட்மெண்ட் ஆர்டர் அடிக்க உத்தரவிட்டார்.

அந்த நேரம் பார்த்து, ப்யூன் ஒரு சீட்டைக் கொண்டு வந்து கொடுக்க, அதைப் பார்த்ததும்தான் குமரேசனுக்குத் தமது தவறு புரிந்தது!

சீட்டுக்குரியவரை உள்ளே அனுமதித்தான், பியூன்.

ராகவன்!

'அடக் கடவுளே, ராகவனிடம் கொடுத்த வர்க்குறுதியை, மறந்தே போனேமே, நல்ல காலம். இவர் நேரில் வந்தது. உடனே மீண்டும் ஸ்டெனோவைக் கூப்பிட்டு, சற்றுமுன் தான் சொன்ன ஆர்டரை ரத்துசெய்துவிட்டு, ராகவன் முன்பு கொடுத்த சீட்டை அப்படியே ஸ்டெனோவிடம் கொடுத்து, அந்தப் பெயருக்கு ஆர்டர் தயார் செய்ய உத்திரவிட்டார்.

ஸ்டெனோ சிறிது நேரத்திற்கெல்லாம் கொண்டு வந்து கொடுத்த ஆர்டரில் கையெழுத்திடப் போன குமரேசன், அதில் ஆர். ரவி என்ற பெயரைப் பார்த்ததும், கோபமாக ஸ்டெனோவிடம் தவறைப் பற்றிச் சொல்ல, உடனே ஸ்டெனோ ''குமரேசன் தந்த சீட்டில்



''என்ன கமலா, தீபாவளியை எப்படிக் கொண்டாடினே?''

''ரொம்ப ஸிம்பிள்தான். ஒரே ஒரு ஸ்வீட், காரம்தான் பண்ணினேன். அவருக்கு ஒரு நாலு முழம் வேஷ்டி மட்டும் தான். எனக்குஇரண்டே இரண்டுபட்டுப் புடைவை. அவ்வளவுதான்.''

— வி. ராஜேஸ்வரி.

உள்ள பெயரும் ஆர். ரவிதான்'' என்றாள்.

அப்பொழுதுதான் குமரேசனுக்குப் புரிந்தது; ஆர். ரவி ராகவனின் மகன்தான் என்று. பழம் நழுவிப் பாலில் விழுந்தது போல் அவர் மனம் குளிர்ந்தது. உடனே ராகவனிடம் அவரது மகனை உள்ளே அழைத்து வரச் சொன்னார். உள்ளே நுழைந்த இளைஞனைப் பார்த்ததும் சப்பென்று ஆகிவிட்டது அவருக்கு!

காரணம், வந்த இளைஞன், குமரேசன் நினைத்திருந்த ஆர். ரவி அல்ல!

அப்படியானால் இருவர் பெயரும் ஆர். ரவியா? குமரேசன் தம் மனத்தில் ஏற்பட்ட ஏமாற்றத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமல், அந்த இளைஞன் கையில் ஆர்டரைக் கொடுத்து, அவனை கங்கிராட்ஸ் செய்து அனுப்பினார்.

ராகவன் விடைபெற்றுச் சென்றவுடன், தாம் காத்திருக்கச் சொன்ன ஆர். ரவியை உள்ளே அழைத்தார்.

''ஐ ஆம் சாரி மிஸ்டர் ரவி. எதிர்பாராத சில காரணங்களினால் நான் உங்களுக்கு உதவ முடியாமல் போய் விட்டது. மேலும் உங்களை வீணாகவும் காக்க வைத்து விட்டேன்'' என்றார் குமரேசன் மிகவும் வருத்தத்துடன்.

''அப்படிச் சொல்லாதீர்கள் சார். நீங்கள் என்னை எதுவுமே கேள்வி கேட்காமல் அனுப்பிய போதே நீங்கள் அந்த ஓட்டல் சம்பவத்தை மனத்தில் வைத்து, எனக்கு இந்த வேலையைத் தீர்மானித்து விட்டீர்களோ என்று நினைத்துப் பயந்தேன். ஆனால் நீங்கள் அதைச் செய்யவில்லை என்று தெரிகிறது. அதற்கான காரணம் எதுவாயினும், எனக்கு இப்பொழுதுதான் உண்மையிலேயே மகிழ்ச்சியாக இருக்கிறது சார்!'' என்றான் ரவி.

''அன்று உரிய பொருளை உரியவரிடம் சேர்ப்பித்து மகிழ்ச்சியடைந்தாய். இன்று தாட்சண்யத்தின் பேரில் கிடைக்கவிருந்த வேலை, கிடைக்காமல் போனதற்குச் சந்தோஷப்படுகிறாய். உன் மனத்திற்கேற்றபடி, மகிழ்ச்சி உன்னைத் தேடிக் கொண்டு வந்து விடுகிறது. எனக்குத்தான் மனநிறைவு ஏற்படவில்லை பிரதர். இண்டர்வியூ செய்த நான்தான் தோல்வி அடைந்து நிற்கிறேன்...'' என்றார் குமரேசன் நாத் தழுதழுக்க.

''உங்கள் மனநிலை எனக்குப் புரிகிறது சார். எனக்கு வேலை கிடைத்ததும் முதல் காரியமாக, அந்த மகிழ்ச்சியை உங்களுடன் கட்டாயம் பகிர்ந்து கொள்கிறேன் சார். இப்பொழுது என்னை ஆசீர்வதித்து விடை கொடுங்கள் சார்'' என்றான், அதே புன்முறுவலுடன்!

''பெஸ்ட் ஆஃப் லக் பிரதர்'' என்று விடைகொடுத்த குமரேசன், தம்மை நன்றிக்கடன் பட்டவனாக ஆக்கிய அந்த வித்தியாசமான இளைஞன் போவதையே வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்தார்!



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதரவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 75 மாணுக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க சுமார் ரூ 200/— ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 2000/— மூலதனம் ஏற்படுத்தியோ அல்லது அவ்வப்போது ரூ 200/— அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்;

அத்வைத வித்யாசார்யா மஹா ராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி
D—76, மூன்றுவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,
கும்பகோணம்—612 001.

இந்த நன்கொடைக்கு 80G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு.

ஸ்கூல் விட்டு நொண்டி அடித்தபடியே வந்து ஜங்கெனத் திண்ணையில் ஏறி உள்ளே போகும் போது திண்ணையில் படுத்திருந்த பாட்டி கூப்பிட்டாள்.

தெருவில் ஒவ்வொரு வீட்டிலும் வரிசையாய்த் திண்ணைகள். மதியத்தில் நிச்சிந்தையாய் வெற்றிலை போட்டுக் கொண்டு தூங்குவதற்கு, கதையளப்பதற்கு, பாய்ண்ட் வைத்துச் சீட்டு விளையாடுவதற்கு, விருந்தினர்வந்தால்இடப் பற்றாக்குறையைத்தவிர்ப்பதற்கு... திண்ணை என்பதற்கான உபயோகம். மற்றவர்களுக்கு இப்படித்தான் பயன்பட்டுக் கொண்டிருக்கின்றது, எங்கள் வீட்டுத் திண்ணையைத் தவிர.




பலாப்பழத்தில் மொய்ப்பதைப் போல ஈக்கள் மொய்க்கும் அந்த இடதுபுற நீள் திண்ணையில் ஓரம் கிழிந்த கோரைப்பாயின் மீது அப்பாவின் கிழிந்த வேட்டிகளை விரித்து.... நைந்து போன பவானி ஜமுக்காளத்தைப் போர்த்தியபடி சூ... சூ... என அவ்வப்போது அவற்றைத் துரத்தியபடி... கூடவே இருமலும்...

பாட்டி... அப்பாவுக்குச் சித்தியாக இருக்கலாம். ஆனால் எனக்கு... எனக்கு எப்படியாயினும் பாட்டிதானே!

"என்ன பாட்டி?" — என்று அருகே போய்க் குத்திட்டு அமர்ந்தேன்.

"டேய், ஒங்கப்பன் இன்னொரு கல்யாணம் பண்ணிக்கப் போறானும்டா. நீ மோசம் போய்டப் போறே!" — என்றாள்.

எனக்குள் எங்கோ ஓரிடத்தில் ஏதோ ஒன்று சிலுங்கென விழுந்து நொறுங்கியது போலிருந்தது.

"என்ன சொல்றெ பாட்டி?"

"ஆமாண்டா. ஒனக்கும் ஒரு சித்தி வரப் போறா!"

"என் அப்பாக்கு நீ வந்த மாதிரிதானே?"

சிறிது நேரம் பாட்டி பேசவில்லை. பின்னர், "அடேய், அவ ஒன்னைய எப்படி எப்படியோ கொடுமைப் படுத்துவாடா. சூடு வைப்பா. படிக்கவே விட மாட்டா. துணி தோய்க்கச் சொல்லுவா. பாத்திரம் தேய்க்கச் சொல்லுவா. ஒன் அப்பனைக் கைக்குள்ள போட்டுண்டு ஒன்னை வேலைக்காரனாகவே ஆக்கிடுவா. இங்கப்பாரு.புத்தியுள்ளபுள்ளைன்னா நீ பொழைச்சிக்கப் பாரு. அவ சொல்றெ எதையும் கேக்காத. எதுத்துப்பேசு. அவ எது சொன்னாலும் கண்டுக்காம போ. மத்ததை நான் பாத்துக்கறேன்."

"எனக்கொரு சந்தேகம் பாட்டி."

"கேள்றா?"

"நீயும் அப்பாவை இப்படியெல்லாம் செஞ்சப்ப அவருக்குச் சொல்லித் தர எந்தப் பாட்டியும் இல்லையா?" — நான் மிகவும் வினயத்துடன் சிரிக்காமல் தான் கேட்டேன்.

உடனே பாட்டி, "ஏண்டா துஷ்டப் பயலே; ஒன் நல்ல துக்குச் சொன்னா என்னையே பதம் பார்க்கறயா படவா ராஸ்கல்! நீ எக்கேடும் கெட்டு ஒழி. தாயில்லாப் பிள்ளையாச்சேன்னு சொன்னா நாக்குத் தடிச்சுப் போச்சே, என்னையே நக்கல் பண்ற அளவுக்கு. எழுந்து போடா!"—பாட்டி கத்தினாள்.

நான் உள்ளே சென்று கால்களைக் கழுவிக் கொண்டு புத்தகத்தை எடுத்துக் கொண்டு அமர்ந்தேன். நினைவுகள் படிப்பில் ஒன்றவில்லை.

அப்பாவும் நானும் அத்திப்பூத்தாற்போல் விசேஷ நாட்களில் ஒன்றாய் ஆற்றில் குளிக்கப் போவோம்.

மற்றைய நாட்களில் ஒரு மணி நேரமாவது

எனக்கு ஆற்றில் குளிக்கத் தேவைப்படும். மேல்துண்டை அரையில் கட்டிக் கொண்டு வேஷ்டியை அவிழ்த்துக் கல்லில் வைத்து விட்டு, அப்பா நீந்த மாட்டார், மூக்கைப் பிடித்தபடி மூன்று முறை கரையோரம் முங்கி எழுவார். காயத்ரி ஜபம் சொல்லி அங்



கேயே சிறிது நீரை எடுத்து விடுவார்.

''சீக்கிரம் குளிடா!'' என்பார்.

அப்போதெல்லாம் கவனித்திருக்கிறேன். முதுகில், கால்களில், தொடையில் தழும்பு கள். பாட்டி சூடு வைத்ததாம். தழும்பு களைப் போல்தானே நினைவுகளும் அழியாமல்...?

அதனால்தானே பாட்டி இன்று இப் படித் திண்ணையில் தீண்டப்படாதவளாய்க் கிடக்கிறாள்? அப்பா ரொம்ப நல்லவர். அவளின் சொந்தப் பிள்ளைகளே அவளை ஒதுக்கிவிட்டுச் சென்ற பின்னரும் அப்பா அவளைத் தம் வீட்டிலேயே வைத்துக் கொண் டிருக்கிறாரே!

இருந்தாலும் அப்பாவை விட அம்மா வைத்தான் எனக்கு ரொம்பப் பிடிக்கும். எந்த ஒரு முகச்சுளிப்புமில்லாமல் பாட்டிக் குப் பணிவிடை செய்து... அம்மா அம்மா தான்!

சாதம் பிசைந்து ஊட்டுவதிலிருந்து குளிப் பாட்டி, தலைவாரி, பொறுமையாகப் பாடம் சொல்லிக் கொடுத்து, அப்பா கூட ஓரிரு முறை அடித்து விடுவார். அம்மா கிள்ளக் கூட மாட்டாள். ராத்திரியில், தாழ்வாரத்தில், மடிமீது படுக்க வைத்துக் கொண்டு அழ காகப் பாடித் தூங்க வைப்பாள். எப்போதும் அவளின் முகத்தில் ஒரு புன்னகை அழியாது இருக்கும்.

அன்றும் அப்படித்தான் நான் ஐந்தாம் வகுப்பு 'இ' பிரிவில் மூன்றாவது வரிசையில் அமர்ந்து தமிழ் வாத்தியாரின் தலைப் பாகையை ஆராய்ந்து கொண்டிருக்கும் போது முனியன் ஓடி வந்தான்.

நினைவு தெரிந்த நாளாய் அவன் எங்கள் வீட்டிலே இருக்கிறான். எல்லா வேலைகளும் அவனே செய்வான். மாட்டு வண்டி ஓட்டி, பால் கறந்து, பொங்கலுக்கு வீடு முழுக்க சுண்ணாம்பு அடித்து, நெல் குத்தி, மாடு மேய்த்து, எனக்குப் புளியங்காய் அடிக்கக் கற்றுத் தந்தான். வாயில் இரண்டு விரலை வைத்து விசிலடிக்கக் கற்றுத் தந்தான். ஆற்றில் நூறு எண்ணும் வரை தம் பிடித்து இருக்கக் கற்றுத் தந்தான்.

''டே, நாணு, ஐயா ஒன்னைக் கையோட கூட்டிட்டு வரச் சொன்னார் வாடா.''

வாத்தியாரை அனுமதி கேட்பதோ, அவரிடம் விஷயத்தை முதலில் சொல்வதோ கிராமத்தில் நடக்கவே முடியாத காரியங்கள். அவர்தான் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவலிருந்தால், ''ஏண்டா முனியா, என்ன விஷயம்?'' எனக் கேட்க வேண்டும். கேட்டார்.

அதன் பின் அவன் நடந்து கொண்ட விதம்தான் எனக்கு ஆச்சரியமளித்தது. இதுபோன்ற வேறு பல தருணங்களில் முனியன், ''ஐயா ஊருக்குக் கூட்டிக்கிட்டுப் போறாங்க!'' என்றோ வேறு ஏதாவது உப்பு சப்பில்லாத காரணத்தையோ வாய் கிழியச் சொல்வான்.

அன்று அவன் மெதுவாக வாத்தியாரிடம் சென்று குசுகுசுவென என்னவோ கூற, அவரின் முகம் திடீரெனக் கண்ணாடியில் பட்ட நீராவி போல் புகையாய்ப் படிய... ''ச்சச்சோ. நான் கூட நேத்து கோவில்ல பாத்தேனே. சரி,சரி சீக்கிரம் கூட்டிட்டுப் போ!'' — என்றார்.

யாரை இவர் கோவிலில் பார்த்திருப்பார்?

கல்யாணகுமார்

நான் கூடத்தான் இவரை நேற்று கோவிலில் பார்த்தேன். அம்மாவுடன் அங்கு சென்றிருந்த போது.

என்னவாயிருக்கும், யார் வந்திருப்பார்கள்? எந்த ஊருக்குப் போகப் போகிறோம்? என்ற வினாக்களுடன் வீடு நோக்கிப் பையைத் தோளில் போட்டுக் கொண்டு ஓடினேன்.

வீட்டு வாசலில் ஒரே கூட்டம். சந்துகளில் புகுந்தபடி வாசலை எட்டி, கூடத்தில் அடியெடுத்து வைத்தேன்.

வடக்குப் பார்த்த மாதிரி, அம்மா படுத்திருந்தாள். தலைமாட்டில் நன்றாகப் புளி போட்டுத் தேய்த்திருந்த குத்து விளக்கு பிரகாசமாக...

அப்பா வாயில் துண்டை வைத்துப் பொத்தியபடிக் குலுங்க... திண்ணையில் பாட்டி ஏதேதோ சொல்லிப் பிலாக்கணம் வைத்தபடி!

''ஐயோ, நான் வயல்லருந்து வந்ததுமே அத்தான் நெஞ்சு வலிக்கறதுன்னு ஒக்காந்தா. அப்படியே போயிட்டாளே?'' அப்பா விம்மினார்.

அம்மாவின் முகத்தையே பார்த்தேன். காலையில் ஸ்கூலுக்குக் கிளம்புமுன்...

''டேய், தலைமுடியப் பாரு. ஒன்னை மாதிரியே பிடிவாதமா அடங்க மாட்டேன்னு சிலுப்பிண்டு நிக்கறது.''

''சட்டை பட்டனைக் கரெக்டா போட்டுக் கோடா. இந்தா இன்னும் ஒரு வாய் சாப்பிட்டுடு. அப்புறம் மத்தியானம் சீக்கிரம் பசிக்கும்டா. என் ராஜால்லியோ... ஆ... காமி. இந்தா... இதுதான் ஆனை உருண்டை... இதா இங்க பாரு... கொஞ்சம்தான் இருக்கு... இது பூனை உருண்டை... நல்லா மென்னு தின்னு... இதான் கடைசி,இதான் நெய்யுருண்டை...ம்... துண்டுல மூஞ்சியைத் தொடச்சிக்கோ.''

''பாரு வேதா வந்துட்டா. சித்த இரு்றி. கால்ல செருப்பைச் சரியா நொழைச்சிக் கோடா. இல்லாட்டா வுழுந்துடுவ.''

''ம்... சரி, குனிம்மா!'' — என்றேன்.

''ம்.''

அந்தக் கன்னத்தில் ஒரு முத்தம். இந்தக் கன்னத்தில் ஒரு முத்தம். டாட்டா... பசுமையாக நினைவிலிருந்தது. பூரித்தபடி அம்மா என் கன்னத்தை வழித்துத் தன் தலையில் திருஷ்டி சொடக்குப் போட்டுக்கொண்டாள்.

எல்லோரும் 'நல்ல சாவு, நல்ல சாவு' என்றே சொன்னார்கள்.

எனக்கு அழுகை, அழுகையாக வந்தது. என் அம்மா என்னை விட்டுப் போனது நல்ல சாவா? சாவில் கூட நல்ல சாவு, கெட்ட சாவு என்று பிரிவு உண்டா?

சுடுகாட்டில் அம்மா மேல் சந்தனக் கட்டை வைத்து, மர சிராய்களும், எருவா முட்டைகளும் வைத்துப் போர்த்தி... அப்பா கண்கள் அழுதழுது சிவந்து போய்... என் கையில் கனன்றபடி ஒரு மண்சட்டியில் கங்குகள். அப்பாவின் உதவியுடன் அம்மா மீது வைக்க...

''அம்மா!'' — எனக் கத்தினேன். அப்பா

'தேஹம் ரொம்ப இழிவானது. இதிலிருந்து விடுபட வேண்டும்' என்று பெரியவர்கள் பாடி வைத்திருப்பதெல்லாம் உண்மைதான். ஆனால் இன்னொரு நிலையில் பார்த்தால் இந்த தேஹம் என்பது ஒரு மஹா அத்புதமான மெஷினாக இருக்கிறது. ஒரே மெஷினில் ஒவ்வொரு பாகம் ஒவ்வொரு தினுஸான கார்யத்தைச் செய்கிறது. கண் என்று ஒன்று வெளிச்சத்தையும் வர்ணங்களையும் பார்க்கிறது. காது என்று ஒன்று சப்தங்களைக் கேட்கிறது. இருக்கிறதெல்லாம் ஒரே ஆத்மா — இத்தனை அவயவங்களுக்குள்ளேயும் ஒரே ஜீவன் தான் இருக்கிறது என்றாலும் கண்ணும் காதும் கிட்டக் கிட்ட இருந்தும் கூடக் கண்ணால் கேட்க முடிவதில்லை. காதால் பார்க்க முடிவதில்லை. பக்கத்திலேயே வாய் என்று ஒன்று, அதற்குத்தான் ருசி தெரிகிறது. பேசுகிற சக்தியும், அதற்கே இருக்கிறது. தொண்டையில் பல தினுஸாகக் காற்றைப் புரட்டி அழகான கானம் செய்ய முடிகிறது. பல வஸ்துக்களைப் பிடிப்பதற்கு ஏற்ற மாதிரி கையும் விரல்களும் அமைந்திருக்கின்றன. இந்த அமைப்பு கொஞ்சம் வேறுவிதமாக இருந்தாலும் இப்போது நாம் பண்ணுகிற கார்யங்களைப் பண்ண முடியாது. அடி எடுத்து வைத்து மேலே போவதற்கு வசதியாகக் காலின் அமைப்பு இருக்கிறது. நடக்கிற போது கூடிய மட்டும் ஜீவராசிகள் நசுங்காதபடி பூரான் மாதிரியானவற்றின் மேலேயே நாம் பாதத்தை வைத்தால் கூட அவை நெளித்துக் கொண்டு ஓட வசதியாக உள்ளங்காலில் குழி வைத்தாற் போன்ற ஏற்பாடு, சப்பணம் கட்டி உட்கார வசதியாக முழங்காலில் எலும்பு, நரம்புகளின் அமைப்பு என்று இப்படி ஒவ்வொன்றைப் பார்த்தாலும் பராசக்தி எத்தனை ஸூக்ஷ்மமான கல்பனையோடு ஒரு சரீரத்தைப் பண்ணியிருக்கிறாள் என்று ஆச்சர்யமாக இருக்கிறது. தனித்தனியாக ஒவ்வொரு பாகமும் ஓர் அற்புத மெஷினாக இருப்பதோடு மட்டுமல்லாமல் எல்லாமாக ஒன்றுக்கொன்று இசைவாக ஸஹாயம் செய்து போஷித்துக் கொள்வதும் மஹா அதிசயமாக இருக்கிறது. ஆனபடியால் எவனோ லக்ஷத்தில் ஒருவன் தேஹம் பொய், மனஸ் பொய் என்று புரிந்து கொள்ளும் ஞானியாக ஆனாலும், பாக்கி எல்லாரும் பகவான் தந்திருக்கிற இந்த அத்புதமான மெஷினை வைத்துக் கொண்டு தர்மமாக வாழத்தான் முயற்சி பண்ண வேண்டியவர்களாக இருக்கிறோம். இந்தத் தர்ம வாழ்க்கையிலிருந்துதான் அப்புறம் ஞானத்துக்குப் போக வேண்டியவர்களாயிருக்கிறோம்.



— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

என்னை இறுகப் பிடித்தபடி பின்னுக்குத் தள்ளிச் சென்று விட்டார்.

அப்பா வரும் ஓசை கேட்டது. சட்டெனக் கண்களைப் புத்தகத்தில் பதித்தேன். ஒரு வேளை பாட்டி சொன்னது உண்மையாயிருக்குமோ? அப்பா கல்யாணம் பண்ணிக்கப் போறாரோ? ராத்திரி முழுக்கத் தூக்கமே வரவில்லை.

**வீ**டு கல்யாண வீடாகியது. நான் அப்பா வாங்கித் தந்த புதுச் சட்டை, டிராயருடன் திரிந்தேன்.

இவள் அம்மாவை விடச் சிறிது குள்ளம். ஆனால் நிறம் சற்று அதிகம். உடம்பு ஏறக் குறைய அம்மாவின் உடம்புதான். கண்கள் தான் பெரிசு. மையிட்டிருந்ததால் இன்னும் பெரிதாக... ஆனால் பார்த்துக் கொண்டேயிருக்கலாம் போல அழகாக.... துருதுருவென்று அலைபாய்ந்தபடி...

இவள் வீட்டிற்கு வந்து ஒரு வாரமாகி விட்டது. என்னுள் பயம் நத்தையைப் போல் பதுங்கிக் கிடந்தது.

அவளின் கண்ணில் படாமலேயே திரிந்தேன். இப்படி எத்தனை நாளைக்குத் திரிய முடியும்? குளத்தங்கரைப் படிகளில் போய் அமர்ந்து நீண்ட நேரம் அழுவேன். நிலா வரும். காற்று வரும். நான் இருப்பேன். அம்மா மட்டும் வர மாட்டாள். வரவே மாட்டாள்.

அன்று ஸ்கூல் லீவு. நான் கூடத்தில் படுத்துத்தூங்கிவிட்டேன். திடீரென விழிப்பு வந்தபோது திண்ணையில் பாட்டி யாருடனோ பேசிக் கொண்டிருப்பது கேட்டது.

யாராயிருக்கும் எனக் கூடத்து ஜன்னல் வழியாக எக்கியபடி பார்த்தேன். கற்பகம், அதுதான் அப்பா கல்யாணம் செய்து கொண்ட பெண்.

"டீ... இங்கப் பாரு. நீ இவனுக்கு ரெண்

டாந்தாரமா வாழ்க்கைப் பட்டிருக்கே. ஒனக்கும் குஞ்சு குளுவான்னு பொறக்கும். மூத்த தாரத்துப் புள்ள மேல அவன் உசிரையே வச்சிருக்கான். அதனால நீ மொதல்ல ஒன் புருஷனை கைக்குள்ள போட்டுக்கணும். இல்லாட்டா நாளைக்கு எல்லாம் அந்தப் பையன் கைக்குப் போயி நீங்கள்லாம் அவன எதிர்பார்த்திண்டு நிக்கற நெலை வந்துடும். அதனால இப்ப இருந்தே அந்தப் பையனை அடக்கி வச்சுக்க. நல்லா வேலை வாங்கு. ஸ்கூலுக்குப் போறத எப்படியாவது நிறுத்திடு.

நான் ஜன்னலிலிருந்து நகர்ந்து வாசலுக்கு வந்தேன். அவள் உள்ளே சென்றாள். திண்ணையிலேயே சற்றுநேரம்வானம்பார்த்தபடி நின்றேன். தென்னை மரக்காற்று சில்லென வீசியது. குக்கூ... என கத்தியபடி ஒரு பறவை சிறகடித்துச் சென்றது.

பாட்டி சலனமில்லாமல் என்னைப் பார்ப்பது தெரிந்தது. நான் அவளருகில் சென்று மண்டியிட்டபடி அமர்ந்தேன்.

"என்னடா?" என்றாள்.

"எனக்கொரு சந்தேகம் பாட்டி!"

"கேளு."

"நீ எப்பச் சாவ?"

"என்னது?" — தரையில் போடப்பட்ட விலாங்கு மீனாய் அந்தக் கேள்வியை ஜீரணிக்க முடியாமல் திணறினாள்.

"எனக்குத்தெரியும். நான் எப்ப ஒழிஞ்சிப் போவேன்னு, நீ, ஒங்கப்பன், இந்த வீடே அப்படித்தான் நெனைச்சிக்கிட்டிருக்குது. அந்த ஆண்டவனுக்குக் கண்ணுல்ல. என்னை இந்த வீட்டில வச்சிக்கிட்டு சித்திரவதை பண்ணி ரசிச்சுக்கிட்டிருக்கான்... அட பாழும் தெய்வமே..." என அரற்றினாள்.

"தெரியுதில்ல. மறுபடியும் நீ ஒன்னை மாதிரி ஏன் இன்னொருத்தியை உருவாக்கறே? அவளும் நாளைக்கு இந்த மாதிரி புழுத்துச் சாகணும்னா? இத்தனை வயசாயியும் ஏன் பாட்டி நீ அப்படியே இருக்கே?"

பாட்டி வாய் திறக்கவில்லை.

"என்கிட்ட நீ அவ சொல்ற பேச்சைக் கேட்காத. அவளுக்கு அடங்காத. அப்படின்னு சொன்னே. இப்ப அவகிட்ட நீ அவனை அடக்கு. அப்பத்தான் நீ வாழ முடியும்ங்கிற. நீ ஒன் மனசுல என்னதான் நெனச்சுக்கிட்டிருக்கிற?"

அவள் இன்னமும் வாய் திறக்கவில்லை. நான் திண்ணையிலிருந்து இறங்கிக் கோவில் பக்கம் நடந்தேன்.

ஒருவேளை இந்த மாதிரி பாட்டியைக் கேட்டதற்கு இருவரும் சேர்ந்து கரண்டிக் காம்பைப் பழுக்கக் காய்ச்சி சூடு வைப்பார்களோ? அடிப்பார்களோ? அப்பா உடம்பின் ரணத்தழும்புகள் கண்ணருகில் வந்து அச்சுறுத்தின.

**பௌ**ர்ணமி. ஒவ்வொரு மாதமும் அம்மாவின் கையைப் பிடித்துக் கொண்டு கோவிலுக்குச் சென்று சாமி கும்பிட்டு, தெப்பக்குளப் படிகளில் அம்மாவின் மடிமீது தலை வைத்துப் படுத்துக் கொண்டு அம்மா சொல்லும் கதைகளை "உம்" கொட்டியபடி கேட்டுக் கொண்டு... கோவில் மணி கூட 'அம்மா, அம்மா' என்றே சப்திப்பதாய்...

தெப்பக்குளத்தில் சென்று அமர்ந்து, "அம்மா" எனக் கத்தினேன். நாற்புறமும் குளப்படிகளில் எதிரொலித்து, எதிரொலித்து குளத்தினுள் சென்று அடங்கி, நீரினுள் படிகமாக நிலா தெரிய... அதிலும் சிறிது நேரத்தில் அம்மாவின் புன்னகைக் கீற்றுடன் கூடிய முகம் தெரிய... "அம்மா" என ஆவலுடன் தண்ணீரை அள்ளக்... கலங்கிக்... கலங்கி... சுற்றுச் சுற்றாய் அம்மா சிதறிப் போக...

உள்ளே விழ யத்தனித்தவனை யாரோ தோளில் கைவைத்தாற் போன்று... அந்தத் தொடு உணர்ச்சி உள் எலும்புகளிலும் பாய்ந்து பரவசப்படுத்துவதாய்... இத்தகைய உணர்ச்சியை அம்மாவிடம் மட்டுமே அறிந்திருக்கின்றேன்.

சட்டெனத் திரும்பிப் பார்க்க அவள்... அப்பாவின் மனைவி... மெல்ல அருகே இழுத்தாள். அவளின் புடைவை நுனி உடலில் பட்டதுமே புல்லரித்துப் போனது. அம்மாவிடமும் இப்படித்தான். அவளின் முந்தானையைப் பற்றியபடியே வளைய வருவேன். அதுவே ஆயிரம் யானை பலம் எனக்கு...

அம்மாவைப் போலவே முந்தானை என் முதுகைப் போர்த்த ஆதுரமாக, "அழுறயா நாணா?" என்றாள்.

நான் பேசவில்லை. நெஞ்சு திடுக் திடுக்கென அடித்துக் கொண்டது. அப்படியே என்னைப் பிடித்துக் குளத்தில் தள்ளி விடுவாளோ? இல்லை, 'ஏண்டா பாட்டிய அப்படி கேட்ட?' என்று சொல்லி அடிப்பாளோ? உடல் நடுங்கியது.

"ஏன் உடம்பு நடுங்குது? குளிருதா?" என்றபடி தாய்க் கோழி தனது இறக்கையினுள் குஞ்சை இருத்திக் கொள்வதைப் போல் என்னை இழுத்து நெருக்கமாக அணைத்துக் கொண்டவள், என் தலையை லேசாகக் கோதிவிட்டபடி, "என்னைப் பார்த்துப் பயப்படறயா? பயப்படவேதேவையில்லை. நீ சின்னப் பையன் பாட்டிகிட்ட சடார்னு அப்படிக்கேட்டுட்டே. நான் அப்படியெல்லாம் கேக்க முடியுமா?" என்றாள்.

நான் அவள் என்ன சொல்ல வருகிறாள் எனப் புரியாமல் பார்த்தேன்.

அவளின் கண்கள் கலங்கியிருந்தன.

"நான் அன்பைத் தேடித்தான் இங்க வாழ்க்கைப்பட்டிருக்கேண்டா நாணா. என்னைத் தனிச்சு விட்டுறாத... ஏன்னா... ஏன்னா... என் அம்மாவோட மூஞ்சி கூட எப்படியிருக்கும்னு எனக்குத் தெரியாது.." அவள் உடல் குலுங்கினாள்.

நான் அவளின் கண்ணீரைத் துடைத்தபடி உதடுகளைத் திறந்தேன். "அம்மா" என்ற சொற்கள் தித்திப்பாய் வாயிலிருந்து நழுவ அவளை இறுகக் கட்டிக் கொண்டேன்.

# எதிர்பார்ப்புகள்!

**பே**ச்சு முடிந்து, செல்வநாயகம் மேடையை விட்டுக் கீழே இறங்கியவுடன், முதலில் கைகுலுக்கியது கார்த்திகாதான்!

"சார் நான் ஸ்தம்பிச்சிருக்கேன். பிச்சி உதறிட்டீங்க! திருக்குறள்ல உங்களுக்கு இவ்வளவு நாலெட்ஜா, ஓ..."

செம்மாந்த, மருதாணி பாவிய விரல்களை விலக்கிக் கொள்ளாமல், செல்வநாயகத்தின் கைகளைப் பிடித்துக் கொண்டு அவள் பேசிய போது, செல்வநாயகத்துக்குச் சற்று குறுகுறுப்பாக இருந்தது.

கார்த்திகா —

அளவுக்கு மீறிய வளர்ச்சியில் பதினாறு வயதை இருபத்தாருய் அனுமானிக்க விடும் ரகத்தில் செல்வநாயகத்தையே அடிக்கடி சபலப் பள்ளத்தாக்கில் தள்ளிவிட்டு வேடிக்கை பார்ப்பவள்.

எத்தனை பெரிய மனிதனும் சில நேரம் சில கேவல உணர்வுகளில் ஊசலாடாமல் மீண்டதில்லை. இன்று செல்வநாயகத்துக்குக் கார்த்திகாவின் கைகுலுக்கலும் பாராட்டும் அவள் தமது மாணவி எனும் மதிப்பான உறவு முறையை மீறி, எங்கேயோ கொண்டு போனது.

"**சா**ர்!"

மறுநாளின் மதியப் பொழுதில் கார்த்திகாவின் அந்த அழைப்பில் செல்வநாயகத்துக்குள் ஏகமாய் மயில்கள் தோகை விரித்தன.

"என்ன கார்த்திகா?"

"உங்ககிட்ட கொஞ்சம் பேசணும்..."

"கொஞ்சமென்ன நிறைய பேசு (டார்லிங்)" —சப்தத்தில் கொஞ்சமும், மனத்துக்குள் டார்லிங்கையும் சொல்லி அவளை ஊக்கினார்.

"பெண் விடுதலை, பெண் சுதந்திரம், பெண்களின் கௌரவம் பத்தி, திருவள்ளுவர் உதவியோட நீங்க பேசின பேச்சுக்கள் பிரமாதம். சுருட்டு விளம்பரத்துக்குக்கூட பெண்ணோட திறந்த உடம்புப் படங்களை, பயன்படுத்தற கேவலங்களை நீங்க சாடின விதம் சூப்பர்.

'இப்படி, எங்க சமூகக் கொடுமைகளுக்காக பாரதியைப் போல நீங்க காட்டிய ஆவேசங்களுக்கு என் நன்றி. ஆமாம், நீங்க ஏன் கல்யாணம் பண்ணிக்கலை?"

அவள் கேள்வியில் சற்று விச்ராந்தியாகச் சிரித்த செல்வநாயகம், பதிலுக்காகச் சற்றும் திணருமல், "உன்னை மாதிரி ஒரு அழகிய பெண்ணைச் சந்திக்காததுனலதான்" என்றார்.

கார்த்திகாவுக்கு, அந்தப் பதில் யதார்த்தமாகத்தான் பட்டதேயொழிய விரசமாகப் படவில்லை.

"என்னை அழகிங்கறீங்க. தாங்க்ஸ். எங்க அம்மாவைவிட ஒண்ணும் நான் அழகியில்லை..." என்றாள் கார்த்திகா.

"இருக்கலாம் தாயைப் போலப் பிள்ளை. நூலைப் போல சேலை..."

"நான் ஒண்ணு கேட்பேன், தருவீங்களா?"

கார்த்திகாவின் அந்தக் கேட்பேனுக்குள், செல்வநாயகத்தின் எதிர்காலமே ஒளிந்திருப்பதுபோல், பரபரப்புத் தட்டி, அவரை வேகமாக உசுப்பியது.

"கேள் கார்த்திகா கேள். உனக்கு எதையும் இல்லேன்னு சொல்ற சக்தி தற்சமயம் என்கிட்ட இல்லை..."

"உங்களை மாதிரி ஒரு ஜீனியஸ்...

உங்களை மாதிரி ஒரு ஜென்டில்மென்...

உங்களை மாதிரி ஒரு முற்போக்குவாதி..."

அடுக்கடுக்காய் அவரை நிஜமாலுமே சப்பரத்தில் ஏற்றிவிட்டுச் செல்வநாயகத்தின் கண்களில் ஊன்றினாள். அது தவித்துக் கொண்டிருந்தது.

"ஏன் நிறுத்திட்டே... உம், கமான்..."

தவிப்புத் தாங்காமல் வெடித்தன செல்வநாயகத்திடம் வார்த்தைகள்.

"எனக்கு, அப்பாவா நீங்க வரணும். யெஸ், மை மதர் ஈஸ் எ விடோ! ஓர் ஆண் துணை இல்லாம என் குடும்பம் தவிச்சுக்கிட்டிருக்கு. உங்களைச் சந்திச்சதுக்குப் பிறகு, அந்தத் தவிப்பு குறைஞ்சிருக்கு. நான் கேட்ட வரத்தை உங்களாலே தரமுடியும். தருவீங்களா அப்பா... சாரி, சார்..."

கூனிக் குறுகிவிட்டிருந்த செல்வநாயகம், புனிதமான ஓர் உறவு முறைக்கு, அடித்தளமிட்டுப் பழகிய அந்தப் பெண்ணைப் பார்க்கக் கூசிக் கொண்டு, அப்படியே நிலைமரமாக விதிர்த்துவிட்டிருந்தார்!

— இந்திரா சௌந்தர்ராஜன்




சிலம்பம்
ஹிந்தி திணிப்பு


தமிழ் நாட்டில் விடுதலைப் புலிகள்
புலி ஆட்டம்


புலியாட்டம் நல்லாத்தான் இருக்குது! .. ஆனா கையிலே துப்பாக்கி...


காங்கிரஸ்


உறியடி
கள், சாராய விற்பனை
தமிழக மக்கள்

# செல்வராஜ

**த**ஞ்சை பெரிய கோவிலுக்குள் அவர்கள் நுழைந்த போது மாலை மணி ஐந்தாகி விட்டிருந்தது.

புதிதாய்க் கல்யாணமானவர்கள் தேன் நிலவிற்கு காஷ்மீர், சிம்லா என்று போவார்கள், குறைந்தபட்சம் ஊட்டி, பெங்களூராவது இருக்கும். இப்படி மதுரை, திருச்சி, தஞ்சாவூர் என்று க்ஷேத்திராடனம் புறப்பட்ட இளம் தம்பதிகள் இவர்களாகத்தான் இருக்கும்.

''என்ன யோசனை ஜனனி? மணி ஐந்துக்கு மேலாகிறது. கோயிலுக்குள் சுற்றிப் பார்க்க நிறைய இடங்கள் இருக்கும்...'' சுதாகர் சொல்லியபடியே ஜனனியின் கைவிரல்களைத் தன் விரல்களோடு சேர்த்துக் கொண்டு நடக்க ஆரம்பித்தான்.

இருவரும் நந்தி பகவானைத் தரிசித்து விட்டுக் கல் படிக்கட்டில் கீழே இறங்கினர்.

திடீரெனச் சுதாகர் ஜனனியிடம் கேட்டான். ''ஜனனி! இரண்டு வருஷங்கள் முன்னடி நீ வேலை நிமித்தம் உன் அம்மாவுடன் திருச்சியில் இருந்த போது எப்போதாவது தஞ்சாவூருக்கோ, இந்தக் கோயிலுக்கோ வந்திருக்கிறாயா?''

கேட்டுவிட்டு, சுதாகர் பிராகாரப் பகுதியிலிருந்த சிற்பக் களஞ்சியக் கூடத்தை நோக்கி நடக்க ஆரம்பித்தான். ஜனனிக்குக் கணவனைத் தொடர முடியாமல் கால் கட்டி இழுத்தது. கால் மட்டுமா?

**அ**ப்போது ஜனனி திருச்சியில் வேலை பார்த்த அலுவலகத்தில் புதிதாய் வேலைக்குச் சேர்ந்தவன் பிரதீப். கவர்ச்சியான தோற்



# சொல்லிவிடுவாளா..?

றம். கலகலப்பான சுபாவம். ஆண் பெண் என்ற வித்தியாசம் பாராட்டாமல் எல்லோருடனும் சகஜமாகப் பழகினான். திடீரென ஒருநாள், "ஜனனி! உங்களோடு நான் தனிமையில் பேசணும்... உங்களுக்கு ஆட்சேபணை இல்லையானால் என்னோடு ஒருநாள் வெளியூர் வரமுடியுமா?" என்றான்.

ஜனனிக்குத் திகைப்பு கலந்த விருப்பம் என்றாலும் தயங்கினாள்.

"நாளைக்குக் காலையில் மெயின் கார்டு கேட் தெப்பக்குளம் பக்கத்தில் வந்து விடுங்கள். அங்கே நான் உங்களுக்காகக் காத்திருக்கிறேன், ப்ளீஸ்!"



ஜனனி பதிலே பேசவில்லை. ஆனால் மறுநாள் பிரதீப் சொல்லிய மாதிரி, மெயின் கார்டு கேட்டில் வந்து காத்திருந்தாள்.

"தாங்க்யூ, ஜனனி!"

முதுகுக்குப் பின்னே குரல் கேட்கவும் மிரண்டு திரும்பினாள்.

பிரதீப்! "போகலாமா?" என்றான்.

"எங்கே?"

"வெளியூர்... இங்கே நாம் நிம்மதியாய்ப் பேச முடியுமா?"

"கஷ்டம்தான். பிரதீப்! எனக்குப் பயமாக இருக்கிறது..."

"பயப்படத் தேவையே இல்லை. சரியாய்ச் சாயந்திரம் ஐந்து மணிக்கு நாம் திருச்சி திரும்புகிறோம். ஜனனி! கார் ரெடி! ஏறிக் கொள்ளுங்கள், ப்ளீஸ்!"

"பிரதீப்! ரொம்ப தூரம் போக வேண்டாம். ஒருவேளை ஏதாவது ஆகி நான் திரும்பி வரத் தாமதமானால் வீட்டில் தனியாய் இருக்கும் என் அம்மா விசனப்படுவாள். அதனால் பக்கத்தில் இருக்கிற தஞ்சாவூர் போகலாம்.."

"தஞ்சாவூரா?" முகம் சுளித்தான் பிரதீப். 'அங்கே போய் இவளைச் சரிக்கட்டி ஒரு ஹோட்டலுக்கு அழைத்துப் போக வேண்டும். இப்போதே மறுத்துப்பேசினால் என்னைப் புரிந்து கொண்டு பின் வாங்கி விடுவாள்.'

பிரதீப் உள்ளூறத் திட்டம் தீட்டினான்.

தஞ்சை எல்லைக்குள் கார் நுழைகிற போதே ஜனனி தீர்மானமாய்ச் சொல்லி விட்டாள்.

"நான் தஞ்சாவூரில் ஒன்றும் பார்த்ததில்லை. பிரகதீஸ்வரர் கோயில், சரஸ்வதி மஹால், அரண்மனை, பெரிய கோவில் எல்லாம் பார்க்கணும்..."

**பெ**ரிய கோயில் பிராகார நடுவில் இருவரையும் திடீரென மறித்தான் ஒரு பதின்மூன்று அல்லது பதினான்கு வயதுச் சிறுவன். அவன் கையில் பெரிய வெள்ளைத் தாளும் பென்சிலும் இருந்தன.

"ஸார்... ஸார்... கொஞ்சம் நில்லுங்க ஸார்... நான் நல்லா ஓவியம் வரைவேன். முப்பது நிமிஷத்தில் தத்ரூபமாய் உங்களை ஸ்கெட்ச் வரைந்து காட்டுவேன். நான் ரொம்ப ஏழை ஸார்! படிக்க வசதி இல்லாததினால் இந்தத் தொழிலைச் செய்யறேன். இதில் வருகிற வருமானத்தில் என் ஒரே தம்பியைப் படிக்க வைக்கிறேன். ஸார்... தயவு செய்து இந்த ஏழைக்கு உதவி பண்ணுங்க... ஸார்..." என்று கெஞ்சினான்.

"பிரதீப்! அந்தப் பையன் நம்மிடப்

ஷைலஜா

பிச்சையாய்க் கேட்கவில்லை. ஏழைமை காரணமாய்க் கலைத்திறமையை விற்று ஊதியம் கேட்கிறான். இதை நாம் ஊக்குவிக் கணும்.'' என்றாள் ஜனனி.

பிரதீப் அலட்சியமாய்த் தோளைக் குலுக்கினான். அவனுக்கு நேரம் வேறு வழியில் விரயமாவதில் விருப்பம் இல்லை.

''உங்கள் இரண்டு பேரையும் சேர்த்து வரையட்டுமா? சிவபெருமானும், பார்வதி தேவியும் போல் அழகான ஜோடியாகத் தெரிகிறீர்கள்!'' சிறுவன் கேட்டதும் பிரதீப் உற்சாகமடைந்தான்.

''ஆமாம்ப்பா! நாங்க 'மேட் ஃபார் ஈச் அதர்' ஜோடிதான்!'' கண் அடித்தான் பிரதீப்.

''போறும்... அந்தப் பையன் நம்மைக் கணவன் — மனைவி என்று நினைத்துக் கொள்ளப் போகிறான்!'' கிசுகிசுத்தாள் ஜனனி.

''அப்படி ஆகப் போகிறவர்கள்தானே, நினைத்துக் கொள்வதில் என்ன தவறு?'' என்றான் பிரதீப்.

ஜனனிக்கு வெட்கத்தில் முகம் சிவந்தது.

''உன்பெயர்என்னப்பா?'' என்றாள்சிறுவனிடம்.

''செல்வராஜுங்க!'' சொல்லியபடி சிறுவன் வரைய ஆரம்பித்தான்.

செல்வ்ராஜ் அந்த அரைமணி நேரமும் சிரத்தையாய் வரைந்தான். முடித்ததும் க்ளிப்பை விலக்கி அட்டையிலிருந்து வெள்ளைத் தாளை எடுத்து நீட்டினான்.

''வாவ்!'' என்றான் பிரதீப்.

''போட்டோ பிடித்த மாதிரி இருக்கிறது. செல்வராஜ்! யு ஆர் க்ரேட்!'' என்றாள் ஜனனி. பரவசத்துடன் தன் கைப்பையைத் திறந்து பத்து ரூபாயை நீட்டி, ''எடுத்துக்கோ'' என்றாள்.

செல்வராஜ் தயங்கியபடி வாங்கிக் கொண்டான். பிறகு அட்டையின் கார்பனுக்குக்கீழிருந்த 'காப்பி' ஸ்கெட்சைஎடுத்து, ''மேடம்! சாதாரணமாய் நான் ஒரே காப்பி தான் வரைவேன். ஆனா, உங்களை மாதிரி அழகான ஜோடியைப் பார்த்ததும் இன்னொரு காப்பியை நான் வச்சிக்க ஆசைப்படறேன். அழகான ஜோடிங்க! இந்தப் படம் எனக்கு ஒன்று இருக்கட்டும்...'' என்றான்.

ஜனனியும், பிரதீப்பும் திரும்பவும் காரில் ஏறிப் புறப்பட்டனர்.

அந்தப் பெரிய ஹோட்டல் வாசலில் கார் நின்றதும் ஜனனி, ''எனக்குப் பசியே இல்லை...'' என்றாள்.

''எனக்குப் பசி. ரொம்பப் பசி!'' கண் சிமிட்டினான், பிரதீப்.

''பிரதீப்?''

''ஜனனி! ஒன்றும் தெரியாதது போல் நடிக்கக் கூடாது. அதுதான் அந்தப் படம் வரைகிற பையனே நம்மை நல்ல ஜோடி என்று சொல்லிவிட்டானே!''

''இருக்கட்டும். அதற்காக நாம் என்ன செய்ய வேண்டும்? பெரியவர்கள் ஆசிகளோடு வாழ்க்கை ஜோடிகளாக வேண்டாமா?''

''அது அப்புறம் நடக்கப் போகிற கதை. அதற்கு முன்பாய் ஓர் ஒத்திகை. ஜனனி, ப்ளீஸ்!''

திடீரென பிரதீப் தன்னை இறுக்கி அணைக்கவும் ஜனனி திடுக்கிட்டுப் போனாள். விருட்டென பிரதீப்பின் கைகளை விலக்கி விட்டாள்.

''ஜனனி! ஐ லவ் யூ! நீயும் என்னை விரும்புவதாய் இருந்தால் என்னோடு இப்போ ஹோட்டல் அறைக்கு வந்தாக வேண்டும்...''

''யூ... யூ... இடியட்! ஏதோ என்னோடு மனம் விட்டுப் பேச வெளியூர் அழைக்கிறாய் என்று நினைத்தால் உன் மனசில் இப்படி ஒரு வக்கிர ஆசையா? மிஸ்டர் பிரதீப்! அடுத்து ஓர் அடி அத்து மீறினால் போலீஸைக் கூப்பிடுவேன். குட் பை டு யூ!''

கார்க் கதவைத் திறந்து, வெளியேறி, படீரென மூடிவிட்டுத் தனியே சாலைக்கு வந்தாள். ஆத்திரத்திலும், அவமானத்திலும் அவள் உடம்பே பதறியது. கைப்பையைத் திறந்து சற்றுமுன் செல்வராஜ் வரைந்த படத்தை எடுத்தாள். 'நல்ல ஜோடியாம் நல்ல ஜோடி!' படத்தைத் தூள் தூளாய்க் கிழித்துப் போட்டாள். பஸ் பிடித்துத் திருச்சி வந்தாள்.

அடுத்த ஒரு மாதத்தில் சென்னைக்கு மாற்றல் வாங்கிக் கொண்டு வந்துவிட்டாள். அரண்டு போன பிரதீப் பிறகு அவளிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டாலும் அவனைப் பார்க்கவும் பிடிக்காத ஜனனி, சென்னை வந்ததும் எல்லாவற்றையும் மறந்து வாழத் தொடங்கினாள்.

மறந்ததெல்லாம் சங்கிலித் தொடராய் இப்போது நினைவுக்கு வர...

''ஜனனி! எத்தனை நேரமாய் இங்கேயே நிற்பாய்?''

சுதாகரின் குரல் கேட்டதும் சுதாரித்துக் கொண்டு, நடக்கத் தொடங்கினாள். மனம் மட்டும் திரும்பத் திரும்பப் பழைய ஞாபகத்தில் உழல...

''உடம்பு சரியில்லையா, டியர்? சரி வா... அப்படியே பிராகாரம் பக்கம் போய்க் கல் மேடையில் உட்கார்ந்து ஓய்வு எடுப்போம்...''

சுதாகர், ஜனனியைக் கைத்தாங்கலாய் அழைத்துப் போக, ஜனனி நடைப் பிணமானாள். பிராகாரம் முழுவதும் அவள் கண்கள் அலைபாய்ந்தன. செல்வராஜ் இன்னும் இங்கேயே இருக்கிறானா? இப்போது வந்து என்னை இவரோடு பார்த்ததும் அவன் எதுவும் உளறாமல் இருக்க வேண்டுமே! செல்வராஜிடம் அந்தப் படம் வேறு இருக்கிறது. அதை மட்டும் 'இவர்' பார்த்தால் என்னைப் பற்றி என்னவெல்லாம் நினைப்பார்? தெய்வமே, நடந்ததெல்லாம் உனக்குத் தெரியும். என்னைக் காப்பாற்றுவது உன் பொறுப்பு.

ஜனனி கண்களை இறுக மூடிக் கொண்டாள்.

''ஸார்... ஸார்... நான் ஒரு ஏழைப்

பையன் ஸார்... நன்றாய்ப் படம் வரைவேன்.. அரைமணி நேரத்திற்குள் படம் வரைந்து விடுகிறேன். நீங்கள் கொடுப்பதைக் கொடுங்கள் ஸார், தயவு செய்து உதவி செய்யுங்கள் ஸார்...''

ஜனனி, கல் சுவர் ஓரமாய்ச் சாய்ந்து படுத்திருந்தவள், திடுக்கிட்டுக் கண் விழித்தாள். வெளிறிய முகத்தோடு எதிர் நின்ற சிறுவனை ஏறிட்டாள்.

செல்வராஜ்!

குரல் மட்டும் சற்றுப் பிசிறு தட்டி உள்ளது. மற்றபடி இரண்டு வருஷம் முன்பு அதே இடத்தில் பார்த்த அதே சிறுவன். அதே உயரம். குறுகுறுப்பான முகம். ஏழமையை எடுத்துச் சொல்லும் கிழிந்த அரை டிராயர். கையில் வெள்ளைத் தாள், பென்சில்கள்.

ஜனனி விருட்டென எழுந்து நின்று நகர எத்தனிப்பதற்குள் சுதாகர் செல்வராஜ் அருகில் போய் விட்டான். அவர்களிருவரும் என்ன பேசிக் கொண்டார்களோ, ஜனனிக்குத் திகிலில் தன் இதயம் அடித்துக் கொண்ட ஓசைதான் பெரிதாகக் கேட்டது.

திரும்பி ஜனனி அருகில் வந்த சுதாகர், ''பாவம்! ஏழையாம்! அவன் குடும்பக் கதையைக் கேட்கவே பரிதாபமாய் இருக்கு. நாம் அவனுக்கு உதவ வேண்டும்... நீயும் ஓய்வு எடுத்துக் கொண்ட மாதிரி இருக்கும். அரை மணி நேரத்திற்குள் நம் இருவரையும் வரைந்து விடுகிறானாம். சும்மா பணம் கொடுக்கிறேன் என்றாலும் வேண்டாம் என்கிறான்...'' என்று இரக்கப்பட்டான்.

ஜனனிக்கு மூச்சே நின்று விடும் போலானது.

'செல்வராஜ்! நீ நிஜமாகவே என்னை மறந்து போனாயா அல்லது காட்டிக் கொடுக்கக் காத்திருக்கிறாயா? எப்படியோ உன்னைத் தனிமையில் பார்த்து உன்னிடமிருந்து அந்தப் பழைய படத்தை வாங்கிக் கிழித்து எறிந்து விட்டுத்தான் தஞ்சாவூரை விட்டுப் புறப்பட்டாக வேண்டும்...'

அரை மணி நேரமும் விநாடிக்கு விநாடி செல்வராஜ் முகத்தை உயர்த்தித் தன்னைப் பார்க்கும் போதெல்லாம் வியர்த்துக் கொட்டியது, ஜனனிக்கு.

செல்வராஜ் இருவரையும் சேர்த்துப் படம் வரைந்து முடித்ததும் சுதாகர் எழுந்தான். ''ஜனனி! நீ ரொம்பவும் சோர்ந்து விட்டாய்! இரு, நான் காருக்குள்ளிருந்து உனக்கு மாத்திரை, ஃப்ளாஸ்க்கிலிருந்து சூடாய்ப் பால் கொண்டு வருகிறேன்!'' என்று நகர்ந்தான்.

இதற்காகவே காத்திருந்தது போலிருந்த ஜனனி விருட்டென எழுந்து முகத்தைக் கர்சீப்பால் துடைத்துக் கொண்டு கைப்பையைத் திறந்தாள். 'செல்வராஜ் வாயை அடைக்க நூறு ரூபாயாய்த் தந்து விடலாம்... அவன் தினமும் பத்துப் பேரையாவது வரைவான். இரண்டு வருஷங்கள் முன்பு நானும், பிரதீப்பும் வந்ததை அவன் மறந்திருக்கலாம். என்னால் மறக்க முடியாது. அது ஒரு ஜனவரி முப்பது. காந்தி இறந்த தினம். எனக்கு நல்ல



அவன்: பரீட்சைல நான் ஃபெயில் ஆன விஷயத்தைக் கேட்டு யாருமே 'ஷாக்' ஆகலை, தெரியுமா?

இவன்: ஏண்டா?

அவன்: அப்பதான் எங்க வீட்ல 'கரெண்ட் கட்' ஆச்சே!

— நடேஷ்ஷா.

புத்தி பிறந்த தினம்.

''இந்தா...'' என்று நூறு ரூபாய்த் தாளை நீட்டிவிட்டு செல்வராஜை நோக்கி ஏதோ பேச ஆரம்பித்தாள் ஜனனி. அதற்குள் அவன் சரேலெனத் தன் கரங்களைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டு, ''நூறு ரூபாயா? ரொம்ப அதிகங்க. ஐயா ஐம்பது ரூபாய் தரேன்னு சொன்னதே அதிகம். எல்லாரும் அஞ்சு, பத்துதான் தருவாங்க. இரண்டு வருஷம் முன்னாடி வரைக்கும் தினம் ஒரு பத்து, இருபது சம்பாதிச்சு என்னைப் படிக்க வச்ச எங்கண்ணன் விபத்துல செத்துப் போனதுக்கப்புறம் நான் அண்ணன் வழிலே தான் இந்தத் தொழிலை நடத்தறேங்க... எங்கண்ணன் அடிக்கடி சொல்வான். 'அதிகமாய் ஆசைப்படக்கூடாது'ன்னு அவன் ஆசைப்பட்டதெல்லாம் நான் நிறையப் படிச்சி முன்னுக்கு வரணும்னு தான். காந்தி மாதிரி சத்தியம்தான் பேசுவான். அதுனாலதான் இரண்டு வருஷம் முன்னாடி மகாத்மாவின் நினைவுநாள் அன்றைக்கு அவனும் செத்துட்டான் போலிருக்கு...'' என்று கண்ணீர் விட ஆரம்பித்தான்.

ஜனனி திகைப்பும், குழப்பமுமாக, ''தம்பீ... உன் பெயர் என்ன...? உங்கண்ணன்...?'' என்று இழுத்தாள்.

''என் பெயர் தங்கராஜுங்க. அண்ணன் செல்வராஜும் நானும் இரட்டைப் பிள்ளைங்க... இரண்டு மணி நேர வித்தியாசம். என்னைவிட எங்கண்ணன் நல்லாப் படம் வரைவான். ஆனால் பாருங்க, அன்னிக்குச் சாவற தினம் இந்தக் கோயிலிலிருந்து நாலு மணிக்கு வெளியே வந்தவன் சைக்கிள்ல மெயின் ரோடுல வர்றப்ப லாரி மோதி கையோடு வைச்சிருந்த வெள்ளைத் தாள் எல்லாம் ரத்தம் அப்பி...''

ஜனனிக்கும் அழுகையாய் வந்தது. அது கலைஞனான சிறுவன் செல்வராஜின் மறைவிற்கா அல்லது தன்னைக் காப்பாற்றி விட்ட கடவுளுக்கு நன்றி செலுத்தும் பொருட்டா?



மீண்டும் மீண்டும்
சுவைக்கத் தூண்டும்
நியூட்ரின்
மில்க் பிஸ்கட்ஸ்







வழங்குவோர் : இந்தியாவிலேயே
மிகப்பெருமளவில் விற்பனையாகும்
மிட்டாய் தயாரிப்பாளர்கள்.

ACIL/009/86 Tam

# கண்ணுக்குத் தெரியாத கறைகள்

## ஞானம்பாள் செல்வம்

போட்டிக் கதை — 12



'**சோ**மன் நிதியகம்' வாசலில் ரிக்
ஷாவை ஓரமாய் நிறுத்திவிட்டு உள்ளே
நுழைந்தான் ராமச்சந்திரன். குழல் விளக்கு
ஒளி தாளாமல் அவன் இமைகள் துடிதுடித்
தன. மேனேஜர் இருக்கையில் சேகர்! ராமச்
சந்திரன் முகத்தை மலர்த்திஞன்.

"வர்றதிங்கட்கிழமைராத்திரி ஒன்பது மணிக்கு மேல வந்து பணத்தை வாங்கிக்கிட்டுப் போ... ராமச்சந்திரா!" —

மூன்று நாட்களுக்கு முன் சேகர் கூறியது அவன் நினைவில் எதிரொலித்தது. அந்த நம்பிக்கையில்தான் அன்று மாலை மனைவி கோமதியை ஒரு ப்ரைவேட் நர்ஸிங் ஹோமில் சேர்த்து விட்டு வந்திருந்தான். தலைப் பிரசவம்!

அரசு மருத்துவமனையில் ஏனோ தானோவென்று கவனித்து



ஒருவேளை தன் மனைவியின் உயிருக்கு ஏதும் ஆபத்தாகிவிடக் கூடாதே என்ற பயம் அவனுக்கு.

மேனேஜர் சேகரையும், கிளார்க் மாணிக்கத்தையும் தவிர... அந்த நிதியகத்தில் வேறு யாரும் இல்லாதிருந்தது ராமச்சந்திரனுக்குச் சற்று தெம்பைக் கொடுத்தது.

"சார்!"

"தலையைக் குனிந்தபடி அன்றைய கலெக்ஷனை வேகவேகமாய் எண்ணிக் கொண்டிருந்த சேகர் சட்டென்று முகத்தை மட்டும் நிமிர்த்திஞன்.

"என்ன ராமச்சந்திரா?"

"இன்னிக்குப் பணம் தர்றேன்னு சொன்னீங்க!"

"ஆமாம்! சொன்னேன்! ஆஞ இன்னிக்குப் பணமே இல்லையே ராமச்சந்திரா! அடுத்த வாரம் வா."

தூக்கிவாரிப் போட்டது ராமச்சந்திரனுக்கு.

"ஐயோ! என்ஞ சார்! இப்படிச் சொல்



லிட்டீங்க! உங்களை நம்பித்தான் என் சம்சாரத்த ஆஸ்பத்திரியில சேர்த்துட்டு வந்திருக்கேன். தலைப்பிரசவம்! விடியறதுக்குள்ள குழந்தை பிறந்திடும்னு டாக்டரும் சொல்லிட்டாரு! பணம் இல்லேன்னு ரொம்பத் திண்டாடிப் போவேன் சார்! கொஞ்சம் தயவு பண்ணுங்க!''

ராமச்சந்திரன் ஏழையாய்க் கெஞ்ச — சேகர், அப்போது அவன் பார்த்துக் கொண்டிருந்த கணக்கின் இழுபறியில் அதிகமாகவே முகத்தைச் சுளித்தான்.

''தயவு பண்றதுக்கு இது ஒண்ணும் அனாதை ஆசிரமம் இல்லே ராமச்சந்திரா! உன் சௌகரியத்துக்கும், உன் முடைக்கும் பணத்தைத் தூக்கிக் கொடுக்க முடியாது..''

''சார்! தயவு செஞ்சி இல்லேன்னு மட்டும் சொல்லிடாதீங்க! ஏதோ... இருக்குறதானாலும் குடுங்க! உடனடி செலவை சமாளிக்கணும்.''

அவ்வளவுதான்! சேகருக்கு வந்த வேகம் கொஞ்ச நஞ்சமல்ல!

''என்ன ராமச்சந்திரா... நீ! இத என்னா பைனான்சுன்னு நினைச்சிக்கிட்டியா, என்ன நினைச்சிக்கிட்டிருக்கே! இன்னைக்கி சுத்தமா கலெக்ஷனே ஆகலே! உனக்கு எங்கேர்ந்து ஆயிரம் ரூபாய் கடன் குடுக்குறது! வீணா நீ இங்கே நின்னு கெஞ்சிக்கிட்டிருக்கிறதுல அர்த்தமே இல்லே! பேசாம இடத்தைக் காலி பண்ணிடு! ஒரு வாரம் கழிச்சி வா! போ... போ...!''

சேகர் வார்த்தைகளை முடிப்பதற்குள் அம்பாய்ச் சீறியபடி, அந்த நிதியக வாசலில் வந்து நின்றது ஒரு நீலநிற அம்பாஸிடர்!

ஐம்பது, ஐம்பத்தைந்து வயது மதிக்கத்தக்க ஒரு கருத்த தேகம் வெள்ளையும் சள்ளையுமாய் உள்ளே நுழைய, அனிச்சையாய் எழுந்து நின்றான் சேகர்! வாயெல்லாம் பற்களாகி வந்தவரைக் கையெடுத்து வணங்கினான்.

''வாங்க... சார்! வாங்க... வாங்க...!''

அந்தக் கருத்த தேகம் சோபாவில் அமர, சோபா கிறீச்சிட்டது!

''எங்க சார்!... இப்படி? இந்தப் பக்கமெல்லாம் நீங்க வரவே மாட்டீங்களே!''

''வரமாட்டேன்தான்! வரும்படியா ஆயிடுச்சே?'' வந்தவர் தம் கட்டைக் குரலில் வருத்தத்தைக் கலக்க... சேகருக்கு மனத்தைப் பிசைந்தது.

''என்ன சார் விஷயம்?''

''ஒண்ணுமில்லே சேகர்! என் ரெண்டு பசங்களும் நாளைக்கு காலைல ஊட்டிக்குப் போறோம்னு திடீர்னு இப்ப வந்து சொல்றானுங்க!''

''எதுக்கு சார்!''

''காலேஜ் லீவாச்சே, சும்மாதான் ஜாலியா போயிட்டு வர்றேன்னுங்க! இந்தச் சமயம் பார்த்துக் கையில அவ்வளவு பணம் இல்லே! அடுத்தவாரம்போயிக்கலாம்னாலும் கேக்க மாட்டேங்கறானுங்க...''

''இப்போ உங்களுக்கு எவ்வளவு சார் பணம் வேணும்!''

''ஓர் ஆயிரத்து ஐந்நூறு ரூபா இருந்தாப் போதும் சேகர்!''

''வாங்கிக்கங்க சார்! உங்களுக்கு இல்லாத பணமா?''

''இன்னும் ரெண்டு நாள்ல திருப்பிக் கொடுத்தனுப்புறேன்...''

''உங்க சௌகரியப்படி குடுத்தனுப்புங்க சார்! இப்போ என்ன... அதுக்கு அவசரம்? நான் சமாளிச்சிக்கறேன்.''

சேகர் மின்னலாய் ட்ராயரிலிருந்த ஒரு கத்தை நூறு ரூபாய்களை எடுத்து மாற்றி... மாற்றி எண்ண... ஓரமாய் நின்று கொண்டிருந்த ராமச்சந்திரனுக்கு தொண்டைக்குள் மிடறு நுரையடித்தது.

பணத்தை வாங்கி, பைக்குள் செருகிக் கொண்டு எழுந்து நின்றார் அந்தப் பெரியவர்.

''அப்பு... நான் வரட்டுமா சேகர்?''

''போயிட்டு வாங்க சார்!''

''ரொம்பத் தேங்க்ஸ்!''

''அதனாலென்ன சார்! பரவாயில்லை! போயிட்டு வாங்க!''

மீண்டும் வீதியில் நின்ற அம்பாஸிடர் உயிர் பெற்று உருள... சேகர் அந்த அம்பாஸிடர் மறைந்தவுடன் உள்ளே வந்து அவன் இருக்கையில் அமர்ந்தான்.

ராமச்சந்திரனின் பார்வை அவனை முள்ளாய் நெருடியது.

''என்ன ராமச்சந்திரா அப்படிப் பார்க்குறே?''

''பணம் சுத்தமா இல்லேன்னீங்களே சார்...!''

''ஆமா... இப்போ எப்படி வந்திச்சிங்கறியா?''

''ம்!''

''அது என் இஷ்டம்! யாருக்கு வேணும்னாலும் கொடுப்பேன்! யாருக்கு வேணும்னாலும் இல்லேம்பேன்.''

''சார்! என் சம்சாரம் பிரசவ வலியால துடிச்சிக்கிட்டிருக்கா! அதுக்கு பணம் இல்லேன்னு பொய் சொல்லிட்டு, ஜாலியா டூர் போறவங்களுக்கு எடுத்துக் குடுத்திட்டீங்களே!''

''யோவ்! அவுரு என் பக்கத்து வீட்டுக்காரரு! எனக்கு முடை வரும் போதெல்லாம்

''முக்கியக் காரியமா ஸ்வீட், காரம், காப்பியெல்லாம் வெட்டி முடிச்சுட்டோம். இனி இந்த மீட்டிங்கை அடுத்த வாரத்துக்குத் தள்ளி வெச்சுக்கலாம்! என்ன சொல்றீங்க?''



நூறு இருநூறுன்னு தூக்கிக் குடுப்பாரே! நீ குடுப்பியா?''

''அப்ப அவுரு, அப்பப்ப உங்களுக்குத் தூக்கித் தூக்கிக் குடுக்குற பணம்தான் பெரிசாப் போச்சு! என் சம்சாரத்தோட இன்னைய நிலைமை உங்களுக்கு பெரிசாத் தோணலை! இல்ல... சார்!''

ராமச்சந்திரனின் வார்த்தைகளைக் கேட்ட சேகருக்கு எரிச்சல் எல்லையைக் கடந்தது.

''அட! சரிதான் போய்யா! பெரிய அறிவுக் களஞ்சியம்! அறிவுரை வழங்க வந்திட்டாரு, போ! போ! போயிட்டு ரெண்டு மூணு வாரம் கழிச்சி வா! பார்க்கலாம்!''

அதற்குமேல் அங்கே நின்று கொண்டிருப்பதில் அர்த்தம் இல்லை என்பதை உணர்ந்து கொண்ட ராமச்சந்திரனும் வேறு வழியின்றி, துண்டை உதறி வாயில் பொத்திக் கொண்டு, விழிகளில் நீர் கோக்க, அந்த நிதியகத்தை விட்டு வெளியே வர, அவனை உரசிக் கொண்டு வேகமாய் உள்ளே நுழைந்தான் ஒரு தந்தி ப்யூன்.

''சார்! இங்கே சேகர்ங்கிறது...?''

''நான்தான்! ஏம்ப்பா?''

''உங்களுக்கு மெட்ராஸ்லேர்ந்து ஒரு டெலிகிராம்! சார்!''

குப்பென்று வியர்த்தது சேகருக்கு!

ப்யூன் விரல் வைத்த இடத்தில் இயந்திரமாய்க் கையெழுத்தைப் போட்டுவிட்டு, தந்தியைப் பிரித்துப் படித்த சேகர் அப்படியே துடித்துப் போனான்.

அவன் உடல் வெடவெடவென்று நடுங்கியது!

அருகே அமர்ந்து லெட்ஜரைப் புரட்டிக் கொண்டிருந்த கிளார்க் மாணிக்கம் சேகரின் தடுமாற்றத்தைக் கண்டவுடன் திடுக்கிட்டு எழுந்தான்.

''என்ன சார்?''

''என் தங்கச்சி புருஷனுக்கு ரொம்ப சீரியஸாம்! உடனே பணத்தோட கிளம்பி வரச் சொல்லி தங்கச்சி தந்தி அடிச்சிருக்கு!''

''ஏதும் சீக்கா இருந்தாரா... சார்?''

''இல்லையே! நல்லாத்தானே இருந்தாரு! இப்போ என்ன செய்யறதுன்னே புரியலையே?''

''என்ன செய்யறதா? உடனே கிளம்புங்க சார்! நான் கவனிச்சிக்கறேன்! இருக்குற பணத்தை எடுத்துக்குங்க! சீக்கிரமா ஓர் ஆட்டோ பிடிச்சுத் திருவள்ளுவர் பஸ் ஸ்டாண்டு போயிட்டீங்கன்னா எப்படியும் லாஸ்ட் பஸ்ஸைப் பிடிச்சிரலாம்! நாளைக்கு 'பந்த்' வேற! ஒரு பஸ்ஸும் ஓடாது! சீக்கிரமாக் கிளம்புங்க! உங்க வீட்ல விஷயத்தை நான் சொல்லிக்கிறேன்.''

சேகருக்கு மாணிக்கம் சொல்வதுதான் சரி என்று பட்டது.

ட்ராயரை வேகமாய் வெளியே இழுத்து, மளமளவென்று நூறில் கொஞ்சமும், ஐம்பதில் கொஞ்சமுமாய் எடுத்து, மாணிக்கத்தை விட்டு எண்ணச் சொல்லி, குறித்துக் கொள்ளச் சொல்லிவிட்டு மின்னலாய்

வெளியே வந்தான்.

மெட்ராஸ்! மெட்ராஸ்! மெட்ராஸ்!'' ஆட்டோவிலிருந்து அரக்கப் பறக்க இறங்கி பஸ் ஸ்டாண்டிற்குள் நுழையும்போதே, சேகரின் செவிகளில் அந்தக் குரல் தேனாய்ப் பாய்ந்தது.

''சார்! சார்! மெட்ராஸ் ஒண்ணு குடுங்க! டிக்கெட் இருக்குல்ல? என் தங்கச்சி புருஷனுக்கு உடம்பு சீரியஸா இருக்கு. இன்னைக்கு நான் மெட்ராஸ் போயாகணும்!''

''ஒண்ணே ஒண்ணுதான் சார் இருக்கு! நல்லவேளை! வண்டிய எடுக்கறதுக்குள்ளே வந்தீங்க!''

முகத்தை மலர்த்திக் கொண்டே, அந்த கண்டக்டர், டிக்கெட்டைப் பஞ்சிங் மிஷினில் வெட்டி இறுதியாய்ச் சேகரிடம் நீட்ட....

கணீரென்று ஒலித்தது அந்தக் குரல்!

''செல்லப்பா! மெட்ராஸ் ஒண்ணு!''

சேகரிடம் நீட்டிய கையைச் சட்டென்று சுருக்கிக் கொண்டான் செல்லப்பன் என்ற அந்தக் கண்டக்டர்!

அருகே வந்து சூட்கேஸைக் கீழே வைத்து நிமிர்ந்த அந்தக் கம்பீரமான உருவத்திற்கு, செல்லப்பன் உடலை வளைத்து, ''வணக்கம் சார்!'' என்றான்.

''நல்லவேளை! நான் டிக்கெட்டை இந்த சாருகிட்ட குடுக்கப் போன நேரத்துல வந்திட்டீங்க! இந்தாங்க சார்! ஒண்ணே ஒண்ணு தான் இருக்கு!''

தூக்கி வாரிப் போட்டது சேகருக்கு!

அந்தக் 'கம்பீரம்' டிக்கெட்டை வாங்கிக் கொண்டு பஸ்ஸுக்குள் தன்னை அடக்கப் படுத்திக் கொள்ள.... சேகர் பற்களை அரைத்து அந்தச் செல்லப்பனை விழிகளால் எரித்தான்.

''ஏன் சார்? முந்தி வந்த என்னை விட, உங்களுக்கு அந்த ஆள்தான் முக்கியமாப் போயிட்டாரா? எனக்குல்ல அந்த டிக்கெட்டைக் குடுத்திருக்கணும்?''

''அது என் இஷ்டம் சார்! நான் யாருக்கு வேணும்னாலும் குடுப்பேன்! யாருக்கு வேணும்னாலும் இல்லேம்பேன்! அவரு இந்த பஸ்ஸுக்கு ரெகுலர் கஸ்டமர்! அதோட, ஒவ்வொரு தடவை வரும்போதும், பத்து, இருபதுன்னு வெட்டுவாரே... நீங்க வெட்டுவீங்களா?''

அப்போ, உங்களுக்குப் பணம்தான் முக்கியம்! பயணத்தோட காரணம் முக்கியமில்லே! என் தங்கச்சி புருஷனுக்கு மெட்ராஸ்ல ரொம்ப சீரியஸா இருக்குன்னு தந்தி வந்திருக்கு சார்!''

அவ்வளவுதான்.

கண்டக்டருக்கு எரிச்சல் எல்லையை மீறியது. முகத்தை அஷ்டகோணலாய் மாற்றிக் கொண்டார்.

''இதோ பாருங்க சார்! உங்க கதையெல்லாம் தூக்கம் வராம எவனாவது ஃப்ளாட் பாரத்துல அலஞ்சிக்கிட்டிருப்பான்! அவன் கிட்ட போய்ச் சொல்லுங்க! எனக்கு நேரமாயிடிச்சி. நான் வண்டியை எடுக்கணும்!''

செல்லப்பன் வேகமாய் படிக்குத் தாவி, கதவை இழுத்து உள்ளே சாத்திக் கொள்ள, அதுவரை அங்கே நின்று உறுமிக் கொண்டிருந்த அந்த பஸ் மெள்ள நகர ஆரம்பித்தது. மேற்கொண்டு செய்வதறியாது, சேகர் திக்பிரமை பிடித்தவன் போல் அப்படியே அசைவற்று நிற்க...

''சார் ரிக்ஷா!''

பரிச்சயமான குரல்!

சட்டென்று திரும்பினான் சேகர்!

ரிக்ஷாவில், ராமச்சந்திரன்!

---

## புதுக்கவிதைப் போட்டி-5

''காத்திருக்கிறார்கள்' — இதுதான் 7.12.86 கல்கி இதழில் இடம்பெற இருக்கும் போட்டிக்கதையின் தலைப்பு. ஒரு சாதாரணப் பிரச்னையை மெலிதான நகைச்சுவையுடன் அணுகியுள்ளார் கதாசிரியர்.

'காத்திருக்கிறார்கள்' கதையைப் படிக்கும் பிளஸ் டூ மற்றும் கல்லூரி மாணவர்கள் அக்கதை உணர்த்தும் பிரச்னையின் அடிப்படையில் சுருக்கமான ஒரு புதுக்கவிதை எழுத வேண்டும்.

## காத்திருக்கிறார்கள்

* எட்டே வரிகளுக்குள் ஒரு போஸ்ட்கார்டில் உங்கள் புதுக்கவிதையை அடக்குங்கள்.
* கார்டின் மறுபுறம் பள்ளி அல்லது கல்லூரி முத்திரையைப் பெறுங்கள்.
* உங்கள் பெயரையும் விலாசத்தையும் தெளிவாக எழுதுங்கள்.
* விலாசப் பகுதியில் புதுக் கவிதைப் போட்டி — 5 என்று குறிப்பிடுங்கள்.
* கவிதைகள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 15.12.86.

முதல் பரிசு: ரூ. 100/—

இரண்டாம் பரிசு: ரூ. 25/— தவிர ஆறு மாதங்களுக்குக் கல்கி இலவசம்.

தவிர பிரசுரமாகும் அனைத்துக் கவிதைகளுக்கும் சன்மானம் உண்டு.

# காத்திருக்கிறார்கள்

அவர்கள் — சைக்கிளில் காரியரில் செருகியலத்திக் கம்பும், முன்புற விளக்கின் மேல் கழற்றி வைக்கப்பட்டிருந்த தொப்பியுமாய்...

மாலை வெளிச்சம் கழன்று தரைக்கடியில் புதைந்து 'பட்டுக் கருநீல' குடை விரிந்த நேரம். இப்போதிருக்கும் வானத்து வர்ண ஜாலங்கள் விரைவில் சோகம் போர்த்திக் கொள்ளும்; வானத்தின் கருமை அடர்ந்து குடையின் பொத்தல்கள் காட்டும்.

இவை தினசரி வாடிக்கைகளானாலும் அவற்றை நினைத்துப் பார்க்கக் கூட விரும்பாதவர்கள் போல் அவர்கள் 'சைக்கிளில் லைட் இல்லாத கேஸி'ற்காகக் காத்திருந்தார்கள்.

மதுரைக் கல்லூரியின் அருகில் படர்ந்திருக்கும் பாலத்தை ஒட்டினாற் போன்ற சாலையை அன்று தேர்ந்தெடுத்திருந்தார்கள். பாலத்தின் இறக்கத்தில் வேகமாய் இறங்கி,பெரிய வட்டமாய்ச் சுழன்று, சாலைக்குள் பிரவேசிக்கிற யாரும் பிடிபட்டு விடுகிற பிரதேசத்தில், அவ்விரு காவலர்களும் நின்று கொண்டிருந்தார்கள்.

இன்னமும் ஸ்கூலிலிருந்து, அல்லது ட்யூஷன் முடிந்து யூனிஃபாரத்துடன் திரும்பி வருகிற பெண் பிள்ளைகள், யதேச்சையாய் அவர்கள் பின்னால் பேசிக் கொண்டே செல்லும்படி நேர்ந்துவிட்ட பாலிடெக்னிக் மாணவர்கள், ஆபீஸ் முடிந்து வீட்டிற்கு விரைகின்றவர்கள் என்று தெருவில் சொல்லிக் கொள்கிற அளவிற்கு நடமாட்டம் இருந்தது.

கணேசன் தலையைக் கோதிவிட்டான். தொப்பியைக் கழற்றி வைத்தபின்தான் தலையில் வியர்வை அடங்கியிருக்கிறது. காய்ந்த உதடுகளை ஈரப்படுத்திக் கொண்டான்.

"கோபாலு... இன்னும் நல்லா இருட்டட்டும். போய் டீ அடிச்சிட்டு வந்துரலாமா?" என்றான். இதற்கு முந்தின சந்தர்ப்பங்களில் 'இன்னும் நல்லா இருட்டல்லேன்னுதான் லைட் போடலேண்ணே' என்று காரணம் சொன்ன சில கேஸ்கள் அவனுக்கு ஞாபகம் வந்ததே அதற்குக் காரணம்.

கோபாலு தொந்தியைத் தடவிக் கொண்டான். போலீஸ் உத்தியோகத்தில் சேர்ந்த போது இல்லாத தொந்தி... இப்போது விழுந்திருப்பது, பிரமோஷன் ஆவதற்கு அறிகுறி என்று நினைத்திருந்தான். தனக்கு மேலிருக்கும் பெரும்பாலான இன்ஸ்பெக்டர்களைப் பார்த்தபிறகு அவன் அந்தக் கணிப்பிற்கு வந்திருந்தான்.

வெகுநேரம் பேசாமலிருந்து விட்டது போல அவர்களுக்குத் தோன்றியிருக்க வேண்டும்.

"நம்ம பி செவன் கிருஷ்ணன் சீட்டு பிடிக்கறானுமில்லே..."

"யாரு... உயரமா சுருட்டை முடி...? எதுக்கெடுத்தாலும் லத்தியால சொருகிடுவேம்பானே அவனா?"

"அவனேதான்... மாசம் இருநூறு ரூபா இருபது மாசம்..."

"திரும்பி வருமா எல்லாம்?"

"போலீஸ்காரனுச்சே... பயப்படமாட்டானுங்க எல்லாரும்?"

அடிக்கடி பிடிபட்டு ஸ்டேஷனுக்கு வாடிக்கையாய் வருகிறவள் இவர்களைப் பார்த்தபடி ரிக்ஷாவில் போனாள்.

"இவளுக்கெல்லாம் ரிக்ஷா ஒரு கேடு... சரியான கிழவி."

"இவகிட்ட இன்னமும் போறாங்களே அவங்களைச் சொல்லணும்," கோபாலுவின் கமெண்ட்.

இருவரும் சத்தம் வெளியே தளும்பாமல் சிரித்தார்கள்.

"கோபாலுண்ணே... அங்கப் பாருங்க... ஒரு பய லைட் இல்லாத வேகமா இறங்கி வர்றாப்ல... இந்தப் பக்கம் திரும்பினான்னா நமக்கு இன்னிக்கி போணி பண்ணிடுவான்."

உச்ச வேகத்தில் சைக்கிள் கீழிறங்கி வந்து கொண்டிருந்தது. நான்கு கண்கள் சைக்கிளோடு பிரயாணம் செய்தன — நேராகத் திருப்பரங்குன்றம் சாலையில் போய் விட்டது.

"நேராய்ப் போய்ட்டானே..."

கோபாலு கணேசனை உற்சாகப்படுத்த வேண்டியதாயிற்று.

"விடுங்கண்ணே... ஊர்ல நமக்குக்கிடைக்காத ஆளா...?"

சொன்னது வீண் போகவில்லை. சரியாக ஐந்து நிமிடங்களிலேயே முதல் எலி, பொறிக்குள் சிக்கியது.

"ஸ்டாண்டு போட்டுட்டு இங்கவாடா... விசிலடிச்சுக் கூப்பிடறோம்... நீ பாட்டுக்குப் போய்ட்டே இருக்கியே."

''இல்ல சார்'' என்றான் — சுண்டெலி; மீசை பயிராக வேண்டிய மேலுதட்டில் நாற்றுக்களே அரும்பியிருந்தன.

''என்ன 'நொள்ள சார்...' ஏண்டா லைட்டைப் போடல?''

''பல்ப் ஃப்யூஸ் சார்.''

''தெரியுதுல்ல ப்யூஸ்ஸுன்னு... புதுசு போடறதுதானே... எல்லாருக்கும் தைரியம் போலீஸ்காரன் பிடிக்க மாட்டான்னு... ஒதுங்கி நில்லு...''

கோபாலுவிடம் கெஞ்சினான். ''சார், சார்... இந்தத் தடவை விட்டுடுங்க சார்.''

''போய் நில்லுடா முதல்ல... தாளி... நாம் பாட்டுக்கும் ஏதாவது பேசிறப் போறேன்.''

பொறிக்குள் சிக்கிய எலி கம்பி இடுக்குகள் வழியே வெளியில் போக முடியுமா என்று பார்த்தது; நீள மீசையால் மேல் ஜன்னல் உணர்ந்தது; திரும்பி ஓடி மரக்கதவில் மோதிக் கொண்டது; மறுபடி வெளிச்சம் கண்டு கம்பிகளை நோக்கி விரைந்து வந்தது; மூக்கு மட்டுமே வெளியில் துருத்த முடிந்தது. ஓய்வில்லாத போராட்டம்...

களைத்துப் போன போது பையனுக்கு உண்மை புலப்பட்டது.'' மாதக்கடைசியில் கேஸுக்காக அலைகிறார்கள் அவர்கள்.''

சைக்கிள் காரியரில் அமர்ந்து கொண்டான் அந்தப் பையன்.

தெரு நன்றாய் இருட்டியிருந்தது.

''இன்னொரு கேஸைப் பிடிச்சிட்டாப் போதுமில்ல... இன்னிக்கி கடையக்ளோஸ் பண்ணிரலாம்.''

''போதும்... ஆனா ஊர்ல அவனவன் திருந்திட்ட மாதிரியில்ல தெரியுது. ஒருத்தனாவது இவன மாதிரி வண்டி ஓட்டி வந்து மாட்டிக்கிட்டானா பாரு... அதோ அந்தப் பய புள்ள நம்மள எங்கிருந்தோ பாத்துப்புட்டு லைட் இல்லாத சைக்கிளை இறங்கி உருட்டிட்டுப் போறான். இருபதடி தள்ளிப் போனா திரும்ப வண்டில ஏறி உக்காந்துருவான்... இவன்தான் மூளை இல்லாம மாட்டிக்கிட்டான்.''

கோபாலு பையன் பக்கம் திரும்பினான்.

''ஏண்டா, ஒம் பேரென்ன?''

''ஜகதீஷ் சார்.''

''அதென்னடா ஜகதீஷ்?'' கோபாலுக்குத் தன் பெயர் அநாகரிகமாகத் தோன்றியது.

''அர்த்தமில்லாம ஏதேதோ பேர் வெக்கறானுங்க இந்தக் காலத்துல... ஒன்ன வீட்டுல எப்படிக் கூப்பிடறாங்க. தீசு தீசுன்னா? இரு கான்ஸ்டபிள்களும் சிரித்துக் கொண்டார்கள். எலிக்கு கூண்டு பத்திரமானதுதான் — அதில் சுதந்திரம் இல்லை என்பதைத் தவிர; கம்பி இடுக்குகள் வழியே நுழைந்து உடலைத் தேடிப் புண்ணாக்க விழைகிற துடைப்பக். குச்சியும் கம்பியும் தவிர்க்க வியலாதது என்பதைத் தவிர...

''அய்யர் வீட்டுப் புள்ளயா நீ?''

''இல்லை. செட்டிமாரு!''



''செட்டியாரா?'' மாட்டிக் கொண்டவன் தன் ஜாதி என்றதும் உற்சாகம் கணேசனுக்கு.

''அப்பாரு என்ன பண்றாரு?''

''லாயரு... பேரு, சண்முக சுந்தரம்.''

கோபாலுவிற்குப் போர்க்களத்தில் பத்தடி பின்வாங்கிய மாதிரி இருந்தது. 'அப்பா லாயராமே...' கடுமையாய் பேசிவிட்டுப் பின்னால் இப்படிச் சின்னப் பையனிடமும் குழைந்து போகும்படி நேர்ந்து

விட்ட தன் உத்தியோகத்தை எண்ணி நொந்து கொண்டான்.

''ஏம்பா தம்பி... பெரிய வீட்டுப் புள்ளையா இருக்கே... இப்படி லைட்டு இல்லாமயா வருவாங்க... சரி... சரி... இனிமேயாவது லைட்டைப் போட்டு வண்டிய ஓட்டு... என்ன... போய்ச் சேரு.''

எந்த வார்த்தை தன்னை விடுவித்தது என்று புரியாமல் தூக்கத்தில் நடப்பவன் போல் நடந்து சைக்கிளில் ஏறி மிதித்து அடுத்த தெருவில் சுழன்று திரும்பி மறைந்தான், ஜகதீஷ்.

இருவரும் அதே திசையைப் பார்த்த வண்ணம் பெருமூச்செறிந்தார்கள்.

எலிப்பொறி மறுபடி 'ஆ' வென்று வாய் பிளந்தபடி திறந்து கிடந்தது. மசால் வடையோ, கருவாடோ, தேங்காய்ப் பத்தையோ எதுவானாலும் உள்ளே வந்து விழ வேண்டியது எலியின் விதி.

இந்த முறை மாட்டிக் கொண்டது கண்ணாடி அணிந்திருந்த பேண்ட் போட்டிருந்த டீசண்டான எலி.

''வண்டிய ஓரமா நிறுத்துப்பா.''

கேஸ் டயரியை எடுத்தான் கோபாலு.

''பேரென்னப்பா?''

'' ஒரு நிமிஷம். உங்களுக்குக் கதிரேசன் தெரியுமில்ல?'' என்றான் புதிதாக மாட்டிக் கொண்ட ஆள்.

'' ஊர்ல ஆயிரம் பேரு இருக்கானுங்க.''

''இல்ல... உங்களுக்குத் தெரிஞ்சிருக்கணும்... உங்க டிபார்ட்மெண்ட்தான்.''

கோபாலுக்குப் புரிந்தும், புரியாத நிலையில் இருப்பது போல நடித்தான். 'இவனும் நழுவி விடப் பார்க்கிறான்.'

''விளக்கமாச் சொல்லுங்க...''

''பீ டுவுல இருக்காரே கதிரேசன்.''

''இருக்காரு... அவருக்குத் தூரத்துச் சொந்தமா நீங்க... சட்டத்தை மீறிட்டு அவரு பேரைச் சொல்லித் தலையைச் சுத்தி மூக்கைத் தொடுவீங்க... நாங்களும் விட்டுரணும் இல்ல?'' கோபாலுவிற்குக் கோபத்தில் மூச்சிரைத்தது.

''கோபப்படாதீங்க சார்... அவரு ஒண்ணும் தூரத்துச் சொந்தமில்லே.''

''ஏன் சொந்தமேயில்லையா அவரு?''

''அப்படியில்லே... அவரு என் சொந்த அண்ணன். அவ்வளவுதான்... பீடுவுலஇன்ஸ்பெக்டர்.''

கடாமீசையும் ஆறடி உயரமும் ஞாபகத்திற்கு வர கோபாலு டயரியை மூடினான்.

''கதிரேசன் தம்பியா நீங்க.''

கணேசன் தொடர்ந்தான்: ''எனக்கும் முதல்ல குளப்பமா இருந்துச்சு... எங்கியோ பார்த்த மாதிரி இருக்கேன்னு... அவரு தம்பியா நீங்க... அவரு தொழிலுக்கு ஏத்த மாதிரி பெரிசா மீசை வெச்சிருக்காரு... நீங்க சுருக்கமா நறுக்கா வெச்சிருக்கீங்க... நல்லதாப் போச்சு... அண்ணன்கிட்டே பீஸெவன் கோபாலும் கணேசனும் விசாரிச்சோம்னு சொல்லுங்க... எங்களைத் தெரியும் நல்லா.''

''சொல்றேன்...போயிட்டுவ்ரேன்'' என்றபடி 'டீசண்ட் எலி' கிளம்பினான்.

''பாத்துப் போங்க... லைட்டு வேற இல்ல... எவனாவது இடிச்சிடப் போறான்.''

''சரி... பாப்போம்.''

சைக்கிள் கண்ணிலிருந்து மறைந்தது. இருவருக்கும் ஏமாற்றம் நிரம்பி வழிந்தது.

''இன்னிக்கி யாரு முகத்துல முளிச்சோமோ... மாட்டினது ரெண்டுமே பறந்து போயிருச்சேண்ணே.''

கோபாலு மணிக்கட்டை வெளிச்சத்தில் சாய்த்தான்.

''கணேசண்ணே... மணி ஏழுதானே ஆகுது... நேரம் இருக்குல்ல இன்னும். இனி மேலயும் வராமயா இருக்கப் போறாங்க... அப்படியே வந்தாலும் நமக்கு வசதியா — பெரிய ஆளுகளத் தெரியாதவனுங்க — வராமயா இருக்கப் போறாங்க.''

''அதுவும் சரிதான்...''

பொறுத்திருந்தார்கள்.

உலோகத்தனமான பின்னணிப் புலம்பலில் ஏரியல் துடித்துக் கொண்டிருக்க பீ ஒன் இன்ஸ்பெக்டர் புல்லட்டில் கடந்து போனார்.

இருவரும் விறைப்புடன் சல்யூட் அடித்தார்கள்.

நடமாட்டம் குறையத் தொடங்கிய சாலை—

— சைக்கிளின் பின்புறம் சொருகிய லத்திக் கம்பும், முன்புற விளக்கின் மேல் மாட்டியிருந்த தொப்பியுமாய் —

— அவர்கள் இருவரும் காத்திருக்கிறார்கள்.




''கூட்டத்துக்கு வந்த பேச்சாளர் ஏன் பேசாமல் திரும்பிட்டார்?''

''புதுசா ரோடு போடக் கருங்கல் ஜல்லி கொட்டி வச்சிருக்காங்கல்ல.... அதெல்லாம் தீர்ந்த பிறகுதான் பேச வருவாராம்!''

— ஹி

# கவனித்தீர்களா–இந்த ஸீஸனில் சுனில் கவாஸ்கர் எப்படி, இளமை மிகுந்து விளங்குகிறார்?


சேப்பாக்கம் '84


அடிலெய்டு-ஆஸ்திரேலியா '85

## "நான் கோத்ரெஜ் பவுடர் ஹேர் டைய் உபயோகிக்கத் தொடங்கியிருக்கிறேன்"

சுனில் கவாஸ்கர்

சுனில் கவாஸ்கர் முன்னிலும் இளமையாகத் தென்படுவதாக திடீரென உங்களுக்குத் தோன்றினால், நீங்கள் நினைப்பது சரியே. **கேசச் சாயம் தீட்டிக் கொள்ளத் தீர்மானித்ததுமே சுனில் தேர்ந்தெடுத்தது கோத்ரெஜ் பவுடர் ஹேர் டைய்.**

"காரணம், இது பாதுகாப்பானது, தானாகவே பாவிக்கொள்வது. ஆகவே அப்ளை பண்ணிக்கொள்ள இலகு. கேசமுழுதுமே இது சரிசமமாகப் பரவியமையும். அதுவுமென்ன, விரைவிலே. நான் என்னவோ, எனது நேரத்தை வெகுவாக மைதானத்தில்தான் செலவிட விரும்புவேன்".

**சுனில் அறிவார் : இயற்கையான தோற்றம் தருகிறது கோத்ரெஜ் பவுடர் ஹேர் டைய்.**

"என் கேசம் எவ்வளவு முடியுமோ அவ்வளவு இயற்கையாக விளங்க வேண்டும்—இதைத்தான் விரும்புவேன்: என்ன இருந்தாலும் அதிக இளமையோடு நான் தோற்றமளிக்க வேண்டும்—இயல்பாக".







**உங்களால் ஊகிக்கவே முடியாது...**
**அவர் சொல்லும் வரை...**
**இவ்வளவு இயற்கையான தோற்றம்.**




''மாமா! இந்த மாசத்துச் சம்பளம்!''

சுபா நீட்டியதும், அதற்கே காத்திருந்தது போல, மாமனார் 'லபக்'கெனக் கவரைக் கவ்விக் கொண்டார்.,

மூக்கின் விளிம்பைத் தொட்ட கண்ணாடியின் வழியாகக் கீழ்ப் பார்வை பார்த்துக் கொண்டே, 'சரக், சரக்'கென நோட்டுக்களை எண்ணினார். திரும்பவும் இரண்டு முறை எண்ணினார்...

''பத்து ரூபா குறையுதே!''

''துர்க்கா பூஜைக்கு எல்லார்கிட்டேயும் பத்து ரூபா வசூல் பண்றாங்க. அதான் நானும் குடுத்தேன்!'' இவள் தயங்கித் தயங்கிச் சொல்ல....

''இதெல்லாம் அனாவசியம்! குடும்பத்துல ஆயிரம் செலவு!''

''எல்லாரும் தந்து, நான் மட்டும் தரலைன்னா மரியாதை இல்லை... அதான்...!''

''ஓஹோ... மரியாதை எதுன்னு எங்களுக்குச் சொல்லித் தர்றியாக்கும்... சம்பாதிச்சு, செலவு நடத்தறோமேங்கிற திமிர்..!''

''அய்யோ, நான் அதுக்கு...''

''விருட்டென்று வெளியே வந்தாள் கடைசி நாத்தனார். அவளது எலிவால் முடி ஆக்ரோஷத்தில் ஆட,

''ஏன் அண்ணி அப்பாவை எதிர்த்துப் பேசறே?''

''நான் எதுவுமே பேசலையே வசந்தி!''

''உன் பணத்தை நம்பி நாங்க இருக்கோம்னுதானே இந்த ஆட்டம் ஆடறே! அப்பாவோட பென்ஷன் இருக்கு எங்களுக்கு! கஞ்சியோ, கூழோ அதுல நாங்க சமாளிப்போம்... உன் தயவில்லாமல் எங்களால் வாழ முடியும்!''

மாமியார் வெளியே வந்து அவள் பங்குக்கு ஆரம்பிக்க,

மாமியார் ஒரு தனி ரகம்...

உரத்துப் பேச மாட்டாள். ஓசைப்படாமல் சொல்லும் ரகம். 'நாசமாப் போக!' என்பதைக்கூட மென்மையாகத்தான் சொல்லுவாள்.

சுத்தமான அஹிம்சாவாதி!

அதற்கு மேல் அங்கு நிற்கப் பிடிக்காத சுபா, விருட்டென்று உள்ளே நுழைந்தாள்...

தீனமான முனகல் காதைத் தொட்டது.

ஓரிரு நிமிடங்கள் ரமணியை மறந்து போனது நினைவுக்கு வர, குற்ற உணர்வு நெஞ்சைக் குத்தியது.

திரும்பிப் பார்த்தாள். கட்டிலில் அவள் கணவன் ரமணி. ஒரு பக்கம் செயலிழந்த நிலையில் நாக்குக் கூடப் புரள முடியாமல் கிடக்கும் ரமணி.

மெல்ல நடந்து, கட்டிலில் போய் உட்கார்ந்து கொண்டாள். அவன் கேசத்தைக் கைகளால் தடவித் தந்தாள். நெஞ்சை அடைத்துக் கொண்டது. அவள் தலையில் அந்தத் தெய்வம் பெரிய பாறுங்கல்லைப் போட்ட அந்த ஏப்ரல் 14-ந்தேதி. தமிழ் வருடப் பிறப்பு நாளை மறக்கவா முடியும்...?

"என்னங்க, மணி ஏழாச்சு! இன்னுமென்ன தூக்கம்? எழுந்திருச்சுப் பல் தேய்ங்க!"

தேவிபாலா

கண்களை விழித்ததும் ரமணி கைகளைத் தேய்த்துப் பிரித்து, அதன் மேல் முதல் பார்வையைப் பதிய விடுவது வழக்கம்!

இடது கையை எடுத்து, வலக்கையை உயர்த்த அதில் உணர்ச்சியே இல்லை. தன் உடலுக்கே சம்பந்தமில்லாதது போல ஜில்லிட்ட நிலையில் ஓர் ஈரத் துணிபோல் அது தனியாகத் தொங்க... கால்களை அசைக்க முயற்சி செய்த போது, வலது கால் இருக்குமிடத்தில் உணர்வேயில்லை...

மிரண்டு போனான் ரமணி!

சுபாவிடம் ஏதோ சொல்ல முயற்சி செய்த போது, நாக்கு எழும்பவில்லை. ஒரு பக்கம் முகப்பகுதி விநோதமான கனத்துடன் நிற்க, முயற்சியில் ஈடுபட்ட அவன் வாய்ப் பகுதி தோல்வியைக் கண்டு துவள, அதன் கோணல் சுபாவை நிலைகுலைய வைத்தது.

சற்று நேரத்தில் டாக்டர் ஜெகதீசன் தமது பியட்டில் வந்து இறங்கினார்.

பிடிவாதமாக ஒரு மணி நேரம் சிகிச்சையைப் பிரயோகித்தும் மருத்துவம் கைவிரிக்க, உதட்டுச் சுழிப்போடு வெளிப்பட்டார்.

"என்ன டாக்டர் அவருக்கு?"

"உன் புருஷனா? சாரிம்மா, பெராலிடிக் அட்டாக் வந்திருக்கு... வலது பக்கம் விழுந்தாச்சு..."

சுபா போட்ட கூச்சலில், அந்த அவென்யூவே கிடுகிடுத்துப் போனது.

பிறகென்ன?

பெரிய, பெரிய நர்ஸிங் ஹோம்களில் சேர்க்கப்பட்டு, ஆயுர்வேதம் தொட்டு, மின்சாரம் வரை சகல விஞ்ஞானங்களையும் உபயோகித்தும், அத்தனை மருத்துவத்துக்கும் 'பெப்பே' காட்டியது ரமணியின் பக்கவாதம்.

ரமணியின் அலுவலகம் வீட்டில் கூடியது.

"சில விஷயங்களை நாங்க தீர்மானிக்கணும்!"

"சொல்லுங்க!" ரமணியின் அப்பா முன் வந்தார்.

"அவரால தன் உத்தியோகத்தை இனி தொடர இயலாது. அதனாலே..."

அப்பா அவசரப்பட்டார். "என் டாட்டர் படிச்சிட்டு வேலை இல்லாம இருக்கா... அவளுக்கு ஏற்பாடு பண்ண முடியுமா இந்த வேலையை?"

"ஏன் அவரோட மனைவி இல்லையா?"

"குடும்பத்துல யாராயிருந்தா என்ன? எங்க வசந்தி கிராஜுவேட்!"

"ஆனா சட்டத்துல அதுக்கு இடமில்லை. நாமினி அவங்க மனைவிதான். மிஸஸ் ரமணிக்குத்தான் அந்த உத்தியோகம் தர முடியும். அவரோட ஸேவிங்ஸை அவங்க பேர்ல மாத்திடறோம்."

சுபா குலுங்குக்குலுங்கி அழுதாள். அவள் கேட்டாளா இதை? ராஜா போல் கம்பீரமாக ரமணி போய்வர, வாசலில் நின்று 'டாட்டா' சொல்லும் சுபாவுக்கு இந்த நிலை தேவைதானா?

ஆயிற்று!

சுபாவும் வேலைக்குப் போகத் தொடங்கி ஒரு வருடம் போல முடிந்து விட்டது. ரமணியைப்போலவே, வாங்கும்சம்பளத்தை அப்படியே மாமனாரிடம் கொடுத்து விடுகிறாள்.

வெளியே எட்டு மணி நேரம் உழைத்தது போக, வீட்டிலும் வேலைச் சுமை. மாமியாருக்கு நின்றால் கால்வலி, நிமிர்ந்தால் வாயுப் பிடிப்பு! அவ்ள்து வியாதிக்குப் பக்கவாத்தியம் சேர்க்கும் வாயாடி வசந்தி!

காலை நாலு மணிக்குத் தொடங்கும் சுபாவின் நாட்கள், இரவு பதினொன்றுக்குக் கூட முடிவதில்லை...

ஆ... அப்படியே வியர்வை சொட்ட இரவைத் தொட்டு விடும் நாட்களில் மீதி நேரம்தான் என்ன உற்சாகம்?

"ரொம்ப வேலையாடா? நான் காலைப் பிடிச்சு விடட்டுமா? தைலம் போட்டு நெத்தியை உருவி விடட்டுமா?" கேட்க வேண்டிய ரமணி, பேச்சு கூட இல்லாமல் இவள் படுக்கைக்கு வரும் வரை பேந்தப்




**நா**ம் தினம் தினமும் உபயோகப் படுத்துகிற வார்த்தைகளையே கவிகளும் உபயோகப்படுத்துகிறார்கள். ஆனாலும் நம்முடைய பேச்சிலே கிடைக்காத அலாதியான நயம் அவர்களுடைய எழுத்திலே உண்டாகி விடுகிறது. நவ ரஸங்களிலும் உயர்ந்த பக்தி பாவங்களிலும் உத்தமமான எண்ணங்களிலும் நம்மைக் கொண்டு போய்ச் சொருகி ஆனந்தத்தை உண்டாக்குகிற சக்தி கவிகளுக்கு இருக்கிறது. அலங்காரம், இதைத் தமிழில் அணி என்று சொல்வார்கள். அலங்காரம் பண்ணினால் எப்படி ஸுமாராக இருக்கிற ஒரு பெண் கூட அழகாக ஆகிவிடுகிறாளோ அதே மாதிரி இந்தக் கவிகள் நாம் ஸாதாரணமாக உப்புச் சப்பில்லாமல் உபயோகிக்கிற வார்த்தைகளையும் கருத்துக்களையும் தங்களுடைய சாதுர்யத்தால் அலங்காரம் பண்ணி அழகான கவிதைகளாக, காவியங்களாக ஆக்கி விடுகிறார்கள். உவமை, உள்ளர்த்தம், த்வனிக்கச் சொல்லாமல் சொல்வது, இரண்டு அர்த்தத்தில் ச்லேஷை (சிலேடை) பண்ணுவது என்பதாகப் பல நகைகளைப் போட்டு, லலிதமான சப்தங்களை உடைய வார்த்தைகளால் தலைவாரி, புடைவை கட்டி, கவிதைக் கன்னிகையை நல்ல ஸௌந்தர்யவதியாகச் செய்து விடுகிறார்கள். அதனால் கவிதையை அழகுபடுத்தும் விதிகளைத் தரும் சாஸ்த்ரத்துக்கு அலங்கார சாஸ்திரம் என்றே பெயர். தமிழிலும் உவமை அணி, சிலேடை அணி என்றெல்லாம் 'அணி' என்றே சொல்கிறோம். தமிழில் உள்ள அணி நூலுக்கு "தண்டியலங்காரம்" என்றே பேர். தண்டி என்பவர் ஆயிரத்து இருநூறு வருஷங்களுக்கு முந்தி காஞ்சீபுரத்தில் இருந்த ஸம்ஸ்கிருதக் கவி; கவிதா சாஸ்திரத்தைப் பற்றி ஸம்ஸ்க்ருதத்தில் "காவ்யாதர்சம்" என்ற புஸ்தகம் எழுதியிருக்கிறார். அந்தப் புஸ்தகத்தை Base பண்ணிப் பெரும்பாலும் அதையே தழுவி எண்ணூறு வருஷங்களுக்கு முன்பு தமிழ் நாட்டில் ஒருவர் எழுதியது தான் தண்டியலங்காரம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

பேந்த விழித்துக் கொண்டு கண்ணீரோடு படுத்திருப்பான்.

அவனது உடம்பைத் துடைத்துவிட்டு, அசிங்கங்களை நீக்கி... வேறு உடை மாற்றி, பவுடர் போட்டு; படுக்கை விரிப்பை எடுத்து வேறு மாற்றி, சரி செய்வதற்குள் நள்ளிரவைத் தொட்டு விடுவாள் சுபா.

மறுபுறம் திரும்பிப் படுப்பதற்குள் விடிந்து விடும்!

"சுபா... நீ அந்த வீட்ல படற பாட்டை என்னால் சகிச்சுக்க முடியலைம்மா... பண சுகமும் இல்லை, மன சுகமும் இல்லை, உடம்பு சுகமும் இல்லை..." சுபாவின் அப்பா புலம்புவார்.

"நான் இல்லேன்னா அவர் கதி என்னப்பா, யோசிச்சுப் பார்த்தீங்களா?"

"ரமணி மட்டுமில்லம்மா... அந்தக் குடும்பமே நாறும்! கிழவனோட பென்ஷன் பல்பொடி வாங்கப் பத்தாது. இதுல சம்பள லிஸ்ட்டோட கணக்கு வேறே. முடியாதுன்னு சொல்லும்மா!"

"சண்டை வரும்பா!"

"வரட்டுமே! தூக்கிஎறிஞ்சிட்டு வெளியே வாம்மா! நீ இல்லாம அந்தக் குடும்பம் நாறட்டும்... நீ மனுஷியா, மாடா?"

"தப்புப்பா! அவரைப் பெத்தவங்களை நான் அம்போன்னு விட்டுட்டு வந்தா பாவம்பா... அவரால் பாதிக்கப்பட்டது நான் மட்டுமில்ல... அந்தக் கிழங்களும் தான்.. அந்தப் பொண்ணுக்கு ஒரு கல்யாணத்தைச் செஞ்சு வைக்கணும்... நான் வந்துட்டா யாருப்பா செய்வா?"

"அந்த உணர்வு அங்கே யாருக்கும் இல்லையேம்மா!"

"என்னோட போன ஜன்மத்துப் பாவம்னு நெனச்சு, மனசைத் தேத்திக்குங்கப்பா... பழி உணர்ச்சி வந்தால் எல்லாமே நொடியிலே முடிஞ்சு போயிடும்பா! நான் காலை வீசிப் போட்டு வெளியே நடந்தால் அங்கே இருக்கிற யாராலேயும் எதுவும் செய்ய முடியாது. செத்த பாம்பை அடிக்கிற மாதிரி, அவரோட இயலாமையைப் பயன்படுத்தி அவங்களை நான் பழி வாங்கறது என்னப்பா நியாயம்? என்னைச் சார்ந்து இருக்கிற குற்ற உணர்ச்சி, ஒருவேளை கோபமா வெடிக்குதோ என்னவோ?"

"அவருக்கு உடம்புதான் உணர்ச்சியில்லாமல் போச்சுப்பா. ஆனால் பார்வையும் மனசும் எல்லாத்தையும் பார்த்துக்கிட்டுத் தான் இருக்கும். அது துடிக்கிற துடிப்பு எனக்குப் புரியும்பா!"

**அ**ன்று சுபா, வீட்டுக்குள் நுழைந்த போது...

கார்த்திகேயன் இருந்தான்.

"ஹலோ சுபா... எங்கே போயிருந்தீங்க?"

"வந்து ரொம்ப நேரமாச்சா?"

"இல்லை! இப்பத்தான் வந்தேன்!"

"வாங்க அந்த அறைக்குப் போயிரலாம்!"

ரமணி படுத்திருந்த அறைக்குள் அவர்கள் நுழைந்ததும்,

மாமியார் வெளியே பேசுவது தெளிவாகக் காதில் விழுந்தது.

"பாத்தியாடீ கதையை! ஆண் பிள்ளை சிநேகம் வாசல்படி தாண்டி உள்ளே வந்தாச்சு!"

"படுக்கை வரைக்கும் போயாச்சுன்னு சொல்லும்மா!" என்று நாத்தனார் எடுத்துக் கொடுக்க,

சரேலென எழுந்தான் கார்த்திகேயன்.

"புருஷனுக்கும் ஒரு பக்கம் விழுந்தாச்சு... சத்தம் போட வழியில்லாமல் பேச்சும் போயாச்சு..."

"சுபா, ஏன் இவங்களைச் சும்மா விட்டு வச்சிருக்கீங்க? என்னவெல்லாம் பேசறாங்க? நான் போய் நாக்கைப் பிடுங்கிக்கற மாதிரி நாலு கேள்விகள் கேட்கட்டுமா?"

பதறினாள் சுபா...

திரும்பி ரமணியைப் பார்த்தாள்.

அவன் கார்த்திக் பக்கமாக இடது கண்ணை அசைத்து, தன் அருகே வருமாறு அழைத்தான்.

கார்த்திக் குழப்பத்துடன் கட்டில் அருகே போய் நிற்க, இடது கையால் படுக்கையில் தட்டி உட்காருமாறு சொன்னான் ரமணி.

உட்கார்ந்தான் கார்த்திக்.

தன் கையை மெல்லக் கார்த்திக்கின் தொடை மேல் வைத்து, இதழ் கோணச் சிரித்தான்... ஸ்நேகமாக அவனையும், சுபாவையும் மாறி மாறிப் பார்த்தான்.

முதலில் விழித்த கார்த்திக், அந்தச் சைகைகளை மெல்ல மெல்ல நெஞ்சுக்குள் வாங்கிக் கொண்டு, புரிந்து கொள்ளத் தொடங்கிய போது, உடம்பு சிலிர்த்தது.

"நான் சந்தேகமே படவில்லை என் நண்பனே! என் மனைவியைப் பற்றி எனக்குத் தெரியும் என்று சர்வ நிச்சயமாகச் சொன்னது அந்த உதட்டுக் கோணல். நீயும் அவளும் உன்னதமான நட்பை என்றும் தொடரலாம் என்று வாழ்த்தியது குளிர்ந்து, மெலிந்த அந்த இடது கை!"

"ஒடம்புதான் விழுந்து போச்சு சுபா... ஆனால் மனசு ரொம்ப உறுதியா இருக்கு!"

ரமணியின் விழியோரத்துத் துளியை மெல்லத் துடைத்த கார்த்திக் சட்டென எழுந்து கொண்டான்.

"வரட்டுமா சுபா... யு ஆர் லக்கி!"

வாசல் வரை போன சுபா பெருமிதம் பொங்க அவனுக்குக் கையசைத்தாள்!

இந்தக் கையசைப்புக்கு, கள்ளத்தனமான விமர்சனங்கள் காதோரம் வந்து முட்டும்...!

வரட்டுமே!

ரமணியின் நம்பிக்கை என்ற கவசம் இருக்கும் வரை எந்த அம்பும் சுபாவைத் துளைக்காது!

உள்ளே பரபரப்பாக நுழைகிறாள்... இனி, இரவுச் சமையலைக் கவனிக்க வேண்டும்...! இன்னும் சில நிமிடங்களில் அவளது மற்றொரு நாள் ஆரம்பமாகிவிடும்!





# ஊர்ப் பஞ்சாயத்து

**ஊ**ர்க் கூட்டமே அந்தப் பிள்ளையார் கோவில் அரச மரத்தடியில் கூடியிருந்தது.

பந்தயக் குதிரையைப் போல் நின்றிருந்த சின்னமணியைக் கேள்வியுடன் பார்த்தார் நாட்டாமை.

''ஐயா, நேத்து பொழுது சாயற வேளையில் சோளக்காட்டுக்குத் தண்ணீர் பாச்சிட்டு இருந்தேனுங்க. அந்த வழியா வந்த இந்தப் பொண்ணு தப்புக் காரியம் பண்றதுக்காக என்னைக்கட்டாயப்படுத்திச்சோளக்காட்டுக் குள்ளே கூப்பிட்டாள்ங்க.....!'' என்று அவமானத்தால் கூனிக் குறுகி நின்றிருந்த இளம் பெண் ராஜாத்தியைச் சுட்டிக்காட்டிப் பேசினான் சின்னமணி.

''என்ன தாயி..... இவன் சொல்றது நிஜந்தானா....? கம்முனு கெடந்தா எப்படி....?'' சின்னமணி செரல்வது பொய்யென்று தெரிந்தும், கடமைக்காகக் கேட்டு வைத்தார் நாட்டாமை.

ராஜாத்தியின் கண்களிலிருந்து இரண்டு சொட்டுக் கண்ணீர் மட்டுமே பதிலாகக் கிடைத்தது.

''நாட்டாமை ஐயா! என் மகள் தாழ்ந்த ஜாதிப் பொண்ணு. அதுவுமில்லாமல் நாங்க ஏழைங்க.... அந்த மாரியாத்தாளையும் உங்களையும்விட்டா எங்களுக்கு நாதிகிடையாது. என் மகள் உத்தமி! நீங்கதான் காப்பாத்தணும்....!'' என்று ராஜாத்தியின் வயசான தகப்பன், நாட்டாமையின் காலில் விழுந்து கதறினான்.

''இதோ பாருடா சின்னமணி, இந்தப் பொண்ணைப் பார்த்தா அந்த மாதிரி பொண்ணுகத் தெரியலே..... நல்லா யோசனை பண்ணிச் சொல்லுடா.....'' ஆயிரக்கணக்கான பஞ்சாயத்துக்களைக் கண்ட அனுபவத்துடன் பேசினார் நாட்டாமை.

''போன வருஷம் ஆடி மாசம் வாக்குல நான் இவளோட கையைப் பிடிச்சு இழுத்துட்டதுக்கு, இதே பஞ்சாயத்துல என்னை நிறுத்தி, ஐந்நூறு ரூபாயும், ஒரு மூட்டை நெல்லும் 'குத்தம்' வச்சீங்களே, மறந்து போச்சா....? இந்தக் கைகாரியை நல்லவள்னு சொல்றீங்களே, அதை உங்களாலே நிரூபிக்க முடியுமா?'' என்று பழியுணர்ச்சியுடன் பாய்ந்தான் சின்னமணி.

''டேய் சின்னமணி! அநியாயமா ஒரு கன்னிப் பெண்ணோட வாழ்க்கையை நாசமாக்கிடாதே.... பஞ்சாயத்தை வாபஸ் வாங்கிக்கடா...!'' என்று புணிவு கலந்த உரிமையுடன் பேசினார் நாட்டாமை.

''இவ நல்ல பொண்ணு, கன்னிப் பொண்ணுன்னு வாய்க்கு வாய் சொல்றீங்களே, அதை நிரூபிச்சுட்டுப் பஞ்சாயத்தைக் கலைச்சிடுங்க. இல்லேன்னா, ஏழு ஊர்ப் பஞ்சாயத்தைக் கூட்டி உங்க மானத்தையும் சேர்த்து வாங்கிடுவேன்!'' உடும்பாக உட்கார்ந்தான் சின்னமணி.

''இவள் நல்லவள்னு நிரூபிக்கணும் அவ்வளவுதானே!'' தனது இடுப்பு முடிப்பிலிருந்து ஒன்றே கால் ரூபாயை எடுத்து, ராஜாத்தியின் தகப்பனை அழைத்து, ''உங்க



பொண்ணு ராஜாத்தியை, என் மகன் ராமனுக்கு வர்ற சித்திரையில கல்யாணம் முடிக்கப் போறதா முடிவு பண்ணிட்டேன்....! இந்த ஒன்றே கால் ரூபாயை அச்சாரமா வாங்கிக்கங்க....!'' என்று சொல்லி பெரியவரின் கையில் காசைத்திணித்தார் நாட்டாமை.

''ஐயா! எங்க ஜாதி....?''

திகைப்புடன் கேட்டார் பெரியவர்.

''தெரியும் பெரியவரே, நீதியைக் காப்பாத்தணும்னா, 'ஜாதி'யைப் பார்த்தால் முடியுமா?'' என்று உறுதியாக உதிர்ந்தது நாட்டாமையின் வார்த்தைகள்.

ஆயிரம் பேய் அறைந்த அபூர்வ சின்னமணியைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது!

— சீதாலட்சுமி நீலமேகம்



* இதுபோன்ற பள்ளங்கள் ஏராளம்



* பள்ளத்தை வேலியிட்டுப் பாதுகாப்போம்!

போ
துட
போ
மோ
ளுட
ளவே
அ
சாலை
ம
நீர்

# சபிக்கப்பட்ட செ

எ

சா

* எலிபன்ட்கேட்தெருவா? எருமைமாடுகள்தெருவா?

**— விமோசனம் உண்**

**சாந்தா ஷீலா நாயர் பே**

"சூன் தியேட்டர் ப
துல கிரியப்பா தெருன்னு இ
குதுங்க. அங்க வந்து கொ
பாருங்க! ஒரே குப்பையும்
கடைத் தண்ணியுமா தே
போய்ப் பன்னிங்களா மே
மூளைக் காய்ச்சல் பன்னிக
தான் பரவுதுன்னு வேறே
சொல்லிக்கிட்டிருக்காங்க.
ளாட்சித் துறை அமை
கே.ஏ.கே. தொகுதியிலே
படி இருக்குதுங்களே —
இதைப் பத்தி ஏதாச்சும் எ
கூடாதா?" —

நமது அலுவலகத்து

* இது சாலையா? இல்லை சாக்க



...சகர் ஒருவர் ஆதங்கத்
...கிரியப்பா சாலேக்குப்
...து, சில பகுதிகள் படு
...லும் மற்ற சில சாலேக
...குகையில் அது எவ்வ
...ன்று தோன்றியது.
... நகரில் சபிக்கப்பட்ட
...ம்?
...ல் முழங்கால் அளவு
...ங்கி நிற்க, வெள்ளே

# ...னச் ...கள்!



...லிங்கம் தெரு — அடையாறு, தெரு என்ற பெயரில் ஓர் அசிங்கம்.



...ு பிள்ளே தெரு.

வெளேர் யூனிஃபார்ம் கான்வாஸ் ஷூஸ் சகிதம் அந்தப் பகுதியைக் கடக்க முடியாமல் தவிக்கும் மாணவர்களின் சங்கடத்தைச் சொல்வதா?

ஒரு மழையில் சாலே அரிக்கப்பட்டுக் கருங்கல் ஜல்லி விழித்துக் கொண்டு பிதுங்கி நிற்க, அதில் செல்லும் சைக்கிள், மற்றும் சைக்கிள் ரிக்ஷாக்களின் சக்கரங்கள் தினந்தோறும் பங்சர் ஆகி, டியூப் கிழிந்து செலவு வைக்கும் கஷ்டத்தைச் சொல்வதா?

குண்டும் குழியும் நிறைந்த சாலேகளில் ஸ்கூட்டர், மோட்டார் பைக்கின் பின் சீட்டில் உட்கார்ந்து செல்லும் பிரயாணிகளின் முதுகெலும்பு குலுக்கியெடுக்கப்படும் பரிதாபத்தைச் சொல்வதா?

மாறி மாறி ஃபோன் இலாக்கா, எம்.ஈ.எஸ். அல்லது குடிநீர் வாரியம் 'ரிப்பேர்' என்ற பலகையிட்டு ரோடுகளேத் தோண்டி வைக்க, கார் மற்றும் இதர வாகன ஓட்டிகள் வளேந்தும் நெளிந்தும் 'ஆப்ஸடகில் ரேஸ்' ஓடுவதைச் சொல்வதா?

திருமலேப் பிள்ளே சாலே — ஹபிபுல்லா சாலே சந்திப்பில் ஒரு பெரிய பள்ளம் கான்கிரீட் வேலியால் 'அழகாக' மூடப்பட்டுப் பல வாரங்களாகக் கவனிப்பாரற்றுக் கிடப்பதைச் சொல்வதா?

இத்தனே கேள்விகளே மனத்தில் தேக்கி கார்ப்பரேஷன் கமிஷனர் சாந்தா ஷீலா நாயரைச் சந்தித்தோம். சாலேப் பிரச்னேகளேப் பற்றி அவர் பேசியதிலிருந்து ஒரு விஷயம் நன்ருகப் புரிந்தது: பொது மக்கள் அன்ருட வாழ்க்கையில் போராடுவதைப் போல் கார்ப்பரேஷனும் போராடிக் கொண்டுதான் இருக்கிறது! —

கே: கார்ப்பரேஷனின் வருடாந்திர செலவு என்ன? அதில் சாலேகள் போட மற்றும் பராமரிக்க எவ்வளவு ஒதுக்கப்பட்டுள்ளது?

ப: 1985 — 86 இல் கார்ப்பரேஷன் பதினேந்து கோடி ரூபாய் செலவழித்திருக்கிறது. இதில் சுமார் எட்டு கோடி ரூபாய் சாலேகளுக்கென்று செலவழித்ததோடு, சென்ற ஆண்டு வெள்ளத்தால் நிறையச் சேதம் ஏற்பட்டதால் அதிகப்படியாக மூன்று கோடி உபயோகித்தோம்.

கே: புதிய சாலேகள் போடவும், பராமரிக்கவும் இந்தத் தொகை போதுமானதா?

ப: நிச்சயமாகப் போதாதுதான்! சென்னே நகரில் சுமார் 1600 கி.மீ. சாலேகள் உள்ளன. முறையாக இவற்றைப் பராமரிப்பதென்ருல் ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை ஒவ்வொரு சாலேயையும் முற்றிலுமாகப் புதுப்பிக்க வேண்டும். இதற்கு ஒவ்வொரு வருடமும் பத்து கோடி ரூபாய் தேவைப்படும். ஆனுல் கார்ப்பரேஷனின் மொத்த செலவே பதினேந்து கோடிதான்! புதிய சாலேகள் போடுவது என்பது அபூர்வம். புதிய காலனிகள் உருவாகும் இடங்களில் சாலேகள் அமைக்கச் சுமார் ஐம்பது முதல் எண்பது லட்சங்கள் செலவழிக்கிருேம்.

பம்பாய், தில்லி போன்ற நகரங்களில் எப்படிச் சமாளிக்கிருர்கள் என்று கேட்பீர்கள். பம்பாய் கார்ப்பரேஷனின் வருடாந்திரச் செலவு அறுநூறு கோடி ரூபாய். இதற்கு முக்கியக் காரணம் அவர்கள் Octroi எனப்படும் கலால் வரி வசூலிப்பதுதான். octroi மூலம் அவர்களுக்கு 200 — 300 கோடி கிடைக்கிறது. சென்னேயில் octroi வசூலிப்பதில்லே.

பெங்களூர் கார்ப்பரேஷனும் octroi விதித்துக் கொண்டிருந்தது. இப்போது அதை நிறுத்திவிட்டாலும் அதன் மூலம் நேரும் இழப்பைக் கர்நாடக அரசு ஈடு செய்து விடுகிறது. அஹமதாபாத் போன்ற

* சாந்தா ஷீலா நாயர்

# 6 இங்கே மனிதர்கள் உயிர் வாழவே போராடிக் கொண்டிருக்கும்போது அவர்களிடம் சுத்தம் பற்றிப் பேசி என்ன பயன்? 9

நாயக உரிமை! — ரங்கநாதன் தெரு.

* நடுத்தெருவிலே குப்பையைக் கொட்டுவது இல

சில சிறிய நகரங்களின் கார்ப்பரேஷன்கள் கூடச் சென்னை கார்ப்பரேஷனை விட அதிகம் செலவழிக்கின்றன.

கே: கார்ப்பரேஷனின் வருமானத்தில் பெரும் பகுதி சொத்து வரி (Property Tax) வசூல் மூலம் கிடைக்கிறது. இந்த வரி வசூலில் நிறைய ஊழல் இருக்கிறது. வீட்டு வரி வசூலிக்க வரும் ஊழியர்கள் வீட்டின் சொந்தக்காரர்களிடம் லஞ்சம் வாங்கிக் கொண்டு வீட்டின் மொத்த பரப்பளவுக் கணக்கைக் குறைத்து எழுதிக் கொடுக்கிறார்களாம். இதனால் கார்ப்பரேஷனுக்கு வருவாய் குறைகிறது. வீடு கட்டுவதற்கு முன்னும், விஸ்தரிப்பதற்கு முன்னரும் கார்ப்பரேஷனின் அனுமதி பெற வேண்டும் என்ற விதி இருப்பதால் ஒவ்வொரு வீட்டின் பரப்பளவும் கார்ப்பரேஷன் கணக்குகளில் இருக்கும். இதோடு வரித் தொகையை ஒப்பிட்டு ஏமாற்றுவோரையும் லஞ்சம் வாங்குவோரையும் கண்டுபிடித்துத் தண்டிக்கலாமே?

ப: ஒவ்வொரு முறையும் ஒப்பு நோக்கிச் சரி பார்ப்பது கடினமான காரியம். இயன்ற வரை இந்த ஊழலைத் தடுக்கப் பாதுகாப்பு நடவடிக்கை எடுக்கிறோம். கேள்விகள் எழுப்பினால் சம்பந்தப்பட்டவர்கள் உடனே நீதிமன்றத்துக்குப் போய் 'Stay' வாங்கிவிடுகிறார்கள். எங்களுக்கு வரும் கொஞ்சம் வருவாயும் நின்று போய்விடும். சொத்து வரி (Property Tax) சட்ட அமைப்பைத் திருத்தி அமைக்க முடியுமா என ஆராய்ந்து வருகிறோம். இங்கு இன்னொன்றையும் சொல்ல விரும்புகிறேன் — கார்ப்பரேஷனில் சிலர் லஞ்சம் வாங்குவது உண்மையாக இருக்கலாம். ஆனால் பொது மக்கள் ஏன் அதற்கு இடமளிக்க வேண்டும்?

கே: அஸோஸியேடட் மில்லரின் சாலை போடும் மிஷினைத் தருவித்து அண்ணா சமாதி அருகே அதை இன்னொரு சமாதியைப் போல் நிறுத்தி வைத்திருப்பதாகச் சட்ட சபையில் பேசியிருக்கிறார்கள். அந்த மிஷின் எவ்வளவு தூரம் உபயோகமானது? சிக்கனமானது? குறுகலான சாலைகளில் அதைப் பயன்படுத்த முடியுமா?

ப: அந்த மிஷின் ஒரு காண்ட்ராக்டருக்குச் சொந்தமானது. வழக்கப்படி டெண்டர் கேட்டுத்தான் அந்தக் காண்ட்ராக்டருடன் ஒப்பந்தம் செய்து கொண்டோம். அது சிறிது காலத்துக்கு ஓய்வாக நிற்பதால் கார்ப்பரேஷனுக்கு எந்த நஷ்டமும் கிடையாது.

சாலையின் மேல்பரப்பில் சூடேற்றி, சிறிதளவு சுரண்டி எடுத்து அதனைத் திரும்பவும் உபயோகிக்கக் கூடியது இந்த மிஷின். ஆனால் சாலை ஏற்கெனவே ஓரளவு கனமுள்ளதாக இருக்க வேண்டும். கனம் குறைவான சாலைகளைச் சுரண்ட முடியாது. இதனால் பிரமாதமாக லாபம் இல்லாவிட்டாலும்

* இதுவும் சென்னை சாலைதான்! (பெஸன்ட் அவென்யூ).

போடப்படும் சாலைகளின் தரம் நிச்சயமாக இன்னும் உயர்வாக இருக்கும். கிண்டி ராஜ்பவன் ரோட், காமராஜர் சாலை போன்ற இடங்களில் நீங்களே பார்த்திருப்பீர்கள்.

குறுகலான சாலைகளில் அதைப் பயன்படுத்துவது பற்றிக் கேட்டிருக்கிறீர்கள். பதினைன்று அல்லது பதினைந்தரை அடி அகலச் சாலைகளில் இதை உபயோகிக்கலாம். ஆனால் சாலையில் கனம் இருக்க வேண்டும்.

கே: பழுது பார்க்கப்படும் சாலைகளும் புதிதாகப் போடப்படும் சாலைகளும் ஒரு மழையைக் கூடத் தாங்குவதில்லையே?

ப: மழை மட்டும் அதற்குக் காரணமல்ல., சாலை போட உபயோகிக்கப்படும் bitumen என்ற மூலப்பொருள் தட்பவெப்ப நிலைக்கேற்ப மாற்றங்களுக்கு உள்ளாகிறது. இதனாலும் சாலைகள் பாதிக்கப்படுகின்றன. இதைத் தவிர்க்க வேண்டுமானால் கான்க்ரீட் சாலைகள் தான் போட வேண்டும்! அவை நமக்கு எட்டாக் கனி என்பதைச் சொல்லத் தேவையில்லை. மேலும், 25 மில்லி மீட்டர் மற்றும் 40 மில்லி மீட்டர் கனத்தில் இரு வகைச் சாலைகள் போடுகிறோம். அதிக கனமுள்ள சாலைகள்தான் பஸ் லாரி போன்ற கனரக வாகனப் போக்குவரத்தைத் தாங்கக் கூடியவை. ஆனால் 25 எம். எம். சாலை ஒன்றைப் புதிதாகப் போட்டால் அல்லது சரி செய்தால் உடனே அதில் அனுமதி இன்றியே பல்லவன் பஸ்களை ஓடவிடுகிறார்கள். இதனால் சாலையின் ஆயுள் குறைந்து விடுகிறது.

சாலைகள் சீக்கிரமே பழுதாகிவிட இன்னொரு காரணம் அவற்றை அடிக்கடி தோண்டிக் கொண்டே இருப்பதுதான். மின் வாரியம், டெலிபோன் இலாகா, குடிநீர் வழங்கும் மற்றும் கழிவுநீர் அகற்றும் வாரியம் ஆகியன சாலைகளைத் தோண்டியெடுத்து வேலை செய்து கொண்டே இருக்கின்றன. அவர்களை நான் தடை செய்ய முடியாது. அப்படிச் செய்தால் அது பொது மக்களுக்குத்தான் பெரிய இடைஞ்சலாக இருக்கும்! பழுது பார்க்கும் பணி முடிந்ததும் சாலையின் அந்தப் பகுதி மட்டும் மீண்டும் சரி செய்யப்படுகிறது. ஒவ்வொரு முறை வெட்டும் போதும் சாலையில் மாறாத வடுவை நாம் ஏற்படுத்துகிறோம். பிறகு எவ்வளவுதான் சிறப்பாகச் சரி செய்தாலும் இந்த வடு இருந்து கொண்டேதான் இருக்கும். சாலையில் ஒரு லேசான ஏற்ற இறக்கம் இருக்கும். அந்தப் பகுதி சீக்கிரமே திரும்பவும் பழுதாக வாய்ப்பும் இருக்கிறது.

கே: டெலிபோன், மின் துறை மற்றும் MMWSSB யுடன் நீங்கள் ஓர் உடன்பாட்டுக்கு வரலாமே. ஒரு சாலையைச் சீர் செய்வதற்கு முன்னால் இந்த இலாகாக்களுக்குத் தெரிவித்தால் அவர்கள் தங்கள் வேலைகளை முன் கூட்டியே முடித்துக் கொள்வார்களே.

ப: இதுநாள்வரை அப்படிச் செய்யாமல் இருந்தோம் என்று நினைக்கிறீர்கள்? எல்லாவற்றையும் மீறித்தான் சாலைகள் வதைபடுகின்றன! இப்போது கூட பாந்தியன் ரோடில் நாங்கள் வேலை ஆரம்பிப்பதற்கு முன்னால் இதர இலாகாக்களைத் தங்கள் வேலைகளை முடித்துக் கொள்ளும்படி சொல்லியிருக்கிறோம். ஒவ்வொரு மாதமும் இந்த மூன்று இலாகாக்களுடனும் இணைந்து 'மீட்டிங்' நடத்துகிறோம்.

கே: பழுது பார்க்கும் பணிகளை இரவு நேரங்களில் செய்தால் போக்குவரத்துக்கு இடைஞ்சல் இல்லாமல் இருக்குமே?

ப: இதையும் முயன்று பார்த்திருக்கிறோம். ஆனால் அது வெற்றிகரமாக இல்லை. இரவு நேரங்களில் செய்யப்படும் வேலையின் அளவு குறைவாக இருப்பதோடு, சாலை போடுவதில் ஈடுபடும் பெண் ஊழியர்களுக்கு இதனால் சிரமம் அதிகம். குழந்தை குட்டிகளுடன் வேலைக்கு வரும் இவர்களது கஷ்டத்தை நினைத்துப் பார்க்க வேண்டும். ஒரு தொழிற்சாலை ஊழியனைப் போல் 'நைட் ஷிஃப்ட்' பார்க்கும் பழக்கம் இவர்களிடையே இன்னும் ஏற்படவில்லை.

கே: ஒவ்வொரு வருடமும் மழைத் தண்ணீர் சாலைகளில் தேங்கிப் போக்குவரத்துக்கும் பாதசாரிகளுக்கும் ஏகப்பட்ட இடையூறு செய்கிறதே. மழை 'சீசன்' ஆரம்பிப்பதற்கு முன்னரே முன்னெச்சரிக்கை நடவடிக்கை எடுக்கக் கூடாதா?

ப: எடுக்கலாம். எடுத்துக் கொண்டுதான் இருக்கிறோம். ஆனால் 1600 கி. மீ. சாலைகளுக்கு நானூறு கி. மீ. அளவுதான் மழை நீர் அகற்றும் சாக்கடைகள் (storm water drains) உள்ளன. இவை போதவே போதாது. இந்த லட்சணத்தில் அவரவர் வீட்டுக் கழிவு நீரையும் இந்தச் சாக்கடைகளில் திருட்டுத்தனமாக இணைத்துவிடுகிறார்கள். இதனால் மழைக்காலத்தில் ஏகப்பட்ட தொல்லை. மேலும் நமது சாலைகளில் கிடக்கும் கண்ட குப்பைகளும் சாணியும் வேறு சேர்ந்து அடைப்புக்களை ஏற்படுத்துகின்றன.

கே: பொது மக்களிடையே சுகாதார உணர்வையும், நமது நகரத்தைத் துப்புரவாக வைத்துக் கொள்ள வேண்டும் என்ற உணர்வையும் ஏற்படுத்தப் பல நடவடிக்கைகள் எடுத்தீர்கள். அவை நீடித்து நிலைக்கவில்லையே, அவற்றால் எந்த மாற்றமும் நிகழ்ந்ததாகத் தெரியவில்லையே?

ப: சுகாதார உணர்வை ஏற்படுத்துவது என்பது அவ்வளவு சுலபமான காரியமில்லை. வேரூன்றிப் போன பழக்கங்கள் மாறத் தலைமுறைகள் ஆகலாம். 'சிங்கப்பூரில் முடிகிறதே' என்பார்கள். ஒரு ஜனநாயக நாட்டில் தொட்டதற்கெல்லாம் அபராதம் விதிப்பது என்பது சாத்தியமில்லை. மேலும் இந்தச் சுகாதாரப் பிரச்னையின் வேர் பொரு

ளாதாரத்தில்தான் இருக்கிறது. இங்கே மனிதர்கள் உயிர் வாழவே போராடிக் கொண்டிருக்கும் போது அவர்களிடம் சுத்தம் பற்றிப் பேசி என்ன பயன்? அதற்காகப் படித்த, வசதியுள்ளவர்கள் ரொம்ப சரியாக நடந்து கொள்கிறார்கள் என்று சொல்லிவிட முடியாது. அவர்கள் குறைந்த பட்சம் இந்த எளியவர்களுக்கு வழிகாட்டிகளாக விளங்கலாம். அதைக் கூட அவர்கள் செய்வதில்லை.

கே: கழிப்பிடங்களை நவீனப்படுத்தி, இருபத்து நாலு மணி நேரமும் தண்ணீர் கிடைக்கும்படி செய்தாலே பெரிய உபகாரமாக இருக்குமே?

ப: எல்லாம் செய்யலாம். ஆனால் பொது மக்கள் ஒத்துழைப்பு தேவை. கழிப்பிடங்களில் கண்ட குப்பைகளைப் போடாமல், அங்குள்ள குழாய்களையும் பம்புகளையும் திருடிக் கொண்டு போகாமல் இருந்தாலே பெரிய உபகாரமாக இருக்கும். இந்தப் 'பம்புத்' திருட்டைச் சமாளிக்க இப்போது சில கழிப்பிடங்களில் submersible பம்ப்செட்டுகளைப் பூமிக்கடியில் அமைக்க ஏற்பாடு செய்துள்ளோம். குழந்தைகளுக்கென்று பிரத்தியேகமாகச் சுமார் எண்பது கழிப்பிடங்களைக் கட்டித் தந்திருக்கிறோம். அதே இடங்களில் பெண்களுக்குத் துணி துவைக்கும்வசதியும்செய்து தந்திருக்கிறோம். துணி அலசும் தண்ணீரே கழிப்பிடத்தைச் சுத்தம் செய்யும் வகையில் இவை அமைந்துள்ளன. மேலும் 'சுலப் இன்டர்நேஷனல்' என்ற காந்தீயக் கொள்கையுடைய தனியார் நிறுவனம் காண்டிராக்ட் அடிப்படையில் கழிப்பிடம் ஒன்றைப் பராமரித்து வருகிறது. குறைந்த கட்டணம் வசூலித்து, சுத்தமாகக் கழிப்பிடங்களை வைத்துள்ளது. கட்டண வசூலில் குறியாக இல்லாததால் 'ஜி. என். செட்டி ரோடில் உள்ள இந்தக் கழிப்பிடம் நன்றாகவே பராமரிக்கப்பட்டு வருகிறது.

எவ்வளவுதான் முயற்சிகள் எடுத்துக் கொண்டாலும் எங்களால் மட்டுமே எதையும் சாதித்துவிட முடியாது. இது நமது நகரம், இதன் பராமரிப்பில் நமக்கும் பங்கு இருக்கிறது என்ற உணர்வு மக்களுக்கு இருக்க வேண்டும். எல்லோரும் பெடிஷன் போடத் தயாராய் இருக்கிறார்கள்; நாங்கள் வரி செலுத்துகிறோம்; எங்களுக்கு உரிமை உண்டு என்று முழங்குகிறார்கள். பத்து ரூபாய் வரி செலுத்தும்ஒவ்வொருநபருக்கும்கார்ப்பரேஷன் ஐம்பது ரூபாய் செலவு செய்கிறது! காரியார்த்தமாக உதவ முன்வருவோர் மிகக் குறைவே. ஒரு பெண்மணி தன் வீட்டின் முன்னால் உள்ள தெருவைப் பலர் கழிப்பிடமாகப் பயன்படுத்துவதாக முதலில் புகார் செய்தார். ஓரிரு முறை நடவடிக்கை எடுத்தும் பலனில்லை. உடனே அவரும் அவர் பெண்களும் ஒவ்வொரு நாளும் காலையில் துடைப்பமும் கையுமாகத் தெருவிற்கு வந்து கூட்ட ஆரம்பித்தார்கள். அசிங்கம் செய்தவர்கள் அவமானப்பட்டுப் போய் அங்கு வருவதை நிறுத்தி விட்டார்கள். இவ்வளவையும் செய்த அந்தக் குடும்பத்தினர் எங்களுக்கு நன்றி தெரிவித்து வாழ்த்து அனுப்பினார்கள்!

— நமது நிருபர்கள்

புகைப்படங்கள்: கே.வி. ஆனந்த்; சென்னை மக்களிடையே, சென்னை நகரின் பல்வேறு பிரச்னைகள் பற்றி ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தி வரும் 'கன்ஸ்யூமர் ஆக்ஷன் க்ரூப்' நடத்திய புகைப்படக் கண்காட்சியில் இடம் பெற்றிருந்த போட்டோக்கள் சிலவும் இங்கே இடம்பெற்றுள்ளன.

மேலட்டை வண்ணப்படங்கள்: யோகா



# ஓடங்கள்

செந்தாமரை ஒரு கட்சித் தலைவர். வெ.ஆ.மூர்த்தி ஒரு கட்சித் தலைவர். பாம்பு × கீரி. இவருடைய மகளும், அவருடைய மகனும் காதலித்து வீட்டை விட்டு ஓடி, மனோரமாவிடம் அடைக்கலம் புகுந்து, அங்கே குழந்தை பெற்று, அங்கிருந்து புறப்பட்டு, சிறையிலிருந்து செந்தாமரையைக் கொல்வதற்காகவே தப்பித்து வந்திருக்கும் ராதாரவியின் உதவியுடன் வீட்டுக்குத் திரும்பி வந்து, சமரசத்தில் ஈடுபடப் பார்க்க, முயற்சி தோல்வியுற்று, செந்தாமரை ராதாரவியை டுமீல்! டுமீல்! ராதாரவி செந்தாமரையை டுமீல்! டுமீல்!

ஹையோ, ஹையோ! நாயகன் ஸ்கூல் பையன்! நாயகி ஸ்கூல் பெண்! இருவரும் மோதிக் கொண்டு முத்தமிடுகிறார்கள். என்ன ஓர் அழுத்தமான முத்தம் என்கிறீர்கள். வரவர சென்ஸார் குழுவினரின் குறட்டை சப்தம் பலமாகக் கேட்க ஆரம்பித்து விட்டது. இனிமேல் என்ன, கோ—எஜுகேஷன் பள்ளிகளில் எல்லாம் படிப்பாவது ஒன்றாவது!

நாயகி புதுமுகம் நவீனா. அமீர்ஜான் சாட்டையும் கையுமாக நின்றிருப்பார் போலிருக்கிறது, அவரிடமிருந்து நடிப்பை வரவழைக்க. பயந்து கொண்டே சிரிப்பு. பயந்து கொண்டே நடிப்பு. இவரை ஹீரோயினாகப் போட்டதற்கு புதுமுக ஹீரோ சஞ்சய்க்கே பெண் வேஷம் போட்டு, ஹீரோ ஹீரோயின் இருவரும் ஒருவரே என்று சொல்லியிருந்தால் புதுமை. ஹீரோவின் முகத்தில் பெண்மை அவ்வளவு வழிகிறது! ஏன் டைரக்டர் சார், கொஞ்சம் மீசையாவது ஒட்ட வைத்திருக்கக் கூடாது? மற்றபடி டூயட், டான்ஸ், சண்டை என்று எல்லாவிதத்திலும் ஹீரோவிற்கு பாஸ் மார்க்.

இட்லிக் கடை மனோரமாவை மறக்க முடியாது. அந்த நடுங்கும் குரல், தொள தொள ரவிக்கையுடன் வரிந்து கட்டிய புடைவையுடன் சண்டைக்குப் போகும் பாங்கு, அட, அடா..... அவர் பாடும் முதலிரவுப் பாட்டும் அப்படியே. ஜோரே ஜோர். அவரைப் போய் ரத்தம் சிந்த வைத்துச் சாகடித்திருக்கிறார்கள். அனாவசியமான பாத்திரக் கொலை. குற்றவாளி: டைரக்டர்! இரட்டை அர்த்த வசனங்கள் அங்கங்கே. (மாவாட்டும் ஸீன்) இளைஞர்களுக்குப் புத்திமதிப் பால் புகட்டும் வைரமுத்துவா இப்படி எழுதுவது? வெட்கம், வெட்கம்.

அந்தத் திமிரான கம்பீரம், எகத்தாள நடை, குதர்க்கப் பேச்சு எல்லாம் சந்தேகமின்றிச் செந்தாமரைக்கே சொந்தம். அவர் முன்னால் வெ.ஆ. மூர்த்தி சிங்கத்திற்கு முன்னால் எலி.

சந்தடி சாக்கில் இன்றைய அரசியல்வாதிகள் சிலரை மறைமுகமாகத் தாக்கி டைரக்டர் ஓர் ஆத்ம திருப்தியைத் தேடிக் கொண்டு விட்டார் போல. (உதாரணம் செந்தாமரையும் அந்தப் பெண் அரசியல்வாதியும் சந்திக்கும் இடம்.)

பாடல்களில் தாலாட்டுப் பாட்டு இனிமை. மனோரமா பாடும் முதலிரவுப் பாட்டு புதுமை. சம்பத் செல்வம் என்று அறிமுக இசையமைப்பாளர்கள்.

ராதாரவி முதலில் புரொஃபசர் — (தென்றல்) அப்புறம் கொலைகாரர் — (புயல்). புரொஃபசர் வேஷத்தில் பார்க்கும்போது ஒருமாதிரி இருக்கிறது.

இடைவேளைக்குப்பின் வெ.ஆ. மூர்த்தி என்ன ஆனார்? க்ளைமாக்ஸில் ஏன் அத்தனை போலீஸ்காரர்களும் துப்பாக்கியுடன் மார்ச் பாஸ்ட் செய்கிறார்கள் என்பது போன்ற சில கேள்விகளை எல்லாம் மறந்துவிட்டால் ஓடங்களைக் கரை சேர்த்துவிடலாம்.

— ஜெயமன்மதன்

# மிரண்டவன்

கடை மூடியிருந்தது. அண்ணாமலையின் கடை. மேலிருந்து கீழாக மூடுகிற கதவு. அதைத் தூக்கி முட்டுக்குச் சவுக்கை வைத்தால் திறந்தாயிற்று. வெளியே வாங்கிப் போக ஜனம் நின்றிருக்கிறது. நான்கணா எண்ணெய். பத்து காசு காப்பித்தூள். ஒற்றைத்தக்காளி. ஆழாக்கு அரிசி. கஞ்சிக்குப் பதிலாக கொடுக்கப்பட்ட அஞ்சு காசுக்கு மிட்டாய். நண்டும், சிண்டுமாய் பரட்டை ஜனம். கடை திறக்கவில்லை. கதவுக்கடியில் வெளியே மூட்டை ஒன்று எப்போதும் இருக்கிறது. உப்பு மூட்டை. இந்தக் காலத்திலும் உப்பை யாரும் திருடுவதில்லை. சமயங்களில் அதன் மேல் நாய் ஒன்று சுருண்டிருக்கும். வாங்கிப் போக பொது ஜனம் நிற்கிறது. அண்ணாமலையின் பையன் சிட்டி ஊதுவத்தி கொளுத்தி, தராசுத் தட்டில் கற்பூரம் எரித்து போணி செய்தபின் கடை திறக்கும்.

எழுந்திருக்க நேரமாகி விட்டது. சிட்டி பல் துலக்கி விபூதி பூசியிருந்தான். அவன் தினமும் காலை இருட்டில் பித்தளைத் தூக்கும், நாய் பயமுமாய் வாடிக்கைகளுக்குப் பால் ஊற்றுகிறவன். பள்ளி நேரம் தவிர மற்ற நேரங்களில் கடையையும் பார்த்துக் கொள்கிறான். பொறுப்பு உணர்ந்த பிள்ளை, சுமாராக மார்க்கும் வாங்கி விடுகிறான்.

“எத்தினி பேரு நிக்கிறோம்? கடையத் தொறங்க. எம்மாந் நேரம் நிக்கிறது?”

“பாரேன் லேட்டு பண்றதை. கடைக்கார், சீக்கிரம் கடை தொற. நீ எப்போ கொடுத்து எப்போ ஆக்கிப் போடறது? டூட்டிக்கு லேட்டாயிடுச்சி. அது எந்திரிச்சா அப்படியே சோத்துக்கு உக்கார்ந்துக்கிடும். ஆயிரம் ஜோலி கிடக்குது. கடையத் தொற.”

“யோவ், கடையத் தொறய்யா.”

“யாரது?” கதவைத் தூக்கி அண்ணாமலை எட்டிப் பார்த்தான். “அட நீதானா? கவர்னர் தான் வந்துட்டாராங்காட்டியும்னு நினைச்சேன். அதிசயமா துட்டு வெச்சிருக்கியா? அதான் குரலு பலக்க கிளம்புது. பத்து காசு வியாபாரம். ரெண்டு மாசமா பதினெட்டு ரூவா பாக்கி. யோவ், கீவ்னு குரலு கொடுக்கறே? டெய்லி இன்னேரத்துக்குத்தான் கடை தெறக்கும். காஜா பீடி இல்லே. நிக்கிறதுன்னா நில்லு. கஷ்டமாயிருந்தா போய்க்கினே இரு.”

கதவைத்தூக்கி அண்ணாமலை இறங்கினான். சாய்த்து வைத்த சவுக்கில் பல்லி குதித்தது. உப்பு மூட்டை பின்னால் ஒளிந்து கொண்டது. வியாபாரம். காசுக்கேற்ற பலகாரம். பாட்டிலின் கீழ் எண்ணெய் வளையம். பொட்டலம் சணல் சுற்றித் தத்தி நின்றது. அண்ணாமலை சில்லறைக் குவியலை சந்தோஷமாய்ப் பார்த்துக் கொண்டான். சிறுதுளி பெரு வெள்ளம். ரசனைக்காரன், கடையின் உள்பக்கம் திறந்த கதவில் பின்பக்கம் இணைந்த வீடு. நேராக கட்டில் தெரிகிறது. விரிப்புடன் கூடிய தரமான மெத்தை. வாழ்க்கை வசதியாக இருக்கிறது. பள்ளிப் படிப்பு ஏரிக்கரையில் எருமை வாலில் போனதில் பெரிய இழப்பு இல்லை. இந்தப் புறநகரில் கடை போட்டு அது வளர வளர கூடவே வளர முடிகிறது.

“யப்போவ்” என்றான் சிட்டி.

“என்னாடா?” என்றான் அண்ணாமலை.

“படம்தானேப்பா உன்னை இட்டுக்கினு போகச் சொல்றேன்.”

“படமா? என்னா படம்?”

“எதுனாச்சும் ஒரு படம். மெட்ராஸ் தியேட்டர்லே இட்டுக்கினு போறேன்னு சொன்னியே.”

“எப்போ?” என்றான் அண்ணாமலை.

“அய்யே சொன்னியே, மறந்திட்டியா?”

“அதுக்கு என்னா இப்போ?”

“இன்னிக்கிக் கூட்டிக்கினு போ.”

“சர்த்தான். க்ம்முனு கிட.”

“அய்யே. இட்டுக்கினு போப்பா.”

“தே” என்றாள் அஞ்சலை. “புள்ள கேக்குதில்லே?”

“எதுனாச்சும் இருக்கா உனக்கு?”

“இருந்தா குடேன். எந்நேரமும் வியாபாரம்னு கடையைக் கட்டிக்கினு அளுவறோம். என்னாத்துக்கு சம்பாதிக்கிறது சொல்லு. குடும்பமா எங்கியும் போயி நாளாச்சுது. புள்ள மெட்ராஸ் தியேட்டர்லே சில்லுனு படம் பார்க்கணும்னு ஆசைப்படுது. இட்டுக்கினு போனா என்னவாம்?”

அண்ணாமலை கட்டிலில் படுத்துக் கொண்டான். மின்விசிறி டேபிளில் திரும்பியது. கடையில் சிட்டி இருப்பது தெரிந்தது. அரைத்த சாம்பார் பொடியை நான்கணாப் பொட்டலங்களாய்க் கட்டிக் கொண்டிருந்தான். அவ்வப்போது வந்தவர்கள் கேட்டதை எடுத்துக் கொடுத்தான். சில்லறையை எண்ணிப் போட்டான். வத்திப் பெட்டி படம், பழைய ஃபிலிம் என்று அவன் அளவில் கடையை சிட்டி விஸ்தீரணம்

செய்திருக்கிறான். குனிந்த தலை நிமிராமல் பொட்டலம் மடித்து முடித்தான். ஒன்றே போல் அத்தனை பொட்டலங்களும். 'டேய்' என்றான் அண்ணாமலை. 'படத்துக்குக் கிளம்பு.'

அஞ்சலை பலகாரம் தயாரிக்கிறாள். வெளியில் கண்டதையும் விற்கிறார்கள். துட்டைக் கொடுத்து நோவு வாங்கினாற் போல் தான். அவள் சுத்தமாய் வீட்டிலேயே தயார் செய்யப் போகிறாள். மூட்டையிலிருந்து உப்பை எடுக்கிற போது இதை அவள் சொன்னாள்.

சிட்டி பேண்ட், சட்டை மடித்து மெத்தைக்கடியில் வைத்தான். அண்ணாமலை முகவாய் முட்களைக் கண்ணாடி முன் மழித்தான். இன்றைய நாள் வித்தியாசமாகி விட்டது. அஞ்சலை தனது ரோஸ் புடைவையை எடுத்துக் கொண்டாள். 'களுதைக்கு வேற புடைவைங்களே கண்ணுக்குத் தெரியாது.' அண்ணாமலை அலுத்துக் கொண்டான். மாலையில் பால் கறப்பதற்கும், வாடிக்கை வீடுகளில் ஊற்றி வரவும் அவன் ஏற்பாடுகளை யோசிக்க வேண்டும்.

**பெ**ரிய தியேட்டர். கோடுகளுக்குள் கார்கள் அடங்கியிருந்தன. பிரும்மாண்ட சுவரின் கறுப்பு, நாள்பட்டு வெளுத்திருந்தது. பக்கங்களில் கண்ணாடி பிரதிபலித்தது. முதலாளி படத்தில் பல்ப் எரிந்தது. வழவழத்த தரை. வாங்கிக் கொள்கிற சோபாக்கள். படிக்கட்டில் இப்படி ஏறிச் சரிவாய் அப்படி இறங்குகிற மாடி. சிகரெட் பெயரெழுதி எச்சில் தொட்டி. ஸ்டில்கள். மத்தியானப் படம். மற்ற நேரத்துப் படம். ஞாயிற்றுக்கிழமை காலைப் படம், அடுத்த



வாரத்துப் படம், பார்க்கப் பார்க்க,பார்க்க இருந்தது. வெளியிலேயே சில்லென்று இருந்தது. கூரையில் எங்கேயோ பாட்டு கேட்கிறது. அப்புறம் ஒரு மிஷின் இருந்தது. மிஷினைச் சுற்றிக் கும்பல் இருந்தது. பல்ப் எரிந்து அணை கிற மிஷின். சக்கரம் சுழன்று நிற்கிறது. வேடிக்கை உடைகளில் பட்டினத்துப் பெண்கள். ஒருத்தி மிஷினில் ஏறி நிற்கிறாள். அவள் கவனிக்காத வகையில் அவள் நண்பன் ஒரு காலை மிஷினில் வைத்து அழுத்துகிறான். அவள் காசு போடுகிறாள். க்ர்ர்ரக். சிறிய டிக்கெட் போன்ற ஒன்று வருகிறது. இளம்பெண் கலவரமடைகிறாள். ஆயுளில் அவள் இவ்வளவு எடை இருந்ததில்லை. கால் வைத்து எடை ஏற்றியவன் காதருகில் கிண்டல் செய்தான். அவள் அவனை அடிக்க கைப்பையை ஓங்கினாள். அவன் பின்னுக்கு நகர்ந்து கொண்டான். அடி தவறியது. ஸாரி, பதறிச் சொன்னாள். அண்ணாமலை முனகி நகர்ந்து கொண்டான்.

''யப்போவ்?''

''என்னடா...?''

''அது என்ன?''

''எது?''

''அந்த மிஷினு?''

''எடை பாக்கறது!''

''எனக்குப் பார்க்கணும்.''

''என்னத்தைப் பார்க்கப் போறே?''

''எடையும் அதிர்ஷ்டமும். அதுலே போட்டிருக்குது.''

''அதிர்ஷ்டமா?''

''க்கும்பா. அதிர்ஷ்டமும் போட்டிருக்கும்.''

''அதுக்கென்ன இப்போ?''

''காசு குடுப்பா. இருபத்தி அஞ்சு காசு.''

''சும்மாயிரு. துட்டெல்லாம் கிடையாது.''

''யப்போவ்'' சிட்டி கெஞ்சினான்.

''தே'' என்றாள் அஞ்சலை.

சிட்டி எடை மிஷினில் ஏறி நின்றான். சக்கரம் சுழன்றது. அது நிற்பதற்குள் சிட்டி காசைப்போட்டுவிட்டான். க்ர்ர்டக். அட்டை வரவில்லை. சப்தம் வந்தது. திடுக்கிட்டு சிட்டி இறங்கினான். பார்த்துக் கொண்டிருந்தவர்களுக்கெல்லாம் குபீரென்று சிரிப்பு வந்து விட்டது.

''என்னடா?'' அண்ணாமலை தலையில் தட்டினான்.

''அட்டை வரலே'' சிட்டி தலையைத் தடவிக் கொண்டான்.

''சப்தம் கேக்க சொல்ல பயந்திட்டே. என்ன பயம்? மிஷினு துன்னுருமா உன்னை? அத்தினி பேரு பாக்கலே?''

குடும்பமாய்ச் சேர்ந்து புறப்பட்ட உற்சாகம் வடிந்துவிட்டது. அண்ணாமலை குடும்பம் தூண் ஓரமாய் நகர்ந்தது. அஞ்சலை சாய்ந்து உட்கார்ந்து கொண்டாள். பைக்குள்ளிருந்து பணியாரம் எடுத்தாள். 'எனக்கு வேண்டாம்' என்றான் சிட்டி. வருத்தமாய் இருந்தான். அட்டை வராததும் பின்னந் தலையில் அண்ணாமலை தட்டியதுமான வருத்தம். இதுபோன்ற இடங்களுக்கு அவன் வந்ததில்லை. எடை போட தராசு தவிர மிஷின்களைப் பார்த்ததில்லை. இது கக்கூஸ் இல்லாத நாடு. இங்கு கம்ப்யூட்டர் வந்து விட்டது. சிட்டி கெட்டிக்காரன். காற்றாடி சீசன் வரப் போகிறதென்று முன்கூட்டியே சொல்லி விடுவான். சீசன் முடிந்து விட்டது என்று பம்பரம் வாங்கிப் போடுவதைத் தடுப்பான். ஆனால் மிஷின்களை அவன் பார்த்ததில்லை. க்ர்ர்டக், சப்தம் போடுகிற மிஷின்.

''துண்ணுடா சிட்டி!''

''எனக்கு வேணாம்.''

அண்ணாமலை நின்ற இடத்தில் கால் மாற்றிக் கொண்டான். அவனுக்கு வேறு விதமாய் வருத்தம். மகனின் அறியாமையில் வருத்தம்., பாவம், தலையில் அடி பலமாய் விழுந்திருக்க வேண்டும். சிட்டியின் முகம் வாடிவிட்டது. ஆசையாய் அவனுக்காகத் தான் புறப்பட்டு வந்தது!

''தே'' என்றாள் அஞ்சலை.

''என்னா?'' என்றான் அண்ணாமலை.

''புள்ள நிக்குது இல்லே? எதுனா தின்ன வாங்கிக் குடு.''

''சர்த்தான்.''

வேட்டியைத் தூக்கி அரை டிராயரிலிருந்து அண்ணாமலை காசு எடுத்தான். ''காப்பி மூணு.

டோக்கன் வாங்கிக்கினு வா.''

''டோக்கனா?''

''தா அங்கிட்டுத் தராங்க பாரு!''

அண்ணாமலை டோக்கன் வாங்கிக் கொண்டான். உலகம் அவனுக்குத் தெரிவிக்காமல் மாறிக் கொண்டிருக்கிறது. மெஷின் ஒன்று காப்பி போடுகிறது. பிரும்மாண்டமாய்ப் பளபளக்கிற மெஷின். அண்ணாமலை இரண்டு காப்பிகளை மட்டும் சுமந்து திரும்பினான். க்ஷ்ஷெக்க்ஷ்ஷ். காப்பி மெஷின் சப்தம் போட்டது. அண்ணாமலை பயத்தில் திடுக்கிட்டான். சாஸரிலிருந்து கோப்பை நழுவித் தரையில் பீங்கான் உரக்க உடைந்தது.

> **''ஏம்பா! காலங்காத்தால அதைத் தூக்கி, இறக்கி விளையாடிக்கிட்டிருக்கிறதுக்குப் பதிலா பத்துக் குடம் தண்ணி மொண்டு கொடுத்து அம்மாவுக்குக் கூட மாட உதவி செய்யக் கூடாது...?''**





மேட்டூர் நல்லப்பன்

# ஒரு நண்பனின் கதை

போட்டிக் கதை: 14

பஸ் பாதையிலிருந்து இரண்டு கிலோ மீட்டர் தள்ளி இருந்தது அந்த இடம். நடைபாதை என்று சொல்லும்படி எதுவுமில்லே. காட்டிலும், மேட்டிலும், வயல் வரப்பிலும் நடந்த பிறகுதான், நாங்கள் அந்த இடத்தை அடைய முடிந்தது. பெட்டிஷன் கொடுத்தவர்கள் அந்த இடத்தைக் குறிப்பிட்டு விவரமாக எழுதியிருந்ததால், அதிகம் சிரமப்படாமல் அவ்விடத்தை அடைந்து விட்டோம்.

பகலெல்லாம் உழைத்துக் களேத்துப் போன சூரியன், ஒய்வு கொள்ள இரவைத் தேடிச் செல்லும் நேரம். கோடை வெயில் அந்த அந்தி வேளேயிலும் 'பூமியை வறுத்துக் கொண்டிருந்தது.

அது மேட்டுப்பாங்கான வறண்ட பகுதி என்ருலும், நிறையப் பனேமரங்களும், அங்கங்கே வேப்ப மரங்களும் பூமியைப் போர்த்திக் கொண்டிருந்தன.

எங்களுக்குக் கற்றுக் கொடுக்கப்பட்டிருந்த யுத்த தந்திரப்படி, சுற்றி வளேத்து எதிரியை நெருங்கினேம்.

மிகவும் அருகில் சென்ற பிறகுதான் அவர்கள் எங்

களைக் கவனித்தார்கள்.பத்துப் பதினைந்து பேர் இருக்கலாம். வயது வித்தியாசம் இல்லாமல் இளைஞர்களும் முதியோரும் இரண்டறக் கலந்திருந்தனர். எங்களின் வருகை அவர்களுக்குக் கொஞ்சம் அச்சத்தையும், கொஞ்சம் ஆச்சரியத்தையும் ஏற்படுத்தியிருக்க வேண்டும். அவர்களின் மருண்ட விழிகள் அதை எனக்குத் தெரியப் படுத்தின. எனக்கு அவர்களைப் பற்றி அக்கறையில்லை. அதோ பனை மரத்திலிருந்து இறங்கிக் கொண்டிருக்கிறானே, அவன்தான் எனது இலக்கு.

"ஏய் ஒன் நாட் நைன், போர் நாட் த்ரீ, த்ரீ நட் ஒன், அவன் எறங்கற மரத்தை ரவுண்ட் அப் பண்ணுங்க. இல்லேன்னா எஸ்கேப் ஆயிடுவான்" எனது சகாக்களுக்கு வேகமாக உத்திரவிட்டேன்.

தங்களது கனத்த காலணிகள் படபட வெனச் சப்திக்க, வேகமாக ஓடி அந்த மரத்தைச் சுற்றி நின்றார்கள், அந்த மூன்று கான்ஸ்டபிள்களும். நான் ஓர் எஸ். ஐக்கே உரிய மிடுக்கோடும் முறைப்போடும் முகத்தைக் கடுகடுவென்று வைத்துக் கொண்டு வரப்பில் நின்றிருந்தேன்.

எங்களைப் பார்த்தும் சிறிதும் பதற்றமோ பயமோ.இன்றி, வெகு இயல்பாக அவன் அந்த உயரமான மரத்திலிருந்து இறங்கிக் கொண்டிருந்தான். அவனது இடுப்பில் தொங்கிய குடுவையிலிருந்து பனங்கள் தளும்பித் தளும்பித் தெறித்துக் கொண்டிருந்தது. மெல்ல வீசிய காற்றில் அந்தத் துளிகள் என் மீது பனியைப் போல் விழுவதை உணர்ந்தேன்.

மரத்தை விட்டுத் தரைக்கு வந்ததும், எனது சகாக்கள் மூவரும் மூன்று பக்கம் வர, ஏதோ விமானத்திலிருந்து பெட்டி படுக்கையுடன் இறங்கி நடந்து வரும் பயணியைப் போல, தனது கள் இறக்கும் சாதனங்கள் உடம்பில் நெளிய என்னை நோக்கிக் கம்பீரமாக நடந்து வந்தான் அவன்.

இடைக் கயிறு, பனம் பாளைகளைச் சீவும் கத்திகளுடன் கூடிய பெட்டி, இடுப்பு வார், கால் கயிறு, கள் இறக்கும் சுரைக் குடுவை, ஒரு சிலுவை சுமப்பது போல் தோளில் ஏணியைச் சுமந்தபடி என்னை நோக்கி வ்ந்தவன், என்னைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் நான் நின்ற இடத்துக்கும் சற்றுத் தள்ளி, வரப்பின் மீது எல்லா உபகரணங்களையும் வைத்துவிட்டு, ஏணியை மட்டும் அருகில் இருந்த வேப்ப மரத்தின் மீது சார்த்திவிட்டு என்னை நோக்கி வந்தான்.

அசாதாரணமான உயரம்; அதற்கேற்ற பருமன்; சிவப்பு நிறம்; ஸ்டெப் கட்டிங். இடுப்பில் லுங்கியை மடித்துக் கட்டியிருந்தான். மேலாடை எதுவுமில்லை. உழைப்பால் உடம்பு வேர்த்திருந்தது. முகத்தில் அறிவுக் களை. அவனைப் பார்க்க எனக்கே ஆச்சரியம். நான் அவனை உற்றுப் பார்த்தேன்! அவனும்தான்!

அவன். யாரென்று அரை நொடியில் எனக்குத் தெரிந்துவிட்டது. எனக்குள் அதிர்ச்சி! ஆச்சரியம்! இனம் புரியாத மன உணர்வினால் ஸ்தம்பித்து நின்றுவிட்டேன். அவனுக்கும் அதே நிலை. என்னைப் பார்த்ததால் ஏற்பட்டிருக்க வேண்டும். எனக்கு முன்பு சற்றுத் தள்ளி நின்றிருந்தவன், பசுவை நோக்கிச் செல்லும் கன்றைப் போல் ஆவலோடு என்னை அணைத்துக் கொள்ள வந்தவன், என்னை அணுகியதும், பிரேக் போட்டது போல் சட்டென்று நின்றுவிட்டான். எனது காக்கி உடைதான் அவனை என்னை நெருங்கவிடாமல் நெருடு





கிறது என்பதை அறிந்த நான், தன்னை மறந்து நின்றவனைத் தாவி அணைத்துக்கொண்டேன்.

"என்னடா ரவி, இந்தக் கோலம்? உன் எம். ஏ. பர்ஸ்ட் கிளாஸ் என்னடா ஆச்சு?" நான்தான் முதலில் பேசினேன். எனது திடீர்ச் சந்திப்பு அவனைப் பேச முடியாமல் சிறிது பொழுது திக்கு முக்காட வைத்து விட்டது.

"அதெல்லாம் ஏட்டுச் சுரைக்காய்டா. கறிக்கு உதவாது. பட்டத்தை வாங்கிக் கொண்டு வெளியில் வந்த போது, நானும் தரையில் கால் பாவாமல் ஆகாயத்தில்தான் பறந்து கொண்டிருந்தேன். இந்த மூன்று வருஷ வேலை தேடல், இந்த வறண்ட பூமியில் தான் என்னைத் தள்ளிவிட்டது. இந்த வானம் பார்த்த பூமியும், இந்தப் பனை மரங்களும் தான் எனக்கு சாஸ்வதம் என்று ஆகி விட்டது!" அவன் விரக்தியோடு கூறிய வார்த்தைகள் என்னை வேதனைப்படுத்தின. சிறிது நேரத்துக்கு இறுக்கமான மௌனம். என்ன பேசுவது என்று இருவருக்குமே புரியாத நிலை. மீண்டும் அவனே தான் பேசினான்.

"ஐம்பதினாயிரம் ரூபாய் செலவழித்து நான் வாங்கிய பட்டம் என்னை வாழ வைக்க வில்லை. இந்த வறண்ட காட்டில் இருக்கும் பனைமரங்கள்தான் எனக்கும், எனது வயதான தாய்,தந்தைக்கும் இப்ப கஞ்சி ஊத்துது. சரி அது கெடக்குது, நாட்டுல பாதிப் பேர் என்னை விட மோசமான நெலையில இருக்காங்க. நீ எப்படி இருக்கே, இந்த உத்தியோகத்துக்கு எப்ப வந்தே? கல்யாணம் செஞ்சுக்கிட்டியா?"

அவனின் வறுமை நிலைக்காக நான் வருந்திக் கொண்டிருக்கும் போது, அவன் எனது கல்யாணத்தைப் பற்றிப் பேசியது எனக்கு என்னவோ போலிருந்தது.

"எனக்கென்னடா, எங்கப்பா வசதியானவர்.. நீ பர்ஸ்ட் கிளாசில பாஸ் ஆயிட்ட. நான் ரெண்டு சப்ஜெக்ட் அரியர்ஸ். அடுத்த அக்டோபரில்எழுதிமுடித்தேன்.அரைலகரம் கொடுத்து என் அப்பா இந்தக் காக்கி உடையை வாங்கிக் கொடுத்தார். எனக்கு வரப் போற மாமனார்கிட்ட் இந்தப் பணத்தை வட்டியும் முதலுமாய் வசூலித்து விடுவார். இப்பத்தான் பெண் பார்க்கும் படலம் நடந்து கொண்டிருக்கிறது" என்று அவன் முதுகில் தட்டினேன்.

"உன்னைப் பார்த்ததும் எனக்கு எவ்வளவு சந்தோஷமாயிருக்கு தெரியுமா குமார்? நாம் இன்னும் கல்லூரியில் இருக்கிற மாதிரியே இருக்குடா. அந்த நாட்கள்தான் எவ்வளவு அற்புதமானவை" என்றவனின் கண்களில் தெரிந்த ஏக்கம் என்னையும் அந்தக் கல்லூரிக் காலத்தை நோக்கி இட்டுச் சென்றது.

**அ**ந்தக் காலேஜின் கதாநாயகன் இந்த ரவி. எந்தக் கதைக்கும் கதாநாயகன்னு ஒருத்தன் இருந்தா, வில்லன்னு ஒருத்தன் கட்டாயம் இருந்தே ஆக வேண்டும். அந்தப் பெருமை அடியேனுக்குத்தான்.

கல்லூரியில் அழகாய் இருக்கும் பெண்

# களாவும் பலாவும்

நாளைய
பலாக்கனியைவிட
இன்றைய களா, சிறந்ததென்று
எவன் சொன்னான்?

அது
உனது பலாக்களைப் பறிப்பவன்
ஓதிய பாடம் அல்லவா?"

இன்று
களா என்றால் — எழுதி வைத்துக் கொள்
களா தான் உனக்குக் கதி!

பலா!
கனாதான்!

பட்டினி கிட
பலாவையே உண்பதென்று
விரதம்கொள்!
சந்திப்பது சாவு எனில் அது
களாவைவிட இனிதானது!

முடங்கிய
முயற்சிகளுக்கா 'திருப்தி' என்று பெயர்?
வேட்கைகள்
வேட்டை நாய்களோ — அவற்றை
வீழ்த்துவதாய் எண்ணமோ!

இந்த
ஏமாளித் தனத்துள்ளே
கொட்டாவி விட்டால் உனது
பட்டப் பகல்களை மற்றவன்
பட்டாப் போட்டுக் கொள்வான்!

எது கிடைத்து — இன்று
நிம்மதி அடைந்தாயோ —
அதுவும் உனக்கு நாளை மறுக்கப்படலாம்!
அப்போதும் தப்பாது
உனக்குக் கொடுப்பார்கள்
சுட்டெடுத்த — 'புத்தம் புதுப்'
பழமொழியென்று!

— தமிழன்பன்

களெல்லாம் அவனையே காதலித்தார்கள். ஏதோ ஒன்றிரண்டு பேராவது என் மீது கடைக்கண் காட்டியிருந்தால் நானும் வில்லனாக மாறியிருக்க மாட்டேன். எவளும் என்னைத் திரும்பிப் பார்க்கவில்லை. இந்த வகையில் எனக்கும் இந்த ரவிக்கும் எத்தனையோ மோதல்கள். இருந்தாலும் என்னை இவன் பகைத்துக் கொண்டதே இல்லை. ஒரு முறை இவனை எப்படியாவது வம்புக்கு இழுக்க வேண்டும் என்பதற்காக, இவனுடைய காதலி என்று கல்லூரி முழுவதும் பேசப்படும் சரண்யாவை (சிறந்த அழகி. அங்கு படித்த அத்தனை மாணவர்களும் அவளுடைய பார்வைக்காகத் தவம் கிடப்பார்கள்!) ஆராய்ச்சிக் கூடத்தில் இவன் எதிரிலேயே கட்டிப்பிடித்து விட்டேன். அதைப் பார்த்து ஆத்திரமோ, ஆவேசமோ படாமல் மெல்ல என்னை அவளிடமிருந்து விலக்கி விட்டான். நான் இதுதான் சான்ஸ் என்று ரவியை ஓங்கிக் கன்னத்தில் அறைந்து விட்டேன். இவன் என்னைத் திருப்பித் தாக்குவான் — எனது அடியாட்கள் இவனை நன்றாக உதைப்பார்கள் — என்று எதிர்பார்த்த நான், ஏமாந்தேன். இவனோ எனக்கு உபதேசம் செய்யத் துவங்கிவிட்டான்.

''இங்க பார் குமார்! நாமெல்லாம் இங்க படிக்க வந்திருக்கிறோம். நமக்காக நம்மைப் பெற்றவங்க எவ்வளவோ கஷ்டப்பட்டு, நம்ம பிள்ளை நல்லா படிச்சு முன்னுக்கு வரணுங்கிற எண்ணத்துடன்தான் நமக்கு மாதா மாதம் பணம் அனுப்பிக்கிட்டிருக்காங்க. நாம்ப அதை மறந்துட்டு, இந்த மாதிரிக் காரியங்களில் ஈடுபடலாமா? நம்மகூடப் படிக்கிற பெண்ணைச் சகோதரியா நினைக்கணும்'' ரவியின் உபதேசம் எனக்கு மேலும் ஆத்திரத்தைக் கொடுத்தது.

''டேய், உனக்கு மட்டும் காதலி, எனக்கு மட்டும் சகோதரியா? ஊருக்குத்தான் உபதேசம். உனக்கும் எனக்கும் இல்லையடிங்கிறியா?'' என, அதற்குள் சரண்யா பிரின்ஸிபாலிடம் போய் ரிப்போர்ட் செய்ய, அவரே நேரில் வந்து என்னைப் பிடித்துக் கொண்டார். விசாரணை நடந்தது. எல்லோரும் எனக்கு எதிராகச் சாட்சி சொன்னார்கள். என்னைக் கல்லூரியை விட்டு வெளியேறச் சொல்லி விட்டார்கள். எனக்கு ஏகப்பட்ட அவமானம். தற்கொலை செய்து கொள்ளலாமா என்று கூட யோசித்தேன்.

சாட்சிக்காரன் காலில் விழுவதை விட சண்டைக்காரன் காலில் விழுவது மேல் என்று இந்த ரவியின் காலில் விழுந்தேன். இவன் அந்தச் சரண்யாவிடம் காலில் விழாத குறையாகக் கெஞ்சி மீண்டும் கல்லூரியில் நான் படிப்பைத் தொடர உதவி புரிந்தான்.

**''எ**ன்னடா முழிச்சுக்கிட்டே கனவு காண்றியா?'' என்று ரவி என் முதுகில் தட்டிய பிறகுதான் எனது மனப்பறவை அந்தக் கல்லூரியிலிருந்து இந்தக் காட்டுப் பகுதிக்குப் பறந்து வந்தது.

''நமது கல்லூரி நாட்களை ஃபிளாஷ் பேக்கில் பார்த்துக் கொண்டிருந்தேண்டா.''

''அதெல்லாம் பழங்கதைடா, இப்ப என்னைக் கைது செய்யத்தானே வந்திருக்கே?'' அவனது கேள்வி என்னைச் சங்கடப்படுத்தியது.

''நீ கள்ளத்தனமாக் கள் இறக்கி விற்பதாகவும், அதனால் தங்கள் கள் சாராயக் கடைகளில் விற்பனை பெரிதும் பாதிக்கப்படுவதாகவும், இந்தத் தொகுதி எம். எல். ஏ. ரிப்போர்ட் செய்திருக்கிறார். மேலும், உடனே நடவடிக்கை எடுக்கும்படி என்னிடமும், சர்க்கிள் இன்ஸ்பெக்டரிடமும் போன் மூலம் சொல்லியிருக்கிறார். வேறு ஆளாக இருந்திருந்தால் கைது பண்ணி மாமியார் வீட்டுக்கு அனுப்பியிருப்பேன். ஆனால், நீ எனது நண்பன். கல்லூரி நாட்களில் எனக்கு நிறைய நல்லது செஞ்சிருக்கிறே. அதனால் உன்னை நான் கைது செய்யப் போவதில்லை. மாறாக நீ இதே தொழிலைச் செய்ய, நான் இந்த ஸ்டேஷனில் இருக்கும் வரை உனக்குப் பாதுகாப்புக் கொடுக்கிறேன்.''

''டேய் குமார், இந்தத் தொகுதி எம்.எல்.ஏ. ஒரு மோசமான பேர்வழி. ஒரு காலத்தில் விறகு வெட்டிப் பிழைத்துக் கொண்டிருந்தவன். எப்படியோ எம். எல். ஏ. ஆகிவிட்டான்! ஆளும் கட்சி எம். எல். ஏ. என்ற தைரியத்தில், மேற்குத் தொடர்ச்சி மலை ஃபாரஸ்டில் இருந்த சந்தன மரங்களையெல்லாம் வெட்டி விற்றுக் கோடீஸ்வரன் ஆகிவிட்டான். இவன் மீது நடவடிக்கை எடுக்க முயன்ற எத்தனையோ போலீஸ் அதிகாரிகளுக்கு வேலை பறிபோயிருக்கிறது. பலர் தண்ணியில்லாத காட்டுக்கு 'நாடு கடத்தப்'பட்டிருக்கிறார்கள். இவனைப் பகைச்சுக்கிட்டு உன் உத்தியோகத்துக்கு ஊறு தேடிக்காதே'' என்று எனக்காக அவன் கவலைப்பட்டான்.

''ரவி! இந்த எம். எல். ஏ. யைப் பத்தி உனக்கு இவ்வளவுதான் தெரியும். எனக்கு இன்னும் தெரியும்! இவன் நடத்தற சாராயக் கடைகளிலெல்லாம் முக்கால்வாசி கள்ளச் சாராயம்; சமீபத்தில் சந்தனக் கட்டைகளை வெளிநாடுகளுக்குக் கடத்துவதாகவும் போலீஸ் இலாக்காவுக்குத் தகவல் கிடைச்சிருக்கு. இதையெலலாம் கண்டுக்கக் கூடாதுன்னு மேல் இடத்து உத்திரவு. ஆனால், மத்திய சி. பி. ஐ. க்குத் தகவல் போயிருக்கு. சீக்கிரம் உங்க தொகுதி எம். எல். ஏ. கம்பி எண்ணப் போறான். நீ தைரியமா கள் இறக்கு ராஜா!'' பாதி சீரியஸும் பாதிச் சிரிப்புமாக நான் கூறியதைக் கேட்டு, போலீஸில் இப்படியும் ஒருத்தனா! என்பதைப் போல் என்னைப் பார்த்தான். என்னை அன்போடு வழியனுப்பி வைத்தான் ரவி.

**நா**ன் இப்போது தண்ணியில்லாத காட்டில் இருக்கிறேன். பாவம் அந்த ரவி! மூன்று மாதக் கடுங்காவல். சேலம் சிறையில் கம்பி எண்ணிக் கொண்டிருக்கிறான். அந்த எம். எல். ஏ. இப்போது வனத்துறை மந்திரியாகிவிட்டார்!

# என்னைக் காக்க வந்தாயா?

ஆர். சூடாமணி

திருமண வரவேற்பு.

பிரகாசக் குழல் விளக்குகளின் கீழே அந்தப் பெரிய ஹாலில் இரவு பகலாகியிருந்தது. பட்டும் பளபளப்புமாக ஹால் உயிர் பெற்று உயிர்த்துக் கொண்டிருந்தது. நாற்புறமும், பீரியெழும் கோலாகலக் குரல்களால் எதிரொலித்தது. இந்த ஆண்கள் குவாலியர் ஸூட்டிங் விளம்பர மாடல்களாக இருக்கலாம். இந்தப் பெண்கள் ராதா ஸில்க் ஹவுஸும், தங்க மாளிகையும் சேர்ந்து கண்ட கனவுகளாய் இருக்கலாம். அலங்கார வகையில் இவர்களுக்கும் மணமக்களுக்குமிடை அதிக வேற்றுமை இல்லை. கழுத்து மாலைகள் மட்டும்தான் திருமண ஜோடியை இனம் பிரித்துக் காட்டும் அடையாளம். வர்ண மயமான அந்த உற்சாக விழாவுக்கு நறுமணமும், கூடியிருந்தது. மலர்கள், சந்தனம், பன்னீர், வாசனைத் தைலம், வகை வகையான பர்ஃப்யூம், இன்னும் புத்தாடை மணம், புது நோட்டு மணம்.....

வர்ணம், மணம் இவற்றோடு ஒலிக்கும் தான் பஞ்சமா? கலகலப்பான பேச்சுகள், கலீரென்ற சிரிப்புகள், குழந்தையர் குறுக்கும் நெடுக்குமாய் ஓடி மகிழும் இரைச்சல்கள், மனிதர்கள் நடப்பதும் உட்காருவதும், எழுந்திருப்பதுமாய் இடைவிடாத ஆரவாரங்கள்.

'இந்தச் சந்தைக் கூட்டத்தில் எனக்கென்ன வேலை?' என்ற கோபம் சுள்ளென்று எழ, மேடை மீதிருந்த ரமேஷ் முகம் சிவந்தான். இத்தனை ஒலிகளிடை அவனுடைய ஒலிக்கு இடமில்லையா? இங்கு ஒலி என்றால் இந்த உரத்த பேச்சுக்களும் கெக்கெக்கே சிரிப்புகளும்தானா? இங்கு சங்கீதம் என்பது ஒலியோடு சேர்த்தியில்லையா?

''ஹலோ, மிஸ்டர் சிதம்பரம்!''

''பாலுசாமியா! ஹலோ, எப்படியிருக்கீங்க?''

''என்னய்யா, எங்க வீட்டுக்கு வழி மறந்து போயிடிச்சா? இப்படி ஏதாவது ஒரு கல்யாணத்தில நாம் மீட் பண்ணுத்தானா? ஆனாலும் மோசம் நீங்க!''

''நோ, நோ, தப்பா நினைக்காதீங்க. அடிக்கடி உங்க ஞாபகம்தான். ஆனா கம்பெனியில இப்ப மூச்சு முட்ற வேலை....''

ஹாலின் இரு கோடிகளிலிருந்து ஒன்றையொன்று பார்த்துக் கூவிய குரல்கள் மற்ற எல்லா ஒலிகளையும் அமுக்கி முழுகச் செய்தன. நெருங்கி வந்த நண்பர்கள் அறை நடுவில் கைகுலுக்கிக் கொண்டார்கள். ''வீட்ல எல்லாரும் சௌக்யமா? பையன் என்ன செய்யறான்?''

''காலேஜை ஒரு பொழுதுபோக்காய் வச்சுக்கிட்டிருக்கான். வேறென்ன சொல்ல! அதை விடுங்க. மிஸ்டர் கதிர்வேல் ரிடையர் ஆயிட்டாரா? அடுத்த ஜி.எம். நீங்கதானே?''

எல்லாப் பக்கங்களிலிருந்தும் குறுக்கும் நெடுக்குமாய் வீசி மோதும் பேச்சு அலைகள். நடுவில் சிக்கித் தவிக்கும் சிறு படகுதானா அவன் இசை?

இழைத்து இழைத்து நெக்குருகி நாத மயமாகி அகண்ட ஞானத்திலிருந்து ஸப்த ஸ்வரங்களால் அள்ளி அள்ளிக் குரல் வளத்தில் வைத்துக் கொடுக்கும் அழகுகளெல்லாம் இங்கு வீண்தானா? சுருட்டியில் துள்ளிப் பறந்து கானடாவாய்க் கசிந்துருகுவதெல்லாம் இங்கே யாருக்காக? பாட்டை ரசிக்க இக்கூட்டத்தில் ஒருவருமே இல்லையா? 'இதைக் கேளுங்கள், ஒரு குழந்தை வளர்ந்து ஆளாகும் அதிசயத்தைப் பாருங்கள்' என்பது போல் இருமடங்கு தீவிரத்துடன் ஆலாபனை, கீர்த்தனை, நிரவல், ஸ்வர பிரஸ்தாரங்கள் என்று இசை வடிவைத் தொட்டுத் தொட்டுச் செதுக்கி உருவாக்கி வளர்த்துக் கொண்டே போனான்.

''அடடா, பிரமாதமாயிருக்கே!''

அருகில் குரல்கேட்டு ஆவலாய்த்திரும்பிப்



பார்க்கையில் அங்கு நின்றிருந்த பெண்மணி இன்னொருத்தியின் புடவையைத் தொட்டுப் பார்த்துக் கொண்டிருந்தாள். "அமெரிக்கன் ஜார்ஜெட்தானே?"

'என்னை ஏன் இந்தக் கௌரவர் சபையில் துகிலுரிக்கிறாய்?' என்று ராக தேவதை அவனிடம் முறையிட்டது.

விஸ்தாரமாய் விரித்துக் கொண்டிருந்த கற்பனை ஸ்வரங்களைப் பட்டென்று பாதியில் நிறுத்தி சரணத்தைச் சங்கதிகளின்றி ஒரே முறை பாடிப் பல்லவிக்குத் திரும்பி முதல் வார்த்தையையே கீழ் ஸட்ஜத்தில் இறக்கி நிறுத்திக் கீர்த்தனையை முடித்தான் ரமேஷ்.

பக்கவாத்தியக்காரர்கள் பாட்டின் திடீர் முடிவால் அவனை ஆச்சரியத்துடன் பார்த்தார்கள். வேதனையும் கோபமுமான அவன் முகத்தைக் கண்டதும் எதுவும் பேசாதிருந்து விட்டார்கள். அந்த மனநிலை அவர்களும் அறிந்ததுதான். பாடகரைத் கேட்காதவர்கள் வயலினையும், மிருதங்கத்தையுமா கேட்கப் போகிறார்கள்? ஹாலில் பேச்சுக்களிடையே சில சமயம் சிறு மௌனம் நிகழும்போது மேடை மீதிருந்து வந்து கொண்டிருக்கும் வித்வான்களின் இசை ஒரு பின்னணியாக ஒலிக்கும். கல்யாண வைபவத்தில் மாவிலைத் தோரணம்போல் அதுவும் ஓர் அலங்காரம் மட்டுமே. வேறு கவனத்துடன் பாட்டுக்குத் தாளம் போடுபவர்கள் அல்லது தலையை ஆட்டுபவர்கள் பிறகு, "அப்புறம் ஸார், இன்னிக்கு ஷேர் மார்க்கெட் நில்வரத்திலே..." என்று பேச்சைத் தொடரும்போது மேடை மீது ஆனந்த பைரவிகூட அழுது விடுவாள்.

ரமேஷ் தன் கைக்கடியாரத்தைப் பார்த்தான். மணி ஆறரை. ஏழரைக்குத்தான் டின்னர். அதாவது, அடுத்த நிகழ்ச்சி. இன்னும் ஒரு மணி நேரம் அவன் பாடியாக வேண்டும். யாரோ வித்வான்களுக்குக் காப்பி கொண்டு வந்தார்கள். இது இரண்டாம்டோஸ். காப்பி குடிக்கும் நேரத்துக்காவது பாடவேண்டாம்என்றநிம்மதியோடு ரமேஷ் மெதுவாகக் குடித்தான்.

கல்யாணக் கச்சேரி செய்வதே அவனுக்குப் பிடிக்காத விஷயம். ஆனால் இன்று குருவின் வார்த்தைக்காக அவன் ஒப்புக்கொள்ள வேண்டியிருந்தது. நீலகண்ட சர்மாவைத்தான் இந்த வீட்டவர்கள் ஏற்பாடு செய்ய முயன்றிருந்தார்கள். "நான் அந்தத் தேதியில் இந்தியாவிலேயே இருக்க



மாட்டேன். சிங்கப்பூர், மலேசியான்னு கச்சேரி டூர் போயிருப்பேன். என் சிஷ்யன் அபாரமாய்ப் பாடுவான். அவனை ஏற்பாடு பண்றேன்'' என்று அவர் சொல்லிவிட்டார்.

குருவை நினைத்தபோது ரமேஷுக்கு மிகவும் வருத்தமாயிருந்தது. அவனுக்கு முப்பத்து நான்கு வயது. பாங்க்கில் உத்தியோகம். சங்கீதம் அவனை மிகவும் கவர்ந்த துறை. வெறும் பொழுதுபோக்குக்கு மேலாக, ஆத்மானுபவமாய் இருந்தது. நல்லகுரலும்திறமையும் ஈடுபாடும் இருந்ததால் முன்னணி கர்நாடக இசை விற்பன்னர்களில் ஒருவரான சங்கீத கலாநிதி எஸ். நீலகண்ட சர்மா அவனை விருப்பத்துடன் சிஷ்யனாக ஏற்றார். முழு மூச்சுடன் அவன் திறமையைப் பரிமளிக்கச் செய்யும் நல்லாசிரியராகவே இருந்து வந்தார். அவர் மகன் சுப்பிரமணியனுக்கும் சங்கீதத்தில் அக்கறை பிறக்கும் வரை.

மகனையும் சிஷ்யனாகக் கொண்டவர் அதன்பின் ஒரு குருவாகவே நடந்து கொள்ளவில்லை. ஒரு தந்தையாகவே நடந்து கொண்டார். சுப்பிரமணியனுக்கு ஆர்வம் இருந்த அளவு திறமை இல்லை. எனினும் சர்மா அவனை முன்னுக்குக் கொண்டு வருவது ஒன்றிலேயே நாட்டமாயிருந்தார். ரமேஷிடம் அவர் அக்கறை குறைந்தது. அவனது உயர்ந்த திறமையைத் தம் மகனுக்குப் போட்டியாகவே நினைக்கிறாரோ என்று ஐயுறும் வகையில், ''ஏண்டா ரமேஷ், இப்படி சங்கீதம்னும் சாதகம்னும் கட்டிண்டு அழறே? பெரிய பாங்க் ஆபீஸராய்க் கைநிறையச் சம்பளம் வாங்கறே? அதுக்கு மேல் என்ன வேணும்? எப்பவானும் ஆசைக்கு வீட்டில் சிநேகிதாளுக்கெதிரே ரெண்டு கிருதிகளை ஒரு ஹாபி மாதிரி பாடிண்டு அக்கடான்னு இரேன்'' என்று பேசினார். ''ரமேஷ் என்கிற பேருக்கும் கர்நாடக சங்கீதத்துக்கும் பொருத்தமாகவே இல்லையே! ரமேஷ் பாகவதர்னு போட்டுப்பியோ?'' என்று கிண்டல் செய்தார்.

''ஒரு ஹிக்கின்ஸ் பாகவதரே நம்மிடை இருந்தார் என்கிறபோது ரமேஷ் பாகவதர்ல என்ன ஸார் தப்பு?'' என்று அவனும் சிரித்துக் கொண்டே பதில் சொன்னான். விடாப்பிடியாய் அவரிடம் பாடம் கேட்டு வந்தான். ''கற்றுத் தர மாட்டேன்'' என்று அவரால் வெளிப்படையாய்ச் சொல்ல முடியவில்லை. அவருடைய அசிரத்தையை மீறிக் கொண்டு அவன் மேடைக் கச்சேரிகள் செய்வதையோ விஷயம் தெரிந்த ஒரு சில சங்கீத விமர்சகர்களிடையே நல்ல பெயர் பெற்று வருவதையோ அவரால் தடுக்க முடியவில்லை. ஏதாவது சாக்கில் அவனைக் கடிந்து கொள்வது அவருக்குப் பழக்கமாகியது. வலிமையான காரணத்தை வேறு அவனே ஒருமுறை தன்னையறியாமல் தந்துவிட்டான்.

சர்மா தம்மை முத்துஸ்வாமி தீட்சிதரின் சிஷ்ய பரம்பரையில் வந்தவராகச் சொல்லிக் கொள்வதுண்டு. அது உண்மையாகவும் இருக்கலாம். தீட்சிதரிடம் அவருக்கு ஆழ்ந்த பக்தி இருந்தது. ஒருநாள் அவருடன் சங்கீத சர்ச்சைசெய்துகொண்டிருந்தபோது ரமேஷ், ''தீட்சிதர் கிருதிகள் நல்ல ராக ஞானத்தைக் காட்டுகின்றன. அவர் ஒரு பண்டிதர். தியாகய்யர் கீர்த்தனைகளோ ஒரு தனி மனிதனின் பக்தி மயமான இதயப் பேச்சுகளாக இருக்கின்றன. ராமனோடு நேருக்கு நேர் பேசி உணர்ச்சிமயமாய் உருகி விடுகிறார். தீட்சிதர் படைப்புகள் நேர்த்தியான, விரிவான கட்டட அமைப்புகளென்றால் தியாகய்யர் படைப்புகள் பளீர் பளீரென்று மின்னி நெஞ்சை ஈர்க்கும் உணர்ச்சிப் பொறிகள்' என்ற ரீதியில் பேசிவிட்டான்.

நீலகண்ட சர்மா அவனுடைய இக்கருத்தை இரு இசைக் கர்த்தாக்களை ஒப்பிட்டு ஓர் இளைஞன் ஏதோ தன் அறிவுக்கு எட்டிய விதமாய் ஆய்வு செய்திருப்பதாக எண்ணிச் சாதாரணமாய் எடுத்துக் கொள்ளாமல் அவன் பேச்சை தீட்சிதரின் பக்திக்கு இழைத்த அபசாரமாகவும் அந்த வாரிசு வரிசையில் வந்த தமக்குத் தனிப்பட்ட முறையில்செய்த அவமானமாகவும் கருதிவிட்டார். அவனிடம் பின்னும் மனவேற்றுமை உணரலானார். அதனாலேயே, மூன்று ஆண்டுகளாகச் சென்னையில் சங்கீத விழாவின் போது வித்வத் சபையில் பிற்பகல் கச்சேரி செய்து வந்தவன் இவ்வருடம் எப்படியாவது தனக்கு மாலை அல்லது இரவு நேரக் கச்சேரிக்கு வாய்ப்புப் பெற்றுத் தரும்படி அவரிடம் கேட்டபோது நாசூக்காய் மறுத்துவிட்டார். சுய தகுதிகளோடு கூட அவர் சிபாரிசும் சேர்ந்தால் நிச்சயம் அவனுக்குக் கிடைக்கும். ஆனால் அவர் ரகசியமாய்த் தம் மகனுக்கு அந்த வாய்ப்புக் கிடைக்க முயன்று கொண்டிருந்தார். ''உனக்கென்னடா ரமேஷ் அவசரம் இப்போ, ஈவினிங் கச்சேரி செய்ய? நீ சின்னவன்தானே! நிறைய காலம் இருக்கு. எல்லாம் அடுத்த வருஷம் பார்த்துக்கலாம் போ'' என்று அவனுக்குப் பதிலளித்துவிட்டார். சுப்ரமணியன் அவனைவிட ஒரு வயது சின்னவன்.

இன்றுஇங்கேவருவதற்கும்அவர்தமக்குப் பதிலாய் மகனை அனுப்பவில்லை. கல்யாணக் கச்சேரியை யாரும் சிரத்தையாய் உட்கார்ந்து கேட்பதில்லை என்பதால் இவனைத்தான் அனுப்பியிருக்கிறார். 'அபாரமாய்ப் பாடுவான்' என்று அதற்கு ஒரு சர்க்கரைப் பூச்சு.

சர்க்கரையில்லாத காப்பியைப் பருகியது போல் ரமேஷுக்கு வாய் கசந்தது. காலி டம்ளரைத் திருப்பிக் கொடுத்தான். தொண்டையைச் செருமிக் கொண்டான். கச்சேரியைத் தொடர்ந்தான். ராகங்களோடு கொஞ்சினான், குழைந்தான், கம்பீரமானான், வீறு கொண்டான், விளையாடினான், உருகினான், பரவசமானான்.

திடீரென்று ஓர் அரசியல் பிரமுகர் பத்து நிமிடங்களுக்கு மின்னல் விருந்தினராய் வந்து போனார். அந்தப் பத்து நிமிடங்கள் மணமக்கள் உட்பட அவரைச் சுற்றியே கூட்டம், சலசலப்பு. மூலைமேடையில் சங்கீதம் தாயில்லாக் குழந்தையாய்க் கிடந்தது.



"என் பெண் சங்கீதம் கற்றுக்கொள்ள இசைக் கல்லூரிக்குப் போகிறாள்."

"உங்களிடம் ஏது பணம்?"

"நான் அனுப்பவில்லை. அக்கம் பக்கத்து வீட்டார்களெல்லாம் சேர்ந்து தான் அனுப்பி வைக்கிறார்கள்!"

— அரகண்டநல்லூர் சாதிக்பாஷா.

ரமேஷ் ஒருகணம் பாடுவதை நிறுத்தி விட்டுச் சுற்றிலும் பார்த்தான். கற்பனையில் தம்பூரை உடைத்து சபையினர் தலையில் விட்டெறிந்துவிட்டு வெளியேறினான்.

பாட்டு நின்றிருந்ததைக் கூடப் பெரும்பாலோர் கவனிக்கவில்லை. கவனித்தவர்களில் யாரோ, "பாடகர் நிறுத்திவிட்டாரே! கச்சேரி முடிஞ்சுடுத்தா?" என்று கேட்டுக் கொண்டிருந்தது காதில் விழுந்தது.

ஒருபாட்டு பாதியில் நிற்பதற்கும் மங்களம் பாடுவதற்கும் வித்தியாசம் தெரியாத ஞான சூன்யங்களிடை எனக்கென்ன வேலை? ராகங்களில் முக்குளித்து முக்குளித்து முத்துக்களை எடுத்து வருவதெல்லாம் இங்கே யாருக்காக? ஓ கல்யாணியே, ஸஹானாவே, சாருகேசியே, என்னை மன்னியுங்கள்.

அறையின் சப்தக் குழப்பத்தினுள் மூழ்கி மூச்சு முட்டுவதுபோல் இருந்தது. மனச் சோர்வு உடலையும் களைப்புறச் செய்தது. வேதனையுடன் பாட்டைத் தொடர்ந்தான். நல்லவேளை, இந்தச் சித்திரவதை இனி அதிக நேரமில்லை. இன்னும் ஓர் உருப்படி பாடிவிட்டால் போதும்.....

**பொ**ங்கிய ஆறு வடிவதுபோல் கூட்டம் குறைந்து கொண்டிருந்தது. இப்போது மிச்சம் சில பேர்தான். இரண்டு கனவான்கள் ஒரு மூலையில் சோபாவில் அமர்ந்து ஏதோ லாப நஷ்டக்கணக்குப் பேசிக் கொண்டிருந்தார்கள். தொழில்திபர்களாயிருக்கலாம். மணமக்களின் மாலைகளிலிருந்து ரோஜா இதழ்கள் உதிர்ந்து கொண்டிருந்தன. நாலைந்து பேர் கும்பலாயிருந்த ஓரிடத்தில் ஒருவர் நாற்காலியில் சாய்ந்தபடி ஏறக்குறையத் தூங்கியிருந்தார். ரமேஷின் உதடுகள் சுழித்தன. 'அடடா, நான் நீலாம்பரி பாடவில்லையே! பாடியிருந்தால் என் ராகபாவத்தின் பெற்றியை எண்ணித் திருப்தியடைந்திருக்கலாம்' என்று கசப்புடன் நினைத்துக் கொண்டான்.

இன்னொரு புறத்தில் ஓர் ஆண்—பெண் ஜோடி வீட்டுக்காரர்களிடம் விடை பெற்றுக் கொண்டிருந்தார்கள். பிறகு அந்த ஆண் தன் பின்னே நாற்காலியில் உட்கார்ந்திருந்த பெரியவரைத் திரும்பிப் பார்த்து; "அப்பா, வாங்க போகலாம்" என்று அழைத்தான்.

"கொஞ்சம் இரு" என்றார் பெரியவர்.

"நேரமாகுதுப்பா, எழுந்திருங்க."

"எனக்குச் சாப்பாடு வேணும். நீயும் புஷ்பாவும் போய்ச் சாப்பிட்டுட்டு வாங்க. அதுவரைக்கும் இங்கே உட்கார்ந்திருக்கேன்."

"நாங்க கூடச் சாப்பிடப் போறதில்லே மாமா. இன்னொரு ரிஸப்ஷனுக்குப் போகணும். அதுக்கு இப்பவே லேட்டாயிடிச்சு, வாங்க" என்றாள் அப்பெண்.

"அப்போ, நீங்க ரெண்டு பேரும் போங்க, நான் வரல்லே."

"என்ன பிடிவாதம்ப்பா! ஏன் வரமாட்டேங்கறீங்க?" என்று மகன் குரலை உயர்த்தினான்.

"இந்த மனுஷன் என்னமாய்ப் பாடறுண்டா! சின்ன வயசுதான், ஆனா என்ன ஞானம், என்ன கற்பனை! நான் முழுக் கச்சேரியும் கேட்டுட்டுத்தான் வருவேன். நீங்க போங்க."

"நாங்க அந்த ரிஸப்ஷனுக்குப் போயிட்டு அப்படியே வீட்டுக்குப் போயிடுவோம்ப்பா. மறுபடியும் இத்தனை தூரம் வர முடியாது. நீங்க இப்ப வந்தா எல்லாரும் ஒண்ணாய்க் காரில் போயிடலாம்."

"எனக்குக் கார் வேணும். பஸ்ல வந்துக்கறேன்."

"இங்கேயிருந்து நம்ம ஏரியாவுக்கு ஒரு மணி நேரத்துக்கு ஒரு பஸ்தான். எத்தனை நேரம் காத்துக்கிட்டிருப்பீங்க?"

"அப்ப நடந்து வரேன்."

"எப்படியானும் போங்க. சொல்றபேச்சைக் கேட்டாத்தானே!" அந்த ஜோடி அகன்றது.

ரமேஷ் அந்தப் பெரியவரையே பார்த்துக் கொண்டிருந்தான். அவரும் அவனைப் பார்த்தார். அவனைப் பரிச்சயமில்லாவிட்டாலும் அவன் இசை தம்மிருவரையும் மிக நெருக்கமாக இணைத்திருப்பது போன்ற முகபாவத்துடன் லேசாய்ப் புன்னகைபூத்தார். அவனும் அந்த நெருக்கத்தை உணர்ந்தவனாக அவரைப் பார்த்துக் கொண்டு, உட்கார்ந்திருந்தான். 'உன்னை எங்கெங்கோ தேடினேனே! நீ இங்கேயா இருக்கிறாய்?' என்னும் பார்வை. களைப்பு மறைந்தது. விறுவிறுவென்று உடம்பில் ஒரு புது உற்சாகம் பாய்ந்தது. அவன் கண்களுக்கு அவர் ஒருவரே தெரிந்தார். அந்த ஒருவரையே நோக்கியவாறு, அந்த ஒருவருக்காகவே, அவன் மோகனமாய் மாறி, 'நன்னு பாலிம்ப நடசி வச்சிதிவோ நா ப்ராணநாதா!' என்று கடைசிப் பாட்டைப் பாட ஆரம்பித்தான்.

உங்களுக்காகவே



# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

**நம்பகமான ஒரே கூந்தல் தைலம்**

# குணா

## கூந்தல் தைலம்

தலை மயிர் உதிர்தல், செம்பட்டை நிறம், பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும். தினசரி தலைக்குத் தடவி வந்தால் தலை மயிர் நீண்டு கறுத்து அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு பொடுகு, மண்டையில் சொறிந்தால் செதில் உரிதல் குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும் விரும்பி உபயோகிக்கின்றனர்
1 பாட்டில் விலை ரூ 16-25 V.P.P. உண்டு
தபால் செலவு இல்லை.

தேவைக்கு எழுதவும் **நவசக்தி வைத்தியசாலை**
**தபால் பெட்டி எண் 7 சேலம் 636 001**

---

## இப்பொழுது கவர்ச்சியான புதிய பேக்கிங்கில் கிடைக்கிறது

---

எமது தைலம் கிடைக்குமிடங்கள் ; 1. சேலம் — ரோசு மெடிக்கல்ஸ் 2. ஆத்தூர் — முத்து மெடிக்கல்ஸ். 3. நாமக்கல் — கஸ்தூரிபா மெடிக்கல்ஸ். 4. ராசிபுரம் — ராசி மெடிக்கல் ஸ்டோர்ஸ். 5. மேட்டூர் — ஜெயலஷ்மி மெடிக்கல்ஸ். 6. திருச்செங்கோடு — சீனிவாசா மெடிக்கல்ஸ். 7. தர்மபுரி — விஜயலஷ்மி மெடிக்கல்ஸ். 8. கிருஷ்ணகிரி — கோபாலகிருஷ்ணா மெடிக்கல்ஸ். 9. ஒசூர் — மூர்த்தி மெடிக்கல்ஸ். 10. பெங்களூர் — பிரசாத் ஸ்டோர்ஸ் K.G. சர்கிள். 11. சென்னை-3 — ஹேமா மெடிக்கல்ஸ். 12. அமிஞ்சிகரை — வேலவன் மெடிக்கல்ஸ். 13. குடியாத்தம் — திருமகள் மெடிக்கல்ஸ். 14. காஞ்சிபுரம் — லஷ்மி மெடிக்கல்ஸ். 15. அரக்கோணம் — அகிலாம்பிகை மெடிக்கல்ஸ் 16. ஆரணி — பாக்கியம் அண்ட் கோ., மருந்துகடை. 17. திருவண்ணாமலை — அன்னை மெடிக்கல்ஸ். 18. வேலூர் (N.A.) — பாரத் மெடிக்கல்ஸ். 19. திருப்பத்தூர் (N.A.) — லஷ்மி மெடிக்கல்ஸ். 20. விழுப்புரம் — அன்பு மெடிக்கல்ஸ். 21. கள்ளக்குறிச்சி — A. ராஜீ நாட்டு மருந்துக்கடை 22. கும்பகோணம் — செல்வம் மெடிக்கல்ஸ். 23. தஞ்சாவூர் — சிட்டி மெடிக்கல்ஸ். 24. திருச்சி — சண்முகா மெடிக்கல் ஹால். 25. திண்டுக்கல் — தமிழ்நாடு சித்த மருந்துக்கடை. 26. பெரியகுளம் — N. லஷ்மணன் மருந்துக்கடை. 27. தேனி — ஆண்டாள் மெடிக்கல்ஸ் 28. மதுரை — குமார் மெடிக்கல்ஸ். 29. மதுரை ஸ்டேட் மெடிக்கல் கார்பரேசன் (24 மணி நேர கடை). 30. ராமநாதபுரம் — பாத்மா மெடிக்கல்ஸ். 31. கரைக்குடி — மலேசியா ஜெனரல் ஸ்டோர்ஸ். 32 விருதுநகர் — S.S.K. மெடிக்கல்ஸ். 33. தூத்துக்குடி — அன்பு மெடிக்கல்ஸ். 34. திருநெல்வேலி — கோமதி மெடிக்கல்ஸ். 35. பாளையங்கோட்டை — ஒலிவா இந்தியன் மெடிக்கல்ஸ். 36. நாகர்கோவில் — S. நல்ல பெருமாள் மருந்துக்கடை 37. தென்காசி — M.R. மெடிக்கல்ஸ். 38. ராஜபாளையம் — அரவிந்த் மெடிக்கல்ஸ். 39. விழுப்புரம் — விசாலம் மெடிக்கல்ஸ். 40. கோவில்பட்டி — சாந்தி மெடிக்கல்ஸ். 41. ஸ்ரீ வில்லிபுத்தூர் — பாலாஜி மெடிக்கல்ஸ். 42. உடுமலை — ஜாம் ஜாம் மெடிக்கல்ஸ். 43. பொள்ளாச்சி — ராமநாதன் மெடிக்கல்ஸ். 44. கோவை — காசிநாத் அண்ட் கோ., 45. கோவை — திருமலை மெடிக்கல்ஸ், காந்திபுரம். 46. திருப்பூர் — கீதா மெடிக்கல்ஸ். 47. சிவகங்கை குணா & கோ (கெமிஸ்ட்). 48. கோபி — வானி பார்மஸி. 49. ஈரோடு — ஸ்ரீ ராகவேந்திரசாமி மெடிக்கல்ஸ். 50. திருச்சி ஜங் — சுபஸ்ரீ மெடிக்கல்ஸ். 51. புதுக்கோட்டை — மீனா பார்மஸி. 52. திருவாரூர் — அன்னபூர்ணா மெடிக்கல்ஸ். 53. மாயவரம் — ஸ்வாமி மெடிக்கல்ஸ். 54. சிதம்பரம் — ராஜா பார்மஸி. 55. விருத்தாச்சலம் — ஜெயா பார்மஸி. 56. சேலம் செவ்வாய்பேட்டை — பிரபாத் மெடிக்கல்ஸ். 57. திருவண்ணாமலை — ஸ்ரீ அண்ணாமலையார் மெடிக்கல்ஸ். 58. கிருஷ்ணகிரி — பி. கே. பி. எம். ஜி. மெடிக்கல்ஸ். 59. கரூர் — அண்ணாமலை மெடிக்கல்ஸ். 60. நாமக்கல் — சரஸ்வதி மெடிக்கல் ஹால். 61. காரைக்குடி — சரோஜா ட்ரக்ஸ் ஸ்டோர்ஸ். 62. பாண்டிச்சேரி — ராஜா மெடிக்கல்ஸ். 63. திருவனந்தபுரம் — தானு & கோ., 64. மதுரை — 1 ப்ரவீன் மெடிக்கல்ஸ். 65. நாகை — ரங்கா ஸ்டோர்ஸ். 66. மைலாப்பூர் — R.R. பார்மஸி. 67. தி. நகர் — சுந்தரம் ஸ்டோர்ஸ் (கெமிஸ்ட்) 68. சேலம் — சாமுண்டி சூப்பர் மார்க்கெட். 69. கடலூர் — சிவா மெடிக்கல்ஸ். 70. ஊட்டி — நீலகிரிஸ் டிரக் ஸ்டோர்ஸ் & பார்மஸி. 71. தஞ்சாவூர் — 1 சிங்காரம் மெடிக்கல்ஸ் மார்ட். 72. மதுரை — 1 தனலட்சுமி ஏஜன்ஸீஸ்

---

## இப்பொழுது எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கிறது

*எமது நவரத்ன கல்ப லேகியம் சக்திக்கும் வலிமைக்கும் அனைவரும் சாப்பிடத்தக்க சிறந்த டானிக்.*
*1 புட்டி ரூ 30/– **V.P.P.** உண்டு. தபால் செலவு இலவசம். எமது ஸ்டாக்கிஸ்டுகளிடமும் கிடைக்கும்.*

# ஒரு 'புலி' பூனையாகிறது!

ஜே.எஸ்.ராகவன்

தலைவரின் நெற்றிக் கண்ணிலிருந்து தப்பி, ஏதேனும் வாரியத்திலாவது போய் விழுவோமா என்று தெரிந்து கொள்ளத் துடிக்கும் பகுத்தறிவுப் போராளியிலிருந்து, 'நம்ம மொதல், ரெண்டாவது சம்சாரங்களுக்கு ஒத்துப் போவதில்லீங்க. அதனால் பரிகாரமா மூணாவது ஒண்ணைக் கட்டிக்கலாமான்னு பார்த்துச் சொல்லுங்க' என்று கேட்டுக் கொண்டு வரும் செண்ட் வாசனைப் பேர்வழிகள் வரை ஒருத்தர் கூட அன்றைக்குத் தன்னைத் தேடி வராத வருத்தத்தில் இருந்தார் ஜோதிடப்புலி சோமசுந்தரம்.

''என்னப்பா, யாரும் வரலியேன்னு பார்க்கிறீங்களா?'' என்று கேட்டுக் கொண்டு உள்ளே வந்தாள் யக்னப் பிரியா. ''ஏன் ஒருத்தரும் வரலேங்கிற காரணத்தைத் தெரிஞ்சுக்க உங்க ஜாதகத்தைப் பார்க்க வேண்டாம். பேப்பரைப் பாருங்க: இன்னிக்கு பந்த்!''

''ம்... உனக்கு இந்த ஜோதிடம், ஜாதகம், கைரேகை, எல்லாம் வேடிக்கை சமாசாரம் தான். இதனோட அருமை உனக்குத் தெரியாது. நம் முன்னோர்கள்...''

''போங்கப்பா. இந்த இருபதாம் நூற்றாண்டு ரோபோ, ராக்கெட், சாடிலைட், கம்ப்யூட்டர்னு டாப் கியர்லே போயிண்டிருக்கும் போது, நீங்க அம்சம், தோஷம், பிரதோஷம், செவ்வா தோஷம்னு அடுக்கிண்டு போனால் யாருப்பா...''

''என்ன செய்யறது. எனக்குப் பழையது தான் பிடிக்கும். அதிலே இருக்கிற சக்தி...''



''அந்தப் பழையதைக் கூடப் புதிய பாணியிலே கொடுக்கத் தெரியணும் அப்பா. அப்போதான் அதிலே கவர்ச்சி இருக்கும்.''

''அது சரிம்மா. உனக்குத் தெரிஞ்ச பையன். ரொம்ப நல்லவன். அப்படின்னு சுத்தி வளைச்சு அன்னிக்குச் சொல்ல ஆரம்பிச்சியே... அவனோட ஜாதகம் இருக்கா?''

''ஜாதகம் இல்லேப்பா. போட்டோதான் இருக்கு.''

போட்டோவைப் பார்த்த ஜோதிடப்புலி ஈழத்துப் புலியாகச் சீறுகிறார்.

''யக்னப் பிரியா! இவனையா நீ கல்யாணம் பண்ணிக்கப் போறே? நடக்காது; நடக்கவே நடக்காது. தினப் பொருத்தத்திலிருந்து வேளைப் பொருத்தம்வரை, தசப் பொருத்தமும் சேர்ந்து இருந்தாக் கூட இந்தச் சோமசுந்தரம் அனுமதிக்க மாட்டான்... பையனு இவன். இடியட், ஸ்கௌண்ட்ரல்...''

கோபத்துடன் ஜோதிடப்புலி கிரகத்திலிருந்து வெளிநடப்புச் செய்ய, யக்னப் பிரியா விழிக்கிறாள்.

மறுநாள் குளுகுளு கம்ப்யூட்டர் ஷோரூமில் ஹார்ட்வேர், மற்றும் சாஃப்ட் வேர் புடைசூழ உட்கார்ந்திருக்கும் கிருஷ்ணகுமார், யக்னப் பிரியாவைப் பார்த்தவுடன், அவளுடைய அழகிய தலைக்குள் இருக்கும் குட்டி கம்ப்யூட்டரில் அன்று 'சந்தோஷம்' புரோக்ராம்செய்யப்படவில்லை என்று உணர்கிறான்.

''கிருஷ்ணகுமார், உங்களுக்கு இவரைத் தெரியுமா?''

யக்னப் பிரியா காட்டிய போட்டோவைப் பார்த்துவிட்டுப் பயங்கரமாகச் சிரிக்கிறான்.

''தெரியாமலா? போன வாரம் கிருஷ்ணம்பேட்டை போற ரோடிலே பராக்குப் பார்த்துண்டு என் ஹீரோ ஹோண்டாவிலே சொத்துன்னு தானே வந்து விழுந்த ஆளாச்சே...''

''அப்படியா? அப்புறம்?''

''ரோட்டைப் பார்த்துப் போறதானேய்யா இல்லாட்டி வீடு திரும்பாமல் நேரே கிருஷ்

ணும்பேட்டையே போக வேண்டியது தான்னேன். அதுக்கு இவர், "டேய்! என்னை யாருன்னு நினைச்சிண்டே? நான் ஜோதிடப்புலி சோமசுந்தரம்டான்னு கத்தி விட்டு, சமீபத்திலே நான் 'அப்னு உத்சவ்'லே பார்த்த ஒரு கோர தாண்டவத்தை அப்பட்டமா காப்பி அடிச்ச மாதிரி ஆடிக் காமிச்சார். அது சரி... ஆமா... அவர் போட்டோ உன்கிட்டே எப்படி...? யார் இவர்?"

"இவரா... இவர் வேறு யாரும் இல்லே. என்னைப் பெற்றவர், என்னுடை அப்பா, தந்தை, பாரென்ட், ஃபாதர் போறுமா?"

"எ... எ... இ... இ... உ... அ.. அ... வா?" கிருஷ்ணகுமாரின் தமிழ் பத்திரிகைக் கேள்வி — பதில் சங்கேத மொழியைப் புரிந்து கொண்ட யக்னப் பிரியா பலமாகப் பெரு மூச்சு விட்டாள்.

"மைகாட்! உங்க ரெண்டு பேர் போட்டோ ஒத்துப் போகலே. நம்ம ஜாதகம் ஒத்துப் போகுமா தெரியலே..."

கிருஷ்ணகுமாரின் மூளை அவனைச் சூழ்ந்திருக்கும் கம்ப்யூட்டர்களைப் போல் பரபர வென்று வேலை செய்கிறது.

"வெய்ட் யக்னப் பிரியா, உங்கப்பா பெயரை மறுபடியும் சொல்."

"ஜோதிடப் புலி, சோமசுந்தரம்."

"பிறந்த தேதி, நேரம், ஊர்?"

"29.2.1928, நடுநிசி 12 மணி, மன்னார்குடி."

"உங்கப்பா லீப் இயர்லே 'அந்த'த் தேதியிலே பிறந்தவரா? அதான் அப்படி குதிக்கிறார். அவரை எப்படி வளைச்சுப் போடறேன் பார். ராஜீவ், பவாரை வளைச்ச மாதிரி!"

"கிருஷ்ணகுமார், என்ன செய்யப் போறீங்க?"

"தும்பையும், வாலையும் சேர்த்துப் பிடிக்கப் போறேன்!"




நிறைந்த அமாவாசை, சுக்ர வாரம், திருவோண நட்சத்திரம், கடக லக்னம் கூடிய சுபவேளையில் 'யக்னப் பிரியா ஜாதக கம்ப்யூட்டர் சென்டர்' திறப்பு விழாவிற்காக யக்னப் பிரியாவும், கிருஷ்ணகுமாரும், டிஸ்கெட்டும், பிரின்டரும் போல் இணைந்து செயல்பட்டுக் கொண்டு இருக்கின்றனர்.

"ஜோஸ்யமும், கம்ப்யூட்டரும் இரு துருவங்கள். இதை ஒண்ணு சேர்க்க முடியும்னு நான் நினைக்கவே இல்லே."

"ரொம்பப் பேருக்குத் தெரியாது, யக்னு. பிறந்த நாள், நேரம், இடம் இந்த விவரங்களை கம்ப்யூட்டரில் செலுத்தி, அதன் காதைத் திருகினால், அது பதினெட்டு அம்சக் கணக்குகளைத் துல்லியமாகப் போட்டுக் கொடுத்துடும். ராசி, அம்சம், பாவம் மூன்றும் கரெக்டாத் தெரியறதினாலே, அந்தக் குறிப்புக்களை வெச்சுண்டு ஒரு ஜோஸ்யர் ஜாதகப் பொருத்தம், எதிர்காலம், பரிகாரம் போன்ற சமாசாரங்களை ஈசியாச் சொல்லிடலாம்."

"அப்படின்னு, கம்ப்யூட்டர் கணக்குத் தான் போடுமே தவிர, எதிர்காலப் பலன் சொல்ல எங்கப்பா மாதிரி புலிகள்தான் வேணும்னு சொல்லுங்க!"

"அது கூட வேண்டாம்மா. ஜாதகக் கணக்கு வழக்குகளோட சம்பந்தப்பட்ட பலாபலன்களையும் ப்ரோக்ராம் பண்ணிட்டா, கம்ப்யூட்டர் அந்த வேலையையும் பார்த்துக் கொள்ளும். அப்புறம் என்னை மாதிரி ஆட்களுக்கு வேலையே இல்லே."

யக்னப் பிரியா கிருஷ்ணகுமாரைப் பார்க்கும் கோணல் பார்வையைக் கவனித்த ஜோதிடப்புலி இப்போது கூடத் தனக்கு வேலை இல்லை என்று உணர்ந்து பூனை போல் வெளியேறுகிறார்.

கிருஷ்ணகுமார் காதில் யக்னப் பிரியா கிசுகிசுக்கிறாள்.

"அப்பாவும் நீங்களும் இப்படி ஒண்ணு சேர்ந்ததை சிம்பாலிக்காகக் காட்டணும்னு என்ன செய்யணும் தெரியுமா?"

"கம்ப்யூட்டரின் நாலு மூலைக்கும் மங்களகரமா மஞ்சள் தடவணும்!"

மனோவின் அழகு எப்படித் தெரியுமா? ஒருமுறை அவளைப் பார்ப்பவர்கள் — ஆண்களாகட்டும், பெண்களாகட்டும், குறைந்த பட்சம் இரண்டு முறைகளாவது திரும்பிப் பார்க்காமல் இருப்பதில்லை. அந்த அளவுக்கு அவள் அழகிலே சொக்கத் தங்கமாய் இருந்தாள்.

இருந்தால் என்ன பிரயோஜனம்? அவள் அழகு இப்போது பயன்படாத ஆற்று நீர் மாதிரி அல்லவா ஓடிக் கொண்டிருக்கிறது?

சுந்தரத்திற்கு மனோவைப் பார்க்கும் போதெல்லாம்நெஞ்சை அரித்துக்கொண்டேயிருக்கிறது.

தாலிக் கயிறு இல்லாத அவளது வெற்றுக் கழுத்தைப் பார்க்கும்போதெல்லாம் சுந்தரத்தின் நெஞ்சிலே தீப்பந்தங்கள் சுழற்றி வந்தன.

அந்தப் பாழும் நெற்றியிலே அவன் குங்குமம் இட்டு அந்த நெற்றிக்கு ஏன் ஒரு மணத்தைக் கொண்டு வரக் கூடாது?

அவனுக்குத் தெரியும், தான் கல்யாணம் செய்து கொள்வதாக, அதுவும் ஒரு விதவையைக் கல்யாணம் செய்து கொள்வதாகச் சொன்னால் அவன் அக்கா எவ்வளவு சந்தோஷப்படுவாள் என்று.

அதேபோல் சுந்தரம் விஷயத்தைச் சொன்னதும், அவனது அக்கா சுமதி பூரித்துப் போய் நின்றாள்.

"சுந்தரம், இனி ஒரு நிமிஷம்கூட வேஸ்ட் பண்ணாதேடா! உடனே நட" என்று அவனை இழுத்துக் கொண்டு மனோவைப் பெண் கேட்பதற்காக எதிர் வீட்டுக்கு விரைந்தாள்.

விஷயம் கேள்விப்பட்டு மனோவும் அவளது தாயும் அதிர்ச்சி அடைந்தனர் — இன்ப அதிர்ச்சிதான்!

என்றாலும் மனோவும் அவள் தாயும் உடனடி சம்மதத்தைத் தெரிவிக்காமல் தமக்குள்ளாக மெல்ல பேசிக் கொண்டனர். பிறகு மனோவின் அம்மா —

# மனோ காத்திருப்பாள்

"ஒரு நிமிஷம் உன்னோடு தனியாகப் பேசணும் தம்பி, கொஞ்சம் வரியா?" என்று அவனைப் பின்பக்கமாக அழைத்துப் போனாள்.

"தம்பி, மனோவைக் கட்டிக்கப் போவதாகச் சொன்னதாலே எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா? உனக்கு எந்த வகையிலே நன்றி சொல்றது என்று புரியலே! ஒரு விதவையின் உள்ளுணர்வுகளைப் புரிஞ்சுக்கிட்டுத்தானே பெண் கேட்க வந்தே, மனோவை?" என்றாள்.

"ஆமாம். அதிலே சந்தேகமே வேண்டாம். ஏன் இந்தக் கேள்வி?"

"உன் செயலிலே சுயநலம் இருக்கிறதாக நான் நினைக்கிறேன் தம்பி."



"நான் மனோவைக் கல்யாணம் செய்து கொள்ளப் போவதாகச் சொன்னது சுயநலமா? எப்படி?" கொஞ்சம் காரமாகவே கேட்டான்.

"கோபம் வேண்டாம் தம்பி. விதவைகளின் உணர்வுகளைப் புரிந்து கொண்டவன் என்றால் நீ முதலிலே உன் அக்காவுக்கு இல்லே தம்பி மறு கல்யாணம் செய்து வைச்சிருக்கணும்? உன் அக்கா சுமதிகூட மனோவைப் போல்கல்யாணமான ஒரே மாசத்திலே கணவனை இழந்து உன் வீட்டிலே நுழைஞ்சிருக்கிற பொண்ணுப்பா. அவளின் உணர்வுகளைப் புரிஞ்சுக்கிட்டு நீ ஏன் அவளின் மறு கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யலே? என்னிக்காவது இதைப் பத்தி எண்ணியாவது பார்த்திருப்பியா? அதனால்தானப்பா சொன்னேன், உன் எண்ணத்திலும் செயலிலும் சுயநலம்தான் இருக்குன்னு. மனோவைப் பார்த்துப் பரிதாபப்பட்டுப் போனது போல உன் அக்காவைப் பார்த்து நீ பரிதாபப்பட்டிருந்தால் நான் இன்னும் நிறைய சந்தோஷப்பட்டிருப்பேனே! இது ஒரு தாய் ஒரு மகனோடு பேசற பேச்சாகச் சொல்றேனப்பா!"

அதிர்ந்து போனான் சுந்தரம். ஆழ்ந்த மௌனத்தில் இரண்டு நிமிடங்கள் கழிந்தன. பிறகு, நடுங்கும் குரலில் அவனிடமிருந்து அந்த வார்த்தைகள் வெளிப்பட்டன. "முதலில் சுமதி அக்காவுக்கு ஒரு நல்ல வாழ்க்கைத் துணையைத் தேடற முயற்சியில இறங்கப் போறேன்மா. அதுக்குப் பிறகு மனோவைத் தேடி நானே வருவேன்."

"அவ உனக்காகக் காத்திருப்பா தம்பி!" என்று இதமாகச் சொன்னாள் அந்தத் தாய்.

— கே.ஜி. எஃப். பழனிச்சாமி

# கே. பரணி

**நம்** கணக்குப்படி அதன் வேகம் ஒரு வினாடிக்கு இரண்டு லட்சம் மைல்கள்—ஒளியின்வேகத்தைவிட அதிகம். அது சிவப்பாக இருந்தது. உருண்டையாக இருந்தது. கண்ணாடிபோல் இருந்தது. பூமியை நோக்கி வந்து கொண்டிருந்தது.

அதன் பெயர் கேஸ்ட்ரோ — 701

**A55A** சோம்பல் முறித்தாள். **A55A**தான் அவள் பெயர் — **MXYA** என்ற மையத்தில். அவள் அழகாக இருந்தாள். வெண்மை நிறத்தில் இருந்தாள். நம் கணக்குப்படி ஐந்து அடி ஆறு அங்குலம் இருந்தாள். நல்ல புஷ்டியாகக் கொழு கொழுவென்று இருந்தாள். ஏதோ ஓர் உலோகத்தால் ஆன உடையில் கழுத்து முதல் தொடை வரை மூடப்பட்டிருந்தாள்.

மனத்தில் புரியாத குழப்பமும், உடலில் என்னவென்று புரியாத மாற்றமும்—கொஞ்ச நாட்களாகவே இருந்தன.

ரோபாட் வந்து நின்றது. அது அவளுக்கென்றே பிரத்தியேகமாக ஒதுக்கப்பட்ட ரோபாட். அகஸ்தியர் மாதிரி குட்டையாக இருந்தது. அவளிடம் ஒரு மாத்திரையை நீட்டியது. வாங்கி வாயில் போட்டுக் கொண்டாள். கரைந்தது. அந்த வேளை உணவு அவ்வளவுதான்.

டீ.வி.யிலிருந்து கிளம்பிய மெலிதான ஹிப்னாடிஸச் சத்தத்தில் அவள் லயித்துத் திரையில் கவனித்தாள். மீண்டும் தன் மனத்தில் ஏதேதோ புரியாத உணர்வலைகள் கிளர்ந்தெழ, குழம்பினாள்.

திரையில் இருவர் ஓடிப் பிடித்துக் கொண்டிருந்தனர். அவர்கள் உடை அவள் இதுவரை பார்த்திராததாக இருந்தது. அது நம்முடைய காலத்து சினிமாவின் காதல் காட்சியென்று அவளுக்குத் தெரியாது.

**N66N**க்கும் இதே நேரத்தில் இதே அனுபவம் கிடைத்துக் கொண்டிருந்தது.

மனத்தில் புரியாத குழப்பங்களுடன் உடலில் புரியாத மாற்றங்களுடன், தன் ரோபாட் அருகே அமர்ந்திருக்க, அவனும் ஒரு 'பறக்கும் தட்டில்' பயணித்துக் கொண்டிருந்தான்.

அவன் நெகுநெகுவென்று ஆறடி உயரம் இருந்தான். கட்டான உடலோடு இருந்தான். கழுத்து முதல் தொடை வரை மூடிய உலோக ஆடையில் இருந்தான். சற்று முன் டீ.வி.யில் பார்த்த காட்சிகளால் ஏதேதோ புரியாத உணர்வலைகள் கிளர்ந்தெழ, குழப்பத்தில் இருந்தான்.

கோஸ்ட்ரோகிரகம். நமக்குவேண்டியது குறிப்பிட்ட ஓர் இடம் — தலைமையகம், அங்கே கூடியிருந்த பத்து பேர் கொண்ட ஒரு குழு.

அவர்கள் வித்தியாசமாக இருந்தார்கள். நான்கு கால்கள், நடு முதுகில் ஒரு ஆன்டனா, கொம்புகள் நீட்டிக் கொண்டிருந்த தலையோடு இருந்தார்கள். வெவ்வேறு நிறங்களில் இருந்தார்கள். அவர்களில் கருநீல நிறத்தில் இருந்தவன் வெறி பிடித்தவன்போல் அவர்கள் பாஷையில் கத்திக் கொண்டிருந்தான்: "வேண்டாம் இந்த வம்பு. போஸ்டோ — 43 (நமது பூமிக்கு அவர்கள் வைத்திருந்த பெயர்) ல் இருக்கும் விநோத ஜந்துக்கள் எண்ணூறு கோடியையும் அழிக்கும் விபரீதத் திட்டமே வேண்டாம்....

அவர்களின் தலைவன் பொறுமை இழந்து சொன்னான்: "இவனுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. இவனை முடித்து விடுங்கள்."

கோஸ்ட்ரோ — 701 விரைவாகப் பூமியை நெருங்கிக் கொண்டிருந்தது.

பூமியில் சுமார் எண்ணூறு கோடி பேர் இருந்தார்கள். எல்லோரும் கம்ப்யூட்டர்களின் ஆணைகளுக்கு அடங்கியவர்கள். சுய கேள்வி கேட்கத் தெரியாதவர்கள். சுயமாகச் சிந்தித்துச் செயல்படும் திறனை மனித குலம் இழந்து இருநூறு ஆண்டுகளுக்கு மேல் ஆகிவிட்டன. ராக்ஷச கம்ப்யூட்டர்கள் மொத்தம் முப்பத்தாறு இருந்தன. அவை உலகை முப்பத்தாறு 'மாவட்டங்'களாகப் பிரித்து அரசாட்சி செலுத்திக் கொண்டிருந்தன. ஒவ்வொரு மாவட்டத்திலும் முப்பத்தாறு 'வட்டங்'களும் அவை ஒவ்வொன்றிலும் முப்பத்தாறு, 'உள்வட்டங்' களும் அவற்றுள் கடைநிலையாக முப்பத்தாறு 'மையங்' களும் இருந்தன. ஒவ்வொரு மையத்திலும் முப்பத்தாறு கம்ப்யூட்டர்கள் சிற்றரசு புரிந்து கொண்டிருந்தன. இரு நூறு ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு கோபக்கார விஞ்ஞானிகள் கூட்டம் அணு ஆயுதங்கள், வகுப்புக் கலவரங்கள், செக்ஸ் குற்றங்கள் போன்றவை மிதமிஞ்சிப் போனதால் அவற்றை ஒழிக்க நினைத்துச் சிந்திக்கும் வேலையை மனிதனிடமிருந்து பறித்து, சிந்திக்கத் தெரியாத கம்ப்யூட்டரிடம் கொடுத்திருந்தது.

உலகில் ஒரு பூச்சி இல்லை, பறவை இல்லை, விலங்கு இல்லை, கிருமியும் இல்லை. மனிதர்களுக்கும் உணர்ச்சிகள் கூர்மையாக இல்லை.

ஒவ்வொரு மையத்துக்குள்ளும் மனிதர்களுக்கு நான்கு இலக்க எண்கள் கொடுக்கப்பட்டிருந்தன. அவர்களுக்கு உதவியாகக் குட்டி ரோபாட்டுகள் இருந்தன. அவை அந்தந்த மையத்தின் கம்ப்யூட்டர்களின் ஆணை



நர்ஸ் (1): ஒரு பேஷண்ட்டோட டெஸ்ட் ரிப்போர்ட் எல்லாம்கிரகிச்சுண்டு நம்ம கம்ப்யூட்டர் அந்த பேஷண்ட் கர்ப்பம்னு சொல்லிடுச்சே, ஆச்சரியமா இல்லே?

நர்ஸ் (2): ஆச்சரியம்தான். அந்த பேஷண்ட் ஆம்பளையாச்சே!

— ராமபிரான்

களில் இயங்கின. அவற்றின் இயந்திர விழிகளில் விழும் பிம்பங்கள் உள்ளே உருமாறி கம்ப்யூட்டர்களுக்குத் தகவல் அனுப்பிக் கொண்டிருந்தன.

உலகம் இயங்குவதற்குத் தேவையான சகலத்தையும் பிரும்மாண்ட ரோபாட்கள் செய்து கொண்டிருந்தன. கூடவே குறிப்பிட்ட இடைவெளிகளில், பெரிய, சிறிய ரோபாட்களையும் செய்தன. ஒரு ரோபாட் உருவானவுடன் அதற்குப் பதிலாக ஒரு ரோபாட் தன்னை அழித்துக் கொண்டு விடும். இதனால்ரோபாட்களின் எண்ணிக்கை கூடாமல் குறையாமல் இருந்தது.

மனிதர்களும் அப்படியேதான்.

**A55A**யும் **N66N**ம் ஒரே நேரத்தில் அந்தப் பெரிய கட்டடத்தின் முன்னால் வந்து இறங்கினார்கள். இரு இயந்திரங்கள் ஒன்றையொன்று பார்த்துக் கொள்வது போல் பார்த்துக் கொண்டார்கள்.

சுத்தமாகத் துடைத்துவிட்டது போன்றிருந்த கண்ணாடிக் கட்டடத்தின் உள்ளே ரோபாட்கள் தொடர நுழைந்தார்கள்.

உள்ளே நுழைந்ததுமே சூழ்நிலையின் வித்தியாசம் அவர்களைத் தாக்கியது. அங்கங்கே சிரிப்பும் கொம்மாளமுமாகச் சத்தம் கேட்டது — அவர்கள் இதுவரை கேட்டிராத சத்தம். பின்னணியில் மென்மையான இசை ஒலித்துக் கொண்டிருந்தது.

"**X500** கம்ப்யூட்டர் உங்களை வரவேற்கிறது. இந்த உலகிற்கு ரொம்பவும் ஆரோக்கியமான குழந்தைகளைப் பெற்றுத் தரும் பணிக்கு நீங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறீர்கள். இந்தச் 'சொர்க்கபுரி' உங்களுக்குப் பணி செய்யக் காத்திருக்கிறது. இந்தப் பெருமையைப் பெற்றதற்காக உங்களுக்கு எங்கள் வாழ்த்துக்கள். உங்களைப் போல் இப்போது இந்தச் சொர்க்கபுரியில் ஆயிரத்துப் பதினொரு ஜோடிகள் இருக்கிறார்கள். ஒரு வாரப் பயிற்சிக்குப்பின் நீங்களும் அவர்களோடு சேர்ந்து கொள்ளலாம்" என்றது வீடியோ திரை.

அவர்களுக்கு ஓர் அட்சரம் புரியவில்லை.

"இவ்வை முடித்துவிடுங்கள்" என்று மீண்டும் தலைவன் சொன்னதும் கருநீல நிறத்தவன் திகைத்தான். "பைத்தியம் எனக்கில்லை. எண்ணூறு கோடி ஐந்துக்களை அழிக்க வேண்டிய அவசியம் என்ன? அப்படியாவது, அவைகளை அழித்துவிட்டாவது நாம் ஏன் போஸ்டோ—43ல் குடியேற வேண்டும்?" என்று கேட்டான்.

தலைவன் சொன்னான்: "பைத்தியக்காரா, எண்ணூறு கோடி ஐந்துக்கள் அங்கே இருக்கலாம். ஆனால் உயிரோட்டமுள்ள வாழ்க்கை அவற்றுக்கு இல்லையே, பின் அவை இருந்தென்ன? அழிந்தென்ன?"

**A55A**யும், **N66N**ம் ஒரே அறையில் தங்க வைக்கப்பட்டார்கள். அவர்களுடைய உடல் நிலை அவ்வப்போது ரோபாட்டால் சோதிக்கப்பட்டது. ஆரம்பத்தில் சில தேகப் பயிற்சிகள், ஆசனங்கள் சொல்லிக் கொடுக்கப்பட்டன. உணவுக்காகச் சில விசேஷமான, இதுவரை அவர்கள் உபயோகித்திராத மாத்திரைகள் தரப்பட்டன.

அவர்களுக்கு செக்ஸ் போதனையைத் தொடங்க ஒரு சுபயோக சுபதினத்தைக் கம்ப்யூட்டர் குறித்திருந்தது.

தனக்கே ஒரு சஸ்பென்ஸ் காத்திருப்பதை அது உணரவில்லை.

கோஸ்ட்ரோ—701 வாயு மண்டலத்துக்குள் நுழைந்தபோது அதன் வேகம் மிகமிகக் குறைந்திருந்தது. இன்னும் பூமிக்கு அருகே வரவர மேல்மேலும் குறைந்தது. மிக அருகே வந்ததும் கொஞ்ச நேரம் நிலையாக நின்றது. பின் பெரிய பலூன் போல மெதுவாக, மிக மெதுவாகக் காற்றில் மிதந்து கொண்டே இறங்கியது.

சொர்க்கபுரியில் கம்ப்யூட்டரின் உத்தரவை ஏற்று அவர்கள் இருவரும் அரங்கில் போய் அமர்ந்தார்கள். இவர்களைப் போல் இன்னும் முப்பத்தைந்து ஜோடிகளுக்கும் அன்று அங்கே செக்ஸ் ப(ா)டம் ஆரம்பம்.

எல்லா ஆண்களும் உயரத்திலும் பருமனிலும் ஒரே மாதிரி இருந்தார்கள். எல்லாப் பெண்களும் டிட்டோ. எல்லோரும் பருவத்தின் தலைவாயிலில் இருந்தார்கள்.

அது இறங்கும் இடத்தில் கீழே ஓர் அடர்ந்த தோப்பு இருந்தது. அது மிகவும் நெருங்கியதும், தோப்பின் அத்தனை மரங்களும் நொடியில் சாம்பலாகின. ஒரு தூசி துரும்பு இல்லாத உலகத்தில் முதல்முறையாகத் தூசி பரவியது.

கம்ப்யூட்டர், பிறப்பும் இறப்பும் எந்த பரிமாணத்தில் கட்டுப்படுத்தப்படுகின்றன, அவற்றின் அவசியம் என்ன என்று சின்னதாக ஒரு முன்னுரை கொடுத்தது. பிறக்கும்

குழந்தைகள் ஆரோக்கியமாக இருப்பதற்காக என்னென்ன, முன்னெச்சரிக்கைகள் மேற்கொள்ளப்படுகின்றன என்று விவரம் சொல்லியது. "இனப்பெருக்கம் என்பது ஒரு தொழில் மட்டுமல்ல, சந்தோஷமும் கூட. இதுவரை நீங்கள் அனுபவித்தறியாத ஓர் உணர்ச்சி, ஒரு சொர்க்க சுகம் உங்களுக்குக் கிடைக்கப் போகிறது. அதற்காகத்தான் இந்த இடத்துக்கே சொர்க்கபுரி என்று பெயர் வைத்திருக்கிறோம்" என்றது.

அதன் வயிற்றுக்குள்ளிருந்து மூன்று கால்கள் கீழே நீட்டிக் கொள்ள, அது தரையில் ஒயிலாக வந்து உட்கார்ந்தது.

"முதலில் உங்கள் உடைகளைக் களையுங்கள். பின் கவனமாகத் திரையில் தோன்றும் காட்சிகளைப் பாருங்கள். உங்களுக்குள் ஆண் பெண் என்ற இ—"

மெல்ல சுழலத் துவங்கியது.
ஒரு கதிர்வீச்சை வெளியே அனுப்பத் துவங்கியது.

"—நீபாசோஞோமோகாலாவீழ்சுசெற்பாடமாஙிஙிஙிஙிஙிஙிஙி" என்றது கம்ப்யூட்டர்.

புளூஃபிலிமுக்குப் பதிலாகத் திரையில் ஒரு நீர்வீழ்ச்சியும் அருகே அடர்த்தியாகச் செடி கொடிகளுமாக ஏதோ ஒரு படம் ஆரம்பித்தது.

மூலையில் காத்திருக்க வேண்டிய ரோபாட்கள் குழப்பமான கட்டளைகளை ஏற்றுக்கொண்டு, இங்கும் அங்குமாகக் குழப்பமாக நகர்ந்து ஒன்றின்மேல் ஒன்று மோதிக் கொண்டு கீழே விழுந்து பழமாகுபகக் கிடந்தன.

உலகின் அனைத்து மையங்களிலும் இருந்த ஏராள்மான கம்ப்யூட்டர்களின் வீடியோ திரைகளிலும், சொர்க்கபுரியின் அரங்கில் தெரிய வேண்டிய செக்ஸ் படங்கள் உட்பட, வெவ்வேறு காட்சிகள் தெரிய ஆரம்பித்தன.

களேபரம் ஆரம்பமாகியது.

நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தவர்கள் போக மீதிப் பேருக்கு நீண்ட நேரம் ஏதும் புரியவில்லை. ரோபாட்கள் அங்குமிங்கும் ஓடி, சுவர்களிலும் இவர்கள் மேலும் முட்டிக் கொண்டு கீழே விழுவது முதலில் புது மாதிரி வேடிக்கையாக இருந்தது. அதற்குள் திரையில் மாறி மாறித் தோன்றிய சண்டை இயற்கை, விளையாட்டு, செக்ஸ் காட்சிகள் அவர்களைக் குழப்பின; பின் வசீகரித்தன.

இதற்குள் சொர்க்கபுரிகளுக்குள் இருந்தவர்கள் மெல்லமெல்லவெளிவரத்தொடங்கினார்கள். வெளியில் இருந்த குழப்பம் அவர்களை மலைக்க வைத்தது.

ஆனால் புதிதாகக் கற்றுக் கொண்டிருந்த பாடம் அவர்களை நீண்ட நேரம் இதர விஷயங்களில் கவனத்தைச் செலுத்தவிடாமல் மனத்தை ஆக்ரமித்துக் கொள்ள, ஆடை அணிந்திருந்தவர்களையும் துகில் உரிய ஆரம்பித்தார்கள்.

இதில் போட்டி வந்தபோது சிலர் தயங்கினார்கள். சிலர் தவித்தார்கள். கம்ப்யூட்டரின் குழப்பத்தில் சற்றுமுன் திரையில் தெரிந்த ஏதோ ஒரு சண்டைக் காட்சி நினைவில் பளிச்சிட, சிலர் அடுத்தவர்களைத் தாக்கினார்கள்.

கறுப்பு, நீலம், பச்சை, மஞ்சள் என்று அதன் நிறம் குறிப்பிட்ட இடைவெளிகளில் மாறிக் கொண்டிருந்தது.

ஒவ்வொருமுறை நிறம் மாறும் போதும் அது ஒவ்வொருவகைக் கதிர் வீச்சை வெளியே பரப்பிக் கொண்டிருந்தது.

மெல்ல மெல்ல சுழன்று கொண்டிருந்தது.

மீண்டும் அவர்கள் குழு அங்கே கூடியது. இப்போது அவர்கள் ஒன்பது பேர் இருந்தார்கள்.

தலைவன் பேச ஆரம்பித்தான். "கடைசிச் செய்தியை ஒலிபரப்புகிறேன். நமது கோஸ்ட்ரா—701 அதன் பணியைச் செய்து கொண்டிருக்கிறது. போஸ்டோ—43ல் ஒவ்வொரு வகைக் கதிர்வீச்சாக வெளியே அனுப்பி அதனால்ஏற்படும்விளைவுகளை,நமக்குத் தெரிவித்துக் கொண்டிருக்கிறது. இதுவரை கிடைத்த விவரங்களின்படி நம்முடைய ஐந்து வகைக் கதிர்வீச்சுக்கள் அந்தக் கிரகத்து ஜந்துக்களைச் சாம்பலாக்கியிருக்கின்றன. கதிர் வீச்சின் அளவை அதிகமாக்கி அந்த ஜந்துக்கள் முழுவதையும்அழிப்பதற்குநாம்ஆணை அனுப்ப வேண்டியதுதான் பாக்கி..."

அவர்களுக்கு எதிரேயிருந்த பேனலில் ஒரு நீல விளக்கு கண் சிமிட்டியது. அவன் ஒரு பட்டனைத் தொட்டதும் அந்த கிரகத்தின் இன்னொரு கோடியிலிருந்து ஒரு குட்டித் தலைவனின் குரல் இங்கே துல்லியமாகக் கேட்டது. "அந்த போஸ்டோ—43ன் இப்போதைய நிலையை நாங்கள் காண விரும்புகிறோம்."

"பார்க்கலாம். அதற்குமுன் ஒரு சுவாரஸ்யமான விஷயம்" தலைவன் தொடர்ந்து சொன்னான். "நம் தலைக்குள் பொருத்திக் கொண்டிருக்கிறோமே, இதில் ஆயிரத்தில் ஒரு பங்குகூட சக்தியில்லாத வஸ்துக்களை 'ராட்சச கம்ப்யூட்டர்கள்' என்ற பெயரில் போஸ்டோ—43 ஜந்துக்கள் வைத்துக் கொண்டிருக்கின்றன. நம் குழந்தைகள் வைத்துக் கொண்டு விளையாடும் பொம்மைகளைவிட மிகவும் மட்டமான, ஆனால் உருவில் மிகவும் பெரிதான 'ரோபாட்'களும் அங்கே இருக்கின்றன—இருந்தன. நம்கோஸ்ட்ரோ—701 அங்கேபோய்இயங்கத்தொடங்கியதும் அதன் அணு காந்த அலைகளின் வேகம் தாங்காது முதலில் அந்த கம்ப்

யூட்டர்கள் தாறுமாருக இயங்கின. பின் ஸ்தம்பித்தே விட்டன.... இப்போது பாருங்கள் அங்கே நடக்கும் வேடிக்கைகளை....

அவன் ஒரு பட்டனை அழுத்தியதும் அந்தக் கிரகவாசிகள் எல்லோருடைய மூளைகளிலும் காட்சிகள் பிம்பங்களாக விரிந்தன.

ஏறக்குறைய புதிதாகச் சுதந்திரம் கிடைத்த மகிழ்ச்சி அவர்களிடையே பரவலாக இருந்தது. அதன் ஒவ்வொரு துளியையும் அனுபவிக்க விரும்பியவர்களாய் எல்லோரும் ஓடிக் கொண்டும் ஆடிக் கொண்டும் இருந்தார்கள். ரோபாட்கள் அங்கங்கே விழுந்து கிடந்தன. அவற்றை உருட்டிவிட்டு, ஏறிக் குதித்து வேடிக்கை பார்த்தார்கள். அவை தயாரித்து வைத்திருந்த மாத்திரைகள் ஏராளமாக இன்னும் மிஞ்சியிருந்ததால் உணவுக்குப் பஞ்சமில்லை. உடைகள் இப்போது வேண்டாதவையாகியிருந்தன.

சரசங்களும் சல்லாபங்களும் விளையாட்டுக்களும் சண்டைகளுமாகப் பொழுது சென்று கொண்டிருந்தது.

வீடியோ திரைகள் வெறுமையாகப் பார்த்துக் கொண்டிருந்தன.

கரு நீல நிறத்தவன் ஒரு தனிமையிலிருந்து வெறுமையாகப் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் தலைக்குள் இருந்த சிறிய, ஆனல் மிகச் சக்தி வாய்ந்த அந்த நூதன வஸ்துவின் இயக்கத்தை நிறுத்தியிருந்தார்கள். இனி அவன் வெறும் மிருகம்.

அந்தக் குட்டித் தலைவனின் குரல் மீண்டும் கேட்டது. ''இவை வெறும் ஜடம்; இருந்தும் ஒன்றுதான், இல்லாததும் ஒன்றுதான் என்ற எண்ணத்தில் தானே, இவற்றை அழித்து இவர்கள் கிரகத்தை ஆக்கிரமிக்க நாம் முடிவு செய்தோம்? இப்போதுதான் இவை புத்துணர்ச்சி பெற்றிருக்கின்றனவே, இனியும் இவற்றை அழிக்கத்தான் வேண்டுமா?''

தலைவன் கொஞ்சம் நிதானித்துப் பின் சொன்னுன்: ''நம் விரிவாக்கத் திட்டத்துக்கு நமக்கு இன்னெரு கிரகம் உடனே தேவைப்படுகிறது. இனி வேறெரு கிரகத்தைத் தேர்ந்தெடுத்துப் பரிசோதனைகளை ஆரம்பத்திலிருந்து துவங்க நேரமில்லை. அதனல் வேறு வழியில்லை.''

**அதன் வேகம் ஒரு வினடிக்கு இருபது லட்சம் மைல்கள். அது நீலமாக இருந்தது. உருண்டையாக இருந்தது. கண்ணடி போல் இருந்தது. மெல்ல சுழன்றபடி கோஸ்ட்ரோ கிரகத்தை நோக்கி வந்து கொண்டிருந்தது.**

**அதன் பெயர் கால்கி — *13*.**

**அவசியமென்றல் முதல் பாராவை மீண்டும் படிக்கவும்.**

---

## அருள்வாக்கு



உதவி பெற்றதற்கு நன்றி செலுத்துவது ஒரு சிறந்த கடமை. ஒரு சிறு புல்லைக்கூட சிருஷ்டிக்கத் திறனற்ற மனிதனுக்கு இத்தனை உணவும் உடையும் மற்ற உபகரணங்களும் வழங்கும் ஆண்டவனுக்கு நன்றி காட்டுவது நமது கடமை. இவ்வாறு நன்றி கூறும் அடையாளமாகவே நாம் உண்பதை அவனுக்கு முன் காட்டி நிவேதனம் செய்ய வேண்டும். அவனுக்குக் காட்டிவிட்டுப் பிறகு நாம்தான் உண்ணப் போகிறேம். நாம் பலவிதமான ஆடை ஆபரணங்கள் அணிவதற்கு அருள் செய்யும் ஆண்டவனுக்குத் திரு ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் சமர்ப்பிக்க வேண்டும். எல்லாருமே இவ்விதம் வீட்டில் பூஜை செய்து திரவியங்களை ஈசுவரார்ப்பணம் செய்ய இயலாது. எனவே சமுதாயம் முழுதும் சேர்ந்து இப்படி சமர்ப்பணம் பண்ணும்படியான பொது வழிபாட்டு நிலையங்களாக ஆலயங்கள் எழுந்துள்ளன.

சின்னஞ்சிறிய சூட்சுமமான தர்மங்களை எல்லாம் மறந்துவிட்டோம். நமக்கு உணவு தருபவனுக்கு நல்லபடி நிவேதனம் நடக்க வேண்டும். நமக்கு உடை தருபவனுக்கு நல்ல வஸ்திரம் இருக்க வேண்டும் என்பதையெல்லாம் கவனிக்கத் தவறுகிறேம். இப்போது ஓர் ஊரில் யார் ரொம்ப அழுக்குத் துணி கட்டிக் கொண்டிருக்கிறர் என்று பார்த்தால் ஸ்வாமிதான் என்று தெரிகிறது. நம் ஊர் கோயிலில் ஸ்வாமியின் வஸ்திரம் சுத்தமாயிருக்கிறதா என்பதில் மனசைச் செலுத்திவிட்டோமானல் நம் மனசின் அழுக்கும் போய்விடும். 'ஆலயம் தொழுவது சாலவும் நன்று', 'அரனை மறவேல்' 'திருமாலுக்கு அடிமை செய்' என்றெல்லாம் புண்ணிய மொழிகள் வழங்கும் இந்த நாட்டில் ஒவ்வோர் ஊரிலும் உள்ள ஈசுவரன் கோயிலையும், பெருமாள் கோயிலையும் நல்ல நிலையில் வைத்திருந்து வழிபாடு நடக்கச் செய்ய வேண்டும். இது நம் முதல் கடமை.

**—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**








योगक्षेमं वहाम्यहम्

# பதில் தெரிஞ்சா

"என்னைப் பத்தி முழுக்க நான் சொல்லிடறேன். உங்களுக்குத் திருப்திப்பட்டா பெண்ணை வரச் சொன்னப் போதும்!''

பளிச்சென்று பட்டுக் கத்தரித்த மாதிரி அந்த வெங்கடேசன் பேசியது ராஜாவுக்குப் பிடித்தது.

எண்ணெய் பிசுக்குப் படிந்த அடுக்களைச் சுவரின் பின்னல் பாதி தன்னை மறைத்துக் கொண்டு அம்மா நின்ருள்.

''சொல்லுங்கோ!''

''ஓர் ஆட்டோமோபைல் வொர்க் ஷாப்பில் நான் சாதாரண மெக்கானிக். ஏகப்பட்ட வண்டிகளைப் பழுது பார்க்கிற கடுமையான உழைப்பு. என்னுடைய உதயமே பெரும்பாலும் பட்டறையில்தான். ராத்திரி பத்தாகும் வீடு திரும்ப. மாசம் கிட்டத்தட்ட ஆயிரம் ரூபாய் சம்பாதிப்பேன். கடன் எதுவும் இல்லை. சொத்துக்களும் அதே இல்லை தான்'' நீளமாகப் பேசி நிறுத்தியவன், சற்று இடைவெளி விட்டான்.

"என்னுடைய இருக்கிறது ஒரே அம்மா. அறுபத்தஞ்சு வயசான அவளோட பிதுரார்ஜித சொத்துக்கள், குளிர் காலத்துல ஆஸ்துமா, வெயில் காலத்தில் மூட்டுப் பிடிப்பு. என் படிப்பு எட்டாவது ஃபெயில். ஆனு வரப் போற பொண்ணைக் கண்ணுல மண்ணு படாம காப்பாத்த முடியும். வேறென்ன?"

ராஜா பேச நினைத்து, தொண்டை மேடு ஊஞ்சலாடி நிற்க,

''எதையும் எதிர்பார்க்கமாட்டேன். கட்டின புடைவையோட கோயில்ல வைச்சுத் தாலி கட்ட ரெடி!''

'பார்வையில் எண்ணங்களைப் படித்து விடும் ராட்சஸன்!' ராஜாவுக்கு சந்தோஷமாக இருந்தது.

''இருங்கோ, வர்றேன்.''

எழுந்து உள்ளே வந்தான்.

விஜி நிமிர்ந்து பார்த்தாள்.

''பேசினது காதுல விழுந்ததா?''

''ம்!''

''ஒப்புக்கலாமா?''

''உன் அபிப்ராயம் என்னண்ணு?''

''இவனைவிட ஒரு நல்ல புருஷன் இந்தப் பூமியில உனக்குக்கிடைப்பான்னுதோணலே. கடுமையான உழைப்பாளி. ஒளிச்சு வைச்சுப் பேசத் தெரியாத தெளிவு. என்ன நினைப்போம்னு யூகிச்சு, பட்டுனு பதில் சொல்ற தொலை தூரப் பார்வை. நான் நீயா இருந்தா இப்பவே கட்டுடா தாலியைன்னு சொல்லிட்டுக்கையைப்பிடிச்சுடுவேன், கெட்டியா!"

''ஆனு.... விஜி எஸ்ஸெல்ஸி படிச்சிருக்காளேடா!'' — இது அம்மா.

"இருந்தா என்ன? சம்பாதிக்கிறது அவன் தானே. இவளோட ஊத்த எஸ்ஸெல்ஸிக்கு எவன் வேலை குடுத்தான்?''

''அப்ப சரி!''

''என்ன விஜி, உனக்கு இஷ்டம்தானு?''

''என் நல்லது, கெட்டது ஒனக்குத் தெரியாதாண்ணு? உன் இஷ்டம்.''

வெளியே வந்தான். மெல்ல வெங்கடேசனை நெருங்கி, தோளில் கை சரித்துத் தன்னோடு அணைத்துக் கொண்டான். ''கன்கிராட்ஸ் மாப்ளே!'' என்ருன்.



# ...ங்க...

தேவிபாலா

"அது இப்ப வேணும். நடக்கட்டும்!"
"தீர்மானம் பண்ணியாச்சே!"
"இருக்கட்டும். அத்தாட்சி கழுத்துக்கு வரட்டும். அதிக சந்தோஷம்கூட சில சமயம் சங்கடம்தான்!"
"விஜி ஸ்கூல் முடிச்சு, ஸ்டெனேகிராபியும் பாஸாயிருக்கா. நிறைய அப்ளிகேஷன் போட்டிருக்கா. கல்யாணத்துக்குப் பின்னால் வேலை கிடைச்சா போகலாமா?"
"அவசியம்னு எனக்குப்படலே! என்னோட ஆயிரத்துல ஆகா... ஆகா....னு குடித்தனம் பண்ணலாம். வட்டம்போட்டுக்கிட்டு வாழப் பழகினோம்னா சந்தோஷம் நிலைக்கும். வசதிகள் அதிகப்படியானா போதையானா படுது. இன்னும்.... இன்னுங்கற ஏக்கம் முடியறதேயில்லே. கல்யாணம் முடியட்டும். அதைப் பத்தித் தீர்மானிக்கலாம்."
"உங்கம்மாவைக் கலந்துட்டு, நிச்சயதார்த்த விஷயமா தேதி குறிச்சு எழுதுவீங்களா?"
"அதையும் நீங்களே தீர்மானிக்கலாமே. எனக்கு ஆட்சேபணை யில்லே!"
சூடான காப்பியை வாய்க்குள் சரித்துக் கொண்டு, விஜியை ஒருமுறை பார்த்து, மெலிதான சிரிப்பின் மூலம் சம்மதத்தைச் சொல்லிவிட்டுப் புறப்பட்டான்.
வெங்கடேசன் தெருமுனையைத் தாண்டும் வரை வாசலில் இருந்த ராஜா, உள்ளே வந்ததும்,
"சார் ரிஜிஸ்தர் போஸ்ட்!"
"எனக்கா?"
"இல்லீங்க, தங்கச்சிக்கு!"
விஜி வந்து கையெழுத்திட்டு அதைப் பெற்றுக் கொண்டாள். படபடப்பில் தாறுமாறாகக் கவரைக் கிழித்து, ஒட்டியிருந்த லெட்டர் பகுதியும் பிய்த்துக் கொண்டு வர, அவசரமாகப்பிரித்தவள், வேகமாகவிழிகளை ஓடவிட்டு,
பூமியிலிருந்து ஓரடி எழும்பி நின்றாள்.
"அண்ணா, வேலைக்கான ஆர்டர்!"
ராஜா சட்டென அதைப் பறித்தான்.
அந்தப்பிரபலதனியார் மருத்துவமனையில் ஆபீஸ் பகுதியில் ஸ்டெனோ செகரெட்டரி உத்யோகம்.
"ஆயிரத்து நூறு ரூபாய் சம்பளம்!"
"அசுர ஜாதகம்டீ அந்த வெங்கடேசனுக்கு. கால் வச்ச ராசி, வேலைக்கான உத்தரவையும் கொண்டு வந்துட்டானே!"
அதற்குள், அம்மா, அதை அக்கம்பக்கமெல்லாம் சடுதியில் ஒலிபரப்புச் செய்ய,
விஜி ஸ்லோ மோஷனில் மிதந்தாள்.
"அண்ணா, எங்கிட்ட டிரெஸ் சரியா இல்லே. அது ரொம்ப டீஸண்ட்டான ஹாஸ்பிடல்! புடைவை எடுக்கணும்!"
"வாங்கிரலாம் விஜி. வெங்கடேசன் எந்த டிமாண்டும் பண்ணலே. ஆனா நீ வேலைக்குப் போக அவன் சம்மதிப்பானான்னு தெரியலே. அதுல அவனுக்கு அவ்ளோ இஷ்டம் இருக்கிறதாத் தெரியலே!"
விஜி பதில் எதுவும் பேசாமல் உள்ளே போய்விட்டாள்.
வெங்கடேசனைப் பார்க்கப் புறப்பட்டான்



## அருள்வாக்கு



நாம் இப்போது நான்கு விதங்களில் பாபம் செய்கிறோம். உடம்பால் பல கெட்ட காரியம்; வாயால் புரளிப் பேச்சும் அசத்தியமும்; மனத்தினால் கெட்ட நினைவுகள்; பணத்தினால் செய்கிற பாவத்தைச் சொல்லவே வேண்டாம்.

எந்த நான்கால் பாவம் செய்தோமோ, அந்த நான்காலுமே புண்ணியம் செய்யப் பழக வேண்டும்.

உடம்பைப் பரோபகாரம், பகவானைப் பிரதக்ஷிணம் செய்து நமஸ்கரிப்பது இவற்றில் ஈடுபடுத்திப் புண்ணியம் செய்ய வேண்டும்.

வாயால் பகவந்நாமாவைச் சொல்லிப் புண்ணியம் செய்ய வேண்டும். 'சம்பாதிப்பதிலேயே பொழுதெல்லாம் போய்விடுகிறது. இதற்கு அவகாசம் இல்லையே' என்பீர்கள். சம்பாதிப்பது கிருகஸ்தர்களுக்கு அவசியம்தான். ஆனால் யோசித்துப் பார்த்தால் அதற்கே பொழுது முழுதும் போய்விடவில்லை என்று தெரியும். வீண் பேச்சு, பரிகாசம், வேடிக்கை பார்ப்பது, நியூஸ் பேப்பர் விமரிசனம் இவற்றில் எவ்வளவு பொழுது வீணாகிறது? அதையெல்லாம் பகவந் நாமா ஸ்மரணையில் செலவிடலாமே! இதற்கென்று தனியே பொழுது ஏற்படுத்திக் கொள்ள முடியாவிட்டாலும் பரவாயில்லை. காரியாலயத்துக்கு பஸ்ஸிலோ, ரயிலிலோ போகும்போது பகவந் நாமாவை ஜபித்துக் கொண்டே போகலாமே! ஓடி ஓடிச் சம்பாதிப்பதில் ஒரு பைசாக்கூடப் பிற்பாடு உடன் வராதே. மறு உலகத்தில் செலாவணி பகவந் நாமா ஒன்றுதானே?

மனசு பகவானின் இடம். அதைக் குப்பைத் தொட்டியாக்கியிருக்கிறோம். அதைச் சுத்தப்படுத்தி மெழுகி பகவானை அமர வைத்து நாமும் அமைதியாக அமர்ந்துவிட வேண்டும். தினமும் ஐந்து நிமிஷங்களாவது இப்படி தியானம் செய்ய வேண்டும். லோகமே முழுகிப் போனாலும் நிற்காமல் நடக்க வேண்டிய காரியம் இது. ஏனெனில் லோகம் முழுகும் போதும் நமக்குக் கைகொடுப்பது இதுதான்.

பணத்தைக் கொண்டு பகவானுக்காகவும் ஏழைகளுக்காகவும் பல விதங்களில் தர்மம் செய்து புண்ணியம் சேர்க்க வேண்டும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்**

ராஜா.

விஜி வேலைக்குப் போகத் தொடங்கி ஒரு மாதத்துக்கு மேல் ஆகிவிட்டது.

எந்தப் பிடித்தமும் இல்லாமல், முதல் மாதமே முள்ளங்கிப் பத்தையாய்ச் சம்பளத்தை எடுத்து வந்து அம்மாவிடம் தந்தாள்.

''அம்மா, வர்ற வெள்ளிக்கிழமை நாள் நல்லாயிருக்கு! நிச்சயத்தை முடிச்சுட்டா, அடுத்த மாசமே சத்திரம் பாத்துடலாம்!'' — ராஜா.

''இவள் வேலை விஷயமா அந்தப் பிள்ளை என்ன சொன்னான்?''

''ரொம்ப கண்ணியம்மா அவன். இப்ப எதுவும் சொல்ல எனக்கு உரிமை இல்லை. என் மனைவியான பின்னால் சொல்லிக்கறேன்னு சொன்னான்!''

''ஆனால்தானே!''

''விஜி என்ன சொல்றே நீ?''

''அண்ணா கோச்சுக்காதே. நான் சொல்றதைக் கொஞ்சம் பொறுமையாக் கேள்! இப்ப என் நிலைமையே வேறே. அப்ப நான் வேலையில்லாதவளா இருந்தேன். இப்ப நல்ல உத்யோகத்துல, நல்ல சம்பளம் வாங்கறேன். என் அந்தஸ்துக்குத் தகுந்த மாதிரி....''

''ஓஹோ, வெங்கடேசன் பத்தலையா?''

''நிஜத்தைப் பேசித்தானே ஆகணும்? எட்டாவது கூட பாஸ் பண்ணாத அவர் நாளைக்கு என் புருஷனாகி, என்னோட வெளியேவரும்போது, என்சிநேகிதர்களுக்கு நடுவில் என் தலை குனியாதா?''

''இந்தத் தலை அப்பக் குனியலையோ?''

''புரிஞ்சுக்காமல் பேசறே நீ!''

''உன் தகுதிக்கு என்னை அண்ணான்னு சொல்லிக்கலாமா? வீட்டில் வேட்டி, பனியனோட நான் நிற்கலாமோ?''

''கிண்டல் போதும்! கல்யாணம் வாழ்க்கை. ஏன் என்னை வற்புறுத்திப் பேசறே? என் விருப்பத்துக்கு விடேன்!''

''இதோ பாரு விஜி, 'உன் இஷ்டம்னு' என்னை நேத்திக்கு நம்பின நீ, வேலை கிடைச்ச உடனே உன் விருப்பத்துக்கு விடச் சொல்றே. நேத்திக்குச் சரியா இருந்த ஒரு மெக்கானிக் இந்த நிமிஷம் தாழ்ந்துவிட்டான். ஒரே மாசத்துல வந்த அற்புதமான வளர்ச்சி. என் பாராட்டுக்கள்!''

''அண்ணா, நான்....''

''இரு, நான் பேசி முடிச்சுர்றேன். இனிமேல் உன் விஷயத்தில் நான் தலையிடப் போறதில்லை. உனக்காக நான் மாப்பிள்ளை பாக்கவும்போறதில்லை. என் அளவில் வெங்கடேசன்தான் மாப்பிள்ளை. ஆளை விடு!''

''நீ பேசும்போது நானும் பேசித்தான் ஆகணும். நான் ஒருத்தரைத் தேர்ந்தெடுத்தாச்சு! அவரும் சீர்திருத்தவாதிதான். கட்டின புடைவையோட இந்த வெங்கடேசன் வரச் சொன்னா, அந்தப் புடைவையைக் கூட அவரே வாங்கித் தந்து கட்டிட்டு வரச் சொல்லுவார். மாசம் மூவாயிரம் சம்பளம், படிப்பு எம்.பி.ஏ. சொந்தமா வீடு, பேங்க்

## 'தேள்' பண்ணை!

சோவியத் ரஷ்யாவின் ஆல்மா அட்டாவில் தேள்களைப் பாதுகாப்பதற்காக, தனிப் பண்ணை ஒன்று உள்ளது. இதில் 16000 க்கும் அதிகமான தேள்களைப் பாதுகாப்பாக, தனித்தனிப் பெட்டிகளில் அடைத்து வளர்க்கின்றனர். ஒரு கிராம் தேள் நஞ்சின் விலை மூன்று லட்ச ரூபாய்....!!

நன்றி: ஸ்புட்னிக்

தகவல்: ராஜேஸ்வரி

---

பேலன்ஸ்....''

அம்மா வாயைப் பிளந்தாள்.

''சரின்னு சொல்லுடா ராஜா. நமக்கென்ன, அவன்தான் சாசுவதமா? விஜி சந்தோஷமா இருந்தால் பத்தாதா, வரச் சொல்லுடா அந்தப் பிள்ளையை!''

''சரி, வசதி போல் செய்!''

வெறுப்புடன் ராஜா நகர்ந்தபோது, கண் முன்னால் வந்து சிரித்தான் வெங்கடேசன்.

'ஐ'ம் ஸாரி வெங்கடேசன், உன்னைப் புறக்கணிக்கிற இந்தப் பாவத்துக்குத் தெய்வம் எங்களைத் தண்டிக்கட்டும்!'

நேரில் போய் ஒரு வார்த்தை சொன்னால் என்னவென்று தோன்றியது.

புறப்பட்டான்.

''நீங்க ஏன் அழறீங்க?''

''இப்படியொருத்திக்குக் கூடப் பிறந்தோமேன்னு!''

''தப்புங்க! வற்புறுத்திப் பெண்ணைக் கட்டி வைக்கும் வழக்கத்தைத் தள்ளி மிதித்திடுவோம்'னு பாரதியார் சொன்னது தெரியலையா? அவங்க விருப்பம் அதுனா, அதுல தப்பென்ன? ஏற்றத் தாழ்வுகளுக்கு நடுவில் தாலிக் கயிறு தொங்கினால் ஆபத்துங்க.''

''என்னை மன்னிச்சேன்னு சொல்லுங்க வெங்கடேசன்.''

''ஒரு வகைல நமக்கும் இது பாடம்ங்க. பெண்ணை மறுக்கிற ஆண் வர்க்கத்துக்கு அந்த வலி புரிய வேண்டாமா? ஆனால் பாடம் சொல்ல ஆண்டவன் தேர்ந்தெடுத்தது என்னை எதுக்காகன்னு புரியலை! சரி விடுங்க, காப்பியா டீயா?''

''எதுவும் வேணாம் வரட்டுமா?''

''செய்யுங்க.''

வீட்டுக்கு வந்ததும் அம்மாவின் முகம் அறுந்து தொங்கியது. விஜியின் விசும்பல் சப்தம் கேட்டது.

''ஏன் விஜி அழறே?''

''அதான் எனக்கும் தெரியலைடா ராஜா. வந்த முதல் நானும் கேட்டுக் கேட்டுத் தோத்துட்டேன். சொல்ல மாட்டேங்கறா.''

''விஜி என்ன விஷயம்? மணி இப்ப ரெண்டு. மூணு மணிக்கு அந்தத் தீபக் வரப் போறாரே. இப்படியா அழுது வடியப் போறே?''

''அவன் வர மாட்டான்!''

''ஏன் விஜி?''

''உலகத்துக்குத்தான் அவன் பேச்சிலர். அவன் செட்டப் பண்ணி வச்சிருக்கிற ஒரு பொண்ணு ஆபீஸ் தேடியே இன்னிக்கு காலைல வந்து, நாத்தமா நாறி.... சொல்ல முடியாமல் விஜி அழத் தொடங்க,

''ஓஹோ, எல்லாமே சொந்தமா இருக்குன்னு சொன்னே... இதையும் அவன் விட்டு வைக்கலையாக்கும்!''

''அண்ணா என்னைக் கொல்லாதே.''

''இருந்துட்டுப்போகட்டும்விஜி. எம்.பி.ஏ. மூவாயிரம் சம்பளம், நீ தலை குனியாம சொஸைட்டில நடக்கலாமே, உன் ஸ்நேகிதிகள் நடுவுல. இது தனி ட்ராக்தானே, ஒட்டிட்டுப் போகட்டுமே, நஷ்டமா நமக்கு?''

''இப்படிப்பேசறதைவிட என்னைக்கொன்னுடலாம் அண்ணா.''

''உன்னைக் கொல்ல முடியுமா விஜி? நீ மத்தவங்களைக் கொன்னுதானே பழக்கம்?''

''அண்ணா, இதோட நிறுத்து! இப்பவே அந்த வெங்கடேசன் வீட்டுக்கு என்னைக் கூட்டிட்டுப் போ. அவர் கால்ல விழுந்தாவது மன்னிப்புக் கேட்கறேன். அவரையே முழு மனசோட நான் கட்டிக்கிறேன்.''

''ராஜா ஸார் நான் வரலாமா?''

ராஜா திரும்ப, வாசலில் வெங்கடேசன்.

''வாங்க, உங்களைத் தேடி நாங்களே வர இருந்தோம்!''

''பையை மறந்து விட்டுட்டீங்க. தர வந்தேன்!''

''மறந்தது பையை மட்டுமில்லை!''

''புரியலை.''

சொன்னான். முழுவதும் சொன்னான்.

அமைதியாக நின்றான் வெங்கடேசன்.

''பதில் சொல்ல வேண்டியது நீங்கதான் வெங்கடேசன்.''

''என்ன சொல்லணும்?''

''இப்படிக் கேட்டா?''

''நான் ஆட்டோமோபைல் ஷாப்ல மெக்கானிக். டயர் பழுதுபடும்போது ஸ்டெப்னி பார்த்திருக்கேன் நிறைய. இப்ப என் நிலைமை என்ன, அந்த ஸ்டெப்னிதானா? புது டயர் வந்தால் மறுபடியும் என் நிலை மாறுதுன்னு என்ன உத்தரவாதம்?''

''............''

''இதோ பாருங்க, அடி வாங்கிட்டு அடுத்த கன்னத்தைக் காட்ட நான் யேசு இல்லை. உலகத்துக்கு ஒரு யேசு போதும். யதார்த்தமா பேசுவேன். அதே சமயம், விலக்கப்பட்ட பின்னால், மறுபடியும் மனசு மாறிச் சேர்த்துக்கற உத்தேசம் வந்தால் சரின்னு சொல்லுவேன்னு நீங்க எப்படி எதிர்பார்க்கலாம்? நான் மகாத்மா இல்லை. ரத்தமும் சதையுமான மிடில் கிளாஸ் ஆத்மா! அந்த எம்.பி.ஏ.க்கு ஒரு சின்ன வீடு இருந்ததால் விஜி அவரை ஒப்புக்கலை. அவரை மனசுல ஏற்கெனவே வரிச்ச விஜிக்கு நான் யாரு இப்ப? சின்ன வீடா? பதில் தெரிஞ்சா பட்டறைக்கு வாங்களேன். நான் வரட்டுமா?''



# ஏமாந்தவர்கள்...

அந்த இரு இளம் பெண்களுக்காக எத்தனையோ கதவுகள் திறந்து விடப்பட்டிருக்கின்றன. கண் தானம் கேட்க வந்த அவர்களுக்கு உயிரையே தானமாகத் தரவும் சில வாலிபர்கள் முன்வந்ததுண்டு.

திறந்த நிலையில் நின்ற கதவுகள் அவர்களை வரவேற்க, அந்தப் பெரிய வீட்டுக்குள் நீலாவும் மாலாவும் நுழைந்தபோது முப்பது வயது மதிக்கத்தக்க ஒருவர் நாற்காலியில் அமர்ந்து சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தார்.

''நீங்களெல்லாம் யாரு?''

''பெண்கள்! தெரியலையா?''

அவர் சிரித்தேவிட்டார்.

நீலமணிக் கண்களைச் சுழற்றி நீலாதான் முதலில் விஷயத்துக்கு வந்தாள். ''நாங்க கண் அன்பளிப்பு வங்கியிலேர்ந்து வந்திருக்கோம், கண் தானம் பெறுவதற்காக....''

''ஓஹோ!''

''இருண்டு கிடக்கும் எத்தனையோ பேருடைய வாழ்க்கையிலே உங்களாலே ஒளியேற்றி வைக்க முடியும்.''

''அப்படியா?''

''பெரும்பெரும் தலைவர்களெல்லாம் கண் தானம் கொடுக்க முன் வந்திருக்காங்க. பிரதமர் ராஜீவ் காந்தியையே உதாரணமா எடுத்துக்கோங்களேன்'' என்றாள் மாலா.

''நாம் இறந்த பிறகும் பிறருக்குப் பயன் படக்கூடிய ஒரே உறுப்பு கண்தான்'' என்று நீலா மேலும் விளக்கினாள்.

அவர் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

''நான் என்னவோ தரமாட்டேன்னு சொன்ன மாதிரி நீங்களெல்லாம் பேசிக்கிட்டே போறீங்களே... தானத்திலேயே உயர்ந்தது கண்தானம்னு எனக்கும் தெரியும்'' என்று பட்டென்று பேசினார்.

''ஐயய்யோ! வித்தியாசமா எடுத்துக்காதீங்க. உங்க நண்பர்களுக்கும் எடுத்துச் சொல்ல உதவுமேன்னுதான் இதெல்லாம் சொல்றோம்'' என்றாள் மாலா.

''அப்படீன்னா நீங்க ஓர் ஒப்பந்தத்திலே கையெழுத்துப் போட வேண்டியிருக்கும்'' நீலா ஃபாரத்தை நீட்டினாள்.

''அவ்வளவுதானே.... அதுக்கு முன்னாலே ஒரு சந்தேகம்....'' என்று இழுத்தார்.

''கேளுங்க சார்'' இருவரும் கோரஸ் பாடினார்கள்.

''தற்கொலை செய்துக்கிட்டவங்க கண் கூடப் பிறருக்குப் பயன்படுமா?''

''ஏன் சார் அப்படிக் கேட்கறீங்க?''

''நான் வாழ்ந்துதான் என்ன பண்ணப் போறேன்'' அவர் விரக்தியாகப் பேசினார். அவர் முகத்தில் சோகம் தாண்டவமாடியது.

''நீங்க உங்க கண்ணையே தியாகம் செய்யறவர். உங்களுக்கு அப்படி ஒரு நிலை ஏற்படக்கூடாது'' என்று நீலா அன்பு ததும்பினாள்.

''ஐயோ, என்னைத் தியாகி ஆக்கிடாதீங்க. இத்தனை நேரம்.... இவ்வளவு நேரம்...''

''என்ன சார்!''

''உங்க கால்கள் எங்கே இருக்குன்னு மட்டும் காட்டுங்க! நான் விழுந்து மன்னிப்புக் கேட்கணும். உங்களையெல்லாம் ஏமாத்திட்டேன்.''

''சார் நீங்க....''

''ஆமாம். பார்வை இழந்தவன். மன்னிச்சோம்னு ஒரு வார்த்தை சொல்லுங்க.''

''கண்ணிருந்தும் குருடர்களா நாங்கதான் நடந்துக்கிட்டோம்!''

அந்த இரு பெண்களின் கண்களிலும் கண்ணீர் ததும்பியது.

— கே. எம். சம்சுதீன்

# ஆட்டோ

## கா.சு.வேலாயுதன்

**பெ**ரியவர் சொல்லிக் கொண்டே வந்தார்.

கோபம் அலைபாய்ந்த தன் மனத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு, அவர் கூறிய பாதையிலெல்லாம் வண்டியைச் செலுத்தினான் மனோகரன். முட்செடிகள் இருமருங்கிலும் ஆலமரமாய்ப் பேயாட்டம் போட்டுக் கொண்டிருக்க, அதன் நடுவே கோடு கிழித்தவாறு சென்ற குறுகிய பாதையின் இருட்டை, ஹெட்லைட்டின் வெளிச்சம் விலக்கியபடி இருந்தது.

''யோவ்.... இன்னும் எத்தனை தூரமய்யா போவணும்....?'' கேட்டபடியே வேகத்தைக் குறைத்தான் மனோகரன்.

''இன்னும் கொஞ்சந் தூரம்தான் தம்பி...!'' கெஞ்சும் விதத்தில் பதிலளித்த அப்பெரியவர், ''கோபிச்சுக்காதீங்க தம்பீ... பாவி மக, அவ வெளியே இருந்த தேதியைச் சரியா நியாபகம் வெச்சுக்காம.... இன்னும் குழந்தை பிறக்கப் பத்து நாளாகும்னு சொல்லி ஏமாத்திட்டா....! இப்ப நடு ஜாமத்துல வயத்தை வலிக்குதுன்னு உக்காந்துட்டா. அவ புருஷனும் குடிகாரப் பய.... இன்னும் வீடு வந்து சேரலை.... ம்.... என்ன செய்யறது? புள்ளைப் பேறு நேரங் காலம் பார்த்துட்டா சாமி வருது?'' என்று அங்கலாய்க்கவும் செய்தார்.

அதன்பின்பு சிறிது நேர மௌனம். ஆட்டோவின் இரைச்சல் மட்டும் அந்தக் காட்டு வெளியில் எதிரொலித்தபடி இருந்தது! மனோகரனுக்கு மெல்லவும் முடியாத, விழுங்கவும் முடியாத நிலை....

நாளை அவசரமாகத் தன் தங்கையின் பிரசவச் செலவுக்காக அம்மாவிடம் நூறு ரூபாய் கொடுக்க வேண்டிய நிர்ப்பந்தத்தில் இருந்தான். அதற்காக மாலை மணி நாலிலிருந்து ஓயாமல் அலைந்தும் ஒரு வாடகை கூட கிடைக்கவில்லை. தன் ஒருநாள் வாடகைக் கலெக்ஷனைப் பிடித்துக் கொண்டு, அப்புறம் தன் தங்கையின் பிரசவச் செலவுக்குப் பணம் சேர்க்க வேண்டும் என்ற எண்ணத்தில் அவன் மனம் குறியாய் இருந்தும், வீண் அலைச்சல் அவனை ஆரம்பத்திலேயே சோர்ந்து போகச் செய்தது. எனவே வேறுவழிதோன்றாமல் தன் மாமூல் ஆட்டோ ரிக்ஷா ஸ்டாண்டில் தன் வண்டியை நிறுத்தியிருந்தான்.

அப்போது சரியாக மணி இரவு பதினொன்றரை....

''ஏன் தம்பீ.... வண்டி வருமா?''

''எங்கே போவணும்?'' உற்சாகமாகக் கேட்டான்.

''அஞ்சு முக்கு வரைக்கும் போகணும். அங்கே போயி ஒரு பிரசவ கேஸைக் கூட்டிக்கிட்டுப் பெரியாஸ்பத்திரி வரைக்கும் போகணும்! எவ்வளவு ரூவா கேட்கறே....?''

இப்போது வண்டியில் வரும் பெரியவர் தான் கேட்டார்.

அவரைப் பார்த்தான் மனோகரன். அழுக்கடைந்த வேட்டியும், தோளில் கிடந்த கிழிந்த துண்டும் கலைந்த தலைமுடியும் அவர் ஏழை என்று சொல்லாமல் சொல்லியது. அந்தப் பெரியவரைப் பார்த்தவுடன் பரிதாபப்பட்டு விட்ட அவன்,

''நாற்பது ரூபா கொடுங்க....'' என்று நியாயமான வாடகை கேட்டான்.

''நாற்பது ரூவாயா....?'' அவர் அதற்கே வாயைப்பிளப்பதை அந்தக்கரிய இருட்டிலும் அவருடைய குரல் சுட்டிக் காட்டியது.

''ஏம்பா.... கொஞ்சம் குறைச்சுக்கக் கூடாதா....?'' என்று மேலும் அவர் கேட்டார்.

''என்ன பெரியவரே.... அஞ்சுமுக்கு இங்கிருந்து பதினஞ்சு கிலோமீட்டர். அங்கிருந்து பெரியாஸ்பத்திரி ஏழு கிலோ மீட்டர்.... அப்புறம் வெயிட்டிங் சார்ஜ் எல்லாம் வேறே வரும்....! இராத்திரி நேரத்துலே நான் நாற்பது ரூபா வாடகை கேட்கறேன்னு, ஏதோ பிரசவக் கேஸுங்கற பரிதாபத்துனலதான்... தெரிஞ்சுக்க....'' என்றவன்,

''சரி சரி.... எதுக்குக் கச,கசன்னு பேசிட்டு? முப்பத்தஞ்சு ரூபா கொடுத்துடு! இதுவே மீட்டர் சார்ஜை விடக் குறைவாத்தான் இருக்கும்னு நெனைக்கிறேன். சரி, வண்டியிலேறு....!''

பெரியவர் சற்று நேரம் யோசித்தவர், மேலே ஏதும் பேசாமல் வண்டியிலேறி உட்கார்ந்துவிட்டார்.

இப்போது அவர் சொல்லும் பாதையையெல்லாம் பார்த்தபிறகு, மனோகரனுக்கு ஏன் இந்த வாடகைக்கு வந்தோம் என்றிருந்தது. அதுவும் முப்பத்தைந்து ரூபாய்க்கு...! 'நம்ப ஆட்டோ ஸ்டாண்டுலே யாருமே இந்த வாடகைக்கு இவ்வளவு தூரம் வரமாட்டாங்க!' அவன் உதடுகள் முணுமுணுத்துக் கொண்டன.

''தம்பீ.... இதோ இந்த இடந்தான், வண்டியை ஓரமா நிறுத்துங்க....!'' என்று கைகாட்

டியபடி கத்தினர். உடனே மனேகரன் வண்டியை அப்படியே ஓரங் கட்டித் திருப்பி நிறுத்தினன். கிழவர் சற்றும் தாமதிக்காமல் இருளில் குதித்து வெளியே ஓடினர்.

மனேகரன் ஆட்டோவின் முன்புறத்தில் அப்படியே சாய்ந்து நின்றபடி தன் பேக்கட்டில் இருந்த கணேஷ் பீடியை எடுத்து உதட்டில் செருகிக் கொண்டு, தீக்குச்சியைக் கிழித்தான். அதன் ஒளிபட்டு எதிரே தெரிந்த குடிசை ஒன்றிலிருந்து இரண்டு மூன்று உருவங்கள் வெளிவருவதைக் கண்டு, பீடியைப் பற்ற வைக்காமல் அப்படியே நிறுத்திவிட்டு, குடிசையிலிருந்து வெளிப்பட்ட உருவங்களையே கவனித்தான்.

''டேய், குஞ்சப்பா எழுந்திரிடா.... உம் பெண்டாட்டியைக் கூட்டிக்கிட்டு ஆஸ்பத்திரி போறேன். துணைக்குக் கூட வாடா....!''

''ம்.... அம்மாவைக் கூட்டிட்டுப் போ!'' படுத்திருந்த உருவம் எழுந்திருக்காமலே பதில் சொன்னது.

''ம்.... பெண்டாட்டி வலியால துடிச்சிட்டிருக்கா..... இந்நேரம் வரைக்கும் குடிச்சுட்டு ஊர் சுத்திட்டு வந்துட்டு இப்பத் தூக்கத்தைப் பாரு....! வாடான்னு.....''

வெளியே படுத்திருந்த அந்த உருவத்தைப் பிடித்திழுப்பது அந்தப் பெரியவர்தான்!

''ச்சூ.... தூரப்போ அப்பாரு.....!'' படுத்திருந்தவன் உதறிய உதறலில் தடுமாறிக் கீழே விழுந்தார் பெரியவர். தடுமாறியபடியே எழுந்தவரை குடிசையினுள்ளே நின்ற பெண்மணி ஓடி வந்து தாங்கிக் கொண்டு:

''அவனைப் போயி ஏன் எழுப்பறீங்க? அவனே குடிகார நாயி.... அவனை நம்பினு....'' மேலும் ஏதோ கெட்ட வார்த்தையில் திட்டியவள், ''நடங்க நாம போகலாம், அருக்காணி.... மெதுவா எழுந்திரிச்சு வாம்மா....!''

அவள் அழைப்புக் குரல் கேட்டு வந்த அருக்காணியை அவள் தாங்கியபடி, கையைப் பிடித்து நடத்தியபடி ஆட்டோவை நோக்கி வந்தாள். ஆனல் அந்தப் பெரியவரோ அந்தக் குடிகாரனிடம் மேலும் ஏதோ வலுக்கட்டாயமாகக் கேட்டுக் கொண்டேயிருந்தார்.

''டேய் சாயந்தரம் கூலி வாங்கின பணம் எங்கேடா....?''

கத்தினர். அவன் பதில் பேசவில்லே. பெரியவர் விடவில்லே. அவனை உலுக்கினர்.

''டேய்....!'' மீண்டும் கூப்பிட்டார்.

''ம்....!''

''எங்கேடா கூலிப் பணம்?''

''கூலியுமில்லே, ஒண்ணுமில்லே, போ! நூத்தம்பது ரூபாக் கெடைச்சுது. அதுல அம்பது ரூபாய்க்கு ஒரு 'ஆப்பு' வாங்கிக் குடிச்சிட்டேன். மீதியை நம்ப பரமசிவன் கிட்டே சாராயக் கடனுக்காகக்குடுத்துட்



கிணற்றடியில் குளித்துக் கொண்டிருந்தபோது உஷா குரல் கொடுத்தாள்.

"என்னங்க.... உங்களைத் தேடி யாரோ வந்திருக்காங்க!"

"என்னைத் தேடியா... போடிப் போ. நாம இந்தக் கிராமத்துக்கு வந்து அஞ்சுநாள்கூட ஆகலே. எவனாவது வீட்டு விலாசம் தவறி வந்திருக்கப் போறான்" என்று தலையை துவட்ட ஆரம்பித்தேன்.

"ஆமா... பெரிய டவுன் இது. வீட்டு விலாசம் தவறி வரதுக்கு. கிராமம் தவறி வந்தால்தான் உண்டு."

"கிராமத்துக்கு வந்து நீ அடிக்கிற முதல் ஜோக்காக்கும் இது?" என்றேன்.

"விஷயத்துக்கு வாங்க. எல்லாம் விசாரிச்சேன். பாங்குல வேலை பார்க்குற ஆபீஸரைப் பாக்கணும்னு சொல்றான்."

"ஓஹோ, அப்படியா விஷயம். நான் ஊருக்கு வந்திருக்கிற விஷயத்தை டூரிங் தியேட்டர்ல ஸ்லைடு போட்டே காமிச்சிட்டான் போலிருக்கு."

"ஐயாவுக்குப் பெருமை பிடிபடலையாக்கும்" உள்ளே போனாள்.

ஆனால் அவனைச் சந்திக்கும்வரை நான் நிறைய ஊகங்களை மேற்கொள்ள வேண்டியிருந்தது. இந்தச் சின்ன கிராமத்திற்கு நான் முற்றிலும் புதியவன்; ஊருக்கு வந்து அதுவும் ஆபீஸில் சேர்ந்து ஒரு வாரம் கூட ஆகவில்லை. வீட்டு வேலைகளைக் கவனித்துக் கொள்ள ஒரு ஆள் வேண்டும் என்று மானேஜரிடம் சொல்லியிருந்தேன். அவனாக இருக்குமோ?

வேட்டியைக் கட்டிக் கொண்டேன். ஈரத் துண்டைத் தோளில் போர்த்தியபடி வாசலுக்குப் போனேன்.

வாசலில் ஒரு கிழவன் குத்துக்காலிட்டு அமர்ந்திருந்தான்.

"யாருப்பா, என்ன வேணும்?"

உடனே எழுந்து நின்றான். "கும்பிடறேன் சாமி. இந்தக் கிராமத்துல வண்ணானுங்க நானு. ஐயாவுடைய துணி மணிகளைத் தோச்சுப் போட அனுமதி கொடுக்கணுமுங்க."

உஷாவைப் பார்த்தேன். "எம் பெண்டாட்டி தோச்சுக்கிடுவாய்யா. சரி, உங்கிட்டே ஆடினரிக்கு எத்தனை நாளாகும்?"

டோபி நிமிர்ந்தான். இப்போதுதான் அவனை நன்றாகக் கவனிக்க முடிந்தது. கூனல் முதுகு. நரைத்த தலை. தேசிய வரை படம் மாதிரி கவலை நதிகள் ஓடிய முகம்.

"ஐயாவுக்குப் பட்டண வாசம். அதான் அப்படிக் கேக்குறீக. இங்க எல்லாம் மறுநாளு ஐயா."

பட்டணத்துப் புத்தியை நறுக்கென்று குட்டினேன். நான் அசடு வழிவதைப் பார்த்து ரசிப்பவள்போல் உஷா சிரித்துக் கொண்டிருந்தாள்.

"என்ன உஷா, இவன் கிட்டேயே போட்டுடலாமா?"

"இந்தக் கிராமத்துல எனக்குன்னு இருந்த ஒரே பொழுதுபோக்கு துணி தோய்ச்சுப் போடறதுதான். அதுவும் போச்சா!" என்று சலித்துக் கொண்டாள்.

"இந்தக் கிண்டல்தானே வேணாங்கறது. உனக்கு உண்மையிலேயே பொழுது போகலைன்னா இவன்கூடப் போய்க் குளத்தங் கரையிலே நின்னு தோய்ச்சுட்டு வா" என்றேன்.

"என் பொழப்புல கைவெச்சிடாதீங்கம்மா" என்பவன்போல் கிழவன் என் மனைவியைப் பார்த்துக் கொண்டு நின்றான்.

சிறிது நேரம் யோசித்துப் பின்னர், "சரி, அவன்கிட்டயே போட்டுடலாம்" என்றாள்.

"என்ன பெரியவரே, திருப்திதானே. நாளைலேர்ந்து துணி எடுக்க வந்துடு" என்று ஒப்பந்தமானேன்.

விஷயத்தை அதோடு விட வேண்டியதுதானே. பாங்க் ஆபீஸராய் லட்சணமாக வீட்டுக்குள்ளே போயிருக்கலாம். விதி செய்த சதி! வார்த்தையைக் கொட்டிவிட்டேன்.

"ஏம்பா துணி எடுத்தே உனக்குக் கூனல்

# பூசாரி கொடுத்த வரம்



விழுந்திடுச்சே...பொதி சுமக்க ஏதாவது ஏற்பாடு பண்ணிக்கக் கூடாதா?'' என்று கேட்டேன்.

உடனே கிழவன் பிடித்துக் கொண்டான்.

''அட என்னங்க, நீங்க வேறே. என்னால் கொடுக்க முடிஞ்ச கூலிக்கு எந்தக் கழுதை வருதுங்கறீங்க. வர்ற கழுதைகளும் பாதியிலேயே சண்டித்தனம் பண்ணுதுங்க. ஐயா மனசு வெச்சீங்கன்னா எனக்கு உங்க பாங்குல கடன் வாங்கித் தர முடியுமில்லே. ஒரு இஸ்திரிப் பெட்டியும் ஒரு கழுதைக் குட்டியும் வாங்கணும்னு ரொம்ப நாளா ஆசை.''

ஏண்டா சொன்னோம் என்றாகிவிட்டது எனக்கு.

''அட போ பெரியவரே. இஸ்திரி குட்டியும், கழுதைப் பெட்டியும். ஸாரி, கடன் வாங்கறது பெரிய விஷயமில்ல. திருப்பிக் கட்டணும் தெரியுமா?''

''என்ன ஸார். பெரிய வார்த்தை சொல்லிட்டீங்க. என்னைப் பாத்தீங்கன்னா ஏமாத்தறவன் மாதிரியா தெரியுது? ஏமாத்தறவன் ஏதாவது கட்சி மூலமாத்தான் வந்து ஒங்களைத் தொட்டுக் கடன் கேட்டு அதிகாரம் பண்ணுவான். என்னைப் பாருங்க, ஒங்களைத் தொட்டுக் கும்பிட்டுக் கேக்கறேன். நான் சாகறதுக்குமுன்னாலஎனக்குன்னுசொந்தமா இஸ்திரிப் பெட்டியும் கழுதைக் குட்டியும்.''

செண்டிமெண்ட்ஸ்... உஷாவைப் பார்த்தேன்.

''பாவங்க கிழவன்'' என்று கண்ணால் சொன்னாள்.

''சரி நாளைக்கி ஆபீஸுக்கு வா'' என்றேன்.

''அப்ப பாங்குக்கு...?'' என்றான்.

''அட எல்லாம் ஒண்ணுதான்யா'' என்றேன் எரிச்சலுடன்.

''கிராமத்துல ஆளாளுக்கு ஜோக்கடிக்கிறாங்க'' என்று முணுமுணுத்தபடி உஷா உள்ளே போனாள்.

**ம**றுநாள் காலை பத்து—பதினொரு மணிக்கெல்லாம் ஆபீஸிற்குக் கிழவன் வந்தான். உடனே மானேஜர் அறைக்குக் கூட்டிப் போய் விஷயத்தைச் சொன்னேன்.

''வந்தவேகத்துலேயேரெகமண்ட்பண்ணியிருக்கீங்க. அப்பநல்லபார்ட்டியாத்தானிருக்கும். என்ன பெரியவரே ஒழுங்கா பணம் கட்டுவீங்களா?''

''என்ன ஸார் எல்லாரும் அப்படியே கேக்குறீங்க. நம்பிக்கைதான் சார் முக்கியம். நீங்க கடன் குடுத்துப் பாருங்க. ஒவ்வொருத்தன் மாதிரியில்ல சார் நான்.''

''சரி, நீங்க வெளீல வெயிட் பண்ணுங்க'' என்றார் மானேஜர்.

ஹெச்.என்.ஹரிஹரன்



அவன் வெளியே போனவுடன், "என்ன சார் கடன் ஒண்ணும் பிரச்னை இல்லையே" என்றேன் நான்.

"பிரச்னை என்ன பெரிய பிரச்னை. ஆனால் கிழவனை நம்பிக் கொடுக்க முடியுமா? ஒரு பேச்சுக்குச் சொல்றேன். இப்ப நாம் கடனைக் கொடுத்த உடனே கிழவன் மண்டையைப் போட்டா என்ன பண்றது?" என்று கேட்டார் மானேஜர்.

"என்ன பண்ண முடியும். கழுதையை பாங்க் வாசல்ல கட்டி வைச்சுக் காப்பாத்த வேண்டியதுதான்" என்று நான் சொல்ல இருவரும் சேர்ந்து சிரித்தோம்.

திடீரென்று ஒரு ஐடியா தோன்றியது.

"ஸார் ரீபேமெண்ட் கூடக் கவலை இல்லை சார். எப்படியிருந்தாலும் நான் சலவைக்குத் துணி அவன்கிட்டேதான் போடறேன். அதுக்குத்தரவேண்டியகூலியைக்கணக்கிலே அட்ஜஸ்ட் பண்ணிடறேன்" என்றேன்.

"வெரிகுட் ஐடியா. அப்படியே பண்ணிடுங்க. லோன் டாக்குமெண்ட்ஸ் ரெடி பண்ணுங்க" என்றார்.

மிக மோசமான ஐடியா அது என்று அப்போது எனக்குத் தோன்றவில்லை.

**கா**தில் டோக்கன் நம்பருடன் எங்கள் வீட்டு வாசலில் கழுதை வந்து நிற்க ஆரம்பித்தது. அதைப் பார்க்கும்போதெல்லாம் நான் உஷாவைக் கிண்டல் அடிக்க ஆரம்பித்தேன்.

"வாங்கினதுதான் வாங்கினேன். பொட்டைக் கழுதையா வாங்கக் கூடாதா?" என்பேன்.

"ஏன் கிராமத்துல 'சைட்' அடிக்க மனுஷங்களே கிடைக்கலியா ஒங்களுக்கு?"

"நீ ஒருத்தி போதாதா எனக்கு. அதுக்கு சொல்லல. பொட்டைக் கழுதைன்னா தினசரி அரை லிட்டர் கழுதைப் பால் வாங்கி நீ குளிச்சியானா கிளியோபாட்ரா மாதிரி ஆயிடுவே இல்லியா?"

உடனே கோபம் வந்துவிடும்.

"இருக்கிற அழகு போதும். ஒங்களுக்கு ஆசையாயிருந்தா சொல்லுங்கோ. கழுதைப் பால் வாங்கிக் காப்பிப் போட்டுத் தரேன்; அவன் கடனை அடைச்ச மாதிரியும் இருக்கும்" என்று ஒரு போடு போடுவாள்.

> **"கடை வைக்க பாங்க்—லோன் கேட்கிறயே! என்ன கடை வைக்கப் போறே?"**
>
> **"வட்டிக் கடை."**



**ஆ**ரம்ப காலத்தில் கிழவனிடம் துணிகளைப் போட அவன் பவ்ய மாய்த் துணிகளைச் சுருட்டி ஏதோ எங்களுக்கு மரியாதை தர விரும்புபவன் போல் அதைக் கழுதையின் மேல் ஏற்றாமல் தானே சுமந்து மறுநாள் வெயில் காய்ந்த மணத்தோடு அயர்ன் பண்ணித் தருவான். அவனிடம் ஏற்கெனவே சொன்னபடி நானும் மாதா மாதம் அவனுக்குத் தரவேண்டிய தொகையை பாங்கில் கட்டிக் கொண்டிருந்தேன்.

பழகப் பழக (கழுதை...?) பாலும் புளிக்கும் என்பார்கள். நாங்கள் செய்து கொண்டிருந்த 'ஜென்டில்மேன் அக்ரிமெண்ட்' காலாவதியாகிவிட்டதுபோல்கிழவன் நடவடிக்கைகள் மாறிவிட்டன.

திடீரென்று தொடர்ந்தாற்போல் இரண்டு மூன்று நாட்கள் கிழவன் வரவில்லை. துணிகள் குவிந்து வீடே 'டோபி கானா' மாதிரி ஆகிவிட்டது. வீட்டில் இருப்பது நாங்கள் இருவர்தான் என்றாலும் கிழவன் குறைந்த செலவில் தோய்த்துத் தருகிறான் என்கிற தைரியத்தில் இஷ்டம்போல் துணி உடுத்திக் கொண்டிருந்தோம். அதிலும் உஷா கனவு சீனில் வருகிற ஹீரோயின் மாதிரி அடிக்கடி புடைவைகளை மாற்றிக் கொண்டிருந்தாள்.

அதைச் சொன்னால் "நீங்கள் மட்டும் என்ன, கார்த்தால ஒரு சட்டை, மத்யானம் ஒண்ணுன்னு போட்டுக்கலியா?" என்று பதிலடி வரும்.

இந்தச் சூழ்நிலையில் கிழவன் வராமல் போனது மிகவும் கஷ்டமாகிவிட்டது. பணக்கார ஹீரோ திடீரென்று ஏழையாகி ஒரே சட்டையையே போட்டுக் கொள்வது போல் என் நிலைமையும் ஆகிவிட்டது.

ஆபீஸிற்குப் போனால், "என்னப்பா கிழவன் வரலியா?" என்றார்கள் கிண்டல் தொனிக்க.

"கழுதை செத்துப் போச்சோ, கிழவன் செத்துப் போனானோ" என்று புளியைக் கரைத்தார்கள்.

ஆனால் அதற்கெல்லாம் முற்றுப் புள்ளி வைப்பதுபோல் இரண்டு மூன்று நாட்களில் கிழவன் வந்துவிட்டான். எனக்கோ கோப மான கோபம். அதை அடக்கிக் கொண்டு கேள்வி கேட்க ஆரம்பித்தேன்.

"என்ன பெரியவரே. ஒரு வாரமாச்சு, ஆளையே காணோம்?"

கிழவன் ஒரு மாதிரி பார்த்தான். அதில் முன்னர் ஒட்டிக் கொண்டிருந்த அன்னியோன்யம் பவ்யம் எல்லாம் அம்பேலாகியிருந்தது.

"ஒரு வாரம் ஆகத்தானே செய்யும். ஆடினரின்னா ஒரு வாரம் சார்" என்றான்.

எனக்குச் சொரேலென்றது. தலை நிமிர்ந்து உஷாவைப் பார்த்தேன்.

"இவனைப் பாரேன். ஆட்னரின்னு சொல்லக் கூடத் தெரியலை... ஒரு வாரம் ஆகுங்கறான்."

"என்னப்பா பட்டணத்து பாஷையெல்லாம் பேசறே" என்றாள் உஷா.

"அமாம்மா. இனிமே அடினரின்ன எம

நாள். அருசண்டுன்னு ரெண்டு நாள்.''

எனக்குப் 'பாலூட்டி வளர்த்த கிளி' என்று பாட்டு பாடத்தான் தோன்றியது.

''ரொம்ப அர்ஜண்டுன்னு நீங்களே தோச் சுக்கணும்னு சொல்லுவே போலிருக்கே'' என்றாள் உஷா.

கடன் வாங்கிக் கொடுத்தவனின் மனைவி என்பதற்காகவாவது அவள் அடித்த ஜோக் கிற்கு அவன் சிரித்திருக்கலாம்.

''ஆடினரின்னு ஒரு சார்ஜ். அருசண் டுன்னு ரெண்டு மடங்கு'' என்று வியாபார நோக்கத்திலேயே இருந்தான்.

உஷா அவனைப் பார்த்துப் பிரமித்துப் போயிருந்தாள்.

சரி, கடன் கொடுத்துத் தொலைத்தா யிற்று. அதை முழுக்கத் தீர்க்கும் வரையிலும் இவன் சொற்படி கேட்டு ஆடத்தான் வேண் டும். பிற்காலத்தில் அசடு வழிந்து மானேஜ ரின் காலில் விழுவதைவிட, கடன் வாங் கினவன் காலில் விழுவதே புதிய பழமொழி ஆகிவிட்டது. என்னுடைய வீக்னஸ் அவனுக் குத் தெரிந்திருக்கும் என்றும் தோன்றியது.

''எப்படியோ பெரியவரே... நல்லாயிரு'' என்று வாய் வார்த்தையாகச் சொல்லி அனுப்பினேன்.

**வி**ஷயம் அதோடு நின்றால் பரவா யில்லை.

ஒருநாள், வெளுத்து வந்த துணிகளை எண்ணி அடுக்க ஆரம்பித்த உஷா திடீ ரென்று 'ஓ'வென்று அலறினாள்.

நான் என்னவோ ஏதோவென்று கை கால் பதற உள்ளே ஓடினேன்.

கல்யாணத்துக்கு முன்னால் நான் அவளு டைய பிறந்த நாளுக்கு வாங்கிக் கொடுத்த புடைவை—அதில் கத்திரிக்கோலால் திறப்பு விழா பண்ணின மாதிரி நீளமாய் ஒரு கிழி சல்.

''நீங்க ஆசையா வாங்கிக் கொடுத்தது. ஒரு வருஷம்கூட ஆகலே. கிழக் கடங்காரன் கிழிச்சுட்டான்'' என்று சந்தத்தோடு திட்டி னாள், கன்னங்களில் அழுகையின் கோடு.

எனக்குக் கோபத்தில் முகம் சிவப்பதை உணர முடிந்தது. 'என்ன பண்றேன் பாரு அவனை?' என்றபடி வாசலுக்கு விரைந்தேன்.

என்னைப் பார்த்ததுமே, ''என்ன சார் புடைவைதானே?'' என்றான் சர்வசாதாரண மாக.

அதைக் கேட்டதும் எனக்குக் கோபம் எகிறி விட்டது.

''என்னய்யா, கிழவா! சாதாரணமா கேக்கறே? நல்ல புடைவை! அதைக் கிழிச் சுட்டியே!'' என்று கத்தினேன்.

''அட என்ன சார் நீங்க ஒண்ணு. நல்ல புடைவை எது, கெட்ட புடைவை எதுன்னு பாத்தா கிழிக்கிறோம். நான் பார்க்காத புடைவையா. பெரிசா அலட்டிக்கிறீங்களே. அந்தப் புடைவை நூத்தம்பது ரூபா பெறுமா? வேணும்னா அதையும் கடன் கணக்கிலே ஏத் திக்குங்க. துணி துவைச்சுப் போட்டுக் கழிச் சுடறேன்'' என்றபடி எழுந்து வெளியில் போனான்.

**ஒ**ரு வருஷம் ஆகிவிட்டது. புடைவை கிழி கடனுக்கும் பாங்க் கடனுக்கும் இந்த ஒரு வருடத்தில் எங்களால் முடிந்த அளவிற் குத் துணிகளைச் சலவைக்குப் போட்டுக் கிழவன் முதுகை ஏறக்குறைய ஒடித்துவிட் டோம். (அவன் சலவையைத் தாங்க முடியாத எங்கள் துணிகள் கிழிந்து போய்ச் செலவு வந்தது இன்னொரு கதை.)

அதுவும் கடைசித் தவணையாக பாங்க் கடனை அடைக்கும்போது நிம்மதியாகப் பெருமூச்சுவிட்டேன். இனிமேல் கிழவனைத் துரத்தியடித்துவிடலாம். கையிலிருந்த சாட்டையை அவனிடம் கொடுத்து அடி வாங்கிக் கொண்டிருந்தது போதும்.

கடன் வாங்கினவனைவிடக் கடன் கொடுத்தவனே அதிகம் பயப்பட வேண்டி யிருக்கிறது. அதிலும் இடையில் புகுந்து வரத் தைக் கொடுத்த பூசாரி நான்... என்று நினைத்தபோது சிரிப்பு வந்தது.

ப்யூன் மேஜைக்கு வந்தான்.

''சார்... மேனேஜர் வரச் சொல்றாரு'' என்றான்.

உள்ளே போனேன்.

''வெரிகுட் சார். டோபியோட கடனை முடிச்சுக் கொடுத்திட்டீங்க. வெரிகுட் பார்ட்டி.''

'ஒரு வருஷம் நான் பட்ட கஷ்டம் உங் களுக்கு எப்படித் தெரியும்?' என்று முனகிக் கொண்டேன்.

''தாங்க்யூ சார்.''

''ஒரு சஜ்ஜஷன் கொடுக்கலாமா?'' என்றார் மானேஜர்.

''என்ன சார்?'' என்றேன்.

''உங்க வீட்டுக்குப் பால்காரர், மளிகைக் கடைக்காரர் வராங்க இல்லையா?''

எதற்கு இப்படிச் சுற்றி வளைக்கிறார்?

''அவங்களுக்கும் இதே மாதிரி லோன் ரெகமண்ட் பண்ணி வாங்கிக் குடுங்களேன். நம்ம பிராஞ்ச் டார்கெட்டும் ரீச் பண்ணின மாதிரியிருக்கும்'' என்றார்.

எனக்கு உடனே கிழிசல் புடைவைதான் ஞாபகம் வந்...

. . . . . . . . . .

அரை மணி நேரம் மயங்கிக் கிடந்தேன் என்று நண்பர்கள் பின்னர் சொன்னார்கள்.

''என் பெண்ணைப் பார்க்க வந்த பைய னுக்குக் குழந்தை மனசு...''

''எப்படிக் கண்டுபிடிச்சீங்க?''

''அவள் சாக்லேட் நிறப் புடைவை கட் டிட்டு வந்து நின்றதும் பையன் நாக்கு லேர்ந்து நீர் வழிய ஆரம்பிச்சிட்டுது...''





**"ULIPஇல் உள்ளது போல சிறப்பம்சங்கள் வேறெந்த முதலீட்டுத் திட்டத்திலும் இல்லை"**

திரு. C.P.K.N. நந்தனன்,
மேல்நிலை பொறுப்பதிகாரி,
மதுரா கோட்ஸ் லிமிடெட்

இலக்குத் தொகையாக ரூ. 3000/- முதல் ரூ. 40,000/- வரை தேர்ந்தெடுக்கும் வசதி, விபத்து மற்றும் ஆயுள் காப்பீடு, 7.5% வரையிலான போனஸ் (திட்டம் பூர்த்தியாகும்போது கொடுக்கப்படுவது) மற்றும் வருவாய்வரி சட்டம் 80C பிரிவின் கீழ் முழுவரிவிலக்கு முதலிய சிறந்த அம்சங்களைக் கொண்டது யூனிட் இணைந்த இன்சூரன்ஸ் திட்டம்.

**அங்கத்தினராவதற்கு வேண்டிய வயதுத் தகுதி 50 வருடங்களுக்கு உயர்த்தப்பட்டுள்ளது.**

இலக்குத் தொகையாக ரூ. 40,000/-க்கு வருடத்திற்கு ரூ. 4000/- வீதம் நீங்கள் செலுத்தி வந்தால் 10 வருடங்கள் கழித்து ரூ. 65,000/- பெறலாம்.

உங்கள் குடும்ப நலனில் ULIP அக்கரை செலுத்துவதுபோல் இத்திட்டத்தை வழங்கிடும் யூனிட் ட்ரஸ்ட் ஆ்ப் இந்தியா உங்கள் முதலீட்டிற்கு முழுமையான பாதுகாப்பு அளிக்கிறது.

உன்னதமானதையே தேர்ந்தெடுங்கள். அருகிலுள்ள கனரா வங்கியின் கிளைகளிலோ அல்லது யூனிட் ட்ரஸ்டின் ஏஜெண்டுகள் மற்றும் தலைமை பிரதிநிதிகளையோ அணுகுங்கள்.

மேலும் விவரங்களுக்கு இந்தக் கூப்பனை அதில் காணப்படும் முகவரிக்கு பூர்த்தி செய்து அனுப்புங்கள்.

Unit Trust of India, Post Bag 5063, Madras – 600 001.
Please send me the free ULIP brochure
Name: ____________________
Address: ____________________
____________________
____________________
34




## யூனிட் டிரஸ்ட் ஆப் இந்தியா

தலைமை அலுவலகம்: பம்பாய் 20.
(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)

மண்டல அலுவலகம்: "ரெஜினா மான்சன்"
46, செகண்ட் லைன் பீச், சென்னை-600 001
போன்: 27433/24146

முக்கியப் பிரதிநிதிகள்: ● திரு. ஏ. தனபால், கோயம்புத்தூர். போன்: 34776 திரு. எம். ராமமூர்த்தி, மதுரை. போன்: 30160, 43179 ● திரு. கே. முத்துசாமி, தஞ்சாவூர். போன்: 20374 ● திரு. என். கே. இங்கர்சால், சேலம். போன்: 51520 திரு. எம். ராமலிங்கம், திருச்சி. போன்: 28280 திரு. பி. நாராயணன், வேலூர். போன்: 21575 ● திரு. எஸ். பாலகிருஷ்ணன், கடலூர். போன்: 546, 46 ● திரு. எஸ். சுபாஸ் சந்திரபோஸ், நாகர்கோவில். போன்: 4449

**ULIP- முதன்மையான, முழுமையானதொரு திட்டம்.**

Sista's – UTI.639.86 TMA

நிர்வாக அதிகாரி ராமபத்ரன் அந்த அலுவலகத்துக்குக் கிடைத்த வரப்பிரசாதம் மாதிரி!

தன் கண்காணிப்பில் பணிபுரியும் அத்தனை உதவியாளர்களிடமும் அன்போடு பேசுவார்; அரவணைப்பாகப் பழகுவார்.

குற்றம் கண்டபோதும், கோபிக்காத பரந்த மனம் அவருடையது.

பாருங்களேன்.

மணி பத்தரை ஆகிறது. இப்போதுதான்—

கழுத்துப் பிடரியைத் துடைத்துக் கொண்டே, "உஸ்....ஸ்..." என்று ஆசுவாசத்துடன் வந்து உட்கார்ந்தாள், டைப்பிஸ்ட் கனகாம்புஜம்.

"ஏன் தாமதம்?"

அதட்டி ஒரு கேள்வி கேட்டாரா, ராமபத்ரன். அதுதான் இல்லை.

"அரைமணி நேரம் லேட் போலிருக்கே" எனச் சிரித்துக் கொண்டே வினவினார் அவர்.

"எக்ஸ்க்யூஸ் மீ சார். பஸ் கிடைக்கவில்லை" மாராப்பைச் சரிப்படுத்திக் கொண்டே எழுந்தாள், அவள்.

"தட்ஸ் ஆல் ரைட்." மறுபடியும் ஒரு கோழிச் சிரிப்பு. "உட்காருங்கள். பஸ் பிடித்து வருவதானால் நான்கூடத் தினமும் லேட்டாய்த்தான் வருவேன்."

ஆதரவாய்ப் பேசிக் கொண்டே நிலம் அதிராமல் நகர்ந்தார், ராமபத்ரன்.

ஸ்டேஷனரி சுரேஷ் வேகமாக வந்தான்.

"சார்...ஸ்டெனோலட்சுமணனுக்குமுந்தா நாள்தான் ஒரு பென்சில் கொடுத்தேன். இன்றைக்கு மறுபடியும் ஒன்று கேட்கிறார் சார்!" என்று புகார் சொன்னான். தொடர்ந்து, "வீட்டிலுள்ள பிள்ளைகளுக்கெல்லாம் பென்சில் சப்ளை செய்யவா ஆபீசில் ஸ்டேஷனரி இருக்கிறது" என்று அடிக்குரலில் முணுமுணுத்தான்.

அதைக் காதில் வாங்காதவர் மாதிரி, "எங்காவது தொலைந்திருக்கும். வேறொன்று கொடுத்துவிடு" என்று பரந்தமனப்பான்மையுடன் உத்தரவிட்டார் ராமபத்ரன்.

"சார்...." தலையைச் சொறிந்தான் மனோகரன். "நேற்று டிவிஷனல் இன்ஜினியருக்கு அனுப்பிய மாதாந்திர அறிக்கையில் ஒரு சின்னத் தப்பு பண்ணிட்டேன் சார்."

"என்ன?"

"ஆர்.சி.சி. யார்டில் அறுநூறு போல்ஸ் தான் வேலை முடிந்திருக்கிறது. நான் ஆறாயிரம் என்று எழுதிவிட்டேன் சார்" குற்றத் தோரணையில் அவனது உடல் குறுகியது.

"அவ்வளவுதானே?" என்று அலட்சியமாய்க் கடைவாயைச் சுழித்தார், ராமபத்ரன். "உடனே அந்த அறிக்கை எண்ணை ரெஃபர் பண்ணிச் சரியான எண்ணிக்கையை எக்ஸ்பிரஸில் ஒரு டெலிகிராம் கொடுத்திடுங்கள் ஓ.கே."

"தாங்க்யூ சார்."

போன் ஒலித்தது. காதலிக்குக் கைலாகு கொடுக்கும் மென்மையுடன் ரிசீவரை மெள்ள எடுத்து, "ஏ.டி.ஓ. ராமபத்ரன் பேசுகிறேன்" என்றார்.

"குட்மார்னிங் சார்! பி.எஃப் செக்ஷனிலிருந்து பரமானந்தன் பேசுகிறேன். நம்ப ப்யூன் வேங்கடாசலத்துக்குப் பழைய பி.எஃப். கடனிலே பாதிகூட இன்னும் ரிக்கவரி ஆகலே. அதற்குள் அடுத்த கடனுக்கு இன்னிக்கு அப்ளிகேஷன் தர்றார் சார்" என்றது போன்.

"பாவம், பிள்ளைக் குட்டிக்கார மனுஷன். பெண்ணுக்கு இந்த மாதம் கல்யாணம் பண்ணணும் என்று சொல்லிக் கொண்டிருந்தார். அப்ளிகேஷனை ஏற்றுக் கொள்ளுங்கள், மிஸ்டர் பரமானந்தன். ஸ்பெஷல் கேஸாக சாங்ஷன் பண்ணச் சொல்லி சிபாரிசு எழுதிவிடுகிறேன்."

இப்படி அப்பெரிய அலுவலகத்தின் நான்கு சுவர்களுக்குள் எதிரொலிக்கும் அன்பு, அக்கறை, உதவி, ஒத்தாசை எதுவானாலும் அவற்றின் மொத்த உருவம், ராமபத்ரன்தான்.

இப்படி ஓர் உத்தம சீலனைக் கோபிக்க எப்படி மனம் வந்தது, ஒரு பெண்ணுக்கு.

தாலி கட்டிய மனைவி. ஆயுள் பரியந்தம் சேவை செய்ய வந்த மனைவி. ராமபத்ரனைப் போன்ற ஒரு கணவனுடன் வாழ முடியவில்லை என்றால் அவள் வேறு யாருடன் வாழப் போகிறாள்?

பாவம், அந்த மனுஷன்!

ஓட்டல் சாப்பாடு.

உடம்பு இளைத்துவிட்டார். என்ன இருந்தாலும், கட்டிய மனைவி விட்டு விட்டுப் போன வருத்தம் உள்ளூற நோகத்தானே செய்யும்.

"இதற்கு ஒரு பரிகாரம் கண்டாக வேண்டும்" என்றான் மனோகரன்.

"நம் சந்தோஷத்துக்கெல்லாம் காரணமான ஏ.டி.ஓ.வை, நாம் சந்தோஷமாக வைக்க ஏற்பாடு செய்ய வேண்டும்" என்று யோசனை சொன்னான், கோவிந்த்.

அதன் விளைவாக —

சேர்ந்தாற்போல் மூன்று நாட்கள் லீவு வந்தது.

அலுவலகத்தில் பதினைந்து பேர்கள் சேர்ந்து ஒரு ஸ்டாண்டர்டு வேனில் சுற்றுலா கிளம்பினார்கள்.

திருவனந்தபுரம், நாகர்கோயில், கன்னியாகுமரி போய்விட்டுத் திரும்பும் வழியில் —

திருநெல்வேலி.

**வே**ன், அந்த வீட்டு வாசலில் நின்றது. மாளிகை போல் பெரிய வீடு. "அடேயப்பா..." வாய் பிளந்தான், ஒருவன்.

"ராமபத்ரனின் மாமனார், ரிடையர்டு மாஜிஸ்திரேட் ஆயிற்றே, சும்மாவா..."

"அதனால்தான் மகள் இந்த மாதிரி திமிர் பண்ணுகிறாளாக்கும்."

அடிக்குரலிலும், அரைத்தொனியிலும்

**தமிழினியன்**




நாம் உட்கார்ந்திருக்கும் இந்தக் கொட்டகையை யார் போட்டார்கள் என்றால் சொல்லத் தெரிகிறது. இந்த வாழை மரத்தை யார் செய்தார்கள்? கண்ணில் காட்டும்படியாக அதைச் செய்தவனைச் சொல்லத் தெரியவில்லை. ஆனாலும் ஒருவன் அதைச் செய்திருக்கிறான். அதனால் தான் இப்படி அழகாகப் பட்டை பட்டையாகக் கணக்குப் பிசகாமல் உள்ளுக்குள்ளே அடுக்கிக் கொண்டே இந்த வாழை உண்டாகியிருக்கிறது. எந்த ஆயுதத்தை வைத்துக் கொண்டு அந்த ஒருவன் இத்தனை அழகாகப் பட்டைகளை அடுக்கினான் என்றால் தெரியவில்லை. இப்படியே அந்த மலையை, இதோ மேலே உள்ள நட்சத்திரங்களை, சந்திரனைச் செய்தவனை நம்மால் காட்ட முடியவில்லை. 'இவையெல்லாம் எத்தனையோ காலம் முன்னால் உண்டானவை. செய்தவனை எப்படிக் காட்டுவது?' என்று கேட்கலாம். சரி, இந்த ரோஜாப் புஷ்பம் இருக்கிறதே, இது அந்த வாழையை விடச் சமீபத்தில் உண்டானதுதான். முந்தாநாள் சிறு மொட்டாக இருந்தது. இப்போது அழகிய பூவாகியிருக்கிறது. இதில் நூற்றுக் கணக்கான இதழ்கள். ஒவ்வொன்றிலும் நுண்ணிய நரம்புகள், வாசனை எல்லாம் வந்திருக்கின்றன. நம் கண் முன்னேயே இது மலர்ந்தது. ஆனாலும் மலர்த்தினவனை நமக்குத் தெரியவில்லை.

மனிதன் எல்லாம் தெரிந்த கெட்டிக்காரன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். ஆனால் ஒரு காட்டு மிருகம் சென்னைப் பட்டணத்தைச் சுற்றி வந்தால் எதுவுமே தனக்குத் தெரியவில்லை என்று எப்படி ஆச்சர்யப்பட்டுப் பார்க்குமோ, அப்படித்தான் இந்தப் பிரபஞ்சத்தில் நாம் இருந்து கொண்டிருக்கிறோம். மனிதனைவிடக் கெட்டிக்காரனான ஒருவன் அவனை இப்படி வைத்திருக்கிறான்.

கெட்டிக்காரன் என்று தன்னை நினைத்துக் கொண்டிருக்கும் மனிதன், இத்தனையையும் இவனையும் செய்த அந்த மகா கெட்டிக்காரனைத் தெரிந்து கொள்ள வேண்டும். ஏனெனில் அவன் மகா கெட்டிக்காரன் மட்டுமல்ல; மகா நல்லவனும்கூட. இத்தனையைத் திட்டமிட்டுப் படைத்த பேரறிவு என்பதோடு இத்தனையையும் ரட்சிக்கும் பெருங் கருணையும் அவன். நமது கெட்டிக்காரத்தனம் அவன் தந்ததே என்று தெரிந்து கொண்டு அவனிடம் பிரார்த்தித்துக் கொண்டால் நமக்கு அவன் நல்லது செய்வான்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

தலைக்குத் தலை விமர்சனம் பேசிக் கொண்டு, காம்பவுண்டைத் தாண்டிக் கும்பலாக உள்ளே நுழைந்தார்கள்.

மஞ்சுளா — அவள்தான் ராமபத்ரனின் இளம் மனைவி, சிட் அவுட்டில் புத்தகம் படித்துக் கொண்டிருந்தாள்.

'யார் இவர்கள்?'

கேள்விக்குறியுடன் மெள்ள எழுந்து, கெந்திக் கெந்தி அடி எடுத்து வைத்தாள்.

'வேணும், நன்றாய் வேணும். கனவில் கூடக் கோபிக்காத மகராசனுடன் சண்டை போட்டுக் கொண்டு வந்தாய் அல்லவா? கடவுள் தண்டிச்சுட்டார்...' எல்லோருடைய மனமும் ரகசியமாய்ச் சலசலத்தது.

வந்தவர்களை அடையாளம்புரிந்துகொண்டாள் மஞ்சுளா. "வாருங்கள்... வாருங்கள்..." என்று சிரித்துக் கொண்டே வரவேற்றாள்.

சற்றைக்கெல்லாம் எல்லோருக்கும் சர்பத் வினியோகம் நடந்தது.

நான்கு வயது மகேஷ். அவர்களின் முதல் பையன் அவன். இடக் கண்ணில் பாண்டேஜ் போட்டிருந்தான்.

'கட்டிய புருஷனை விட்டுவிட்டு வந்தால் எல்லாம் குளறுபடிதான். பார்த்தாயா... பிள்ளைக்கும் கண்ணிலே கட்டுப் போடும்படி ஆயிட்டது' என்று கிசுகிசுத்தான், கோவிந்த். பிறகு குரலை உயர்த்தி, "பையனுக்குக் கண்ணிலே என்ன?" என்று விசாரித்தான்.

"ஒரு சின்ன ஆபரேஷன்."

"அப்புறம், நாங்கள் வந்த நோக்கம் என்னவென்றால்...." நண்பர்கள் சொன்னார்கள்.

"ஹூம்..." விரக்தியுடன் சிரித்தாள் மஞ்சுளா.

"உங்கள் முயற்சியை நான் பாராட்டுகிறேன்" என்றார் மஞ்சுளாவின் அப்பா. மாநிறத்தில் அளவான உயரம். அறுபது வயதைக் கடந்தாலும் ஆரோக்கியமான உடம்பு. பொறுப்பான உத்யோகம் பார்த்தவர் என்பதற்கான சாயல், பேச்சிலும் செயலிலும் வியாபித்திருந்தது.

"என் மாப்பிள்ளை ராமபத்ரன் நல்லவர் தான். வெளியிலேயும் சரி, ஆபீசிலேயும் சரி அன்போடுதான் பழகுகிறார். நீங்கள் என்ன தப்பு பண்ணினாலும் அவருக்குக் கோபம் வராது என்பதெல்லாம் வாஸ்தவம் தான். ஆனால்..." அந்த நிறுத்தம் வந்தவர்களுக்குத் திகில் மூட்டியது.

"என்ன சார்?"

"அந்த அன்பிலும் பொறுமையிலும் ஒரு கடுகளவுகூட அவர் வீட்டில் கடைப்பிடிக்கிறது இல்லை என்பதுதான் வருத்தப்பட வேண்டிய விஷயம்."

"நிஜமாகவா....?" அத்தனை பேர் விழிகளும் நம்ப முடியாமல் விரிந்தன.

"ஆம்..." என்றவராய் ஒரு பெருமூச்சு விட்டார், அப்பெரியவர். "கைபட்டால் குற்றம், கால் பட்டால் குற்றம் என்பார்களே, அதுபோல் எதுவானாலும் அடி உதை

தான். அற்ப விஷயத்துக்குக்கூட எட்டு வீட்டுக்குக் கேட்கிற மாதிரி கூச்சல் போடுவார். ஒருநாள் காப்பியில் கொஞ்சம் சர்க்கரை அதிகமாயிட்டுதாம். காப்பி டம்ளரைக் கொதிக்கக் கொதிக்க அப்படியே என் பெண்ணின் முகத்தில் விட்டெறிந்துவிட்டார்.''

''இஸிட்?''

''மஞ்சுளா... வாயைத் திறந்து காட்டும்மா...''

வெட்கமும் வேதனையுமாக அவள் வாய் திறந்து காட்ட, கடைவாய்ப் பற்கள் இரண்டைக் காணும்.

"இராத்திரி வேளையில் உடனே வந்து கதவைத் திறக்காவிட்டால் கதவிலேயே அவள் தலையை மொத்து மொத்தென்று இடிப்பார். நெற்றியைப் பார்த்தீர்களா, தழும்பு. இப்படி ஏராளம் சொல்லலாம். அன்றைக்கு அப்படித்தான் என்னவோ கோபம். மாடிப்படியிலே தள்ளிவிட்டு உருண்டதில் இடுப்பு எலும்பு பிசகிவிட்டது. இங்கே கொண்டு வந்து வைத்தியம் பார்க்கிறேன். கவனித்திருப்பீர்களே, இன்னும் அவளுக்குச் சரியாய் நடக்க வரவில்லை.''

நண்பர்கள் அனைவரும் அடித்த சிலையானார்கள்.

''மனைவி என்றில்லை. பிள்ளையையும் அப்படித்தான். கேஜி வகுப்புக்கு 'ராங்க்' என்ன வேண்டிக்கிடக்கிறது? முதல் ராங்க் வரவில்லை என்று, இந்தப் பிஞ்சுப் பாலகனை விளக்குமாற்றால் நையப் புடைத்ததில் குச்சி ஒடிந்து கண்ணில் குத்தி, பார்வை திரும்புவது சந்தேகம் என்கிறார் டாக்டர்'' தலையைத் துயரத்துடன் உலுப்பி, மோவாயைத் தடவிக் கொண்டார் அவர்.

''ச்சோ.... ச்சோ....'' அனுதாபச் சூள் வெடித்தது, அத்தனை பேரிடமும்.

''இப்போது சொல்லுங்கள். உங்கள் ஏ.டி.ஓ. உங்களுக்கு நல்லவராக இருக்கலாம். ஆனால் என் மகளுக்கும், பேரனுக்கும் நரகாசுரனாய் இருக்கிறாரே.''

''எங்களை மன்னியுங்கள் சார். நாங்கள் உங்கள் பெண்ணைத்தான் தப்பாய் நினைத்துவிட்டோம்.''

''அது உங்கள் தப்பு இல்லை. மாப்பிள்ளை, கௌரவமான உத்யோகத்தில் இருக்கிறார். நாங்களும் பெருந்தன்மையான குடும்பம். வெளியில் சொல்ல முடியவில்லை. அதனால் பார்க்கிறவர்கள் ஏதோ.... என் மகள்தான் சண்டை போட்டுக் கொண்டு வந்துவிட்டதாக நினைக்கிறார்கள்.''

எல்லோருடைய முகத்திலும் இரக்கம் வழிய என்ன பேசுவதென்று புரியாத ஓர் இறுக்கம் பரவிற்று.

பெரியவரே ஒருபெருமூச்சுடன் அதைக் கலைத்தார்.

''திருச்செந்தூர் போவீர்கள் என்று நினைக்கிறேன்.''

''ஆமாம் சார்.''

''அங்கே எங்களுக்காக ஒரு பிரார்த்தனை செய்யுங்களேன். உங்கள் ஏ.டி.ஓ.வும் விருப்பு, வெறுப்பு உடையவர்தான். கோபமும், குற்றத்தைத் தண்டிக்கும் மனோபாவமும் அவரிடம் இருக்கிறது. ஆனால் வெளியில் நல்ல பேர் சம்பாதிக்க வேண்டும் என்பதற்காக அந்தக் குரோதங்களை மனசுக்குள்ளேயே போட்டு அடைத்துக் கொள்கிறார். அப்படி அடக்கி வைத்த ஆவேசம் எல்லாம் வீட்டுக்கு வந்ததும் மூடி திறந்துவிட்ட பாம்பு மாதிரி மனைவி மீதும், பிள்ளை மீதும் சீறிப் பாய்கிறது.''

''சார்...''

''ஆகவே, உங்கள் ஏ.டி.ஓ. ஆபீசிலேயே கோபப்படணும், கண்டிப்பு காட்டணும், தண்டிக்க வேண்டிய தவறுகளை ஆபீசிலேயே தண்டிச்சுடணும். அப்படி அவர் ஆபீசில் உண்டாகும் வெறுப்பு உணர்ச்சிகளை, உள்ளுக்குள்ளே அடக்காமல் அங்கேயே வடிகாலாக்கினால், அவர் மனம் பஞ்சு போல் இலேசாகிவிடும். ஆத்திரத் தணல் ஆறித் தணிந்து, சாந்த மனசோடு வீட்டுக்கு வருவார். அப்போதுதான் மனைவியிடமும், பிள்ளையிடமும் அவரால் பிரியமுடன் பழக முடியும். இதை அந்த முருகப் பெருமானிடம் முறையிட வேண்டும். செய்வீர்களா....''

அப்பாவும், மகளும் கண்களில் நீர் கோக்கக் கையேந்திக் கொண்டார்கள்.

''நிச்சயமாகச் செய்வோம் சார்'' என்று ஏகமாய் உறுதி சொன்னார்கள், நண்பர்கள். அப்போது அவர்களின் குரலும் தழுதழுத்தது.

---



**ஆசிரியர்: ''என் சைக்கிள்ல காத்தைப் பிடுங்கி விட்டவங்க மரியாதையா கையைத் தூக்குங்க!''**

**மாணவன்: ''டயர்ல ஆணி குத்தினவங்க கையைத் தூக்கக் கூடாதா சார்?''**

**— நிலாப்ரியன்.**

---

**பேரன்: எப்படித் தாத்தா எங்க கிளாசில் மொத்தம் 48 பையன்கள் படிக்கிறாங்கன்னு கரெக்டா கண்டுபிடிச்சீங்க?**

**தாத்தா: உன் ராங்க்கை வெச்சுத்தான்!**

**— லஷ்ஜனா**





# ராமுவும் அப்பாவும் அந்தச் சலூனும்...

பாபுஜி

அந்த மகிழ்ச்சியான வேளையில் குறிப்பிட்ட வார்த்தையைப் பிரயோகித்து அப்பா உற்சாகத்தையே குட்டிச்சுவராக்கி விடுவாரென்று ராமு கோழித் தூக்கக் கனவில்கூட நினைக்கவில்லை. பள்ளிக்கூடம் திறக்க ரொம்....ப நாளாகும் என்றதொரு உறுதியான சந்தோஷத்தில் இருந்தபோதுதான் அப்பா இதைச் சொன்னார். "டேய் பையா... முடி வெட்டிக்கோயேன்" என்ற ஆலோசனைதான் அது. எந்த வார்த்தையைக் காதால் கேட்கவே பயந்து கொண்டிருந்தானே, அதைக் கடைசியில் கேட்டே ஆயிற்று.

இந்த அப்பா ஏன் இவ்வளவு மோசமாக இருக்கிறாரென்று அவனுக்குப் புரியவே

யில்லை. எத்தனை நாளுக்கொரு தரம் இப்படி முடி வெட்டச் சொல்வாரென்றும் அவனுக்குத் தெரியவில்லை. திடீரென்று நினைத்துக் கொண்டதும் சொல்வாரோ! சில சமயங்களில், தான் ஏதும் குறும்பு செய்தால், அவர் வழங்கும் தண்டனைகளில் இதுவும் ஒன்றோ என்றுகூடச் சந்தேகித்தான். சமீபத்தில் குறும்பு எதுவும் செய்ததாக அவனுக்கு நினைவில்லை. யாருக்கும் தெரியாமல் ஒரு தடவை பாப்பாவின் கன்னத்தைக் கிள்ளியது ஞாபகத்துக்கு வந்தது. இந்தக் காரியத்தைச் செய்தபோது ஆட்டுரலைத் தவிர வேறு யாரும் அங்கே இல்லையே என்று நினைத்தான். 'நிச்சயமாக ஆட்டுரல் சொல்லிக் கொடுத்திருக்க முடியாது' என்று அவன் நம்ப முயற்சி செய்தாலும் முன்பொரு முறை, கம்பளிப் போர்வை பேசியதாகப் பாட்டி சொன்ன கதை நினைவுக்கு வந்து, அவன் நம்பிக்கையைத் தகர்த்தெறிந்தது.

"ஆட்டுரல் சொல்லுச்சாப்பா?"

அப்பா அவனை ஆச்சரியத்துடன் பார்த்தார். "என்னடா உளர்றே?"

சேச்சே.... நிச்சயமாக ஆட்டுரல் சொல்லவில்லை. தான் முந்திக் கொண்டதே மகாத் தப்பு என்பதை அவன் முற்றிலும் உணர்ந்து மௌனம் சாதித்தான்.

அப்பா கைவைத்த பனியனை மட்டும் போட்டுக் கொண்டு செருப்பைத் தேடினார். 'கடவுளே, அந்தச் செருப்பு காணாமல் போயிருக்க வேண்டும்' என்று அவசரமாக ஒரு வேண்டுகோளைச் சமர்ப்பித்தான் ராமு. ஆனால் அவன் வேண்டுகோள் கடவுளிடம் போய்ச் சேருவதற்குள், மேஜைக்கடியிலிருந்து செத்த எலியைத் தூக்குவது போல நுனியைப் பிடித்துத் தூக்கி வெளியில் போட்டதோடு காலிலும் மாட்டிக் கொண்டார் அப்பா.

"லட்சுமி, டப்பாவில் ஐந்து ரூபா இருக்கும். எடுத்துட்டு வா."

ஆயிற்று. இதோ அம்மா எடுத்துக் கொண்டு வந்துவிடுவாள். நினைக்கும் போதே அழுகை முட்டிக் கொண்டு வந்தது ராமுவுக்கு. சில சமயங்களில் பத்துப் பைசாவுக்கு மக்காச் சோளம் வாங்கினாலே கண்டபடி திட்டுகிற அப்பா, கொஞ்சம்கூட இஷ்டமில்லாத முடி வெட்டலுக்கு ஐந்து ரூபாய் கொடுக்கத் துணிவது ஏன் என்று, ஒரு கணம் ஆச்சரியமாகக் கூடப் பட்டது அவனுக்கு. இதை அம்மாகூட ஆட்சேபிக்காதது தான், அவனுக்கு அவள் இழைக்கின்ற பெரிய துரோகமாக நினைத்தான். அந்த ஐந்து ரூபாயில் ஏராளமான கமர்கட் வாங்கலாமே, ஏன் சின்னதாக ஒரு ராக்கெட்கூட வாங்க முடிந்தாலும் முடியும் என்ற ஆசை ஏற்பட்டபோது, தன் இயலாமையை நினைத்துப் பெரிதும் துக்கித்தான்.

அப்பா சைக்கிளின் பூட்டைத் திறந்து வெளியே கொண்டு வந்தார். 'வயிற்றை வலிக்கிறது' என்று சொல்லலாமா என்று ஒருகணம் நினைத்தான். பதிலாக மருந்து என்ற பெயரில் பாட்டி வலுக்கட்டாயமாக ஊற்றுகின்ற எண்ணெயை எண்ணிப் பயந்து



அந்த எண்ணத்தைக் கைவிட்டான். பெரியவனாக வளர்ந்ததும் முதல் காரியமாக, அந்தப் பாட்டிலை அலமாரியிலிருந்து எடுத்து வெகு தூரத்திலிருக்கும் டெல்லியில் கொண்டு போயாவது எறிந்துவிட்டு வந்துவிட வேண்டும் என்றும் தீர்மானித்துக் கொண்டான்.

சைக்கிள் கேரியரில் அவனைத் தூக்கி உட்கார்த்தி வைத்தார் அப்பா. வழியில் அவன் லேசாக அழுவதையோ, அவ்வப்போது விம்முவதையோ, விட்டு விட்டுச் சிணுங்குவதையோ அவர் சற்றும் கவனிப்பதாகத் தெரியவில்லை. அவனைச் சலூனில் கொண்டு போய் விடுவதுதான் தான் பிறப்பெடுத்த தன் பயன் என்பதுபோல் கருமமே கண்ணுயினராகப் பெடலை மிதித்துக் கொண்டிருந்தார். வழியிலுள்ள எத்தனையோ மிட்டாய்க் கடைகளையும், பழக் கூடைக்காரர்களையும் முற்றிலுமாகப் புறக்கணித்துவிட்டு எங்கோ ஒரு சலூனைத் தேடிக் கொண்டு போவது அடிமுட்டாள்தனமாகப்பட்டது அவனுக்கு.

கடைசியில் ஓர் அழகான பொம்மைக் கடைக்குப் பக்கத்திலுள்ள சலூனில் சைக்கிளை நிறுத்தி அவனையும் இறக்கிவிட்டார் அப்பா. வழக்கம்போல் அந்தக் கடையின் சிவப்பு நிற போர்டைக் கண்டதும், வயிற்றுக்குள் பகீர் என்றது. அந்த நிமிஷத்திலேயே, அப்பாவின் கையை உதறிவிட்டு ஓடிவிடலாமா என்று கூடத் தோன்றியது. ஆனால் சலூனுக்கு அருகில் அது நடவாது என்றே நினைத்தான். அந்த சலூன்காரரும் அப்பாவின் பக்கம் ஒருவேளை சேர்ந்து கொள்ளக் கூடும். இருவரும் சேர்ந்தால் மிக எளிதாகப் பிடித்துவிட முடியும். அப்படி அகப்பட்டுவிட்டால் மொட்டை அடித்து விடக் கூடிய அளவுக்குக் கொடூரமானவர்களாக மாறினாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை என்று நினைத்தபோது அவனுக்குக் குலை நடுங்கியது.

"முருகேசு!" என்று அப்பா கூப்பிட்டாரோ இல்லையோ, கையில் கத்தியுடன் வெளியே வந்த முருகேசு, "வாங்க சார்!" என்று பல்லெல்லாம் இளித்துக் கொண்டு வரவேற்றது, ராமுவுக்குக் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. இப்பேர்ப்பட்ட கொடியவனுடன், அப்பா எப்படி இவ்வளவு சினேகமாக இருக்கிறார் என்று வியந்தான். இங்கே ஒருமுறைகூட அப்பா முடி வெட்டிக் கொண்டதேயில்லை என்பது நினைவுக்கு வந்தபோது, அவனுக்கு ஆத்திரமாகக் கூட இருந்தது. இந்த முருகேசைப் போலீஸ்காரர்கள் கூடக் கைது பண்ணாதது ஏன் என்பதும் அவனுக்குப் புரிபடாத விஷயங்களில் ஒன்று.

ஆனால் சலூனில் புதிதாகச் சேர் ஒன்று 'மெத்து மெத்'தென்ற குஷனில் வந்திருப்பதை அப்போதுதான் கவனித்தான் ராமு. அதில் உட்கார்ந்திருக்கும் சுகத்தில் மெஷின் கட்டிங் எரிச்சல் சற்று குறையக் கூடும் என்று நம்பி சிறிது சந்தோஷப்பட்டான். ஒரு காலத்தில் வெள்ளையாயிருந்த துணி ஒன்றினால் சீட்டைத் தட்டிவிட்டு, இரண்டு கைப்பிடிக்



**அ**றிவிப்பாளர்: விவசாயிகளே! தமிழ்நாட்டிலேயே பயிறு வகைப் பயிர்களுக்கான ஆராய்ச்சி நிலையம் புதுக்கோட்டை மாவட்டம் வம்பன் என்னும் ஊரில் உள்ளது. அங்கு பயிறு வகைப் பயிர்களான துவரை, பாசிப் பயிறு, தட்டப் பயிறு, சோயா பீன்ஸ், வரகு, சாமை ஆகியவைகளைப் பற்றி ஆராய்ச்சிகள் செய்து வருகிறார்கள். அந்த விவரங்களைப் பற்றி உங்களுக்குத் தெரிவிக்க அங்கு உதவிப் பேராசிரியராகப் பணிபுரியும் டாக்டர் ராமமூர்த்தி வந்திருக்கிறார். "வணக்கம் டாக்டர் ராமமூர்த்தி அவர்களே, உங்கள் ஆராய்ச்சி நிலையத்தில் இதுவரை நடந்துள்ள ஆராய்ச்சிப் பணிகளைச் சொல்ல முடியுமா?"

ராமமூர்த்தி: எங்கள் ஆராய்ச்சி நிலையம் தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழகத்துடன் இணைந்தது. துவரை, உளுந்து, தட்டப் பயிறு, பாசிப் பயிறு ஆகிய பயிறு வகைகளை ஆராய்ச்சி செய்து புதிய ரகங்களைக் கண்டுபிடித்துள்ளோம். எங்கள் கண்டுபிடிப்புக்களில் உருவாகும் பயிறு வகைகள் குறைந்த நாட்களில் மகசூல் கிடைக்கும் வகையில் அமைந்தவை. இவற்றோடு உளுந்து இலைகள் மஞ்சளாகிப் போகும் நோயைத் தடுக்கவும், துவரை இலைகளில் தேமல் வராமல் இருக்கவும் புதிய ரகங்களைக் கண்டுபிடித்துள்ளோம். எங்கள் புதிய கண்டுபிடிப்புக்களைப் பரிசோதனைக்காகத் தமிழ்நாட்டின் வெவ்வேறு பகுதிகளில் விவசாயிகளிடம் கொடுத்திருக்கிறோம். அவையெல்லாம் எல்லா விவசாயிகளாலும் உபயோகப்படுத்தப்படுவதற்கு இன்னும் சில வருடங்கள் பிடிக்கும். உளுந்து உற்பத்தி பத்திலிருந்து பதினைந்து சதவீதம் அதிகரிக்க ஏற்றவாறும் புதிய ரகங்களைக் கண்டுபிடித்துள்ளோம்.

அறிவிப்பாளர்: அது சரி, ராமமூர்த்தி அவர்களே, வரகு என்கிறீர்களே? அதில் ஏதாவது...?

ராமமூர்த்தி: ஓ! நிறையச் செய்திருக்கிறோமே! மலைவாழ் மக்கள் பயன்படுத்தும் உணவு வரகு, சாமை போன்றவை. சில இடங்களில் காக்காச் சோளம் என்று சொல்லப்படும் மக்கட்டச் சோளத்திலும் புதிய ரகங்களைக் கண்டுபிடித்துள்ளோம். அவை குறைந்த காலத்திலேயே மகசூல் தரக் கூடியவை!

அறிவிப்பாளர்: உங்கள் ஆராய்ச்சி நிலையத்தைப் பொது மக்கள் வந்து பார்க்கலாமா?

ராமமூர்த்தி: வரலாமே! புதுக்கோட்டை — ஆலங்குடி சாலையில் வம்பன் என்னும் கிராமத்தில் எங்கள் ஆராய்ச்சி நிலையம் அமைந்துள்ளது. நிலையத்தின் பக்கத்திலேயே 320 ஏக்கரில் பல்வேறு பயிறு வகைப் பயிர்கள் சாகுபடி செய்யப்பட்டிருக்கின்றன. எப்போது வேண்டுமானாலும் விவசாயிகள் வரலாம். சந்தேகங்களைத் தெளிவுபடுத்தத் தயாராக உள்ளோம்.

அறிவிப்பாளர்: நன்றி ராமமூர்த்தி அவர்களே!

— சீனு.

கும் மேலாக ஒரு கள்ளிப் பெட்டியின் பலகையைப் பாலம் மாதிரி போட்டு, அதில் உட்காருமாறு பணித்தான் முருகேசு. இது முற்றிலும் தன்னை 'அவமானப்படுத்துவதற்காகவே செய்யப்பட்டது' என்று மனதார நம்பிய ராமுவினுல் அழுகையைக் கட்டுப்படுத்தவே இயலாமல் போயிற்று.

மேலும் "வலிக்காம வெட்டிவுடறேன். ஒக்காரு தம்பி" என்று அவன் உறுதி மொழி பகன்றது வேறு அவனுக்குக் கடுப்பாக இருந்தது. இந்த விவகாரம் எதையுமே கண்டு கொள்ளாமல் அப்பா தினத்தந்தியில் சிந்துபாத் படித்துக் கொண்டிருந்த விதம் அவனைக் கொஞ்சம்கூடத் திருப்திப்படுத்தவேயில்லை.

முருகேசு தனது கடமையைச் செவ்வனே செய்யத் தொடங்கினுன். 'கர்ரெக்.... கர்ரெக்...' என்ற சத்தத்துடன் மெஷின் காதுக்குப் பக்கத்தில் போனபோதெல்லாம் உயிரைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான் ராமு. பயத்தில் கண்ணை இறுக்க மூடிக் கொண்டாலும் பிரும்மாண்டமான முடி வெட்டும் மெஷின் ஒன்று அவனைத் துரத்திக் கொண்டு வருவது போலக் கண்ணுக்குள் தெரிந்தது. அதன் பெரிய ஹ்கைப்பிடி மேல் கணக்கு வாத்தியார் சீனிவாசன் உட்கார்ந்து ஓட்டிக் கொண்டு வருவது போல் உணர்ந்தான். தொடர்ந்து அந்தக் காட்சியைப் பார்க்கப் பயமாக இருந்ததால் சட்டென்று விழித்துக் கொண்டான்.

'அப்பா என்ன செய்கிறுர்' என்று பார்ப்பதற்காகலேசாகத்திரும்பியபோது "கம்முனு இரு. இல்லாட்டி கத்தி காதை வெட்டிடும்" என்று முருகேசு எச்சரிக்கை செய்யவே, 'ஓ' என்று அழத் தொடங்கி அந்தக் களேப்பிலேயே தூங்கியும் போனுன் ராமு.

மறுபடியும் கண் விழித்துப் பார்த்த போது, 'கட்டிங்' சமாசாரமெல்லாம் முடிந்து போயிருந்தது. கழுத்தில் ரொம்ப வாசனையாகப் பவுடரெல்லாம் பூசியிருந்தது. "இந்தாடா பையா..." என்று ஒரு கார் பொம்மையைக் கொடுத்தான் முருகேசு. "தம்பி துபாயிலிருந்து வாங்கியாந்தான்" என்று அப்பாவிடம் பெருமையாகச் சொன்னுன்.

அந்தப் பொம்மை ராமுவுக்கு ரொம்பவும் பிடித்துப் போயிற்று. 'இந்தச் சலூன்காரர் தான் எத்தனை நல்லவர்' என்று நினைத்துக் கொண்டான்.

"இன்னும் எவ்வளவு நாள் கழிச்சு முடி வெட்டணும்ப்பா?" — அப்பாவை விசாரித்தான்.

"ரெண்டு மாசம்."

"ரெண்டு மாசம்னு?"

"அறுபது நாள்."

'அடேயப்பா இன்னும் ரொம்ப நாள் கழிச்சுத்தான் முடி வெட்டணும்' என்ற சந்தோஷத்தில் சைக்கிளை நோக்கிக் குதித்துக் கொண்டு ஓடினுன் ராமு.

---

# தேவை ஒரு தேர்வு மையம்!



1973ல் தொழிற் கல்வி வாரியம் வந்த பிறகு, தட்டெழுத்து, சுருக்கெழுத்து, கணக்கியல் பாடங்களை அவர்கள் நடத்தி வருகின்றனர். இதில் தட்டெழுத்து தமிழ் ஆங்கிலம் ஆகிய இரண்டுக்கும் புதுக்கோட்டையிலேயே தேர்வு மையம் வைக்கிறுர்கள். ஆனுல் சுருக்கெழுத்தைப் பொறுத்தவரை ஆங்கிலம்கீழ்நிலைக்குமட்டும் தான் இங்கே தேர்வு மையம். இடைநிலை மேல்நிலை (ஆங்கிலம்) மற்றும் தமிழ் சுருக்கெழுத்துத் தேர்வுகளை எழுத வேண்டுமென்ருல், திருச்சியில் உள்ள துவாக்குடிக்கும் தஞ்சை அருகேயுள்ள வல்லத்திற்கும்தான் செல்ல வேண்டும்.

புதுக்கோட்டையில் நம்மைச் சந்தித்த மாணவிகள் குழு, இந்தக் குறைகளைச் சொல்லி, "சாதாரணமாக ஓரிடத்தில் தேர்வு மையம் வைக்க வேண்டுமானுல் இருபது மாணவிகளாவது இருக்க வேண்டும். ஆனுல் நாங்களோ நாற்பது பேர் இருக்கிறேம். அப்படியிருந்தும் — புதுக்கோட்டை ஒரு மாவட்டத் தலைநகராக இருந்தும் இங்கே தேர்வு மையம் இல்லை. அதனுல் எங்களுக்குச் செலவும் சிரமமும் அதிகரிக்கிறது. அது காரணமாகவே பல பெற்றேர் தங்கள் பெண்களைப் படிக்க வைக்க அஞ்சுகிறுர்கள்..." என்று முறையிட்டது. தொழிற் கல்வி வாரியம் இது போன்ற கோரிக்கைகளை அலட்சியப் படுத்துவதையே தொழிலாகக் கொள்ளாமல் இருக்கட்டும்.

— சிவன்



# நேற்றும் இன்றும் நாளையும்...

சுந்தரேசன் வருந்தினார். 'நேற்று மூர்த்தியிடம் நான் அத்தனை கடுமையாக நடந்து கொண்டிருக்கக் கூடாதுதான்.

அவர் அந்த அலுவலகத்தின் உயர் அதிகாரி. மூர்த்தி சாதாரண பியூன். எனவே, இருவருக்கும் இடையில் வெட்டப்பட்டிருந்த அந்தஸ்துப் பள்ளம் மிக மிக ஆழமானது.

நேற்று ஒரு கோப்பை (ஃபைல்) அவசரமாக எடுத்து வரச் சொன்னார் சுந்தரேசன்.

தேடுவதில் பல சிரமங்கள் இருந்ததால், அதைச் சிறிது தாமதமாகக் கொண்டு சென்றான் மூர்த்தி. அதற்காக அவரிடம் அவசியமின்றி மன்னிப்பும் கேட்டுக் கொண்டான்.

ஆனால், சுந்தரேசனுக்குக் கோபம் கொப்பளித்தது. "முட்டாளே..... என்னடா வேலை செய்யற நீ? சம்பளம் வர்ங்கறதுல இருக்கற வேகம் உத்தியோகத்துல இல்லையே? உன்னையெல்லாம் வேலையில வச்சிருக்கிறதே மகா தப்புடா நாயே..."

இப்படிக் கொட்டப்பட்ட நெருப்பு வார்த்தைகள் பல நிமிடங்கள் வரை தொடர்ந்தது. அதிகாரம் என்ற பலம் சுந்தரேசனிடம் நிறைய இருந்தது. அந்தத் தைரியம் அவருக்கு.

சுற்றிலும் இருந்தவர்களில் பலர் மூர்த்தியை ஏளனமாகப் பார்க்க, சிலர் மட்டும் வேதனையோடு முணுமுணுத்தனர்.

சோர்ந்துவிட்டான் மூர்த்தி.

"மன்னிச்சுடுங்க சார்" என்று மட்டும் சன்னமான குரலில் சொல்லிவிட்டு, தலை குனிந்தபடி ஒதுங்கிச் சென்றான் அவன்.

இன்று அந்த நிகழ்ச்சியை நினைத்தபோது, சுந்தரேசனுக்குத் தன் மீதே ஆத்திரம் வந்தது.

'சீ... அற்பத்தனமான சின்ன விஷயத்துக்கு, ஏன் அப்படி அவ்வசியமின்றிச் சீறினேன்? பாவம் அந்த மூர்த்தி, எப்படி வேதனை அடைந்திருப்பான் அவன்?'

அடுத்த வினாடியே அவர் மனம் வேறு விதமாக யோசித்தது. 'இப்போது என்ன ஆகிவிட்டதாம்? அவனைக் கூப்பிட்டு இரண்டு வார்த்தைகள் அன்பாகப் பேசிவிட்டால் பையன் குஷியில் குளிர்ந்து விட மாட்டானா?'

நினைத்த வேகத்தில் அழைப்பு மணியை இயக்கினார் சுந்தரேசன். மாடியில் வேலையாயிருந்த மூர்த்தி, ஓசை கேட்டு ஓடி வந்தான்.

"சார்..." நேற்றைய வேதனை இப்போது துளியும் அவனிடம் காணப்படவில்லை.

"வாப்பா மூர்த்தி" சாந்தத்தைக் குழைத்துக் கனிவுடன் அழைத்தார் சுந்தரேசன். ஆனால், நடிப்பாக ஆரம்பித்தவரின் மனத்தில், உண்மையான அன்பே பிரசவிக்க ஆரம்பித்தது.

"என்ன வேலை சார் செய்யணும்?"

"வேலை செய்ய இல்லப்பா, சும்மா பேசத்தான் கூப்பிட்டேன்" என்றவர், பாசத்தோடு அவன் தோளில் கையைப் போட்டார். தொடர்ந்து அவனிடம் தோழமையோடு பேசினார் சுந்தரேசன்.

நிகழ்வதை நம்பமுடியாதவர்களாகச் சூழ்ந்திருந்த ஊழியர்கள் திகைத்தனர். 'நம்ம மானேஜர் இப்படிக்கூட நடந்துக்குவாரா?'

ஆனால் மூர்த்தியிடம் எந்தவிதமான மாற்றமும் இல்லை. அவர் கேட்ட கேள்விகளுக்குப் பதிலோடு சரி. மற்றபடி உணர்ச்சிகளால் பாதிக்கப்படாத நிலையில் இருந்தான் மூர்த்தி.

தான் எதிர்பார்த்த விளைவுகள் சிறிதும் அவனிடம் காணப்படாமையால் ஏமாற்றம் அடைந்தார் சுந்தரேசன். 'ஏன் இவன் இப்படி நடந்து கொள்கின்றான்? ஒரு வேளை நேற்றைய கோபமோ?'

அதை அவனிடமே கேட்டார்.

தழுதழுக்கக் கூறினான் மூர்த்தி. "சார், இப்ப இத்தனை பேருக்கு முன்னால, நீங்க என்னை மதிச்சு அன்பாப் பேசினதுக்கு, ரொம்ப நன்றி. ஆனா, இதனால உணர்ச்சி வசப்பட்டு நான் சந்தோஷப்படறவனா இருந்தா, நேற்று இவங்க எதிர்லேயே, என்னை நீங்க அவமானப்படுத்தி அலட்சியமாப் பேசினதுக்காக, இந்நேரம் நான் மனசு உடைஞ்சி போய், தூக்குப் போட்டுச் செத்திருக்கணுமே சார்."

மூர்த்தியின் மோனநிலைக்கான காரணம் புரிந்தபோது, சுந்தரேசனின் அதிகாரத் திமிர் முழுமையாகச் சமாதியாகி இருந்தது.

— இராஜா பாலச்சந்தர்

"டிரைவர், கொஞ்சம் வண்டியை நிறுத்துங்க. அதோ தெரியுதே அதுதான் அந்த ஈயப் பட்டறைகளான்னு இந்த வீட்டுல போய் விசாரிப்போம்!" — எங்கள் கார் நின்ற சப்தத்தைக் கேட்டே அந்த வீட்டுக் குள்ளிருந்து ஓடி வந்தார் சுப்பையா என் பவர்.

"சார் நீங்க கல்கியிலேர்ந்துதானே வர் றீங்க! இன்னிக்கு எப்படியும் வந்திடுவீங் கன்னு சத்யசாயி சமிதியிலே சொன்னாங்க. அதுப்படியே வந்திட்டீங்க. அதோ... அந்தப் பட்டறைதாங்க. புகை வருதில்லே. கொஞ்சப் நல்லா மூச்சை இழுத்து விடுங்க. பொகை உள்ளுக்குள்ளே போற ஒவ்வொரு தடவை யும் ஒரு மாதிரி இருக்குதில்லீங்களா..."

"ஆமாங்க... ஒரு மாதிரிதான் இருக்கு!"

"ஒரு எருமை மாடுங்க. யானைக் குட்டி



விஷப் புகையைக் கக்கும் அடுப்பு

பச்சையம்மா





புகையால் படிக்க இயலாமல் தவிக்கும் ஊர்க் குழந்தைகள்.

# "ஐயா, பு
# துளி வி

யாட்டம் வளர்த்தேன். ரெண்டாயிரம் பெறும். செனை மாடுங்க. சண்டாளப் பட் டறையாலே ஒருநா அப்படியே திடீர்னு வுழுந்து துடிதுடிச்சுச் செத்திடுச்சுங்க... இப்போ நெனைச்சாலும் வயிறு பகீருங் கிது..."

"அது இந்தப் பொகையாலதான் செத்துப் போச்சுன்னு எப்படிச் சொல்றீங்க?"

"பொகையால இல்லீங்க... வாங்க காட்ட றேன். இப்படித் தரைல பார்த்துக்கிட்டே வாங்க. பஞ்சு மாதிரி தென்பட்டுதுன்னுச் சொல்லுங்க. ஆங்... இதேதாங்க. நல்லாப் பாருங்க. அந்தப் பட்டறைங்கள்லே என்ன செய்யறாங்க? பாட்டரிங்களைக் கொண்டுக் கிட்டு வந்து பிரிச்சு, அதுக்குள்ளாற இருக் கிற ஈயத்தையெல்லாம் உருக்கியெடுத்து





நம்மிடம் முறையிட வந்து வெட்கப்பட்டு நிற்கும் இளம் பெண் புஷ்பவல்லி

# ...தயை நிறுத்துங்க; ...ல்லேன்னு, ...தைக் குடுத்திடுங்க..."

ஒண்ணு சேர்த்து விக்கிறுங்க.

"அப்படிக் கொண்டுக்கிட்டு வர்ற பாட்டரிங்களைப் பிரிக்கிறபோதுதாங்க, அதுக்குள்ளாற இருக்கிற இந்தப் பஞ்சு மாதிரியான பேப்பர் வெளியிலே வருது. அப்படியே காத்துவாக்கிலே பறந்து அங்கங்கே மேய்ச்சல் நெலங்கள்லே விழுந்திடுங்க. மாடுங்களோ, ஆடுங்களோ புல்லு மேயறப்போ, புல்லோட புல்லா அப்படியே வாயிக்குள்ளே போயிடுங்க. அப்புறம் வயிற்றுக்குள்ளதான் போகுமா; தொண்டக் குழிலே மாட்டிக்கிடுமாத் தெரியாதுங்க. ஆனா கொஞ்ச நேரத்துலே மூச்சு விட முடியாம திணறித் துடிச்சுச் சாக வேண்டியதுதான். அப்படிச் செத்ததுதாங்க என்னோட எருமை..." — சொல்லிக் கொண்டே வந்த சுப்பையா தனது வாழ்க்கையின் மிகப் பெரிய முதலீடாகக் கருதிப் போஷித்து வந்த அந்த எருமை மாடு செத்துப் போனதை நினைவுக்குக் கொண்டு வந்தபோது மிகவும் கலங்கிப் போனார்.

"எப்படி விஷம் வேலை செய்யுதோ தெரியாதுங்க. என்னோடது பசுமாடுங்க. தலைச்சங் கிடாரி. அநியாயமாப் போச்சுங்க...." — ஓடோடி வந்த செல்லக்கண்ணு என்ற பெண்மணி முறையிட்டார்.

அந்தப் பெண்மணியைத் தொடர்ந்து அந்தக் கிராமத்திலிருந்த பலரும் ஓடி வந்து எங்களைச் சூழ்ந்து கொண்டார்கள். வெள்ளாடு, செம்மறி ஆடு, பசு மாடு, எருமை மாடு.... என்று அவரவரும் இழந்தவற்றைச் சொல்லிக் கலங்கினர்கள்.

"இந்தப் பட்டறைங்க வந்ததிலேர்ந்து எங்களுக்குத் தொந்தரவுதாங்கய்யா. இந்தப் பாழாப் போன பொகை வர்ற நேரத்திலே

சாப்பிட முடியலே. அப்போச் சாப்பிட்டா வாந்தி வந்திடுது. மயக்கமா வருது. தலே வலி, கண் எரிச்சல்னு அவதிப்பட்டு மாள லீங்கய்யா. ஒண்ணு இந்தப் பட்டறைங்களே மூடுங்க. இல்லேன்ஞ ஒரு துளி வெஷத்தைக் குடுத்திடுங்க. நாங்க எல்லாரும் சந்தோஷமாக் குடிச்சிட்டுச் செத்துப் போருேம்!"— ரொம்பவும் ஆதங்கப்பட்டுச் சொன்ஞர் பச்சையம்மா என்ற பெண்மணி.

கிராமத்து மக்கள் புடை சூழ, அந்த ஈயப் பட்டறைகளுக்குள் சென்று பார்த்தோம். நில அடுப்புகள் எரிந்து கொண்டிருந்தன. குபுகுபுவென்று புகை கிளம்பிக் கொண்டிருந்தது. அவற்றையெல்லாம் புகைப்படம் எடுத்துக் கொண்டிருந்த நமது புகைப்படக்காரரை, அந்தப் பட்டறைகளின் கணக்குப் பிள்ளே தடுத்தபோது, "என்னய்யா தடுக்கறே? இப்படிப் பொகையை விட்டு எங்க வயித்திலே அடிச்சுக்கிட்டிருந்தா சும்மா இருப்பமா? போட்டோ எடுக்கத்தான் செய்வோம். கம்னு இரு..." என்று அவரை கிராமத்து மக்களே அடக்கிவிட்டார்கள்.

அங்கே அடுப்பிலிட்டு எரித்துக் கொண்டிருந்த வேலேயாட்களிடம் அந்தப் புகை அவர்களேப் பாதிக்கவில்லேயா என்று விசாரித்தபோது, "நாங்க அப்படியும் இப்படியும் நகர்ந்துக்கிட்டுப் பொகை படாம இருந்துக்குவமுங்க..." என்ருர்கள்.

இதற்குள் ஓடி வந்த அந்தக் கிராமத்துத் துவக்கப் பள்ளியின் தலேமை ஆசிரியர் ஜெயராமன், "சார் இந்தப் புகையால என்ஞல பாடம் நடத்த முடியறதில்லீங்க. அப்படியே துண்டை எடுத்து முகத்தை மூடிக்கிட்டு உட்கார்ந்திடுவேன். இப்ப வருது பாருங்க, வெள்ளேப் புகை. இதில ஆபத்துக் குறைவுதாங்க. அதோ அங்கிருந்து வரும் கறுப்புப் புகை. அதுதாங்க ரொம்பக் கொடூரம். நீங்க வர்ற கொஞ்ச நேரத்திற்கு முன்ஞடி கூட வந்துதுங்க. இப்பத்தான் நின்னு போச்சு. அப்போ வந்திருந்தீங்கன்ஞ உங்களாலே இவ்வளவு நேரம் இருந்திருக்கவே முடியாதுங்க. மயக்கம் அடிச்சு விழுந்திருப்பீங்க. வாங்க... எங்க ஸ்கூலேயும் வந்து பார்த்திட்டுப் போங்க..." என்ருர்.

போனேம். கதவே இல்லாத பள்ளி. தரையெல்லாம் புல்டோசர் விட்டுச் சமன்படுத்த வேண்டிய அளவுக்குக் குண்டும் குழியுமாகக் கிடந்தது. ஆஸ்பெஸ்டாஸ் கூரையின் ஒரு பகுதி காணுமல் போயிருந்தது. இந்நிலேயில் அந்தப் புகை உள்ளே வருவதற்குக் கேட்கவா வேண்டும்? குழந்தைகளெல்லாம் பரிதாபமாக மூக்கைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தன.

"நானும் பலமுறை இது பற்றிப் பலருக்கும் மனுப் போட்டுப் பார்த்திட்டேங்க. ஒண்ணும் நடக்கலே. நீங்க வந்த வேளே யாவது எங்க ஸ்கூலுக்கு ஒரு நல்ல வழி பிறக்கணும். படிக்கிற குழந்தைங்களோட எண்ணிக்கை உயரணும்!" என்ருர் ஜெயராமன்.

"எல்லாம் சரி. இந்த அளவுக்குக் கொடூரமான புகையைக் கக்கும் இந்தப் பட்டறைகளே அப்புறப்படுத்தச் சொல்லி, நீங்கள் யாருக்கும் முறையிடவில்லேயா?" — சுற்றியிருந்த அந்தக் கிராம மக்களேப் பார்த்துக் கேட்டோம்.



* இப்படிப் பிரிக்கப்பட்டுக் கிடக்கும் பாட்டரிகளிலிருந்துதான் ஒருவிதப் 'பஞ்சு' பறந்து சென்று தீவனத்தில் கலந்து கால் நடைகளேக் கொல்கிறது... என்கிருர்கள்.



* கர்ணையா

"என்னங்கய்யா சொன்னீங்க? யாருக்கும் பெட்டிஷன் குடுக்கலேயான்ஞ? சரியாப் போச்சுங்கய்யா. மனுநீதி நாள்லே கலெக்டர் கிட்டே பெட்டிஷன் குடுக்கிறதிலேர்ந்து எல்லார்கிட்டேயும் குடுத்துப் பார்த்தாச்சுங்க. இந்தப் பட்டறைங்க வந்த மூணு வருஷமா எங்களுக்கு அதாங்கய்யா வேலே. ஆஞ யாருமே கண்டுக்கலீங்க...

அய்யா, அந்தப் பட்டறைங்க காலேல பத்தரை மணியிலேர்ந்து, சாயங்காலம் மூணரை மணி வரைக்கும்தான் வேலே செய்யும். அப்போதான் பொகையும் வரும். அந்த டைம்ல வந்து பாருங்கன்னு சொல்லிட்டு வருவோம். ஆஞ வர்றவங்க சரியாச் சாயங்காலம் மூணரை மணிக்குப் பிற்பாடு தாங்க வருவாங்க. அப்போ எப்படிப் புகை வரும்? அதஞல 'நான் வந்து பார்த்தேன்.



* துரைராஜ்

* பள்ளிக் கூரையின் பாதியைக் காணவில்லை



அப்போது இந்தக் கிராமத்து மக்கள் முறை யிட்ட மாதிரி புகையே வரவில்லை'ன்னு ரிப்போர்ட் எழுதிடறுங்க. என்னங்கய்யா செய்ய? இந்தப் பட்டறைக்காரங்க ஆளும் கட்சிப் பிரமுகர் ஒருவருக்கு ரொம்பவும் வேண்டியவங்களாம். அப்புறம் எப்படீங்க நடவடிக்கை எடுப்பாங்க...?'' என்றுர்கள் அந்த மக்கள் ஆதங்கத்தோடு.

திருச்சி கே.கே. நகரிலிருந்து சுமார் மூன்று கி.மீ.தொலைவிலும்,புதுக்கோட்டைமாவட்ட எல்லையின் ஆரம்பத்திலுமாக இருக்கும் இச் சிக்காமலைப்பட்டி என்னும் அந்தக் கிராம மக்களின் வேதனை பற்றி, நமக்குக் கடிதம் எழுதியிருந்த திருச்சி கே.கே. நகரிலிருக்கும் சத்தியசாயி சமிதிக்குச் சென்றேம். அங் கிருந்த துரைராஜ் என்பவரைச் சந்தித் தோம்.

''சார், நாங்க அந்தக் கிராமத்தைத் தத் தெடுத்துக்கிட்டு இருக்கோம். இதுவரைக் கும் அந்தக் கிராமத்திலே நூற்றியிருபது கால் நடைகள் செத்திருக்கு. இதுக்கெல்லாம் அந்தப் பட்டறைகள்தான் காரணம். நாங் களும் பலருக்கு மனுக் கொடுத்துப் பார்த்திட் டோம். ஒண்ணும் நடக்கலே. கடைசியா, சுற்றுப்புறச் சூழல் தூய்மைக் கட்டுப்பாட்டுத் துறைக்கு எழுதினேம். 'பொதுச் சுகாதாரச் சட்டத்தின்படி நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறதென்றும்அவ்விரண்டுதொழிற்சாலை களும் சென்ற ஒரு மாத காலமாகச் செயல் படவில்லை என்றும் புதுக்கோட்டை மாவட்ட ஆட்சித் தலைவர் தெரிவித்துள்ளார்' என்று அதன் துணைச் செயலாளர் கே.என். ரத்தின வேலு என்பவர் எங்கள் சமிதிக்கு ஒரு கடிதம் எழுதியுள்ளார். ஆனுல், அந்தத் தொழிற்சாலைகள் எப்போதுமே இயங்காம இல்லீங்க. நீங்க வந்த பிறகாவது ஒரு விமோ சனம் கிடைக்குமான்னு பார்ப்போம்!'' என்றுர் அவர் ஆற்றுமையோடு.

கடைசியாக அந்தப் பட்டறைகளின் சொந்தக்காரர்களில் ஒருவரான ஆர். சுப்ர மணியம் என்பவரைச் சந்தித்து விளக்கம் கேட்பதற்காக, டெலிபோனில் தொடர்பு கொண்டபோது, அவர் வெளியூர் சென்று விட்டதாகச் சொன்னுர்கள். அதனுல் அவரைச் சந்திக்க முடியவில்லை.

எது எப்படிப்போனுலும் அந்தப்பட்டறை களிலிருந்து வெளி வரும் புகை கெடுதலை விளைவிக்கக் கூடியது என்பதில் சந்தேகமே இல்லை. நாங்கள் அந்தக் கிராமத்திலிருந்த சுமார் ஒரு மணி நேரத்திற்குள்ளேயே எங் களுக்கு அதுவரை இல்லாத இலேசான கண் எரிச்சலும், ஒரு வித்தியாசமான இருப்புக் கொள்ளாமையும்ஏற்பட்டதிலிருந்தேஅந்தப் புகையின் நச்சுத் தன்மை புரிந்துவிட்டது. ஒரு மணி நேரம் இருந்த நமக்கே அப்படி யென்றுல் இருபத்து நான்கு மணி நேரமும் அங்கேயே வாழும் சுமார் இருநூற்றைம்பது பேரின் நிலை என்ன?

இத்தனைக்கும் அந்தப் பட்டறைகள் அரசு லைசென்ஸ் இல்லாமல்தான் இயங்கிக் கொண்டிருப்பதாகக்கூறப்படுகிறது. அப்படி யிருந்தும் அவற்றைத் தடை செய்வதிலோ, அவற்றின் மீது உடனடி நடவடிக்கை எடுப் பதிலோ அதிகாரிகளுக்கு என்ன தயக்கம்? இந்தக் கேள்வியை மாவட்டக் கலெக்டரிடம் கேட்டபோது, ''நீங்கள் நினைப்பது போல் நடைமுறை அத்தனை சுலபமானது அல்ல. அதனுல் அவற்றின் மீது வழக்குத் தொடுத் துள்ளோம். முடிவுக்காகக் காத்திருக் கிறேம்!'' என்றுர்.

எப்படியோ இழுத்தடிக்கப்படாமல் அந்த மக்களுக்கு உடனடியாக நீதி கிடைக்க வேண் டும். இல்லையென்றுல் பயனில்லை. ஏனெனில், 'தாமதமாகக் கிடைக்கும் நீதி, மறுக்கப்படும் நீதிக்குச் சமம்' என்று முன்னுள் சுப்ரீம் கோர்ட் நீதிபதி வி. ஆர். கிருஷ்ணய்யரே சொல்லியிருக்கிறுர்.

— இளங்கோவன்

அட்டை வண்ணப்படங்களும், புதுக் கோட்டை மாவட்டச் செய்திகள் தொடர் பான மற்ற படங்களும் எடுத்தவர்:

கே.வி. ஆனந்த்

# விலைமாடுகள்

மும்தாஜ் யாசீன்

மாமிதான் கைத்தாங்கலாக உட்கார வைத்தாள். அவிழ்ந்த கூந்தலைக் கொண்டை இட்டாள். மாராப்பைச் சரி செய்து, மரத்துப் போன முகத்தைத் தடவி, "விரலு விரலாப் பதிஞ்சிருக்கேடி...! நாசமாப் போனவன் இப்படியுமா அடிப்பான்?" எனப் பொருமி....

"ஊருக்குப் போயிருடி. புருஷ லட்சணம் கிழிச்சது போதும். உன் ஒருத்தி வயிறு நிறையாதா அங்கே?" என விதையையும் தூவிவிட்டாள்.

காலையில் இருந்து அதே யோசனைதான் மஞ்சுவுக்கு.

ஊருக்குப் போ.... போனால் என்ன?

எந்த இராஜ வாழ்க்கை இங்கே பாழாய்ப் போகிறது?

ஆறு மாத வாழ்வில் நிம்மதியான சோறு கிடையாது. சேலை, ரவிக்கை என வாங்கியது கிடையாது. சந்தோஷமாய் நாலு இடங்களுக்குப் போய் வந்தது கிடையாது. பாதிச் சம்பளத்தை கண்ணால் பார்த்ததுகூட ஒன்றிரண்டு தடவைகள்தான். இரவில் சீட்டுக் கச்சேரி முடிந்து வரும்போது கதவைத் திறக்கவும், குடிவெறியோடு அணைத்துக் கொள்ளப் பக்கத்தில் படுத்துக் கொள்வதற்கும்தானா மூன்று முடிச்சை வாங்கிக் கொண்டது? ஏதாவது சொன்னால் கோபம். அடி, உதை. "பிடிக்கலைன்னா போடி உங்கப்பன் வீட்டுக்கு".

எதற்காக இந்தப் பாடு?

அனாதையா? ஆதரவற்றவளா? ஏன் சகித்துக் கொண்டு கிடக்க வேண்டும்?

யோசனைகளில் மனம் வலுவடைய, உடம்புக்கும் தெம்பு வந்துவிட்ட மாதிரி இருந்தது.

மெதுவாக எழுந்து கண்ணாடியின் முன் நின்றாள்.

உதட்டோரத்தில் இன்னும் இரத்தம் கசிந்தது. நிமிர முடியாமல் முதுகு எரிந்தது.

"பாவி.... மகாப் பாவி."

மாமி சொன்ன மாதிரி தன் ஒருத்தியின் வயிற்றுப் பாட்டைச் சமாளிப்பது ஒன்றும் கஷ்டம் இல்லை.

அம்மாவுக்குத் தெரிந்தால் கதறிக் கொண்டு வந்துவிடுவாள். "இதுக்குத்தானா என் புள்ளையைக் கட்டிக்கிட்டே?" என நாக்கைப் பிடுங்குகிற கேள்வி கேட்பாள். "போதும்டி நீ வாழ்ந்தது" என கையோடு கூட்டிப் போய்விடுவாள்.

அவர்கள் யாரும் அருகில் இல்லை என்பதனால்தான் இந்த ஆட்டம் போடுகிறானா?

இன்றைய சண்டைகூட ஓர் அற்ப விஷயத்துக்காகத்தான் நடந்தது.

விடியற்கால நேரம்.

விடியலின் எல்லாச் சத்தங்களும் வந்திருந்தன.

பறவைகள் ஒலி. பக்தியை உரக்கப் பாடும் கோர்வில் ஒலி பெருக்கி. குழாய்ச் சண்டை. பேப்பர்க்காரனின் சைக்கிள் மணி ஓசை. வாசல் தெளிப்பு....

மூர்த்தி 'ஆ'வென்று தூங்கிக்கொண்டிருந்தான்.

பால்க்காரன் வருகிற நேரம். முந்தின மாத பாக்கியைத் தராமல் அவன் முகத்தைப் பார்க்க முடியாது.

கத்துவானோ என்ற பயத்துடனேயே, "இந்தாங்க...." என மெதுவாக எழுப்பினாள்.

"என்னடி?" நினைத்த மாதிரியே எரிந்தான்.

"பால் பாக்கி தரணும். பணம் வேணும்."

"ராத்திரியே வாங்கி வைக்க என்ன கேடு?"

"நீங்கதானே காலைல தர்றேன்னது."

"உன் தலை..... பாக்கெட்ல இருக்கு, எடுத்துக்க."

மஞ்சுளா நகர்ந்தாள். சம்பள வாரம் இது. கோபித்துக் கொள்ள முடியாது. உதறிவிட்டுப் போய்விடுவான். ஒரு வாரம், பத்து நாட்களுக்குக் காண முடியாது. ஒரு முழு மாதத்தையும் எதிரே வைத்துக் கொண்டு எந்தப் பைத்தியக்காரியாவது அதைச் செய்வாளா? எத்தனை கடன்கள்? மளிகை பாக்கி, வாடகை, கரண்ட் பில், சாரதா மாமியிடம் கைமாற்றாக வாங்கிய ஐம்பது ரூபாய்....

பாக்கெட்டில் கைவிட்டவளுக்கு 'திக்' கென்றது. நூறு ரூபாயுடன் சில சில்லறை நோட்டுக்கள்தான் இருந்தன.

"என்னங்க.... சம்பளம் என்னாச்சு?"

"துடைச்சுப் பார்த்துட்டியா.... எத்தனை தடவை சொல்லி இருக்கேன். பாக்கெட்டைத் தொடாதேன்னு...." கூடவே அவளது அப்பாவின் பிறப்பைச் சந்தேகிக்கிற ஒரு கெட்ட வார்த்தையையும் சொல்லிக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான்.

மஞ்சுளா லட்சியம் பண்ணவில்லை. கடன் காரர்களின் முகங்கள் மட்டுமே கண்ணெதிரே நின்றன அவளுக்கு.

"என்ன செஞ்சீங்க? மீதிப் பணம் எங்கே?"

"உங்கப்பனுக்கு மொய் எழுதி இருக்கேன். பொறு... பொறு... வரும்."

"யாருக்கும் பைசாக் கணக்குக்கூடத் தீர்க்கலே. என்ன பண்ணுவேன். சொல்லுங்க, என்னுச்சு?"

"புலம்ப ஆரம்பிச்சுட்டியா? முதல்ல உன் கணக்கைத் தீர்த்தாத்தாண்டி இந்த வீடு உருப்படும்."

மற்ற கடன் எப்படியானாலும் மாமியிடம் வாங்கியதைக் கொடுத்துவிட வேண்டும். அக்கம்பக்கத்தில் அவளை யாரும் நல்ல சினேகிதியாக நினைப்பதில்லை. கொஞ்சம் நெருங்கிப் பழகுபவள் மாமி ஒருத்திதான். பிள்ளைக்கு ஸ்கூல் ஃபீஸ் கட்ட வைத்திருந்த பணம் அது. கேட்டவுடன் எடுத்துக் கொடுத்தாள். சொன்ன கெடுவில் திருப்பிக் கொடுக்காவிட்டால் என்ன நினைப்பாள்? அவளது பிரியத்தையும் இழந்துவிட வேண்டியதுதானு?

"செய்யுங்க.... ஒரேயடியா ஒழிஞ்சு போறேன்."

துக்கம் பீரிட்டு வந்தது.

காய்கறிக்காரியிடம் கூட நேற்றுப் பேச்சு வாங்கி இருந்தாள். "உனக்குக் கடன் குடுக்கணும்னு என் தோட்டத்தை வித்தாத்தான் முடியும்மா..."

காம்பவுண்டில் எல்லாப் பெண்களும் சிரித்தார்கள். இனி தெருவெல்லாம் கூடிச் சிரிக்குமோ — ஒவ்வொரு கடன்காரனும் வாசலில் நின்று கத்துவதைப் பார்த்து.

"பூராத்தையும் வச்சு விளையாடினீங்களா... இனி ஒரு மாசத்துக்கு நான் என்ன பண்ணுவேன்?"

"விளையாடிப் போச்சுன்னு உனக்கு யாரு சொன்னது?" ஏதோ அபாண்டத்தைத் தடுக்கிற மாதிரி ஆவேசத்துடன் கேட்டான்.

"இன்னொருத்தர் வந்து சொல்லணுமா? அதான் தினம் தினம் நடக்குதே...."

கோபம்துளிர்க்க,அடக்கிக்கொண்டான். "சரி... சரி. எந்திரி. காலேல அழுது தொலைக்காதே. உனக்குப் பணம்தானே வேணும். நாளைக்கு வாங்கிக்க...."

மூர்த்தி கடிகாரத்தைப் பார்த்தான். குளித்து, புறப்பட்டால் நேரம் சரியாக இருக்கும் போல இருந்தது.

"ஏன் இப்ப முகூர்த்தம் சரி இல்லையா?" எனக் கேட்டாள் மஞ்சுளா.

முறைத்தான்.

"இப்படிப் பொறுப்பு இல்லாம நடந்துக்கறீங்களே.... குடும்பம்னு ஒண்ணு நடத்த



நானும் ஒருத்தி இருக்கிறது ஞாபகம் இருக்கா?''

''இல்லே... விடியா மூஞ்சியை ஞாபகம் வச்சுக்கிட்டா பொழப்பு அவ்வளோதான்.''

''இந்த புத்தி உள்ளவரு ஏன் கட்டிக்கிட்டு வரணும்?''

''உங்கப்பனைக் கேளு.... போடி.''

''போகத்தான் போறேன். ஏம்ப்பா ஒரு சூதாடிக்கு என்னைத் தள்ளிவிட்டேன்னு கேக்கத்தான் போறேன்.''

''என்னடி சொன்னே?''

மூர்த்தி உக்கிரத்துடன் அவள் மீது பாய்ந்தான். மாறி மாறி அறைந்தான். ''பேசுவியா... எதிர்த்துப் பேசுவியா?''

''பேசுவேன். கடன்காரங்களுக்கு பதில் சொல்றவ நான். இப்படி சூதாடித் தொலைச்சுட்டு வந்தா பேசாம என்ன பண்றது?''

''மறுபடியும் நான் சூதாடினேன்னு சொல்லாதேடி...'' மேலும் அடித்தான். பழக்கத்தால் அவள் முகத்தைப் பொத்திக் கொண்டு, குனிந்து சரிய, முதுகில் நிறைய விழுந்தது. அக்கம்பக்கம் கூடிவிட்டது.

''விடு தம்பி.... என்ன இது கேவலப்பட்ட பொழப்பு...'' என மாமி உள்ளே வர உதறினான்.

''தரித்திரம் பிடிச்ச நாயி. இவ வந்ததுல இருந்துதான் எனக்கு கஷ்ட காலம். போய்த் தொலை.... இன்னையோடு ஒழிஞ்சு போ.''

''**நா**ன் புறப்படறேன் மாமி.'' கையில் பெட்டியுடன் நின்றவளைப் பார்த்து மாமிக்கு வியர்த்தது.

''எங்கேடி?''

''எங்க ஊருக்கு.''

''போயி?''

மஞ்சுளாவுக்கு பதில் சொல்லத் தெரியவில்லை.

''போறேன். கடவுள் விட்ட வழி....''

தான் சொல்லித்தான் அவள் புறப்பட நேர்ந்தது என்று தெரிந்தால் மூர்த்தி விடுவானா? மாமி பயப்பட ஆரம்பித்தாள். தன் புருஷனுக்கும் அவள் பதில் சொல்லி ஆக வேண்டும். ''உனக்கென்னடி ஊர் நாட்டாண்மை?'' என அந்த மனிதரும் குதித்தால் தான் எங்கு போய் முட்டிக் கொள்ள முடியும்?

தனது பாதுகாப்பு முக்கியமாகிவிட உபதேசிக்க ஆரம்பித்தாள் மாமி.

''போயி என்னடி பண்றது? வீட்டுக்கும் பாரம். ஊர்லேயும் பேச்சு.''

அவளது தொனி மாற்றம் மஞ்சுளாவை

---



'நச்சுக்' என்று குட்டியவுடன் சகமாணவன் தலையில் ரத்த ஊற்று கிளம்புகிறது பாருங்கள் —

தங்கவேலு வாத்தியார் பற்ற வைக்கும் சிகரெட்டில் ஊசிப் பட்டாசு ஒளிந்திருக்கிறது பாருங்கள் —

மாப்பிள்ளைக்கு ரத்தம் கொடுக்க வேண்டும் என்றவுடன் மனோரமா ஆட்டு ரத்தத்தை வாங்கிப் பொறித்துக் கொண்டு வருகிறார் பாருங்கள் —

அங்கேயெல்லாம் பாண்டியராஜன் இருக்கிறார். ஆனால் —

எப்போது 'முக்கியமான' இடத்தில் அடிபட்டு, பாண்டியராஜன் ஆஸ்பத்திரியில் படுக்கிறாரோ அப்போதே கதையும் படுத்து விடுகிறது. இடைவேளைக்கு அப்புறம் முழுக்க முழுக்க ஆஸ்பத்திரியிலேயே ஓட்டப் பார்க்கிறாரா, கொஞ்சம் சங்கடமாய் 'ஸீட்'டில் நெளிய வேண்டி இருக்கிறது.

ஏட்டு மனோகர் அப்பா. பையன் வயலின் வித்வானாக மாற வேண்டும் என்று கனவு கனவாய்க் காண்கிறவர். ரொம்ப நாளைக்கப்புறம் திரையில் பார்ப்பதால், கொஞ்சம் வித்தியாசமான அப்பாவைப் பார்க்கிற மாதிரி இருக்கிறது.

அதுசரி 'டணால்' தங்கவேலுவின் குரல் என்ன ஆயிற்று? அங்கங்கே குழறுகிறதே. தன்னுடைய பள்ளி மாணவன் மேல் இவ்வளவு பாசம் வைத்திருக்கிற வாத்தியாரை இந்தப் படத்தைத் தவிர வேறு எங்கேயும் பார்க்க முடியாது என்கிற அளவுக்குப் பண்ணியிருக்கிறார் மனிதர்.

விபூதிக்கீற்று டாக்டர் பிரதாப் பரவாயில்லை. 'காக்காய்க்கு அறுத்துப் போடுவேன்' வசனம் மூன்

# மனைவி ரெடி

றும் தரத்தைத் தாண்டி நான்காம் தரமாக இருந்தாலும் அவர் அதைச் சொல்லியிருக்கிற விதத்தில் சிரிப்பை வரவழைத்திருக்கிறார்.

மருமகனுக்கு இனிமேல் குழந்தையே பிறக்காது என்று, ஆஸ்பத்திரி ப்யூன் சொன்னதை நம்பி, ஒரு மாமனார் (டாக்டரிடம் ஒழுங்காகக் கேட்கக் கூடாது?) தன் மகளுக்கு இன்னொரு கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்வதாகவே இருக்கட்டும்! தாலி கட்டிக் கொண்ட பெண் ஓர் எதிர்ப்பும் காட்டாமலா இரண்டாவது கல்யாணத்திற்குச் சர்வ அலங்கார பூஷிதையாக வருவாள்?

க்ளைமாக்ஸ் என்கிற பெயரில் பேத்தல். அதுவும் பொசுக்கென்று அப்படியா முடியும்?

புது ஹீரோயின் சிந்தாமணி கொஞ்சமே கொஞ்சம் ரத்தி (என்றொரு முன்னாள் நாயகி)யை ஞாபகப் படுத்துகிறார். இருந்தாலும் ஓ. கே. தேறிவிடலாம்.

இளையராஜாவின் இன்னிசை மழையில், மழை இருக்கிறது; இனிமை மிஸ்ஸிங்.

ஆரம்பத்தில் என்னவோ நல்ல மைசூர்பாகு கொடுக்கும் நோக்கத்தில்தான் நல்ல நெய் எல்லாம் ஊற்றிக் கிண்ட ஆரம்பித்திருக்கிறார் பாண்டியராஜன். போகப் போகப் பதம் தப்பிப் போய் விட்டது.

— ஜெயமன்மதன்



மீண்டும் மீண்டும்
சுவைக்கத் தூண்டும்
நியூட்ரின்
மில்க் பிஸ்கட்ஸ்







வழங்குவோர் : இந்தியாவிலேயே
மிகப்பெருமளவில் விற்பனையாகும்
மிட்டாய் தயாரிப்பாளர்கள்.

ACIL/009/86-Tam

# பரிசு ரூ. 200/-

## பொன்மொழிப் போட்டி — 2

இந்தப் பயனுள்ள போட்டியில் எல்லோரும் கலந்து கொள்ளும் ஆர்வத்தைத் தூண்ட பரிசுத் தொகை இரட்டிப்பாக்கப்பட்டுள்ளது!

இந்த இதழின் உள்பக்க மார்ஜின்களில் ஐந்து பொன்மொழிகள் உள்ளன. கீழே ஐந்து பெயர்கள் தரப்பட்டுள்ளன. எந்தப் பொன்மொழியை யார் சொன்னது? கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புங்கள். முக்கிய நிபந்தனை: நீங்களே உங்கள் கைப்படப் பொன்மொழிகளைத் தவறின்றி முழுமையாக வெற்றிடங்களில் எழுத வேண்டும். ஒருவருக்கு மேல் சரியான விடை அளித்தால் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும். உறையின் மேல் "பொன்மொழிப் போட்டி — 2" என்று குறிப்பிடவும்.



**அரிஸ்டாட்டில்:**

**கீதையில் கண்ணன்:**

**சத்திய சாயிபாபா:**

**விவேகானந்தர்:**

**திருவள்ளுவர்:**

**முடிவு தேதி: 28.1.87.**

பெயர்: ..........................................

விலாசம்: ..........................................

..........................................

புருவம் தூக்க வைத்தது.

"இருக்கட்டும் மாமி.... இங்க எத்தனை நாளைக்குத்தான் அடிபட்டுச் சாகறது?"

இதற்கு மாமிக்கு பதில் சொல்லத் தெரியவில்லை.

**ப**ஸ்ஸில் ஏறி உட்கார்ந்தாள்.

"எந்த ஊரும்மா?"

சொன்னாள்.

பஸ் புறப்பட்டு விட்டது.

இனி என்ன செய்வது? எதுவும் சரியாக விளங்கவில்லை.

எஞ்சியுள்ள வாழ்க்கையை நினைத்தபோது பயமாகவும் இருந்தது.

தான் அவசரப்பட்டு விட்டோமோ?

அப்படியும் நினைக்க முடியவில்லை. அவன் இப்போதைக்கு திருந்தப் போவது இல்லை. இன்றைக்கு இல்லாவிட்டாலும் இன்னும் ஆறு மாதங்களோ ஒரு வருடமோ கழித்து இதே முடிவுக்குத்தான் வர நேர்ந்திருக்கும்.

இன்னும் கொஞ்ச காலம் என்பது ஒரு லாபமாகிவிடுமா?

ஊரில் எத்தனையோ பெண்களைப் பார்த்திருக்கிறாள். குடிகாரன், சூதாடி, பொம்பளை பொறுக்கிகளுக்கு மனைவியானவர்கள் சீரழிந்த வாழ்க்கைதான் வாழ்கிறார்கள். அடுத்த வீடுகளில் பகல் முழுக்க புருஷனைப் பற்றிக் குறை சொல்லிப் புலம்பினாலும், இரவில் அவனோடுதான் படுத்து எழுகிறார்கள். அம்மா அவர்களைத் திட்டுவாள். 'இத்தனை படறியேபுத்திவேணுமாடி....இப்படி விட்டுக் குடுக்கிறதாலதான் அவனுக கொழுத்துப் போயி அலையறானுக...'

"என்னக்கா பண்றது? யாரு வச்சுக் காப்பாத்துவா. .?"

"கை கால் இல்லே? உழைச்சுச் சாப்பிடறது. அப்பத்தானே அவனுகளுக்கும் பயம் வரும். உனக்கு அறிவு இல்லேன்னாலும், உன்னைப் பெத்தவங்களுக்கு வேணாம்?"

அப்படி எவளும் பயம் உண்டாக்கியதற்கு சரித்திரம் இல்லை. அம்மாவைப் பார்த்து பொறாமைப்பட்டவர்கள்தான் அதிகம்.

அம்மா அதிர்ஷ்டசாலி. 'தள்ளி நில்' என்று சொல்லாத புருஷன் அவளுக்கு. குடும்பத்தில் எத்தனையோ கஷ்ட நஷ்டங்கள் வந்தது உண்டு. நான்கு குழந்தைகள். வருமானம் போதாமல் பட்டினி கிடக்க நேர்ந்தது உண்டு. ஆனால் எல்லாவற்றையும் கலங்காமல் சமாளிக்க அந்த நிழல்தான் ஆதாரம் அவளுக்கு.

மஞ்சுளாவுக்குஅம்மாவைஉடனே காணத் தக்க ஏதோ ஒன்றில் புகுந்து பறக்க வேண்டும் போலிருந்தது.

அவளைக் கட்டிப் பிடித்து, தோள்களில் முகத்தைப் பதித்து, "அம்மா.... அம்மா" என்று கேவி, மடியில் படுத்து, தனது சுமைகளை இறக்கி....

மாமி மாதிரி தனது பாதுகாப்பைக் கருதி ஒதுங்க முடியுமா அவளால்? உலகில் ஆதி நாளில் இருந்து மாறாமல் தொடர்ந்து வரும் சங்கதி இந்த அம்மா உறவு ஒன்று மட்டும்

தானே!

அம்மாதான் முதலில் அவளைப் பார்த்தாள். அம்மியில் ஏதோ அரைத்துக் கொண்டிருந்தவள் தற்செயலாக நிமிர, எதிரே கைப்பெட்டியுடன் உள்ளே நுழையும் மகள்,

"மஞ்சு...."

"அம்மா...."

ஆசையும், பாசமும் பொங்கும் அவளது குரலைக் கேட்டுத்தான் எத்தனை நாளாயிற்று. தேக்கி வைத்திருந்ததெல்லாம் கரைந்து விடும் போல இருந்தது.

"என்னம்மா,... திடீர்னு கடுதாசிகூட போடாம?" ஓடி வந்து பெட்டியை வாங்கிக் கொண்டாள்.

சோகம் கப்பிய முகம், தளர்ந்த நடை, நலிந்த குரல். என்னவோ விபரீதமாகத் தோன்ற வாசலைப் பார்த்தாள். "தனியாவா வர்றே? அவரு எங்கே?"

மஞ்சுளாவுக்குத் தன்னைக் கட்டுப்படுத்துவது சிரமமாகிவிட்டது.

"அவரு..... அவரு....."

"உள்ளே வா...." அம்மா தோளோடு அணைத்து அவசரமாகக் கூட்டிப் போனாள்.

"ஹய்யா... அக்கா" சின்னதுகள் ஓடி வர, "போங்கடா அப்பாலே" என விரட்டி, "சண்டையா?" என்றாள் கவலையுடன்.

மஞ்சுளா தலையசைத்தாள்.

"கோவிச்சுக்கிட்டு வர்றியா?"

"ம்..."

"என்ன சண்டை?"

சுருக்கமாகச் சொல்ல நினைத்து வாயெடுக்க, குரல் எழும்பவில்லை. எதை முதலில் சொல்வது எனத் தெரியாமல், எல்லாமே மோதி உடைய, "அம்மாவ்...." எனக் கதறியபடி அவள் மீது சரிந்தாள் மஞ்சுளா.

"என்ன பொண்ணு நீ.... முதல்லியே எல்லாம் எழுத வேணும்? நாங்க என்ன செத்தாப் போயிட்டோம்,.."

அப்பாவுக்கு நிஜமாகவே கோபம் வந்துவிட்டது.

அம்மா சுவரில் சாய்ந்தவள் எழுந்திருக்கவில்லை. சமையலறை வாசலில் கௌரி நிற்க அவளுக்குப்பின்னால் ராஜியும்வெங்கிடுவும். கௌரிக்குக் கல்யாணம்நிச்சயமாகிவிட்டது. அடுத்த வாரம் பரிசம் போட வருகிறார்கள். வாழ்க்கையை வெறும் சந்தோஷக் கனவுகளாகவே காண முடிகிற பருவம். தன் நிலையைக் கண்டு அதிர்ச்சி அடைவாளோ?

"ஆரம்பத்திலேயே அழுத்திப் பிடிக்கணும், இவ்வளோ நாள் மறைச்சுட்டு இப்ப வந்தா என்ன பண்றது சொல்லு...."

பேசுவது அப்பாவா, அந்நியரா என்ற சந்தேகம் வந்தது மஞ்சுளாவுக்கு.

வந்த இரண்டு நாளாக மருமகனைப் பற்றி அதிகம் பேசவில்லை அவர். மஞ்சுளாவைத் தான் குறை சொன்னார். ஏன் முதலிலேயே தெரிவிக்கவில்லை என்ற ஒற்றைக் கேள்வியிலேயே நின்றார்.

தெரிந்தால் மட்டும் என்ன சாதித்திருக்க முடியும் என்று மஞ்சுளாவுக்கு விளங்கவில்லை. படுக்கையினைப் பகிர்ந்து கொள்ளும் இளம் மனைவியின் கண்ணீருக்கே கரையாதவன், கிழட்டு மாமனாரின் புத்திமதிகளுக்குச் செவி சாய்க்கப் போகிறானா?

"உங்களுக்குக் கஷ்டம் தர வேணாம்னு நினைச்சேன்பா... முதல்ல சொன்னாலும் இப்பச் சொன்னாலும் அவரு அவருதான். மாறப் போறதில்லை."

"அதை நீயே முடிவு பண்ணிட்டாப் போதுமா?"

"சரி.... நீங்களே சொல்லுங்க..."

"என்ன செய்யலாம்... சொல்லு...."

"அது தெரிஞ்சா நான் ஏனப்பா இங்க வர்றேன்?" மஞ்சுளாவுக்கு அலுத்துவிட்டது.

"வந்து ரெண்டு நாளாச்சு.... இன்னும் யோசிக்கலையா?"

'சட்'டென்று அம்மா நிமிர்ந்தாள்.

"நீ ஏண்டி... அப்பாகிட்ட கோவிச்சுக் கறே....?" என்றாள் அம்மா.

"பின்னே என்னம்மா? பிடிக்கலைன்னா சொல்லட்டும். போயிடறேன்... அதென்ன கேள்வி?"

"மகராசியாப் போ... இங்கே வச்சுக் கணும்னா கட்டிக் குடுத்தது?"

"அந்த ஆளுகிட்ட இல்லை..."

"வேறே எங்கே போவே? அப்பா நேத்திக்கே எழுதிப் போட்டுட்டார் மாப்பிள்ளைக்கு."

"என்னம்மா இது?"

"குடும்பம்னா சண்டை சச்சரவு வரத்தான் செய்யும். அதுக்காக வேணாம்னு விட்டுர முடியுமா?"

"அவரு எப்படின்னுதான் உனக்கு சொன்னேனே அம்மா..."

"பயப்படாதே... எல்லாத்தையும் அப்பா பார்த்துக்குவாரு."

"என்னால முடியாது..."

"இதென்னடி பிடிவாதம்? கௌரிக்கு கல்யாணம் பண்ற நேரத்துல?" மஞ்சுவுக்கு நெற்றியில் அடித்த மாதிரி இருந்தது. பொறி கலங்கியது.

மாமியின் பாதுகாப்பு ஞாபகத்திற்கு வந்தது.

அவளுக்குத் தனது சுயநலம். அம்மாவுக்கு அடுத்த பெண்ணின் கவலை. கல்யாணத்திற்குப் பின் எப்படியாவது புருஷனோடு ஒட்டிக் கொண்டு வாழ்ந்துவிட வேண்டும் என்பதுதான் அம்மாவின் அபிப்ராயமா?

"முதல்லியே நீ தெரிவிச்சிருந்தா இந்த அளவுக்கு நடந்திருக்காது" என்றாள் அம்மா.

"ஏன்? படை எடுத்து வந்து அவரைப் பிடிச்சிருப்பீங்களோ?"

"படையும் சேனையும் மருமகன்கிட்டே ஆகுமா? கை, கால்ல விழுந்துதான் காரியம் சாதிக்கணும்."

அம்மா தன்னை மேலும் கேவலப்படுத்தி விட்ட மாதிரி இருந்தது மஞ்சுவுக்கு.

தான் அதுவரை அடைந்த எல்லாத் துயரத்தையும் விட, அத்தருணம் மிகுந்த துன்பம் அளிப்பதாக உணர்ந்தாள்.

# நேரில் வருவான்

தீபாவளிக்கு மூன்று நாள் இருக்க, அந்தி சாயும் நேரம்.

''சாந்தி.... சாந்தி....''

அவசரமாக யாரோ கதவைத் தட்டினார்கள்.

தையல் மெஷினில் ரவிக்கை தைத்துக் கொண்டிருந்த சாந்தி, பாதி ஆர்வமும் பாதிச் சலிப்புமாக வந்து கதவைத் திறந்தாள்.

பெட்டிக் கடை மருதமுத்து தவிர, அவனது தோளுக்குப் பின்னால் ஓர் இளைஞன்.

''இப்படி வா, தம்பி'' என்று அவனை முன்னால் வரச் செய்து, சாந்தியிடம் சொன்னான் மருதமுத்து. ''உன்னால் எனக்கு ஒரு முக்கிய வேலை ஆகணும் அம்மா.''

''என்ன?''

''இந்தப் பையன் டவுனிலிருந்துவருதாம்.ஏதோதொழிற்சாலையிலே அப்பன்ரிக்சா...'' தப்பாகச்சொல்கிறோம்என்பது புரிந்து மருதமுத்துவே பேச்சை நிறுத்தி, நமட்டுச் சிரிப்புடன் இளைஞனைப் பார்த்தான்.

கிராமத்தின் புரியாத்தனம், அந்தக் கிருதா இளைஞனையும் புன்னகை புரிய வைத்தது.

''அதாவது.... அப்பரண்டிசாகச் சேரணுங்க...'' என்றவனாய், சாந்தியின் முகத்தை நேருக்கு நேராய்ச் சந்தித்தான்.

வட்ட முகம்.

குடை பிடித்ததுபோல் பிசிறில்லாத, நெற்றித் திட்டு. அதில் வெட்டவெளி நிலவாய் பிரகாசிக்கும் குங்குமப் பொட்டு.

''அப்படிங்களா!'' என்று அவளும் அவனை கணப்பொழுது பார்வையால் நிறுத்தாள்.

கொத்தாய்க் குலுங்கும் முடி. கத்தரித்த மீசை. களத்து மேட்டுக்கு வந்த புது நெல் மாதிரி நிறம். இன்னும் பார்க்கலாம்



தமிழினியன்

தான். ஆனுல், பெண்மை அவளது விழிகளுக்குக் கடிவாளம் போட்டுவிட்டது.

இளைஞனே தொடர்ந்தான்.

"தீபாவளிக்கு மறுநாள் பயிற்சியில் சேரணும் என்று நேற்று திடீரென்று ஆர்டர் போட்டுவிட்டார்கள். பயிற்சியில் சேர்வதற்கு ரெடியாய்த்தான் இருக்கிறேன். ஆனுல், காக்கி யூனிபாரத்தோடு வரணுமாம். அதுதான் இப்போது பெரிய பிரச்னையாகிவிட்டது. துணியை வாங்கிக் கொண்டு டவுனில் ஒரு தையல் கடை விடாமல் கேட்டுவிட்டேன். தீபாவளி வேலை நிறைய இருக்கிறதென்று யாருமே தைத்துத் தரமாட்டேன் என்று சொல்லிவிட்டார்கள். அப்புறம்தான் இந்த யோசனை வந்தது. கிராமத்திலேயாவது முயற்சி பண்ணலாம் என்று இங்கு வந்தேன்...."

"வந்தும்பிரயோசனமில்லை,சாந்தி"என்று மருதமுத்து உதட்டை மடித்தான். "இங்கு உள்ளதோ இரண்டே இரண்டு தையல் கடை. அவர்களும் முடியாதென்று சொல்லிவிட்டார்கள். மனம் நொந்து போய் நம்ம கடைவாசலிலே ஒதுங்கி நின்றிருந்தப்பத்தான் நான் விசாரித்தேன். உன் ஞாபகம் வந்தது. உடனே கூட்டி வந்துட்டேன்."

"என்னிடமா?"

"ஏன்?"

"சட்டையானுலும் தைச்சுடுவேன். பேண்ட் தைத்துப் பழக்கம் இல்லையே."

"இப்ப பழக்கப்படுத்திக்க வேண்டியதுதான்" இலகுவாய்ப் பேசினுன் மருதமுத்து.

"துணி வீணுயிடுச்சுதுன்னு...."

"அதைப் பற்றிக் கவலைப்படாதீங்க. யூனிபாரம்தான். கொஞ்சம் முன்னே பின்னே இருந்தாலும் அட்ஜஸ்ட் பண்ணிக்குவேன்."

"இரு...ந்...தா...லும்..."

வாய்,தயக்கமாக முணுமுணுத்ததே தவிர, மனம் ஆர்வத்துடன் செயல்படுவதாகத் தோன்றியது, சாந்திக்கு.

துணியை வாங்கி மெஷின் மேஜையில் வைத்தாள். இழுப்பறையைத் திறந்து அளவு நாடாவை எடுத்தாள்.

"இப்படி வந்து நில்லுங்க."

அவள் தைக்கப் போகிறுள் என்பது நிச்சயமானதும், "ரொம்ப நன்றிங்க" என்று மகிழ்ச்சியுடன் வந்தான், அந்த இளைஞன்.

பாண்டுக்கு உயரத்தைத்தான் முதலில் அளவுஎடுப்பார்கள்.அப்பழக்கத்தில்சட்டையைத் தூக்கினுன், அவன்.

"ம்ஹூம்... அதெல்லாம் வேண்டாங்க" என்று வெட்கம் சிந்தும் புன்னகையுடன் சட்டையைத் தொங்கவிட்டபடியே உயரத்தை அளந்து கொண்டாள் சாந்தி. இடுப்புச் சுற்றளவை அவனேவிட்டே அளந்து பார்த்து சொல்லச் சொன்னுள்.

"இதெல்லாம் தைக்கிறவர்கள் அளவெடுத்தால்தான் சரியாய் வரும்" என்றுன், அவன்.

"சரியா, இல்லையா என்று தைத்த பிறகு சொல்லுங்களேன்" என்று அளவு நாடாவை மடிக்கத் துவங்கினுள் சாந்தி.

"தொடை அளவு எடுக்கல்லையே."

"அதான் சொன்னேனே, தைச்ச பிறகு எல்லாம் சரியாய் இருக்குமென்று..."

"ஓ... சரி... சரி..."

"எப்போது வருவீங்க?"

"தீபாவளி அன்னிக்குச் சாயந்தரம் வரட்டுமா?"

"பண்டிகையும் அதுவுமா வந்து சிரமப்பட வேண்டாம். முதல் நாளே வந்து வாங்கிப் போங்களேன்."

"ரொம்ப சந்தோஷம்."

**ம**றுநாள்.

வாய்க்காலில் குளித்தபோது அந்த வாயாடிச் சிநேகிதி கிளறினுள்.

"ஏன் சாந்தி, நேற்று டவுனிலிருந்து யாரோ ஒரு பையன் உங்க வீட்டுக்கு வந்தாராமே."

"ம்கும்... அவரொண்ணும் பையன் இல்லை" என்று செல்லக் கோபத்துடன் முறைத்தாள் சாந்தி.

"கோபிச்சுக்காதேடி,அம்மா.உனக்கேற்ற ஜோடி. ஆனுலும் பையன்னு சொல்றதிலே ஒண்ணும் குடிமுழுகிப் போயிடாது."

"எனக்கேற்ற ஜோடி..." மெய்மறந்தவளாய்த் தண்ணீரில் கோலம் வரைந்தாள் சாந்தி. "நிஜம்தான் மல்லிகா. உன்னைவிட்டால் மனம் விட்டுப் பேச எனக்கு வேறு யார் இருக்கிறுர்கள்...." ஆழ்ந்த பெருமூச்சு. ஆனந்தக் கற்பனையில் மனம் லயித்ததன் அறிகுறியாய்த் தாழ்ந்த விழிகள். சாந்தியின் நீராடும் கன்னத்தில் பரவசம் நீந்தி விளையாடிற்று.

"ம்... சொல்லு."

"நான் சொல்வதை நீ தப்பாய் நினைக்க மாட்டியே!"

"ஊஹூம்."

"நேற்று அந்த ஆள் வந்துவிட்டுப் போனதிலிருந்து மனசு முழுக்க ஆகாயத்திலே பறக்கிற மாதிரி இருக்கு. சினிமாவிலே வருமே அதுமாதிரி என்னை அந்த ஆள் காதலிக்க மாட்டாரா என்ற ஏக்கத்திலேயும், வெட்கம், நாணம், குடும்பம், இதெல்லாம் மறந்துட்டு அந்த ஆள் கூடவே சுத்தணும் போலவும் ஆசை கிடந்து துடிக்குது. பார்த்த மாத்திரத்திலேயே நான் அவரது பாதத்திலே பூஜை மலராய் உதிர்ந்துட்டேண்டி."

"அடி ஆத்தி..... ஒரே நாளைக்குள் பிரமாதமாய்க் காதல் பேசுறீயே" என்று மூக்கில் விரல் வைத்தாள் மல்லிகா.

"ஒரு நாள் என்ன, உண்மையான காதலுக்கு ஒரு வினுடி கூடப் போதுமே!"

"சரிதான், போ. பத்தாவது படித்த பெண்ணுச்சே என்று பஞ்சாயத்து யூனியனிலே உனக்குத் தையல் மெஷின் வாங்கிக் கொடுத்தார்கள்,பார்... அது தப்பு.பேசாமல் அவர்கள் உன்னைப் புலவர் கல்லூரியில் சேர்த்துவிட்டிருக்கணும்."

"கிண்டல் பண்ணுதே, மல்லி. உருப்படியாய் ஏதாவது யோசனை சொல்லு."

"அந்த ஆள் மீது இந்த அளவுக்கு நீ பித்தாகிவிட்டாய் என்பதை, அந்த ஆள் புரிந்து கொள்வது மிகவும் முக்கியம். அதுக்கு நீ

# இப்போது! நியூட்ரின் வழங்குகிறது...
# இன்ஸ்டன்ட் ஃபுட்ஸ்!

## விரும்பிக் கேட்டதுமே...



## குலாப் ஜாமூன்!



ஆம். உண்மை. இப்போது நியூட்ரின், இன்ஸ்டன்ட் குலாப் ஜாமூன்களை உங்களுக்கு வழங்குகின்றது. இன்சுவை கொழிக்கும் இனிப்புப் பண்டம், நொடிகளில் தயார்! நாவினில் நீரூறும் குலாப் ஜாமூன்களைத் தயாரித்து குடும்பத்தினரையும் நண்பர்களையும் வியப்பில் ஆழ்த்துங்கள். நியூட்ரின் இன்ஸ்டன்ட் குலாப் ஜாமூன் மிக்ஸ் உபயோகித்து, கணப்பொழுதில் தயாரித்து மகிழுங்கள்.

நியூட்ரின் இன்ஸ்டன்ட் குலாப் ஜாமூன் மிக்ஸ் 200 கிராம் மற்றும் 100 கிராம் பாக்கெட்டுகளில் கிடைக்கிறது.

நீங்கள் விரும்பும் மிருதுவான தேனூறும் குலாப் ஜாமூன்களை உங்கள் அன்றாட உணவுடன் ருசித்து ரசித்துச் சாப்பிடுங்கள்.

வாழ்வில் இனியவைகளை வழங்குவோர் நியூட்ரின்!




எங்க அம்மா பலே கைகாரி, நியூட்ரின் இன்ஸ்டன்ட் ஃபுட்ஸ்-லே தயாரிக்கிறதுலே!



**நியூட்ரின்**
**இன்ஸ்டன்ட்**
திகைப்பூட்டும் தித்திப்பு




வழங்குவோர் : இந்தியாவிலேயே மிகப்பெருமளவில் விற்பனையாகும் மிட்டாய் தயாரிப்பாளர்கள்.

# பரிசு ரூ. 200/-

## பொன்மொழிப் போட்டி — 3

**நீங்கள் போட்டியில் வெற்றி பெறுவிட்டாலும் வாழ்க்கையில் வெற்றிபெற உதவுகிற போட்டி இது.**

**இந்த இதழின் உள்பக்க மார்ஜின்களில் நான்கு பொன்மொழிகள் உள்ளன. கீழே நான்கு பெயர்கள் தரப்பட்டுள்ளன. எந்தப் பொன்மொழியை யார் கூறியது? கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்புங்கள். ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும். முக்கிய நிபந்தனை: நீங்களே உங்கள் கைப்பட பொன்மொழியை முழுதுமாய் பிழையின்றி எழுத வேண்டும். உறையின் மீது 'பொன்மொழிப் போட்டி— 3 என்று குறிப்பிடவும்.**



தாகூர்

மார்க் டுவெய்ன்

சத்யசாயிபாபா

குஷ்வந்த் சிங்

முடிவு தேதி: 4.2.1987

பெயர்: ..........................................

விலாசம்: ..........................................

..........................................

ஏதாவது ஒரு காரியம் பண்ணணும்.''

''என்னாலே அது முடியும்'' என்றாள் சாந்தி, உறுதியான தொனியில். ''அவர் என் மனத்தில் அப்படியே அச்சாகப் பதிந்து விட்டார் என்பதை நிச்சயமாய் என்னால் எடுத்துக் காட்ட முடியும்.''

''எப்படி?''

''பார்த்துக் கொண்டே இரு.''

**ஞா**யிறு சாயந்தரம்.

வயலில் நீர் தேங்கி நிற்கிறது என்று அன்றைக்குப்போலவேஇன்றைக்கும்அப்பாவும், அம்மாவும் வயலுக்குப் போய் இருந்தனர்.

சாந்தி மட்டும் தனியாக இருந்தாள்.

தட்... தட்...

அவன்தான்.

''சரியாக வந்துவிட்டீர்களே...''

''இதிலென்ன ஆச்சரியம். இங்கு வந்து போனதிலிருந்து எனக்கு உங்கள் நினைவு தானே.''

'ஜிலீர்' என அவளது நெஞ்சத்தில் ஓர் இதமான தாக்கம். 'அன்றையிலிருந்து அவருக்கும் என் நினைவுதானமே. அப்படியானால் என்னைப் போலவே அவரும் என்னை...''

''உள்ளே வாங்க...''

''தைச்சுட்டீங்களா.''

''ஓ!''

சட்டையையும், பேண்ட்டையும் எடுத்துக் கொடுத்தாள்.

அறைக்குள் போய் அணிந்து பார்க்கச் சொல்லலாமா... ஊஹூம் வேண்டாம். இங்கேயே போட்டால் இப்போதே அபிப்ராயமும் சொல்லிவிட்டுப் போய்விடுவான். மறுபடியும் இங்கு வரக் கூடிய சந்தர்ப்பம் அமையாதே....'

எனவே —

''வீட்டுக்குப் போய்ப் போட்டுப் பார்த்துவிட்டு அப்புறமாக வந்து சொல்லுங்கள்'' என்றாள் சாந்தி.

''எப்படி இருந்தால் என்ன, யூனிபாரம் தானே!'' என்று அலட்சியமாகச் சிரித்தவன், ''கூலி'' என்றான்.

''இப்போது கூலி வாங்க மாட்டேன். முதலில் வீட்டுக்குப் போய்ப் போட்டுப் பாருங்கள். எப்படி இருக்கிறது என்று வந்து சொன்ன பிறகுதான் கூலி வாங்குவேன்.''

''மறுபடியும் ஒரு பயணமா?'' என்று சிரித்தான், அவன்.

அது வெறும் சம்பிரதாயப் பேச்சாகத் தோன்றியது சாந்திக்கு. ''நீங்கள் வர முடியாவிட்டால் மணியார்டர்கூட அனுப்பலாமே'' என்று சாந்தியும் சம்பிரதாயமாகச் சிரித்தாள்.

''எப்படியோ, சமயத்தில் உதவினீர்கள். ரொம்ப நன்றி. நான் வர்றேன்.''

வெளியேறினான் அவன்.

வாசலுக்கு வந்து அவன் முதுகையே பார்த்துக் கொண்டிருந்தாள் சாந்தி.

அவன் தெருவைக் கடந்ததும், உலகமே அஸ்தமித்தது போல் இருந்தது, சாந்திக்கு.

செல்வ விநாயகர் கோயில்.

பூஜை முடித்து, சாந்தி வெளியே வந்த போது, மல்லிகா குறுக்கிட்டாள்.

"அர்ச்சனை பலமாய் இருக்கிறதே, என்ன விசேஷம்?"

"நேற்று அந்த ஆள் வந்தார்" என்று அவன் வந்து போனதை விவரித்தாள் சாந்தி.

"நீ சொல்வதைப் பார்த்தால் அவன் போக்கு காதலிக்கிற மாதிரி தோணலியே" புருவத்தைச் சுருக்கினாள் மல்லிகா.

"அது உண்டா இல்லையா என்பது இன்னும் இரண்டு மூன்று நாட்களில் தெரிஞ்சுடும் மல்லிகா."

"எப்படி?"

"என்னை அவர் ஒரு தையல்காரியாக மட்டும் நினைத்தால் மணியார்டர் வரும். காதலியாக மதித்தால் அவரே நேரில் வருவார்."

"நல்ல யூகம்தான்."

"அப்படி அவர் நேரில் வரணும் என்றுதான் சாமியிடம் வேண்டிக் கொண்டு வருகிறேன்."

"உன் ஆசை நிறைவேற நானும் வரம் கேட்கிறேன் சாந்தி."

அடுத்தடுத்த நாள்.

தபால்காரர் அந்தவீதியில்வரும்போதெல்லாம், 'எங்கள் வீட்டுக்கு வரக் கூடாது' என்று சாந்தியின் உள்ளம் அலை பாயும். அவள் ஏங்கியது போலவே, தபால்காரர் அவளிடம் வராமலேயே —

ஒரு வாரம் ஆயிற்று.

சாந்தியும் மல்லிகாவும் சாலையோர வாய்க்காலில் குளித்துக் கொண்டிருந்தார்கள்.

டவுனிலிருந்து வந்த பஸ் மருதமுத்துவின் கடை எதிரில் நின்றது.

"சாந்தி, பஸ் நிற்கிறது" என்றாள் மல்லிகா.

மார்புக்குச் சுற்றிக் கொண்டு, நீரை விட்டு எழும்பி எட்டிப் பார்த்தாள் சாந்தி.

அவள் விழிகள் மகிழ்ச்சியால் விரிந்தன. பஸ்ஸை விட்டு இறங்கிய ஒரே பிரயாணி, அந்த இளைஞன்.

"மல்லிகா நான் சொன்னது போல் அவர் நேரில் வந்துவிட்டாரடி."

"அதிர்ஷ்டசாலிதான் நீ. சீக்கிரம் பூக்கொல்லை வழியாக வீட்டுக்குப் போய்விடு" என்று விரட்டினாள் மல்லிகா.

வாங்க..."

"இப்பத்தான் குளிச்சுட்டு வர்றீங்க போலே..."

"ஆமாம். நாற்காலியிலே உட்காருங்க. ஒரு நிமிஷத்திலே வந்துடறேன்."

ஈரம் வடியும் ஆடையுடன் அறைக்குள் சென்ற சாந்தி, ஆடை மாற்றிக் கொண்டு வெளியில் வந்தாள்.

வரும்போதே ஒரு தட்டில் பழம், பட்சணம் இன்னொரு தட்டில் ஆவி மணக்கும் பசும் பால்.

"என்ன இதெல்லாம்?"



"நல்ல குடும்பக் கதைன்னு சொன்னீங்க, படம் முழுக்க ஒரே அடிதடியா இருக்குதே....?"

"இது 'டைரக்டரோட குடும்பக் கதை'ங்க. அப்படித்தான் இருக்கும்."

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா

"சாப்பிடுங்கள்."

வைத்துவிட்டு மறுபடியும் அறைக்குள் ஓடி சாமி படத்துக்கு முன்னால் நின்று கும்பிட்டாள். சாயந்தரம் கோயிலுக்குப் போய் சதுர்த் தேங்காய் உடைக்க வேண்டும் என்று எண்ணம் வர, மான்குட்டி போல் அவள் மனம் துள்ளியது.

"நான் மறுபடியும் இங்கு வருவேன் என்று கொஞ்சமும் நினைக்கவில்லை. கடைசியில் அப்பாவின் ஏற்பாட்டில்தான் இப்போது இங்கு வந்தேன்."

"சந்தோஷம். உங்கள் அப்பாவுக்கு எல்லாம் தெரியுமா?"

"சொன்னேன். நீங்கள் தைத்துக்கொடுத்த பேண்டைப் போட்டுக் காட்டினேன்."

"என்ன சொன்னார்?"

"அப்படியே அசந்து போய்விட்டார். என் அப்பா ஒரு பிசினஸ்மேன்."

"அப்படியா?"

"நொடிப் பொழுதில் ஒரு பெரிய திட்டத்தையே உருவாக்கிவிட்டார்."

"திட்டமா?" என்று வியந்தபோது அவளிடம் ஒரு கிளுகிளுப்பு. கல்யாணத் திட்டமாய்த்தான் இருக்கும்.

"உடம்பைத் தொடாமலே இத்தனை கன கச்சிதமாக கட்டிங் செய்து தைப்பதென்றால் சாமானியம் இல்லை. தொழிலில் ஆழ்ந்த சிரத்தை இருந்தால்தான் முடியும். இப்படி திறமையுள்ள பெண், குடத்தில் வைத்த விளக்காய் கிராமத்தில் இருக்கக் கூடாது" என்றார். நான் 'என்ன பண்ணலாம்?' என்றேன்.

"உங்களை கட்டிங் மாஸ்டராக நியமித்து டவுனில் பெரிய டைலரிங் ஷாப் ஆரம்பிக்கிறாராம். சம்பளம் ஆயிரம் ரூபாய். சம்மதம் கேட்டு வா' என்று அனுப்பி வைத்திருக்கிறார்."

முடித்தான் இளைஞன்.

"இதைச் சொல்லத்தான் வந்தீர்களா?" ஸ்மரணை யற்று வாய் திறந்தாள் சாந்தி.

"ஆமாம்."

அவள் பேசவில்லை.

உடம்பைத் தொட்டால்தானா, நான்தான் உங்கள் உள்ளத்தையே தொட்டுவிட்டேனே. அதனால்தானே அத்தனை கச்சிதமாகத் தைக்க முடிந்தது. அதை நீங்கள் வியாபாரமாக்கிவிட்டீர்களே...

நெஞ்சக் கதறல் சாந்தியின் கன்னத்தில் கண்ணீர்ப் பொட்டுக்களாகச் சிந்தின.

* மாணிக்கவாசகர் கட்டிய கோயில் வெளிப் பிராகாரத்தின் ஒரு தோற்றம்தான் இது.





கவிதை சொல்லும் சிற்பங்கள்

# அழிந்து வரும் அதிசயங்கள்!

'சைவம் பெரிதா? சமணம் பெரிதா?' என்று கடும் சர்ச்சையும் போரும் நிகழ்ந்து, சமணம் தோற்றுச் சைவம் மேலோங்கிய காலம். அப்போது பல சமணத் துறவிகள் உயிருக்குப் பயந்து காடுகளிலும் மலைகளிலும் ஓடி ஒளிந்து வாழ வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அப்படிப்பட்ட சமணத் துறவிகளில் பதினேழு பேர் ஒளிந்து உயிர் வாழ்ந்த இடம்தான் சித்தன்னவாசல். சரித்திரப் பழைமை வாய்ந்த அந்த இடத்துக்குப் போய்ப் பார்த்தோம்.

சித்தன்னவாசலில் இருக்கும் அந்தச் சிறு குன்றின் உச்சிச் சரிவில், அந்தக் குன்று ராட்சசன் கொஞ்சம் வாயைத் திறந்தது போல, ஓர் இயற்கையான குகை. அதன் கற்தளத்தில் கால் வைத்ததுமே ஒரு ஜில்லிப்பு. வழுவழுப்பாகச் செதுக்கப்பட்ட பதினேழு படுக்கைகள். அத்தனையிலும் படுக்கையோடு இணைந்து செதுக்கப்பட்ட தலையணைகள். உட்கார்ந்து தியானம் செய்தால், அட்டகாசம் செய்யும் ஐம்புலன்களும் அடங்கி, ஒடுங்கிச் செயலிழந்து மனம் பூஜ்ஜியமாகி விடும் அமைதி அந்தக் குகையில். சமணர்கள் பார்த்தால் சமணத் துறவிகள் நினைவுக்கு வர, பக்தி சிரத்தையோடு வணங்குவார்கள். சரித்திர ஆராய்ச்சியாளர் பார்த்தால் அந்தக் காலகட்டத்துச் சரித்திர நிகழ்ச்சிகள் மனக்கண்ணில் விரியும். பற்பல கதைகள் கூறும் அந்தக் குகையும் படுக்கைகளும்!



* சித்தன்னவாசல்: அழிந்துவிட்ட ஓவியங்கள்



* அழிந்து வரும் கற்சங்கலிகள்

ஆனால் இன்று அந்தப் படுக்கைகள் எப்படி இருக்கின்றன? அங்கு செல்லும் சுற்றுப் பயணிகள் அதை எந்த அளவுக்கு மதித்துப் பார்க்கிறார்கள் என்றால், மனத்தில் வேதனை தான் மிஞ்சுகிறது. ஆம்; அங்குள்ள ஒவ்வொரு படுக்கையிலும், 'அ. வைத்தி — B. பானுமதி (மயிலாடுதுறை), P.S. பீட்டர் — விமலா, குமார்—தனம்...' என்று ஏதோ இந்த அல்ப ஜோடிகள்தான் அந்தப் படுக்கைகளையே உபயம் செய்த மாதிரித் தங்கள் பெயர்களை அங்கங்கே கன்னாபின்னாவென்று பொறித்துவிட்டு வந்திருக்கிறார்கள். பார்க்கப் பார்க்க நெஞ்சு குமுறுகிறது.

இதுதான் இப்படியென்றால் குன்றின் மறு பக்க அடிவாரத்தில் இருக்கும் அறிவர் குகைக் கோயிலும், அங்குள்ள அர்த்த மண்டபத்தில் வரையப்பட்டிருக்கும் அஜாந்தா ஓவியத்துக்குச் சமமான வண்ண வண்ண ஓவியங்களும் எப்படியிருக்கின்றன? கி.பி. ஏழாம் நூற்றாண்டில் மகேந்திர வர்ம பல்லவனால் உருவாக்கப்பட்ட இந்தக் குகைக் கோயிலும் சரி, ஓவியங்களும் சரி, இன்று பார்த்துப் புரிந்து கொண்டு பெருமைப் படும் நிலையில் இல்லை. ஓவியங்களெல்லாம் மிக மோசமான அளவுக்குச் சிதிலமடைந்து உருமாறிப் போய்விட்டன.

இத்தனைக்கும் இவை மத்திய தொல்பொருள் ஆராய்ச்சித் துறையின் கட்டுப்பாட்டுக்குள்தான் இருக்கின்றன. 'பழைமை அப்படியே பாதுகாக்கப்பட வேண்டும்' என்ற உயரிய காரணத்துக்காகத்தான், பழைமையான இடங்களையெல்லாம், தொல்பொருள் ஆராய்ச்சித் துறை தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருகிறது. ஆனால், சித்



* சுப்ரமணிய சாஸ்திரிகள்



* புகழ் பெற்ற ஓவியங்கள் இருக்கும் சித்தன்ன வாசல் குடைவரைக் கோயில்

* கற்தூண்களில் எம்ப்ராய்டரி அதிசயங்கள்



தன்ன வாசலைப் பொருத்தவரை எல்லாமே தலைகீழாகிவிட்டது. ஒருபாதுகாப்பும் இல்லை. இந்நிலையில் இதற்கு ஒரு தொல்பொருள் ஆராய்ச்சித் துறை எதற்கு? பேசாமல் உள்ளூர்ப் பஞ்சாயத்திடம் ஒப்படைத்து விட்டுப் போக வேண்டியதுதானே!

சரி, தொல்பொருள் ஆராய்ச்சித் துறையின் கீழுள்ள சித்தன்னவாசலுக்குத்தான் இந்தக் கதி என்றால், முழுக்க முழுக்கத் திருவாவடுதுறை ஆதீனப் பொறுப்பில் இருக்கும் ஆவுடையார் கோயிலின் நிலை என்ன? அரிமர்த்தன பாண்டியன் அமைச்சரவையில் அமைச்சராக இருந்த மாணிக்கவாசகப் பெருமானே கட்டிய கோயிலாயிற்றே அது என்ற எதிர்பார்ப்போடு அங்கு சென்றோம்.

திருப்பெருந்துறை என்று மாணிக்க வாசகரால் பக்தி மணம் கமழப் பாடிய ஆவுடையார் கோயில் ஆத்மநாத சுவாமி சன்னதி தெற்குப் பார்த்திருப்பதே எங்கு



* கவிதை....

கள். அதிசயப்பட வைக்கும் சிற்ப வேலைப் பாடுகளைப் பார்த்துக் கொண்டே, சுற்றிப் பார்க்க ஆரம்பிக்கிறோம். "இங்கே பாருங் கள். இங்கே இருபத்தெட்டு நட்சத்திரங் களின் உருவங்களும் செதுக்கி வைக்கப்பட் டுள்ளது. நட்சத்திரங்கள் இருபத்தேழு தானே? இருபத்தெட்டாவது எங்கிருந்து வந்தது என்பீர்கள். ரேவதிக்கும் அசுவணிக் கும் இடையிலுள்ளதுதான் இருபத்தெட்டா வது நட்சத்திரம். அபிஜித் என்று அதற்குப் பெயர். இது எங்குமில்லாத அதிசயம்...." என்றார் அவர்.

கோயிலை வலம் வரப் புறப்பட்டோம். முதலில் தென்பட்டது அசுத்தமான திருக் குளம். வலம் வரவே தயக்கமடையச் செய் யும் அளவுக்குப் புதர்களால் மண்டிக் கிடக்கும் செடி கொடிகள். இத்தனைக்கும் சில நாட்களுக்கு முன்புதான் குன்றக்குடி அடிகளார் வந்து தமது தலைமையில் அவற்றை யெல்லாம் சுத்தப்படுத்திவிட்டுச் சென்றா ராம். கோயிலின் பின்பக்கத்திலுள்ள பெரிய கல் மண்டபத்திற்குச் சென்றோம்.

"இதுதான் கற்சங்கலி. அண்ணாந்து



* அசிங்கப்பட்டுக் கொண்டிருக்கும் சமணர் படுக்கை கள்.

பாருங்கள் தெரியும்!" என்றார் சாஸ்திரி கள்.

பார்த்தோம். சும்மா அடையாளத்திற்கு இரண்டு மூன்று கண்ணிகள்தான் இருந் தன. ஒருகாலத்தில் அவை மண்டபத்தின் மேற் கூரையிலிருந்து தரை அளவுக்கு நீண்டு தொங்கிக் கொண்டிருந்ததாகவும் இப்போது அவையெல்லாம் உடைந்து இரண்டு மூன்று கண்ணிகள் அளவுக்கு வந்துவிட்டதாகவும் சொன்னார்கள். இன்னும் சில ஆண்டுகளில் இவையும் போய்விடும் நிலைதானா? வருத்தத் தோடு சாஸ்திரிகளை விசாரித்தபோது, "பழைய ஆராய்ச்சியெல்லாம் நமக்கெதுக்கு சார்?" என்று முற்றுப் புள்ளி வைத்துவிட்டு மற்ற அதிசயங்களுக்குப் போய்விட்டார்.

"இதோ, இந்த இடத்தில் மண்டபத்தின் கூரையைப் பாருங்கள். இருபுறமும் இருந்து



* ..... சொல்லும் சிற்பங்கள்

மில்லாத ஓர் அதிசயம். கோயிலுக்குள் நுழை யும் முன்பே, குரங்காக அலையும் மனத்தைக் கட்டுப்படுத்தி, உடும்புப் பிடியாக இறைவ னின் திருப் பாத கமலங்களைப் பற்றிக் கொள்ள வேண்டும் என்ற தத்துவத்தை உணர்த்தும் குரங்கும் உடும்பும் சிற்பம்.

நாம் ஒருவித பிரமிப்போடும் பக்தியோ டும் உள்ளே நுழையும்போதே நமக்கு வழி காட்ட முன்வருகிறார் சுப்ரமணிய சாஸ்திரி

* ஆவுடையார்கோயில்: கோபுர தரிசனம்; கோடி புண்ணியம்



* எந்தச் சிற்பியாலும் செதுக்க முடியாத கொடுங்கை (Sunshade)

வரும் கற்பலகைகளுக்குப் பிடிப்பு ஏதாவது இருக்கிறதா? இல்லவே இல்லை. அப்படியே அந்தரத்தில்தொங்கிக்கொண்டிருக்கின்றன. அந்தக் காலத்திலேயே அப்படியொரு சயன்ஸ்! இந்தக் கல்தூணில் பாருங்கள் எப்படிப்பட்ட எம்ப்ராய்டரி ஓர்க்குன்னு. கல்லிலேயே இப்படிக் கவிதை வடிச்சிருக்காங்க. அப்புறம் இந்தக் கொடுங்கை (**sunshade**). மண்டபங்களைச் சுற்றி இப்படியோர் அமைப்பு. குருவாயூர்க் கோயிலில் மரத்தால் செய்திருக்கிறார்கள். ஆனால் இங்கு அத்தனையும் கல். பாருங்கள், கல்லிலேயே இன்றிருப்பது போன்ற உருண்டைக் கம்பி, முறுக்குக் கம்பி, சதுரக் கம்பி, பட்டைக் கம்பி.... என்று எப்படியெப்படியெல்லாம் செதுக்கி அதிசயம் பண்ணியிருக்கிறார்கள் என்று. அப்போதும் சரி, இப்போதும் சரி, சிற்பிகளிடம் சிற்ப வேலைப்பாடுகளுக்கான ஒப்பந்தம் போடும்போது, 'ஆவுடையார் கோயிலிலுள்ள கொடுங்கை வேலைப்பாடுகளைத் தவிர மற்ற சிற்ப வேலைப்பாடுகளைச் செய்கிறோம்' என்றுதான் சிற்பிகள் எழுதிக் கொடுப்பார்களாம்.அந்தஅளவுக்குச்சிறப்பு வாய்ந்தது இது....

"இதுதான் தல விருட்சம். குறுந்தை மரம். குறுந்தை மரத்தடியில்தான் சிவபெருமான் மாணிக்கவாசகருக்கு உபதேசம் செய்தார். அதனால்தான் தல விருட்சமாகிவிட்டது. இந்த மரத்தின் இலைகள் ஒவ்வொன்றும் மூன்று மூன்று பகுதிகளாகப் பிரிந்திருக்கிறது. மூன்றிலும் மூன்று வாசனைகள், நீங்களே பாருங்கள்....'' வழிகாட்டிய அந்த சாஸ்திரிகள் சொன்னபடி கசக்கி முகர்ந்து பார்த்தபோது, மூன்று வாசனைகள் வந்தன.

"திருவாசகம் பிறந்த தலம் இதுதான். அதனால்தான் இங்கே சுவாமிக்கு விழா வேதும் எடுப்பதில்லை. ஆனித் திருமஞ்சனத்திலும்மார்கழித்திருவாதிரையிலும்மாணிக்கவாசகருக்கே விழா எடுக்கப்படுகிறது. இதுவும் ஓர் அதிசயம். இப்படிப் பல அதிசயங்கள்! 'விழாவை ஆண்டுதோறும் மிகச் சிறப்பாகக் கொண்டாட அருள்புரிகிறார் திருவாவடுதுறை ஆதீனத்தின் 23—வது மகா சன்னிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்' என்று கட்டாயம் நீங்கள் எழுத வேண்டும்!'' என்று திரும்பத் திரும்பக் கேட்டுக் கொண்டார் சாஸ்திரிகள்.

நாங்கள் சென்றிருந்தபோதும் மார்கழித் திருவாதிரை விழா மிகச் சிறப்பாகத்தான் நடந்து கொண்டிருந்தது. அது பற்றியெல்லாம் நமக்கும் கருத்து வேறுபாடே இல்லை. ஆனால், மாணிக்கவாசகப் பெருமானே கட்டிய — உலகமே வியந்து பார்த்துப் பிரமிக்கும் பல்வேறு, அதிசயங்களை உள்ளடக்கிக் கொண்டிருக்கிற அந்தக் கோயிலின் பராமரிப்பும் பாதுகாப்பும் ஏன் இப்படிக் கைவிடப்பட்டிருக்கின்றன? படிப்படியாகச் சிதிலமடைந்துவிடாமல் அந்த அதிசயக் கோயிலைக் காப்பாற்றுங்கள், ப்ளீஸ்!

— இளங்கோவன்

# விடியல் கூட விலகிப் போய்விடுகிறது

## புதுக்கவிதைப் போட்டி — 5

கடந்த 7.12.86 இதழில் வெளியான 'காத்திருக்கிறார்கள்' கதைக்குப் பொருத்தமாக எழுதப்பட்ட கவிதைகள்:

### முதல் பரிசுக் கவிதை:

அநியாய வல்லூறுகளைப்
பொசுக்க வேண்டிய
தோட்டாக்கள்
அப்பாவிக் கொக்குகளைப்
பதம் பார்ப்பதேன்?
வெளிச்சத்துக்கு வழி கூறாமல்
இவர்கள் இருட்டுக்குத்
தாலாட்டுப் பாடுவதால்
விடியல்கூட
விலகிப் போய்விடுகிறது.

— ப. அப்துல் ராசிக்,
பி.எஸ்ஸி வேதியியல் (இரண்டாமாண்டு),
தெ.தி. இந்துக் கல்லூரி,
நாகர் கோயில், குமரி மாவட்டம்.

### இரண்டாம் பரிசுக் கவிதை:

இவர்கள்
குற்றவாளிகளை
அடையாளம் காட்டாமல்
சத்தியத்திற்கு அல்லவா
சமாதி கட்டுகிறார்கள்!
சட்டம்,
அதிகாரத்தைக் கண்டவுடன்
நிறம் மாறிப் போகிறதா?
இவர்கள் காத்திருப்பது
குற்றவாளிகளுக்கு அல்ல
உயர்
அதிகாரத்திற்கு
மரியாதை செய்ய!

— தி. கோவிந்தராசு,
II BGL,
டாக்டர் அம்பேத்கார் அரசு சட்டக் கல்லூரி,
புதுச்சேரி—1.

இரவுக்காக நிலவும்
இலவுக்காகக் கிளியும்
காத்திருத்தல் நியதியென்று
கவிஞன் சொன்ன பொய்!
இங்கே இளிச்சவாயர்களுக்காக
ஏய்ப்பவர் காத்திருப்பதே வாடிக்கை!
இது —
இயற்கை நியதி அல்ல
இரைப்பையின் நியதி!

— A. உமாபதி,
எம்.எஸ்ஸி (கணிதம்), இரண்டாமாண்டு,
அரசினர் ஆண்கள் கலைக் கல்லூரி,
சேலம்—636 007



காத்திருக்கிறார்கள் —
காக்கி உடையில் மட்டுமல்ல
எண்ணம் எடுத்துரைக்காத
வண்ணங்கள் பலவாய்க்
காத்திருக்கிறார்கள் —
சிக்கும் எலிகளுக்குச்
சமாதிப் பொறியாய்
மட்டுமல்ல — தாங்கள்
இடறியபின் சீறும்
புலிகளுக்குச்
சாமரம் வீசவும்
சளைக்காத கைகளுடன்
காத்திருக்கிறார்கள்!

— 'கவியார்வன்' (சி. மணிவண்ணன்),
சி. கந்தசாமி நாயுடு ஆண்கள் கல்லூரி,
அண்ணாநகர், சென்னை—600 102.




# அது ஒரு தொடர் கதை...

அதன் சட்டதிட்டங்கள், ஒழுங்கு முறைகள், வேலை நேரங்கள் என்று எல்லாமே சுமார் இருபத்தேழு பிரிவுகள் கொண்ட நிலையான ஆணை என்று தமிழிலும், ஸ்டாண்டிங் ஆர்டர் என்று ஆங்கிலத்திலுமாக அச்சடிக்கப்பட்டவைதான்.

யார் மீதாவது ஒழுங்கு நடவடிக்கை எடுக்க வேண்டுமென்றால் நிலையான ஆணையின் கீழ் நடத்தை நெறி என்கிற உட்பிரிவில் வரும். ஒரு பிரிவின் அடிப்படையில் நடவடிக்கை எடுக்க, சம்பந்தப்பட்ட அதிகாரிக்குப் பூரண அதிகாரமளிக்கிறது அது.

குறிப்பாகப் பத்தொன்பதாவது ஷரத்தில் உட்பிரிவு எட்டு அலுவலகத்திற்குள் மது பானம் அருந்தி வருவதை ஒழுங்கீனமாகச் சொல்கிறது.

இது சீனிக்குத் தெரியும். அவன் ஒரு பட்டதாரி. நேர்முகத் தேர்வின் மூலம் அந்த அரசுத் துறை அலுவலகத்தில் பணிக்குச் சேர்ந்தான்.

ஓர் அரசாங்க உத்தியோகம் என்கிற தகுதி. கல்யாணச் சந்தையில் அவன் மதிப்பு உயர்ந்தபோது, பணக்கார இடத்திலிருந்து பெண் வந்தது. அப்பொழுதே சீனியைப் பற்றி ஒரு குறைபாடு பேசப்பட்டது.

'தண்ணி போடுவான்னு பேசிக்கறுனுவ. மத்தபடி பையன் நல்லாத்தான் இருக்கான்' — என்றபோது,

'இன்னைக்கு ஆருதான் குடிக்கறதில்லை? எல்லாருந்தா குடிக்கறுங்க.... என் பாட்டன் குடிச்சான். எங்கப்பன் குடிகாரன்.... அத்தவுடு. எல்லாம் சரியாப் போய்டும். நாகூடத் தான்....'

குடி ஒரு பெரிய சமூகக் குற்றமல்ல என்று நினைக்கிற சமூகக் கட்டமைப்புக்குள் வாலிபனை சீனியின் குடிப்பழக்கம் என்கிற குற்றம் மன்னிக்கப்பட்டு, பெண் கொடுக்கப்பட்டு விட்டது.

காலை பத்தரை மணி. விடுப்பில் சென்றவர்கள் போக மற்ற அனைத்து ஊழியர்களும் தங்கள் ஆசனத்தில் இருந்தனர்.

வருகைப் பதிவேடு தலைமை அதிகாரியின் அறைக்குப் போக வேண்டிய நேரம்.

சீனியைக் காணவில்லை. அவன் இன்னும் வரவில்லை. அவன் வராததற்கான காரணம் தெரியவில்லை.

மணி பதினொன்றாகிவிட்டது. பன்னிரெண்டு மணி சுமாருக்கு, அந்தச் சிறிய அறை முழுவதும் ஏதோ ஓர் அழுகிப் போன பழத்தின் நெடி சூழத் தள்ளாடிக் கொண்டே, கண்கள் சிவக்க, நாக்கினால் உதட்டை அடிக்கடி ஈரப்படுத்திக் கொண்டு சீனி உள்ளே நுழைந்தான்.

மேஜை மேஜையாக வருகைப் பதிவேட்டைத் தேடினான். யாரும் அவனிடம் ஒன்றும் பேசவில்லை.

பேனாவைத் திருப்பிப் பிடித்துக் கொண்டு தலைமை அதிகாரியின் அறைக்குள் நுழைந்தான்.

''இப்பத்தான் வரீரா?''

''ஆமாம் சார்.''

''மணி என்ன ஆவுது பார்த்தீரா?''

''பன்னண்டாவப் போவுது.''

''பத்தரை மணி ஆபீசுக்கு பன்னிரண்டு மணிக்கு வரீரே! இந்த அலுவலகத்தில் நீர் ஒரு தேர்வு நிலை உதவியாளர் வேறே. ஓங்களுக்கெல்லாம்....'' அவர் மேலும் ஏதோ சொல்ல வந்தார்; நிறுத்திக் கொண்டுவிட்டார்.

காரணம், அந்தக் குடிகார உதவியாளருக்கு அந்த அலுவலகத்தில் அதிகச் செல்வாக்கு உண்டு. பல்வேறு காரணங்களினாலும், பல்வேறு சூழ்நிலைகளினாலும் அங்கே ஓர் ஒற்றுமையுணர்வு நிலவியது; தவறை, தவறு என்று எடுத்துச் சொல்லப் பயப்படும் சூழ்நிலை, ரொம்ப நாட்களாகவே நிலவுகிறது.

'உனக்கெல்லாம் போய் இந்த மாதிரி பொறுப்புள்ள உத்தியோகத்தைக் கொடுக்கிறவன்களைச் சொல்லணும்...' என்று சொல்ல வந்தவர்தான் பாதியில் நிறுத்திவிட்டார். ஏற்கெனவே ஒருமுறை இப்படிச் சொல்லப் போய் அதையே ஒரு பெரிய விஷயமாக அலுவலகம் முழுவதும் பரப்பி அவரைச் சங்கடப்படுத்திய நிகழ்ச்சி நினைவுக்கு வந்துவிட்டது.

''சீனி நீர் செய்யறது நல்லாவே இல்லைய்யா! கிட்டத்தட்ட ஆயிரத்து இரு நூறு ரூபா சம்பளம் வாங்கறீர். ஒரு தேர்வு நிலை உதவியாளர் வேறே. தினம் இப்படிக் குடிச்சுப்புட்டு பதினொரு மணிக்கும், பன்னிரண்டு மணிக்கும் வரீர். கேட்டா ஏதேனும் நொண்டிச் சமாதானம் பேசறீர். நீராவும் திருந்த மாட்டீர், மத்தவங்க சொன்னாலும் கேட்க மாட்டீர். ஒம்மப் பத்தி ஒரு வரி எழுதினாப் போறும். பெரிய அதிகாரி உம் மேலே கடுமையான நடவடிக்கை எடுத்துடு

வாரு. என் கையால அந்தச் செய்ய வேணும்னு பார்க்கறேன். அதோட அந்தப் பொண்ணைப் பார்த்தாக் கஷ்டமா இருக்குது. ஒம்ம நம்பி ஒம்ம கட்டிக்கிட்ட அந்தப் பொண்ணை நினைக்கறபோது.... போம்... வேலையப் பாரும். நிக்கக் கூட முடியாம அப்படிப் போட்டுட்டு வந்திருக்கீர். தலை நிக்க மாட்டேங்குது....''

கணக்கு அதிகாரி சிவசுப்ரமணியம் கண்ணாடிக்குள் இருக்கும் சின்ன விழி மேட்டில்புருவத்தைப்பலமுறைஏற்றி இறக்கி விட்டுக் கொண்டார்.

சில சமயம் அவனுடைய அப்பாவித் தனத்தின் பேரிலும், பல சமயம் அவனை நம்பிக்கழுத்தைநீட்டிவிட்ட அப்பெண்ணின் பேரிலும் ஏற்படும் இரக்க உணர்வு காரண மாகவே அவன் அவ்வப்பொழுது மன்னிக்கப்பட்டான்.

**மீ**ண்டும் ஒரு வாரமாக சீனி அலுவல கம் வரவில்லை. அவனிடமிருந்து விடுப்புக் கான விண்ணப்பமும் இல்லை.

ஒரு வாரம் சென்றபின் கையில் ஒரு லீவு லெட்டருடன் உள்ளே நுழைந்தவனைப் பார்த்து எரிச்சலடைந்தார் அதிகாரி சிவ சுப்ரமணியம்.

அவரிடம், தான் ஒரு வாரம் வராததற் கான லீவு லெட்டரை நீட்டினன்.

'திடீரென்று உடல்நலம் சரியில்லாமல் போய்விட்டதால் எனக்கு ஏழு நாட்கள் ஈட்டியவிடுப்பு அளிக்குமாறுகேட்டுக்கொள் கிறேன்...' என்று பின் தேதியிட்ட கடிதத்தை வாங்கி மேஜைமேல் வைத்துவிட்டு,

''உமக்கெல்லாம் எதுக்கய்யா உத்தி யோகம்! ஏதாவது அறிவு இருந்துதான் இப்படிச் செய்யறீரா? போய்யா அப்பாலே...



நாத்தம் சகிக்கல....''

''இல்ல சார், நெஜம்மாவே உடம்பு சரி யில்லே. ஆஸ்பத்திரியிலே போய்ப் படுத்துக் கிட்டேன்.''

''நீ எங்கே வேணு நாசமாப் போ.... லீவு லெட்டரைக் கொடுத்துட்டுப் போகலா மில்லே!''

''பெரியசாமிகிட்டே சொல்லி அனுப்பி னேன் சார்.''

''அவன் ஒரு குடிகாரன். அவனையும் ஒரு வாரமா ஆபீஸ் பக்கமே காணும். ஒங்க ரெண்டு பேரையும் தொலைச்சுத் தலை முழு கிணுத்தான் இந்த ஆபீஸ் உருப்படும்...''

சீனி தலையைச் சொறிந்து கொண்டே வெளியே வந்தான்.

**ஊ**ழியர்களுக்கான நடத்தை நெறி, மற்றும் நடத்தைக்கான தண்டனை ஆகியவற் றைக் கவனிக்கும் பிரிவு உதவியாளர் அங்க முத்துவை உள்ளே அழைத்தார் அதிகாரி.

''இந்தச் சீனி இப்படிக் குடிச்சுப்புட்டு அலுவலக விதிமுறைகளை மீறிக்கிட்டே இருக் காரே, இவர் மேலே ஏதாவது ஒழுங்கு நட வடிக்கை எடுக்க முடியுமா? நம்ப நடைமுறை சட்டம் என்ன சொல்லுது? வேலையை விட் டுத் தற்காலிகமா நீக்க முடியுமா?''

''நடத்தை நெறி பத்தொன்பதின்படி இது ஒழுங்கீன நடவடிக்கைப் பிரிவிலே வரு துங்க. முதலில் காரணம் கேட்டு 'மெமோ' கொடுக்கணும். அதற்கு, அவர் விளக்கம் திருப்தியளிக்கவில்லை என்ருல் மேல் நட வடிக்கையைத் தொடரலாம்.''



"நீர் சொல்லிட்டீர். ஒழுங்கு நடவடிக்கை வந்தா அநியாயமா மாட்டிப்பார். இப்ப நிர்வாகம் இருக்கிற நிலையிலே உடனே சீனியை சஸ்பெண்ட் பண்ணுன்னு தலைமை அலுவலகத்திலிருந்தும் நமக்கு உத்தரவு கிடைச்சுடும்.... பாவம்.... வீணா அவதிப்படுவார்... அதை நினைச்சாத்தான் கஷ்டமா இருக்குது. அதோட நான் இன்னும் ரெண்டு மாசத்திலே ரிடையர் ஆகப் போறேன். போற நேரத்திலே இந்த ஆளைக் கெடுத்தேன் என்கிற கெட்ட பெயரோட போகணுமா? எப்படியோ கெட்டுக் குட்டிச்சுவராப் போவட்டும். அவனைக் கெடுக்கற வேலையை இந்தக் கையிலே நான் செய்ய மாட்டேன்"

சீனி பின் தேதியிட்டுக் கொடுத்த விடுப்புக்கான விண்ணப்பத்தை ஏற்றுக் கொண்டதற்கு அடையாளமாக அதில் கையெழுத்திட்டு அங்கமுத்துவிடம் கொடுத்தார்!

**இ**ரண்டு மாதங்களில் சிவசுப்ரமணியம் ஓய்வு பெற்றுச் சென்றுவிட்டார். அவருக்குப் பதில் புதிதாக மற்றொரு அதிகாரி பொறுப்பேற்றுக் கொண்டார்.

முன்பிருந்த அதிகாரிகளைவிட இவர் சற்றுக் கடுமையாக இருந்தார். அலுவலக விதிமுறைகளைத் தீவிரமாகப் பற்றி நின்றார். வேலை நேரம், ஓய்வு நேரம், ஊழியர்கள் வெளியே செல்லும் நேரம் எல்லா இடத்திலும் அவருடைய கண்காணிப்பு அழுத்தமாக இருந்தது.

எனவே, முன்பிருந்த இலகுத் தன்மை முற்றிலுமாக அகன்று ஒரு ரிஜிடிடி தெரிந்தது.

**வ**ருகைப் பதிவேட்டைக் கையில் வைத்துக் கொண்டு தன் நேர்முக உதவியாளரை அழைத்தார் புதிய அதிகாரி.

"சீனி ஒரு வாரமாக எவ்வித அறிவிப்புமின்றி வேலைக்கு வராமல் இருக்கிறாரே! என்ன நடவடிக்கை எடுக்கப் போறீங்க...?"

ஊழியர்களின் நடத்தை நெறி, வருகைப் பதிவு, மற்றும் விடுப்பில் செல்லும் பகுதிகளைக் கவனிக்கும் உதவியாளர் அங்கமுத்து மௌனமாக நின்றார்.

"நான் வந்த நாளாகக் கவனிக்கிறேன். இவர் இது மாதிரி ரெண்டு மூணு தரம் லீவு லெட்டரோ, முன் அறிவிப்போ இல்லாமல் லீவு எடுத்திருக்கிறார். பிறகு வந்து எழுதிக் கொடுத்துவிட்டு ஏதோ சமாதானம் சொன்னார்.

"அவருக்கு உடனே முன் அறிவிப்பும், விடுப்புக்கான அனுமதியும் இல்லாமல் இருப்பதற்கான காரணம் கேட்டுக் கடிதம் எழுதிக் கொண்டாங்க. மெமோவை இன்னிக்கே பதிவுத்தபாலில் அனுப்பணும். இதை என்ன ஆபீஸ் என்று நினைத்தாரா, இல்லை மளிகைக் கடையென்று நினைத்தாரா?"

சீனியின் பூர்வோத்திரம் பற்றி மெதுவாக விவரித்தார் அங்கமுத்து.

சீனியைப் பற்றி ஓரளவு அவருக்குத் தெரிந்திருந்தது. வேலையில் அப்படி இப்படி என்றால் கூடப் பரவாயில்லை. ஆனால் ஒழுங்கீனங்களை அவரால் சகித்துக் கொள்ள முடியவில்லை.

"இதற்கு முன்பிருந்தவர்கள் இப்படிப்பட்ட ஒரு நபரை வளர்த்து வைத்துவிட்டுப் போயிருக்கிறார்கள். வாங்குகிற சம்பளத்துக்கு மனச்சாட்சிக்கு விரோதமில்லாம வேலை செய்ய வேண்டும். இரக்கப்பட்டு, இரக்கப்பட்டு இப்படியொரு உதவாக்கரைக்கு ஊக்கம் தரவே கூடாது. ஏதேனும் ஓரிடத்தில் இப்படிப்பட்டவர்களின் நடவடிக்கைகளை நிறுத்தியாக வேண்டும். யாரும் சரியான தண்டனை கொடுக்காமல் விட விடத்தான் சீனி போன்றவர்களின் இந்த மாதிரி நடவடிக்கைகளை பிற்பாடு கட்டுப்படுத்த முடியாமலே போய்விடுகிறது..."

புதிய கணக்கு அதிகாரி இதுவரை யாரும் பேசாத அளவு நியாய அநியாயம் பற்றி ஒரு பிரசங்கமே செய்துவிட்டார். அவர் அறைக்கு வெளியே மற்ற ஊழியர்கள் குழுமி நின்று அவர் உள்ளே அங்கமுத்துவிடம் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தனர். மேலும் தொடர்ந்தார் அவர்....

"சரி.... ஒரு ட்ராப்ட் போடுங்க. அவர் இந்த வருஷம் எத்தனை முறை விடுப்பில் போயிருக்கிறார். விடுப்பு அனுமதியில்லாம எத்தனை நாட்கள் சென்றிருக்கிறார் — அன் ஆத்தரைஸ்டு ஆப்ஸண்ட் எத்தனை முறை ஏற்பட்டிருக்கு — இவை அத்தனையும் அடங்குகிற மாதிரி ட்ராப்ட் எழுதி எனக்கு வையுங்க. நான் நாளை என் விருப்ப மாறுதல் விஷயமாகச் சென்னை போகிறேன். வருவதற்கு ஒரு வாரமாகலாம். வந்தவுடனே சீனியின் அந்தக் கடிதாசை மேலிடத்துக்கு அனுப்பி மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கலாம்.... யாரும் செய்யாவிட்டால் பரவாயில்லை. நான் செய்கிறேன்."

அங்கமுத்து வெளியே வந்தார். தன் னிடத்திற்கு வந்தவுடனேயே, சீனிக்காக ஏற்கெனவே தயாராகிவிட்ட அவருடைய தனி கோப்பை எடுத்து வைத்துக் கொண்டார்.

விரிவான அறிக்கையொன்று எழுத வாரம்பித்தார்.

சீனி இதோட தீர்ந்தான். இந்த அதிகாரியுடன் அவன் கணக்கு முடிந்துவிடப் போகிறது என்றுதான் எல்லோரும் பேசிக் கொண்டார்கள்.

**செ**ன்னை சென்ற அதிகாரி திரும்பி விட்டார்.

அவனைப் பற்றிய விரிவான 'ட்ராப்ட்' லெட்டர் மேஜை மேலிருந்தது. வந்தவுடன் அதைப் படித்தார். சில இடங்களில் சில சில்லறைத் திருத்தங்கள் செய்து அதைக் கையெழுத்திட்டு டைப்புக்கு அனுப்பி விட்டார்.

அது டைப்பாகி மூன்று நகலுடன் அவர் மேஜைக்கு அன்று மாலையே வந்துவிட்டது.

அங்கமுத்து அதிகாரியின் அறைக்குள் நுழைந்தார்.

அதிகாரி தன் மாறுதல் விஷயமாகச் சென்னை சென்ற செய்திகளை விவரித்து

** நான் என்ற மமதை மிக்க ஆங்கிலச் சொல் I. அதனை அடிப்பது போல் குறுக்குக் கோடு போட்டால் சிலுவைக் குறியாகிவிடும். மமதையை அடித்து விரட்டினால் கடவுள் தன்மையை அடையலாம்.

“போர்க் களத்தில் சண்டை போடும் நமது யானைகள், குதிரைகள், கழுத்தி லெல்லாம் என்னவோ அட்டையில் எழுதித் தொங்கவிட்டிருக்கே, என்ன அது?”

“இதெல்லாம் மதுரை மாறவர்மன் நமது மன்னருக்கு அளித்த நிதி உதவி யில் வாங்கியதாம்!”

— கரடிகுளம் ஜெயபாபாரதிப்ரியா



விட்டு, மேஜை மேல் தன் கையெழுத்திற்காகக் காத்திருக்கும் சீனியைப் பற்றிய கடிதத்திற்கு வந்தார்.

இன்னும் அவர் அதில் கையெழுத்திடவில்லை. இரண்டு முறை கையெழுத்துப் போடப் போனவர் நிறுத்திக் கொண்டார். அவற்றை மடித்து வைத்துவிட்டு, மேலும் அங்கமுத்துவிடம் பேசினர்.

சீனி எவ்வித விடுப்பு விண்ணப்பமும் தராமல் இரண்டு நாட்களாக அலுவலகம் வரவில்லை என்பதைக் கேள்விப்பட்டபோது அவருக்குச் சங்கடமாக இருந்தது.

“நாளைக்குநம்பபழனிச்சாமியை அனுப்பி அவரை அழைத்துக் கொண்டு வரச் சொல்லுங்கள். இதை ரெண்டு நிமிஷத்திலே கையெழுத்துப் போட்டு உடனே டெஸ்பாச்சுக்கு அனுப்பிடலாம். ஆனா அநியாயமா வேலைக்கு ஆபத்து வந்துவிடும். ஓர் ஏழையின் வாழ்க்கையைக் கெடுக்க மனசு வர மாட்டேங்குது. நாளைக்கு அவரோட, நான் பேசிப் பார்க்கறேன். ஒண்ணும் சரிப்பட்டு வரலேன்னா, நாளைக்கே கையெழுத்துப் போட்டு அனுப்பிடலாம்.”

அங்கமுத்து வெளியே வந்தார். அனேகமாக நாளையுடன் சீனி விவகாரம் முடிவுக்கு வந்துவிடும்.

மேலும் இரண்டு மூன்று நாட்கள் அதே நிலைதான் நீடித்தது. பிறகு, ஒருநாள் ஏதோ முடிவுடனேயே வந்திருந்தார் அதிகாரி.

வந்தவுடனேயே கையெழுத்துப் போட வேண்டிய பேப்பர்களுக்குக் கையெழுத்துப் போட்டார். கூடுமானவரை கோப்புகளைத் துரிதமாக முடித்தார்.

சீனியின் மெமோ அவர் கண்ணில் படுகிற மாதிரி இருந்தது.

அன்றும் சீனி அலுவலகம் வரவேயில்லை.

கடிதத்தை எடுத்து அதில் கையெழுத்திட முனைந்தபோது, பழனிச்சாமி அன்றைய தபால்களைக் கொண்டு வந்து மேஜை மேல் வைத்தார்.

அன்றைய தபாலில் அவர் எதிர்பார்த்த அந்தத் தபால் வந்துவிட்டது. அவர் சென்னை சென்று ஏற்பாடு செய்துவிட்டு வந்த தன் விருப்ப மாறுதல் கேட்டிருந்த இடம் கிடைத்து விட்டது.

செய்தி அலுவலகம் பூராவும் பரவிய போது உதவியாளர்கள், மற்றும் கடைநிலை உதவியாளர்கள் ஒவ்வொருவராக வந்து அவரிடம் மகிழ்ச்சி தெரிவித்து விட்டுப் போனார்கள்.

சீனியைப் பற்றிய கடிதம் மேஜை மேல் அப்படியே இருந்தது.

உடனடியாகப் பொறுப்புகளை அவர் அந்தஸ்தில் உள்ள மற்றொருவரிடம் ஒப்படைத்துவிட்டுப் போகும்படி உத்தரவு வந்திருந்ததால் உடனே தம் பணியிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ளத் தயாராகி விட்டார்.

அன்றிரவே அவர் புறப்பட வேண்டியிருந்ததால் அவசரமாக ஏற்பாடு செய்யப்பட்ட பிரிவு உபசார விழாவில் எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டிருந்தார்.

“வருஷக் கணக்கில், இங்கே இருந்த அதிகாரிகள் சீனியை இப்படி வளர்த்து வைத்து விட்டுப் போயிருக்கிறார்கள். நான் ஆறு மாத காலம் கூட இங்கே இல்லை. நான் இதில் கையெழுத்துப் போட்டு இதை மேலிடத்துக்கு அனுப்பிவிட்டால் அவருடைய எதிர்காலம் முழுமையாக நாசமாகிவிடும்.

“ஓர் ஆறு மாத காலம் உங்கள் எல்லோருடைய ஒத்துழைப்புடன் என் வேலையை நான் சரியாகச் செய்து முடித்திருக்கிறேன். போகிற இடத்திலெல்லாம் நான் சற்றுக் கடுமையானவன் என்ற பெயர் எடுத்திருக்கிறேன். வாஸ்தவம்தான். ஆனால் யாருடைய வாழ்க்கையையும் பாழடிக்கவில்லை. அம்மாதிரி நடவடிக்கைகளை நான் செய்யவில்லை.

“அதே மனிதாபிமான அடிப்படையில் தான் இன்றும் இங்கிருந்து உங்கள் எல்லோரிடத்திலும் விடை பெற்றுப் போகிறேன். சீனி செய்கிற ஒழுங்கீனங்களைவிட, இவர் வந்தார் அநியாயமாக அவரை வீட்டுக்கு அனுப்பிவிட்டார் என்று நான் போன பின்பு பேசுவார்கள். மாறுதலாகி வேறு இடத்துக்குப் போகும்போது இந்தக் காரியத்தைச் செய்ய எனக்கு இஷ்டமில்லை.”

கையெழுத்துப் போடாத அந்த மெமோவை அங்கமுத்துவிடமே திருப்பிக் கொடுத்தார்.

அவர் எல்லோரிடமும் விடை பெற்று வெளியேறிக் கொண்டிருந்தபோது, சீனி குடித்துவிட்டு உள்ளே நுழைந்து கொண்டிருந்தான்.

இதுநாள்வரை அலுவலகம் வராததற்கான காரணத்திற்கு பின் தேதியிட்ட விடுப்பு விண்ணப்பமொன்று அவன் கையில் இருந்தது!

** ஓட்டுப் போடாத நல்ல குடிமக்களால் மோசமான அரசியல்வாதிகள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்.

# எப்படியெல்லாம்

ஐந்நூறு அடி ஆழக் குழாய் போட்டும் தண்ணீர் கிடைக்காத இடங்கள் உண்டு. சில இடங்களில் பத்தடியில் தண்ணீர் கிடைக்கும்; ஆனால் வாயில் வைக்க முடியாது. இன்னும் சில இடங்களில் தண்ணீர் வெகு ஆழத்திலிருக்கும்; மேலே கொண்டு வந்து தேக்கி வைத்து வினியோகிக்க டாங்க் இருக்காது. சில இடங்களில் டாங்க் இருந்தாலும் ஓட்டையாய் இருக்கும்—உபயோகமில்லாமல். பல இடங்களில் தண்ணீரும் இருந்து டாங்கும் சரியாக இருந்தால் மோட்டார் சரியாக இருக்காது; அடிக்கடி ரிப்பேராகும்.

* போதும் பொண்ணு



இப்படிப்பட்ட பல நூறு கிராமங்களில் இப்போது நாம் சொல்லப் போவது, வேள்வரை என்னும் கிராமம் பற்றியது. ஆவுடையார் கோயிலிலிருந்து பத்து கி.மீ. தூரத்தில் உள்ளது இந்தக் கிராமம். ஊரை ஒட்டி தொழுவனூர் ஆறு என்று ஓர் ஆறு. (வெறும் மணற் பரப்பு?) அதில் ஒரு கிணறு வெட்டினார்கள். வற்றாத தண்ணீர் (சுவையோ அமிர்தம்!) அரை கி.மீ. தூரத்தில் ஒரு மேல்நிலைத் தொட்டி கட்டினார்கள். மக்கள் முகத்தில் சந்தோஷத்துளிகள்; மோட்டார் போட்டதும் தண்ணீர் மேல்நிலைத் தொட்டிக்கு வந்து கிராமத்தில் குழாய் மூலம் வினியோகிக்கப்படும் என்ற சந்தோஷம்! அதுபோலவே சில தினங்கள் தண்ணீர் வரத்தான் செய்தது. பிறகு ஒருநாள் திடீரென்று வரவில்லை. என்னவென்று கேட்டபோது, 'மோட்டார் ரிப்பேர்... ரிப்பேர்.... ரிப்பேர்.....?



* சீனிவாசன்.

இப்படிப் பத்து வருடங்கள் ஓடிவிட்டன; இன்னும் ரிப்பேர் தான். காரணம், "அது 1.5 குதிரை சக்தி கொண்ட மோட்டார். மேல்நிலைத் தொட்டிக்கும் கிணற்றுக்கும் தூரம் அதிகமாக இருப்பதால் போதிய விசையுடன் அது இயங்க முடியாமல் அடிக்கடி ரிப்பேர். பிறகு நிரந்தரமாகவே ரிப்பேர். ஆக தேவை ஐந்து குதிரை சக்தி கொண்ட மோட்டார். கலெக்டரிலிருந்து கடைநிலை ஊழியர்கள் வரை பார்த்தவர்களிடமெல்லாம் புகார் சொல்லிப் பார்த்தாகிவிட்டது. பேப்பர்தான் வேஸ்ட்!'' என்றார் சீனிவாசன்.

தற்சமயம் அங்கே ஊராட்சித் தலைவர் சுலோசனா என்ற பெண்மணி. (பரம்பரை பரம்பரையாக இவர்கள் குடும்பத்திலிருந்துதான் ஊராட்சித்தலைவர் தேர்ந்தெடுக்கப்படுகிறாராம்.) சந்தித்துக் கேட்டோம்.

"என்னங்க... பிரச்னையைத் தீர்க்க என்ன செய்யப் போறீங்க?''

"யூனியன்லே சொல்லியிருக்கேங்க. சீக்கிரமா அதிக சக்தி கொண்ட மோட்டார் வாங்கி மூணு ஃபேஸ் கனெக்ஷன் கிடைச்சுடுமுங்க....' என்றார்.

இந்தத் தண்ணீர்ப் பிரச்னையால் சிறுவர் சிறுமியர் அனைவரும் அரசாங்க உணவை மையங்களிலேயே சாப்பிடாமல் வீட்டிற்குக் கொண்டு போய்ச் சாப்பிடும் அவலம். (கொட்டை கொட்டையான அந்தச் சாதம் இன்னும் கண்ணில் நிற்கிறது.)

ஊரிலிருந்து நகர்ந்து ஹரிஜனக்காலனிக்கு வந்தோம். முனியம்மா, முத்துலட்சுமி, காளியம்மா, மஞ்சுளா, போதும் பொண்ணு, கருப்பாயி என்று பெண்கள் பலரும் எங்களைச் சூழ்ந்து கொண்டார்கள்.

"மூடக் கூட முடியாதபடிக்குத் திறந்த படியா ஒரு குழாய் போட்டாங்க. தண்ணியே வரலைங்க...'' — இது போதும் பொண்ணு.

"இதப் பாருங்க, இந்தக் காலனிலே இருக்கறது ஒரே விளக்கு. அதுவும் எரியறதில்லை. ரிப்பேர் செய்ய வரும் லைன்மேனுக்குப் பணம் வெட்டினால்தான் செய்வேங்கிறார்...'' இது கறுப்பாயி.

"இருந்த ஒரே நகையான தோட்டை அடகு வைச்சு 2000 ரூபாய் கொடுத்தேங்க. பாவிப் பயலுக எப்படிக் கட்டிக் கொடுத்திருக்காங்க... பார்த்தீங்களா?'' — காளியம்மா.



* முனியம்மா

# எந்த விதத்திலே நியாயம்?

இரவெல்லாம் ஜுரம் அடித்ததால், சோர்ந்து போயிருந்தான் குழந்தை. அவனைத் தோளில் போட்டபடி அரசு மருத்துவமனை க்யூவில் கால்கடுக்க ஒரு மணி நேரத்திற்கும் மேலாக நின்ற பிறகுதான் டாக்டரின் அருகில் செல்ல முடிந்தது சங்கரனுக்கு. டாக்டர், என்னவென்று மட்டுமே விசாரித்துவிட்டு, ஸ்டெதஸ்கோப்பைக்கூட வைத்துக் குழந்தையைச் சோதித்துப் பார்க்காமல், அவசர அவசரமாகத் துண்டுச் சீட்டில் எதையோ எழுதி, சங்கரனிடம் நீட்டியவாறே "நீங்க என்னோட கிளினிக்கிற்கு வரலாமே... ரமேஷ் கிளினிக்குன்னு கடைவீதியிலே இருக்குதே அதுதான்.... அங்கே வந்தால் பொறுமையா கவனிச்சுப் பார்க்க முடியும். இங்கே வந்து ஏன் க்யூவிலே நின்னுக்கிட்டிருக்கீங்க... இனிமே அங்கே வாங்க!" என்று சொன்னது சங்கரனின் மனத்தை நெருடியது.

தனது கிளினிக்கிற்கு அவர் விளம்பரப் படுத்திக் கொள்ளக் காட்டிய பொறுமையை மகனைப் பரிசோதிப்பதற்குக் காட்டவில்லையே.... என்று சங்கரனின் மனம் வருத்தமுற்றது.

பணம் சம்பாதிப்பது ஒன்றையே குறிக்கோளாகக் கொண்டுள்ள இவர்கள் என்ன படித்து என்ன பயன்? என்றெல்லாம் எண்ணிக் கொண்டே, கனத்த இதயத்தோடு வெளியேறினார் சங்கரன்.

பிற்பகல் நேரம். அப்போதுதான் மதிய உணவு இடைவேளைக்குப் பிறகு வகுப்புகள் துவங்குகின்றன. சங்கரனுக்குத் தனது வகுப்பில் கணக்குப் பீரியட். வகுப்பு ஆரம்பிக்கும் முன்பே ஒரு மாணவன் எழுந்து இன்னொருவனைப் பற்றி அவரிடம் புகார் சொல்ல ஆரம்பித்துவிட்டான்.

"சார்! மத்தியானம் நான் சாப்பிட்டுக்கிட்டிருந்தப்ப ரமேஷ் எங்கிட்டே வந்து எங்கப்பாவாட்டம் நானும் ஊசி போடறேன் பாருடான்னு சொல்லி, பால் பாயிண்ட் பேனாவால என் கையிலே குத்திட்டான் சார்...." என்றான்.

"ரமேஷ் வா இங்கே... உங்கப்பா டாக்டரா?"

"ஆமாம் சார்... அரசினர் மருத்துவமனையிலே டாக்டரா இருக்கார். ரமேஷ் கிளினிக்குன்னு கடை வீதியிலே வெச்சிருக்கிறார்."

"ஓகோ... அந்த டாக்டர் பாஸ்கரனோட மகனா நீ....!"

"ஆமாம் சார்."

"சரி.... நேத்து கொடுத்த ஹோம் ஒர்க் கைச் செஞ்சியா?"

"அதிலே ஒரு கணக்கு புரியமாட்டேங்குது சார்... உங்ககிட்டே சந்தேகம் கேட்கணும்."

"நாளையிலேர்ந்து என் வீட்டிலே ட்யூஷன் ஆரம்பிக்கப் போகிறேன். ஏதாவது சந்தேகம்னா டியூஷன் சேர்ந்துக்கிட்டு, அங்கே வந்து கேட்டுக்க.... வகுப்பிலே சொல்லித் தரமாட்டேன்."



"சரி சார்."

அன்று இரவு வெகுநேரமாகியும் ரமேஷ் அவனது வீட்டில் ஹோம் ஒர்க் கணக்குகளைப் போட்டுப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"என்னடா ரமேஷ்.... இன்னுமா தூங்கலே?" என்றபடி வந்தார் டாக்டர் பாஸ்கரன்.

"ஹோம் ஒர்க் கணக்கு ஒண்ணு புரியலேப்பா. அதுதான் போட்டுப் பார்த்திட்டிருக்கேன்."

"புரியலேன்னு நாளைக்கு உங்க வாத்தியார்கிட்டே கேட்டுக்கறதுதானேடா!"

"அவர் என்னை டியூஷனுக்கு வரச் சொல்லுருப்பா. ஏதாவது சந்தேகம்னு அங்கே வந்து கேட்டுக்கச் சொல்றுர். இனிமேல் வகுப்பிலே சந்தேகம் கேட்டா சொல்லித் தர மாட்டாராம்."

"அப்படியா சொன்னுர்.... அரசாங்கத்திலே சம்பளம் கொடுத்து இவரை வேலைக்கு வெச்சிருக்கிறது பசங்களுக்குப் பாடம் சொல்லித் தரத்தானே.... அப்படியிருக்க பசங்க சந்தேகம் கேட்டா சொல்லித் தராம டியூஷன் வரச் சொல்றது எந்த விதத்திலே நியாயம்? அவர் வீடு எங்கே இருக்குன்னு தெரியுமாடா? காலையிலே அவரைப் பார்த்து நாலு வார்த்தையாவது நறுக்குன்னு கேட்டுட்டுத்தான் ஆஸ்பத்திரிக்குப் போகணும்... சரி, நீ போய்ப் படு" என்று சொல்லிவிட்டுத் தாமும் போய்ப் படுத்துக் கொண்டார்.

"வாங்க சார். வாங்க... உக்காருங்க." என்று வரவேற்றுர் வாத்தியார் சங்கரன்.

சங்கரனைப் பார்த்ததும் பாஸ்கரன் அடையாளம் தெரிந்து கொண்டார். மருத்துவமனைக்கு வந்த அவரை இனிமேல் தனது கிளினிக்கிற்கு வரச் சொன்னதும் ஞாபகத்திற்கு வந்தது. அப்படியானுல் அரசாங்கச் சம்பளத்தை வாங்கிக் கொண்டு, நானும் எனது பணியைச் சரியாகக் கவனிக்காமல் இவரை எனது கிளினிக்கிற்கு வரச் சொல்லியிருக்கிறேன். அவர் நடந்து கொண்டது தவறு என்றுல் நான் நடந்து கொண்டதும் தவறுதானே.... இவையெல்லாம் பாஸ்கரனின் மனத்துக்குள் சில விநாடிகளுக்குள் வந்து போயின.

"நேத்து ஆஸ்பத்திரிக்கு வந்தீங்களே... பையனுக்கு எப்படி சார் இருக்கு?"

"இப்பப் பரவாயில்லைங்க சார்... வந்து... நேத்து உங்க பையன் வகுப்பிலே ஏதோ சந்தேகம் கேட்டான். எனக்கு இருந்த மன நிலையிலே உணர்ச்சிவசப்பட்டு, டியூஷனுக்கு வரச் சொல்லிட்டேன். உண்மையிலேயே நான் எனது இருபது வருஷ சர்வீஸ்ல டியூஷன் சொல்லித் தந்ததேயில்லை. யார் எந்தச் சந்தேகத்தை எத்தனை தடவை கேட்டாலும் வகுப்பிலேயே சொல்லித் தந்து விடுவேன். என் மனைவி 'பிழைக்கத் தெரியாத வரா இருக்கீங்களே'ன்னு கேலி செஞ்சா கூட, குழந்தைங்களுக்குப் பாடம் சொல்லித் தர்றதுக்குக் கூலி வாங்க விரும்பலேன்னு தான் சொல்லியிருக்கேன். இருங்க, காப்பி சாப்பிட்டுவிட்டுப் போகலாம்" என்று கூறி, காப்பிக்காக உள்ளே குரல் கொடுத்து மனைவியைக் கூப்பிட ஆரம்பித்தார் சங்கரன்.

— **இரா. சம்பத்குமார்**

---

இந்தியாவில் எந்த நகரத்தை எடுத்துக் கொண்டாலும் தேங்காய் ஒன்று மூன்று ரூபாய்க்கு விற்கப்படுகிறது.

நிகோபார்த் தீவுகளில் தேங்காய்கள் பன்றிகளுக்கு உணவாகப் பயன்படுத்தப் படுகிறது! கேரளாவில் வருடந்தோறும் மூன்று கோடி தேங்காய்கள் விளைகின்றன. நிகோபார் தீவிலோ, சுமார் இரண்டு கோடி தேங்காய்கள் விளைகின்றன.

— "ரமணி"





**12 ஆம் பக்க விடைகள்**

1. ம. பொ. சி., 2. ஜெயராஜ், 3. லேனு தமிழ்வாணன், 4. ஜெயஸ்ரீ.

புதிர்: மௌலி.

! "இந்தியாவின் பிரதமர் யார்?" என்பது கேள்வி. "ராமராவ்" "எம்.ஜி. ஆர்." "வாஜ்பாய்", "சந்திரசேகர்" "None of these" என்று ஐந்து விடைகள். சரியான விடையை 'டிக்' செய்ய வேண்டும். இரண்டு இளைஞர்கள் பாங்கு வேலைக்குப் போட்டித் தேர்வு எழுதிவிட்டு வெளியே வந்து விடைகளை ஒப்பு நோக்கினர். "நான் none of these ஐ டிக் செய்துவிட்டேன்" என்று பெருமிதத்தோடு ஒருவன் சொன்னபோது அடுத்தவன் கூறினான்: "அட முண்டம்! இந்தியாவின் பிரதமர் அவர் இல்லேடா!"

*** க.ம. வீரபாண்டியன், தகட்டூர்**

**? நீங்கள் இப்போது படித்துக் கொண்டிருக்கும் நூல் எது?**

! Editors on Editing என்று ஒரு புத்தகம். அமெரிக்க நூலகத்திலிருந்து பெற்று வந்து படித்துக் கொண்டிருக்கிறேன். அரைக்கால் வாசிதான் படித்திருப்பேன். மலைக்க வைக்கிறது! Editing என்றால் நாம் பொதுவாகப் பத்திரிகை ஆசிரியர்களைப் பற்றி மட்டுமே எண்ணுகிறோம். அமெரிக்காவில் புத்தக வெளியீட்டாளர்களும் எடிட்டர்களை அமர்த்திக் கொள்கிறார்கள். நூலாசிரியருடன் தொடர்பு கொள்வது, நல்ல நூலுக்குக் கருப்பொருளை எடுத்துக் கொடுத்து யோசனை சொல்வது, அதனை என்னவிதமாக எழுதலாம் என்று விவாதிப்பது, எழுதியதைப் படிப்பது, திருத்தச் செய்வது, திருத்துவது, கூட்டுவது, குறைப்பது, பதிப்பகத்தாரிடம் நூலின் நிறைகுறைகளை விவாதித்து ஏற்கவோ நிராகரிக்கவோ உதவுவது, புதிய எழுத்தாளர்களைக் கண்டுபிடிப்பது, கேட்காமலே வந்து சேரும் கையெழுத்துப் பிரதிகளைப் படிப்பது, எழுத்தாளர்களைக் குஷிப்படுத்த அவ்வப்போது ஒவ்வொருவரை விருந்துக்கு அழைத்துப் போவது என்று பல காரியங்களை ஓய்ச்சல் ஒழிவின்றிச் செய்கிறார்கள். நாவல்கள் மட்டுமின்றி, பல்வேறு துறைகளிலும் நூல்கள் வடிவம் பெறுவது இவர்களால் தான். எது எப்படியானாலும் ஓர் ஒற்றுமை நமக்கும் அவர்களுக்கும் உண்டு. மற்றத் துறைகளுடன் ஒப்பிடுகையில் அமெரிக்காவிலும் (அந்நாட்டு நிலவரப்படி) எடிட்டர்களுக்கு ஊதியம் குறைவு.



* மிரட்டல்?



* தமிழாக்கம் அவசியமா?

*** மு. சிவஞானமுருகன், ஸ்ரீவைகுண்டம்**

**? நீதிமன்றத்தில் வழக்கு இருப்பதால் அது பற்றிக் கருத்துத் தெரிவிக்கக் கூடாது என்றால், தீர்ப்புக்கு ஏற்றாற்போல் உங்கள் கருத்தை மாற்றிக் கொள்வீர்களா?**

! வழக்கு நடக்கும்போது அது பற்றிப் பொது மேடைகளிலும் பத்திரிகைகளிலும் ஏன், சட்டசபையிலும் கூட விவாதிப்பது கூடாது என்பது ஒரு நல்ல மரபு. நீதிமன்றத் தீர்ப்பு ஏற்கப்பட வேண்டிய ஒன்று என்றாலும், விவாதத்துக்கு அப்பாற்பட்டதல்ல. அவ்வாறானால் மேல் கோர்ட்டுக்கு முறையிடுவது என்பதே இல்லாமல் போய்விடுமே?

*** அ. பாபுஜி, நந்தியநல்லூர்**

**? கல்கியின் கொள்கைகள் எத்தனை?**

! "மூன்று" என்று முதல் இதழிலேயே குறிப்பிட்டார் அமரர் கல்கி. அவையாவன: "1. தேச நலன்; 2. தேச நலன்! 3. தேச நலன்!"

*** இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி ***

**? பிரதமர் ராஜீவ் முன் தற்போதுள்ள பிரச்னைகளில் சீரியஸானது எது?**



* அமைதி யாத்திரை



* சீரியஸ் பிரச்னை!

! அதிகாரிகளிடையே ஏற்பட்டுள்ள பதற்ற நிலை. இதை அவரே தாம் நடந்து கொள்ளும் விதத்தால் உருவாக்கியுள்ளார். இனியேனும் அவர் நிதானம் காட்டட்டும்.

* ரூ 10 பரிசு பெறுபவர்:

இரா. வளையாபதி,
51, தோட்டக்குறிச்சி (அஞ்சல்),
639 113.



பயந்ததைப் போல் காமாட்சி நிலை குலைந்து விடவில்லை. "அய்யோ... தெய்வமே!" எனப் புலம்பவில்லை. "நாசமாய்ப் போகட்டும்" என்று சபிக்கவில்லை.

"அவனுக்குக் கல்யாணம்டி.."

"யாருக்கு?"

"அவன்தான்.... வரதன்."

"அவருக்கா?"

கண்களை மூடிக் கொண்டாள். ஆழ்ந்த மௌனம். நீண்ட பெருமூச்சு. உணர்ச்சிகள் மரத்துப் போன குரலில், "நிசந்தானா.... யார் சொன்னா?" என்று கேட்டாள்.

"ஊருக்கே தெரியும். வெத்திலே பாக்கு மாத்தியாச்சு."
பதிலில்லே.
"ஏமாந்து போனியேடி...."
"ப்த்ஸ்...."
"இனி என்ன பண்ணுவே?"

நிமிர்ந்து பார்த்தாள். அடிபட்ட பார்வை. முகத்தில் சன்னமான அதிர்வு.
என்ன செய்ய?
வீரியம் அற்றுப் போனாலும் மனம் குறு குறுத்தது.
முன்னொருநாள் பெட்ரோமாக்ஸ் வெளிச்சத்தில் ஊர்ச் சபை அவளையும் வரதனையும் விசாரித்து அபராதம் விதித்த போதே எல்லாம் முடிந்துவிட்டது.
தெருவிற்கு வந்த குடும்ப கௌரவம். அவமானம். அப்பாவின் தலைகுனிவு. அடி. உதை. ஊரின் ஏளனம்.
இனி என்ன முடியும்?
தனக்கு இப்படியெல்லாம் நிகழ வேண்டும் என விதிக்கப்பட்டிருக்கும்போது.
"துரோகி.... தெரிந்தே கெடுத்துட்டான் பார்த்தியா?"
"என்னையும் சொல்லணும், சுமதி...."
"எப்படித்தான் மனசு வருதோ.... பாவி!"
"................."
"அன்னிக்கு ஊரே திரண்டு வந்துச்சு. இப்ப ஒரு ஆளாவது தப்புன்னு சொல்லுதா, பாரேன்...."
"விடுறி..."
"ஏன் இப்படின்னு தெரிய வேணுமா?"
"வேணும்....."

## மும்தாஜ்யாசீன்

வெறும்சினேகிதமாகத்தான் இருந்தது. உடல் வித்தியாசங்கள் புலப்பட ஆரம்பித்த பிறகு வேறு சந்தோஷங்கள். பார்த்துச் சிரிக்க, வெட்கப்பட்டு மறைய....
"நீ ரொம்ப அழகாயிட்ட புள்ள.... எனக்கு ரொம்பப் புடிக்கிது."
— தண்ணீருக்குப் போகும்போது அய்யனார் கோயில் அருகில் சைக்கிளில் காலூன்றி நிற்பான்.
— 'டவுனுக்குப் போனேன்' என்று காகிதப் பொட்டலத்தில் எதையாவது பிரித்துக் கொடுப்பான்.
— ராத்திரிக்கு வரட்டா எனக் கேட்டு, "அய்யே.... ஆசையைப் பாரு" என வெட்கமாய் அவள் சிரிப்பதைப் பார்த்து ரசிப்பான்.
அதெல்லாம் வேடிக்கையாக இருக்கும்.
ஒரு மழை நாள் இரவில், மாட்டுக்குப் புல் உதறிப் போடப் போனவளை எதிர்பாராமல் பின்னாலிருந்து கட்டிப் பிடித்தான். சொந்தம் வந்துவிட்டது. அதுவரை உணர்ந்திராத சந்தோஷம் அது. உடல் புல்லரிக்கத் திரும்பத் திரும்ப அதே நினைவாய்....
எத்தனை நாளைக்கு மறைத்துவிட முடியும்?
அம்மா கரண்டிக் காம்பைக் காய வைத்துச் சூடு போட வந்தாள்.
"ஒளிக்காம சொல்லு.... நான் கேள்விப் பட்டது நெசந்தானா?"
"என்னம்மா?"
"அவனோட பழகுகிறாயாமே...."

# நெஞ்சைச் சுடும் நிஜங்கள்

தெருவில் அவளது அம்மா, "சுமதி.... சுமதி" என்று கூப்பிட்டாள். காமாட்சியுடன் சேர்ந்தால் தன் மகளும் கெட்டுப் போவாள் என நினைக்கிறாளோ? ஐந்து நிமிடம் காணாவிட்டாலும் கூப்பிட ஆரம்பித்துவிடுவாள்.
"அப்புறம் வர்றேண்டி...."
சுமதி போய்விட்டாள். அவள் எழுப்பிய கேள்வி மட்டும் மிச்சம் இருந்தது.
"ஏன் இப்படி?"

**வ**ரதன் ஒன்றும் அன்னிய தேசமில்லே. அடுத்த தெருக்காரன். சின்ன வயதில், "நொண்டி.... நொடிச்சுக்கோ" கற்றுத் தந்தவன். முதுகில் ஏறச் சொல்லி மாங்காய் பறித்தவன். எறி பந்து விளையாட்டில் கடைசி ஆளாகச் சேர்த்துக் கொண்டவன்.
"ஆம்பளைப் பையனுகளோட என்னடி சேர்க்கை?" என அம்மா திட்டுகிறவரை,

அம்மாவுக்கு எப்படித் தெரிந்தது?
பதில் சொல்லச் சற்றுத் தயங்க, சுள்ளென்று அறைந்தாள்.
"இல்லேம்மா... சத்தியமா இல்லேம்மா..."
"பொணமே... அறுத்து ஊறுகாய் போட்டிருவேன். ஜாக்கிரதை...."
அரிய சந்தர்ப்பம்தான் அது. அப்போதே யோசித்திருக்கலாம். பின்னாளில் எவ்வளவோ சீரழிய வேண்டியது இருக்கும் போது யோசனை எங்கிருந்து வரும்? வீம்புதான் வந்தது. 'இதே அம்மாவுக்கு எதிர்ல அவரைக் கல்யாணம் பண்ணிக் காட்டறேனா இல்லையா.... பாரு...' இரண்டு தினங்கள் கழித்து அவனைத் தேடிப் போனாள்.
"ஏதாச்சும் வழி பண்ணுங்க.... என்னால இனி முடியாது."
வரதனும் நகத்தைக் கடித்து ரொம்ப நேரம் யோசித்துப் பார்த்தான். ஓடிப் போவதுதான் சிறந்த வழியாகத் தெரிந்தது.

உள்ளூரின் சாத்தியம் கனவில்கூட நினைக்க முடியாதது. அப்பாவின் கோபம் தெரியாதா?

''எங்கே போறது?'' காமு அரை சம்மதத்திற்கு வந்துவிட்டாள்.

நான்கு ஐந்து ஊர்களைச் சொன்னான். எல்லாமே பெரிய ஊர்கள். நிச்சயம் கூலி வேலையாவது கிடைக்கும். இரண்டு ஜீவன்களின் வயிற்றைக் கழுவிக் கொள்ள முடியாதா?''

''நான் ரெடி....''

''உன் துணிமணிகளை எடுத்து வைச்சுக்க. கொஞ்சம் நகையும் பணமும் ஒளிச்சு வைய்யி... வர்ற திங்கக்கௌமை புறப்பட்டுரலாம்.''

அன்றைக்கு ஊரே கதிகலங்கி விட்டது.

''ஏலே... சேதி தெரியுமா? பெரியசாமி மகளைக் காணோமாம்...''

''அந்தப் பய வரதனையும் தேடறாங்கப்பா...''

''ஆடக் கண்றாவியே....''

தங்கள் வீட்டுக் கைச்சமையலுடன் எல்லோரும் அவளையும், அவனையும் சேர்த்தே பசியாறினார்கள். சந்துக்குச் சந்து, வீட்டுக்கு வீடு அதே பேச்சு.

விசாரிக்க வருகிறவர்களும், வீதியில் நின்று வீட்டை எட்டிப் பார்க்கிறவர்களும் அதிகரிக்க அதிகரிக்க அம்மா பொய் சொன்னாள். ''யார் சொன்னது.... எம் மக என் தங்கச்சி ஊருக்குத் திருவிழா பார்க்கப் போயிருக்கா... நாங்கதான் அனுப்பினது.''

நாலாபக்கமும் ஆள் பறந்தது. அந்த ஊரில் திருவிழா முடிந்து இரண்டு மாதம் ஆன செய்தி மட்டும் வந்தது.

கார் பஸ்களில் திரும்பி வந்தவர்கள், புக்கத்து ஊரில் எங்கும் இல்லை என்று கை விரித்தார்கள்.

கரும்பு லாரிக்காரன் மட்டும் சரியான அடையாளம் சொன்னான்.

''மஞ்சள் கலர் தாவணி போட்ட பொண்ணுதானே....''

''ஆமாய்யா....''

''செவசெவன்னு.... இந்தா இத்தனை வளர்த்தி?''

''ம்....''

''டவுன்ல ஓட்டல்ல பாத்தேன் ஒரு பையனோட.... பையன் மாநிறம்...''

''கரெக்ட்... அதேதான்.''

''எங்கேயோ பார்த்த மாதிரி இருக்கேன்னு ஒரே யோசனை. சரியாப் போச்சு.''

''எந்த ஊர்ல பாத்தே?''

சொன்னான்.

''போங்க... இப்பவே கிளம்புங்க. கைப்புடியா புடிச்சிரலாம்.''

பிடிபட்டார்கள்.

பஸ்ஸை விட்டு இறங்குகிறபோது ஊரே கூடிவிட்டது.

''சித்தி ஊர்ல திருவிழா நல்லா இருந்துச்சா புள்ள?'' என ஒரு குறும்புக்காரன் வினவ, கூட்டம் சிரித்தது.

ஊரில் ரொம்ப வருஷத்திற்குப் பிறகு நடந்த அபூர்வ நிகழ்ச்சி அது. 'சப்'பென்று முடித்துவிட யாருக்கும் மனசு இல்லை.

''அதெப்படிய்யா விடறது? சாதாரண விஷயமா? நாளைக்கு ஒவ்வொண்ணும் இப்படியே ஓட ஆரம்பிச்சுட்டா ஊர் மரியாதை என்ன ஆகிறது? இதுக்கு ஒரு முடிவு பண்ணும யாரும் வீட்டுக்குப் போகப்படாது. பாத்துக்குங்க....'' பெரிய தலைக்கட்டு சத்தம் போட ஊர்ச் சபை கூடியது.

பெண்ணையும், பையனையும் பெற்றவர்கள் ஆளுக்கு ஒரு மூலையில் நிறுத்தப்பட்டார்கள்.

''கேள்விப்பட்டதெல்லாம் வாஸ்தவம் தானே....'' விசாரணையை ஆரம்பித்தார் தலைக்கட்டு.

''வாஸ்தவம்தாங்க'' என்றார் வரதனின் அப்பா.

''என்ன செய்யலாம்.... மருமகளா ஏத்துக்கறீங்களா?''

''என் பையனை வெட்டிப் போடுங்க. ஒத்துக்கறேன். அந்தப் பேச்சு மட்டும் வேணும்...''

''என்ன பெரியசாமி.... உங்க அபிப்ராயம்?''

''கழுத்தைத் திருகிப் போடறேன். ஒரு நாள் துக்கமாக் கழிஞ்சுரும். கண்ட நாய்களுக்குக் குடுத்துட்டுக் காலமெல்லாம் அழுக வேணும்...''

''எவண்டா நாயி?''

''இந்தாய்யா... சபைல மரியாதையாப் பேசணும்'' தலைக்கட்டு தம் சகாக்களோடு கலந்தார். கல்யாணம் செய்து வைப்பதோ, மறுப்பதோ அவர்கள் தனிப்பட்ட விஷயம். ஊர் கட்டுப்பாட்டைக் காப்பாற்றுவதற்கு மட்டுமே தங்களுக்கு உரிமை என முடிவாயிற்று.

''கோயில் மராமத்துச் செலவில் ஒரு பகுதியை ரெண்டு நபரும் ஏத்துக்கணும். மறுத்தால் ஒரு வருஷத்துக்கு ஊரை விட்டுத் தள்ளி வைக்கலாம்.''

அப்பா அபராதத் தொகையைக் கட்டி விட்டார். ஒதுக்கி வைக்கப்படுவதை விட, சேர்ந்து வாழ்வதே பெரும் தண்டனையாக இருந்தது. நாலு பேர் கூடும் இடத்திற்குச் செல்லும்போது கூசியது. பகலில் ஊர் முகத்தைப் பார்க்கவே அச்சமாக இருந்தது. மகளைப் பார்க்கும்போதெல்லாம் கோபம் வந்தது. அதுவும் கொஞ்ச நாளைக்குத்தான். எல்லாம் விதி என்று இருட்டில் அழுந்திவிட அந்தக் குடும்பம் பழகிவிட்டது.

காமாட்சியைப் பொறுத்தவரை வயதுக்கு ஒத்துவராத அனுபவங்கள்தான் எல்லாமே. அடிமேல்அடி விழுந்ததில் உன்மத்தம் பிடித்த மாதிரி ஆகிவிட்டது. ஆனாலும் உள்ளூர ஒரு நம்பிக்கை. வரதன் தன்னை எப்படியும் கரை ஏற்றி விடுவான். சூடு தணிந்ததும் தகவல் வரும் என்று நினைத்தாள். ஆறு மாதங்களாகியும் வரவில்லை. தானே தூது அனுப்பினாள். அவன் சொன்னானும்:

"இன்னும் அதுக்குப் புத்தி வரலியா? எல்லாத்தையும் கெட்ட கனவா நினைச்சு மறந்துடச் சொல்லு. வயசுக் கோளாறு. ஏதோ தப்புப் பண்ணியாச்சு. இனி அதையெல்லாம் நினைச்சு பிரயோஜனம் இல்லே. அப்ப நடந்ததை நினைச்சா இன்னிக்கும் உடம்பு நடுங்குது. ஒழுங்கா அப்பா அம்மா சொல் படி கேட்டு இருக்கச் சொல்லு."

வேதனை துக்கம் என்பதையெல்லாம் தாண்டிச் சென்றுவிட்டாள் காமாட்சி. எல்லாமே அஸ்தமித்துப் போய்விட்ட ஒரு வாழ்க்கையில் அதற்கெல்லாம் என்ன அர்த்தம் இருக்க முடியும்.

**அ**வள் அவசர அவசரமாகச் சமைத்திருக்க வேண்டியதில்லை.

அம்மா ரொம்பத் தாமதமாகவே வந்தாள். "எனக்குச் சாப்பாடு வேணும்..."

பாயை விரித்துப் படுத்துக் கொண்டாள்.

முகம் வாடிப் போயிருந்தது.

'உடம்பு சரி இல்லையா?' நெருங்கிக் கேட்கவும் பயமாக இருந்தது.

என்ன வார்த்தை சொல்வாள் என்று தெரியாது.

சிறிது நேரத்தில் அப்பாவும் வந்து விட்டார். வரும்போதே கர்ஜனை. "என்னடி இந்த நேரத்தில தூக்கம். இருக்கிற தரித்திரம் போதாதா?"

அம்மா அதைக் காதில் வாங்கிக் கொள்ளவில்லை.

கைகால் கழுவிக் கொண்டு வந்தார்.

"உங்கம்மா சாப்பிடலையா?" பார்வையை எங்கோ வைத்துக் கொண்டு காமாட்சியிடம் கேட்டார்.

"இல்லைப்பா...."

"ஏய்.... எந்திரி.... நீ சாப்பிடாததால எதுவும் மாறிப் போயிராது. தலையில என்ன எழுதி இருக்கோ அந்தப்படிதான் நடக்கும்... வா.... எனக்கும் பசிக்குது...."

அம்மாவிடம் சிறிய அசைவு தென்பட; "எந்திரிடி...." என்றார்.

"செத்துத் தொலைக்கிறேன்...." என எழுந்து உட்கார்ந்தாள் அம்மா.

"நாம செத்து ஒரு வருஷமாச்சு.... இப்ப என்ன புதுசா?"

காமுவுக்கு ஒன்றும் புரியவில்லை.

பரிமாறிவிட்டு உள்ளுக்கு நகர்ந்தாள்.

சாப்பாடு முடிந்தது.

இருவரும் ஆளுக்கு ஒரு சுவரில் சாய்ந்து உட்கார்ந்தார்கள். சிறிது நேரம் பேச்சற்ற மௌனம். அம்மாதான் மீண்டும் ஆரம்பித்தாள்.

"சேதி தெரியுமா... ஊர் விருந்து வைக்கிறாஙளுமே..."

"ம்.... ம்...."

"பெரிய ஆளுங்களைக்கூட்டி வந்து மேடையிலேயே கல்யாணமாம்..."

"கேள்விப்பட்டேன்."

"கொழுத்த நாயுங்க... பணத் திமிர் இது."

காமாட்சிக்குச் சன்னமாகப் புரிய ஆரம்பித்தது. வரதனின் கல்யாணத்தைப் பற்றியா? அடுப்படியில் கழுவிக் கொண்டே கூர்ந்து கவனித்தாள்.

"இதுகளுக்கும் பொண்ணு தர்றேன்னு வர்றானுக பாருங்க..."

"..................

"நம்ம குடி கெட்டுப் போச்சே.... நினைச்சா வேகுது."

அப்பா பெருமூச்சுவிட்டார்.

"கண்டதை நினைச்சு உடம்பைக் கெடுத்துக்காதே. நடக்கிறது நடக்கும்."

சந்தேகமில்லை. அவனது கல்யாண விஷயம்தான்.

இவ்வளவு ஏற்பாடுகளா? மரத்துப் போன உணர்வுகள் துளிர்க்கக் குபீரென்றது. அடப்பாவி!

"எவ்வளவு தைரியம் பார்த்தீங்களா?"

"என்ன பண்றது... ஆம்பளைப் புள்ள பெத்தவன் ஆடறான். நம்ம கதை அப்படியா?"

பொட்டில் அடித்த மாதிரி இருந்தது. இது தானா காரணம்? உறுத்திக் கொண்டிருந்த கேள்விக்குப் பதிலாய்....

"ஆம்பளைப் புள்ளையைப் பெத்தவன்."

எவ்வளவு வசதியான வார்த்தை. என்ன செய்தாலும், நேர்ந்தாலும் துடைத்து விட்டுக் கொண்டு நிமிர முடிகிறதாய்....

தன் உடலும், உள்ளமும் சரிய, "அழிஞ்சு போயிருவானுக...." என அம்மா சொல்வதைக் கேட்டுக் கொண்டிருந்தாள் காமாட்சி.

---

பிரசுரகர்த்தர்: உங்க நாவல் இரண்டாயிரம் பிரதியும் ஒரே நாளில் தீர்ந்துவிட்டது!

எழுத்தாளர்: சபாஷ், எங்கே என் ராயல்டி?

பிரசுரகர்த்தர்: இந்தாங்க பதினேழு ரூபாய் பத்து காசு. எடைக்குப் போட்டதில் மொத்தம் ரூ 171.00 கிடைத்தது.

— லஷ்ஜா



# மகாத்மாவின் மரணம்



**ராஜாஜி வாழ்க்கை வரலாறு — III**
**ராஜ்மோகன் காந்தி**

## 19

மெய்க்காப்பாளர் சிங்காரவேலு டெலிபோனை எடுத்தார். "பிரஸ் டிரஸ்ட் ஆஃப் இந்தியாவிலிருந்து பேசுகிறேன்; மகாத்மா காந்தி கொலை செய்யப்பட்டார் என்பதை தயவு செய்து கவர்னருக்குத் தெரிவியுங்கள்" என்று ஒரு குரல் கேட்டது.

சிங்காரவேலு செய்தியை உரக்கக் கத்தி வெளியிட்டார். லிஃப்டிலிருந்து வெளிப்பட்டு, காரை நோக்கிச் செல்ல அடியெடுத்து வைத்தபோது சிங்காரவேலு கத்தியது ஸி. ஆருக்குக் கேட்டது. அதிர்ச்சி அடைந்த போதிலும் ஸி. ஆர். தம்வசம் இழக்கவில்லை. சிங்காரவேலுவிடம், மவுண்ட்பேட்டனுக்கு போன் போடச் சொன்னார். செய்தி சரி என்பதை உறுதிப்படுத்தவோ அல்லது தவறு என்று திருத்தவோ அவரால் முடியும். மவுண்ட்பாட்டனுடன் போன் இணைப்பு கிடைப்பதற்கு முன்பாகக் கொலை பற்றி அகில இந்திய ரேடியோ அறிவிக்கக் கேட்டுத் [illegible] வந்தார் நரசிம்மன்.

காந்தி வீழ்த்தப்பட்ட இடமான பிர்லா மாளிகைக்குக் கவர்னர் ஜெனரல் புறப்பட்டுக் கொண்டிருந்தபோது, ஸி. ஆர். ஃபோனில் அழைப்பதாக அறிந்து ரிஸீவரைப் பெற்றுக் கொண்டார். செய்தி உண்மையே என்று ஊர்ஜிதம் செய்தார். காந்தியிடமிருந்து பின் வாங்கிச் சென்ற மரணம் மீண்டும் பலமாகத் தாக்கிவிட்டது என்பது உறுதியாயிற்று. மவுண்ட்பாட்டனிடம் ஸி. ஆர். ஒரே வாக்கியம்தான் அத்தருணத்தில் பேசினார்: "ஜவாஹர்லாலைக் கவனித்துக் கொள்ளுங்கள்." போனை வைத்துவிட்டு மெய்க்காவலர் சட்டர்ஜியை அழைத்து, தம்மை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்த மக்களிடம் போய்த்-தம் சார்பில் மன்னிப்புக் கோரச் சொன்னார். "அவர்களிடம் நான் வராமலிருப்பதற்கான காரணத்தையும் நீங்கள் சொல்லலாம் — அதாவது அவர்களுக்கு அது வரை விஷயம் தெரியவராமலிருக்குமானால்." கவர்னர் மேலும் சொன்னார்: "சீக்கிரமாகத் திரும்பி வந்து தில்லிக்குச் செல்லும் விமானத்தில் எனக்கு இட வசதி செய்யுங்கள்" மறுபடி போன் ஒலித்தது. தில்லியிலிருந்து ஸி. ஆரின் மகளும் காந்தியின் மருமகளுமான லக்ஷ்மி பேசினாள். மேலும் பல விவரங்களைக் கூறினாள். மீண்டும் பி.டி.ஐ. நிறுவனத்திலிருந்து கவர்னரின் அறிக்கையைக் கோரி ஃபோன். ஸி. ஆர். மூன்றே வாக்கியங்களைக் கூறினார். "நம்முடைய மிகச் சிறந்த விலை மதிக்க முடியாத சொத்தை அறிவற்ற ஒரு பைத்தியக்காரன் பறித்துவிட்டான். இந்தியாவை இந்த

கல்யாணகுமார்

# வந்தேமாதரம் என்போம்...




அடி வயிற்றைப் பிசைகிறது எனச் சிலர் சொல்வதைக் கேட்டிருக்கிறேன். அப்படி என்றால் என்ன என எனக்குத் தெரியவில்லை. ஆனால் இன்று புரிந்துவிட்டது. பயம் என் அடி வயிற்றைப் பிசைந்து கொண்டிருந்தது.

பட்டாளக்காரன் வேறு கத்தி வாங்கிக்கொண்டு சென்றபின், நாலு நாட்களாக வீட்டுப் பக்கமே காணோம். என் சித்தப்பாவை உங்களுக்குத் தெரியாது. ஐயோ, அவர் முறைத்தாலே போதாதா? அடி வேறு வாங்க வேண்டுமா?

அந்தப் பட்டாளக்காரனை... பல்லைக் கடித்தேன். தப்பு என்னுடையதுதான். அப்பா ஊரிலிருந்து லெட்டர் போட்டிருந்தார். குமார் ஆறாவது பாஸ் செய்துவிட்டான்.

நேற்றுத்தான் ஸ்கூலில் ரிசல்ட் ஒட்டினார்கள்!

அவ்வளவுதான் கல்கண்டும், சாக்லேட்டும் அந்த மத்திய சிறை நிலைய அலுவலர் குடியிருப்பில் திமிலோகப்பட்டது. என்னுள் ஏதோ இமய மலையைத் தாண்டிவிட்டாற் போன்ற பெருமை: அதே பெருமையோடு துணி துவைக்க வந்திருந்த பட்டாளக்காரனிடம் போக வேண்டுமா?

அவன் என்னைப் பாராட்டியபடியே நைச்சியமாகப் பேசி, சித்தி காய் நறுக்க வைத்திருந்த கத்தியை வாங்கிக் கொண்டு போய்விட்டான்.

ஓ... அவனை உங்களுக்குத் தெரியாதல்லவா? தெரிந்தால் நான் ஏன் இப்படிப் பயந்து சாகிறேன் என்பது உங்களுக்குப் புரிந்துவிடும்.

அவன் ஒரு கொலைகாரன். ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டு, தண்டனை அனுபவித்துக்கொண்டிருப்பவன். வட்டக்கிராப்போடு கூடிய வெளுத்த தலையும், சிறிய உள்குழி விழுந்த கண்களும், மீசையில்லாமல் மழுங்கச் சிரைக்கப்பட்ட, அம்மை வடு நிறைந்த கறுத்த முகமும்.... ஒல்லியான தேகமும், அந்தச் சாயம் போன செம்மண் கலர் கதர்ச் சட்டையும் அரை டிராயரும் தொள தொளவென அணிந்து கொண்டு... சட்டையின் இடது பக்க நெஞ்சில் நீலக் கலரில் எண் குறிக்கப்பட்டிருக்கும்.

என் சித்தப்பா இந்தச் சிறைக்கூடத்தின் ஜெயிலர். இவனையும், இவனைப் போன்ற ஆயுள் தண்டனைக் கைதிகளையும் அவர்கள் நல்ல முறையில் நடந்தால், இதுபோல் பிரித்து ஆபீஸர் வீடுகளுக்குத் தோட்ட வேலை செய்ய மற்றும் பல்வேறு வேலைகளுக்கு (பாத்திரம் தேய்க்க, துணி துவைக்க, சுண்ணாம்பு அடிக்க... இத்யாதி) உபயோகித்துக் கொள்வார்கள்.

இவன் தினமும் எங்கள் வீட்டிற்கே வருவான். எங்கள் வீட்டில் சித்தி அதிக வேலை தரமாட்டாள். துணி மட்டும் துவைத்துப் போடுவான். அவனே வெட்டியாய்க் கிடந்த புழக்கடையைச் சீர்திருத்தி அந்தத் தோட்டத்தைப் போட்டிருந்தான்.

நான் லீவுக்கு வந்த இரண்டு வாரத்தில் அவனும் நானும் ரொம்ப நெருங்கிவிட்டோம். இவனின் உண்மைப்பெயர் தெரியாது. தெரிந்து கொள்ளவும் விரும்பவில்லை. ஆனால் ராணுவத்தில் இருந்தவன் என்பதால் 'பட்டாளத்துக்காரா' என்றே கூப்பிடுவேன். ஏனென்றால் சித்தப்பாவும் அதே போல்தான் அவனைக் கூப்பிடுவார்.

அவன் வேலை ஏதும் இல்லாவிட்டால், வார்டன் வந்து கூப்பிடும்வரை, வேப்ப மர நிழலோடு அமர்ந்தபடி தன்னைப் பற்றிச் சொல்வான்.

அவனின் ராணுவ வாழ்க்கையை விடச் சொந்த வாழ்க்கை மிகவும் சோகமானது.

"ஏஞ்சாமி நான் நம்ம நாட்டோட மானத்தைக் காக்க, என் கால்ல குண்டடி பட்டுப் போராடினேன். பதக்கம்லாம் தந்து பாராட்டினாங்க. அப்புறம் ஊருக்குத் திரும்பி வந்து வாழ்க்கை நடத்தினப்ப, என் மகளோட மானத்தைக் காப்பாத்த ஒருத்தனை அடிச்சேன். அவ்வளவுதான்; கையில வெலங்கு போட்டு இங்கே கூட்டியாந்துட்டாங்க. ஆயுள் தண்டனை தீட்டிட்டாங்க. எப்படிப் பார்த்தியா ராசா, நாட்டுக்கு ஒரு நீதியாம்... வீட்டுக்கொரு நீதியாம்! அதோட தேச மானத்தைக் காக்க எத்தனை பேர்களை வேண்ணாலும் கொல்லலாமாம். அது தேச சேவையாம். இங்க வூட்டுல பொண்டாட்டி, மவ இவங்களோட மானத்தைக் காக்க யாரையாவது அடிச்சா, கொன்னா அது குத்தமாம். ம்...'' — இதை அவன் சொல்லும்போது நீங்கள் அவனின் முகத்தைப் பார்க்க வேண்டும். கண்கள் சிவந்து, அந்தக் காவியேறிய பற்களை நறநறவெனக் கடித்தபடி....

"என்னதான் சொல்ற, கொஞ்சம் வெளக்கமாத்தான் சொல்லேன்!''

"ம்...'' என்றவன், "நான் பட்டாளத்தில இருந்து நிக்கக் காரணமே என் பொண்டாட்டி செத்ததுதான். திடீர்னு வந்த காய்ச்சலால அவ செத்துப் போயிட்டா. அதனால தான் வயசு வந்த பொண்ணு தனியா கிராமத்துல வாழ முடியாதேன்னு ஊருக்குத் திரும்பி வந்தேன். எனக்குச் சுலபமா வேலை கெடைச்சிருச்சி; அந்த ஊரு பிரசிடெண்டு ஐயாகிட்ட. அவரு பேரு பரமசிவம். நான் அவருகூடவே போவேன். வருவேன். 'பாடிகாடு' மாதிரி. பரமசிவத்துக்கு டவுன்ல ஒரு கட்சி ஆளுகூட நெருங்கிப் பழக்கம். அந்த ஆளும் அடிக்கடி இவன் வூட்டுக்கு வருவான். இந்த ஆளும் டவுனுக்கு அடிக்கடி போகும். டவுன் ஆளு கைலாசம். பிரசி



"வேலையிலிருக்கிற பெண்தான் வேணும்னு பிடிவாதமா இருந்த உங்க அம்மா அரண்டு போயிருக்காங்களாமே?''

"ஆமாண்டா. வந்திருக்கிறது பெண் போலீஸ் ஆச்சே!''

— கீழை அ. கதிர்வேல்

டெண்டு அய்மா 'வூட்டு வேலேங்களே செய்ய ஒம்பொண்ணே வேணுனு அனுப்பேன்'னு கேட்டுகிட்டதால வூட்டு வேலேக்கு அனுப்பி னேன். ஒரு நாள், பரமசிவம் என்னே அவ சரமா டவுனுக்கு அனுப்பிட்டார். சாயந் திரமா வூடு திரும்பறேன். ஒடம்புல ஏகப்பட்ட கீறலோட பாவாடை தாவணியெல்லாம் கிழிஞ்சு, என் பொண்ணு, 'அப்பாரே'ன்னு ஓடி வந்து கட்டிகிட்டா... என் நெலேமை எப்படியிருக்கும்னு யோசிச்சுப் பாரு ராசா?" —என்றவன் யோசிக்க டயம் கொடுத்தான்.

பின், ".... நல்லவேளே அந்த ஆளுங்க கிட்ட சிக்கி மானத்தை இழக்காம தப்பிச்சு ஓடி வந்துட்டா. அப்ப வந்தது பாரு ஒரு வெறி... எரவாணத்துல சொருகியிருந்த கொடுவாளே எடுத்துகிட்டுப் பிரசிடெண்டு வூட்டுக்கு ஓடினேன். டவுன்காரன் ஓடிட்டா னுட்டம் இருக்கு. நான் தெருவுல நின்னு சத்தம் போட்டதும் ஒண்ணுமே நடக்காத மாதிரி அந்த ஆளு வந்தான். அதுக்குள்ள சுத்தியும் ஜனங்க கூடிட்டாங்க. என்கிட்டே இருந்த கொடுவாளே யாரோ பறிச்சுட் டாங்க. ஆனு நான் பட்டாளத்தான் சாமி. கையிருக்கில்ல. சும்மா அவனேப் பிடிச்சி வௌாசிட்டேன்.

"எல்லோருமா வந்து எங்களேப் பிரிச்சுட் டாங்க. அந்த ஆளே டவுன் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போனுங்க. அடி கொஞ்சம் பலம் தான். ஆனு எந்திரிக்க ஒரு வாரம் ஆவும் அப்படீன்னு ஊர்ல பேசிக்கிட்டாங்க. ஆனு ரெண்டு நாள் கழிச்சு விடிகாத்தால போலீஸ் வந்து, பஞ்சாயத்துப் பிரசிடெண்டைக் கொலே செஞ்சதா என்னேக் கைது பண்ணி ஸ்டேஷனுக்குப் பிடிச்சுப் போயிட்டாங்க. நான் அடிச்சேன், ஆனு கொலே பண்ண லேன்னு கத்தியும் என் வீட்டு எரவாணத் துல சொருகியிருந்த ரத்தம் தோய்ஞ்ச கொடுவாளும், அன்னேக்கி நான் அடிச்சதப் பார்த்த ஊர் சாட்சிகளும் பலமான சாட்சி யங்களாப் போனதால செய்யாத கொலேக் காக இதோ தண்டனே அனுபவிச்சுகிட்டிருக் கேன்."

"அப்ப பரமசிவத்தை யார் கொன் னுங்க?"

"கைலாசம். அவன்தான் கொன்னுட் டான். அவங்களுக்குள்ள ஆயிரம் இருக்கும். இடையில நான் வரவும் சமயத்தைப் பயன் படுத்திக்கிட்டான். அவனே.... அவனே..."

"நீயும் ஜெயிலுக்கு வந்துட்டே. அப்ப ஒன் மவ...."

"ம்...." — என அடுப்பு ஊது குழலேப் போல் நெடியதாய் ஒரு பெருமூச்சுவிட்டான். லேசாய்க் கண்கள் கலங்கியிருந்தன.

"அந்த ஆளு... அதான் கைலாசம்.... அவன்... தான் நெனச்சதை நிறைவேத்திட் டான் ராசா, நிறைவேத்திட்டான். மூனு வருஷம் முன்னுடி இங்க என்னேப் பார்க்க வந்த என் மக, "அப்பாரே... நான் மோசம் போயிட்டேனே'ன்னு அழுதது இன்னும் என் கண்ணுக்குள்ள தூசி விழுந்தா மாதிரி நின்னு குத்திகிட்டேயிருக்கு.... என்னேப் பாத்துட்டு வீட்டுக்குப் போனவ, தழையை



"மந்திரி பதவிங்கறது மின்சாரம் மாதிரி..."

"அவ்வளவு 'பவர் ஃபுல்'னு சொல் றீங்களா?"

"இல்லே எப்பொழுது வரும், எப் பொழுது போகும்னே சொல்ல முடி யாதே, அதை வைச்சுத்தான் சொன் னேன்."

— நவபாரதி

அரைச்சிக்குடிச்சுட்டுச் செத்துப்போயிட்டா ராசா!" — அழுதான்.

சித்தப்பா அடிக்கடி சித்தியிடம் கூறிக் கொண்டிருந்தது நினைவுக்கு வந்து பயம் மூட்டியது.

"இங்கப் பாரு மைதிலி. எந்தக் காரணத்தைக் கொண்டும் அந்த ஆளுங்களே வீட்டுக்குள்ள விடக் கூடாது. அவங்க கையில கத்தியோ, வேறே எந்தவிதமான ஆபத்தை விளேவிக்கக் கூடிய பொருள் களேயோ கொடுக்கக் கூடாது. சொல்லப் போனு, ஊறுகாய் பாட்டில்ல இருக்கே, எவர்சில்வர் ஸ்பூன், சுண்டு விரல் நீளத் துக்கு. அது கூட அவங்ககிட்டச் சிக்கினு பலமான ஓர் ஆயுதமாயிடும். அதனுல ஜாக் கிரதையா இரு."

பட்டாளக்காரனே நினேத்துக் கோபம் கோபமாய் வந்தது. 'நொண்டிக்காலா, பொட்டைக்கண்ணு, வட்டக்கிராப்பு, ஒல்லி பிச்சான்...' என வாய் தாராளமாய்த் திட்டிக் கொண்டிருந்தது. ஆனுல் அவன் கத்தியை வாங்கிக் கொண்டு போன மறு நாளிலிருந்து ஆளே வரவில்லே.

எந்த நேரத்தில் என்ன தகவல் வருமோ, எப்போது சித்தப்பாவின் முரட்டுக்கை முற மாய் என் முதுகில் படுமோ என, மனம் படக்... படக்கென அடித்துக் கொண் டிருந்தது.

அன்று விடிந்த பின்னும் தூக்கம் போகாமல் மசமசவென்று எழுந்து பின் கட்டுக்குச் சென்றேன். கிழக்கே சூரியன், ரத்தச் சிவப்பில் குளித்தபடி மேலே ஏறிக் கொண்டிருந்தான்.

வேப்ப மரத்தில் சிறிது வாசனேயாய்க் காற்று வீசிக் கொண்டிருந்தது. ஒரு வேப்பம்

பழம் லொட்டெனத் தலையில் விழுந்து திடுக்குறச் செய்தது. மனசு 'இன்று ஏதோ நடக்கப் போகிறது' எனத் துடிக்க ஆரம்பித்தது.

'அம்மா... அம்மா...'—என்றகுரல்ஒலிக்க, ஆ... பட்டாளக்காரன் நின்று கொண்டிருந்தான். சட்டென என்னுள் பயம் மறைந்து பலம் தோன்றியது.

"எங்க கத்தி? வாங்கிட்டுப் போனதுக்கப்புறம் நீ வரவேயில்லே? கொடுத்துடு அதை! இல்லாட்டா என் சித்தப்பா கிட்டச் சொல்லிடுவேன். ம்!" — தைரியமாகக் கத்திக் கேட்டேன்.

"சாமி... ராசா... கத்திப் பேசாத. இந்தா அதைத் தரேன்!" — என்றபடி இடுப்பு அரைஞாண் கயிற்றில் கட்டி வைத்திருந்த கத்தியை அவிழ்த்து எடுத்துத் தந்தான்.

அப்பாடியோ! ஏதோ உலகமே என்மேல் அழுந்திக் கொண்டிருந்தது, போலவும் அதிலிருந்து நான் திடீரென விடுபட்டு லேசானது போலவும் உணர்ந்தேன்.

"அப்புறம் சாமி, இன்னைக்கி ராத்திரி குடியரசு தினவிழா நடக்குதில்ல. அதுல நான் தியாகி குமரன் வேஷம் போட்டு நடிக்கறேன். நீங்கள்ளாம் கண்டிப்பா வரணும். நான் எப்படி நடிக்கறேன்னு சொல்லணும்!" — என்றான்.

என் கைக்குக் கத்தி வந்ததும் அவனை அலட்சியப்படுத்திவிட்டேன். "போய்யா சரிதான். நீயும் உன் நாடகமும்" — என்றபடி உள்ளே வந்து விட்டேன்.

அன்று மாலை ஐந்தரை மணிக்கு வீட்டில் மூவரும் ரெடியானோம். வீட்டைப் பூட்டி, கேட்டை சாத்தி சித்தப்பா பைக்கில் அமர்ந்து ஸ்டார்ட் செய்ததும் சித்தி அமர்ந்தாள். அவளுக்குப் பின்னே நான் அமர்ந்தேன். அது பீறிட்டு விழா நடக்கும் கலா மன்றத்தை நோக்கிப் பறந்தது.

ஜே... ஜே... என ஏராளமான மக்கள். சித்தப்பா அலுவலக டிரெஸ்ஸில் இருந்தார். அதனால் நானும் சித்தியும் மட்டும் உள்ளே சென்று நாடக மேடை தெரியும்படி இடம் பார்த்து அமர்ந்து கொண்டோம்.

விழா ஆரம்பித்தவுடன் பெரிய அங்கவஸ்திரத்துடன் பட்டு வேட்டி பளபளக்கத் தங்க ப்ரேம் கண்ணாடி போட்டுக் கொண்டிருந்த ஒருவருக்கு நிறையப் பேர் ரோஜா மாலை போட்டார்கள். அவரும் பேசும் போது, "அதைச் செய்யலாம், இதைப் பிடிக்கலாம்" என்றபடியேயிருந்தார். யாரெனக் கேட்டதற்கு இந்தத் தொகுதி எம்.எல்.ஏ. என்று பதில் வந்தது.

"அட சீக்கிரம் கலைநிகழ்ச்சிகளை ஆரம்பிங்கய்யா, சாவு கிராக்கிங்களை வுட்டு மண்ட காய வக்கிறுங்களே' என மெல்ல முணுமுணுத்தேன். சித்தி தொடையில் செல்லமாய்க் கிள்ளி 'ஷ்' என்றாள்.

சிறிது நேரத்தில் மேடையில் இருந்தவர்கள் கீழே முதல் வரிசையில் அமர்ந்ததும் திரை போடப்பட்டது. மெல்ல இசைக் கருவிகளின் சப்தங்கள் ஒலிக்க ஆரம்பித்தன.

திரை சடசட்வென விலகியதும் பளீரென விளக்குகள் ஒளியை உமிழ... கையில் நீளமாய் மூவர்ணக் கொடியுடன்... 'அட, நம்ப பட்டாளக்காரன். காத்தால கூட என்னமோ சொன்னானே, ஆங்... தியாகி குமரன்! கரெக்ட்!'

முகத்தில் லேசாய்ப் பவுடர் போட்டுக் கொண்டு, வெள்ளைத் தொப்பி, வெள்ளைச் சட்டை, அரை டிராயருடன், அவனைப் போலவே இன்னும் பத்துப் பன்னிரண்டு பேர் சூழ்ந்து நிற்க... அவர்களைச் சுற்றி ஆங்கிலச் சிப்பாய்கள் போல வேஷம் போட்டுக் கொண்டு கையில் லத்தியோடு சிலர் இருக்க...

கணீரென... "வந்தே மாதரம்!" — என பட்டாளக்காரன் கர்ஜித்தான். கூடவே மற்றையோரும்.

சிப்பாய்களின் தலைவன் போலிருந்தவன், "டேய், கொடியைக் கீழே போட்டுட்டு ஓடிடுங்க. இல்லாட்டா லத்தி சார்ஜ் பண்ணிக் கூட்டத்தைக் கலைப்போம்" என மிரட்டினான்.

"முடியாது. எங்கள் உயிரே போனாலும் இந்தக் கொடியை மண்ணில் சாய விடமாட்டோம். சுதந்திரம் எமது பிறப்புரிமை. அதனை அடைந்தே தீருவோம். வந்தே மாதரம்! வந்தே மாதரம்!" — அவனுடன் சேர்ந்து மற்றவரும் கோரஸாகச் சொல்ல, சிப்பாய்த் தலைவன், "சார்ஜ்" எனக் கத்த, விநாடியில் தேனீக் கூட்டத்தைக் கலைத்தாற்போல் மேடையில் கசமுசாவெனக் கூச்சலும், குழப்பமும் ஏற்பட... நான் பட்டாளக்காரனையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

அவன், "வந்தே மாதரம்" எனக் கத்திக் கொண்டே முகத்தில் இதுவரை பார்த்திராத ஓர் இறுகிய தன்மையுடன் — அந்தச் சொற்கள் வெறுமே உதட்டளவிலிருந்து வராமல் உள்ளத்திலிருந்து கிளம்புவதாய்... கூட்டத்திலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டு வெளிவந்தவன் கையில் பிடித்திருந்த கொடிக்கம்பை... அப்படியே சாய்த்து, காளியின் சூலாயுதமாய்... அந்த நிகழ்ச்சி யாருமே நினைத்துப் பார்த்திராத விநாடியில் நிகழ்ந்து முடிந்து விட்டது.

தங்க ப்ரேம் கண்ணாடி போட்ட ஆளின் நெஞ்சக் குருதியை மறைத்தபடி தேசியக் கொடி படுத்துக் கிடந்தது.

அந்தக் கம்பை, கத்தியைக் கொண்டு நன்றாகச் சீவி, கத்தியைப் போலாக்கி அதை மறைக்க, கொடியை அவ்விடத்தில் கட்டி... மிகத் திறமையாகத் திட்டமிட்டிருக்கிறான்.

போலீசார் உடனே ஓடி வந்து அவனை மடக்கி இழுத்துச் சென்றனர். தங்க ப்ரேம் கண்ணாடி ஆளின் பெயர் என்ன எனக் கேட்டேன். 'கைலாசம்' என பதில் கிடைத்ததும், என்னுள் திடீரென எங்கிருந்தோ ஒரு புதிய உத்வேகம் பீறிட்டுக் கிளம்ப வெறி பிடித்தாற்போல் "வந்தே மாதரம்!" என்று கத்தினேன். கூட்டம் அனைத்துமே ஒரு நிமிடம் வியப்புடன் என்னைப் பார்க்க... பட்டாளக்காரன் என்னை நோக்கிக் கையை அசைத்தான்.

# ஒரு சிறுவனின் மரணமும் எழும் சந்தேகங்களும்...



* இறந்த சிறுவன் மயில்வாகனன்

"அப்பா, நோட்டுப் புஸ்தகம் வாங்க வேண்டும். காசு கொடு!" என்றான் என் பதின்மூன்று வயதுப் பையன் மயில்வாகனன். "இன்று காசு இல்லை. நாளைக்கு நானே வந்து வாங்கித் தருகிறேன், போ!" என்றேன் நான். அவனும் சைக்கிளை எடுத்துக் கொண்டு போய்விட்டான். நானும் வழக்கம் போல் வயல் வேலைக்குச் சென்றுவிட்டேன்.

"அன்று இரவு நான் வேலை முடிந்து வந்து அசதியோடு தூங்கிக் கொண்டிருந்தபோது மூன்று பேர் வந்து எழுப்பினார்கள். அப்போது இரவு சுமார் ஒன்பதரை அல்லது பத்து மணி இருக்கும். வந்து எழுப்பியவர்கள், என் மகன் படிக்கும் ருக்மணி உயர் துவக்கப் பள்ளியின் மானேஜர் முத்தையாவின் கார் டிரைவரும் மற்றும் இரண்டுவேலைக்காரர்களுமாக இருக்கவே, நான் அலறியடித்துக் கொண்டு எழுந்தேன்.

"உன் மகன் மயில்வாகனன் மற்ற பசங்களோடு சண்டை போட்டதால் அடிபட்டு விட்டான். அதனால் அவனைக் கடையநல்லூர் அரசாங்க ஆஸ்பத்திரியில் சேர்த்திருக்கிறோம்" என்றார் வந்தவர்களில் ஒருவர். 'ஏதோ அரளி விதை சாப்பிட்டுவிட்டான் போலிருக்கிறது' என்றார் இன்னொருவர். எனக்கு ஒன்றும் விளங்காததால் பதற்றத்துடனும் குழப்பத்துடனும் அவர்களுடைய காரில் புறப்பட்டுச் சென்றேன்.



* ராஜரத்தினம்

"ஆஸ்பத்திரிக்குச் சென்று நான் பார்த்த



* ஞானு

போது, என் மகன் இறந்து போயிருந்தான். தொப்புள் வீங்கியிருந்தது. வலது முட்டிக் காலில் காயம் இருந்தது. இதையெல்லாம் பார்த்தபோது, எனக்குச் சந்தேகம் வந்து விட்டது. எனவே என் மகனுக்கு மருத்துவம் செய்த டாக்டர் சுப்பிரமணியம் மற்றுமுள்ள நர்ஸ்கள் ஆகியோரைக் கேட்டேன். அவர்களும் என் மகனுடைய மரணத்திற்கான சரியான காரணத்தைச் சொல்லவில்லை. அனைவரும் எத்தனை சீக்கிரம் முடியுமோ அத்தனை சீக்கிரம்பிணத்தைக்கொண்டுபோய்எரிக்கச்

செய்வதிலேயேதான் குறியாக இருந்தார்கள்.

"இதையெல்லாம் கண்ட எனக்கு என் மகனின் இறப்பில் சந்தேகம் வந்துவிட்டது. அதனுல் பிரேதப் பரிசோதனை செய்யச் சொன்னேன். ஆரம்பத்தில் அவர்கள் அதற்கு உடன்படாவிட்டாலும் எனது பிடிவாதம் காரணமாகக் கடைசியில் வேறு வழியின்றிப் பிரேதப் பரிசோதனை செய்தார்கள்.

"பிரேதப் பரிசோதனை முடிந்தவுடன் உடனடியாகப் பிணத்தைக் கொண்டு போய் எரித்துவிட வேண்டும் என்ருர்கள். நான் அப்படியெல்லாம் முடியாது. செய்ய வேண்டிய சடங்குகளையெல்லாம் செய்துதான் எரிக்க வேண்டுமென்று சொல்லிவிட்டேன். அடுத்த நாள் பிணம் எரிக்கப்பட்டபோது, பள்ளிக்கூடத்திலிருந்து வந்திருந்த ஆட்கள், பிணம் சரியாக எரிந்ததா என்று கடைசிவரை இருந்து பார்த்துவிட்டுத்தான் சென்ருர்கள். அதனுல் எனது சந்தேகம் பலமாக வலுத்துவிட்டது.

"இதற்கிடையில் என் மகனின் இறுதிச் சடங்கிற்கு வந்திருந்த பெரியசாமிபுரத்தைச் சேர்ந்த ஒருவர், அதே பள்ளியில் படித்த ராமையா என்பவரின் மகன் வெள்ளைத்துறை என்பவனும் இப்படித்தான் செத்துப் போனுன் என்ருர். இதற்குமுன் இப்படிச் சில மாணவ, மாணவிகள் திடீரென்று மர்மமாய் இறந்திருக்கிருர்கள் என்றும் சொன்னுர். ஆனுலும் முன்பு இறந்த மாணவ, மாணவிகளின் பெற்ருேரைச் சென்று விசாரித்தபோது அவர்கள் ஏதும் பேச மறுத்துவிட்டார்கள்.

"என் மகன் இறந்ததற்கு என்னதான் காரணம்? முன்பு ஒருமுறை வீட்டுக்கு வந்திருந்த என் மகன் மயில்வாகனன், 'அப்பா நான் கிறிஸ்துவ மதத்திற்கு மாறிவிட்டால், என்னை வெளிநாட்டில் படிக்க வைப்பதாக அண்ணுச்சி சொல்கிருர்!' என்ருன். அண்ணுச்சி என்பவர் பள்ளி மானேஜர் முத்தையாவின் மகன் எட்வர்ட் ராஜ். முன்பு வக்கீலாக இருந்த இவர் இப்போது அத்தொழிலை விட்டு விட்டுப் பள்ளி நடத்துவதில் தந்தையோடு இணைந்து செயல்படுகிருர். நான் அப்படியெல்லாம் மதம் மாறக் கூடாதென்று மறுத்துவிட்டேன்.

"பிறகு அவன் ஏழாம் வகுப்பில் ஃபெயில் ஆகிவிட்டதால், சரி வேறு பள்ளிக்கூடத்தில் சேர்த்துவிடலாம் என நினைத்து, ரெகார்ட் ஷீட் வாங்கி வரச் சொன்னேன். அதற்கு அவர்கள், 'அதெல்லாம் ஒன்றும் வேண்டாம். இங்கேயே படி. உன் அப்பாவிடமிருந்து பிரிந்து வாழ்வதாகவும் அதனுல் மிகவும் கஷ்டப்படுவதாகவும் உன் அம்மாவிடம் எழுதி வாங்கிக் கொண்டு வா. இங்குள்ள அனுதை விடுதியிலேயே உன்னைச் சேர்த்துக் கொள்கிருேம்' என்று சொல்லி அனுப்பினுர்கள். நானும் வறுமை காரணமாக என் மனைவி ஜானகியை அப்படி எழுதித் தரச் சொன்னேன். அவளும் தந்தாள். அதன்


* மானேஜர் முத்தையா

பிறகு மங்களாபுரத்தில் உள்ள அப்பள்ளிக்கூட ஹாஸ்டலிலேயே தங்கிப் படித்தான். அப்போதுதான் இப்படி இறந்துவிட்டான்.

"அவன் இறந்தது கடந்த 26.8.85 அன்று இரவு. ஆனுல் இன்றுவரை எனக்கு போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்டே கொடுக்கப்படவில்லை. நானும் அதற்காகப் பிரேதப் பரிசோதனை செய்த டாக்டர் சுவாமிதாஸிடமும் கடையநல்லூர் எஸ்.ஐ. நவநீதகிருஷ்ணனிடமும் அலையோ அலையென்று அலைந்து சலித்துவிட்டேன். இவரைக் கேட்டால் அவர் என்கிருர். அவரைக் கேட்டால் இவர் என்கிருர். ஒருமுறை எஸ்.ஐ. நவநீதகிருஷ்ணனிடம், விடாப்பிடியாகக் கேட்டபோது, "நீ போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்டை வாங்கி என்னய்யா செய்யப் போறே? கேஸா போடப் போறே? ஏதோ பெயர் தெரியாத விஷத்தைக் குடிச்சுட்டுச் செத்துட்டானும். போ!' என்று என்னை விரட்டிவிட்டார். எங்களுக்கு வேறு வழி தெரியவில்லை. என் மகன் இறந்த காரணம் எங்களுக்குத் தெரிந்தே ஆக வேண்டும். அதற்காகத்தான் கல்கிக்கு எழுதினேம். நீங்கள்தான் எங்களுக்கு உதவ வேண்டும்!" என்ருர் தென்காசி தாலூகாவிலுள்ள ஊர் மேலழகியான் கிராமத்தில் வசிக்கும் ராஜரத்தினம். அருகிலிருந்த அவர் மனைவி ஜானகி, மகனை இழந்த சோகத்தில் விசித்து விசித்து அழுது கொண்டிருந்தார்.

நாங்கள் அவர்கள் தரப்பு வாதத்தைக் கேட்டுக் கொண்டு அருகிலிருக்கும் மங்களாபுரம் சென்று பள்ளியின் மானேஜர் — கரஸ்பான்டென்ட் முத்தையாவையும் அவர் மகன் எட்வர்ட் ராஜையும் சந்தித்துக் கேட்டோம். அவர்கள் மனம் பதைத்துப் போய்விட்டார்கள்.

"எங்களுக்குச் சேவை செய்வதுதான் லட்சியமே தவிர, மதம் மாற்றுவதென்பதையெல்லாம் நாங்கள் நினைத்துக் கூடப் பார்த்தது கிடையாது. இத்தனை குற்றச்சாட்டுகளைச் சொல்லும் இறந்து போன மயில்



* வார்டன் முத்தையா

வாகனனின் தந்தை ராஜரத்தினம் எங்கள் பள்ளியில் படித்தவர்தான். மகனின் இறப்பைக் காரணமாக வைத்து எங்களிட மிருந்து பணம் கறப்பதற்குத்தான் இப்படிச் சொல்கிருர். வேறென்றுமில்லே. வேண்டு மாளுல் ஹாஸ்டல் வார்டனை வரச் சொல் கிறேம் விசாரித்துப் பாருங்கள். ராஜரத்தி னம் அன்று காலே தன் மகனை அடித்துவிட் டார். அதனுல்தான் அவன் அரளி விதை சாப்பிட்டுத் தற்கொலே செய்து கொண் டான். வேறு எதுவுமே இல்லே. இதுதான்



* எட்வர்ட் ராஜ்

உண்மை....'' என்ருர்கள்.

வார்டன் முத்தையா வந்தார். ''சார், நான் வழக்கமாக இரவு ஒன்பது மணி வரை ஹாஸ்டல் மாணவர்களுக்கு 'ஸ்டடி கிளாஸ்' எடுத்துவிட்டுப் பிறகுதான் வீட்டுக்குச் செல் வேன். அப்படிச் சென்றபோதுதான் வீட் டுக்கு வந்த மாணவர்கள், 'மயில்வாகனன் அரளி விதை சாப்பிட்டுவிட்டான் சார்!' என்ருர்கள். நான் உடனே போய்ப் பார்த் தேன். பிறகு நாங்கள் அவனை உடனடியாகக் கடையநல்லூர் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்றேம்... இதுதான் நடந்தது!'' என்ருர் வார்டன் முத்தையா.

''அவன் அரளி விதைதான் சாப்பிட்டிருக் கிருன் என்பது உங்களிடம் வந்து சொன்ன மாணவர்களுக்கு எப்படித் தெரிந்திருந்தது?''

''அவன் மாலேயே ஒருமுறை அரளி விதை சாப்பிட முயற்சி செய்தபோது ஒரு மாண வன் அவனைத் தடுத்திருக்கிருன் சார். அப் போது தடுக்கப்பட்டுவிட்டதால், இரவில் சாப்பிட்டிருக்கிருன்.''

''மாலேயிலேயே அவன் அரளி விதை சாப்பிட முயற்சி செய்தது பற்றி அப்போதே யாரும் வந்து உங்களிடம் சொல்லவில் லேயா?''

''சொல்லவில்லே சார். இரவுதான் வந்து சொன்ஞர்கள்.''

''இரவு வந்து சொன்னபோது எத்தனை மணி இருக்கும்?''

''சுமார் எட்டரை மணி இருக்கும் சார்.''

''நீங்கள் வழக்கமாக ஒன்பது மணிக்குத் தானே ஸ்டடி கிளாஸ் முடிந்து செல்வீர் கள்!''

''அன்று வீட்டுக்கு விருந்தாளிகள் வந் திருந்ததால் முன்னுடியே போய்விட்டேன் சார்!'' என்ருர் வார்டன் முத்தையா.

சரியென்று கடையநல்லூர் அரசு மருத் துவமனைக்குச் சென்று மயில்வாகனின் பிரே தத்தைப் பரிசோதனை செய்த டாக்டர் சுவாமி தாஸைச் சந்தித்துக் கேட்டோம்.

சுமார் அரைநிமிடம் மௌனமாக இருந்த அவர், ''நான் எப்படி போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட் தர முடியும்? அதெல்லாம் மாஜிஸ்ட்ரேட்டுக்கு விண்ணபித்துத்தானே வாங்க வேண்டும்!'' என்ருர்.

''எல்லாமே சரி, உங்களிடம் பலமுறை போஸ்ட் மார்ட்டம் ரிப்போர்ட்டுக்காக வந்து அலேந்த ராஜரத்தினத்திடம், மாஜிஸ்ட் ரேட்டுக்கு விண்ணப்பித்துத்தான் அதைப் பெற முடியும் என்று ஒரே வரியில் சொல்லி யிருக்கலாமே! ஏன் சொல்லவில்லே?'' என்று கேட்டபோது, மௌனத்தைத் தவிர அவரிட மிருந்து வேறு எந்தப் பதிலும் வரவில்லே.

இறுதியாக கடையநல்லூர் எஸ்.ஐ. நவ நீதகிருஷ்ணனைச் சந்திக்க முயற்சி செய் தோம். ஆனுலும் முடியவில்லே.

நாம் விசாரித்த வரையில் சிறுவன் மயில் வாகனனுடைய மரணத்தில் இன்னமும் விடை காணப்படாத பல சந்தேகக் கேள்வி கள் எழத்தான் செய்கின்றன. அவற்றுள் மகனின் மரணத்துக்கு உண்மைக் காரணம் அறிய முயலும் தந்தைக்கு போஸ்ட்மார்ட் டம் ரிப்போர்ட் கூடத் தரப்படாமல் மறுக் கப்படுவது பெரிய அநீதியாகத் தோன்று கிறது. குற்றம் நடக்குமிடத்தில் கடுமை காட்ட வேண்டிய காவல்துறை, சராசரிக் குடிமகனிடம் கருணை காட்டவும் கற்க வேண் டும். இந்த நியதி தலேகீழாக மாறுமானுல் தமிழகத்துக்கு விமோசனமே இல்லே!

— பிரின்ஸ்

# வீட்டுக்கார சொர்ணத்தாச்சி

## வண்ணநிலவன்

"என்னடா இந்தப் பொம்பளை இத்தனை கண்டிஷன் போடுதாளேன்னு வருத்தப்படாதீய..... எதையுமே கறுராப் பேசிக்கிறது ஒங்களுக்கும் நல்லது, எனக்கும் நல்லது. என்ன சொல்லுதீய?"

"சரிதான்... சொல்லுங்க..."

"பம்பு அடிக்கும்போது மெதுவா அடிக்கணும். தக்குபுக்குன்னு அடிக்கக் கூடாது. பம்புக்கு வாஸர் போடணும்னு வாடகைக்குக் குடியிருக்கவுஹதான் துட்டுப் போட்டு வாஸர் வாங்கிப் போடணும்.... என்ன சொல்லுதீய?"

"சரி.... சொல்லுங்க....."

"ராத்திரி ஒம்பது மணிக்கி யாரா இருந்தாலும் வீட்டுக்குள்ள வந்திரணும். சரியா ஒம்பதுன்னு ஒம்பதுக்குத் தலைவாசல் கதவச் சாத்திடுவேன். அப்புறமா அம்மான்னாலும் முடியாது. அய்யான்னாலும் தொறக்க முடியாது.... கதவைத் தாழ்ப்பாள் போட்டு, சாவியை நான்தான் வச்சிருப்பேன்..."

"ஒம்பது மணிக்கே வெளிக் கதவைப் பூட்டிடுவீங்களா? ஒரு அஞ்சு பத்து நிமிசம் லேட்டா வந்தாக்கூடக் கதவத் தொறக்க மாட்டீங்களா?"

"அதுதானய்யா இத்தனை நேரமும் சொல்லுதேன்... விடிய விடிய ராமாயாணம் கேட்டுட்டு, சீதைக்கி ராமன் சித்தப்பான்ன கதையிலலா பேசுதீய.... என்ன சொல்லுதீய?"

"சரி சொல்லுங்கம்மா...."

"வீட்டுக்குள்ள கண்ட எடத்துலயும் ஆணி அடிக்கக் கூடாது. விறகு அடுப்பு வச்சு சமையல் பண்ணக் கூடாது.... சமையல் கட்டுலே ஒரு பொட்டுக் கரியைப் பார்த்தாலும் எனக்குப் புடிக்காது.... என்ன சொல்லுதீய?"

"சொல்லுங்கம்மா...."

"ஏன்னா எல்லாத்தையும் நீங்க குடி வர்றதுக்கு முன்னாலேயே பேசிக்கிட்டா ஒங்களுக்கும் நல்லது எனக்கும் நல்லது பாருங்க... என்ன சொல்லுதீய?"

சொர்ணத்தாச்சி நாலு வார்த்தைக்கு ஒரு வார்த்தை 'என்ன சொல்லுதீய?' 'என்ன சொல்லுதீய?' என்று எதிரே இருப்பவரைப் பார்த்துக் கேட்டுக் கொள்வாள். அப்படியொரு பழக்கம்.

"சொல்லுங்கம்மா..."

"ஆங்.... சொல்ல மறந்துட்டேனே... துணிமணிகளை மொட்டை மாடியிலே கொண்டு போயிக் காயப் போடக் கூடாது. மொட்டை மாடிக்கி யாரும் போகவே கூடாது. வத்தல் போடுதேன்; துணி காயப் போடுதேன்.... வீட்டுக்கு வந்த விருந்தாள்களைப் படுக்க வைக்கேன்னு ஆரம்பிச்சிரக் கூடாது... என்ன சொல்லுதீய?"

"............"

"இத்தனை கண்டிஷனுக்கும் ஒத்து வர்றதா இருந்தா மவராசனா வாங்க... ம்... சொல்ல மறந்துட்டேனே விருந்து கிருந்துன்னு ஊர்லாம் பட்ட ஆட்களை வீட்டுக்குள்ள அடைச்சு வச்சிரப்படாது.... ஏதோ ஒரு ஆளு, ரெண்டு ஆளு வந்தாப் பரவாயில்லை. அதுவும் மிஞ்சி மிஞ்சிப் போனா ஒரு மூணு நாளு தங்கியிருக்கலாம். ஒரேயடியா மாசக் கணக்கிலே டேராப் போட்டு உக்காந்தா நீங்கதான் அடுத்த மாசமே வீட்டைக் காலி பண்ணணும். என்ன சொல்லுதீய?"

"சரிம்மா.... சொல்லுங்க..."

"என்னடா, இந்த வீட்டுக்கார ஆச்சி கண்டிசன் மேல கண்டிசனாப் போடுதாளேன்னு பாக்காதீய.... நாளையும் பின்னயும் நீங்களும் நல்லா இருக்கணும், நானும் நல்லா இருக்கணும் பாருங்க.... எனக்கு இந்த வீட்டு வாடகை வந்துதான் வயிறு நெறையணும்கிறது இல்லை. எம் மவன் மிலிட்டரியிலே இருக்கான். எங்க வீட்டு அய்யா நயினாகுளம் பக்கத்துலே நாலு மரக்கா வெதைப்பாடும், பேங்குல ரெண்டு லட்சத்திச் சொச்சம் ரூபாயும் விட்டுட்டுத்தான் மண்டையப் போட்டாஹ... அந்த அதியாரி இருந்தாஹன்னா நான் இந்த மாதிரி வீட்டை விட்டு வெளியில வந்து நின்னு பேசுவனா? அது கெடக்கட்டும்... எங்கதை என்னோட.... இத்தனை கண்டிசன் இருக்கு. சம்மதமன்னா வாருங்க... இங்க இருக்க எட்டுக் குடித்தனங்களும் இப்படித்தான் இருக்குதுஹ... என்ன சொல்லுதீய?"

"சரிம்மா.... வீட்டு வாடகை..."

"வாடகை எரநூறு ரூபா.... ரெண்டாயிர ரூபா அட்வான்ஸு.... அட்வான்ஸைப் போகும் போதுதான் திருப்பித் தருவேன்.... வீட்டைக் காலி பண்றதுன்னா ஒரு மாசத்துக்கு முந்தியே அட்வான்ஸா வீட்டைக் காலி பண்ணப் போறேன்னு சொல்லிப்புரணும்... என்ன சொல்லுதீய....?"

அந்தப் பக்கம் பதில் இல்லை. சிறிது நேர மௌனத்துக்குப் பின்னர்: "அட்வான்ஸ் தான் கொஞ்சம்...."

"அய்யா அதான் சொல்லிட்டனே,

காலணுக் கூட கொறைக்கதுக்கு இல்ல... இஷ்டம்னு வாங்க.... என்ன சொல்லுதீய?''

''ரொம்பச் சரிங்க... நல்ல நாள் பாத்து வந்துடறோம். நாளைக்கிக் காலம்பற அட்வான்ஸ் தந்துடறோம்.''

''சொல்லுதனேன்னு கோச்சுக்கிடாதீய. நீங்க அட்வான்ஸ் தர்றதுக்கு மிந்தி ஆராவது வந்து தந்துட்டாஹன்ன அவுஹளுக்குத் தான் வீடு.... பொறவு வந்து... என்ன ஆச்சி! வீட்டை விட்டுட்டீஹளான்னு கேளாதீய.... சம்மதமா....? என்ன் சொல்லுதீய?''

''சரிம்மா... காலையில எட்டு எட்டரைக்கெல்லாம் வந்து தந்திடுதோம்...''

''மவராசனுப் போயிட்டு வாங்க...''

'**சொ**ர்ணத்தாச்சி வளவு' என்கிற அந்த வீடுகளுக்குக் குடி வருகிற நபர்கள் இன்னும் பல விசித்திரமான கண்டிஷன்களுக்கும் ஆளாக வேண்டும். அந்தக் கண்டிஷன்களெல்லாம் வீட்டுக்குக் குடி வந்த பிறகு தான் அனுபவத்தில் ஒவ்வொன்றாகத் தெரிய வரும். ஆச்சியின் கெடுபிடிகளைப் பற்றித் திருநெல்வேலி டவுனில் கேள்விப்படாத ஆளே இருக்க முடியாது.

''ஐயோ, நீங்க சொர்ணத்தாச்சி வீட்டு வளவிலேயா குடியிருக்கீஹ.... அடப் பாவமே... உக்காந்தாக் குத்தம், நின்னுக் குத்தம்பாளே அந்த ஆச்சி....'' என்று சொர்ணத்தாச்சி வீட்டில் குடியிருக்கிற



ஜீவன்களை, ஏதோ கூண்டுக்குள் அடைபட்டிருக்கிற சர்க்கஸ் மிருகங்களைப் பரிதாபத்துடன் பார்க்கிற மாதிரி பார்ப்பார்கள். ஆனால் ஆச்சியின் அத்தனை கெடுபிடிகளுக்கும் மசிந்து கொடுத்து, அந்த வளவில் குடியிருக்கக் காரணம் தண்ணீர் வசதி. பம்பில் எந்த நேரமும் தண்ணீர் வரும். காலையில் ஆற்றுக்குக் குளிக்கப் போவதற்கும் ரொம்பச் சௌகரியம். நெல்லையப்பர் கோவில், காய்கறி மார்க்கெட், பள்ளிக்கூடம் எல்லாம் பக்கத்தில் பக்கத்தில்தான். இந்தச் சௌகரியங்கள், சொர்ணத்தாச்சி தரும் கெடுபிடிகளை மறக்கடிக்கச் செய்து விடுகின்றன.

எல்லா வீடுகளையும் வாடகைக்கு விட்டுவிட்டு சொர்ணத்தாச்சி, மாடியில் இரண்டே இரண்டு அறைகளை மட்டும் தனக்கென்று வைத்துக் கொண்டாள். ஓர் அறையில் மிலிட்டரியில் இருக்கிற அவளுடைய ஒரே மகனுடைய மிலிட்டரி டிரங்க் பெட்டிகளும், புழங்காத சாமான்களுமாகக் கிடைக்கும். இன்னோர் அறையைத் தான் புழங்கி வந்தாள்.

• எல்லா வீடுகளிலுமாக இரண்டாயிரம் ரூபாய் வரை வாடகை வருகிறது என்றாலும் ஆச்சி தன் வீட்டில் சமையல் செய்வதைப் பார்க்கவே முடியாது.. காலையில் மட்டும் யாராவது பையன்களை அனுப்பி ஹோட்டலில் இட்லி வாங்கிச் சாப்பிடுவாள். மதியமும், இரவுச் சாப்பாடும் அனேகமாக அங்கே வாடகைக்குக் குடியிருக்கிற குடித்தனக்காரர்கள் வீட்டிலோ அல்லது உறவினர்கள் வீட்டிலோதான் நடக்கும்.

மனிதர்களுக்கு வம்பளக்கும் பலவீனம் உண்டு என்பது ஆச்சிக்குத் தெரியும். யார் யாருக்கு எந்த மாதிரி வம்புகள் பிடிக்கும் என்பதும் ஆச்சிக்குக் கரதலப் பாடம். இரண்டாவது வீட்டில் குடியிருக்கிற கோமதி நாயகமும், அவர் பொஞ்சாதியும் சினிமா பைத்தியங்கள். அவர்கள் வீட்டிற்குப் போனால் தியாகராஜ பாகவதர் காலத்துச் சினிமாக் கிசுகிசு முதல், தற்கால நவீன சினிமாக் கிசுகிசுவரை அவிழ்த்து விடுவாள். குழாயடி வீட்டில் குடியிருக்கிற கௌரிக்கு, வேம்படித் தெருவில் குடியிருக்கிற அவள் நாத்தனாரைப் பற்றிப் பேச ஆரம்பித்தாலே போதும். சோறு தண்ணி கூட வேண்டாம். சொர்ணத்தாச்சி அவள் நாத்தனாரின் நடையுடை பாவனைகளைக் கேலி பண்ணி கௌரியை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தி விடுவாள். அதற்குள் சாப்பாட்டு நேரமே வந்துவிடும்.

''ஏளா பாத்தியா.... பேசிக்கிட்டே இருந்ததுலே நேரம் காலமே தெரியலே.... இரு... போயி ரெண்டு வாயி சோத்தை அள்ளிப் போட்டுட்டு வாரேன்...'' என்று மெதுவாக எழுந்திருப்பாள். தவறு, எழுந்திருக்கிறமாதிரி பாவனை செய்வாள்.

கௌரி விடுவாளா? அவள் மனத்தையெல்லாம் சர்க்கரைப் பாகாக இனிக்க வைத்து விட்டிருக்கிற ஆச்சியின் பேச்சை இன்னும் ஓர் இரண்டு மணி நேரமாவது கேட்க வேண்டாமா?

''ரெண்டு வாய்ச் சோத்தை அள்ளிப் போடறதுக்காக நீங்க மாடிப்படி ஏறி எறங்கணுமாக்கும்... அந்தச் சோத்தை இங்க உக்காந்து அள்ளிப் போட்டாத்தான் என்னவாம்...'' என்று தட்டில் சாப்பாட்டை எடுத்துக் கொண்டு வந்து ஆச்சியின் முன்னால் வைத்தே விடுவாள்.

''எனக்கு மக இல்லாத குறையைத் தீர்க்கத்தான் காந்திமதி அம்மனே உன் ரூபத்திலே வந்திருக்காம்மா....'' என்று சொல்லிவிட்டுச் சாப்பாட்டை ஒரு பிடி பிடித்து விடுவாள்.

ராத்திரிச் சாப்பாட்டுக்கு இதேபோல் இன்னொரு கோமதி, அல்லது கோமதி நாயகத்து வீடு. அவளுக்கு ப்ரீதியான விஷயத்தைப் பேசி அவளைக் கிறங்கடித்துச் சாப்பாட்டை முடித்துக் கொள்வாள்.

ஆச்சிக்குத் தெரிய யாரும் அமிர்தாஞ்சனமோ, விக்ஸோ தேய்த்து விடக் கூடாது. வாசனை எந்த வீட்டிலிருந்து வருகிறது என்பதைக் கண்டுபிடித்து அவர்கள் வாங்கி வைத்திருக்கிற பாட்டில் காலியாகிற வரை அவ்வப்போது வந்து வாங்கி, தைலத்தை எண்ணெய் தேய்க்கிற மாதிரி தேய்த்துக் கொள்வாள்.

குடியிருக்கிறவர்கள் ரேடியோ வைத்திருந்தால் போச்சு. ஆச்சி ஒரு ரேடியோ பைத்தியம். ராத்திரி பத்து மணிக்கு ஒலிபரப்பாகும் நேயர் விருப்பத்தில் வாரம்தோறும் 'திருநெல்வேலி டவுன் சொர்ணத்தம்மாள்' என்கிற நேயரின் பெயர் வாசிக்கப்படுவதைக் கேட்டிருக்கிறீர்களா? அந்த நேயர் நமது வீட்டுக்கார ஆச்சியேதான். தினசரி சென்னை, திருச்சி, திருநெல்வேலி ரேடியோ நிலையங்களுக்கு, நாலாவது வீட்டில் குடியிருக்கிற அர்ஜுனனின் மகனிடம் சொல்லி, தனக்குப் பிடித்தமான சினிமாப் பாட்டுக்களை ஒலிபரப்பக் கேட்டுக் கார்டுகளைத் தட்டிவிட்டுக் கொண்டே இருப்பாள். அந்தத் தெருவில் 'நேயர் விருப்ப ஆச்சி' என்றே ஆச்சிக்குப் பெயர் உண்டு.

நேயர் விருப்ப நேயராக ஆச்சி இருந்தாலும் ஆச்சியின் வீட்டில் நூறு ரூபாய் டிரான்ஸிஸ்டர் கூடக் கிடையாது. அப்படியானால் ஆச்சி எப்படித் தனக்கு விருப்பமான பாடல்கள் ஒலிபரப்பப்படுவதைக் கேட்கிறாள் என்று உங்களுக்குத் தோன்றலாம். இதிலும் ஆச்சியின் சாமர்த்தியமே தனிதான். நேயர் விருப்ப நிகழ்ச்சி இருந்தால், அதற்கு ஒரு மணி நேரத்துக்கு முன்பே சாமர்த்தியமாக வீட்டுக்குள் வந்து உட்கார்ந்து கொண்டு, நம்மை ரேடியோப் போட வைத்துவிடுவாள்.

ஆச்சியின் ரேடியோத் தொந்தரவு பொறுக்க முடியாமல் வீட்டைக் காலி செய்து கொண்டு ஓடிய குடும்பங்கள் பல. சிலர் தங்கள் வீட்டில் இருந்த ரேடியோக்களையே விற்றுவிட்டார்கள்.

எல்லா வீடுகளுக்கும் தனி மீட்டர் இருக்கிறது. என்றாலும், இரவு அகால நேரத்தில் எந்த வீட்டிலாவது விளக்கு எரிகிறதா என்று ஆச்சி மோப்பம் பிடிப்பாள். எல்லா போர்ஷன்களும் ஓடு போட்டவைதான். இதனால் வீட்டினுள் விளக்கு எரிந்தால் ஓடுகளுக்கு

** சிறந்த ஆசிரியர் மாணவன் நிலைக்கு இறங்கி வந்து, அவன் கண்களால் பார்த்து, அவன் காதுகளால் கேட்டு, அவனது அறிவாற்றலுக்கு ஏற்பப் புரிந்து கொண்டு உணர்த்தவும் செய்வார்.

# பரிசு ரூ.200/-

## பொன்மொழிப்போட்டி — 7

இந்த இதழின் உள்பக்க மார்ஜின்களில் ஐந்து பொன்மொழிகள் தரப்பட்டுள்ளன. அவை பின் வரும் ஐந்து பேர் கூறியவை. எதை யார் சொன்னது? பொருத்தம் பார்த்து அந்தந்தப் பெயர் எதிரே பிழையின்றி எழுதி, விலாசத்துடன் கூப்பனைப் பூர்த்தி செய்து, இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்திரித்து எங்களுக்கு அனுப்புங்கள். ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும். உறையின் மீது 'பொன்மொழிப் போட்டி — 7' என்று அவசியம் குறிப்பிடவும்.



**ராபர்ட் லூயி ஸ்டீவன்ஸன்:**

**சத்யசாயி பாபா:**

**விவேகானந்தர்:**

**ராஜாஜி:**

**பெர்னுர்ட் ஷா:**

**முடிவு தேதி: 4.3.87**

என் பெயர்: ..........................................

விலாசம்: ..........................................

..........................................

இடையே உள்ள இடுக்குகளின் வழியாக விளக்கு வெளிச்சம் வெளியே தெரியும்.

"ஏள.... இம்புட்டு நேரத்துலே வெளக்குப் போட்டு என்னம்மா செய்த.... வெளக்கை அணே" என்ற ஆச்சியின் குரல் கேட்கும்.

தனக்குப் பிடிக்காத குடித்தனத்தைக் காலி செய்ய ஆச்சி கையாளும் நடவடிக்கைகள் ரொம்ப டிப்ளமேட்டிக் ஆனவை. இந்த விஷயத்தில் ராஜதந்திரிகள் எல்லாம் ஆச்சியிடம் கைகட்டி நிற்க வேண்டும்.

யார் யார் எப்படி என்பதை ஆச்சியின் கூர்மையான அறிவு அவர்களுடன் பழக ஆரம்பித்த சில தினங்களிலேயே எடை போட்டு வைத்துவிடும். ஆளுக்கு ஏற்றபடி காலி செய்யும் நடவடிக்கைகளும் இருக்கும்.

சற்றுப் படித்தவராக, விவரம் தெரிந்தவராக இருந்தால் அவர்களுக்குப் புரிகிற மாதிரி ஜாடையாகப் பேசுவது, கேலி பேசுவது, அக்கம்பக்கத்தில் உள்ளவர்களிடம் அவர்களைப் பற்றி அவதூறுகளைக் கிளப்பி விட்டு விடுவாள். அந்த வீட்டுக்காரங்கள் பம்பில் தண்ணீர் அடிக்க வந்தால், அவர்கள் காதில் விழுகிற மாதிரி, "மனுஷாள்கள் தண்ணீர் அடிச்சா மெதுவா அடிப்பாஹ... மாடுங்க மாதிரி தண்ணீர் அடிச்சா... பம்பு எத்தனை நாளைக்கி வரும்?" என்று சத்தம் போட்டுச் சொல்லுவாள். கொஞ்சம் உணர்வுள்ள குடித்தனக்காரர்கள் இந்த அவமரியாதைகளைச் சகிக்க முடியாமல் காலி செய்து ஓடி விடுவார்கள்.

எதற்கும் மசியாத கடோத்கஜர்களை விரட்ட ஆச்சி கையாளும் நடவடிக்கைகள் அவர்களுடைய குணத்துக்கு ஏற்ற மாதிரி இருக்கும். வீட்டுப் புரோக்கர்கள் மாதிரி, வீட்டைக் காலி செய்து தருவதற்கும் பழைய பேட்டைக்குப் பக்கத்தில் சில புரோக்கர்கள் இருக்கிறுர்கள். சம்பந்தப்பட்ட குடித்தனக்காரர்கள் வேலைக்குப் போய்விட்டுத் திரும்புகிற வழியில், குடித்துவிட்டு, அவர்களை வம்புச் சண்டைக்கு இழுப்பார்கள். ஒருத்தன், "ஆச்சி வீட்டிலே இருந்துக்கிட்டு காலி பண்ண மாட்டேங்கிறீயா ராஸ்கல்..." என்று சத்தம் போடுவான். இதற்கும் மசியாத ஆட்களை வீட்டுக்குள் புகுந்து சாமான்களை எடுத்துப் போட்டு விரட்டி விடுவார்கள்.

"ஆச்சி.... ஆச்சி.... யாரோ ஒங்க வளவுலே வீடு வாடகைக்கு இருக்குதுன்னு சொன்னுஹ.... வீடு கிடக்குதா ஆச்சி...." என்று விசாரிக்கிறுர்கள்.

"ஆரு....? அடே ராமய்யாவா, ஒனக்கு இல்லாத வீடாப்பா... வா.... வீட்டை வந்து பாரு.... புடிச்சிருக்குதா பாரு.... அப்புறமா வாடகையைப் பத்திப் பேசுவோம். செத்த மிந்திக் கூட ஒருத்தர் வந்து பாத்துட்டுப் போனுரு. நீயும் பாரு.... யாரு மிந்தி அட்வான்ஸ் தாரீஹளோ அவுஹளுக்குத்தான் வீடு.... என்ன சொல்லுத?"




"அதோ வரான் சசி...." சிவா முகத்தில் மலர்ச்சி.

"என்ன மச்சி இன்னிக்கு இப்படி லேட் பண்ணிட்டே?" என்றான் கோபி.

"இல்லேடா கோபி! நம்ம வேணு தெரியாது வேணு.... அவன் ஒரு டிரபிள்லே மாட்டிக்கிட்டாண்டா...."

"எந்த வேணுடா?"

"என்ன சிவா? எங்க தெருவுக்கு நாலாவது தெருவிலே ஒரு டெய்லர் கடை இருக்கில்லே, அதுக்கு எதிர் வீடு—'பிரின்ஸ்' காலேஜ்லே படிச்சானே அந்த வேணுடா!"

"ஓ! அவனா? சரிசரி! சொல்லு."

"வேணுவும் மூர்த்தியும் ரொம்பவே பிரெண்டுங்கடா. இவனும் அவனும் எப்பவுமே ஒண்ணாத்தான் சுத்துவானுங்க. மூர்த்தி வீட்டுக்கு அடிக்கடி போற பழக்கம் வேணுவுக்கு. மூர்த்தி தங்கச்சி ஒருத்தி பிளஸ் டூ முடிச்சிட்டு நாலு வருஷமா வீட்டுலேயே இருக்கிறா. விமலான்னு பேரு. இந்த வேணுவுக்கும் விமலாவுக்கும் எப்படியோ ஒரு 'இது' வாயிட்டுது"

"ஓ! அதுதான் விஷயமா?"

"என்னடா கோபி அவ்வளவு கிண்டலா நீ கேட்டுட்டே? வேணு சும்மா பொங்கிப் பொங்கி அழுதுட்டாண்டா. ஒரு மாதிரி 'டிவைன் லவ்'வுடா அவங்க ரெண்டு பேருக்கும். அந்த விமலா இல்லேன்னா நான் தூக்கு மாட்டிக்கிட்டுச் செத்துடுவேன்னு சொல்லிட்டு, ஒன்னு அழுதுட்டாண்டா வேணு. ஒரு மாதிரியா, அவனைச் சமாதானப்படுத்திட்டு வந்திருக்கிறேன்."

"இதோ பார் சசி.... இப்ப இதுலே வேணுவுக்கு என்னடா பிரச்னை?"

"மூர்த்திக்கு விஷயம் தெரிஞ்சி போயிட்டுதுடா. அவ்வளவுதான். அவன் தங்கச்சியைப் போட்டுப் பின்னி எடுத்திட்டிருக்கிறான். வேணுகிட்டேயும் ஒரே சண்டை...."

"என்னான்னு சண்டை போட்டானாம்?"

"ஒன்னை என் வீட்டுப்படி ஏற விட்டதே தப்பு'ன்னு கத்தியிருக்கிறான் மூர்த்தி. என்னவோ சமாதானம் சொல்லியிருக்கிறான் வேணு. "உன்னை நம்பிக்கையாத்தானேடா கூப்பிட்டு வீட்டுக்குள்ளே ஒக்கார வெச்சிக்கிட்டேன். ஒன் திருட்டுப் புத்தியைக் காட்டிட்டியேடா. என் தங்கச்சியையே வளைச்சுப் போட்டுட்டே! இது கொஞ்சமாவது நியாயமாடா? என்ன திமிர் இருந்தா இப்படிச் செய்திருப்பேன்'னு . தலைமுடியைக் கொத்தாப் பிடிச்சுக்கிட்டு, 'பளீர் பளீர்'னு நாலு அறை அறைஞ்சிருக்கிறான்...."

"பின்னே என்னடா சசி? விமலா அவன் கூடப் பிறந்த தங்கச்சியாச்சே, மூர்த்திக்குக் கோபம் வராதா?"

"இதுலே கோபம் வர என்னடா, சிவா இருக்குது? அன்பாலே — காதலாலே இணைஞ்ச உள்ளங்களைப் பிரிக்கிற சக்தி உலகத்திலே யாருக்குமே கிடையாதுடா. மூர்த்தி என்னமோ ஊர்லே உலகத்துலே எவனுமே பண்ணாத தப்பை, வேணு பண்ணிட்ட மாதிரி எகிறி எகிறிக் குதிக்

** கடவுள் பக்தி என்பது பூஜை அறையோடு முடிந்து போவதல்ல: கடவுளை நீ எல்லாரிடமும் காண பூஜை உதவ வேண்டும் — உன் எதிரிகளிடமும் கூட!

கிறான்!''

''அட போடா! தங்கச்சின்னு வர்றப்போ அவன் அவனுக்கும் ஆத்திரமாத்தான் இருக்கும். என்ன மாதிரி மாப்பிள்ளைக்குக் கொடுக்கணும்னு அண்ணன்காரன் கனவு கண்டுகிட்டு இருந்தானோ?''

''என்ன சிவா? வேணு என்ன கொலை பாதகமா பண்ணிட்டான்? சரி.... வேறே ஜாதி! இருக்கட்டுமே! இவனுங்கபிரெண்ட்ஸ் ஆகறதுக்கு ஜாதி பாத்தாங்களாமா? அப்புறம் காதலுக்கு மட்டும் எப்படிடா கண்டிஷன் போட முடியும்?''

''சரிடா! என்ன பண்ணணும்னு சொல்றே?''

''புதன்கிழமை காலையிலே வேணுவும், விமலாவும் ரகசியமா பக்கத்து ஊரு முருகன் கோயில்லே கல்யாணம் முடிச்சிக்கிறாங்க. கல்யாணம் நல்லபடியா நடந்து முடியறதுக்கு நீயும், நம்ம நண்பர்கள் ரெண்டு மூணு பேரும் வேணுவுக்குப் பக்கபலமா நிக்கறீங்க. சரியா!''

சசி முடித்துவிட்டான். அந்தக் குரூப்பில் அவன் சொன்னால் சொன்னதுதான்.

**கோ**பி சசியைப் பார்க்கக் கிளம்பிக் கொண்டிருந்தான்.

த்த்ட்டார்.... கதவு புயல் வேகத்தில் திறந்து கொண்டது.

குடிகாரனைப் போல, தாறுமாறான தோற்றத்தில் நிற்பது — சசிகுமாரா? கோபிக்கு ஒன்றும் புரியவில்லை.

என்ன ஆயிற்று இவனுக்கு? உடம்பு சரியில்லையா? கண்கள் ஏன் இப்படிச் சிவந்து கிடக்கின்றன?

''அவன் வந்துட்டானா? அந்தத் திருட்டுக் கழுதை சிவா வந்துட்டானா?''

''தெரியாது சசி. நாம் தினமும் சந்திக்கிற இடத்துக்குத்தாண்டா கிளம்பிக்கிட்டிருக்கிறேன். அவனும் அங்குதான் வருவான்.''

''வரமாட்டான். அவனை எல்லாத்தையும் எடுத்துக்கிட்டு, இங்கே வரச் சொல்லியிருக்கிறேன்!''

சசிக்கு மூச்சு இழைந்தது. நாகப் பாம்பின் சீற்றம் தெரிந்தது. ''என்னடா சசி சொல்றே? ஒண்ணுமே புரியலேடா...''

''அவன்... அந்தப் படுபாவி சிவா என் தலையிலே மண்ணை அள்ளிப் போட்டுட்டாண்டா. என்ன திமிர் இருந்திருந்தா அன்னக் காவடிப் பய — ஊரை விட்டு ஊரு பொழைக்க வந்த பய — என் தங்கச்சிக்குக் கத்தைக் கத்தையா லவ் லெட்டர்ஸ் கொடுத்திருப்பான்? சின்னப் பொண்ணு மனசைக் கொழப்பிட்டானே! அவளைக் காதல் ஊதல்னு என்கிட்டேயே சொல்ல வெச்சிட்டாண்டா அந்த ராஸ்கல். எங்க அம்மா தலைதலைன்னு அடிச்சிக்கிட்டு அழறாங்க.''

''வந்து சசி.... நீ முதல்லே ஒக்காருடா!''

''எப்படிடா முடியும்? படுபாவியை என் கூடப் பொறந்தவனாட்டம் என் வீட்டுக்கு எத்தனை தடவை கூட்டிக்கிட்டுப் போயிருப்பேன்? எங்கம்மா ஒக்கார வைச்சு எத்தனை நாளு சோறு போட்டிருப்பாங்க? இப்படித் துரோகம் பண்ணவாடா நல்லவனாட்டம் என்கூட இழைஞ்சுக்கிட்டு இருந்தான்?''

அடிக்குரலில் உறுமினான் சசி.

''எதுக்கும் நீ நிதானமா...''

''சரிதான் நிறுத்துடா! ஒன் தங்கச்சியா இருந்தா அப்ப என்ன முடிவெடுப்பே? அப்படிநினைச்சுப்பாரு.பேசவந்துட்டான்...''

சிவாவுக்காகக் காத்திருக்கத் தொடங்கினான் சசி — ஆத்திரத்துடன்.

ஓ! அப்படி வேறு ஒரு கோணம் இருக்கிறதா? அப்படி ஒரு நிலை ஏற்பட்டுவிட்டால், தானும் சராசரி அண்ணனாக மாறி விடுவோமோ?

குழப்பத்துடன் கோபி சசிக்கு எதிரில் உட்கார்ந்து கொண்டான். நேரம் நகர்ந்து கொண்டிருந்தது.....

## மாதம் ஒரு மாவட்டம்

# சேலம்



தற்போது நமது நிருபர்களும் புகைப்படக் கலைஞரும் சேலம் மாவட்டத்தில் சுற்றுப் பயணம் செய்து பல்வேறு பிரச்னைகளை ஆராய்ந்து வருகிறார்கள். அவர்கள் எழுதும் பரபரப்பான கட்டுரைகளும் பேட்டிகளும் புகைப்படங்களுடன் மார்ச் 22, 29 கல்கி இதழ்களில் இடம்பெறும்.

# மாதம் ஒரு மாவட்டம்






# திருச்சிக்கு வருகிறோம்

கம்பீரமாய் உயர்ந்து நிற்கும் மலைக் கோட்டையும், வானம் தொட்டுவிடும் உயரந்தானோ என்று வியப்புறும் அளவுக்கு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீரங்கம் கோபுரமும், காவிரியின் அழகும் திருச்சிக்கே உரிய பெருமிதங்கள். கரிகால் சோழன் கட்டிய கல்லணையின் கட்டடக் கலையும் பொறியியலும் இந்த நூற்றாண்டில் மட்டுமல்ல, இனி வரும் எந்த நூற்றாண்டிலும் வியக்கச் செய்யும் அற்புதங்கள். கல்விக் கண் திறக்கும் கல்லூரிகளும் ஏராளம். இவற்றோடு பிரச்னைகளுக்கும் குறைவிருந்துவிட முடியாது என்பதில் சந்தேகமேயில்லை.

அதனால்தான், கல்கி ஏற்றிருக்கும் சமுதாயப் பணியில், பதினொன்காவது மாவட்டமாகத் திருச்சி மாவட்டத்தைத் தேர்ந்தெடுத்திருக்கிறோம். எனவே திருச்சி மாவட்டம் முழுவதிலுமுள்ள பிரச்னைகள் அல்லது அவரவர் ஊர்ப் பிரச்னைகள், இல்லையெனில், தனி மனிதர்களுக்கு இழைக்கப்பட்ட அநீதிகள் ஆகியவற்றோடு, அரசியல்வாதிகளுடைய — அமைச்சர்களுடைய — அதிகாரிகளுடைய மெத்தனப் போக்குகளையும் சமூக விரோதிகளுடைய அட்டகாசங்களையும் சுருக்கமாக எழுதி, உங்கள் முழு முகவரியோடு கல்கி அலுவலகத்திற்கு அனுப்புங்கள். இவற்றோடு உங்கள் மாவட்ட வளர்ச்சிக்கான ஆலோசனைகளையும் உங்கள் மாவட்டத்தில் நிகழ்ந்துள்ள சாதனைகளையும் சேர்த்தே எழுதலாம்.

கல்கி அலுவலகத்திற்கு வரும் உங்கள் ஒவ்வொருவருடைய கடிதமும் கவனமாகப் பரிசீலிக்கப்பட்டு, அவற்றில் முக்கியமானவற்றைத் தேர்ந்தெடுத்து, ஏப்ரல் மாத மத்தியில், நமது கல்கி பிரதிநிதிகள் திருச்சி மாவட்டம் முழுவதும் சுற்றுப்பயணம் செய்வார்கள்; உங்களைச் சந்தித்துப் பேசுவார்கள். அவர்கள் வரும் தேதி பற்றிய முழு விவரங்களும் பின்னர் தனித்தனிக் கடிதங்கள் மூலம் தெரிவிக்கப்படும்.

சுற்றுப் பயண முடிவில், கல்கி பிரதிநிதிகள், திருச்சி மாவட்டக் கலெக்டரைச் சந்தித்துத் தாங்கள் சேகரித்த பிரச்னைகளுக்குரிய விஷயங்களைப் பற்றிப் பேசி — விவாதித்துப் பதில்களைப் பெறுவார்கள். அவையெல்லாம் மே மாதக் கல்கி இதழ்களில், செய்திகளாகவும் பேட்டிக் கட்டுரைகளாகவும், புகைப்படங்களாகவும் பிரசுரமாகும்.

எல்லாவற்றையுமே பிரசுரித்துவிட முடியாது என்பது உண்மைதான் என்றாலும் நியாயமான பிரச்னைகள் அத்தனையும் மாவட்டக் கலெக்டரிடமும், சம்பந்தப்பட்ட மற்ற அதிகாரிகளிடமும் எடுத்துச் சொல்லப்படும். அதன் மூலம் அரசின் கவனத்தையும் அதிகாரிகளின் கவனத்தையும் திருப்ப முடியும். இவற்றோடு வாழ்க்கையின் நிஜங்களை வெளிச்சம் போட்டுக் காட்டுவதன் மூலம், நமது சகோதர மக்களிடமும் ஓர் ஒட்டு மொத்த விழிப்புணர்ச்சியை உண்டாக்க முடியுமல்லவா! உடனடியாக, எழுதுங்கள்.

**திருச்சி மாவட்டம் பற்றிய பிரச்னைகள், அநீதிகள் தவிர, சாதனைகளும் முன்னேற்றத்துக்கான ஆலோசனைகளும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 20.3.87.**

உறையின் மேல் 'மாதம் ஒரு மாவட்டம்— திருச்சி' என்று அவசியம் குறிப்பிடுங்கள். அது எங்கள் பரிசீலனைக்கு மிகவும் உதவியாய் இருக்கும்.

— ஆசிரியர்

# நீதி இல்லாத



காலையில், மணி ஒன்பதே ஒன்பதுதான். இரவில் படுத்ததோ, எட்டு மணிக்கு. அதற்குள் தூக்கத்தைக் கலைக்கும் வகையில், வீட்டுக் கதவில் மேளச் சத்தத்தை எழுப்பினால், கோபம் வராதா என்ன?

எழுந்து போய்க் கோபத்துடன் வாசல் கதவைத் திறந்தான் பண்டாரம்.

"காலங் காத்தால என்னய்யா கலாட்டா...." என்று அதட்டினான் வாசலில் நின்ற இளைஞனைப் பார்த்து.

"நான் கலாட்டா செய்து ஒரு மாதமாச்சு.... அதாவது அந்தக் கலாட்டா...." என்றபடி உள்ளே நுழைந்தான் இளைஞன்.

"விவரமாய்ச் சொல்லு... குவிக்காயும் சொல்லு... நான் பிஸி..."

"போன மாதத்துல.... ஒரு தேதியில.... ஒரு நாள்ல.... சாயங்காலத்துல.... ஒரு நேரத்துல... நடந்துட்டு... அன்னிக்கு நான் லீவு... அதுக்காக ஆபீஸ் போகப்படாதா என்ன? அந்தப் பக்கம்தான் மில்லிக் கடையே கீது... போனேன், போட்டேன் ஐந்நூறு மில்லி.... அப்படியே நம்ம தோஸ்து வாட்ச்மேன் வைகுண்டத்தைப் பார்க்கப் போனேன். 'ஆபீஸ்கா குடிச்சுட்டு வாறே'ன்னு அந்தக் குடிகார கஸ்மாலம் கத்துனான். இன்னா சாமி நாயம்....? ஆபீஸுக்குக் குடிச்சுட்டுப் போகாம... வேறே எங்கே போறதாம்? அவன் கெட் அவுட்டுன்னு கத்துனான். நான்தான் ரோஷக்காரனாச்சே... விட்டேன் ஒரு குத்து... அவனோட ஒரு பல்லு அவுட்டு... தெறிச்சு விழல... முழுசா விழுந்துட்டுது... பாரு சாமி இந்த அநியாயத்தை... இதுக்காக என்னை பியூன் வேலையில் இருந்து சஸ்பென்ட் செய்துருக்காங்க..."

"நீ வாட்ச்மேனை குடிச்சுட்டு அடித்திருக்கே...?"

"தப்பு சாமி. குடிச்சுட்டும் அடிச்சேன். அடிச்சுட்டும் குடிச்சேன்."

"இந்தா பாருய்யா... உப்பு தின்னவன் தண்ணீர் குடிக்கணும்... ஊறுகாய் தின்னவன் குழந்தை பெறணும்; இந்த விதியை யாராலும் மாற்ற முடியாது. போய்யா..."

"சாமி... நீயே இப்படிப் பேசினால், அதுவும் அந்த வாட்ச்மேன் மாதிரி...."

"நான் இப்போ உதவுகிற நிலையில் இல்லை. வீட்டுக்கு நூறு ரூபாய் அனுப்பணும். மாதக் கடைசி. யார்கிட்டேயாவது கெஞ்சிக் கூத்தாடி...."

"பன்னாடைப் பசங்ககிட்டே நீ கெஞ்சுறதா? இந்தத் தங்கம்மணி என்ன ஜெயிலுக்கா பூட்டான்? பிசாத்துப் பணம் நூறு ரூபாய். இந்தா...."

"ஒன்கிட்டே எப்படி வாங்குறதுன்னு யோசிக்கேன்..."

"யோசிக்கணுமுன்னா, அதுநான்தான்... விட்டுத் தள்ளு. இதோ ரைட் கையில கீற ரூபாய் நோட்டைப் பிடி... லெப்ட் கையில கீற ரிக்கார்டுகளைப் படி. என்குயரியில் நீதான் எனக்கு டிபென்ஸ் அஸிஸ்டென்ட்."

பண்டாரம், ரூபாய் நோட்டுக்களைச் சுறுசுறுப்பாகவும், ரிகார்டுகளைச் சோம்பேறித்தனமாகவும் வாங்கிக் கொண்டான். பணத்



தைக் கொடுத்து, பண்டாரத்தை விலைக்கு வாங்கிவிட்டதுபோல், தங்கமணி, கொத்தடிமைத்தனமாகப் பார்த்தான். உடனே லேசாகப் பயமெடுத்த பண்டாரம், இவன் வம்பே வேண்டாம்என்பதுபோல், பைக்குள் கிடந்த ரூபாய் நோட்டை எடுக்கப் போனான். கைவலித்தது. தங்கமணியைப் பார்க்க விரும்பாதவன்போல் அவன் கொடுத்த ரிகார்ட் கொத்துக்களை, தன் முகத்திற்கும், தங்கமணி முகத்திற்கும் இடையே நிறுத்தியபடி, படிக்கத் துவங்கினான். அந்த ரிகார்டுகள் இப்படிப் பட்ட வடிவில் இந்த மாதிரி இருந்தன.

அலுவலக ஆணை

இந்த அலுவலகத்தில் கடைநிலை ஊழியராகப் பணியாற்றும் தங்கமணி, வாட்ச்மேன் வைகுண்டத்தை, குடித்துவிட்டு அடித்து, ஒரு பல்லை வீழ்த்தியதற்காக அரசு அலுவலர் ஒழுங்குமுறை விதி 14(ஏ) இன்படி சஸ்பென்ட் செய்யப்படுகிறார். தங்கமணி, இந்த அலுவலக நகர எல்லையை முன் அனுமதியின்றித் தாண்டக் கூடாது. சப்ஷிஸ்டென்ஸ் அலவன்ஸ் (அதாவது வாழ்க்கையை ஓட்டுவதற்காக) வாழ்க்கைப் படி வழங்கும் உத்தரவு தனியே பிறப்பிக்கப்படுகிறது.

பிற்சேர்க்கை—ஒன்று—குற்றப் பட்டியல்

இந்த அலுவலகத்தில் பணியாற்றும் கடைநிலை ஊழியரான தங்கமணி, 15.8.86 இல் — அதாவது சுதந்திரத் திருநாளில், மாலை நேரம், அலுவலகத்திற்கு, குடித்துவிட்டும், ஒரு பாட்டைப் பாடியபடியும் வந்திருக்கிறார். இதைத் தட்டிக் கேட்பதற்காக, வாயைத் திறக்கப் போன இரவுக் காவலர் வைகுண்டத்தைத் தாக்கி, ஒரு பல்லை வீழ்த்தி விட்டார். இந்தச் செயல் மூலம் தங்கமணி, அரசு விதி 13 (3) ஏ— இன்படி, முறையற்ற அரசு ஊழியராகிவிட்டார். ஒழுங்கீனக் குற்றத்திற்கு உட்பட்டவராகிவிட்டார்.

பிற்சேர்க்கை—இரண்டு—குற்ற விளக்கப் பட்டியல்

எட்டாண்டு காலமாகக் கடைநிலை ஊழியராகப் பணிபுரியும் தங்கமணிக்கு, தகாத நடவடிக்கைக்காக, பத்து மெமோக்கள் கொடுக்கப் பட்டுள்ளன. ஒரு தடவை நிர்வாக அதிகாரியைத் தாக்கப் போனதற்காக, சஸ்பென்ட் செய்யப்பட்டு, உடனே மன்னிப்புக் கேட்டதால், மனிதாபிமான உணர்வில், மீண்டும் பதவியில் சேர்க்கப்பட்டார். அலுவலகத்தில் குடித்துவிட்டு வருவதும், தட்டிக் கேட்டால் அலுவலகத்திலேயே குடிப்பதும் இவருக்கு வாடிக்கை. சகாக்களை அடிக்கப் போவது, அன்றாட வேடிக்கை. காம்பிடென்ட் அதாரிட்டி அதாவது தலைமை அதிகாரி பெல் அடித்தால், இவர் போவது இல்லை; போக முயற்சிக்கும் விசுவாச கடைநிலை ஊழியர்களைப் போகவிடுவது இருக்கட்டும், அந்த பெல் சத்தத்தைக் கேட்க

சு. சமுத்திரம்



''உங்க காரை ஒரு கும்பல்தான் திருடியிருக்கணும்னு எப்படி இவ்வளவு உறுதியாச் சொல்றீங்க?''

''ஒண்டி ஆளா தள்ளக் கூடிய கார் இல்லீங்க அது.''

— கீழை அ. கதிர்வேல்

விடாமல் கூட ஊளையிடுவார். இதன் உச்சக் கட்டந்தான், நல்ல நாளான சுதந்திரத் திரு நாளில், வயிறு முட்டக் குடித்துவிட்டு, உடல் முழுக்கத் தள்ளாடி, வரய் குலுங்கப் பாடி, வைகுண்டத்தின் வாயில் குத்தி, ஒரு பல்லை முழுசாக வீழ்த்திவிட்டார். அக்கம்பக்கத் தார் தடுத்திருக்கவில்லையானால், அந்த இரவுக் காவலரைக் கொலை கூட செய்திருப் பார்.

பிற்சேர்க்கை — மூன்று — சாட்சிகள்

1. பல்லிழந்த வைகுண்டம்.

2. பல் விழுவதைப் பார்த்த அண்மை அலுவலக ஊழியர்களான திருவாளர்கள் திருவோணம், கிட்டப்பா ஆகியோர்.

பிற்சேர்க்கை — நான்கு — ஆவணங்கள்

1. வைகுண்டத்தின் புகார் கடிதம்
2. வைகுண்டத்தின் கீழே விழுந்த பல்.

அண்ணாந்து பார்த்த தங்கமணியை, குனிந்து பார்த்தபடியே பண்டாரம் பெரு மூச்சோடு சொன்னான்.

''சிக்கலான கேஸ்... அரசு விதி 14 (ஏ) இல் சஸ்பென்டானால், வீட்டுக்குப் போக வேண்டிய கேஸ். வைகுண்டத்தை... நீ ஊமைக் குத்தாய் குத்தியிருக்கணும். ஒனக்கு மூளை இருக்குதா....?''

''அதான் இல்லேன்னு தெரியுதே... ஏன் சொல்லிக் காட்டறே... எனக்கு மூளை தலையில் கிடையாது... கைலதான்....''

எப்படியோ, பண்டாரம் இனிமை யோடும், தங்கமணி பயந்தும் எதிர்பார்த்த விசாரணையின் முதல் நாள் வந்தது. தூக்க லான மேடையில் போடப்பட்ட மெத்தை நாற்காலியில் என்குயரி அதிகாரி ஏகாம்பரம் உட்கார்ந்திருந்தார். அவருக்கு வலது பக்கம் நிர்வாக அதிகாரி வகையறுக்களும், இடது பக்கம் பண்டாரம், தங்கமணியும் அமர்ந் திருந்தார்கள். இந்த நிர்வாக அதிகாரிக்கு, 'பிரசன்டிங் ஆபீஸர்' என்ற பொறுப்பு இது தான் முதலாவது. ஆகையால் முதலிரவில் நடுங்கியது போலவே இங்கேயும் நடுங்கி னார். விசாரணை அதிகாரி, தங்கமணியை நிற்க வைத்து, குற்றப் பட்டியலைப் படித்தார். பிறகு, ''நீங்கள் இதை ஒப்புக் கொள்கிறீர் களா?'' என்று வினவினார். தங்கமணி, பண்டாரம் சொன்னபடி, ''இல்லை, இல்லவே இல்லை'' என்றான்.

விசாரணை துவங்கப் போனபோது —

பண்டாரம் ஓர் ஒழுங்குப் பிரச்னையைக் கிளப்பினான்.

''மாண்புமிகு விசாரணை அதிகாரி அவர் களே! ஓர் ஆட்சேபணை தெரிவிக்க விரும்பு கிறேன். நான்காவது பிற்சேர்க்கையில், வைகுண்டத்தின் வாயில் இருந்து விழுந்த தாகக் கூறப்படும் பல், ரிகார்டாக அதாவது ஆவணமாகக் காட்டப்படுகிறது. ரிகார்ட் எனப்படுவது கையெழுத்திட்ட எழுத்தா லான அல்லது டைப்பாலான அல்லது பிரிண்டாலான காகிதங்களே... அப்படி இருக்கையில் இந்தப் பல் எப்படி ரிகார்டா கும்? ஆகையால் விசாரணையை ரத்து செய்ய வேண்டும்.''

ஒரு சின்னப் பல், இப்படி கோரப் பல்லாய் விஸ்வரூபம் எடுக்கும் என்பதை எதிர்பாராத விசாரணை அதிகாரி, சிறிது அதிர்ந்தார். பிறகு சௌகரியமாக நிர்வாக அதிகாரியை நிற்க வைத்தார். அவர் நடுங்கிய படியே பதிலளித்தார்.

''பல்... ஆம்... பல்... அதாவது வைகுண் டத்தின் பல்லை... ஏதாவது ஓர் இடத்தில் போட்டாக வேண்டும்... வேண்டுமானால், சாட்சிகள், பட்டியலில் போடலாம்...''

பண்டாரம் எழுந்து எகிறினான்.

''சாட்சிகள் எனப்படுவோர் பேசும் மனி தர்கள். இந்தப் பல்... வைகுண்டத்திடமோ அல்லது நாய், நரியிடமோ இருக்கும்போது, இந்த வைகுண்டமோ அல்லது நாய், நரி யோ முறையே பேச, குலைக்க, ஊளையிட உதவியிருக்கும். இப்போதோ இது ஜடப் பொருள். பேசாத பொருள் சாட்சியாகாது. எழுதப்படாத ஒன்று ரிகார்டாகாது. ஆகையால், பல விஷயங்கள் இந்தப் பல் விஷயத்தில் உள்ளன. இதைத் தீர்க்காமல், விசாரணையைத் துவங்குவது சட்ட விரோ தம்.''

விசாரணை அதிகாரி, தனது ஒரிஜினல் பதவியான செக்கரடேரியட்சூப்ரின்டெண்ட் பதவி தேவலை என்பது மாதிரி எழப் போனார். எல்லோருமே, ஒரு முக்காலியில் வைக்கப்பட்டிருந்த அந்தப் பல்லையே பார்த் தார்கள். உரித்து வைத்த வெள்ளைப் பூண்டு சுளை ஒன்றில், அங்குமிங்குமாய் வெற்றிலைச் சாறை தூவியது மாதிரியான அந்தப் பல்லை, அருவெறுப்பாய்ப் பார்த்தார்கள். எங்கும் அமைதி; எதிலும் அமைதி. இறுதியில், பண்டாரம் விட்டுக் கொடுப்பதுபோல் பேசி னான் — வேடிக்கை பார்க்க.

''வேண்டுமானால்.... இந்தப் பல்லை, ஐந்தா வது பிற்சேர்க்கை போட்டு, சாட்சிப் பொருள் என்று போடலாம்...''

நிர்வாக அதிகாரியும், அரசு விதிகளை எழுத்துக்களில் மட்டுமே பிடித்துக்

** பிறருக்கு நீ செய்யும் சேவையெல்லாம் இறைவனுக்குச் செய்யும் சேவையே!

# நியூட்ரமுல் சக்தி






க்ரீம் வளம்கொழிக்கும் அமுல் பால். நலம் தரும் மால்ட். இன்சுவைமிக்க கோக்கோ. கும்மாகும் ! இவற்றின் நற்பயனாகத் தான் வலிவூட்டுகிறது நியூட்ரமுல். எதனாலும் மிஞ்சமுடியாத நயவிலையிலே கிடைக்கிறது :

| | 1000 gms. | 500 gms. | Refil. |
|---|---|---|---|
| நியூட்ரமுல் | 37.21 | 19.29 | – |
| மால்டோவா | 43.75 | 24.65 | 22.79 |
| பூஸ்ட் | – | 24.89 | 23.06 |
| போர்ன்விடா | 47.48 | 24.67 | 22.81 |

Prices as on 1st January, 1987. Local taxes extra.

அமுல் படைப்பு

## நியூட்ரமுல்

விளங்குங்கள் நியூட்ரமுல் வஸ்தாத்தாக



விளம்பரம் விடுப்போர்:
குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க் மார்க்கெட்டிங் ஃபெட. லிட்.,
ஆனந்த்-388 001.

daCunha/GCM/135/86 TAM

## பரிசு ரூ.200/-

### பொன்மொழிப் போட்டி — 9

இந்த இதழின் உள்பக்க மார்ஜின்களில் ஐந்து பொன்மொழிகள் தரப்பட்டுள்ளன. கீழே ஐந்து பெயர்கள் உள்ளன. எந்தப் பொன்மொழியை யார் சொன்னது? பொருத்தம் பார்த்துப் பெயர் அருகே வெற்றிடத்தில் பொன்மொழியை முழுதுமாகப் பிழையின்றி எழுதவும். விலாசத்தைப் பூர்த்தி செய்து இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும். உறையின் மீது, "பொன்மொழிப் போட்டி — 9" என்று அவசியம் குறிப்பிடவும். ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும்.



எஸ். ராதாகிருஷ்ணன்:

அன்னை தெரஸா:

பெர்னார்ட் ஷா:

ருட்யார்ட் கிப்ளிங்:

சத்யசாயி பாபா:

முடிவு தேதி: 18.3.87

என் பெயர்: ..............................................

விலாசம்: ..............................................

..............................................

கொள்பவருமான வெங்கட்ராமன், வெறும் ராமன்போல் பேசினர். ஒரு தலையணைப் புத்தகத்தைக் கையாடப் பிடித்து, கண்ணடைப் படித்துச் சொன்னார்.

"அரசு விதிப்படி, ஒரு என்குயரி புரொஸீடிங்ஸ்க்கு நான்கு பிற்சேர்க்கைகளே உள்ளது. இந்தப் பல்லுக்கு இடம் கொடுக்க ஐந்தாவது பிற்சேர்க்கை இல்லை..."

பண்டாரம் கத்தினன்.

"அப்படியானல் இந்தப் பல்லின் இடம் எந்த இடம்? இதைத் தீர்மானிக்கும் முன்னல் விசாரணை நடத்த முடியாது. அப்படி நடந்தால் அட்மினிஸ்டிரேட்டிவ் டிரிப்யூனலுக்கு....."

விசாரணை அதிகாரி பண்டாரத்தைப் பயந்து பார்த்தார். ஓடப் பார்த்தார். அது முடியாது என்பதால், விசாரணையை ஒத்தி வைத்தார்.

எப்படியோ, நான்கு மாத கால இழுபறிக்குப் பிறகு, பண்டாரத்தின் பெருந்தன்மையில் (எடுத்த எடுப்பிலேயே தங்கமணியை விடுவித்தால், காசு எப்படி கிடைக்கும்?) பல் விவகாரம் முடிக்கப்பட்டு, விசாரணை இன்னொரு கட்டத்திற்கு வந்தது. வாட்ச்மேன் வைகுண்டம், தான் தாக்கப்பட்ட அநீதியை விவரமாய்ச் சொல்லி முடித்த போது:—

தங்கமணியின் சார்பில், பண்டாரம் எழுந்தான். வைகுண்டத்தைக் குறுக்கு விசாரணை செய்தான்.

"அந்த நாளில் தங்கமணி தள்ளாடித் தள்ளாடி வந்தானு?"

வைகுண்டம் பட்டென்று பதிலளித்தான்.

"இல்லிங்க... ஸ்டெடியாய் வந்தான்."

"குடித்திருந்தால் தள்ளாடி இருப்பானே..."

"இவன் கேஸ் தனி சாமி. குடிக்காட்டி தான் தள்ளாடுவான்."

"அப்படின்னு, இவன் தள்ளாடி நடக்கவில்லையானல் குடித்தான் என்று அர்த்தமா? என்ன அநியாயம்! இந்த நாட்டில் ஒருத்தன் நேராய் நடந்தால் குடிகாரன்....!"

"அப்படி மட்டும் இல்லீங்க... வாசனை கும்முன்னு இருந்தது.,...."

"சிக்கு முக்கின்னு ஒரு நாட்டு மருந்து இருக்குது... ஜுரத்தைக் கேட்கும். இதைக் குடித்தால் சாராயம் மாதிரி வாசனை வரும். ஆனல் போதை வராது? இப்படி நீயே தங்கமணியிடம் ஒரு சமயம் சொல்லி இருக்கே, உண்டா... இல்லையா?"

"சும்மா விளையாட்டுக்கு..."

"நான் கேட்டது, உண்டா இல்லையா...?"

"உண்டுங்க..."

"ஆக... பாவம் ஜுரத்துல... சிக்கிமுக்கி மருந்து சாப்பிட்ட தங்கமணி, உன் கெட்ட பார்வையில் ஒரு குடிகாரன்."

"அது மட்டும் இல்லீங்க. பாடிக்கிட்டே வந்தான்."

"என்ன பாட்டு?"

''அதுவா... ஆடுவோமே, பள்ளுப் பாடுவோமே... ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று...''

''அன்று சுதந்திர நாள். தங்கமணி ஒரு தேச பக்தன்... சுதந்திர வேட்கை மிக்கவன். பெரியவர்கள் வாங்கித் தந்த சுதந்திரத்தைப் பேணிக் காப்போரில் ஒருவன்... அந்தக் கடமை வேகத்தில் பாரதியின் பாட்டை இசைத்தான். கொடியேற்றுத அலுவலகத்தில் வந்து சுதந்திரப் பாட்டைப் பாடினுன். இது குடிகாரன் செயலாம். என்ன அநியாயம்? தேச பக்தர்களுக்குக் கொடுக்கிற மரியாதையா இது?''

நிர்வாக அதிகாரி, தட்டுத் தடுமாறி எழுந்தார். உளறிக் கொட்டினுரோ அல்லது கொட்டி உளறினுரோ எப்படியோ பேசினுர்.

''அப்படியே, தங்கமணி குடிக்கலேன்னு வச்சுக்குவோம். ஆனுலும் வைகுண்டத்தை அடித்திருக்கிருர். இதையாவது விசாரிக்கணும்...''

பண்டாரம், பன்னுடைச் சிரிப்போடு பதிலளித்தான்.

''குடித்துவிட்டு அடித்தான் என்பதுதான் குற்றச்சாட்டு. சிங்கிள் சார்ஜ்... குடித்தான்; அடித்தான்; என்று இரண்டு குற்றச் சாட்டுக்கள் முதலாவது பிற்சேர்க்கையில் போட்டிருந்தால் நி. அதிகாரி சொல்வது ஏற்கக் கூடியது. ஆனுல் குற்றச்சாட்டு ஒன்றே. குடித்துவிட்டு அடித்தான். அதாவது குடிக்கவில்லையானுல் அடிக்க மாட்டான்...''

விசாரணை அதிகாரி, பண்டாரத்துக்குச் சாதகம் போல தலையைத் தூக்கியபோது, நிர்வாக அதிகாரி, தம் கையாலேயே, தம் தலையைக் கிடத்தினுர். பல் விழுந்த வைகுண்டம் பதில் கேள்வி கேட்டான்.

''அவன் அடிக்காட்டி, என் பல்லு எப்படிங்க விழும்?''

பண்டாரம், அவன் மேல் பாயப் போவது போல் கேட்டான்.

''நீ வாட்ச்மேன். இரவில் திருடர்களிடமிருந்து இந்த அலுவலகத்தைக் காப்பாற்ற வேண்டியவன். அப்படிப்பட்ட நீ, தங்கமணி விட்ட ஒரே குத்துல பல்லைப் பறி கொடுத்தால், நீ என்னய்யா வாட்ச்மேன்? ஒன்னை இதுக்காக சஸ்பெண்ட் செய்யாத ஆபீஸ் என்னய்யா ஆபீஸ்?''

எல்லார் முகத்திலும் எள் விழுந்த கோலம். பதவிக்கு ஆபத்து வந்துவிடுமோ என்று பயந்து போன வைகுண்டம், தங்கமணி தன்னைத் தாக்கவில்லை என்று கூடச் சொல்லப் போனுன். பிறகு, அதட்டலாகச் சொன்னுன்.

''இப்போ வேணுமுன்னுல் அந்தச் சோமாறியைக் கைவைக்கச் சொல்லுங்க பார்க்கலாம்... அந்தப் பொறுக்கிப் பயலுக்கு நான் எப்படிப்பட்ட வாட்ச்மேன்னு நிரூபிச்சுக் காட்டுறேன்...''

''விசாரணை அதிகாரி அவர்களே, இப்போதே இப்படிப் பேசும் வைகுண்டம், அப்போது எப்படிப் பேசியிருப்பார் என்பதை உங்கள் யூகத்துக்கே விட்டுவிடுகிறேன். சரி, வைகுண்டம்! நீ பலசாலி. அதனுல்தான் உன்னை தங்கமணி தாக்கலே... தாக்க முடியாதுன்னு சொல்ல வந்தேன்.''

''அப்படின்னு, இந்தப் பல்லு எப்படிங்க கீழே விழும்...''

''இது நாய்ப் பல்லோ, நரிப் பல்லோ... ஆனுல் உன் பல் இல்லை...''

''என் பல்லேதாங்க. இந்த மாதிரி பெரிசா யாருக்கும் கிடையாதுங்க.''

''சரி, வாயைத் திற. இந்தப் பல்லை அது விழுந்த இடத்துல பொருத்திப் பார்க்கேன். பொருந்தினுல் உன் பல்... சரிதானு?''

''சரி வாயைத் தொறந்தது போறுமா?''

''இன்னும் திற.... இன்னும்... இன்னும் கொஞ்சம்... சரி.''

நாக்கை பாம்பு மாதிரி வெளியே போட்டபடி, வைகுண்டம் புற்று மாதிரித் தன் வாயைப் பிளந்தான். இந்தக் கோராமையைக் காணச் சகியாது, எல்லோரும் கண்களை மூடிக் கொண்டபோது,

பண்டாரம், அந்தப் பல்லை எடுத்து, வைகுண்டத்தின் வாய்க்குள் கொண்டு போனுன். ஓர் ஓட்டைக்குள் திணித்தபடியே கேட்டான்.

''சொல்லு... ஒன் பல்லா....''

''என் பல்.... என் பள்... என் பழ்....''

பண்டாரம் விடவில்லை. கூர்மையான அந்தப் பல்லை, அந்த ஓட்டையில் பலமாகக் குத்தினுன், வைகுண்டத்தால் வலி தாங்க முடியவில்லை. இதுவரை பட்டறியாத வேதனை. சித்தம் கலங்கிக் கத்தினுன்.

''என் பல்... இல்லீங்க... என் பல் இள்ளே... இள்ளே...''

பண்டாரம், வைகுண்டத்தின் வாயில் இருந்து கையை எடுத்தான். கையில் இருந்த பல்லை, நிர்வாக அதிகாரியின் முன்னுல் போட்டான். விசாரணை அதிகாரியை, 'இன்னுமா... சும்மா இருக்கே' என்பது மாதிரி பார்த்தான். உடனே அவர் எழுந்தார். நிதானமாகப் பேசுவதாய் நினைத்து, எரிச்சலோடு கத்தினுர்.

''குற்றச்சாட்டுக்கள் நிரூபிக்கப்படவில்லை. சார்ஜஸ் அன் புரூவ்ட். அப்புறமாய் டிடெய்ல்ட் ரிப்போர்ட் அனுப்பப்படும்..''

'போதுமடா சாமி' என்று விசாரணை அதிகாரி ஓடினுர். நிர்வாக அதிகாரி, வாட்ச்மேன் வைகுண்டத்தின் மிச்சம் மீதி பற்களை உடைக்கப் போவதுபோல் அவனைப் பார்த்தார். பிறகு தன் பற்களை உடைத்து விடுவதுபோல் கடித்துக் கொண்டார். அப்புறம் சகாக்களுடன் ஓடிவிட்டார்.

எஞ்சி நின்ற தங்கமணியும், பண்டாரமும் ஒருவரை ஒருவர் கட்டித் தழுவினுர்கள். பிறகு, தங்கமணி, பண்டாரம் காலில் குப்புற விழுந்தான். உடனே, பண்டாரம், அவனைத் தூக்கி நிறுத்தி, ஒரு கையைக் குவித்து ஆசீர்வாதம் செய்துவிட்டு, அருள்மொழி கூறினுன்.

''நான் இருக்கேன்... பயம் ஏன்? அடுத்த சஸ்பென்ஷனுக்கும் என்கிட்டேயே வா...''

# காதல் கடிதம்

கார்ப்பரேஷன் டெண்டர்கள் ஏகமாய்க் குவிந்து கொண்டிருந்த சமயம் அது. பத்மஜா மிகவும் பிஸியாக இருந்தாள். கடைசி நபராக நிரஞ்சன் அவளெதிரே வந்து நின்றான். வந்திருந்த டெண்டர் விண்ணப்பதாரர்களிலேயே இவன்தான் இளையவனாக இருக்கக் கூடும் என்று நினைத்துக் கொண்டவள் அவன் நீட்டிய கடிதத்தை வாங்கிக் கொண்டாள்.

“தேங்க்யூ மேடம்” என்றான் அவன் புன்முறுவலுடன். “நீங்க கொஞ்சம் தயவு பண்ணணும். எல்லாம் உங்ககிட்டேதான் இருக்கு. நீங்க மனசு வைச்சா நடக்கும்.”

அவனுக்குப் பதிலேதும் சொல்லாமல் வெறுமனே அவனை ஓர் அலுவலகப் பார்வை பார்த்துவிட்டு வேலையைக் கவனிக்கத் தொடங்கினாள்.

ஒவ்வொரு உறையாய்ப் பிரித்துக் கடிதங்களை ஒழுங்குபடுத்தி வைத்துக் கொண்டிருந்தாள். கடைசிக் கடிதத்தைப் பிரித்தபோது வியப்பு கலந்த அதிர்ச்சி நெஞ்சைத் தாக்கியது.

அது டெண்டருக்கு வந்த கடிதமில்லை. அவளையே வாங்குவதற்கான கடிதம். கவிதை பாணியில் இருந்தது:

பத்மஜா!
எனக்கு நீங்கள்
வேண்டும்.
மனசிருந்தால்
சொல்லுங்கள்
மண முடிப்போம்.

— நிரஞ்சன், எம்.ஏ., 4, அய்யப்பன் தெரு, சென்னை—600 010.

கடிதத்தைக் கொடுத்தது யார் என்று அவளுக்கு அப்போதே நன்றாகப் புரிந்துவிட்டது. மனசு படபடத்தது.

சதாசிவராவுக்கு ஆஜானபாகுவான தோற்றம். ராமர் வில் போன்ற அடர்த்தியான மீசை. பெரிய கண்கள். கணீரெனத் தொண்டை. ஆபீஸிலிருந்து வீட்டுக்கு வந்த மகள் சொன்னதை அட்சர சுத்தமாய்க் காதில் வாங்கிக் கொண்டார். அடுத்து மீசையை முறுக்கினார். பிறகு சுவர்க் கடிகாரத்தைப் பார்த்தார். துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு விருட்டென நடந்தார்.

அப்போது நிரஞ்சன் வீட்டில் இருந்தான். காலிங் பெல் ஓசைக்கு வந்து கதவைத் திறந்தவன், வாசலில் நின்றிருந்த சதாசிவராவைக் கண்டதும் சற்றே திடுக்கிட்டான்.

“வாங்க, யாரு அப்பாவா...?” என்று பாதிக் குரலில் அவரை வரவேற்றான்.

சமையலறையில் வேலையாய் இருந்த அம்மாவும், படித்துக் கொண்டிருந்த தங்கையும் யாரோ வந்திருக்கும் சந்தடி கேட்டுக் கூடத்திற்கு வந்து நின்று கொண்டார்கள். பாத்ரூமிலிருந்து அப்பாவும் வந்துவிட்டார். பத்மஜாவின் அப்பாவுக்கு ஒரு வணக்கம் சொல்லிவிட்டு அவரெதிரே உட்கார்ந்தார். அவர் கேட்ட முதல் கேள்வி:

“நீங்கதான் நிரஞ்சனா?”



வீரன் 1: "ஆச்சரியமாயிருக்கே! உங்க நாட்டு மன்னர் முடிசூடா மன்னராகத் திகழ்கின்றாரா? அது எப்படி?"
வீரன் 2: "அவர்தான் மணிமுடியை அட்கு வைத்துவிட்டாரே!"

— கிழே. அ. கதிர்வேல்.

"ஆமாம்" என்றான். "என்ன விஷயம்?"

"நீ என் பொண்ணுக்கு லவ் லெட்டர் எழுதினியா?" கப்பென்று அவனுக்கு ஒரு கணம் மூச்சு முட்டியது. முகம் வெளிறிப் போயிற்று. ஆனாலும் ஒன்றும் தெரியாதவன் போல் பாவலா செய்தான்.

"உங்க பொண்ணு யாரு?"

"தெரியாத மாதிரி கேட்காதப்பா? என் பொண்ணு பத்மஜாவை உனக்குத் தெரியாதா?"

"யார் சார் அது பத்மஜா? நான் கேள்விப் பட்டதேயில்லையே?"

ஆனால் அவர் போதிய அத்தாட்சியுடன் தான் வந்திருந்தார். பாக்கெட்டிலிருந்து அவன் எழுதிய கடிதத்தை எடுத்தார்.

"அப்ப இந்த லெட்டரை நீ எழுதலையா?"

அவனுக்கு வயிற்றில் புளியைக் கரைத்தது.

அப்பா வாங்கி அதை உன்னிப்பாய்ப் பார்த்தார்.

"ஆமாம்! இவன் எழுதின மாதிரிதான் தெரியுது" என்றவர் நிரஞ்சனைப் பார்த்தார். "ஏண்டா இது உன் கையெழுத்து மாதிரி தான் இருக்கு!"

அவன் அதை வாங்கிப் பார்த்தான்.

"இது என் கையெழுத்து மாதிரிதான் இருக்கே தவிர, இது நான் எழுதினதில்லை. எங்க ஆபீஸ் யூனியன்ல யாரோ எனக்கு வேண்டாதவங்க இப்படியொரு சதி பண்ணி என்னைப் பழிவாங்க முயற்சி பண்ணியிருக் காங்க."

சதாசிவராவின் முகம் இறுகியது. சரீரம் பதறியது. குரலில் தம் சுபாவத்தைக் காட்டி னார்.

"அப்ப இது உங்க பையன் எழுதலையா?"

அந்தக் குரூர கர்ஜனையில் நிரஞ்சனுக்கு நடுக்கம் எடுத்தது. அவனது சார்பில் அப்பா வே பதிலளித்தார்.

"அதான் அவன் சொல்லிட்டானே... யாரோ யூனியன்ல செய்த சதின்னு..."

அவர் விருட்டென எழுந்தார். நிரஞ்சனை அக்னிப் பார்வை பார்த்தார். வேகமாய் வெளியேறினார்.

ஒரு வாரத்திற்குப் பிறகு ஒரு மாலை நேரத்தில் நிரஞ்சன் அவளது அலுவலகத்திற் குச் சென்றான். அப்போது அவள் ஏதோ வேலையாய் இருந்தாள்.

"எக்ஸ்க்யூஸ் மீ" என்று ஒரு குரல் கேட்ட தும் நிமிர்ந்தாள். எதிரே நின்றிருந்த நிரஞ் சனைக் கண்டதும் முகத்தில் கோபம் படர்ந் தது.

"மேடம், நீங்க என் மேல் கோபமா இருக் கீங்கன்னு புரியுது. ஆனால் என்ன இருந்தா லும் நீங்க இப்படி பண்ணியிருக்கக் கூடாது. ப்ளீஸ் எனக்காக அஞ்சு நிமிஷம் ஒதுக் குங்க." அவன் ஏறக்குறைய கெஞ்சும் தோரணையில் சொன்னான்.

அவனிடம் சீக்கிரம் பேசி அனுப்பிவிடும் எண்ணத்துடன், அவனை வரவேற்பறைக்குப் பின்னால் இருந்த ஓர் ஒதுக்குப்புறத்திற்கு அழைத்துச் சென்றாள்.

"நீங்க நாகரிகமானவங்கங்கிற நம்பிக்கை யில்தான் உங்களுக்குக் கடிதம் கொடுத்தேன். உங்களுக்கு என்னைப் பிடிக்கலேன்னா, பிடிக்க லேன்னு பதில் கடிதம் போட்டிருக்கலாம். அதை விட்டுட்டு இப்படியொரு காரியத்தை நீங்க செய்வீங்கன்னு நான் கொஞ்சமும் எதிர்பார்க்கலே" என்றான்.

"அப்படி நான் என்ன காரியம் பண்ணிட் டேன்?"

"நீங்க உங்க அப்பாவை அனுப்பிச்சு என்னை மிரட்டியிருக்க வேண்டாம்."

"யார் உங்களை மிரட்டினது? எங்கப்பா ஒண்ணும் உங்களை மிரட்ட வரலே. நீங்க அந்த அளவுக்குப் புரிஞ்சுக்கிட்டிருக்கீங்க. நீங்க செய்தது தப்பான காரியமா இருந்தா லும்கூட எங்கப்பா மனசைச் சமாதானப் படுத்திக்கிட்டு உங்கப்பா அம்மாவோட சம் மதத்தைக் கேட்டுத் தெரிஞ்சுக்கத்தான் உங்க வீட்டுக்கு வந்தாங்க. ஆனா நீங்க...."

அவன் ஸ்தம்பித்துப் போனான். வருத்தம் கலந்த வியப்பை வெளிப்படுத்தினான்.

"மேடம், உண்மையிலே நான் என்னமோ ஏதோன்னு நினைச்சு பயந்து போயிட்டேன். அந்த அளவுக்கு உங்க அப்பாவின் சுபாவம் அப்படி இருந்துச்சு. எனக்கு ஒரு தங்கை யிருக்கா. அவளுக்கு முதல்ல கல்யாணம் ஆகணும். மேலும் எங்கப்பா அம்மாவுக்கும் இதுவரைக்கும் நான் உங்களை விரும்பற விஷயம் தெரியாது. உங்க சம்மதத்துக்குப் பிறகுதான் சொல்லணும்னு நினைச்சுக்கிட் டிருந்தேன். இப்பவும் உங்களை மனசார நேசிக்கிறேன்..."

"வெரி லேட் மிஸ்டர் நிரஞ்சன். நீங்க என்னை மனப்பூர்வமா விரும்புற ஆளா யிருந்தா, ஆயிரம் பேருக்கு முன்னாலே யும் என்னைத்தான் மணப்பேன்னு சொல்ற அளவுக்கு உங்களுக்கு மனத் திடமும் தைரிய மும் இருக்கணும். உங்க தங்கச்சிக்குக் கல்யா ணம் நடக்கட்டும். நான் வேண்டாங்கலே. உங்களுக்காகப் பத்து வருஷம்கூட நான் காத்திருக்கத் தயார். ஆனால் நீங்க உங்க அப்பா அம்மாவுக்கும் வெளியுலகத்துக்கும் பயந்துக்கிட்டு உங்க உள்ளத்துல இருக்கிற காதலைக் குழிதோண்டிப் புதைச்சுட்டது கொஞ்சமும் நியாயம் இல்லே. இது சுத்த கோழைத்தனம். இப்படியொருத்தரை ஒரு பெண் கணவனாக அடையறதைவிட வாழ் நாள் முழுவதும் கல்யாணம் பண்ணிக் காமலே இருந்திடலாம்"

கண்ணில் படர்ந்த நீர்த் திரையைத் துடைத்துக் கொண்டு அவள் தன் இருப் பிடத்தை நோக்கி நடந்தாள்.

— மதுமனோ



# கல்கி

1987 மார்ச் 15

மலர் 45 இதழ் 33
அக்ஷய பங்குனி 1



## ராஜதந்திரம் தேவை; ராணுவ பலம் அல்ல!

'டிசம்பர் — 19 சமரசத் திட்டத்திலிருந்து ஸ்ரீலங்கா அரசு திசைமாறிவிட்டது' என்பது இந்திய அரசின் குற்றச்சாட்டு.

'டிசம்பர் — 19 அறிக்கையின் அடிப்படையிலேயே பேச்சு வார்த்தைகளைத் தொடரலாம்; ஆனால் அதற்கு முன்னால் ஈழப் போராளிகள் ஆயுதங்களைத் துறக்க வேண்டும். போராட்டத்தை நிறுத்த வேண்டும்' என்பது ஈழ அரசின் நிபந்தனை.

ஈழப்போராளிகளோ, 'நாங்கள் எப்போது ஆயுதங்களைக் கீழே இறக்குவோம் என்று காத்திருந்து ஈழ அரசு வஞ்சகமாக ராணுவத்தை ஏவி எங்களை மட்டுமின்றி தமிழினத்தையும் அழிக்க முயல்கிறது. எங்களைச் சிறுமைப்படுத்துகிற இந்த நிபந்தனைகளை ஏற்க முடியாது' என்கின்றனர்.

இதற்கிடையில், தமிழ் ஈழப் பகுதிகளில் முற்றுகை தொடர்கிறது; பெட்ரோலியப் பொருள்கள் தமிழர்களுக்கு மறுக்கப்படுகிறது; போரில் இருதரப்பு ராணுவ வீரர்கள் மட்டுமின்றி அப்பாவி மக்களும் செத்து மடிகிறார்கள். அமிர்தலிங்கம் போன்ற,ஜனநாயக முறையில் ஈழத் தமிழர்களுக்குப் போராட எண்ணுகிற தலைவர்கள் புறக்கணிக்கப்படுகிறார்கள், அல்லது பின்னுக்குத் தள்ளப்படுகிறார்கள்.

தி. மு. க. மட்டுமின்றி அ. தி. மு. க. வும் இணை சேர்ந்து நாடாளுமன்றத்தில் மத்திய அரசின் மெத்தனப் போக்கைக் கண்டித்துள்ளது. பிரதமரோ 'நடவடிக்கை எடுப்போம்' என்று கூறியுள்ளாரே தவிர, அது என்ன நடவடிக்கை என்பதை வெளியிட மறுத்துவிட்டார்.

இவை நிலவரம் என்றால் எதிர்பார்ப்பு என்ன? ஈழப் போராளிகளும் தி.மு.க. தலைவர்களும், பங்களாதேச விடுதலைப் போர்ப் பாணியில் இந்தியா, இலங்கை மீது படையெடுத்துத் தமிழ் ஈழத்தை விடுவித்து, சுதந்திர தேசமாகப் பிரகடனப்படுத்த வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள்.

இது நடக்காது எனில், வியட்நாமில் வியட்காங்குக்குச் சீனா உதவியது போல், இந்தியா மறைமுகமாக ஈழப் போராளிகளுக்கு உதவி வந்தால் போதும்; போராளிகளே தமிழ் ஈழம் நிறுவுவதில் வெற்றி பெற்று விடுவார்கள் என்ற மற்றொரு விதமான எதிர்பார்ப்பும் உள்ளது.

மூன்றாவது வழி, ஜெயவர்த்தனவுடன் பேச்சு வார்த்தைகளைத் தொடர, போராளிகளையும் அமிர்தலிங்கம் கோஷ்டியினரையும் நிர்ப்பந்திப்பது.

இம்மூன்று வழிகளில் எது சிறந்தது? பங்களாதேசத்தில் (கிழக்குப் பாகிஸ்தானில்) இந்திய ராணுவம் புகுந்த போது, இந்தியாவில் இருந்த நிலைக்கும் இன்றைய இந்தியச் சூழலுக்கும் நிறைய வித்தியாசங்கள் உள்ளன. ஒருபக்கம் காலிஸ்தான் கோரும் பஞ்சாப் பயங்கரவாதிகள்; இன்னொரு பக்கம், கூர்க்காலாந்து தேசிய விடுதலை முன்னணி. சுயாட்சி மட்டுமின்றி, சுதந்திரக் கோரிக்கைகளும், பயங்கரவாதமும் ஆங்காங்கே தலைதூக்கியுள்ளன. மேலும் கிழக்குப் பாகிஸ்தானில் அன்றைய சூழ்நிலைக்கும் இன்றைய ஸ்ரீலங்கா சூழ்நிலைக்கும் நிறைய வித்தியாசங்கள் உண்டு.

வியட்காங்குக்குச் சீனா உதவியதுபோல, ஈழப் போராளிகளுக்கு இந்தியா உதவப் போனால், பஞ்சாப் பயங்கரவாதிகளுக்குப் பாகிஸ்தான் உதவுவதைக் கண்டிக்கிற தார்மீக உரிமையை இந்தியா இழந்துவிடும். இது ஆபத்தை விலைகொடுத்து வாங்கியதாக முடியும்.

எனவே, மூன்றாவது வழியாகிய பேச்சு வார்த்தைகளைத் தொடர்வதே சிலாக்கியமானது. இதற்குப் பிரதமர் என்ன செய்ய வேண்டும்? எம். ஜி. ஆரை மட்டும் அவ்வப்போது கலந்தாலோசித்தால் போதாது. ஈழப் போராளிகளிடம் செல்வாக்கு உள்ள கருணாநிதி, நெடுமாறன் போன்றவர்களையும் அழைத்து, அவர்கள் மூலம் ஈழப் போராளிகளை ஓரளவு விட்டுக் கொடுக்கத் தூண்ட வேண்டும். அதேசமயம், ஜெயவர்த்தனவையும் கொஞ்சம் மறைமுகமாக மிரட்டி, வழிக்கு வரச் செய்ய வேண்டும். அமிர்தலிங்கம் போன்றவர்களை ஒதுக்கிவிடாமல், ஜனநாயக முறைகளில் நம்பிக்கை கொண்டிருக்கும் அவர்களுக்கும் நியாயம் கிட்டச் செய்ய வேண்டும். உலக நாடுகளிடையே அபிப்பிராயத்தை உருவாக்கி, ஜெயவர்த்தன மீது அவர்கள் தார்மீகச் செல்வாக்கைப் பிரயோகிக்கச் செய்ய வேண்டும்.

ஈழப் பிரச்னைக்கு நிரந்தரத் தீர்வு ராஜதந்திரத்தில்தான் இருக்கிறது; ராணுவ பலத்தில் அல்ல.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

## சுஜாதா

# ராயகோபுரம்

ஜீயர் சுவாமிகளின் விடாமுயற்சியால் இன்று இந்தியாவிலேயே மிக உயரமாக எழுந்திருக்கும் ராய கோபுரத்தைச் சுற்றிலும் என்னுடைய இளமை நினைவுகள் அனேகம் உள்ளன. அப்போதெல்லாம் அதற்கு மொட்டைக் கோபுரம் என்று பெயர். விஜய நகர ராயர்களின் ஆட்சிக் காலத்தின் விளிம்பில் கட்டப்பட்டதாலோ, என்னவோ, ராஜா இனிமேல் காசில்லை, தீர்ந்து போய் விட்டது என்று சொன்னதால், முற்றுப் பெறாமல் விட்டுப் போன கோபுரத்தை முடித்திருந்தால் எப்படி இருந்திருக்கும் என்று சின்ன வயசில் வீதிப் பயல்களிடம் கதை அளந்திருக்கிறேன். மேகத்தைத் துளைத்துக் கொண்டு ஓர் எவ்வு எவ்வினால் சந்திரன் மேல் அடியெடுத்து வைக்கலாம் என்று நான் சொன்னதை அப்பொழுதே பலர் நம்பவில்லை. மொட்டைக் கோபுரத்தை பஸ் ஸ்டாண்டிலிருந்து அணுகும்போது வலப் பக்கத்தில் இருந்த மூலைக் கடையில்தான் என் முதன்முதல் சிகரெட் முயற்சி.









ராத்திரி வேளையாகப் பார்த்துச் சிம்னி விளக்கு வெளிச்சம் உள்ள கடையாகத் தேர்ந்தெடுத்து, முகத்துக்குக் குறுக்காகக் கைத்துண்டு போட்டு மூடிக்கொண்டு, இந்தப் பக்கம் அந்தப் பக்கம் நோக்கி வாயின் இடது ஓரமாக 'ஒரு சிகரெட்டு' என்றேன்.

"என்ன சிகரெட்டு? எத்தனையோ சிகரெட்டு இருக்குது?"

"எ...எ...எ... ஏதாவது!"

"கோதை அம்மா பேரன் தானே நீ? எதுக்காக மூஞ்சில சவுக்கம் போட்டிருக்கே?"

பைசா கொடுத்ததையும் பாராமல் ஓடி வந்துவிட்டேன்.

ராயகோபுரத்தின் முழு அழகையும்மறைக்கும்வகையில் ஒரு முன்மண்டபம் இருக்கும். ஒருமாதிரி அசௌகரிய முக்கோணமாக, கூர்ச்சையாக முடியும் அந்த இடத்தில் என்ன செய்வது என்று தெரியாமல் கொஞ்சம் குரோட்டன்ஸ் வளர்த்து, நடுவே காந்தி சிலை வைத்தார்கள். இந்தியாவிலேயே சிரிக்கும் காந்தி சிலை அந்த ஓர் இடத்தில்தான் உள்ளது.

சிலைக்கு முன் பக்கத்தில் மண்டபத்தை இந்தப் பக்கம் அந்தப் பக்கம் தட்டி போட்டுத் தடுத்து, கோலா, சோடா, பத்திரிகைபோன்றவற்றை விற்பார்கள். அவற்றில் 'சிடரெட்' என்ற பானத்தில் கொஞ்சம் அதிகப்படியாக ஆல்கஹால் இருக்கிறது என்று யாரோ புரளி கிளப்பிவிட, வைத்தி நெற்றியில் கைக்குட்டை கட்டிக்கொண்டு, பாட்டில் பாட்டிலாக 'சிடரெட்'

பானம் அருந்துவான். அப்போதெல்லாம் மதுவிலக்கு அமுலிலிருந்ததால் 'கிக்' வேண்டுமென்றால் தெற்கு வாசல் மெடிக்கல் ஷாப்பில் ஜிஞ்சர்பரிஸை நாட வேண்டும். அதைச் சாப்பிட அசாத்தியத் திறமையும் கான்க்ரீட் வேய்ந்த வயிறும் வேண்டும்.

ராயகோபுரத்தை, வெள்ளைக்காரன் வரைந்த 'டாக ரோடைப்'என்றசென்றநூற்றுண்டுச் சித்திரத்தில் மேற்சொன்னமண்டபம்இல்லை. முகப்பில் வைக்கோல் போரும் மாட்டு வண்டியுமாகப் பின்னணியில் ராய கோபுரம் தெரியும். இந்தச் சித்திரம் ஏ.கே. செட்டியாரின் 'தமிழ்நாடு பயணக் கட்டுரைகள்' என்றபுத்தகத்தில் இருக்கிறது. அந்தப் புத்தகத்தை என்னிடமிருந்து இரவல் வாங்கிச் சென்று இதுவரை திருப்பித் தராத நண்பரே! ஐயா! தயவு செய்து திருப்பிவிடும்!

ராயகோபுரத்தைஒட்டிய உள்பக்கத்திலிருந்து தெற்கு வாசல் என்னும் பிரதான கடைத் தெரு துவங்கிக் கோயில் வாசல் வரை செல்லும். கோபுரத்தோடு ஒட்டிய பகுதியில், எதிர் எதிராக இரண்டு ஓட்டல்கள், எப்போதும் போட்டியாக ஒன்றை ஒன்று லவுட் ஸ்பீக்கர் சங்கீதத்தால் திட்டிக் கொண்டிருக்கும். இரண்டில் ஓர் ஓட்டல் மட்டும் எப்போதும் மூடியைத் திறந்தால் ரோஸ்மில்க், மாடியைத் திறந்தால் லாட்ஜிங் என்று கொழிக்க, மற்றது எப்போதுமே அழுது வடியும். இது ஏன் என்று எனக்குப் புரிந்ததே இல்லை. இரண்டு ஒட்டல்களிலும் விசேஷம், உள்ளே போய் டிபன் சாப்பிடும்போது, பச்சை பெயிண்ட் அடித்த சுவரை உற்றுப் பார்த்தால் கிருஷ்ண தேவராயர் காலத்துச் சிற்பங்கள் தெரியும். 'இன்றைய ஸ்பெஷல்' போர்டு மாட்டிய சரித்திரம்!

ராய கோபுரத்தைக் கடக்கும்போது ஆர்க்கியாலஜிக்காரர்களின் நீல போர்டு ஒன்று இருந்ததாக ஞாபகம். அதோடு டவாலிச் சேவகர்









ஒருத்தரும் நின்று கொண்டிருப்பார். அவரை ஒரு முறை உங்களுக்கு என்ன வேலை என்று கேட்டதில், அவர், 'போடாங்க....' என்று கெட்ட வார்த்தை பிரயோகித்தார். எதிர் எதிரே, கோபுர வாசலின் உள் பகுதியில் இருந்த படிகளில், அப்போது யாரும் ஏறிச் சென்றதாக நினைவில்லை. படிகள் இருந்தனவா என்ன? கண்டா முண்டாச் சாமான்கள் நிறைய இருந்தன. கொஞ்சம் நோண்டிப் பார்த்தால் கிருஷ்ண தேவராயர் காலத்துச்செருப்பு ஏதாவது அகப்படலாம்.

கோபுரத்திலிருந்து தெற்கு வாசலில் நடந்து செல்கையில் வெற்றுக்கு ஒரு நாலு கால் மண்டபம் இருக்கும். இதைக் கடந்தவுடன் வலது பக்கம் சாத்தார வீதி. இடது பக்கம் தெற்கு அடையவளைஞ்சான். ஸ்ரீரங்கத்தில் அத்தனை வருஷங்கள் இருந்திருக்கிறேன், தெற்கு அடையவளைஞ்சான் தெருவுக்கு ஒரேஒரு முறை தான் போயிருக்கிறேன். சித்திரை வீதிக்காரர்கள் மற்ற வீதிகளுக்கு லேசில் போக மாட்டோம். சாத்தார வீதி அப்படியில்லை. அது கொஞ்சம் கலகலப்பாக இருக்கும். பூவிற்பார்கள், ஸ்ரீ ஜயந்திக்குச்சப்பரம்கட்டுவதற்கு இங்குதான் வருவோம். சுவாமிக்குப் பூப்பல்லக்கு இங்குதான் செய்வார்கள். பெட்ரமாக்ஸ்,வாழைமரம், சித்திரத்தைபோன்றநாட்டு மருந்துகள் எல்லாம் இங்கேதான் கிடைக்கும். சாத்தார வீதி மூலையில்தான் கலைஞர் கருணாநிதி, தந்தை பெரியார் போன்றவர்கள் எல்லாம் பேசுவார்கள். லவுட்ஸ்பீக்கர் வைத்து சப்தத்தைத் தெற்கு வாசல் வரை கொண்டு விடுவார்கள்! மூலையில் நின்று கொண்டு கேட்கக் கூடாது என்று கேட்டுக் கொண்டிருப்போம். பெரியார் ஸ்ரீரங்க நாதரிடம் ரொம்ப எக்கச்சக்கமான கேள்விகள் எல்லாம் கேட்பார். 'உறையூருக்கு எதற்குப் போறே நீ?

வாலியை ஏண்டா மறைஞ்சு கொன்னே நீ?' என்றெல்லாம்! 'பாம்பையும்பார்ப்பானை யும் பார்த்தால் பார்ப்பானை முதலில் அடி' என்பார். அந்தக் கூட்டங்களில் கறுப்புச் சட்டை போட்டுக் கொண்டு தலைமை தாங் கிய கருப்பண்ணக் கோனார்தான் எங்கள் தெருவில் பால் டிப்போ வைத்திருந்தார். எங்கள் குடும்பத்துக்கு ரொம்ப சினேகிதர். பார்ப்பனரை வெறுக்கிறதையும் பால் வியா பாரத்தையும் அவர் கலக்கவே மாட்டார்!

சாத்தாரத் தெரு முனையிலிருந்து சற்று முன்னே போனால், கடைத் தெருவில் ஜவ் வாது, புனுகு, சந்தனம் எல்லாம் விற்பார்கள். கடைக்காரனின் ஸீட்டுக்கு அடியில் ஒரு கூண்டு வைத்து புனுகு பூனை சுற்றிச் சுற்றி நடந்து கொண்டிருக்கும். நான் பார்த்த முதல் 'ரோபாட்', இந்தக் கடையில் கையில் வாசனை திரவியங்களை வைத்துக்கொண்டு தலையைச் சதா லேசாக ஆட்டிக் கொண் டிருந்த நாமம் போட்ட, விளம்பரச் செட்டி யார் பொம்மை.

அந்தக் கடைக்கு அருகில், எதிரில் மண்ட பத்தின் தூணருகில் தரை மட்டத்துக்கு இரண்



டடி கீழே முகம் முழுவதும் வெண்ணெய் அணிந்து கொண்டு அடுத்த கிருஷ்ண ஜெயந்திக்குக் காத்திருக்கும் பாதாள கிருஷ் ணன். சந்நிதியின் முன் நடக்கும் உறியடி உற்சவம் எங்கள் கீழவாசல் உறியடியைப் போல அத்தனை விஸ்தாரமாக இருக்காது. முதுகு பூரா நாமம் போட்டுக் கொண்டு ஓர் ஆள் வந்து அலங்கார ஜகடை மூலமாகத் தொங்கிக் கொண்டிருக்கும் குட்டிக் குட்டித் தயிர்ச் சட்டிகள் வைத்த பிரேமை, ஒரே வீசு வீசி, உடைப்பதைப் பெருமாள் பார்த் திருந்துவிட்டு அவசரமாகப் புறப்பட்டுப் போய்விடுவார்.

ராயகோபுரத்தை ஒட்டியிருந்த சந்து களில் ஒரு மாதிரி சொத சொதவென்று கறுப்புப் பன்றிகளும், முனிஸிபல் ஆயுதங் களுமாக இருக்கும். ஒரு தடவை டவுன் பஸ் ஸில் கோட்டை மெயின்கார்டு கேட்டுக்குப் போய்விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்த போது, ஒரு திருடன் அந்தச் சந்தில் ஓடி மறை வதைப் பார்த்தேன். ராயகோபுரத்துக்கு வெளியே, ஆர்ச்சு வளைவாக ஒருவாசல் இருக்குமே அதனுள் ஒரு காலனி; ஒட்டு வீடுகளாக உண்டு. அந்தக் காலனியையெல் லாம் நாங்கள் ஸ்ரீரங்கமாகவே கருதமாட் டோம். திருடன் அந்தக் காலனியிலிருந்து வெளிப்பட்டு, ராயகோபுரத்தை ஒட்டிய சந்தில் மறைந்தான். அவனைத் துரத்திக் கொண்டு ஓடி வந்தவர்களில் ஒன்றிரண்டு பேர் உள்ளே போய் நாற்றம் சகிக்கவில்லை யென்று திரும்பி வந்துவிட்டார்கள். மதிலெல் லாம் ஏற முடியாது; இங்கேதான் திரும்ப வந்தாக வேண்டும் என்று திருடனுக்காகக் காத்திருந்தார்கள். பேருக்குப் பேர், கம்பு, கொடிக்குச்சி, புளிய மிலாறு என்று வைத் திருந்தார்கள். எனக்குத் திருடன் வெளியே வராமல் இருக்க வேண்டுமே என்று கவலை யாக இருந்தது! சந்தின் அந்தப் பக்கம் மடக்க ஒரு கோஷ்டி போயிருந்தது.

அந்தத் திருடன் பொறுமையிழந்து அல்லது நாற்றம் சகிக்காமல் வெளியே வந்து வசமாக மாட்டிக் கொண்டான். அவர் கள் அவனைப் பந்தல் காலில் கட்டித் தர்ம அடி அடித்தார்கள். ஒரு குட்டிப் பையன் கூட இடைவெளி வழியாக அவனை எட்டி உதைத்தான். 'திருடுவியா, திருடுவியா' என்று திரும்பத்திரும்பக் கேட்டுக்கொண்டே இருந்தார்கள். அவன் பதிலே சொல்லாமல் ஒவ்வொரு அடித்தவரையும் புதியவரைப் போலப் பார்த்துக் கொண்டே இருந்தான். வாயோரத்தில் ரத்தம் தெரிந்தாலும் அழவே இல்லை.

நான் ஓரத்திலிருந்து அவன் கண்களையே பார்த்துக் கொண்டிருந்தேன். ஒவ்வொரு அடியும் என்மேல் விழுவது போலத் தோன்றியது. என்ன ஸார் திருடிட்டான்? என்றதற்கு, 'லக்ஷ்மணராவ் வீட்டில் திருட வந்ததாகவும் 'எடுத்துக்கட்டி'யிலிருந்து எட்டிப் பார்த்ததாகவும் ராயர் பெண் வீட் டுக்கு விலக்கானதால் மாடியிலிருந்து கூச்சல் போட, தாவிக் குதித்து ஓடிப் போய்விட் டான் என்றும் சொன்னார்கள். போலீஸ்காரர் கள் வந்து 'திருடனை அடிக்காதீங்க. ஸ்டேஷன்லே நாங்க பார்த்துக்கிறோம், அடிக் காதீங்க' என்று விடுவித்து போலீஸ் நிலை யத்துக்கு அழைத்துச் சென்ற பிறகு, அந்தத் திருடனை என் வாழ்நாளில் மறுபடி பார்ப் பேன் என்று நினைக்கவே இல்லை.

விதியின் சின்ன விளையாட்டுக்களில் இதுவும் ஒன்று என்றுதான் சொல்ல வேண் டும். நான் போனவாரம் பம்பாய் கம்ப்யூட் டர் மகாநாட்டுக்குச் சென்றிருந்தபோது க்ராஸ் மைதானத்தில் எக்ஸிபிஷனில் ஹாலுக்கு ஹால் நடந்து அலுத்துப் போய் ஓர் ஓரமாக நின்று கொண்டிருந்தபோது, ஓர் ஆள் என் அருகில் வந்து; "நீங்கதானே..." என்று தயங்க, "ஆமாம் நான்தான்" என் றேன்.

"நீங்க ஸ்ரீரங்கம்னு கேள்விப்பட்டேன். போட்டோவில் பார்த்திருக்கேன்...."

"சந்தோஷம். நீங்களும் கம்ப்யூட்டரா..."

"ஆமாம். நானும் உங்களைப் போலவே ஸ்ரீரங்கம், கம்ப்யூட்டர்...."

"ஸ்ரீரங்கத்தில் எங்கே?"

"அம்மா மண்டபத்தில் இருந்தேன். ஸ்ரீரங்கத்தில் மறக்க முடியாதது ராய கோபுரம். அந்தக் கோபுரத்துக்கு முன்னல் ஒரு தடவை என்னைக் கம்பத்தில் கட்டி உதை உதைன்னு உதைச்சிருக்காங்க!''

"அப்படியா! எந்த வருஷம்?''

"1949!''

"வாட் எ சர்ப்ரைஸ்! அந்தச் சம்பவத்தை நான் பார்த்திருக்கேன். பந்தல் கால்ல கட்டி வெச்சு... நீங்கதானு அந்தத் திருடன்! இப்ப என்ன பண்றீங்க?''

"கலிபோர்னியாவில் கம்ப்யூட்டர் சயன்டிஸ்ட்டா இருக்கேன். நீங்ககூட என்னை அடிச்சிங்களா அன்னைக்கு?''

"சேச்சே! உங்களைப் போலீஸ்காரர் நல்ல வேளை அழைச்சுட்டுப் போயிட்டார்! ஆச்சரியம் ஆச்சரியம்! ஸ்ரீரங்கத்தில் திருட்டிலிருந்து, கலிபோர்னியாவில் கம்ப்யூட்டர் சயன்ஸா?''

"திருடவும் இல்லே ஒண்ணும் இல்லே ஸார்!''

"அப்படியா? பின்னே எதுக்கு உங்களைத் துரத்தி வந்து அடிச்சாங்க?''

"இதைச் சொன்னல் கதை பண்ணிடுவீங்க... அன்னிக்கு நான் லக்ஷ்மணராவ் பொண்ணை, மாலினி மாலினின்னு வாட்ட சாட்டமா இருப்பா தெரியுமா?''

"தெரியாது'' என்றேன் அவசரமாக.

"அவளைப் பார்க்கத்தான் மாடிக்குப் போயிருந்தேன். மாட்டிக்கிட்டேன்! ஓடி வந்துட்டேன்! அந்தப் பொண்ணும் சமயோசிதமா திருடன் திருடன்னு கத்திருச்சு! நான் திருடன் இல்லே, அந்த மாலினியைப் பார்க்கத்தான் வந்தேன்னு சொல்லியிருந்தால் அவளை நிமித்தியிருப்பாரு அவங்கப்பா!''

"யூ மீன் அந்த அடியெல்லாம் ஒரு பொண்ணைக் காட்டிக் கொடுக்காமல் இருக்கறதுக்காக வாங்கிக்கிட்டீங்களா?''

"ஆமாம். ஐ வாஸ் ஸோ ரொமான்டிக் அட்தட் டைம்! அந்த மாலினி எங்க இருக்கா இப்பன்னு கூடத் தெரியாது!''

**ரா**ய கோபுரத்தைச் சுற்றிப் பல நினைவுகள். இப்போது மொட்டைக் கோபுரத்தைப் பூர்த்தி செய்துவிட்டார்கள். கும்பாபிஷேகம், கும்பல், மந்திரிகள், கலசங்கள்.... இவைகளுக்கெல்லாம் மத்தியில், எனக்கு ஓர் இழப்பு இருக்கிறது. முற்றுப் பெருததை முற்றுப் பெருமலே வைத்திருப்பதில் இருக்கும் அழகையும் கவிதையையும் இழந்து விட்டிருக்கிறோம். வினஸ்-டி-மிலோவின் கரங்களை யாரும் புதிதாகச் செய்து ஒட்ட வைக்க முயற்சி செய்யவில்லை. ரோம் நகரத்தின் கொலீஸியம் போன்றவைகளையும் கிரேக்க நாகரிகத்தின் தூண்களையும் ஏன் விஜய நகரத்தையுமே யாரும் கான்க்ரீட் சிமெண்டு போட்டு முடித்திருக்கிருர்களா? அபத்தம்!

# பொன்மொழிப் போட்டி முடிவு

**சரியான விடை:**

1. நீதி வழங்குவதாக நடிப்பதுதான் மிகப் பெரிய அநீதி. — பிளேட்டோ

2. மனிதன் தாராளமாகச் செலவு செய்ய வேண்டியதில் இன்சொல் முதலாவதாகும். — ஆப்ரஹாம் லிங்கன்

3. ஆண்டவனை மனமார நேசிக்க வேண்டும்; ஆண்டவனுக்காக ஏங்க வேண்டும்: அவனிடத்தில் ஆழ்ந்த அன்பு இருந்தால் போதும். அப்போது தான் யார் என்பதை அவனே உணர்த்துவான். — ராமகிருஷ்ண பரமஹம்ஸர்

4. உழைப்பு என்பது மொட்டு போன்றது. மொட்டைப் பாதுகாத்தால் மலரும். அந்த மலர் மெல்ல மெல்லக் காயாகிக் கனிந்து பழமாகும். — சத்ய சாயி பாபா

5. நோயாளியைப் பார்க்க ஒரு மைல் தூரம் செல்லுங்கள்; இரண்டு பேரிடையே சமாதானம் செய்ய இரண்டு மைல் செல்லுங்கள்; நண்பனைக் காண மூன்று மைல் தூரம் செல்லுங்கள். — நபிகள் நாயகம்

**சரியான விடையைப் பின்வரும் வாசகர்கள் எழுதி, ரூ. 200 பரிசைச் சமமாகப் பகிர்ந்து கொள்கிருர்கள்:**

1. ஜி. முத்துக்கிருஷ்ணன், சென்னை — 10, 2. எஸ். வி. ராஜசேகர், சென்னை — 5, 3. எம். ஷீலா, செகந்திராபாத் — 26, 4. ஜே. ஆர். சுப்பிரமணியன், மதுரை — 1. 5. பா. நவநீதகிருஷ்ணன், திருச்சி — 8, 6. ஜி. ராசேந்திரன், கடலூர் — 2, 7. கே. சௌந்தரவல்லி, சென்னை — 21. 8. கே. சீதா, சேலம் — 7. 9. பி.வி. ராஜமாணிக்கம், கிருஷ்ணகிரி. 10. க. விசுவநாதன், திருத்தணி — 9, 11. கே. மீனாக்ஷி, குப்பம்பாளையம் — 636 212. 12. லலிதா வைத்தியநாதன், சென்னை — 4. 13. பி. என். எஸ். மணியன், ஜபல்பூர் — 1. 14. எஸ். ராமமூர்த்தி, பாளையங்கோட்டை — 2.



கடலங்குடி

# ஓவியன்



"ஏன் தாத்தா!
இந்தப்
படத்துக்கா
பத்து ரூபாய்
குடுத்தீங்க!
வேறே
யாராயிருந்தா
லும் இதுக்கு
சல்லிக் காசு
கூடத்
தர
மாட்டாங்க!"

"சார்... சார்.... நான் ரொம்ப ஃபைனு டிராயிங் பண்ணுவேன் சார்... பத்து நிமிஷத்திலே உங்களை அப்படியே வரைஞ்சுடுவேன் சார்...." என்று ஒரு பத்து வயதுச் சிறுவன் சாமிநாதப் பிள்ளையை நச்சரித்தான்.

அவனை அன்புடன் நோக்கினர் பிள்ளை.

"சார்... நாளைக்கி எக்ஸாம் பீஸ் கட்டணும் சார்.., ஒரே ஒரு படம் வரைஞ்சு தர்றேன்... அஞ்சு ரூபா கொடுத்தாப் போதும் சார்...."

அழுக்கு டிராயர் பையன் தாத்தாவைத் தொந்தரவு செய்வதைக் கண்ட மாதுரியும், ஜெகனும், "வாங்க தாத்தா.... ஷோவுக்கு இப்பவே டயமாச்சு" என்று அவசரப்படுத்தினர்.

"தோ பார் மாதுரி... இன்னும்





பிரபல பிரெஞ்சு நடிகரும் நாடகாசிரியருமான ஸச்சா கைட்ரீ என்பவருக்கு ஏற்கெனவே ஐந்து மனைவிகள் இறந்துபோய்விட்டார்கள். ஆறுவது மனைவியிடம் அவர் இப்படிச் சொன்னார்:

''என் கண்ணே! அந்த ஐந்து பேரும் எனக்கு வெறும் மனைவிகளாகத்தான் இருந்தார்கள். நீ மட்டுமே என் விதவையாகப் போகிறாய்!''

ஆதாரம்: மேதைகள் தமாஷ்!

—உ. வெங்கடேசன்.

---

நெறைய டயமிருக்கு..... நீங்க கொஞ்சம் கார்ல வெயிட் பண்ணுங்க... நான் ஒரே ஒரு படம் வரைஞ்சுக்கிட்டு வந்திடறேன்...'' என்றார் சாமிநாதப் பிள்ளை.

அழுக்கு டிராயர் 'கிட்டு'விற்கு ஒரே குஷி. வேகவேகமாகப் பேப்பரையும் பென்சிலையும் ரெடி செய்து கொண்டு, ஒரு கையால் தலைமுடியை 'ஸ்டைலாக' ஒதுக்கிவிட்டபடி அவரை 'ஆங்கிள்' பார்த்தான்.

மாதுரிக்கும், ஜெகனுக்கும் ரொம்பத் தர்ம சங்கடமாகிவிட்டது. 'நடு ரோட்ல, அதுவும் பெரிய ஹோட்டல் முன்னாடி, இந்தத் தாத்தா இப்படிப் பண்றாரே' என்று இருவரும் வாய்க்குள்ளேயே முனகிக் கொண்டனர். இருந்தாலும், தாத்தாவை எதிர்த்துப் பேச முடியாது என்பதால் காருக்குள் ஏறி உட்கார்ந்து கொண்டனர்.

''நான் ரெடி.... நீ ரெடியா?'' என்று பிள்ளை; சின்னப் பிள்ளையைப் போல் காரின் முகத்துப் பகுதியில் சாய்ந்தபடி கிட்டுவிடம் கேட்டார்.

''ஓகே சார்... அப்படியே கொஞ்சம் 'லெப்ட்'ல சாஞ்ச மாதிரி நில்லுங்க போதும். அ... அ... ரைட்....''

''ரைட்டா? நல்லா ஜம்முனு வரையணும்.... என்ன... தெரிஞ்சுதா?''

கடிகாரத்தைப் பார்த்த மாதுரி, ''ஐய்யோ... இந்நேரம் டைட்டில் ஓடுமே...'' என்று துடித்தாள்.

சாலையில் போவோர் வருவோரெல்லாம் வேடிக்கை பார்க்க ஆரம்பித்தார்கள். சற்றைக்கெல்லாம் அங்கு ஒரு 'மினி' கூட்டமே கூடிவிட்டது.

அவ்வளவுதான், மாதுரிக்கும் ஜெகனுக்கும் பெருத்த சங்கடமாகிவிட்டது. ''இப்படி அநியாயமா மாட்டிக்கிட்டோமே...'' என்று 'சீட்டில்' கைவைத்து, குப்புறப் படுத்துக் கொண்டனர்.

ஒருவழியாகக் கிட்டு படத்தை வரைந்து, இமாலயத் திருப்தியுடன் பிள்ளையிடம் நீட்ட, அதை அவர் ஆர்வமாக வாங்கி, ''பலே... பலே.... ரொம்ப அற்புதமா வரைஞ்சிருக்கியே....'' என்றபடி அவனைத் தட்டிக் கொடுத்தார். ஜிப்பா, பைக்குள் கைவிட்டு ஒரு பத்து ரூபாய் நோட்டை உருவி, கிட்டுவின் கைக்குள் திணித்தபடி, ''இந்தா வைச்சுக்க... உன்னோட திறமைக்கு இன்னும் நிறையவே கொடுக்கலாம்'' என்றார்.

கிட்டுவுக்கு இனம் புரியாமல் சந்தோஷமும், அழுகையும் சேர்ந்து வந்தன.

காருக்குள் உட்கார்ந்திருந்த மாதுரியையும், ஜெகனையும் பார்த்து, ''என்ன போகலாமா...?'' என்று பிள்ளை கேட்டதும்,

''ம்.... போகலாம்... வீட்டுக்கு'' என்றனர் கோரஸாக.

''சரி, சரி... நல்லதுதான். இந்தாங்க.... இந்தப் படத்தைப் பார்த்தீங்களா''என்றபடி கிட்டு வரைந்திருந்த படத்தை நீட்டினார்.

அரை மனத்துடன் அவர்கள் அந்தப் படத்தை வாங்கிப் பார்த்துவிட்டு, அடுத்த வினாடி, சினிமா போகாத கோபமெல்லாம் மறந்து சிரித்தனர்.

''ஏன் தாத்தா.... இந்தப் படத்துக்கா பத்து ரூபா...? வேறே யாராயிருந்தாலும் இதுக்கு சல்லிக் காசு கூடத் தரமாட்டாங்க.'' என்றாள் மாதுரி.

''இல்லே மாதுரியக்கா.... அவன் நம்ம தாத்தாவை 'மாடர்ன் ஆர்ட்'ல வரைஞ்சிருக்கான். அதான் வேறே ஒண்ணுமில்லே.'' இருவரும் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தனர்.

''ஏன் தாத்தா! நீங்க பெரிய கலை ரசிகர்; பத்திரிகைல எல்லாம் விமர்சனம் எழுதறவர். வீணா ஏன் அவனை அரை மணி நேரம் வாட்டி, ஓர் உருப்படாத படத்தை வரைய வைச்சு, எங்களையும் சினிமாவுக்குப் போக விடாம நோகடிச்சீங்க... அவனுக்கு முதல்லேயே பத்து ரூபாய் பணத்தைக் கொடுத்து அனுப்ப வேண்டியதுதானே?'' என்றாள் மாதுரி.

''நான் அப்படிச் செய்திருந்தால் ஒருத்தரோட உருவத்தை வரைய முடியும்ங்கற நம்பிக்கையோடும் கலை உணர்வோடும் ஒரு செயல்ல ஈடுபடற இளம் கலைஞனை அவமானப்படுத்தினதாகும். அவனை முன்னேற விடாம செய்யறதுக்கு வேறே எதுவுமே வேண்டாம். அவனிடம் இருந்தது துளி திறமைதான். ஆனால் அதோடு, கடலளவு ஆர்வமும், உழைச்சுச் சம்பாதிக்கணுங்கற நோக்கமும் இருந்தன. பின்னதை ஊக்குவிச்சா திறமை தானா வளரும்ங்கறதனாலதான் நான் அப்படிச் செய்தேன்'' என்றார் பிள்ளை..

மாதுரியும், ஜெகனும் புரிந்து கொண்டார்களோ இல்லையோ என்பதைப் பற்றி பிள்ளை கவலைப்படவில்லை. அவருக்கு மட்டும் அன்று நிறைய ஆத்ம திருப்தி கிடைத்தது.

— திருவள்ளுவன்

# குலம் தரும்...

விளையாட்டுப்போல ஆறு வருடங்கள்! இரண்டாயிரம் நாட்கள்!

காலக் கணக்கை விட்டுத் தள்ளுங்கள், ஒரு மாபெரும் கனவல்லவா நனவாகிவிட்டிருக்கிறது!

மணவாளனுக்கு அந்தக் கோபுரத்தைப் பார்க்கிற போது, அதன் நீள, அகல பௌதீகப் பரிமாணங்களை எல்லாம் தாண்டி, மகாபலிக்கு முன்னாலே திரிவிக்கிரமனாக நெடிதுயர நின்ற நெடுமாலே நினைவுக்கு வருவார். இருநூற்று முப்பத்தாறடி உயரத்தில் பதின்மூன்று அடுக்குக் கோபுரம்! ஊரில் உள்ள இருபத்தொரு கோபுரங்களில், இது மட்டும் சிகரப் பகுதியின்றி இதுநாள் வரை மொட்டையாய் நின்றது, இன்று ராஜ கோபுரமாய் விண்ணைத் தொட்டு நிற்கிறது!

ஒரு சின்னதிலிருந்து ஒரு பெரிசு! விதைக்குள்ளிருந்து விகசித்துக் கொண்டு விருட்சம் வெளிப்படுகிறதே, அதுபோல.

மனிதனுக்கு லட்சியம் என்று ஒன்று இருக்கணும். அந்த லட்சியம் — இலக்கு — உன்னதமாக இருக்க வேண்டும். இருந்து விட்டால் அது நிறைவேறியே தீரும்.

அதற்குச் சாட்சி, இந்தக் கோபுரம்!

மணவாளன் பெருமூச்சு விடுகிறான். அவனுக்குக் கூட ஓர் ஆசை — ஒரு கனவு — ஒரு லட்சியம் — இருக்கிறது. ரொம்பக் காலமாக இருக்கிறது. அதை வாய்விட்டு யாரிடமும் அவனால் சொல்ல இயலவில்லை. சொல்லி என்ன பயன்? ஏழை கனவு காணக் கூடாது. அவனுக்கு அந்த உரிமை இல்லை.

அவன் அப்பா காலத்தில் குடும்பம் ரொம்பச் செழிப்பாகத்தான் இருந்தது. அந்தப் பரம்பரையில் வந்த தோஷம் — ஒரு வேளை அதுவே வியாதியாகிப் போயிற்றோ! — மணவாளனுக்கு இன்னமும் எட்டுக் கல் விட்டெறிகிற நினைப்பு.

"மணவாளா! கோபுரத் திருப்பணிக்கு ஒரு சீட்டு வாங்கிக்கறியா?" கேட்டவர் இளையாழ்வார். தபாலாபீசில் வேலை பார்த்து, சமீபத்தில் ரிடையர் ஆனவர். எந்த நேரமும் அவர் கையில் நன்கொடை ரசீதுடன் ஊரில் வளைய வந்து கொண்டிருப்பார்.

"வாங்கணும் சாமி, கட்டாயம் வாங்கணும்" என்றான் மணவாளன்.

"பத்து ரூபாதான், கிழிக்கட்டுமா?"

"இப்ப வேண்டாம் சாமி, கையிலே பணமில்லே... ஒரு சீட்டு என்ன சாமி, நூறு சீட்டு வாங்கறதா நேர்ந்துக்கிட்டிருக்கேன்."

இளையாழ்வார் அவனைப் பார்த்து 'கபக்' என்று சிரித்து விட்டார்.

"நூறு சீட்டுன்னா ஆயிரம் ரூபாயாச் சேப்பா, அந்தப் பணம் எப்பச் சேர்ந்து, எப்ப நீ திருப்பணிக்குச் செலுத்தறது? நான் சொல்றதைக் கேளு. உன்னால முடிஞ்சதைக் கொடு... போறும்... என்ன, கிழிக்கட்டுமா?" என்றார்.

மணவாளன் நெஞ்சை நிமிர்த்தினான். "சாமீ! ஆயிரம் ரூபாய்க்கு ஒரு பைசாக் குறைவா நான் செலுத்தப் போறதில்லே...



வைராக்கியம் வெச்சிட்டேன்... எப்படி யாவது பணம்சேர்த்துடுவேன்...'' என்ருன்.

இளையாழ்வார் தபாலாபீஸில் சேமிப்புக் கணக்கு, இன்ஷூரன்ஸ் எல்லாம் வரவு செலவு செய்தவர். இப்போது பென்ஷன் வருகிறது. ஓராயிரம் ரூபாயாவது, இந்த ஜன்மத்தில் சேர்கிறதாவது!

'அப்பன் பாட்டன் காலத்திலே வகையா வாழ்ந்துட்டாங்க இல்லே... அந்த நினைப்பு விடல்லே.... பாவம் மணவாளன்!' அவர் வேறு ஆள் பார்க்க நகர்ந்து விட்டார்.

அன்றைக்குச் சொல்லியாயிற்று இளை யாழ்வாரிடம். ஏண்டா அப்படிச் சொன்னேம் என்று மணவாளனுக்குத் தோன்றவே இல்லை. 'ஆயிரம் ரூபாய் என்பது பெரிய தொகையா? பெரிய பெரு மாள் மனசு வைச்சா, தாயார் கடைக்கண் பார்த்தா ஆயிரமென்ன லட்ச ரூபாய்க் கூட தீயினில் தூசாகும்!

திருமங்கை மன்னர் ஒரு ராத்திரியிலேயே மதில் கட்டிஞராம்.

அம்மாடியோவ்! அவங்கல்லாம் மனு ஷங்க இல்லே, தெய்வம்! மணவாளன் பெரு மூச்சு விடுகிருன்.

''அப்போவ்!''

கனவு கலைகிறது.

எதிரே மகள். பெயர் நப்பின்னை. இதிலெல் லாம்குறைச்சல்இல்லை. வாய்த்தபெண்டாட்டி யின் பெயர் நாச்சியார். மகன் நம்பி — தாத் தாவின் பெயர். கடைக்குட்டி வகுளா பரணன்.

இந்த நம்பிப் பயல் ஸ்டேட் பர்ஸ்ட் வரு வான் என்று மணவாளன் கனவு கண்டான். கடைசியில் என்னவென்ருல் அவன் நம்பரே பேப்பரில் வரவில்லை. ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவை... ஊஹூம்... அவன் நம்பர் வரவே இல்லை.

கடைசியில் நம்பி, டூரிஸ்ட் பஸ் ஏதாவது வராதா, யாராவது வடநாட்டுக்காரன் — அதிர்ஷ்டவசமாய் வெளிநாட்டு ஆசாமி — கிடைக்க மாட்டாஞ என்று அலைகிற டூரிஸ்ட் கைடாக — யாரும் ஏதும் சொல்லித் தர வில்லை. தாஞகக் கைவந்த கலை — கேட்டுக் கேட்டுப் பழகிய பழம்பெருமைகளை புது மெருகுடன், உடைசல் ஆங்கிலம், தெலுங்கு, இந்தியுடன் சமயத்திற்குத் தக்கவாறு எடுத்துச் சொல்லி, ஒரு நாளில் அதிக பட்சம் பத்து ரூபாய் — சம்பாதிப்பதில் காலத்தைக் கழித்து வருகிருன்.

''அப்போவ்!'' மறுபடி கூவிஞள் நப் பின்னை.

''என்னம்மா?''

''ஸ்கூல்பீஸ் கட்டணும். பிக்னிக் போருங் களாம்... அதுக்கு இருபத்தி அஞ்சு ரூவா வேணும்... நாளைக்குக் கட்டாட்டி பேர் அடிச்சுடுவாங்களாம்...''

மணவாளன் அவளை நிமிர்ந்து பார்த் தான். நப்பின்னையின் கண்கள் — அழகாய், பெரிதாய், காதளவு நீண்ட கண்கள் — அவனைப் போலவே அவளும் கனவு காண் கிருள் என்பதை நினைவூட்டின.

''நாளைக்குத்தானே கட்டணும்? கட்டிட் டாப் போச்சி...''

''போங்கப்பா நீங்க இப்படித்தான் சொல் லுவீங்க, ஆஞ கட்ட மாட்டீங்க...'' என்று சிணுங்கியபடியே நப்பின்னை போய் விட் டாள்.

'இந்தப் பெண் கூட என்னை எவ்வளவு நன்ருக எடை போட்டு வைத்திருக்கிருள்!'

நம்பி அவசர அவசரமாக வந்தான்.

''அப்பா! ஒரு அஞ்சு ரூவா குறையுது,

ஷைலஜா



## பொங்கலும் தங்கலும்!

அவன்: பொங்கலுக்கு வந்த உங்க மருமகனும் பெண்ணும் இன்னும் இங்கேயே இருக்கிறார்களா? நீங்கள் பொறுமைசாலிதான்!

இவன்: பொறுமைசாலி நான் இல்லே; என் மாமனார்தான். நானே அவர் வீட்டில்தானே எனது தலைப் பொங்கல் முதலாகத் தங்கியிருக்கிறேன்.

— எம். வேலு

---

உங்ககிட்ட இருக்குமா?'' என்று கேட்டான்.

''இல்லையேப்பா, என்ன விஷயம்?''

நம்பி பதில் சொல்வதற்குள், ''நமஸ்காரண்டி!'' என்றபடியே தலைநிறையத் தலைப்பாகையுடன் ஓர் ஆந்திராவாடு உள்ளே நுழைந்து கைகூப்பி நின்றார்.

''பாவம்ப்பா... வந்த இடத்திலே இவர் பைய எவனோ திருடிட்டான். சாப்பிட்டே இரண்டு நாளாச்சாம். என் கையிலே பத்து ரூவா இருக்கு. பதினைஞ்சி ரூவா கொடுத்தா ஊர் போய்ச் சேர்ந்ததும் அனுப்பறேங்கறாரு.''

மணவாளன் பெருமூச்சு விட்டான். புலிக்குப் பிறந்தது பூனையாகுமா! அடேய், என்னைப் போலவே நீயும் பைத்தியக்காரனாய் இருக்கியேடா! அவனவன் ஆள் அகப்பட்டால் தேட்டை போடறான். நீ என்னடான்னா கைக்காசை எடுத்துத் தானம் கொடுக்கறேங்கிறே. வம்சாவளிடா, வம்சாவளி.'

கடைசியில் ஆந்திராவாடு பத்து ரூபாயோடு புறப்பட்டுப் போனார்.

கும்பாபிஷேகத்திற்கு நாள்கூட வைத்துவிட்டார்கள். இப்போது மணவாளன், அந்த ஆயிரம் ரூபாயைக் கோபுரத் திருப்பணிக்கு எப்படியாவது செலுத்தி விடுவதற்குப் பரபரக்க ஆரம்பித்தான். திண்ணையில் படுத்தபடியே ஆகாயத்தைப் பார்த்தவனுக்கு ஒரு வழியும் புலனாகவில்லை. இந்தத் திருப்பணிக்கு எங்க வம்சத்துக் காணிக்கை எப்படியாவது போய்ச் சேரணும்... பணம் செலுத்தறதா நேர்ந்துட்டிருக்கக் கூடாது... நேர்ந்துக்கிட்ட பிற்பாடு செலுத்தாம இருந்தா, அது பேரன் பேத்திகளைக் கூட தொடர்ந்து கிட்டிருக்கும்... அழகிய மணவாளா, நம்பெருமாளே உன் திருவுள்ளம் என்னவோ!'

பெருமூச்சு மெல்ல மெல்ல விம்மலாகி, அது மெல்ல மெல்ல அழுகையாக நெஞ்சைப் பிளந்து கொண்டு வெளிப்படலாயிற்று. அந்த அழுகை மெல்ல மெல்ல அவனை ஆழ்துயிலில் அமிழ்த்திற்று.

எவ்வளவு நேரம் ஆயிற்றோ, யாரோ வந்து தன்னை உலுக்குவது உணர்ந்து விழித்தான்.

''ஏய், என்ன தூக்கம் இன்னமும்?'' குரல் மிக அருகாமையில், அவனைக் கிட்டத்தட்ட அணைத்துக் கொண்டு, ரொம்பவும் அந்நியோன்யமாய் வினவிற்று.

மணவாளன் அந்தக் குரலைத் துழாவிப் பார்த்தான். எங்கோ கேட்ட குரல்! மிகவும் அணுக்கமான குரல்! அந்தக் குரலுக்குள் பழைமை நெடி வீசிற்று. 'யாரிவன்?'

''ஏய், என்னைத் தெரியலையா? என்ன முழிக்கிறே?''

மணவாளன் எழுந்து உட்கார்ந்தான். இப்போது அவனுக்குத் தெரிந்து போயிற்று.

''அட! நீ குலசேகரன் இல்லே... ஏய், நாச்சி இங்கே வா... இது யார் தெரியுமில்லே, குலேசு! ஏய், நீ இன்னமும் குலேசுதானடா? நாச்சீ... நானும் இவனும் அந்த நாளில் அடிச்சிருக்கிற கொட்டம் கணக்கு வழக்கில்லே... ஏய் குலேசு, நீ பம்பாய்க்கில்லே போனே... எப்ப வந்தே? புள்ளை குட்டி எப்படி இருக்காங்க?''

''உன்னை இவ்வளவு நாள் கழிச்சிப் பார்க்கிற போது எத்தனை சந்தோஷமாய் இருக்கு தெரியுமா? பழைய ஸ்ரீரங்கமாடா இது? எல்லாமே மாறிப் போயிருக்கு. ஆனா நீ மட்டும் மாறலை...'' என்றான்.

மணவாளன் மெல்லச் சிரித்தான்.

''சரி, கிளம்பு'' என்றபடியே எழுந்தான் குலசேகரன்.

''எங்கே?'' என்று கேட்டான் மணவாளன்.

''முதலிலே கொள்ளிடத்திலே குளிக்கணும்... பெரிய கோயிலில் சேவை பண்ணிக்கணும்... அப்புறமா கோபுரத் திருப்பணிக்காக ஒரு சின்னத் தொகை கொண்டு வந்திருக்கேன், அதைச் செலுத்தணும்...''

''ஓ... புறப்படலாமே... நாச்சீ! மத்தியான சாப்பாடெல்லாம் தயார் பண்ணி வை...'' என்றவன் ஏதோ நினைவு வந்தவனாய் உட்புறம் சென்று சமையற்கட்டுக்குள் நாச்சியார் அம்மாளிடம், ''வராதவன் வந்திருக்கான்... ஒரு பாயசம் படைச்சாத்தான் மரியாதை!'' என்று நெளிந்தான்.

நாச்சியார் அம்மாள் தலையை அசைத்தாள். ஆனால் அவள் எப்படிப் பாயசம் வைப்பாள் என்று மணவாளனுக்குப் புரியாத புதிராக இருந்தது. பிள்ளையாண்டானோ, கிடைத்த பத்து ரூபாயை அந்த ஆந்திராக்காரருக்குத் தானம் வார்த்து விட்டான். செப்பிடு வித்தை செய்தால் ஒழிய, அடுப்பில் பால் பொங்கிப் பாயசம் தலைகாட்டாது. ஆயினும் நாச்சியார் தலையசைத்ததில் மணவாளனுக்குத் தன் தலையிலிருந்து ஒரு பாரம் இறங்கிய நிம்மதி.

நண்பர்கள் கொள்ளிடத்தை நோக்கிப்

** மனிதனிடம் மிருகத் தன்மையும் உண்டு; தெய்வத் தன்மையும் உண்டு. கலையின் இலட்சியம் மிருகத்

# பரிசு ரூ. 200/-

## பொன்மொழிப் போட்டி — 10

இந்த இதழின் உள்பக்க மார்ஜின்களில் உள்ள ஐந்து பொன்மொழிகள் யாரால் உதிர்க்கப் பட்டவை? கீழே உள்ள ஐந்து பெயர்கள் அருகே வெற்றிடத்தில் பொருத்தம் பார்த்துப் பொன் மொழியைப் பிழையின்றி முழுமையாக எழுத வும். விலாசத்தைப் பூர்த்தி செய்து இந்த அரைப் பக்கத்தைக் கத்திரித்து அனுப்பவும். ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினல் பரிசு பகிர்ந்து அளிக்கப்படும். உறையின்மேல் "பொன்மொழிப் போட்டி — 10" என்று குறிப்பிடவும்.



சத்யசாயி பாபா:

பெர்னர்ட்ஷா:

கல்கி:

தியாகையர்:

நியூட்டன்:

முடிவு தேதி: 25.3.87

என் பெயர்: ..................................................

விலாசம்: ..................................................

..................................................

புறப்பட்டார்கள். வழி நெடுகப் பழைய கதை களை எல்லாம் குலசேகரன் விவரித்தான். பம்பாயில் சொந்த வீடு, ஒரு கார், ஒரு மகன் அமெரிக்காவில் படிக்கிறுனும். கேட்கக் கேட்க மணவாளனுக்குப் பெருமையாக இருந்தது. ஒரு காலத்தில் கோபுரமாக இருந்த தன்னுடைய வம்சம் இப்போது குப்பை மேடாகிவிட்டதையும், ஒரு காலத்தில் குப்பை மேடாக இருந்த குலசேகரனின் வம்சம், இப்போது கோபுரமாகி விட்டதையும் எண்ணிப் பார்க்கிறபோது, அந்த வியப்பு பெரிய விஞக்குறியாக மாறிற்று.

"ஒரு பத்தாயிரம் ரூபாய், கோபுரத் திருப் பணிக்குக் கொடுக்கலாம்னு இருக்கேன். ஆனுலும் பாருடா! உன்னைப் பார்த்தா எனக் குப் பெருமையாவும் கொஞ்சம் பொறுமை யாவும் கூட இருக்கு. என்னல் தர முடிஞ்சது பத்தாயிரம் ரூபாய்தான். ஆனல் நீ உன் உழைப்பை — ரத்தத்தை, வியர்வையை, மூச்சை எல்லாம் ஆத்மார்த்தமா பெருமா ளுக்குச் செலுத்தியிருக்கியேடா!"

மணவாளனுக்கு இந்தப் பேச்சு சற்று சமாதானமாக இருந்தாலும் நேர்ந்துக்கிட் டதை தன்னல் ஒரு நாளும் நிறைவேற்ற முடி யாது என்பதால் ஏற்பட்ட ஏக்கம் பெருமூச் சாக வெளிப்பட்டது.

"மணவாளா! இந்தப் பத்தாயிரம் என் ஞல கொடுக்க முடியுதுன்னு சொன்ஞ அதுக்கு யார் காரணம் தெரியுமா?" வினவி ஞன் குலசேகரன்.

மணவாளன் விழித்தான்.

"நீதான் காரணம். உங்க குடும்பம் கார ணம். நீங்க ஏத்தி வச்ச விளக்கு இப்போ கார்த்திகை தீபமாய் எரியுது."

"குலேசு, நீ என்ன சொல்றே?"

"ஏண்டா, மறந்துட்டியா அதெல்லாம்? நான் பம்பாய் போற போது, உங்கப்பா என்னை ஆசீர்வாதம் செஞ்சி பணம் கொடுத் தாரே ஞாபகம் இல்லே?"

"அப்படியா? இருக்கலாம்... அவர் காலத் தில் செயலாய் இருந்தாரு... கொடுத் தாரு..."

"அந்தப் பணத்திலதாண்டா என் வாழ்க் கையே உன்னதமான நிலைமைக்கு வந்தது. அட, பணத்தை விட்டுத் தள்ளு... உங்கப்பா வின் ஆசீர்வாதத்துலதாண்டா நான் இந்த நிலைமைக்கு வந்திருக்கேன்... உங்க குடும்பத் துக்குப்பட்ட கடனை எப்படி அடைக்கப் போறேனே தெரியலே...: மணவாளா! இப்ப நான் சொல்லப் போறதை நீ மறுக்காம ஏத் துக்கணும்... உங்க குடும்பத்துக்குப் பட்ட கடனை நான் செலுத்தப் போறேன். என்னலே தர முடிஞ்சதெல்லாம் பணம்தான்..."

மணவாளனுக்குக் கண்களில் நீர் சுரந் தது. பெரிய பெருமாள், திருப்பணிக்கு அவன் நேர்ந்து கொண்டதை எவ்வளவு அழகாய் வசூல் செய்து கொள்ளத் திட்டமிட்டு விட் டார்!

எதிரே குலசேகரன், கோபுரமாய், தன்னு டைய கனவின் நனவாய், ஆதர்சமாய், நிற்கக் கண்டான்.

# தங்கமும்
# தருதலையும்

"அடடே பரசுவா வா.., வா... எப்பப்பா வந்தே டெல்லியிலிருந்து?" என்னை பலமாகவரவேற்றான் என் நண்பன் சங்கரன்.

''நேத்து சாயங்காலம்தான் வந்தேன். பொண்ணு கல்யாணத்தை ஜாம்ஜாம்னு நடத்தினேன்னு கேள்விப்பட்டேன். சந்தோஷமாயிருந்தது. அந்தச் சமயம் பார்த்து, என் பெண்டாட்டிக்கு உடம்பு சரியில்லே. அதுதான் வர முடியலே...

"அது சரி, புவனு இப்போ எங்கிருக்கா?"

''மெட்ராஸிலதான் இருக்கா. பர்வதம், பரசு வந்திருக்கான் பாரு. காப்பி கொண்டு வா!'' உள்ளே நோக்கிக் குரல் கொடுத்தான் சங்கரன்.

பர்வதம் என்னிடம் காப்பியைக் கொண்டு வந்து நீட்டினாள்.

''பொண்ணு எப்படியிருக்கா மாமி?'' என்று நான் கேட்டதுதான் தாமதம்.

''பொண்ணு சௌக்யமா இருக்கா. மாப்பிள்ளை அவளை அருமையா வெச்சிண்டிருக்கார். இந்த ஆறு மாதத்துல நாலு புடைவை வாங்கித் தந்திருக்கார். புதுசா ஒரு நெக்லஸ் கூட வாங்கிண்டிருக்காளாம். போன மாசம் இந்த ரெண்டு பசங்களும்கூட ஒரு வாரம் அங்கே போய் இருந்துட்டு வந்தா!'' பர்வதத்தின் குரலில் பெருமிதம் பொங்கி வழிந்தது.

''இதைப் பாருங்க மாமா'' சங்கரனின் இரண்டாவது பெண் நந்தினி ஒரு பையை நீட்டினாள்.

வாங்கிப் பார்த்தேன்.

அதில் ஆரஞ்சுக் கலரில் பூப்போட்ட பாவாடைத் துணியும் சட்டைத் துணியுமிருந்தன.

''பலே! பலே! அத்திம்பேர் வாங்கிக் கொடுத்தாரா?''

''ஆமாம் மாமா. விசுவுக்கும் ஒரு 'பென் செட்' வாங்கிக் கொடுத்தார்!'' நந்தினியின் சந்தோஷம் எனக்குப் புரிந்தது.

''ஹீ ஈஸ் எ நைஸ் ஜென்டில்மேன் மாமா. கொஞ்சம்கூட கர்வமில்லே. என் கூடக் கிரிக்கெட் விளையாடினார். அக்காவை 'புவன், புவன்'னு கூப்பிடறதே சந்தோஷமாயிருக்கு'' விசு தன் பங்குக்குக் கூறினான்.

எனக்கும் எல்லாவற்றையும் கேட்டு மிகவும் சந்தோஷமாக இருந்தது.

''என்ன மாமி, ஏதாவது விசேஷம் உண்டா?''

''நேத்துத்தான் லெட்டர் வந்தது. மூன்று மாசமாறதாம். ஒரே தலே சுத்தலும் வாந்தியுமாயிருக்குன்னு எழுதியிருக்கா. அதுதான் கவலையாயிருக்கு.''

''நீ என்னத்துக்குக் கவலைப்படறே? அதுதான் அவளே எழுதியிருக்காளே மாப்பிள்ளையே சமைச்சுடறார். நீ கவலைப்படாதேன்னு'' சங்கரனின் சந்தோஷம் அவர் சர்வாங்கத்திலும் தெரிந்தது.



''சரி சங்கரா, அப்ப நான் வர்றேன். உன் மாப்பிள்ளையைப் பத்திக் கேட்கக் கேட்க என் மனம் ரொம்பச் சந்தோஷப்படறது''. எழுந்தேன்.

''தங்கமான மாப்பிள்ளை கிடைச்சுட்டார் பரசு. அடுத்து, பெரியவன் முரளிக்குத்தான் கல்யாணம் பண்ணணும்!'' வாசல் வரை வந்து என்னை வழியனுப்பினான் சங்கரன்.

**அ**டுத்த மாதமே அவன் பெரிய பிள்ளை முரளிக்கும், அமோகமாகத் திருமணம் நடந்தது.

இரண்டு, மூன்று மாதங்களாக ஆபீஸில் வேலை அதிகமாக இருந்ததால் சங்கரன் வீட்டுப் பக்கமே போக முடியவில்லை.

சரி இன்றாவது போய் வருவோமென்று கிளம்பினேன்.

''வா, பரசு!''

வழக்கமாகக் கலகலப்பாக இருக்கும் சங்கரன் தீன ஸ்வரத்தில் என்னை வரவேற்றான்.

பார்வதத்தின் முகமும் சரியாக இல்லை.

''என்ன மாமி டல்லடிக்கறான் சங்கரன்?''

''பின்னே, இந்த மாதிரி ஊதாரிப் பிள்ளையைப் பெத்ததுக்குப் பெருமிதத்தோடவா இருக்க முடியும்?'' வெடித்தாள் பார்வதம்.

''முரளியையா சொல்றீங்க!'' எனக்கு ஒன்றுமே புரியவில்லை.

''ஆமாம். அவனையேதான் சொல்றேன். கல்யாணமாகி ஆறு மாசம்தானே ஆறது. அதுக்குள்ளே நாலு புடைவை வாங்கிட்டான் பெண்டாட்டிக்கு. அவளுக்குப் புதுசா மோதிரம் ஒண்ணும் பண்ணிப் போட்டிருக்கானும். தேவைதானா இதெல்லாம்! இன்னும்....'' பார்வதத்தைத் தொடரவிடவில்லை சங்கரன்.

''இதெல்லாம் வுடுடீ, பொண்டாட்டிக்கு மசக்கைன்னு இவனே சமைக்கறானும். ஊர் உலகத்துல எவளுமே பிள்ளை பெத்துக்கலையா? என்னவோ ஆட்டமா ஆடறான். இதைப் பார்த்துட்டு வந்த எங்க மாமா என் கிட்ட சொன்னப்போ, நாக்கைப் பிடுங்கிக்கலாம் போலிருந்தது!'' சங்கரன் குரலில் வெறுப்புத் தெரிந்தது.

''உங்களுக்குஇதுவும்வேணும்,இன்னமும் வேணும். அண்ணன் வீட்டுக்குப் 'போ, போ'ன்னு என்னையும் விசுவையும் துரத்தினீங்க. என்ன ஆச்சு? அவன் மன்னி தங்கைக்குச் 'சல்வார் கமீஸ் என்ன, தம்பிக்குக் கிரிக்கெட் பேட், பந்து என்ன' என்று வாங்கிக் குடுத்துக் கொஞ்சிண்டிருக்கான். ச்சீ...'' நந்தினி பொரிந்து தள்ளினாள்.

கடைசியாகவிசுவைப்பார்த்தேன். அவன் தானே பாக்கி. ''மொத்தத்துல அவன் பொண்டாட்டிகிட்ட 'வத்சு, வத்சு'ன்னு நாயாட்டமாக் குழைஞ்சுண்டு கிடக்கிறான் மாமா. யூஸ்லெஸ் ஃபெலோ'' விசு முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

''என்னவோ பரசு, எனக்கு மனசே சரியில்லை நமக்குன்னு இப்படியொரு தறுதலைப் பிள்ளை வாய்ச்சுதேனுருக்குடா'' என்றான் சங்கரன்.

ஆறு மாதம் முன்பு மருமகன் செய்தவைகளைத்தானே மகன் இப்பொழுது செய்து கொண்டிருக்கிறான். மருமகன் செய்தால் தங்கம்.மகன்செய்தால்தறுதலையா?எனக்குத் தலை சுற்றியது.

**— லதா ராஜாராம்**






# ஸா:.ப்ட் அண்ட் ஸில்க்கி ஹேர் ரிமூவிங் லோஷன்.







...:.ப்ட் அண்ட் ஸில்க்கி ஹேர்
...ங் லோஷன்.
...த ஹேர் ரிமூவிங் லோஷனை
...ாகப்படுத்துவதில் எந்த சிரமமு
..., சங்கடமுமில்லை.
...துவான மேனி மீது
...கவும் சீராகவும் பரவுகிறது!
...ண்டு சைஸ்களில் கிடைக்கிறது:
...லி. மற்றும 45 மி.லி.
...ம்! எத்தனை சிக்கனம.
...:.ப்ட் அண்ட் ஸில்க்கி லோஷன
...மங்கும் மென்மை உணர்வு.
...மி.லி.பாட்டில் விலை ரூ. 10.70
...ரிகள் தனி)



# ஆத்தா



அரியமுத்து கவுண்டர் காட்
கொட்டகையில் குந்திக் கொண்டு சோ
தட்டைகளைச் சிறுசிறு நறுக்குகளாக
வாளால் வெட்டிப் போட்டுக் கொண்டி
தார். கருமாபுரம் சோமாரச் சந்தைய
வாங்கிய இரண்டு ஆத்தூர்க் காளைக
அவற்றை நாக்கினுல் இழுத்து இழுத்
தின்று கொண்டிருந்தன.

கவுண்டரின் மனைவி பாராத்தா அருகி
உள்ள சேந்து கிணற்றடியில் நின்று கொ
டிருந்தாள்.

அரியமுத்து பிற்பகல் போனவர் ரொப்
நேரம் கழித்து வீட்டிற்கு வரும்போ
அவளுக்குத் தெரியும். ஊரில் ஏதேனும் வி
காரம் முளைத்திருக்கும். அதுதான் வந்த
முதலே அவர் சரியாகவேயில்லை.

"என்ன விசியம்? ஆரும் ஏதாச்சும் பே
ஞங்களா?"

பாராத்தா எதிரே கிடந்த கயிற்றுக் கட்
லில் உட்கார்ந்தாள்.

சோளத் தட்டுகளை நறுக்கிப் போட்
விட்டு அதே இடத்தில், உட்கார்ந்திருந்தா
அரியமுத்து.

"ஒண்ணுமில்ல தாயி. நம்ம செல்லியம்
னுக்கு நோம்பி போட்டு எத்தனை வரு
மாச்சு. எத்தனை ஆசை ஆசையா அந்
அந்த ஆத்தாளுக்கு அளகாப் பல்லக்
செஞ்சு வச்சேன். பல்லக்குச் சுமக்க, தண்டு
கட்டை வேணும்னு எந்தெந்தக் கிராமத்து
கெல்லாம் அலைஞ்சேன். கடசிலே நரசிங்
புரம் நாமநாய்க்கன் காட்டிலேருந்து பாக்
உருட்டு வாங்கியாரத்துக்குள்ளார நா
பட்டபாடு ஒனக்குத்தான் தெரியுமே!

"இத்தனை பாடுபட்டு எல்லாத்தியு
சேகரம் பண்ணினேன். ஆத்தாளுக்கு
பட்டுத் துணி வாங்கி, காரிப்பட்டி டைல
நடராசன் கிட்டே பொளுதன்னிக்கும் ஒ
காந்து பாவாட தச்சு வாங்கியாந்தேன்.

"அந்தக் கோயிலாண்ட இருக்கி
காட்டைத் திருத்தி, வேலி வச்சுப் பந்த
போட்டு, கொடிக்காலச் சுத்தி மே
கட்டி...."

கவுண்டரின் குரல் பாதியில் தடைபட்
நின்றது.

வெள்ளாள குண்டம் சாலையில் உள்
அந்தச் செல்லியம்மனுக்கு நிறைய மான்ய
கள் இருந்தன.

ஐந்நூறு தென்னை மரங்களும், இரு நூ
பாக்கு மரங்களும் உண்டு. வானம் பார்த்
வறண்ட பூமியான அந்த இடத்துச் சூழ்நி
யைத் துல்லியமாகக் கணக்கிட்ட சேஷையா
அந்தக் காலத்திலேயே அதற்குப் பயிர் விளை
யும் நிலமாக எழுதி வைத்து, செல்லிய
மனை ஏமாற்ற நினைக்கவில்லை.

காரணம், நிலத்தை நம்பினுல் அம்மனு
குப் பூஜை செய்ய வருமானம் இருக்கா
என்று அவருக்குத் தெரிந்தது; தென்னை மர
களையும், பாக்கு மரங்களையும் எழுதி வைத்
விட்டார்.

அதிலிருந்து வரும் வருமானத்தா

செல்லியம்மனுக்குத் தாராளமாக மூன்று கால பூஜை நடந்தது. பரார்த்த பூஜைகளைச் செய்ய ஓர் அர்ச்சகர் குடும்பத்தைச் சேலம் செவ்வாய்ப்பேட்டை அக்கிரஹாரத்திலிருந்து குடி பெயர்த்து வாழப்பாடியில் குடியமர்த்தியிருந்தார்.

அம்பாளின் சொத்துக்களைப் பராமரிக்க, இரண்டு ஊர்க் கவுண்டர்களைத் தர்மகர்த்தாக்களாக நியமித்திருந்தார்.

"அரியமுத்து, உன்கூட முத்தம்பட்டி தம்மண்ணனையும் சேர்த்துக்க. செல்லியம்மனோட பூஜை நல்லா நடக்கணும். அவ இருக்கிற எடம் காசு கொழிக்கும்..." என்று பட்டா எழுதி வைத்துவிட்டு சேஷையர் மூத்த பிள்ளையுடன் வெளிநாட்டில் குடியேறி விட்டார்.

தன் பொறுப்பில் விடப்பட்ட மான்யங்களை முறைப்படி வசூல் செய்து, அந்தச் சின்ன ஆலயத்திற்குத் தேவையானவற்றையெல்லாம் பார்த்துப் பார்த்துச் செய்தார் அரியமுத்து.

"அரியமுத்து இந்த வயசிலே நீ ஏன் இம்புட்டுக் கஷ்டப்பட்டு இதையெல்லாம் செய்யணும்? நான் இல்லையா? என் மவன் இல்லையா? உன்னையும் என்னையும் நம்பித்தானே இந்தக் கோயில் சொத்துக்களுக்குத் தர்மகர்த்தாவா நம்மை நியமிச்சாரு. கவலையை வுடு. எல்லாச் சமாசாரத்தையும் நான் பார்த்துக்கறேன். ஆத்தா செல்லியம்மனோட மரியாதை மால, மெரமனையோட உன் ஊட்டு தேடி வரும்.நீ கம்முனு ஊட்டுலே குந்திக்க. கணக்கு வளக்குகளை என் பையன் பாத்துக்குவான்" என்று தம்மண்ணன் சொன்னவுடன், அரியமுத்து ஒன்றுமே சொல்லாமல், பொறுப்புகள் அனைத்தையும் அவரிடமே ஒப்படைத்துவிட்டார். இதுவரை தேங்காய்கள் விற்றது, பாக்கு விற்றது என்று பத்தாயிரம் வரையில் அவரிடமிருந்தது. அதையும் அவரிடமே கொடுத்துவிட்டார்.

'ஆத்தாளுக்கு எல்லாம் நல்லா நடக்கோணும். அவ மனசு குளிர்ந்தா, நாம நல்லா இருப்போம். ஊரு நல்லாயிருக்கும். நீ இந்தப் பொறுப்புக்களை ஏத்துக்கறதிலே எனக்கு ரெட்டிப்புச் சந்தோஷம்..." கோயில் தர்மகர்த்தா பொறுப்பு எவ்வித ஆர்ப்பாட்டமும் இல்லாமல் வெறும் மனித நம்பிக்கையில் கைமாறியது.

அடுத்தடுத்து தம்மண்ணனைப் பற்றி வந்த செய்திகள் ஏதும் பெருமைப்படும் விதத்தில் இல்லை.

தம்மண்ணனைப் பற்றிப் பரவலாகப் பேசப்படும் பேச்சுக்கள், தேங்கிவிட்ட ஆலயப் பணி ஆகியவை அவரைப் பெரிதும் சங்கடப்படுத்தின. இவற்றுக்கு ஒரு முடிவு கட்ட வேண்டும் என்ற முடிவுடன் தம்மண்ணனை அவர் வீட்டில் சந்தித்தார்.

"தம்மண்ணா, கோயிலு வேலை எதுவுமே நடக்கல. நா எப்படி ஒப்படைச்சேனோ அதே மாதிரி அப்படியே இருக்குது. ஆத்தாளோட பணம் அம்புட்டு உருவாவும் ஒங்கிட்ட தந்திட்டேன்ல. அதைப் போட்டு அவ கோவிலரிப்பேர்ப் பண்றவேலய ஆரம்பிச்சுட வேண்டியதுதானே. மாசி போகப் போவுது. பங்குனிலே நோம்பி போட்டாவணும். இத்தன வருசமா பண்டிகை நின்னதேயில்லே."

அவர் பேசியதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த தம்மண்ணன், "அரியமுத்து... கோயிலப் பத்தி இனிமே என்கிட்டே ஏதும் கேக்கக் கூடாது. கேட்டே, அப்பற மேல்ட்டு நா, தோவக்காரனாயிடுவேன். கோயிலுக்கு என்ன பண்ணணும்? எப்பப் பண்ணணும்ங்கறதெல்லாம் எனக்கும் என் மவனுக்கும் தெரியும். உன் சோலியப் பாத்துக்கிட்டு நீ போயிக்கிட்டே இரு..." என்று ஏகமாகச் சப்தம் போட ஆரம்பித்து விட்டார்.

தந்தையின் பக்கத்தை நியாயப்படுத்த அவர் மகனும் சேர்ந்து கொண்டு விட்டான். போதாக் குறைக்கு உள்ளூர்க்காரர்கள் சிலரும் தம்மண்ணன் பக்கம் பேசவே, அவர் மனம் பதறினார். தம்மண்ணன் உள்ளத்தில் இருப்பது என்னவென்று தெரிந்துவிட்டது. இனி அவனிடமிருந்து நியாயம் எதிர்பார்ப்பது வீண். அவன் ஒரு முடிவு எடுத்து விட்டான். அதிலிருந்து அவனை இனி திருப்பவே முடியாது — என்று மனம் நோகத் திரும்பினார்.

செல்லியம்மன் ஆலயத்திற்கு முன்னால் வந்து நின்றார்.

உள்ளே இருளடைந்த கருவறைக்குள் அம்மன் விளக்கின்றி நின்று கொண்டிருந்தாள். அவர் கண்கள் கலங்கின.

"ஆயா, தம்மண்ணன் பய என்ன பேசறான் கேட்டியா? உனக்காக, உன் மேலே பிரியம் வச்சு எம்புட்டு மானியம் எழுதிக் குடுத்துட்டு, அந்தச் சேசைய்யர் போனார். இவன் உன்னை ஏமாத்தறான். பரவாயில்லே. ஆனா நா இருக்கிற வரையிலே உன்னை இப்படி வுடமாட்டேன். உனக்கு வேண்டியதெல்லாம் நான் செய்யறேன்" என்று மனமுருகக் கூறியவர், யாருடைய தயவும் இல்லாமல் தம்மிடமிருந்த கொஞ்ச பணத்தையும், சிலரிடம் நன்கொடை வசூலித்தும் கோயிலை ஒழுங்குபடுத்தினார். யாளி வாகனம் செய்தார். பல்லக்குச் செய்தார். ஊர் ஊராக அலைந்து பல்லக்குத் தூக்க தண்டுக் கட்டை சேகரம் செய்தார். எல்லாம் செய்து செல்லியம்மனுக்குப் பண்டிகை போட ஏற்பாடு பண்ணிய போது, அந்தச் சண்டை விஸ்வரூபமெடுத்து விட்டது.

"கோவிலுக்குஎன்னைக்கேட்காமல் ஆரும் நோம்பி போடக் கூடாது' என்று ஊர்க்காரர்களை நூற்றுக்கணக்கில் கூட்டி வந்து பண்டிகை போட விடாமல் தடுத்து விட்டார் தம்மண்ணன்.

இதனால் இரண்டு கிராமத்திற்கும் விவகாரம் முற்றி, அடிதடியில் முடிந்து, போலீஸார் தலையிட்டு, இரண்டு பக்கமும் சமமாக



அமைச்சர்: ஏய்! நீ நாளையிலேர்ந்து வேலைக்கு வர வேண்டாம்.

வேலையாள்: நான் என்ன சார், உங்களை மாதிரி மந்திரியா என்ன, 'போ'ன்னு சொன்னவுடனே போறதுக்கு. மூணு மாசம் நோட்டீஸ் கொடுத்துத்தான் என்னைப் போகச் சொல்லணும் சார், தெரியுமா?

— குடந்தை சந்தானம்

---

இருபது இருபது பேரைக் கைது செய்தார்கள்.

'கோவிலுக்கு யாருமே பண்டிகை நடத்தக் கூடாது' என்று போலீஸார் தடையுத்தரவு போட்டு ,கோவிலைப் பூட்டிச் சாவியை எடுத்துப் போய் விட்டார்கள்.

கிட்டத்தட்ட ஐந்து வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்டன. ஒவ்வோர் ஆண்டும் விழாக்கோலம் நெருங்கும்போது இரண்டு பக்கமும் உணர்ச்சி வசப்பட்டு ஆத்திரம் மேலோங்கி அடி, தடி, ரத்தக்களறி, போலீஸ் தலையீடு, சில கைதுகள் என்றுதான் முடிந்து கொண்டிருந்தது.

நடுவில், தம்மண்ணனுக்கு முடக்கு வாதம் ஏற்பட்டு ஒருபக்கம் செயலற்றுப் போய் விட்டதாக யாரோ வந்து சொன்னார்கள். இதுவே கூட ஒரு கெட்ட நிகழ்ச்சியின் அறிகுறியாகப் பட்டது அவருக்கு.

ரெட்டைக் காளை பூட்டிய சின்னக் கூண்டு வண்டியில் பெரிய மீசையை முறுக்கிக் கொண்டு வரும் தம்மண்ணனை நினைத்துப் பார்த்தார். அவர் கண்கள் கலங்கின. திடகாத்திரமாக இருந்த அவருக்குத் திடீரென்று இந்த வாத நோய் வந்து அடித்துப்போட்டதே கூட தெய்வ குற்றம்தான் என்று பரவலாகப் பேச ஆரம்பித்து விட்டார்கள்.

தன் நினைவுகளிலிருந்து விடுபட்ட போது மனைவி பாராத்தா அவரையே பார்த்த வண்ணமிருந்தாள்.

"ஒண்ணுமில்லே தாயி, வாழப்பாடி போனப்ப கோயில் அய்யரப் பாத்தேன். அவரப் பாக்கப் பாவமா இருக்கு. இத நம்பி பத்து வருசத்துக்கு முன்னலை வந்தவரு இப்ப வாழப்பாடி ரிசிஸ்டர் ஆபீஸ் ஓரம் குந்திக்கிட்டு பாண்டு, பத்திரம் எளுதிக் காலத்தை ஓட்டறாராம். கேக்கவே கஸ்டமா யிருக்கு... பாராத்தா... தாயி மேட்டுப்பட்டி கோலுக்காரன ஆளனுப்பி, ஒடனே கூட்டியாரச் சொல்லு. வெள்ளாள குண்டம் ஆளுங்களுக்கு ஒரு சேதி அனுப்போணும். இத இப்படியே வுட்டுட முடியாது புள்ளே... இந்தத் தவா ரெண்டுல ஒண்ணு முடிவு கட்டியாவணும்..."

ஆரியமுத்து பரபரவெனக் காரியத்திலிறங்கினர். இத்தனை நாள் வரை வீண் விவகாரம் வரக் கூடாது. ஊர் இரண்டுபடக் கூடாது என்று தயங்கிக் கொண்டிருந்தார். இனி அப்படியிருந்து பிரயோஜனமில்லை. 'கோயில் மான்யங்களை உடனே மீட்டாகணும். கோயில் சொத்தை அபகரிக்க நினைக்கிறவனை சும்மா வுடக் கூடாது...' என்று கிராமம் கிராமமாகப் போய் வீடு வீடாகச் சொன்னர்.

'தெய்வத்தின் பேரில் இப்படி அக்கறை இல்லாம இருக்கிறதுனலேதான் கோயில் சொத்தையெல்லாம் எவனெவனே அனுபவிச்சுக்கிட்டு இருக்கான். கோயில் பணத்திலே பங்களா கட்டறுன். சினிமாத் தியேட்டர் வாங்கறுன். தேர்தல்லே நிக்கறுன். இதுக்கெல்லாம் முடிவு கட்டியாவணும்...' என்று அவர் சொன்னவை கிராம மக்களிடையே ஒரு புதிய விழிப்புணர்வை உண்டாக்கியது. அதன் பலன், அவர் பின்னுல் ஒரு புதிய அணி வகுப்பொன்று சைன்யம் போல நிற்கத் தொடங்கிவிட்டது.

துடும்புக்காரனை அழைத்து, துடும்பு போடுவதற்கான செய்தியைச் சுருக்கமாகச் சொன்னர். 'இந்தப் பங்குனில செல்லியாத்தா நோம்பி போட ஊர்க் கவுண்டர் முடிவு பண்ணியிருக்காரு. பல வருசமா பூசை நின்னு போனதைப் பத்தி பேசப் போறாரு. வார செவ்வாக் கௌமை முத்தம்பட்டி சாவடில, ஊர்ப் பெரியவங்க கூடி முடிவெடுக்கறுங்க. ஊர் சனங்க எல்லாரும் வரவோணும்...'

செய்தி எல்லா இடங்களுக்கும் பரவியது. தனிப்பட்ட முறையிலும் கோலுக்காரன் மூலம் தம்மண்ணன் வகையறுவுக்கு அழைப்பு அனுப்பப்பட்டது. அவர்களும் பஞ்சாயத்துக்கு வருவதாகச் சொல்லி அனுப்பியிருந்தார்கள். தம்மண்ணன் பேசக்கூடிய நிலையில் இல்லையென்றலும் ஊர் பஞ்சாயத்து நிகழ்ச்சிகளை உட்கார்ந்தபடி கவனிக்க வருவார். அவர் மகன் மாரிமுத்து இதில் தீவிர பங்கு கொள்வார் என்கிற செய்தி வந்தது.

"வெவகாரத்தை முத்தவிடாம முடிக்கப் பாருங்க... ஆ... கவுண்டரே ஒம்மத்தான்..."-- பாராத்தா வெளியே புறப்படவிருந்த தன் கணவரிடம் கூறினுள்.

"பாரு தாயி, காத்து, மழை, மண்ணு, அதோ அந்த மலை இத மாதிரி தெய்வமும் ஒரு இயற்கைதான். அந்த இயற்கையை நாம மனசு சுத்தியோட ஆராதனை பண்ணிஞ

** நாம் எதற்கு ஆசைப்படுகிறோமோ அது நம்மிடம் இல்லையாதலால் அந்த அளவுக்கு ஏழையாக இருக்கிறோம். எவன் அதிக ஆசைப்படுகிறானோ அவன் அதிக ஏழை...

## பரிசு ரூ. 200/-

### பொன்மொழிப் போட்டி — 12

இந்த இதழின் உள்பக்க மார்ஜின்களில் உள்ள ஐந்து பொன் மொழிகள் யாரால் கூறப்பட்டவை? கீழே உள்ள ஐந்து பெயர்கள் அருகே வெற்றிடத்தில் பொருத்தம் பார்த்துப் பொன்மொழியைப் பிழையின்றி முழுமையாக எழுதவும். விலாசத்தைப் பூர்த்தி செய்து இந்த அரைப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும். ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசு பகிர்ந்து அளிக்கப்படும். உறையின்மேல் "பொன்மொழிப் போட்டி—12" என்று குறிப்பிடவும்.



ஜவாஹர்லால் நேரு:

லின் யூடாங்:

சத்யசாயி பாபா:

தாமஸ் ஹார்டி:

பெர்னர்ட் ஷா:

முடிவு தேதி: 8.4.87

என் பெயர்: ..........................................

விலாசம்: ..........................................

..........................................

நிச்சயமா நல்ல பலன் கிட்டும். பொய் சொல்லி, அந்த இயற்கையை நீ ஏமாத்த நெனச்சா இயற்கை ஒன்ன ஏமாத்திப்புடும். இதுதான் பாராத்தா எனக்குத் தெரிஞ்ச பாடம். இன்னக்கி ஒரு குடம் தண்ணிக்குக் கொடத்த எடுத்துக்கிட்டுக் காடுகாடா அலைய றேமே, ஏன்? உன் ஆராதனையிலே சுத்த மில்லே, உன் ஆராதனையிலே உண்மை யில்லே. அதான் எல்லாத்துக்கும் கஷ்டப் படும்படியா வச்சுப்புட்டா. நல்ல மழை பேஞ்சு எத்தனையோ வருசமாச்சு. நல்ல வெள்ளாமை பண்ணி எத்தனையோ வருச மாச்சு...

"நீ செய்யற கடவுள் காரியத்திலே வெறும் ஆர்ப்பாட்டம்தான் இருக்கு. சிரத்தையில்லே. உன்னப் பாத்து, பத்து நூறு பேரு பாராட்ட ணும்னு விழா எடுக்கறியே தவிர, மனசு சுத்தமா எங்கே காரியம் பண்றே? அது போவட்டும், இத்தனை வருசமா இந்த வெவ காரம் பத்திப் பேசவே வராம இருந்தவங்க இப்ப ஊர் நியாயம் பேச வரேன்னு சொல்லி அனுப்பியிருக்காங்களே, அதுவே ஒரு நல்ல சகுனந்தான்..."

அவர் மனைவியுடன் பேசிக் கொண்டிருக்கும் போதே மேளதாளத்துடன் பெரிய ஊர்வலமொன்று அவர் காட்டுக் கொட்டகையை நோக்கி வந்து கொண்டிருந்தது.

கோலுக்காரன் கூட்டத்தைக் கடந்து ஓடி வந்து, "தம்மண்ண கவுண்டர் மவன் மாரி முத்து கோயில் மால கொண்ட்டாரு..." என்றான்.

கூட்டம் நெருங்கி வந்துவிட்டது. மாரிமுத்து பெரிய மாலையுடன் வேக மாக வர, அர்ச்சகர் மணி கையில் பரி வட்டத்தோடு புன்னகையுடன் பின்னால் வந்து நின்றார்.

"என்ன இதெல்லாம்?"

"பெரியவங்க நடந்த விசயங்கள மறந் துட்டு செல்லியாத்தா கோயில் பொறுப்ப வந்து ஏத்துக்கணும். ஆத்தாளோட கணக்கு வழக்கெல்லாம் சுத்தமாக் கொண்டாந்திருக் கேன். அவளோட ஒரு காசு கூட எனக்கு வேண்டாம்., நடுவிலே ஏதேதோ தப்பு நடந்து போச்சு. எல்லாத்தையும் சரி பண்ணித் தாரேன். ஐயாரு கோயிலாண்ட காத்துக் கிட்டு இருக்காரு. அவரால நடக்க முடி யாது. அவரைத் தூக்கியாந்து கோயில்லே ஒக்கார வச்சிருக்கோம். மறுபடி செல்லி யம்மன் ஆலயப் பொறுப்பு அத்தனையையும் உங்க கிட்டே செல்லியம்மனுக்கு முன்னா லேயே ஒப்படைக்கக் காத்துக்கிட்டு இருக் காரு."

தம்மண்ணன், மாரிமுத்து ஆகியோரிடம் இன்று ஏற்பட்டிருக்கிற மன மாறுதல் திடீ ரென்று ஏற்பட்டதல்ல என்பது அவருக்கும் தெரியும். எனினும் அதைப் பெரிதுபடுத்த அவர் விரும்பவில்லை. சூழ்நிலையின் சாத கத்தை அனுசரித்து எல்லாவற்றையும் மறந்து விட்டவர் போல மாரிமுத்துவைத் தழுவிக் கொண்டார்.

# புதிய தொடர்

## அழகாபுரி அழகப்பன்

"நீ சினிமா ஸ்டாரா ஆனா, லட்சம் லட்சமா சம்பாதிப்பே; கார்லே போவே; பங்களா விலே காத்து வாங்குவே! ஆனா, உன்னை நடிகையாக்க ஒரு டைரக்டரோட திறமை வேணும்; உனக்கு உதவி செய்ய றவங்க உன்கிட்டேயிருந்து ஏதாவது உதவியை எதிர் பார்க்கத்தானே செய்வாங்க?"

"ஆமா".

"என்னைப் போல ஆண்கள் கிட்டப் பணத்தை எதிர்பார்க்க லாம். உன்மாதிரி அழகான பொண்ணுகிட்ட என்ன எதிர் பார்க்க முடியும்?"

"சொல்லு."

"உன்னைத்தான் எதிர்பார்ப் பாங்க. நீ முடியாதுன்னு சொன்னா, சான்ஸ் தரமாட் டாங்க. அப்போ என்ன செய்யப் போறே? நடிக்காது போனா லும் பரவாயில்லைன்னு திரும் பிடப் போறியா? நீ கேட்கிறதை அவங்க தரணும்னு எதிர்பார்க் கிற நீ, அவங்க கேட்கிறதைத் தரத் தயாராயில்லைன்னா எப் படி?"

"அப்போ அவங்களும் என் னைத்தான் கேட்பாங்களா?"

"கேட்கலாம்; கேட்காமலும் போகலாம். கேட்டா நீ மறுக்க முடியுமா?"

"முடியாதுதான்."

"அப்போ, என்கிட்டே மட் டும் ஏன் மறுக்கிறே? என் உதவி யில்லாம நீ டைரக்டரைப் பார்க்கக் கூட முடியாதே!"

அவள் தன் நிலையைப் புரிந்து கொண்டாள்.



"சரி, நவநீதம். உன் இஷ்டத் துக்கு சம்மதிக்கிறேன்."

அவன் கைகள் அவள் மேல் ஊர்ந்தன.

அவளும் புதிய உணர்வுக ளால் புல்லரித்து நின்றாள்

அவன் இரு கரங்களாலும் அவளை இறுக அணைத்துக் கொண்டே குனிந்து அவள் ஆரஞ்சு உதடுகளில் அழுத் தமாக முத்தமிட்டான்.

அவளும் அவனது உறுதி யான உடலைத் தழுவிக் கொண்டாள்.

ஒரு சில நிமிஷங்கள் கூட அவனால் தாள முடியவில்லை; வேறெங்கோ போக ஆசைப்பட் டான்.

கூடத்தில் சுருட்டிக் கிடந்த பாயை விரித்து விட்டான். தலையணையை எடுத்துச் சரியாக வைத்தான்.

அவளை மெல்ல பாயில் சாய்த்து, தானும் சரிந்து கொண் டான்.

ஆர்வம் தாளாமல் அவன் கையை நகர்த்த; வெட்கம் தாளாமல் அவள் தடுக்க; அவர்களுக்கிடையே ஒரு செல் லப் போராட்டம் நடந்து கொண்டு இருந்த போதுதான், வாசலில் அந்தக் குரல் கணீரென்று ஒலித்தது.

**காதல் ரசம் சொட்டும் இப்புதிய தொடர்கதை ஞாயிறு தோறும் தினமலர் வாரமலர் இதழில் படிக்கத்தவறாதீர்கள்.**

# மனைவியின் காதலன்!

கா.சு.வேலாயுதன்

**பு**யலென உள்ளே நுழைந்த அவன், அவர் முன்னே நின்று —

''சார்....'' என்றான்.

— அனுமதியில்லாமல் உள்ளே நுழைந்து, அதிகார மிடுக்கோடு தன்னை அழைக்கும் அந்தக் குரலுக்குரியவனை மெதுவாக ஏறிட்டார் ராக்கியப்பன்.

''யாரப்பா நீ.... என்ன விஷயம்?''

ராக்கியப்பனின் ஒற்றை வரிக்குப் பதிலாக ஓராயிரம் வரிகளை உதிர்த்து விடும் அவசரத்துடன் வந்தவனின் குரல், அந்த அறையில் ஓங்கி ஒலித்தது!

''சார்... எம் பேரு ஆனந்த்.... நான் உங்ககிட்ட பர்ஸனலா....''

— என்று கூறிவிட்டு, சட்டென்று பேச்சை நிறுத்தி, சுற்றுமுற்றும் பார்த்தான். அவன் மனம் அவரைத் தவிர அங்கு யாருமில்லை என்பதைஉறுதிசெய்திருக்க வேண்டும்! உடனே,

''சார்... உங்க மனைவி ரோகிணியைப் பத்திக் கொஞ்சம் தனியாப் பேசணும்! உட்காரலாமா?''

தயக்கம், அவன் குரலில்தான் இழையோடியதே தவிர செயலில் அது ஒரு துளியும் இருக்கவில்லை! அவர் உட்காரச் சொல்லு முன்பே, சட்டென அவருக்கு எதிர் இருக்கையில் அமர்ந்தான்.

ராக்கியப்பன் தன் மூக்குக் கண்ணாடியை அதன் இருப்பிடத்திலிருந்து கழற்றி எதிரேயிருந்த மேஜைக்கு மாற்றினார். கண்களை அழுந்தத் துடைத்துக் கொண்டவர், அவனையே வைத்தகண் மாறாமல் சிறிது நேரம் பார்த்தார்.

''எம் மனைவியைப் பத்திப் புதுசா என்னப்பா சொல்லப் போறே....? அவ நடத்தை கெட்டவ.... காலேஜுல எங்கூட சுத்திகிட்டிருந்தா... நாங்க ரெண்டு பேரும் ஜோடியா எடுத்த போட்டோ கூட எங்கிட்டே இருக்கு.... எனக்கு அவ எழுதிய லவ் லெட்டர்ஸ் எல்லாம் உங்ககிட்ட காட்டத் தயாராயிருக்கேன்! இதைத்தானே நீ இப்பச் சொல்லப் போறே...?''

அலட்சியமாக வார்த்தைகளை அடுக்கினார்.

''சார்....!'' ஆனந்த் அதிர்ந்தான்.

''ஏம்பா, இப்படிக் கத்தறே.... இதெல்லாம் எனக்குத் தெரிஞ்சுருக்கேன்னு உனக்கு அதிர்ச்சியாயிருக்கா... இப்ப நீ எங்கிட்ட சொல்ல நினைச்சதை நான் சரியாத்தானே சொன்னேன். இது தப்பா....?''

''அப்போ.... உங்க மனைவி இந்த விஷயத்தை முழுவதும் உங்ககிட்டே சொல்லிட்டாங்களா....?''

''சொல்லிட்டாளாவா? நீ மூணு மாசமா அவளுக்கு எழுதின பிளாக் மெயில் கடிதமெல்லாம் இப்ப எங்கிட்டதான் இருக்கு! நீ கடைசியா எங்கிட்ட இன்னைக்கு வந்து விஷயத்தைவெட்டவெளிச்சமாக்கப்போறேன்னு போன வாரம் அவளுக்கு எழுதின கடிதம் கூட எங்கிட்டதான் இருக்கு... தெரிஞ்சுக்க....!''

முகத்தில் எந்தச் சலனமுமில்லாது பேசினார் ராக்கியப்பன்!

ஆனந்த் மேலும் அதிர்ந்தான்.

''சார்.... அப்ப, நீங்க... நீங்க....!''

''ஏம்பா ஆனந்த் பயந்து சாகறே...? நீ உனக்கும் அவளுக்கும் உள்ள தொடர்பை எங்கிட்ட சொல்லிடுவேன்னு அவளைப் பய



முறுத்தியிருக்கே! இதைத் தவிர்க்கணும்னு பத்தாயிரம் ரூபாய் பணத்தை உடனே அவ உனக்குத் தந்தாகணும்னு மிரட்டற கடித மெல்லாம் எழுதினியே அதை இப்ப நான் உனக்குக் காட்டணுமா....?''

ஆனந்தின் முகம் ராக்கியப்பன் பேசப் பேசப் பாறையாக இறுகிக் கொண்டே போனது!

தான் பிளாக் மெயில் செய்த விஷயத்தை ரோகிணி தன் கணவனிடமே வெட்ட வெளிச்சமாக்கிவிட்டாள்! எப்படியாவது இவர்களிடமிருந்து பத்தாயிரம் ரூபாய் கறந் தாக வேண்டும்! என்ன செய்வது....?

யோசித்தவனின் மூளையில் திடீரென்று ஒரு 'பளிச்'...

இந்த ராக்கியப்பனையே இப்போது பிளாக் மெயில் பண்ணினால் என்ன....? மூளையை மீண்டும் கசக்கிக் கொண்டான்.

''மிஸ்டர் ராக்கியப்பன்.... உங்ககிட்டே இந்த விஷயத்தை உங்க மனைவி சொல்லிட் டாங்க. சரிதான்! ஆனால், உங்களுக்குத் தெரிஞ்சிருக்கிறவிஷயத்தை உங்க ஆபீஸ்ல... உங்க சொந்தக்காரங்ககிட்ட... உங்கக் கண் ணுக்குக் கண்ணான ரெண்டு பொண்ணுங்க கிட்ட, ஆதாரபூர்வமா விண்டு, விண்டு சொல்லி, உங்க மானம் மரியாதையை பீஸ் பீஸாக்கிடுவேன்.... பேசாம நான் கேட்ட பணம் பத்தாயிரத்தைக் கொடுத்துடுங்க...''

குரலில் ஒரு புதிய மிடுக்கை வரவழைத் துக் கொண்டு பேசினான் ஆனந்த். ராக்கி யப்பன் பழைய நிதானம் மாறாமலேயே அவனைப் பார்த்தார்.

''ஏம்பா....நீயாரை அவமானப்படுத்தப் போறே...? எம் மனைவியையா, இல்லை என்னையா....?''

''உங்க மனைவியைத்தான்ங்கறதுல உங் களுக்கென்ன சந்தேகம்....?''

''செத்துப் போனவளைப் போயி அவ மானப்படுத்தப் போறியா....?'' ராக்கியப்ப னின் கேள்வியில் இளக்காரம் புரையோடி யது!

மூன்றாவது முறையாக ஆனந்த் அதிர்ந் தான்!

''என்ன... உண்மையாகவா?''

அவன் கண்கள் கேள்விக்குறியாய் வெளிச்சம்போட,ராக்கியப்பன் அண்ணாந்து அந்த அறையின் சுவரைப் பார்த்தார்.

அங்கு —

அவர் மனைவி ரோகிணி நான்கு சட்டங் களுக்குள் பூமாலை சார்த்தப்பட்டுச் சிரித் துக் கொண்டிருந்தாள்!

ஆனந்த் அதிர்ச்சியில் எழுந்தேவிட்டான்.

'இந்தப் படத்தை தான் வந்ததிலிருந்து எப்படி கவனிக்காது இருந்தோம்?' அவனுள் கேள்வி இழையோட ஏதும் பேசத் தோன்றா மல் எழுந்தவன், அப்படியே திரும்பி நடக்க ஆரம்பித்தான்!

''டேய்.... நில்லுடா.... எங்கேடா போறே?''

கேள்வி உக்கிரமாய் ராக்கியப்பனின் வாயிலிருந்து உதிர, இதுவரை மனத்தில் எழாத ஒருவித பயம் அவன் மூளையைத் தாக்கியது!

அவனை எட்டிப் பிடித்தார் ராக்கியப்பன்.

''டேய்.... நீ அவளை மூணு மாசமாவே பிளாக் மெயில் பண்ணிட்டு வந்திருக்கே! அதை அவ கடைசி வரைக்கும் எங்கிட்டச் சொல்லப் பயந்துகிட்டுப் பேசாமலேயே இருந்துட்டா. அவளைப் பத்தி எங்கிட்டச் சொல்லிடுவேன்னு உன்னோட கடைசி கடி தத்தில் மிரட்டினதும் அவளால அந்த அதிர்ச்சியையும்பயத்தையும்தாங்கமுடியலை. ஒரு வாரம் முந்திதான் விஷம் சாப்பிட்டுத் தற்கொலை செஞ்சுகிட்டா. அவ கடைசியா எழுதி வச்சுட்டுப் போன கடிதத்தைப் படிச்சுதான் உன்னைப் பற்றியும், உன்னோட இந்தச் சில்லறைத்தனத்தையும் தெரிஞ்சுக் கிட்டேன்....!''

''சார்... நீங்க.., நீங்க...!''

''என்னடா தடுமாறரே... உன்னைத்தான் நான் ஒரு வாரமா எதிர்பார்த்துட்டிருந்தேன். இப்ப நல்ல வசமா மாட்டிக்கிட்டே. எம் மனைவி ரோகிணியோட சாவுக்குக் காரண மான உன்னை இப்பவே போலீஸ்லே பிடிச் சுக் கொடுக்கப் போறேன்....!''

ஆனந்த்தின் முகம் அவர் பேசப் பேசச் சவக்களை கட்டிக் கொண்டே வந்தது! திடீ ரென்று அவருக்கு முன்னால் நெடுஞ்சாண் கடையாக விழுந்தான் அவன்!

''ஐயா, என்னை மன்னிச்சுடுங்க.... ஐயா... நான் இது இவ்வளவு தூரம் விபரீதமாப் போகும்னு தெரியாம தப்பு செஞ்சுட்டேன். என்னை மன்னிச்சுடுங்க ஐயா....!''

காலில் விழுந்து கெஞ்சும் அவனையே பார்த்தார். ராக்கியப்பன். பின்பு —

''சரி.... சரி.... எழுந்திரு! உன்னைப் பத்தி ரோகிணி எழுதின கடிதமும் நீ அவளை பிளாக்மெயில்பண்ணி எழுதினகடிதங்களும் எங்கிட்டதான் இருக்கு! அதுவுமில்லாம போலீஸ்ல ரிப்போர்ட் வேறே செஞ்சிருக் கேன்! இப்ப மட்டுமல்ல...... எப்ப நினைச்சாலும் உன்னைப் போலீஸ்ல மாட்டி வைக்க என்னால முடியும்!''

''சார்....!''

''ஆமாம்... கடைசியா உனக்குச் சொல்

---

**மனைவி:** உடனே ஊருக்கு லெட்டர் போட்டு உங்கம்மாவை வரச் சொல் லுங்க!

**கணவன்:** அதிசயமாயிருக்கே! அப்படி என்ன அவசரம்?

**மனைவி:** குழாயடியில் ஒத்தையா சண்டை போட்டு ஜெயிக்க முடியலை!

— எஸ். மீனலோசனி



றேன். ரோகிணி உனக்கு வாலிபத்துல எழுதின கடிதங்கள், அனுப்பிய போட்டோ எல்லாத்தையும் ஒண்ணு விடாம இப்பவே குடுத்துட்டு, அடுத்த நிமிஷமே நீ இந்த ஊரை விட்டு வெளியேறணும்! மறுபடி இந்த ஊருக் குள்ளே காலடி எடுத்து வச்சே... அப்புறம் கம்பி எண்ண வேண்டியதுதான்!'' — ஒரு புலியின் உறுமலாகக் கர்ஜித்தது ராக்கியப் பனின் குரல்.

ஆனந்தனுக்கு இப்போதைக்கு அவர் தன்னை விட்டால் அதுவே தான் செய்த பூர்வ ஜன்ம புண்ணியம் என்பது விளங்க வெகு நேரமாகவில்லை! பரபரவென்று தான் கொண்டு வந்திருந்த கறுப்பு நிற தோல் பையைப் பிரித்தான்! அதில் அடைக்கலமாகி யிருந்த பல கடிதங்களையும், பழைய போட் டோக்களையும் நடுங்கும் கரங்களால் தாறு மாறாக எடுத்து, ராக்கியப்பனின் கைகளில் திணித்துவிட்டு அவருக்கு ஒரு பெரிய கும்பிடு போட்டுவிட்டுத் திரும்பிப் பாராமல் நடக்க ஆரம்பித்தான்.

அவன் வெகு தூரம் சென்று மறையும் வரை வாசலையே பார்த்தவாறிருந்த ராக்கி யப்பன் அறையின் நடுவே கிடந்த ஸ்டூலை எடுத்துச் சென்று சுவரோரம் போட்டு அதன் மீது ஏறி நின்று போட்டோவின் மேல் சார்த்தப்பட்டிருந்த பூமாலையைக் கழற்றினர்.

உள் அறையை நோக்கி அவர் குரல் கொடுக்கவும் வெளிப்பட்ட ரோகிணி, ''என் னங்க, அவனை அனுப்பிச்சுட்டீங்களா...?'' என்றாள், சந்தோஷம் கலந்த பயத்துடன்.

''பயப்படாதே ரோகிணி....! அவன் இனி மேல் இந்த ஊர்ப் பக்கம் தலை வச்சு கூடப் படுக்க மாட்டான். அந்த அளவுக்கு அவனை மிரட்டி அனுப்பிச்சுட்டேன்....!'' என்று கூறியவர் தொடர்ந்து,

''நல்லவேளை, இவனைக் காதலிச்சு ஏமாந்த விஷயத்தை கல்யாணத்துக்கு முந்தியே எங் கிட்டச் சொல்லியிருந்தே! நானும் அப்பவே உன்னை மனப்பூர்வமா ஏத்துக்கிட்டேன்! இத்தனை வருஷமா எங்கேயோ தெருப் பொறுக்கிக்கிட்டிருந்தவன் உன்னை இந்த ஊர்ல பார்த்ததும், உன்னைப் பத்தி எங்கிட்ட யும், நம்ம பொண்ணுங்ககிட்டயும் சொல் றேன்னு பயமுறுத்தினான். எனக்கு உன்னைப் பத்தி எல்லா விவரமும் தெரியும்! ஆனா, வயசுக்கு வந்த நம்ப பொண்ணுங்ககிட்டே உன்னைப் பத்தி இவன் தாறுமாறாச் சொன்னா, அதுக உன்னைப் பத்தி என்ன நினைக்கும்? அதுதான் அவன் இன்னைக்கு வருவான்னு தெரிஞ்சதும் இந்தப் புது வழியைக் கையாண்டேன். நீ உயிரோட இருக்கும் போதே உன்னோட படத்துக்கு மாலை போட்ட துக்கு என்னை மன்னிச்சுடு ரோகிணி....!''

கணவனின் பெருந்தன்மையை எண்ணி சந்தோஷம் பொங்க நின்றிருந்தாள் ரோகிணி.

ராக்கியப்பன், பேசியபடியே, மேஜையில் வைத்திருந்த தம் மனைவியின் காதல் கடி தங்களையெல்லாம் சுக்கல் சுக்கலாகக் கிழித் துக் கொண்டிருந்தார்.

# பரிசு ரூ. 200/-

## பொன்மொழிப் போட்டி — 13

**இந்த இதழின் உள்பக்க மார்ஜின்களில் ஐந்து பொன்மொழிகள் அச்சாகியுள்ளன. அவற்றைக் கீழே உள்ள ஐந்து பெயர்களுடன் பொருத்தி, வெற்றிடத்தில் பிழையின்றி முழுமையாக எழுதுங் கள். விலாசத்தைப் பூர்த்தி செய்து, இந்த அரைப் பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து அனுப்புங் கள். ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் பரிசு பகிர்ந்து அளிக்கப்படும். உறையின்மேல் 'பொன்மொழிப் போட்டி — 13' என்று அவசியம் குறிப்பிடவும்.**



ராஜாஜி:

காந்திஜி:

பெர்ட்ரண்ட் ரஸ்ஸல்

ராமகிருஷ்ண பரமஹம்ஸர்:

சத்ய சாயி பாபா:

முடிவு தேதி: 15.4.87

என் பெயர்: ..........................

விலாசம்: ..........................

..........................



# சீதை சொன்ன கதை

சீதைக்குக் கல்யாணம். வீட்டில் குதூகலம் பொங்கி வழிந்தது. பார்க்கப் போனால் கல்யாணம்நிச்சயம்செய்வதில்சிரமமிருக்கக் கூடிய பெண்கள் வகையைச் சேர்ந்தவளல்ல சீதை. அழகில் ரம்பை, ஊர்வசி என்று சொல்லலாம். பொருளாதாரப் பாடத்தில் எம்.ஏ. பட்டம் பெற்றவள். பொதுவாகப் புத்திசாலிப் பெண். இப்படிப்பட்ட சீதைக்கு வரன் நிச்சயிப்பதில் ஒரு கஷ்டமும் இருக்க முடியாதென்ருலும் இந்த வரன் நிச்சயமான தில் வீட்டிலுள்ள அனைவருக்கும் சீதை அதிர்ஷ்டசாலி என்று சொல்லி முடியாத ஆனந்தம். நிச்சயிக்கப்பட்ட மாப்பிள்ளை பிரசித்தி பெற்ற எழுத்தாளன் என்பதுதான் இதற்குக் காரணம். இளம் பிராயத்திலேயே ஆந்திர தேச மக்கள் அனைவர் நாவிலும் நடமாடும் எழுத்தாளன் அவன். அவனது உண்மைப்பெயர் ஆஞ்சநேய சாஸ்திரி என்ருலும், 'சந்தன்' என்ற புனை பெயரையே ஒவ்வொருவரும் அறிந்திருந்தனர்.

ஒருநாள் கல்லூரிவகுப்பறையில்ஸரோஜா ஒரு கதையைப் பற்றிப் பேச்செடுத்தாள். அது சம்பந்தமாக அவளுக்கும் மற்ற சக மாணவிகளுக்கும் இடையே பலத்த வாக்கு வாதம் எழுந்து, சண்டையாகி பரஸ்பரம் ஒருவரோடு ஒருவர் பேசுவது நின்று போகுமளவுக்குப் போய்விட்டது. அன்று சீதைக்கு அவர்கள் போக்கைக் கண்டு வெறுப்பு ஏற்பட்டது. ஆம் அவளுக்குக் கதைகள் எழுதுவது அதைப் பத்திரிகைகளில் பிரசுரிப்பது பற்றி ஒருவித கருத்து உண்டு. அதாவது சிறையில் கைதிகள் செய்த நாற்காலிகள், கூடைகள், எம்பிராய்டரிவேலை செய்ததுண்டுகள் ஆகியவை எவ்வாறு வெளியில் விற்பனைக்கு வருகின்றனவோ, அவ்வாறு எழுத்தாளர்கள் பத்திரிகை ஆபீஸ் என்னும் சிறையில் அடைக்கப்பட்டுப் படைக்கும் விஷயங்களே இக்கதைகள் என்பது சீதையின் எண்ணம்.

ஒருநாள் சீதை சோர்வோடு சாய்ந்த படி உட்கார்ந்திருக்கையில், ஸரோஜா, "ஹாய் சீதா" என்று ஒரே உற்சாகமாக ஓடி வந்து விழுந்தாள். அவளைப் பார்த்ததும் சீதை இன்னும் கொஞ்சம் சோர்ந்து போனாள்!

"என்னடி இப்படி இருக்கிறாய், இவ்வளவு டல்லாக? எனக்கோ உன்னை, உன் அதிர்ஷ்டத்தை எப்படிப் பாராட்டுவது என்றே தெரியவில்லை? ஹா! ஹவ் லக்கி யூ ஆர்! 'சந்தன்' என்றால் யார் தெரியுமா? நமக்குள்ள மூன்று நான்கு பிரசித்தி பெற்ற எழுத்தாளர் களில் ஒருவராக்கும்! அவர் கதைகள் என்றால் ஓ! என்னால் சொல்லி முடியாது! அந்த அழகினை, அனுபவங்களை நீ படித்துத் தெரிந்து கொள்ள வேண்டுமடி!" என்றாள் தன்வசமிழந்த நிலையில்.

சீதை மேலும் கொஞ்சம் சோர்ந்து போனாள். இப்படிப் பேசிய ஸரோஜா வுக்கு என்ன பதில் சொல்வது என்ற யோசனையில் ஆழ்ந்து போனாள். ஆனால் ஸரோஜா அதைப் பற்றிச் சிறிதும் பொருட் படுத்தாமல், "அவருடைய கதைகளில் நீ என்ன படித்திருக்கிறாய், சொல் பார்க்க லாம்!" என்று கேட்டாள்.

அவள் என்ன சொல்வாள்! மொத்தத்தில் சீதை எந்த எழுத்தாளருடைய கதையை யும் படித்தவள் அல்ல. இந்நிலையில் 'சந் தனை'ப் பற்றி என்ன சொல்ல இருக்கிறது!

"நான் ஒன்றும் படித்ததில்லை, அவரது கதைகள் மட்டுமல்ல, யாருடைய கதையும் நான் படித்ததில்லை" என்றாள் சீதை தைரிய மாக. ஸரோஜா ஒரு கொலைகாரியைப் பார்ப் பதுபோல் சீதையைப் பார்த்தாள். கொலை யை நேரில் பார்க்கும் ஒருவன் எப்படி வார்த்தை வெளிவராமல், 'திக் பிரமை' அடைந்துவிடுவானோ அந்தநிலையிலிருந்தாள் ஸரோஜா, சீதையின் வார்த்தைகளைக் கேட்டு. ஸரோஜாவுக்கு ஒருபக்கம் சீதை யினிடம் பரிதாபம் ஏற்பட்டாலும் அடுத்த கணம் பொருமையும் கொண்டாள். இந்த ஜடத்தைக் கொண்டு அவர் தலையில் கட்டி ஏனோ இப்படிச் சந்தனுக்கு அநீதி விளைவிக் கிறார்கள் என்று பெரிதும் துக்கப்பட்டாள்.

சீதை ஒன்றும் பேசாமல் உட்கார்ந்திருந் தாள். இதற்குள் ஓர் உறுதியான முடிவுக்கு வந்துவிட்ட ஸரோஜா, இனி தான் 'கீதோ பதேசம்' செய்யாமலிருக்க முடியாது என்று பேச ஆரம்பித்தாள்.

"சீதா, உன் கணவர் உன்னை அன்போடு பார்க்க வேண்டும், உன் மேல் காதல் கொள்ள வேண்டும் என்றால் நீ அவர் எழு திய புத்தகங்களைப் படிக்க வேண்டும். பாராட்ட வேண்டும். உற்சாகப்படுத்த வேண் டும், அவர் புகழில் பங்கு கொள்ள வேண்டும். அப்போதுதான் அவர் தம் வாழ்க்கையில் உனக்கு ஓர் உன்னத்மான இடத்தை வழங்குவார். ஆயினும் இதென்ன துர்ப்பாக்கியமடி நீ இவ்வளவு படித்திருக் கிறாய், ஏன் இலக்கியமென்றால் உனக்கு இவ் வளவு வெறுப்பு?" என்றாள். நல்ல சங்கீதத் தில் அபஸ்வரம் விழுந்தாற்போல் அருவருப் புற்றாள்.

ஸரோஜாவின் வார்த்தைகளைக் கேட்ட சீதாவுக்கு இப்போது பலப் பலச் சிந்தனை கள். கணவர் தன்னை நேசிக்கவில்லை, அன் பாக நடத்தவில்லையென்றால் தன்னால் பொறுமையாக இருக்க முடியுமா? தன்னைத் தவிர வேறொரு பெண்ணிடம் அவருக்கு ஈடு பாடு என்றால் தன்னால் சகித்துக் கொள்ள முடியுமா? என்று யோசித்தாள். ஒருநாளும் முடியாது. பின் இதற்கு வழிதான் என்ன? அவருடைய் புத்தகங்கள் ஒன்றிரண்டையாகி லும் எப்படியும் படித்துவிட வேண்டும். ஐயோ! மீண்டும் படிப்பா? படிப்பு என்றாலே அழுகை வருகிறதே! இத்தனை நாட்கள் படித்துப், படித்து பரீக்ஷைகள் பாஸ் பண்ணியாயிற்று. மீண்டும் இதென்ன பரீட்சை! கடவுளே! இப்படி நினைத்த மாத்திரத்தில் நெஞ்சம் தழுதழுத்தது. "பின் என்ன செய்ய வேண்டும் என்கிறாயடி?" என்று அழாத குறையாகக் கேட்டாள்.

ஸரோஜாவுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. துள்ளிக் குதித்துக் கொண்டு பலத்த குரலில், "இரண்டு புத்தகங்களை வரவழைத்துப் படிப் பதைவிட்டுஇதென்னடீஅழுகை?" என்றாள்.

"ஒரு வாரத்தில் முகூர்த்தம். இப்போது அவர் புத்தகங்களைப் படித்தால் எல்லோ ரும் சிரிப்பார்கள். மேலும் என்னால் வேக மாகவும் படிக்க முடியாது. அப்படிப் படித்தா லும் சுலபமாகக் கதையும் புரியாது" என்றாள் சீதா சோகமாக.

ஸரோஜா கொஞ்ச நேரம் தீவிரமாக யோசனையில் ஆழ்ந்தாள். பிறகு ஏதோ தீர் மானித்தவளாய், "அப்படியானால் நான் ஒன்று சொல்கிறேன், அதன்படி செய்வாயா?" என்று கேட்டாள்.

"ஓ! அப்படியே செய்கிறேன்" என்றாள் சீதா.

"இதெல்லாம் உனக்காகத்தான். உன் நன்மைக்காகத்தான் சொல்கிறேன். முதலில் அவரோடு பேசும் வாய்ப்புக் கிடைக்கும் போதே, உன்னை அவர் மனப்பூர்வமாக ஏற்றுக் கொண்டு விட வேண்டும்!" என்றாள் ஸரோஜா. சீதை பலியாடு போல் தலையை அசைத்தாள்.

அவருடைய கதைகளில் மிகச் சிறந்த இரண்டொரு கதைகளைச் சொல்கிறேன். அவற்றை நன்றாகப் புரிந்து கொண்டு நான் கைந்து தடவை சொல்லிப் பார்த்துக் கொள். அவரை நீ சந்திக்கும்போது, உங்கள் கதைகள் உங்கள் எழுத்து என்றால் எனக்கு ரொம்பவும் பிடிக்கும் என்று அன்பு கொப் பளிக்கச் சொல்லு. இப்படிச் சொல்லிக் கொண்டே இரண்டு கதைகளைச் சொல்லு. இல்லை, ஒரு கதையாகிலும் சொல். போதும்.

அவர் ஆனந்த சாகரத்தில் மூழ்கிப் போய் உன்னை அப்படியே கட்டித் தழுவி....'' என்றாள் ஸரோஜா.

''சரி போதும் நிறுத்து. இனி கதையைச் சொல்லு'' என்றாள் சீதை.

எவ்வளவோ அழகாக மனத்தைக் கவரும் வகையில், பாத்திரங்களும், சம்பவங்களும் கண்முன் நடப்பன போன்றபிரமையுண்டாக்கும் வகையில் கதை சொன்னாள் ஸரோஜா. கேட்கக் கேட்கச் சீதையின் கண்கள் அகல விரிந்தன. வியப்பில் கதையைப் புரிந்து கொள்ள மிகப் பிரயாசைப்பட்டாள். காலேஜில் படித்த எகனாமிக்ஸை விடக் கதை கஷ்டம் போலிருக்கிறதே என்று நினைத்தாள். என்னவெல்லாமோ சந்தேகங்கள் மனத்தில் மீண்டும் மீண்டும் உதித்தன. அவற்றையெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டு கதை முன்பின் முரண்படாமல் சொல்ல நன்றாக மனத்தில் வாங்கிக் கொண்டாள்.

ஸரோஜாவுக்கு கதை படிப்பதோ, தனக்குப் பிடித்த கதையைப் பிறருக்குச் சொல்வதோ மிகவும் பிடித்தமான செயல்கள். அப்போது அவள் அடையும் ஆனந்தம் சொல்லி முடியாது. சீதைக்கு இரண்டு கதைகள் சொன்னாள். அதில் அவள் சொன்ன முதல் கதை சீதைக்கு ரொம்பவும் பிடித்திருந்தது. கதைகள் கூட நன்றாக இருக்கும் போலிருக்கிறதே என்று நினைத்துக் கொண்டாள். அதனையே மனத்தில் நன்றாகப் பதிய வைத்துக் கொண்டாள். இரண்டாவது கதையும் நன்றாக இருந்தது என்றாலும் மனத்தில் பதிய வைத்துக் கொள்வது சீதாவுக்குச் சிரமமாக இருந்தது. இதை வெளியில் சொன்னால் ஸரோஜா தன்னை அடிக்கவே வந்துவிடுவாள் என்ற பயத்தில் சும்மா இருந்துவிட்டாள்.

திருமணம் சிறப்பாக நடந்தேறியது. மாப்பிள்ளையின் எழுத்தாள நண்பர்கள், பதிப்பாளர்கள், இலக்கிய விமர்சகர்கள் என்று பலர் வந்திருந்தார்கள். எல்லோரும் ஆஞ்சநேய சாஸ்திரிக்கல்ல, சந்தனுக்கே வாழ்த்துக்களும் பாராட்டுக்களும் பரிசுகளும் வழங்கினார்கள். எத்தனையோ புஸ்தகங்களைப் பரிசுகளாக வழங்கினார்கள். சீதையின் அழகைப் பார்த்துவிட்டு அவரைப் பாராட்டினார்கள். சீதையின் தோழிகள் அவளை வானளாவப் புகழ்ந்தார்கள்.

''**வா**, சீதா! அருகில் வா! நீ என்ன அவ்வளவு தூரத்தில் ஒதுங்கிப் போய் நின்றுவிட்டாய்? இப்படிப் பழங்காலப் பெண் போல் கர்நாடகமாக நடந்து கொள்வது எனக்குப் பிடிக்காது. நீ என்னோடு சுதந்திரமாக நட்புரிமையோடு பழக வேண்டும். அது தான் எனக்குப் பிடிக்கும்'' என்றார் எழுத்தாளர் கணவர். சீதை தலை நிமிர்ந்து அவரைப் பார்த்தாள். அவன் ஒரு நண்பனைப் போல் புன்னகை தவழ அவளைப் பார்த்துக் கொண்டிருப்பதைக் கவனித்தாள்.

இப்போது தான் செய்ய வேண்டிய கடமை என்னவென்பது நினைவுக்கு வந்தவள்போல் அவரைப் பார்த்து, ''எனக்கு உங்கள் கதைகள் என்றால் ரொம்பவும் பிடிக்கும்'' என்றாள். இப்படிச் சொன்னபோது அவள் குரலில் லேசாக நடுக்கமிருந்தது. அடுத்த கணம் அவளுக்கு வெட்கம் வந்துவிட்டது.

''உண்மையாகவா! அப்படியானால் நான் ரொம்ப அதிர்ஷ்டசாலிதான்!'' என்று சொல்லிக் கொண்டே அவள் கரங்களைப் பற்றித் தன்னருகில் உட்கார வைத்துக் கொண்டான்.

''எங்கே, என் கதைகளில் உனக்கு ரொம்பவும் பிடித்த கதையைச் சொல்லு, பார்ப்போம்!'' என்றான். எந்தக் கேள்வி வரக் கூடும் என்று எதிர்பார்த்து, இரவெல்லாம் படித்துவிட்டு, மறுநாள் பரீட்சைக்குச் சென்ற மாணவன், கேள்வித் தாளில், தான் எதிர்பார்த்த கேள்வியே வந்திருப்பதைக் கண்டு எப்படி சந்தோஷப்படுவானோ, அப்படிப் பட்ட சந்தோஷத்துடன் ஒரு வார காலமாக மனத்தில் சொல்லிப் பார்த்து வந்த கதையை மிக உற்சாகமாகச் சீதை தன் கணவனுக்குச் சொல்லி முடித்தாள். அவ்வளவையும் கேட்டுவிட்டு, தன் அழகிய மனைவியை நெஞ்சாரக் கட்டித் தழுவி, ''உன்னைப் போன்ற எளிய அப்பாவிப் பெண்தான் எனக்கு மனைவியாக வாய்க்க வேண்டும் என்று நினைத்தேன். கிடைத்துவிட்டாய்!'' என்று அவள் காதுகளில் ரகசியமாகச் சொன்னான் சந்தன்.

தான் அவ்வளவு சீக்கிரம் பரீட்சையில் தேறிவிட்டதற்குச் சீதை மகிழ்ந்து போனாள், தன் கணவனின் இதய சாம்ராஜ்யத்தை அவ்வளவு எளிதாக வெற்றி கொண்டதற்கு உள்ளம் பூரித்துப் போனாள்.

**ம**றுநாள் வெயில் கொளுத்தும் பட்டப் பகலில் வியர்வை வழிய சீதையின் வீட்டிற்கு வந்தாள் ஸரோஜா மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க!

''என்னடி இது! இந்த வேளையில் இப்படி வந்து சேர்ந்தாய்!'' என்று கேட்டாள் சீதை. சீதையின் முகத்தில் ஒளிர்ந்த மகிழ்ச்சியைக் கண்டு ஸரோஜாவிற்குச் சற்று மன நிம்மதி ஏற்பட்டது. எனினும் சீதையைத் தனியாக, ஒருபக்கமாக அழைத்து ரகசியமாக ''என்னடி உன் கணவருக்குக் கதையைச் சொன்னாயா?'' என்று கேட்டாள். அந்தக் கேள்விக்குப் பதில் கிடைக்குமுன் ஸரோஜாவே, ''சொல்வதானால் அந்த இரண்டாவது கதையைச் சொல்லு. முதல் கதையில் ஒரு தவறு. அது சந்தனுடையகதையல்ல. வசுந்தராவின் கதை'' என்றாள். மேலும் ஏதேதோ சொன்னாள் ஸரோஜா! அவையொன்றும் சீதையின் காதுகளில் விழவே இல்லை!

**மூலம் தெலுங்கு: இந்திரகண்டி ஜானகிபாலா**

**தமிழாக்கம்: எஸ்.வி.எஸ்**

# பொய்முகங்கள்!



மைலுவுக்கு அன்று பிறந்த நாள்...
மைலு! அம்மா ஆர்டர் பண்ணினதை அப்பா வாங்கிண்டு வந்திருக்கார் பாரு!




ஓடி வந்த மைலு தாயாரை அணைத்துக் கொள்ள...
சீ! விடு என்னை.. புடைவை கசங்கிடும்!




ராஜா வருந்தினன்....
தனு டியர்! குழந்தை கிட்டே சதா ஏன் எரிஞ்சு விழறே...?




தனு சீறினாள்
உங்களுக்கென்ன, பேசுவீங்க? பெண்ணைப் பிறந்த நாள் அழகு, அடம்பரம்னு அலைய வேண்டியிருக்கே. இமேஜைக் காப்பாத்திக்கணுமே!

கதை: குஞ்சலம் ஜெயராம்
படம்: அரஸ்
















ஸீதா, தனுவிடம் பிரியமாக...
குழந்தை -யின் ஆர்வத்தைக் கட்டுப்படுத்தாதே! பரிசைப் பிரிச்சுப் பார்க்கட்டும்... அதை வச்சுண்டு விளையாடட்டும். ஷோ கேஸில் பூட்டி வைச்சுடாதே!
ஆமாம் பெரிசா உபதேசிக்க வந்துட்டா...


மேலும் விருந்தினர்கள் வர...
ஹாய் ரவி!
ஹாய் ஷோபனா!


மணி ஏழாகிவிட-
மைவு டார்லிங்! கேக்கை வெட்டு... வா! அப்புறம் எல்லாருக்கும் டிபன் தாரணும்!
முதலில் கேண்டில் களை ஊதி அணை...


எதிர்பாராத விதமாக மைவு...
மாட்டேன் போ! போன வாரம் அம்மா பர்த்டேக்கு வைச்ச மாதிரி முப்பத்தேழு காண்டில் வைச்சாத்தான் ஊதி அணைப்பேன்! எனக்கு மட்டும் ஐந்து தானே வைச்சிருக்கே!.....


தனு அசடு வழிந்தாள்-
ஹி... ஹி... போன வாரம் எங்க வெட்டிங் டேயும் என் பிறந்த நாளோடு சேர்ந்து வந்ததாலே கல்யாணம் முடிஞ்சு எட்டு வருஷமானதாலே எட்டு மெழுகு வர்த்திகள் கேக்கில் அதிகமா சேர்த்து வெச்சோம் அதான்....


விருந்தினர் விடை பெற்ற பிறகு-
நான் சமாளிக்கறதுக்காகச் சொன்னதை யாரும் நம்பப் போறதில்லே.... அதுனால்...
தனு! குழந்தை உன் இமேஜை உடைச்சுட்டான்னு அவளைக் கோவிக்காதே!


கணவரை அதிசயத்தில் ஆழ்த்தினாள் தனு-
இல்லே ராஜா! மைனா என் பொய்யான இமேஜை உடைத்தெறிந்து எனக்குச் சுதந்திரம் தந்துட்டா. அவளிடம் அன்பா இருப்பதன் மூலம் அதற்கு நன்றி சொல்லப் போறேன்...

# வனத்தில் ஒரு வால்மீகி

காலை புலருகின்றவேளை ஆனபடியால் கல்லூரி ஹாஸ்டல் களை கட்ட ஆரம்பித்திருந்தது.

விடிகாலையே எழுந்து விடும் பழக்கமுடைய விஜயன் அன்றும் வழக்கம் போல் காலைக் கடன்களையெல்லாம் முடித்துக் கடைசிக் கட்டமாக இறைவழிபாட்டையும் பூர்த்தி செய்து கொண்டு எதேச்சையாக வாசல் பக்கம் திரும்பியபோது, அங்கே அறை வாசலில் தன் தந்தை நிற்பதைப் பார்த்தான். ஊரில் இருந்து வந்திருக்கிறார்.

அது அவனுக்கு ஆச்சரியத்தைக் கொடுக்கவில்லை....!

நான்கு நாட்களுக்கு முன்பு விஜயனே வீட்டுக்கு விவரமாகக் கடிதம் எழுதியிருந்தான். 'இன்னும் ஒரு வாரத்துக்குள் வருகிற செமஸ்டர் பரீட்சைக்கான ஃபீஸ் கட்டியாக வேண்டும் என்று! எப்போதுமே அவனுக்குப் பணம் ஊரிலிருந்து 'காசுக் கட்டளை'யாக வருவது இல்லை. கையும் மெய்யுமாக அவனுடைய அப்பா வடிவத்தில்தான் வரும். இப்போதும் அப்படித்தான்....!

"தம்பி, உன் கடுதாசி கிடைச்சுது. விவரம் பார்த்தேன். இன்னும் கொஞ்சம் முன் கூட்டியே நீ அந்தக் கடுதாசியை எழுதியிருக்கலாம். ஒரு வாரத்துக்குள்ளே நூத்தைம்பது ரூபாய் வேணும்னு நீ குறிப்பிட்டிருந்ததைப் பார்த்ததும் கொஞ்சம் தடுமாறிப் போயிட்டேன். நம்ம பக்கம்தான் இப்போ மழையும் இல்லே; தண்ணியும் இல்லே. விளை நிலமெல்லாம் வீணாக் கிடக்கு. என்ன செய்யறதுன்னே எனக்குப் புரியலே....!" என்றார் அப்பா.

"எப்படியோ தம்பி.... ஒரு வழியாப் பணத்தைச் சேர்த்துக் கொண்டு வந்திருக்கேன். காலேஜ் ஆபீஸுக்குப் போய்ப் பணத்தைக் கட்டிவிட்டு வந்து விடுவோமா...!" என்றவர், அந்த நூற்றைம்பது ரூபாய்க்காக விஜயனின் அம்மாவுடைய வளையல் மார்வாடி கடைக்குப் போய்விட்டது என்பதைத் தன் பிள்ளையிடம் விளம்பரப்படுத்திக் கொள்ளவேயில்லை.

தோல் பையை எடுத்துத் திறந்து பார்த்தவருக்குப் 'பகீர்' என்றது....! அதன் அடிப்பாகம் பிளேடால் கீறப்பட்டிருந்தது!

அப்பாவின் நிலையைக் கண்டு விஜயனுக்கு அழுகையே வந்துவிடும் போல் இருந்தது. நூற்றைம்பது ரூபாய் சுளையாகத் தொலைந்து போய்விட்டதே என்றுகூட விஜயன் அயரவில்லை. 'எப்படியோ சேர்த்

ஜெய்மாருதி



துக்கொண்டுவந்திருக்கிறேன்' என்று அவனுடைய அப்பா ஏனோதானோவாகச் சொன்னாலும், அந்த ரூபாய்களைச் சேர்க்க அவர் எத்தனை கஷ்டப்பட்டிருப்பார் என்பதை விஜயன் உணராமல் இல்லை. அப்பாவுடைய அத்தனை சிரமங்களும் இப்போது விழலுக்கு இறைத்த நீராகப் போய்விட்டதே என்பது தான் அவனுடைய வருத்தம்.

இதே மனநிலையில் அப்பாவை இன்னும் கொஞ்சம் நேரம் இருக்கவிட்டால் எங்கே அவர் இதயம் வெடித்துச் செத்துப் போய் விடுவாரோ என்று விஜயன் அஞ்சினான்.

''அப்பா..... இதற்காக ஏன் வருத்தப் படுறீங்க? இப்போ அக்டோபர்லே எழுதப் போற பேப்பர்களை வர்ற மார்ச்லே சேர்த்து எழுதிட்டாப் போச்சு. இதுக்காக நீங்க மனசைப் போட்டு அலட்டிக்காதீங்க அப்பா!''

''தம்பி, காலாகாலத்திலே செய்ய வேண்டிய காரியங்களைக் கஷ்டப்பட்டாவது செஞ்சு முடிச்சுடணும். காசை விட்டுட்டோமானா, அதைத் திரும்பப் பிடிச்சுடலாம். ஆனால் காலத்தை விட்டுட்டா அதைத் திரும்பப் பிடிக்கவே முடியாது. நான் இன்னைக்குச் சாயந்தரமே உன் மாமாவைப் போய்ப் பார்த்துப் பணம் வாங்கி வந்துடறேன். நாளைக் காலையிலே எப்படியும் கட்டிடுவோம்....''

அவர் இன்னும் தன் பேச்சைச் சரியாகக் கூட முடிக்கவில்லை.

''அப்பா....!'' என்று இரைந்தே விட்டான் விஜயன்.

அவன் காதுகளை அவனாலேயே நம்ப முடியவில்லை. அப்பாவா இப்படிப் பேசுகிறார்? தன் தாயோடு உடன்பிறந்த சகோதரன் சண்முக மாமாவையா அப்பா இப்போது போய்ப் பார்த்துப் பேசிப் பணம் வாங்கி வருவதாகச் சொல்கிறார்...? அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

விஜயனின் தாய் மாமன் சண்முகம் இதே நகரில்தான் இருக்கிறார். என்ஜினியரிங் ஒர்க்ஸ் ஒன்றின் உரிமையாளர். நான்கு குடும்பங்களை ஏக நேரத்தில் பராமரிக்கக் கூடிய அளவுக்கு நல்ல வசதி. ஆனால் விஜயனின் தந்தை, கூழைக் குடித்துக் கொண்டு ஜீவித்திருந்தாலும், கௌரவம் குலையாமல் வாழ வேண்டும் என்ற கொள்கை உடையவராக இருந்ததால் இதுநாள் வரைக்கும் பணத்துக்காகச் சண்முக மாமா வீட்டுப் படியேறியதில்லை....

அவரா இப்போது அதற்கும் தயார் என்கிறார்...? மனமுடைந்து போனான் விஜயன்.

மறுநாள் காலை பத்து மணிக்கு மேலாக விஜயனும் அவன் தந்தையும் கல்லூரி அலுவலகம் நோக்கிப் புறப்பட்டார்கள்.

முன்சொன்னபடி விஜயனின் தந்தை முந்தைய நாள் மாலை வெளியே கிளம்பிச் சென்றவர், மீண்டும் ஹாஸ்டலுக்குத் திரும்பி வந்தபோது கையில் பணத்தோடு வந்தார். மாமாவிடமிருந்துதான் வாங்கி வந்திருக்க வேண்டும்....!

கவுண்டரை நெருங்கிய விஜயன் அங்கே ஆசனத்தில் அமர்ந்திருந்த எழுத்தரிடம் தன் பெயரையும் கல்லூரிப் பதிவேட்டு எண்ணையும் கூறிப் பரீட்சைக்குப் பணம் கட்ட வேண்டும் என்று சொன்னான்.

பேனாவைத் திறந்து பேப்பரில் எழுதுவதற்காகக் குனிந்த எழுத்தர், மேற்கொண்டு எழுதாமல் தயங்கியபடியே விஜயனிடம் மீண்டும் அவனுடைய பெயர், ரோல் நம்பர் முதலியவற்றைத் திரும்பக் கூறும்படி கேட்டார்.

விஜயன் சொன்னான்.

''என்ன தம்பி.... நேற்றுதானே இதே பெயர்.... ரோல் கால் நம்பருக்குப் பணம் கட்டி இருக்கு....!'' என்றார் எழுத்தர்.

''சார்.... விஜயன் பெயருக்கு யார் பணம் கட்டியிருக்கிறார்கள் என்று தயவு செய்து கூற முடியுமா?'' என்றார் அவன் தந்தை.

''ஒரு நிமிஷம்....'' என்றபடியே எழுத்தர் ஏதேதோ பேப்பர்களைப் புரட்டிப் பார்த்து விட்டு, ''பிரகாசம் என்பவர் கட்டியிருக்கிறார் சார். அதுவும் நேற்று மாலை கடைசியா கட்டியிருக்கிறார்!'' என்றார்.

பிரகாசம்..., யார் அவர்....?

விஜயனுக்குத் தெரியவில்லை. அவன் தந்தைக்கும் புலப்படவில்லை.

ஆனால் மூன்றாம் மனிதருக்கு முன்பாகத் தங்கள் அந்தரங்க விஷயங்களை அம்பலப் படுத்திக் கொள்ள வேண்டாம் என்று விஜயனின் தந்தை நினைத்தாரோ, என்னவோ....?

''ஓ... பிரகாசம் பணம் கட்டிவிட்டாரா? அவர் பணம் கட்டியிருக்கிறாரோ, இல்லை, மறந்து போயிருப்பாரோங்கிற சந்தேகத்துலேதான் நாங்க இப்போ பணம் கட்ட வந்தது...'' என்று சமாளித்தபடியே விஜயனையும் அழைத்துக் கொண்டு அந்த இடத்தை விட்டு நகர்ந்தார் அவன் தந்தை.

''அப்பா....!'' என்று இழுத்தான் விஜயன்.

''யார் அந்தப் பிரகாசம்ன்னுதானே நீ இப்போ தெரிஞ்சுக்க விரும்பறே. விஜயா, அது உனக்குத் தேவையில்லாத விஷயம். அவர் யாராக இருந்தா உனக்கு என்ன...?''

''அப்பா, இப்போ என்னோட கவலையெல்லாம் அது அல்ல. இதுவரைக்கும் நீங்க யார் வீட்டுப் படியையும் அனாவசியமா மிதிச்சதில்லை. அந்த மாமா வீட்டு வாசலுக்கு இப்போ எனக்காக நீங்க போய் வந்த காரியம் ஒரு வழிக்கும் பிரயோஜனம் இல்லாமப் போயிடுச்சே அப்பா. அதுதான் எனக்கு வருத்தமாயிருக்கு....!''

விஜயனின் தந்தை முகத்தில் புன்னகை படர்ந்தது.

''தம்பி.... உன் அப்பாவைப் பத்தி நீ இன்னமும் நிறையத் தெரிஞ்சுக்க வேண்டி இருக்கு. நேற்று உன்கிட்ட நான் ஒரு வேகத்துலே மாமா வீட்டுக்குப் போய் வர்றதாச் சொன்னது உண்மைதான். ஆனால் நான்

அங்கே போகலே. என்னுேட கடிகாரத்தை மார்க்கெட்டுல வித்துப் பணமாக்கிட்டுத் தான் வந்தேன். கௌரவத்தை வித்துட்டு வந்து நிக்கலேப்பா....!''

விஜயன் விவரிக்க முடியாத மனநிலே யில் சிலேயாகிப் போனுன்:

'யார் இந்தப் பிரகாசம்...?'

ஈஸிசேரில் சாய்ந்தபடி இதே சிந்தனே யில் இருந்தவரை, போஸ்ட்மேனின் குரல் உலுக்கியது. தபாலே வாங்கி முன்னும் பின்னும் புரட்டிப் பார்த்தார். அனுப்புநர் என்ற இடத்தில் 'பிரகாசம்' என்றிருந்தது.

நெஞ்சு படபடக்கக் கடிதத்தைப் பிரித் தார்; படித்தார்.

'ஐயா,

என் பெயர் பிரகாசம். என்னே உங் களுக்குத் தெரியாது. ஆனுல் உங்களே எனக் குத் தெரியும். எப்படி என்று ஆச்சரியப் படுகிறீர்களா? மூன்று தினங்களுக்கு முன் பாகச் சென்னே சிட்டி பஸ்ஸில் உங்களிடம் பிக்பாக்கெட் அடித்தவனே நான்தான்.

திருடன் என்றதுமே முகம் சுளித்து விடா தீர்கள்.

நானும் மனிதன்தான். என்னே நம்பி என் மனேவி, இரு குழந்தைகள் இருக்கிருர்கள். எனக்கு அன்ருடம் குறைந்தது பத்து ரூபாய் தேவைப்படுகின்றது. அப்போதுதான் நாங் கள் ஜீவித்தே இருக்கலாம். அந்தப் பத்து ரூபாயை அன்ருடம் நல்ல வழிகளில் அடைந்துவிட நானும் பலமுறைகள் முயற்சி செய்துருக்கேன். ஆனுல் இந்தப்பிக்பாக்கெட் வழி ஒன்றுதான் எனக்குக் கடைசியாக அமைந்து போய்விட்ட விதி....!

இதில் ஓர் ஆச்சரியம் — இதுநாள் வரை யிலும் என்னுடைய கைங்கர்யத்தில் எனக் குத் தேவையான அந்தப் பத்து ரூபாய் தான் ஏறக்குறைய கிடைத்துக் கொண்டு இருந்தது. ஆனுல் இம்முறை உங்களிடம் பிக் பாக்கெட் அடித்தபோது ஒரு நூறு ரூபாய், ஒரு ஐம்பது ரூபாய் இரண்டு பத்து ரூபாய் நோட்டுகள்... உங்கள் பையன் உங்களுக்கு எழுதியிருந்த கடிதம், இத்தனேயும் இருந்தன. என் தேவைக்கு அதிகப்படியான தொகை என்னுடைய தொழிலிலேயே முதன்முத லாகக் கிடைத்தது.

பணத்தைப் பார்த்தபோது எனக்குச் சந்தோஷம்தான். ஆனுல் அந்தக் கடிதத்தைப் படித்தபோது அந்தச் சந்தோஷம் இருந்த இடம் தெரியாமல் போய்விட்டது. உங்கள் பையன் படிப்புக்காக நீங்கள் கட்டப் போகின்ற பணத்தை நான் எடுத்து என் பிள்ளே குட்டிகளுக்குப் பதினேந்து நாட்கள் சோறு போட்டால், ஓர் இளே ஞனின் எதிர் காலத்தையே அழித்தவனுகி விடுவேன் என்று புரிந்தது. இப்படி ஒவ்வொரு முறை திருடும்போதும் ஒவ்வொருத்தர் வாழ்க்கை யை நாசமடிக்கிறேனே? என்று எனக்குள்ளே கேள்வி எழுந்தது.

இதுநாள் வரையிலும் எனக்குப் புலப் படாது இருந்த ஓர் உண்மையை நான் உங்கள் மூலம் அறிந்தேன். அதனுல்தான் கடிதத்தில் கண்டபடி நானே கல்லூரிக்குப் போய் உங்கள் பையன் பெயருக்கு நூற்றைம்பது ரூபாயைக் கட்டிவிட்டு பாக்கி இருபது ரூபாயை மட்டுமே வைத்துக்கொண்டேன்.

ஐயா.... என்னேப் பற்றி நீங்கள் எப்படி நினேத்தாலும் சரி, உங்களிடம் ஒன்று சொல் கிறேன். இனியொருமுறை எனக்கு அன்ரு டம் தேவைப்படும் அந்தப் பத்து ரூபாயை நல்ல வழிகளில் அடைய நான் முயற்சி செய் கிறேன். ஆனுல் மீண்டும் நான் திருடனுக மாட்டேன் என்பதற்கு இது உத்தரவாதம் அல்ல.

கடிதம் முடிவடைந்துவிட்டது.

விஜயனின் தந்தை முகத்தில் யாரோ விளக்கேற்றி வைத்தது போன்ற ஒரு பிர காசம்....! பிரகாசத்தைப் பற்றி அவர் புரிந்து கொண்டுவிட்டார் அல்லவா...? முகம் தெரி யாத அந்தப் பேர்வழி மீது — வனத்தில் இருக்கும் வால்மீகி மீது — இனம் தெரியாத ஒரு மதிப்பு அவருடைய இதயத்தில் ஏற் பட்டுக் கொண்டிருந்தது.

## அடுத்த இதழ்

இராமநாதபுரம் மாவட்டத்தில்
கல்கி—I

* ''பள்ளிக்கூடம் நானறியேன்
பாதையிலும் நடந்தறியேன்...''
— கவர் ஸ்டோரி

* வரம் கேட்டு நிற்கும் கோயில்கள்
— சிறப்புக் கட்டுரை







# சங்கர் குரு

ஆக்‌ஷன் ஹீரோ என்று யார்தான் பெயர் சூட்டினார்களோ, அர்ஜுன் நிஜமாகவே சுறுசுறுப்பு திலகம்தான். (முக பாவம் — விதிவிலக்கு) அந்தர் பல்டி, சிலம்பு வீச்சு, கராத்தே உதை என்று மனிதர் பின்னி எடுத்திருக்கிறார்.

பேபி ஷாலினியை அனாதை என்று சொன்னவுடன் நமக்குப் பரிதாபம் கங்கை ஊற்றாகச் சுரந்து வருகிறதென்றால் அதற்குக் காரணம் ஷாலினியின் 'சிவாஜி' நடிப்பு.

ஒவ்வொரு வில்லச் சகோதரனாக நார் நாராகக் கிழிபட்டு ஆஸ்பத்திரியில் அட்மிட் ஆவதும், கிண்டல்கார டாக்டர் விசு, அவர்களுக்கு உறுப்பு மாற்றி வைத்து வைத்தியம் செய்வதும் ரசிக்கக் கூடிய காட்சிகள்.

ஒய்.ஜி. மகேந்திரன் எதற்கு? பாவம்!

ஒரு பக்கம் சசிகலா, ஒருபக்கம் சீதா. இரண்டு கதாநாயகிகள் இருந்தும்கூட கிளுகிளுப்புக்குப் பஞ்சம் என்றால் எடுத்துக் கொண்ட கதைதான் காரணம். இருந்தால் என்ன, டூயட்களை வைத்து நிரப்பி விடுகிறார்களே.

வேட்டைக்கார சரத்பாபு, அவர் மனைவி ரா.ஜலக்ஷ்மி அவர்களுடைய குழந்தை ஷாலினி. கதையில் கொஞ்ச நேர உலாவல் தான் என்றாலும் ஆரோக்கியமான உலாவல். அதுசரி, இன்றையத் தேதிக்கு மிருகங்களை வேட்டையாடி ஒரு வேட்டைக்காரன் பிழைப்பு நடத்துகிறான் என்றால் அது அவ்வளவு நன்றாகவா இருக்கிறது?

செந்தாமரையின் சிரிப்பு + நடை = தாள வில்லன்.

இந்த அர்ஜுன் கிருஷ்ண பக[...] என்ன? சசிகலா டீச்சர் பாம்புடன் ம[...] கட்டும் நேரத்திலும் வில்லன் அவர் சே[...] உருவும் நேரத்திலும் திடீரென்று எ[...] யிருந்து எப்படி முளைத்தார்?

பறக்கிற காக்காய்க்கு இறக்[...] எண்ணுகிற அம்மா மனோரமா.

திடுதிப் இன்ஸ்பெக்டர் அர்ஜு[...] சோறு எடுத்துப் போகும் பெண்ணாக[...] மனோரமாவின் கிண்டலும், சீதா[...] வெட்கமும் இதம்.

ஸ்டண்ட் ஸீன்கள் எல்லாமே திகட்[...] அளவுக்கு இனிப்பு!

சந்திரபோஸ் ஏறக்குறைய எல்[...] பாடல்களுக்கும் ஜோராக இசை அ[...] திருக்கிறார். பின் ஏன் ஆடிக்கு ஒரு [...] மட்டும் பண்ணுகிறார்?

க்ளைமாக்ஸ் இருக்கிறதே, அட, அ[...] யான ஜவ்வு மிட்டாய்! பட்டாசு வெடி[...] போல டப், டப் என்று சுடுவதும் [...] தப்பிப்பதும் அப்புறம் திடீரென்று [...] இடத்திற்கு மரடார் ஜானுப் பாய்ந்து[...] பாபு அன் கோவை விடுவிப்பதும் — மசாலா!

இருந்தாலும் க்ளைமாக்ஸ்வரை வி[...] என்று கொண்டு சென்றிருப்பத[...] வாவது டைரக்டர் ராஜாவை (புது[...] பாராட்டித்தான் ஆக வேண்டும்.

— ஜெயமன்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.

நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 431543

ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 6 போன்: 473389.

ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ 78/—; வெளி நாடு கப்பல் தபால் ரூ 250/—; விமானத் தபால் ரூ
(ஆறு மாதச் சந்தா ஏற்கப்படும்.)

